# அரசாங்கத்துக்கு காந்திஜியின் கடிதங்கள்

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம் :

ரா. வேங்கடராஜுலு
ஜெயமணி சுப்பிரமணியம்

# பதிப்புரை

இந்தியாவின் சுதந்திரப் போராட்ட சரித்திரத்தில் 1942-44-ஆம் ஆண்டுகளும், 1944-47-ஆம் ஆண்டுகளும் மிகவும் முக்கியமான கட்டங்கள் ஆகும். 'இந்தியாவை விட்டு வெளியேறுங்கள்' என்று மகாத்மா காந்தி பிரிட்டிஷாருக்கு இறுதி எச்சரிக்கை விடுத்ததை ஏற்றுக் கொண்டு, 1942 ஆகஸ்டு மாதம் காங்கிரஸ் ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. அதன் பின் காந்திஜி உள்பட காங்கிரஸ் தலைவர்களையெல்லாம் அதிகாரிகள் கைது செய்ததால், மனக் கொதிப்படைந்த மக்கள் அரசாங்கத்தைத் திணற வைப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டனர். காந்திஜி சிறையிலிருந்தபோது பல்வேறு பிரச்னைகளையொட்டி பம்பாய் அரசாங்கத்துக்கும், இந்திய அரசாங்கத்துக்கும் பல்வேறு அதிகாரிகளுக்கும் எழுதிய கடிதங்களும், 1944-47-ஆம் ஆண்டுகளில் இந்தியா சுதந்திரம் பெறும் தறுவாயில் இருந்தபோது லார்டு வேவல், லார்டு மவுண்ட் பாட்டன் முதலிய வைஸ்ராய்களுக்கும், மாகாண கவர்னர்களுக்கும் காந்திஜி எழுதிய் கடிதங்களும் இந்தப் பதின்மூன்றும் தொகுப்பில் அடங்கியிருக்கின்றன. அந்தக் கடிதங்கள் இந்தியாவின் அப்போதைய அரசியல் நிலையையும், பிரிட்டிஷாரின் மனப் போக்கையும் சித்திரிக்கும் சிறந்த சரித்திரமாகத் திகழ்கின்றன. இதைத் தவிர காந்திஜி சக்தி வாய்ந்த தமது எழுத்துக்களின் மூலம் கொடுமையான உப்பு வரி ரத்தாகும்படி செய்ததையும், பலருக்கும் விதிக்கப்பட்டிருந்த தூக்குத் தண்டனையை, காந்திஜியின் கோரிக்கைக்கு இணங்க வைஸ்ராய் ரத்து செய்ததையும் இந்தத் தொகுப்பில் உள்ள கடிதங்கள் விளக்குகின்றன.

காந்தி நூல்களின் 13-ஆவது தொகுதி வெளியிடும் இத்தருணத்தில், இந்த காந்தி நூல் வெளியீடுகளுக்கு

ஆரம்பத்திலிருந்து ஆசிரியராக இருந்து, இப்பணியைச் செய்து வந்த ஸ்ரீ ஆர். வேங்கடராஜுலு அவர்களின் திடீர் மரணத்தைப் பற்றிக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. அவர் இப்பணியை மிகுந்த பக்தியுடனும், சிரத்தையுடனும் செய்து வந்தார். பல சமயங்களில் உடல் நலிவு பெற்ற போதும் அவர் கடமையைச் செய்யத் தவறவில்லை. இந்நூல்கள் இவ்வளவு சிறப்பாக வெளி வந்ததற்கு அவரைப் பெரிதும் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறோம். அவரது ஆன்மா சாந்தி அடையுமாக.

இதுவரை வெளியாகிய தொகுப்புகளை அன்புடன் ஏற்ற தமிழ் மக்கள் இதையும் அன்புடன் ஏற்று ஆதரிப்பார்களாக.

காந்தி நூல் வெளியீட்டுக்<br>கமிட்டி, சென்னை<br>27—8—1965

**தி. சு. அவினாசிலிங்கம்**<br>(தலைவர்).

# பொருளடக்கம்

## முன் வரலாறு

### முதல் பாகம்

பகுதி ஒன்று



## அரசாங்கத்துக்கு காந்திஜியின் கடிதங்கள்

### பம்பாய் அரசாங்கத்துடன் கடிதப் போக்கு வரத்து



பகுதி இரண்டு

### லார்டு லின்லித்கோ, இந்திய அரசாங்கத்துடன் கடிதப் போக்குவரத்து

## உண்ணாவிரதத்திற்கு முன்னரும் பின்னரும்



பகுதி மூன்று

## உண்ணாவிரதத்தின் போது



பகுதி நான்கு

## உண்ணாவிரதத்திற்குப் பிறகு

பகுதி ஐந்து

## அரசாங்கத்தின் துண்டுப் பிரசுரம்

பகுதி ஆறு

## அன்னையின் மறைவு

## இரண்டாம் பாகம்



### பகுதி ஒன்று

### அரசியல் முட்டுக்கட்டை



### பகுதி இரண்டு

### சிம்லா மாநாடு

பகுதி மூன்று

## தூக்குத் தண்டனைகள்



பகுதி நான்கு

## இந்திய தேசீய ராணுவம்

## பகுதி ஐந்து

## சிறைகளில் சித்திரவதை

பகுதி ஆறு

## கதர்க் கடைகளுக்கு லைசன்ஸ்

பகுதி ஏழு

## தென்னாப்பிரிக்கா பிரச்னை



பகுதி எட்டு

## கோவாவில் அடக்கு முறை

பகுதி ஒன்பது

## துணிப் பற்றுக்குறையும் மிருக வளர்ப்பும்



பகுதி பத்து

## கதர் ஸ்தாபனங்களுக்குத் தடை

## பகுதி பதினொன்று

## உணவு நெருக்கடி



## பகுதி பன்னிரண்டு

## தனிப்பட்டவர்களுக்கு சலுகை

பகுதி பதின்மூன்று

## மந்திரி சபைத் தூது கோஷ்டி

## பகுதி பதினான்கு

# இடைக்கால அரசாங்கம்

## பகுதி பதினைந்து

## காந்திஜி-மவுண்ட்பாட்டன் கடிதப் போக்குவரத்து

பகுதி பதினாறு

## சுதந்திரத்திற்குப் பிறகு



## பின் சேர்க்கைப் பகுதி

# முன் வரலாறு

காங்கிரஸ் மகாசபையின் சரித்திரத்திலேயே, இந்திய சுதந்திரப் போராட்டத்தின் வரலாற்றிலேயே, 'பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேற வேண்டும்' என்று 1942 ஆகஸ்டு மாதம் நிறைவேறிய பிரசித்தி பெற்ற தீர்மானம்தான் மறக்க முடியாதது. இந்தியாவின் சுதந்திரப் போராட்டத்திற்கே சிகரம் வைத்தது போல் அது அமைந்தது.

அதற்குப் பூர்வாங்கமாக, 1942 ஜூலை 6-ந்தேதி காரியக் கமிட்டி வார்தாவில் கூடியது. அக்கூட்டத்தில் காந்திஜியும் இருந்தார். அதன் தீர்மானம் ஜூலை 14-ஆம் தேதி வெளியிடப் பட்டது. அத்தீர்மானத்தின் விவரமாவது :

"தினசரி நிகழ்ந்துவரும் சம்பவங்களும், இந்திய மக்கள் பெற்றுவரும் அனுபவமும், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு உடனடியாக முற்றுப்புள்ளி வைத்துவிட வேண்டும் என்ற காங்கிரஸ் வாதிகளின் அபிப்பிராயத்தை உறுதிப் படுத்தியிருக் கின்றன. அந்நியர் ஆட்சியும் ஆதிக்கமும் சிறந்த முறையில் நடந் தால் கூட அது தீமையேயாகும்; அடிமைப்பட்டுள்ள மக்களுக்கு அது தொடர்ந்து தீங்கு செய்வதேயாகும். அதற்காக மாத்திரம் பிரிட்டிஷ் ஆட்சி முடிவுற வேண்டும் என்று காங்கிரஸ்வாதிகள் விரும்பவில்லை. அவர்கள் விரும்பாததற்கு மற்றொரு காரணமும் இருக்கிறது. மனித வர்க்கத்தையே பாழாக்கிவரும் இந்த யுத்தத்தை வெற்றிகரமாக நடத்தவும், தன்னைத்தானே பாது காத்துக் கொள்ளவும், அடிமைப்பட்டுள்ள இந்தியா பலன் தரத் தக்க முறையில் தகுந்த முறைகளைக் கைக்கொள்ள சக்தியற்ற தாக இருக்கிறது. எனவே, இந்தியாவின் நலனுக்காக மாத்திர மின்றி, உலகத்தின் பாதுகாப்பிற்காகவும், நாஜிஸம், பாசிஸம், ராணுவ வெறி முதலிய பல விதமான ஏகாதிபத்திய முறை களையும், ஒரு நாடு மற்றொரு நாட்டை ஆக்கிரமிப்பதையும் ஒழித் துக் கட்டவும் இந்தியா விடுதலை பெற வேண்டியது அவசியமாகி யிருக்கிறது.

"உலக மகாயுத்தம் ஆரம்பமானதிலிருந்து காங்கிரஸ், நேச நாடுகளுக்கு சங்கடத்தைக் கொடுக்கக் கூடாது என்ற கொள்கை யையே, சத்தியாக்கிரகம் கூட பலனற்றுப் போகும் அளவுக்கு மிகவும் உன்னிப்பாகப் பின்பற்றி வந்திருக்கிறது. இந்த நிலை பிரிட்டிஷாரால் பாராட்டப்படும் என்ற, உண்மையான அதி காரம் பொது மக்களின் பிரதிநிதிகளிடம் மாற்றப்படும் என்ற நம்பிக்கையே காங்கிரஸ் அக்கொள்கையை மேற்கொண்டு வந்ததற்குக் காரணமாகும். அவ்விதம் மாற்றப்பட்டால் தான், உலகம் முழுவதும் மனித வர்க்கத்தின் சுதந்திரத்திற்கு

இந்தியா பூரண உதவி அளிக்க முடியும். அதே சமயம், இந்தியாவின் கழுத்தில் பிரிட்டிஷாருக்குள்ள பிடி மேலும் இறுகுவதற்கான எந்தக் காரியமும் செய்யப்படமாட்டாது என்றும் இந்தியா நம்பிவந்தது.

“ஆனால், இந்த நம்பிக்கைகளெல்லாம் தகர்ந்து தூளாகி விட்டன. இந்தியா விஷயமாக பிரிட்டிஷ் அரசாங்கத்தின் போக்கில் மாறுதல் எதுவும் ஏற்படவில்லை என்பதையும், இந்தியாவில் பிரிட்டிஷாருக்குள்ள பிடி எவ்விதத்திலும் தளரப் போவதில்லை என்பதையும், பலனற்றுப் போன கிரிப்ஸின் யோசனைகள் மிகவும் தெளிவாகக் காட்டிவிட்டன. சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸுடன் சமரசப் பேச்சு நடத்திய காங்கிரஸ் பிரதிநிதிகள், தேசத்தின் லட்சியத்திற்கு முரணில்லாதவகையில் குறைந்தபட்ச உரிமைகளைப் பெற பெரு முயற்சி செய்தனர். ஆனால், யாதொரு பலனும் ஏற்படவில்லை. இந்த ஏமாற்றம் காரணமாக, பிரிட்டிஷார் மீதுள்ள வெறுப்பு அதிகமாகியதுடன், ஜப்பானின் வெற்றிகள் மக்களுக்கு அதிக மகிழ்ச்சியை அளிக்கலாயின. வளர்ந்துவரும் இந்த மனநிலையைக் குறித்து காங்கிரஸ் காரியக் கமிட்டி மிகவும் பீதியடைவதுடன், அதைத் தடுத்தாலன்றி ஆக்கிரமிப்பை யாதொரு எதிர்ப்புமின்றி ஒப்புக்கொள்ளும் நிலை ஏற்பட்டுவிடும் என்றும் கருதுகிறது. எனவே, எல்லாவிதமான ஆக்கிரமிப்புகளையும் எதிர்த்து நிற்க வேண்டும் என்பதே கமிட்டியின் அபிப்பிராயமாகும். ஆக்கிரமிப்பிற்கு அடிபணிவதால், இந்திய மக்கள் இழி நிலையை அடைவதுடன் அவர்களுடைய அடிமைத்தனமும் தொடர்ந்து நீடிக்கும். மலேயா, சிங்கப்பூர், பர்மா முதலிய இடங்களில் ஏற்பட்ட அனுபவத்தைப் போல் இங்கும் ஏற்படுவதைத் தவிர்க்க காங்கிரஸ் பெரிதும் விரும்புகிறது. அல்லது வேறு எந்த அந்நிய நாடு படையெடுத்தாலும், எத்தகைய படை யெடுப்பையும் எதிர்த்து நிற்க காங்கிரஸ் விரும்புகிறது. பிரிட்டன் மீது தற்போதுள்ள வெறுப்பை நல்லெண்ணமாகவும் மாற்ற காங்கிரஸ் விரும்புகிறது. உலக நாடுகளும், மக்களும் விடுதலை பெறும்படி செய்வதற்கான முயற்சியில் இந்தியா மனப்பூர்வமாகப் பங்கு எடுத்துக் கொள்ளவும் விரும்புகிறது. சுதந்திர ஒளியின் சிறப்பை இந்தியா அனுபவிக்கும்படி செய்தால் மாத்திரமே, இந்தியா அவ்விதம் பங்கு எடுத்துக்கொள்வது சாத்தியமாகும்.

“சமூகப் பிணக்கைத் தீர்க்க காங்கிரஸ் பிரதிநிதிகள் தங்களால் இயன்ற முயற்சியையெல்லாம் செய்தார்கள். ஆனால், அந்நியர் ஆட்சி இங்கே இருப்பதால் அவர்களுடைய முயற்சி பலனை அளிக்கவில்லை. அந்நிய ஆட்சியாளர்கள், பிரித்தாளும் கொள்கையை நீண்ட காலமாக தயவு தாட்சண்யமின்றிப் பின் பற்றிவருகிறார்கள். அந்நியரின் ஆதிக்கத்துக்கும் தலையீட்டிற்கும் ஒரு முடிவு ஏற்பட்டால்தான், எல்லாக் கட்சிகளையும் பிரிவுகளையும் சேர்ந்த இந்திய மக்கள் இந்தியப் பிரச்னைகளை அணுகி,

பரஸ்பர சம்மதத்தை அடிப்படையாகக் கொண்டு அவற்றைத் தீர்க்க முற்படுவார்கள். அப்போதுதான் இந்திய சரித்திரத்தி லேயே முதல் தடவையாக, சமஸ்தான மன்னர்கள், ஜாகிர்தார் கள், ஜமீன்தார்கள், சொத்தும் பணமும் படைத்தவர்கள் ஆகிய யாவரும், வயல்களிலும், தொழிற்சாலைகளிலும், பிறவிடங்களிலும் வேலை செய்யும் தொழிலாளர்களிடமிருந்து தங்களுடைய செல் வத்தையும் சொத்துக்களையும் அடைகிறார்கள் என்பதையும், ஆட்சி அதிகாரம் அந்தத் தொழிலாளர்களுக்குத்தான் சொந்த மானது என்பதையும் எல்லோரும் உணர்வார்கள். இந்தியாவி லிருந்து பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் வெளியேறியதும், தேசத்தி லுள்ள பொறுப்பு வாய்ந்த ஆடவர்களும் பெண்களும் ஒன்று சேர்ந்து, ஒரு தற்காலிக அரசாங்கத்தை அமைப்பார்கள். இந்தி யாவிலுள்ள முக்கியமான எல்லாப் பிரிவுகளையும் சேர்ந்த பிரதி நிதிகள் அந்த அரசாங்கத்தில் இருப்பார்கள். அவர்கள், அரசியல் நிர்ணய சபையை அமைப்பதற்கான ஒரு திட்டத்தைத் தயாரிப் பார்கள். அந்தச் சபை, எல்லாப் பிரிவினரும் ஒப்புக் கொள்ளக் கூடிய ஓர் அரசியலை உருவாக்கும். பின்னர், சுதந்திர இந்தியா வின் பிரதிநிதிகளும், பிரிட்டிஷ் பிரதிநிதிகளும் ஒன்று சேர்ந்து இரு நாடுகளுக்கும் இருக்க வேண்டிய எதிர்கால உறவுகளையும் ஆக்கிரமிப்பை எதிர்ப்பதற்கான ஒத்துழைப்பையும் ஒழுங்கு செய்வார்கள். மக்களின் ஒருமித்த உறுதியுடனும், விருப்பத் துடனும், பலத்துடனும் இந்தியா ஆக்கிரமிப்பை எதிர்த்து நிற்கும்படி செய்ய வேண்டும் என்பதே காங்கிரசின் தீவிரமான விருப்பமாகும்.

"இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் வெளியேற வேண்டும் என்று யோசனை கூறியுள்ள காங்கிரஸ், யுத்தத்தை நடத்தும் விஷயத்தில் பிரிட்டனுக்கோ அல்லது நேச நாடு களுக்கோ எத்தகைய தரும சங்கடமான நிலைமையையும் உண் டாக்க விரும்பவில்லை. இந்தியா மீது ஆக்கிரமிப்பை எவ்விதத் திலும் தூண்டவும், ஜப்பானோ அல்லது அச்சு நாடுகள் கோஷ் டியைச் சேர்ந்த வேறு நாடோ சீனாவை மேற்கொண்டு நெருக்கு வதற்கு இடம் கொடுக்கவும் காங்கிரஸ் விரும்பவில்லை. நேச தேசங்களின் தற்காப்பு சக்திக்குக் குந்தகம் விளைவிக்கும் உத் தேசம் காங்கிரசுக்கு இல்லை. அதனால்தான், நேச தேசங்கள் விரும்பினால் இந்தியாவில் அவை தங்களுடைய படைகளை வைத் துக்கொள்ளவும் காங்கிரஸ் இணங்குகிறது.

"இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் யாவரும் வெளியேறிவிட வேண்டும் என்பது காங்கிரஸ் யோசனையின் நோக்கமல்ல. அதிலும் குறிப்பாக, இந்தியாவைத் தங்களுடைய தாயகமாகக் கொண்டு மற்ற இந்தியப் பிரஜைகளுடன் சமத்துவமாக வாழும் பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேறவேண்டும் என்ற அவசியமே இல்லை. பரஸ்பரம் நல்லெண்ணத்துடன் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் வெளியேற்றம் அமலுக்கு வருமாயின், அதன்

பலனை இந்தியாவில் நிலையான தற்காலிக அரசாங்கம் ஏற்படும்;
ஆக்கிரமிப்பை எதிர்க்கவும், சீனவுக்கு உதவி செய்யவும், இந்த
அரசாங்கத்துக்கும் ஐக்கிய நாடுகளுக்கும் இடையே ஒத்துழைப்பு
நிலவும்.

"அத்தகைய ஒரு ஏற்பாட்டில் உள்ள அபாயங்களை காங்கிரஸ்
உணருகிறது. எனினும் சுதந்திரத்தைப் பெறுவதற்காக எந்த
நாடும் அத்தகைய அபாயங்களை சமாளித்துத்தான் தீரவேண்டும்;
இன்னும் பெரிய அபாயங்களிலிருந்தும் ஆபத்துக்களிலிருந்தும்
இந்தியாவையும் உலகம் முழுவதும் சுதந்திர லட்சியத்தையும்
பாதுகாக்க வேண்டுமாயின், இந்த நெருக்கடியான கட்டத்தில்
அத்தகைய அபாயங்களை இந்தியா மேற்கொண்டுதான் தீர
வேண்டும்.

"எனவே, தேசீய லட்சியத்தை அடையும் விஷயமாக காங்
கிரஸ் இனியும் பொறுமையுடன் இருக்க விரும்பவில்லை. இருந்
தாலும் அது அவசரப்பட்டு எத்தகைய முறைகளையும் கைக்
கொள்ள விரும்பவில்லை. சாத்தியமானவரையில், ஐக்கிய நாடு
களுக்கு சங்கடத்தை விளைவிக்கக்கூடிய எத்தகைய நடவடிக்கை
யையும் தவிர்க்கவே காங்கிரஸ் விரும்புகிறது. இந்தியாவின்
நலனுக்காக மாத்திரமல்ல, பிரிட்டனின் நலனுக்காகவும், உலக
நாடுகளின் சுதந்திரமே தங்களுடைய லட்சியம் என்று பறை
சாற்றிவரும் ஐக்கிய நாடுகளின் நலனுக்காகவும், மிகவும் நேர்மை
யான, நியாயமான இந்த யோசனையை பிரிட்டிஷ் வல்லரசு ஒப்புக்
கொண்டால் காங்கிரஸ் மகிழ்ச்சி அடையும்.

"இந்த வேண்டுகோள் வீணாகிவிடுமாயின், தற்போதைய
நிலை தொடர்ந்து நீடிப்பதை காங்கிரஸ் பார்த்துக் கொண்டிருக்க
முடியாது. அவ்விதம் நீடிப்பதால் நிலைமை மேலும் மோசமாவ
துடன், ஆக்கிரமிப்பை எதிர்க்கும் விஷயமாக இந்தியாவுக்கு
உள்ள உறுதியும் சக்தியும் குறைந்துவிடும். எனவே, இந்நிலையில்
காங்கிரஸ் 1920-லிருந்து சேகரித்துள்ள சாத்விக சக்தியையெல்
லாம் வருத்தத்துடன் உபயோகிக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்
படும். அரசியல் உரிமைகளையும் விடுதலையையும் பெறுவதற்காக
1920-இல் தான் காங்கிரஸ் சாத்விக முறையைத் தனது கொள்
கையாக மேற்கொண்டது. மிகப் பரந்த அந்தப் போராட்ட
மானது, மகாத்மா காந்தியின் தலைமையில் நடைபெறுவதும்
தவிர்க்க முடியாததாகும். இந்தப் பிரச்னைகள், இந்திய மக்
களுக்கும் ஐக்கிய நாடுகளைச் சேர்ந்த மக்களுக்கும் முக்கியமான
வையாதலால், அவற்றையொட்டி இறுதியாக முடிவு செய்யும்
பொறுப்பை காரியக் கமிட்டி அ. இ. கா. கமிட்டியிடம் ஒப்புவிக்
கின்றது. இவ்விஷயமாக அ. இ. கா. கமிட்டி 1942 ஆகஸ்டு
7-ஆம் தேதி பம்பாயில் கூடும்."

மேற்கண்ட தீர்மானத்திற்கிணங்க, 1942 ஆகஸ்டு முதல்
வாரத்தில் காங்கிரஸ் காரியக் கமிட்டி மீண்டும் பம்பாயில் கூடி

யது. சரித்திரப் புகழ்பெற்ற அந்தத் தீர்மானத்தைத் தயாரிப்பதில் காந்திஜியே பெரும் பங்கு எடுத்துக் கொண்டார். நீண்ட நேரம் விவாதித்த பின் "இந்தியாவைவிட்டு வெளியேறு" என்ற அந்தத் தீர்மானத்தை அ. இ. கா. கமிட்டியின் முன்னிலையில் வைப்பதென்று காரியக் கமிட்டி முடிவு செய்தது.

அத் தீர்மானத்தின் விவரம் பின்வருமாறு:

"1942 ஜூலை 14-ஆம் தேதி காரியக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தையும், யுத்த நிலைமையில் ஏற்பட்டுள்ள புதிய அம்சங்கள், பிரிட்டிஷ் அரசாங்கத்தைச் சேர்ந்த பொறுப்பு வாய்ந்த பிரதிநிதிகளின் பேச்சுகள், இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் வெளியாகியுள்ள கண்டனங்கள், வியாக்கியானங்கள் முதலிய பல நிகழ்ச்சிகளையும் அ. இ. கா. கமிட்டி மிகுந்த அக்கறையுடன் ஆலோசித்தது. அந்தத் தீர்மானத்தை கமிட்டி அங்கீகரிக்கின்றது. ஜூலை 14-க்குப் பிறகு நிகழ்ந்த சம்பவங்கள் அத்தீர்மானம் நியாயமானது என்பதை நிரூபிப்பதுடன், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி உடனடியாக முடிவடைந்துவிட வேண்டியது அவசரமும் அவசியமும் ஆகும் என்பதையும் தெளிவாக்கியிருக்கிறது. ஏனெனில், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி முடிவுற வேண்டியது இந்தியாவின் நலனுக்கும், ஐக்கிய நாடுகளின் லட்சியம் வெற்றி பெறுவதற்கும் அவசியமாகும். பிரிட்டிஷ் ஆட்சி தொடர்ந்து வருவது இந்தியாவுக்கு இழிவாக இருப்பதுடன், இந்தியாவின் பலமும் மிகவும் குன்றும்படி செய்திருக்கிறது; அதன் தற்காப்பு சக்தியும், உலக சுதந்திர லட்சியத்துக்கு உதவிபுரிவதில் அதற்குள்ள சக்தியும் நாளுக்கு நாள் குறையும்படி செய்திருக்கிறது.

"ருஷ்ய, சீனப் போர்முனைகளில் நிலைமை மோசமாகி வருவதைக் குறித்து கமிட்டி கலக்கமும் பீதியும் அடைவதுடன், தங்களுடைய சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காக வீரத்துடன் போராடி வரும் ருஷ்ய, சீன மக்களைப் பெரிதும் பாராட்டுகிறது. அதிகமாகி வரும் இந்த ஆபத்து, சுதந்திரத்திற்காக முயற்சி செய்வோரையும், ஆக்கிரமிப்பாளர்களால் துன்பத்திற்கு உள்ளாகி வருவோரிடம் அனுதாபம் காட்டுவோரையும், நேச தேசங்கள் இதுவரையில் பின்பற்றி வந்துள்ள கொள்கையின் அடிப்படைகளைப் பரிசீலனை செய்யும்படி வற்புறுத்தியிருக்கிறது. நேச தேசங்களின் கொள்கை, அடிக்கடி பயங்கரமான தோல்விகளுக்கே காரணமாக இருந்து வந்திருக்கிறது. அத்தகைய நோக்கங்களையும், முறைகளையும் பற்றிக் கொண்டிருப்பதால், தோல்வியை வெற்றியாக மாற்றிவிட முடியாது. அவற்றிலேயே தோல்வி இயல்பாக அடங்கியிருக்கிறது என்பதை, பழைய அனுபவமானது காட்டியிருக்கிறது. இந்தக் கொள்கைகள் சுதந்திரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை, அடிமைப்பட்ட நாடுகள் மீதும் காலனிகளான நாடுகள் மீதும் உள்ள ஆதிக்கத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. ஏகாதிபத்திய சம்பிரதாயமும் முறையும் தொடர்ந்து நீடிக்க வேண்டும் என்பதே

அக் கொள்கையாகும். சாம்ராஜ்யத்தை வைத்துக் கொண்டிருப்பது, அதை ஆட்சிபுரியும் வல்லரசின் பலத்தைப் பெருக்குவதற்குப் பதிலாக அந்த வல்லரசுக்கு ஒரு சுமையாகவும், சாபக்கேடாகவும் இருந்து வருகிறது. இந்தியா நவீன ஏகாதிபத்தியத்தின் இலக்கணமாகத் திகழ்கின்றது. எனவே இந்தியா விடுதலை பெறுவதன்மூலம்தான், பிரிட்டன், ஐக்கிய தேசங்கள் ஆகியவற்றின் அந்தரங்க சுத்தியைத் தீர்மானிக்க முடியும். இந்தியா விடுதலை பெறுவதன்மூலம்தான் ஆசிய, ஆப்பிரிக்க மக்களுக்கு நம்பிக்கையும் உற்சாகமும் ஏற்பட முடியும்.

"ஆகையால், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி முடிவடைய வேண்டும் என்பது மூலாதாரமான, உடனடியான பிரச்னையாகும். யுத்தத்தின் எதிர்காலமும், சுதந்திரம், ஜனநாயகம் ஆகியவற்றின் வெற்றியும் அதையே பொறுத்திருக்கின்றன. அந்த வெற்றி கிடைக்கும்படி செய்ய சுதந்திர இந்தியாவுக்கு ஆற்றல் உண்டு. நாஜிஸ, பாசிஸ, ஏகாதிபத்தியங்களின் ஆக்கிரமிப்பை எதிர்த்து வெற்றிபெற சுதந்திர இந்தியா தனது முழு சக்தியையும் உபயோகிக்கும். இது, யுத்தத்தின் போக்கை அடியோடு மாற்றுவதுடன், அடிமைப்பட்டுக் கிடந்த மனித வர்க்கம் முழுவதையுமே ஐக்கிய நாடுகளின் பக்கம் சேர்ந்து கொள்ளும்படி செய்யும். அப்போது சுதந்திர இந்தியாவும் நேச தேசங்களின் பக்கமே இருக்கும். அதன் பயனாக, ஆன்மிக ரீதியாகவும், தார்மிக ரீதியாகவும் உலகம் முழுவதற்கும் தலைமை வகிக்கும் பெருமை ஐக்கிய நாடுகளுக்கும் ஏற்படும். ஆனால், அடிமை இந்தியா பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சின்னமாக இருந்துவரும் வரையில், யுத்தத்தின் போக்கு அந்த நாடுகளுக்குச் சாதகமாக இராது.

"எனவே இப்போது ஏற்பட்டுள்ள ஆபத்து தீருவதற்கு, இந்தியா விடுதலை பெறவேண்டியதும் பிரிட்டிஷ் ஆதிக்கம் முடிவுற வேண்டியதும் அவசியமாகும். எதிர்காலத்தில் விடுதலை அளிப்பதாகக் கூறும் உறுதி மொழிகளோ அல்லது உத்திரவாதங்களோ தற்போதைய நிலைமையில் யாதொரு மாறுதலையும் உண்டாக்கிவிடாது; ஆபத்தைச் சமாளிக்கவும் வழிவகை செய்யாது; அவை மக்களின் மனத்தில் தேவையான மாறுதலையும் உண்டாக்காது. சுதந்திர ஒளி ஒன்றுதான், கோடிக்கணக்கான மக்களுக்கு உற்சாகத்தை உண்டாக்கி, அவர்கள் தங்கள் சக்தி முழுவதையும் உபயோகிக்கும்படி செய்யும்.

"ஆகையால், இந்தியாவிலிருந்து பிரிட்டிஷாரின் ஆட்சி முறை வாபஸாகிவிட வேண்டும் என்ற கோரிக்கையை அ.இ.கா. கமிட்டி மீண்டும் தீவிரமாக வற்புறுத்துகிறது. இந்தியாவின் சுதந்திரம் பிரகடனம் செய்யப்பட்டதும், இந்தியாவில் ஒரு தற்காலிக அரசாங்கம் அமைக்கப்படும். பின்னர் சுதந்திர இந்தியா ஐக்கிய நாடுகளின் நேச தேசமாகி, அதனுடன் உலக நாடுகளின் சுதந்திரப் போராட்டத்தில் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களிலும் சோதனைகளிலும் பங்கு கொள்ளும். தேசத்திலுள்ள முக்கிய கட்சி

களும் பிரிவுகளும் ஒத்துழைப்பதன் மூலமே இத்தகைய அரசாங்கத்தை அமைக்க முடியும். எனவே, அது இந்தியாவில் உள்ள எல்லா முக்கியப் பிரிவினரின் பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு கலப்பு அரசாங்கமாக இருக்கும். தன்னிடமுள்ள எல்லாவிதமான ஆயுத பலத்தையும், சாத்விக பலத்தையும் உபயோகித்து நேச தேசங்களுடன் சேர்ந்து ஆக்கிரமிப்பை எதிர்ப்பதும், இந்தியாவைப் பாதுகாப்பதும், வயல்களிலும் தொழிற்சாலைகளிலும் உள்ள தொழிலாளர்களின் நலனை அபிவிருத்தி செய்வதுமே அந்த அரசாங்கத்தின் முக்கிய கடமையாக இருக்கும். முக்கியமாக, எல்லா அதிகாரங்களும் அந்தத் தொழிலாளர்களுக்கே உரிமையாக இருக்க வேண்டும். ஓர் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவதற்கான திட்டத்தை தற்காலிக அரசாங்கம் தயாரிக்கும். அந்த அரசியல் நிர்ணய சபையே எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய விதத்தில், இந்தியாவை ஆட்சி புரிவதற்கான ஓர் ஐக்ய அரசியலைத் தயாரிக்கும். அந்தஅரசியலின் கீழ் ஐக்ய ஆட்சியில் சேரும் பிரதேசங்களுக்குப் பெரும் அளவு சுயேச்சை அளிக்கப்படும். இந்தியாவுக்கும் நேச தேசங்களுக்கும் இருக்க வேண்டிய எதிர்கால உறவுகளை, சுதந்திர நாடுகளின் பிரதிநிதிகள் ஒன்று கூடி யோசித்து முடிவு செய்வார்கள். மக்களின் ஒருமித்த உறுதியுடனும் பலத்துடனும் ஆக்கிரமிப்பை வெற்றிகரமாக இந்தியா எதிர்த்து நிற்பதற்கு சுதந்திரம் சக்தியைக் கொடுக்கும்.

"அந்நிய ஆதிக்கத்தில் உள்ள மற்ற ஆசியா நாடுகள் சுதந்திரம் பெறவும், இந்தியாவின் சுதந்திரம் ஒரு பூர்வாங்கமாக இருக்கும். பர்மா, மலேயா, இந்தோ சீனா, டச்சுக் கிழக்கு இந்தியத் தீவுகள், ஈரான், ஈராக் முதலிய நாடுகளும் பூரண சுதந்திரம் பெற்றாக வேண்டும். இப்போது ஜப்பானியரின் ஆதிக்கத்தில் இருந்துவரும் நாடுகளில் மீண்டும் வேறு எந்த வல்லரசின் காலனி ஆட்சியும் ஏற்படாது என்பதை இப்போதே தெளிவாக்கிவிட வேண்டும்.

"இந்த ஆபத்தான சமயத்தில் இந்தியாவின் சுதந்திரமும் தற்காப்புமே அ. இ. கா. கமிட்டிக்கு கவலையைக் கொடுத்துள்ள தெனினும், எதிர்காலத்தில் உலக அமைதியும், பாதுகாப்பும், ஒழுங்கான முறையில் உலக முன்னேற்றமும், சுதந்திர நாடுகள் அடங்கிய ஓர் உலக ஐக்ய ஆட்சி ஏற்படுவதையே பொறுத்திருக்கிறது. நவீன உலகத்தின் பிரச்னைகளை வேறு எந்த அடிப்படையிலும் தீர்ப்பது முடியாத காரியம். அத்தகைய ஓர் உலக ஐக்ய ஆட்சி அதில் அங்கம் வகிக்கும் நாடுகளின் சுதந்திரத்திலும், ஒரு நாடு மற்றொரு நாட்டைச் சுரண்டுவதைத் தடுப்பதிலும், சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பு அளிப்பதிலும், பிற்போக்கான பிரதேசங்களும் மக்களும் முன்னேற்றம் அடையும்படி செய்வதிலும், எல்லோருடைய பொதுவான நன்மைக்காகவும் உலக சாதனங்களைப் பங்கிட்டுக் கொள்வதற்காகச் சேகரிப்பதிலும் மிகுந்த அக்கறை எடுத்துக்கொள்ளும். அத்தகைய ஓர் உலக நாடுகள் ஆட்சி

ஏற்பட்டதும், எல்லா நாடுகளிலும் யுத்த தளவாடங்களைக் குறைக்கும் முறைகளை மேற்கொள்வது சாத்தியமாகும். பின்னர் தேசீய ராணுவமும், கடற்படை, விமானப்படைகளும் இருக்க வேண்டிய அவசியமில்லை. உலக சமஷ்டித் தற்காப்புப் படை, ஆக்கிரமிப்பைத் தடுத்து உலக அமைதியைப் பாதுகாக்கும். சுதந்திர இந்தியா அம்முயற்சியில் மகிழ்ச்சியுடன் கலந்து கொள்ளும். சுதந்திர இந்தியா அத்தகைய உலக சமஷ்டியில் மகிழ்ச்சியுடன் கலந்துகொண்டு சர்வ தேசப் பிரச்னைகளைத் தீர்ப்பதில் மற்ற நாடுகளுடன் சமத்துவமான அடிப்படையில் ஒத்துழைக்கும்.

"அந்த சமஷ்டியில் அதன் மூலாதாரமான கொள்கைகளை அங்கீகரிக்கும் எல்லா நாடுகளும் சேர்ந்து கொள்ளலாம். ஆனால் யுத்தம் நடந்துகொண்டிருக்கும் இச்சமயத்தில், ஆரம்பகாலத்தில் ஐக்கிய நாடுகள் மாத்திரமே அந்த ஐக்ய ஆட்சியில் இருக்க வேண்டும். இப்போது எடுத்துக் கொள்ளப்படும் இந்த முறை, யுத்தம், டச்சு நாட்டு மக்கள், எதிர்கால உலக அமைதி சம்பந்தப்பட்டவரையில் மகத்தான பலனைக் கொடுக்கும்.

"யுத்தத்தின் கோரமான படிப்பினைகளுக்கும் உலகத்தை நோக்கி நிற்கும் அபாயங்களுக்கும் பிறகு கூட, சில நாடுகளின் அரசாங்கங்கள் தவிர்க்க முடியாத உலக சமஷ்டிக்கான இந்த முறையை இன்னும் எடுத்துக்கொள்ளத் தயாராக இராததை கமிட்டி வருத்தத்துடன் உணர்ந்திருக்கிறது. இந்தக் கோரிக்கையை யொட்டி பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கருத்துகளும், நிலைமையைப் புரிந்து கொள்ளாத வெளிநாட்டுப் பத்திரிகைகளின் கண்டனங்களும், சந்தேகத்திற்கு இடமில்லாத இந்தக் கோரிக்கையைக் கூட பிரிட்டிஷார் ஒப்புக்கொள்ள விரும்பவில்லை என்பதை மிகவும் தெளிவாகக் காட்டுகின்றன. முக்கியமாக, தற்போது ஏற்பட்டுள்ள அபாயத்தைச் சமாளிக்கவும், இந்தியாவின் தற்காப்பிற்காகவும், நெருக்கடியான சமயத்தில் ருஷ்யாவுக்கும் சீனாவுக்கும் உதவி செய்யவுமே இந்தக் கோரிக்கையை விடுத்துள்ளோம். சீனா அல்லது ருஷ்யாவின் தற்காப்புக்கு யாதொரு குந்தகமும் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதில் கமிட்டி அக்கறை கொண்டிருக்கிறது. அந்த நாடுகளின் சுதந்திரம் பாதுகாக்கப்பட வேண்டும், ஐக்கிய நாடுகளின் தற்காப்பு சக்திக்கும் அபாயம் ஏற்படக் கூடாது என்பதே கமிட்டியின் கவலையாகும். ஆனால், இந்தியாவுக்கும் ஐக்கிய நாடுகளுக்கும் ஏற்பட்டுள்ள ஆபத்து நாளுக்கு நாள் அதிகமாகிவருகிறது. எனவே, இந்தக் கட்டத்தில் செயலற்றிருப்பதும், அந்நிய ஆதிக்கத்திற்குப் பணிவதும், இந்தியாவுக்கு இழிவை உண்டாக்குவதுடன் ஆக்கிரமிப்பை எதிர்க்கும் அதன் சக்தியைக் குறைத்துவிடும். பிரிட்டனுக்கும் ஐக்கிய நாடுகளுக்கும் காங்கிரஸ் காரியக் கமிட்டி விடுத்த மனப்பூர்வமான வேண்டுகோளுக்கு அவை இதுவரை செவி சாய்க்கவில்லை. பல அந்நிய வட்டாரங்களிலும் எழுந்துள்ள கண்டனங்கள், இந்தியாவின் தேவையை, உலகத்தின் தேவையைப் பற்றிய அறியாமையையே

காட்டுகின்றன; இந்தியாவின் சுதந்திரத்தை எதிர்ப்பதாகவும் இருக்கின்றன. இவை, ஆதிக்க மனப்பான்மைக்கும் நிற இறுமாப்புக்குமே அடையாளமாகும். தங்கள் சக்தியையும் தங்கள் லட்சியத்தில் உள்ள நீதியையும் உணர்ந்த தன்மானம் உள்ள மக்களால், ஆதிக்க மனப்பான்மையையும் நிற இறுமாப்பையும் சகிக்க முடியாது.

"பிரிட்டனுக்கும் ஐக்கிய நாடுகளுக்கும் உலக சுதந்திரத்தின் நலனை எண்ணி இந்தக் கடைசி நேரத்தில் கூட அ.இ.கா. கமிட்டி மீண்டும் இந்த வேண்டுகோளை விடுக்கின்றது. எனினும், தங்களுடைய சொந்த நலனுக்காகவும் யானிட வர்க்கத்தின் நலனுக்காகவும், ஏகாதிபத்திய, சர்வாதிகார அரசாங்கத்தை எதிர்த்துத் தங்களுடைய லட்சியத்தை அடைய உறுதியுடன் முயற்சிக்கும் ஒரு நாட்டை, மேற்கொண்டும் கட்டுப்படுத்தி வைப்பது நியாயமல்ல என்று கமிட்டி கருதுகிறது.

"சுதந்திரம் இந்தியாவின் மறுக்க முடியாத உரிமையாகும். அதைப் பெறுவதற்காக, நாடு முழுவதும் பரந்த முறையில் அகிம்சையின் அடிப்படையில் மக்கள் போராட்டத்தை ஆரம்பிப்பதற்கு அனுமதி அளிக்க வேண்டுமென இக்கமிட்டி தீர்மானிக்கின்றது. சென்ற இருபத்திரண்டு ஆண்டுகளாக அமைதியான போராட்டத்தை நடத்தியதன் பலனைப் பெற்றுள்ள சாத்துவிக பலத்தையெல்லாம் இந்தியா உபயோகித்துக்கொள்ளும். காந்திஜியின் தலைமையிலேயே அத்தகைய போராட்டம் நடைபெற வேண்டும். எனவே, அப்போராட்டத்திற்குத் தலைமை வகித்து நாட்டுக்கு வழிகாட்டும்படி கமிட்டி காந்திஜியை வேண்டிக் கொள்கிறது.

"போராட்டத்தின் விளைவாக ஏற்படும் அபாயங்களையும், கஷ்டங்களையும் தைரியத்துடனும் உறுதியுடனும் சமாளிக்கும்படி இந்திய மக்களை இக்கமிட்டி கேட்டுக்கொள்கிறது. மற்றும் காந்திஜியின் தலைமையில் எல்லோரும் ஒன்று சேர்ந்து நடந்து கொள்வதுடன், இந்தியாவின் விடுதலைக்காக கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டு நடந்துகொள்ளும் சிப்பாய்களைப் போல் அவரது கட்டளைகளை நிறைவேற்ற வேண்டும். இந்த இயக்கத்தின் அடிப்படை அகிம்சைதான் என்பதை அவர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கட்டளைகள் விடுப்பதும், விடுக்கும் கட்டளைகள் மக்களுக்குத் தெரிவதும் சாத்தியமில்லாமல் போகும் காலம் வரலாம். காங்கிரஸ் கமிட்டி செயல்படாமல் போகும் காலமும் வரலாம். அத்தகைய நிலைமை ஏற்படும்போது, இந்த இயக்கத்தில் கலந்து கொண்டுள்ள ஒவ்வொரு ஆடவரும் பெண்ணும் பொதுவான கட்டளைக்கு உட்பட்டு அவரவர் தங்கள் கடமையைச் செய்ய வேண்டும். சுதந்திரத்தை விரும்பி அதற்கு முயற்சி செய்யும் ஒவ்வொரு இந்தியரும் தங்களுக்குத் தாங்களே வழிகாட்டியாக இருந்து கொண்டு கடினமான பாதையைக் கடந்து செல்ல வேண்டும். அந்தப் பாதையில் ஓய்வு பெறுவதற்கான

இடம் எதுவும் இல்லை. அந்தப் பாதைதான் இறுதியில் இந்தியா விடுதலையையும் சுதந்திரத்தையும் அடையும்படி செய்யும்.

"எதிர்காலத்தில் சுதந்திர இந்தியாவை ஆட்சி புரியும் விஷயமாக அ. இ. கா. கமிட்டி தன்னுடைய சொந்த அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறது. காங்கிரசுக்கு ஆட்சி அதிகாரம் கிடைக்க வேண்டும் என்பதற்காக மக்கள் போராட்டத்தை ஆரம்பிக்க அ. இ. கா. கமிட்டி விரும்பவில்லை என்பதை சம்பந்தப்பட்ட எல்லோருக்கும் தெளிவாகக் கூற விரும்புகிறது. ஆட்சி அதிகாரம் மக்கள் கையில் வரும்போது, அது இந்தியாவிலுள்ள எல்லா மக்களுக்கும் சொந்தமானதாக இருக்கும்."

"இந்தியாவிலிருந்து வெளியேறுக" என்ற தீர்மானத்தை விளக்கி காங்கிரஸ் தலைவர் மௌலானா அபுல் கலாம் ஆஸாத் பேசுகையில், இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் யாவரும் வெளியேறிவிட வேண்டும் என்பது அந்தத் தீர்மானத்தின் நோக்கமல்ல என்றும், ஆட்சி அதிகாரத்தை இந்தியர்களிடம் ஒப்புவிக்க வேண்டும் என்பதே அதன் பொருள் என்றும் குறிப்பிட்டார்,

பின்னர் காந்திஜி தாம் கைக்கொள்ளப் போகும் நடவடிக்கைகளை விவரித்துக் கூறினர். தீர்மானத்தைப் பிரேரேபித்து ஜவாஹர்லால் நேரு பேசியதாவது:

"இந்தத் தீர்மானம் யாருக்கும் சவால் விடுவதல்ல. இந்த யோசனையை பிரிட்டிஷார் ஒப்புக்கொண்டால், உள்நாட்டிலும் உலக நாடுகளிலும் உள்ள நிலைமையில் திருப்திகரமான மாறுதல் ஏற்படும். சீனவின் நிலையிலும் அபிவிருத்தி ஏற்படும். இந்தியாவில் வைக்கப்பட்டுள்ள பிரிட்டிஷ் படைகளும், மற்ற அந்நிய நாட்டுப் படைகளும், தொடர்ந்து இருந்துவர காந்திஜி இசைந்துள்ளார் என்பதை அ. இ. கா. கமிட்டி அறிந்திருக்கிறது."

தீர்மானத்தை ஆமோதித்து சர்தார் பட்டேல் பின்வருமாறு கூறினர்: "பிரிட்டன் முதலிய நேச நாடுகளுக்கு சங்கடத்தை உண்டாக்கக் கூடாது என்ற கொள்கையை காங்கிரஸ் சென்ற மூன்று ஆண்டுகளாக உறுதியுடன் பின்பற்றி வருகிறது. ஆனல், இந்த நல்லெண்ணத்தை பிரிட்டன் உணர்ந்து கொள்ளவில்லை. இந்தியாவிலுள்ள நாற்பது கோடி மக்களின் ஒத்துழைப்பின்றி இந்தியாவிலிருந்து தங்களுடைய பகைவர்களை எதிர்த்து யுத்தம் செய்ய முடியும் என்று அமெரிக்காவும் பிரிட்டனும் இன்னும் எண்ணிக்கொண்டிருந்தால், அது மடத்தனமேயாகும். இந்த யுத்தம் மக்களின் யுத்தம் என்றும், தங்களுடைய நாட்டிற்காகவும், தங்களுடைய சுதந்திரத்திற்காகவும் தாங்கள் போராடுவதாகவும் மக்களின் மனத்தில் படும்படி செய்ய வேண்டும். அவர்களுடைய மனத்தில் மேற்கண்ட உணர்ச்சி ஏற்படாத வரையில், பத்திரிகைகளின் மூலமும் வானெலியின் மூலமும் செய்யும் எத்

தகைய பிரசாரமும் மகத்தான முயற்சியில் ஈடுபடும்படி மக்களைத் தட்டியெழுப்ப முடியாது.''

கடைசியாக தீர்மானத்தை வோட்டுக்கு விட்டபோது, மிகப் பெரும்பான்மையோரின் ஆதரவு பெற்று அது நிறைவேறியது. பொது உடைமைக் கட்சியைச் சேர்ந்த பதின்மூன்று பேர்களே அதற்கு எதிராக வோட்டளித்தனர். பிறகு காந்திஜி அத்தீர்மானத்தை நடைமுறையில் அனுசரிக்க வேண்டிய விதத்தை விளக்கி ஹிந்துஸ்தானியிலும், ஆங்கிலத்திலும் இரண்டு மணி நேரம் பேசினார். அப்போது காந்திஜி மக்களுக்கு ஒரு மந்திரத்தை உபதேசித்தார்:

''நான் சுருக்கமான ஒரு மந்திரத்தை உங்களுக்குக் கூறுகிறேன். அந்த மந்திரத்தை உங்களுடைய இதயங்களில் பொறித்து வைத்துக்கொள்ளுங்கள். உங்களுடைய ஒவ்வொரு மூச்சிலும் அந்த மந்திரம் ஒலிக்க வேண்டும் 'செய் அல்லது செத்து மடி' என்பதே அந்த மந்திரமாகும். ஒன்று இந்தியா விடுதலை பெறும்படி நாம் செய்ய வேண்டும் அல்லது அம் முயற்சியில் உயிரைக் கொடுக்க வேண்டும். நமது அடிமைத்தனம் நீடிப்பதை பார்ததுக் கொண்டு நாம் உயிர் வாழமாட்டோம். உங்களுடைய மனச்சாட்சியையும் கடவுளையும் சாட்சியாக வைத்துக் கொண்டு ஒரு பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுங்கள. விடுதலை கிடைக்கும் வரையில் ஓய்வு எடுத்துக்கொள்ளப்போவதில்லை என்பதும், சுதந்திரத்தை அடைவதற்காக உயிரையும் கொடுக்கச் சித்தமாக இருக்கிறோம் என்பதுமே அந்தப் பிரதிக்ஞையாகும். உயிரை இழப்பவனே உண்மையில் உயிரைப் பெறுகிறான்; உயிரைப் பாதுகாக்க முயற்சிப்பவன் உயிரை இழக்கிறான். கோழை உள்ளம் படைத்தவனுக்கு சுதந்திரம் இல்லை.''

அ. இ. கா. கமிட்டியின் நடவடிக்கைகளை முடித்து வைத்து காங்கிரஸ் தலைவர் ஆஸாத் பேசுகையில், காங்கிரசின் மேற்கண்ட கோரிக்கையைத் தாம் ஐக்கிய நாடுகளுக்கு அறிவிக்கப் போவதாகவும், பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் சமரசம் செய்துகொள்ள இறுதி விநாடி வரையில் தாம் முயற்சிக்கப் போவதாகவும் குறிப்பிட்டார்.

ஆகஸ்டு 8-ந் தேதி காந்திஜிக்கு ஓய்ச்சல் ஒழிவின்றி அலுவல்கள் இருந்தன. 9-ந் தேதி காந்திஜி வழக்கம் போல் விடியற் காலையில் 4 மணிக்கு காலைப் பிரார்த்தனைக்காக எழுந்திருந்தார். காங்கிரஸ் தலைவர்களையெல்லாம் அதிகாரிகள் கைது செய்யப் போவதாக பலமான வதந்திகள் உலவின. ''நேற்றிரவு சமரசமான முறையில் நான் பேசியிருப்பதால் அதிகாரிகள் ஒருபோதும் என்னைக் கைது செய்யமாட்டார்கள்'' என்று காந்திஜி மகாதேவ தேசாயிடம் கூறினார்.

எனினும், பிரார்த்தனைக்குப் பின் காந்திஜி தமது தினசரி அலுவல்களைக் கவனிக்க முற்பட்டபோது, பிர்லா மாளிகையின்

வாயிலில் போலீஸ் கமிஷனர் வந்திருப்பதாகவும், காந்திஜியின் காரியதரிசியை அவர் பார்க்க விரும்புவதாகவும் செய்தி வந்தது. இந்தியா தற்காப்பு சட்டப்படி காந்திஜி, மகாதேவ தேசாய், ஸ்ரீமதி மீரா பென் ஆகியோரைக் கைது செய்வதற்கான உத்தரவை போலீஸ் கமிஷனர் கொண்டுவந்திருந்தார். அன்னை கஸ்தூரிபாயையும் ஸ்ரீ பியாரிலாலையும் கைது செய்ய உத்தரவு எதுவும் பிறப்பிக்கப்படவில்லை. எனினும், அதே நிபந்தனைகளின் மீது காந்திஜியுடன் அவர்கள் வரத் தயாராக இருந்தால், அவர்களையும் அழைத்து வரும்படி தமக்குக் கட்டளை பிறப்பித்திருப்பதாகவும் போலீஸ் கமிஷனர் கூறினார். ஆனால், அந்த நிபந்தனைகளின் மீது அவர்கள் செல்ல விரும்பவில்லை. காந்திஜியும் அவரது கோஷ்டியினரும் சிறை செல்லத் தயாராவதற்கு போலீஸ் அதிகாரிகள் அரைமணி நேரம் அவகாசம் கொடுத்தனர். காந்திஜி வழக்கம்போல் காலை ஆகாரமாக ஆட்டுப் பாலையும் பழரசத்யையும் அருந்தினார். பின்னர் காந்திஜிக்குப் பிடித்தமான 'வைஷ்ணவ ஜன' என்ற கீதம் பாடப்பட்டது. குரானிலிருந்து சில வாக்கியங்களையும் ஓதினர். கீதையின் பிரதி ஒன்று, ஆசிரம பஜனை நூல், குரான், உருது பால பாடம், தக்ளி ஆகியவற்றை எடுத்துக் கொண்டு காந்திஜி போலீஸ் அதிகாரிகளுடன் புறப்பட்டார்.

சிறைக்குச் செல்லுமுன் கடைசியாக காந்திஜி தேசத்திற்கு விடுத்த கட்டளையை பியாரிலால் மக்களுக்கு அறிவித்தார். அதன் விவரமாவது:

''நாட்டின் சுதந்திரத்திற்காக அகிம்சைப் போரில் ஈடுபட்டுள்ள ஒவ்வொரு சிப்பாயும் 'செய் அல்லது செத்து மடி' என்ற மந்திரத்தை ஒரு காகிதத்தில் எழுதி தமது உடையில் ஒட்டிக் கொள்ள வேண்டும். அப்போதுதான், சத்தியாக்கிரகப் போரில் அவர் மடிந்தாலும் அகிம்சையை ஆதரிக்காத மற்றவர்களிடையேயிருந்து அவரை அடையாளம் கண்டுபிடிக்க முடியும்.''

விக்டோரியா டர்மினஸ் ஸ்டேஷனில் ஒரு விசேஷ ரயில் வண்டி காத்துக்கொண்டிருந்தது. அதில் ஏற்கனவேயே காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் எல்லோரையும் பல காங்கிரஸ்வாதிகளையும் கைது செய்து வைத்திருந்தனர். காந்திஜியையும், ஸ்ரீ மகாதேவ தேசாய் முதலியோரையும் சிஞ்ச்வாட் ஸ்டேஷனில் இறங்கும்படி கூறி, மோட்டாரில் புனாவில் உள்ள ஆகாகான் மாளிகைக்கு அழைத்துச் சென்றனர்.

தலைவர்களை அதிகாரிகள் கைது செய்த செய்தி காட்டுத் தீ போல் இந்தியாவெங்கும் பரவியது. அச் செய்தியைக் கேட்டதும் மக்கள் பேராத்திரம் அடைந்தனர். அதன் விளைவாக நாடெங்கும் கடுமையான கலவரங்கள் ஏற்பட்டன. பின்னர் நாடெங்கும் ஆயிரக்கணக்கான காங்கிரஸ் வாதிகள் கைது செய்யப்பட்டனர். காந்திஜியையும் அவரது கோஷ்டியையும் அதிகாரி

கள் ஆகாகான் மாளிகையில் வைத்திருந்தனரெனினும், காரியக் கமிட்டி அங்கத்தினர்களை எங்கே வைத்திருக்கிறார்கள் என்பது ரகசியமாகவே இருந்தது.

அதன் பின் அன்னை கஸ்தூரிபாய் தடையுத்தரவை மீறி பம்பாயில் ஒரு கூட்டத்தில் பேச முற்பட்டதால், அவரையும் அதிகாரிகள் கைது செய்து காந்திஜியுடன் ஆகாகான் மாளிகையில் வைத்தனர். சிறைக்கு வெளியில் நிகழ்ந்த சம்பவங்களை அன்னை கஸ்தூரிபாய் காந்திஜிக்கு விவரமாக எடுத்துக் கூறினார்.

காந்திஜி ஆகாகான் மாளிகையில் சிறைப்பட்டிருந்தபோது வைஸ்ராய் லார்டு லின்லித்கோ முதல் பல்வேறு உயர்தர அதிகாரிகளுக்கும் பல பிரச்னைகளையொட்டியும் எழுதிய கடிதங்களே, இந்தத் தொகுப்பின் முதல் பாகத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

# நூன்முகம்

இதில் அடங்கிய விஷயங்களையும் முன்னுரையையும் படித்தேன். அவசரத்தில் படிப்பவர்களுக்கு, முன்னுரையே போதுமானதாக இருக்கலாம். ஆனால், இப்பதிப்பு அவசரமாகப் படிப்பவர்களுக்கென்று தயாரிக்கப்பட்டது அன்று. இத்தேசத்தின் அரசியல் விஷயங்களை மாத்திரமன்றி உலக விவகாரங்களையும் கூட, இயக்கக்கூடியவர்களாக இருக்கும் தீவிரமான ஊழியர்களுக்கென்றே தயாரிக்கப்பட்டிருப்பதுதான் இது. அப்படிப்பட்டவர்களுக்கு நான் கூறும் யோசனை, அசலையே படிக்கவேண்டும் என்பதுதான். நினைவு படுத்திக்கொள்ளுவதற்கும், அதற்கு உதவியாக இருப்பதற்கும் முன்னுரையைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதன் வாசகர்கள் என்று நான் யாரைக் கருதுகிறேனோ அவர்களுக்கு, நான் கூறுவதில் நம்பிக்கையும் இருக்க வேண்டும். நீண்ட காலமாக சத்தியத்தையும் அகிம்சையையும் நாடுகிறவன் என்ற முறையில் அச்சமயம் என் மனதில் பட்டதை எழுதியிருக்கிறேன். எவ்விதமான ஒளிவு மறைவும் இன்றியும், அலங்காரப்படுத்துவதற்காக எதையும் சேர்த்துவிடாமலும் எழுதியிருக்கிறேன்.

சிறைவைக்கப்பட்டதிலிருந்து திடீரென்று முன்கூட்டியே நான் விடுவிக்கப்பட்டு உடல் நலம் பெற ஓய்வெடுத்துக்கொண்ட பிறகு, நானும் முக்கியமான காங்கிரஸ்காரர்களும் சிறையில் அடைபட்ட பின் இரண்டு ஆண்டுகளாக நடந்தவைகளைக் குறித்து நம்பிக்கையுள்ள சாட்சிகளைக் கேட்டு ஆராய்ந்தேன். இப்பொழுது இங்கு பிரசுரிக்கப்படும் கடிதங்களில், நான் தெரிவித்த கருத்துகளில் எதையும் மாற்றிக்கொள்ளும்படியாக எதையும் நான் கேள்விப்படவில்லை.

நான் விடுதலை அடைந்த பின்னர், வாழ்க்கையின் பல்வேறு துறைகளிலும் என்ன நடந்திருக்கின்றன என்பதை நான் நேரடியாகவே அறிவேன். பின் வரும் பக்கங்களில் நான் என்ன சொல்லியிருக்கிறேனோ அவற்றை ஊர்ஜிதப் படுத்தும் கசப்பான விஷயங்களையே நான் கண்டிருக்கிறேன். உண்மையில் இந்தியா முழுவதுமே ஒரு பெரிய சிறைச்சாலையாக இருந்து வருகிறது. வைஸ்ராய், அவருக்குக் கீழிருக்கும் ஏராளமான ஜெயிலர்கள், வார்டர்கள் ஆகியவர்களுடன் இச்சிறைக்கு பொறுப்பற்ற சிறை சூபரிண்டெண்டாக இருக்கிறார். இச்சிறையிலிருக்கும் கைதிகள் இந்தியாவின் நாற்பது கோடி மக்கள் மாத்திரமல்ல, உலகத்தின் மற்றப் பகுதிகளிலும் மற்ற சூபரிண்டெண்டுகளின் கீழ் இதேபோன்ற நிலைமையில் இன்னும் ஏராளமானவர்கள் இருக்கிறார்கள்.

சிறைப்பட்டவன் எவ்விதம் கைதியாக இருக்கிறானோ அது போன்றே ஜெயிலரும் கைதியே. இதில் ஒரு வித்தியாசம் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. அவர் நிலைமை இன்னும் அதிக மோசமானது என்பது என் கருத்து. ஆண்டவன் தீர்ப்பளிக்கும் நாள் ஒன்று இருக்குமானால், அதாவது, நாம் கண்ணால் பார்க்க முடியாவிட்டாலும், சிறிது காலம் நாம் இருக்கிறோம் என்பதை விட அவர் இருக்கிறார் என்பதே அதிக உண்மை என்றால், ஆண்டவன் அளிக்கும் தீர்ப்பு கைதிகளுக்குச் சாதகமானதாகவும், ஜெயிலருக்குக் கடுமையான வகையில் எதிரானதாகவுமே இருக்கும்.

தன்னுடைய விடுதலைக்கு சத்தியமும் அகிம்சையும்தான் ஒரே உபாயம் என்று அறிந்தே ஏற்றுக் கொண்டிருக்கும் ஒரே நாடு உலகத்தில் இந்தியாவே. இந்த உபாயத்தைக் கொண்டே விடுதலை அடைவதாக இருந்தால், ஜெயிலர்கள் உள்பட உலகம் முழுமைக்கும், நான் விவரித்துவரும் கொடுங்கோலருக்கும் ஏகாதிபத்தியவாதிகளுக்கும்கூட அது விடுதலையை அளிப்பதாக இருக்க வேண்டும். பாசிஸ்டுகள், நாஜிகள் அல்லது ஜப்பானியரைக் குறித்து நான் சொல்ல வேண்டியதில்லை. அவர்கள் ஒழிந்துவிட்டார்கள் என்றே சொல்ல வேண்டும்.

இந்த ஆண்டிலோ, அடுத்த ஆண்டிலோ யுத்தம் முடிந்துவிடும். அது நேச நாட்டினருக்கு வெற்றியையே அளிக்கும். ஆனால் இதிலிருக்கும் பரிதாபம் என்னவெனில், இந்தியாவும் அதே போன்ற நாடுகளும் நேச நாடுகளின் காலடியில் கிடந்து அவதிப்படும் நிலையில் அந்த வெற்றி பெறப்படுமானால், அவ்வெற்றி பெயரளவில்தான் வெற்றியாக இருக்கும். இன்னும் அதிக பயங்கரமான யுத்தம் இருக்கக்கூடும் என்றால், அத்தகைய கோரமான ஒரு போருக்கு ஆரம்பமாகவும் அந்த வெற்றி நிச்சயமாக இருக்கும்.

அகிம்சை இந்தியாவுக்காக நான் வாதாட வேண்டியது எதுவும் இல்லை என்பதை அறிவேன். ஒரு பக்கத்தில் சத்தியத்தையும், மற்றோர் பக்கத்தில் அகிம்சையையும் கொண்ட நாணயம் இந்தியாவினிடம் இருக்குமாயின், அந்த நாணயத்திற்குரிய இயல்பான மதிப்பு உண்டு. அதன் தன்மையை அதுவே எடுத்துக் காட்டியும் வரும். சத்தியமும் அகிம்சையும் ஒவ்வோர் கட்டத்திலும் அடக்கத்தை வெளிக்காட்டுபவையாக இருக்க வேண்டும். யாரிடமிருந்து உதவி கிடைத்தாலும், அதை அவமதிப்பாக அவை கருதுவதில்லை; யாருடைய பெயரால், யாருக்காக சுரண்டல்கள் நடத்தப்படுகின்றனவோ அவர்களிடமிருந்து வந்தாலும் வெறுத்துத் தள்ளிவிடுவதில்லை. பிரிட்டிஷாரும் நேச தேசத்தினரும் உதவியளிப்பார்களானால் எவ்வளவோ நல்லதே. அப்பொழுது, விடுதலை சீக்கிரமாக வந்து

விடும். அவர்கள் உதவி செய்யவில்லையென்றாலும் அப்பொழுதும் விடுதலை நிச்சயமானதே. அப்போது, துன்பத்திற்குள்ளாகியிருப் பவர்களின் வேதனைதான் அதிகமாக இருக்கும், விடுதலைக்கு ஆகும் காலமும் நீண்டதாயிருக்கும். ஆனால், அவை சுதந்திரத் திற்காகச் செலவிடப்படுமானால், முக்கியமாக சத்தியத்தினாலும் அகிம்சையினாலும் அது அடையப்படுமானால், படும் வேதனையும் ஆகும் காலமும் என்ன பிரமாதம்!

*சேவா கிராமம்,*
*7—3—1945.*

மோ. க. காந்தி

# நண்பர்களுக்கு காந்திஜியின் கடிதம்

'சுந்தர் பன்'
காந்தி கிராமம்,
ஜுஹு, 10, ஜுன், 1944.

அன்புள்ள நண்பருக்கு,

எராவ்டா ஆகாகான் அரண்மனையில் நான் சிறைவைக்கப் பட்டிருந்தபோது இந்திய அரசாங்கத்திற்கும், பம்பாய் அரசாங் கத்திற்கும், எனக்குமிடையே நடந்த கடிதப் போக்குவரத்தின் பிரதிகள் அடங்கிய இரு பாகங்களை இத்துடன் உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன்.

இவற்றில் இரண்டாவது பாகம், "1942-43-இல் நடந்த கலவரங்களுக்குக் காங்கிரஸின் பொறுப்பு" என்ற தலைப்பில் இந்திய அரசாங்கம் வெளியிட்ட துண்டுப் பிரசுரத்திற்கு எனது பதில். முதல் பாகம், மேலே சொன்ன பதிலிலிருந்து எழுந்த கடிதப் போக்குவரத்தும், பொதுஜன முக்கியத்துவம் வாய்ந்த பல விஷயங்களைக் குறித்து நடந்த கடிதப்போக்குவரத்தும் ஆகும்.

அன்புள்ள நண்பர்களின் உதவியைக் கொண்டு இவற் றிற்குப் பல பிரதிகள் எடுக்கச் செய்திருக்கிறேன். இந்தப் பிரதிகளை எந்த அச்சகத்திலும் அச்சிட நான் முயற்சி செய்ய வில்லை. தணிக்கைத் தொல்லைகள் இருக்கக்கூடும் என்ற அச்சமே இதற்குக் காரணம். ஆனால், ராணுவ நோக்கில் ஏதாவது ஆட்சேபம் இருப்பதாக இந்திய அரசாங்கம் கருதலாம் என்று அஞ்சியே இக்கடிதங்களின் பிரதிகளை, எனக்கும் இந்த இரு அரசாங்கங்களுக்குமிடையே நடந்த கடிதப் போக்குவரத்தின் தன்மையை அறிந்திருக்க வேண்டியது அவசியம் என்று நான் கருதும் நண்பர்களுக்கு, அவர்களுடைய சொந்த உபயோகத்திற் காக மாத்திரம் அனுப்பிவருகிறேன். உங்களுக்கு அனுப்பியிருக் கும் பிரதியை, நீங்கள் விரும்பும் நண்பர்களுக்குத் தாராள மாகக் காட்டலாம். ஆனால், மேலே குறிப்பிட்டபடி நீங்கள் முன் ஜாக்கிரதையுடன் இருப்பது நல்லது.

உங்கள் அபிப்பிராயத்தை, முக்கியமாக இந்திய அரசாங்கத் திற்கு நான் அளித்த பதில் சம்பந்தமாக உங்கள் கருத்தை எனக்கு அறிவிக்கும் சிரமத்தை மேற்கொள்ளுவீர்களானால்

எனக்கு உதவியவர்களாவீர்கள். அரசாங்கத்தின் குற்றச்சாட்டில் கண்ட ஒவ்வொரு முக்கியமான விஷயத்திற்கும் பதில் சொல்ல நான் முயன்றிருக்கிறேன். விளக்கம் தேவையான விஷயங்கள் எவையாவது இருக்குமாயின், அவற்றை நான் அறிய விரும்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

(இந்தக் கடிதம், கடிதப் போக்குவரத்தின் நகல்கள் அனுப்பப்பட்ட நண்பர்களுக்கு அவற்றுடன் சேர்த்து அனுப்பப்பட்டதாகும்.)

# முன்னுரை

[காந்திஜிக்கும், இந்திய அரசாங்கத்திற்கும், பம்பாய் அரசாங் கத்திற்குமிடையே நடந்த கடிதப்போக்கு வரத்துகளின் முக்கியத்தை யும் தன்மையையும் வாசகர்கள் எளிதில் அறிந்துகொள்ள உதவியாக இருப்பதற்காக ஸ்ரீ பியாரிலால் ஒரு முன்னுரை எழுதியிருக்கிறார். "அவசரத்தில் படிப்பவர்களுக்கு முன்னுரையே போதுமானதாக இருக்கலாம். ஆனால் இப்பதிப்பு அவசரமாகப் படிப்பவர்களுக் கென்று தயாரிக்கப்பட்டது அன்று" என்றும் காந்திஜி நூன்முகத் தில் கூறியிருக்கிறார். ஆகையால் கடிதப் போக்குவரத்தின் தன் மையை வாசகர்கள் புரிந்து கொள்ளுவதற்கு உதவியாக இருக் கட்டும் என்பதற்காகவே ஸ்ரீ பியாரிலாலின் முன்னுரையைக் கீழே தருகிறோம்.]

சென்ற ஆண்டு (*1944*) மே மாதம் காந்திஜி சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டதும் உடல் நிலை குணமடைவதற்காக ஜுஹு வில் தங்கியிருந்தார். தாம் சிறை வைக்கப்பட்டிருந்தபோது தமக்கும் அரசாங்கத்திற்கும் நடந்த கடிதப்போக்குவரத்துகளை, நண்பர்களிடம் தனித்த முறையில் விநியோகிப்பதற்காக, அவர் அப்போது அவற்றிற்குப் பிரதிகள் தயாரிக்கும்படி செய்தார். இக்கடிதங்கள் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டன. "*1942-43*-இல் நடந்த கலவரங்களுக்குக் காங்கிரஸின் பொறுப்பு" என்ற அரசாங்கத்தின் துண்டுப் பிரசுரத்திற்கு காந்திஜி அளித்த பதில் அதில் இரண்டாவது பகுதி. மற்றக் கடிதங்க ளெல்லாம் முதல் பகுதி. இவ்வகையில் இருநூறு பிரதிகள் தயாரிக்கப்பட்டன. அவற்றுடன் நண்பர்களுக்கு அனுப்பிய கடிதமும் இதில் கொடுக்கப்பட்டிருக்கிறது.* முன் ஜாக்கிரதை யான ஏற்பாடுகளெல்லாம் செய்யப்பட்டிருந்தன; பத்திரிகை களுக்கு இவற்றின் பிரதி அனுப்பப்படவில்லை. என்றாலும், திற மையும் சாகஸமும் வாய்ந்த செய்தி ஸ்தாபனங்கள், இக் கடிதப் போக்குவரத்தின் சில பகுதிகளைப் பத்திரிகைகளுக்குக் கொடுத்து விட்டன. சாதுர்யம் வாய்ந்த ஒரு பம்பாய் பத்திரிகை இக்கடிதப் போக்குவரத்துகளை இரண்டு தவணையில் பிரசுரித்து விட்டது. உடனேயே இந்திய அரசாங்கம் இந்த இரு பகுதிகளிலும் கண்ட கடிதப் போக்குவரத்தை அரசாங்க வெளியீடாகப் பிரசுரித்தனர். அத்துடன் மிகவும் விஷமத்தனமானதும், தவறான அபிப்பிரா யத்தை உண்டாக்கக் கூடியதுமான 'சுருக்கம்' ஒன்றையும் தயாரித்து பத்திரிகைகளுக்கு, முக்கியமாக வெளிநாட்டுப் பத்தி ரிகைகளுக்கு அளித்தனர். குறிப்பிட்ட சிறு அளவு பிரதிகளையே

---

* இக்கடிதம் 'நூன்முகத்'திற்குப் பின் சேர்க்கப் பட்டிருக்கிறது.

அவர்கள் வெளியிட்டார்கள். அதிலிருந்து முழு விவரங்களடங்கிய பிரதிகள் தேவை என்ற பொதுஜனங்களின் கோரிக்கை நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. அந்தத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காகவே இப்பதிப்பு பிரசுரிக்கப்படுகிறது.

## 1

இந்தக் கடிதப் போக்குவரத்துகள் ஒன்பது பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. 1 முதல் 10 வரையிலுள்ள கடிதங்கள் முதல் பாகத்தில் அடங்கியிருக்கின்றன. இவை பல விஷயங்களையும் பற்றியவை. 1942 ஆகஸ்டு ஆரம்பத்தில் எல்லா காங்கிரஸ் காரர்களையும் அரசாங்கம் சிறையிலடைத்த பிறகு, அதிகாரிகளின் தொனியும் போக்கும் எவ்விதம் இருந்தன என்பதை இக் கடிதங்கள் காட்டுகின்றன. இப் பகுதியிலிருக்கும் முதல் கடிதம், காந்திஜி ஆகாகான் அரண்மனைக்கு வந்து சேர்ந்த அன்று பம்பாய் அரசாங்கத்திற்கு எழுதப்பட்டதாகும். பம்பாயிலிருந்து புனுவுக்குக் கொண்டுவரப்பட்ட போது வழியில் ஒரு சக சத்தியாக்கிரகி தாக்கப்பட்ட சம்பவத்தையே இக்கடிதம் குறிப்பிடுகிறது. சர்தார் பட்டேலையும் அவருடைய குமாரியையும் சிறையில் தன்னுடன் வைக்கும்படியும் இக்கடிதத்தில் காந்திஜி கேட்டுக் கொண்டிருப்பதோடு, தமக்கு பத்திரிகைகள் கொடுக்கும்படியும் கேட்டிருக்கிறார். இதில் கூறப்பட்டிருக்கும் மற்ற விஷயங்கள், அனுமதி கொடுத்த கடிதப் போக்குவரத்துகளுக்கு விதிக்கப்பட்ட தடைகளின் தன்மை, ஸ்ரீ மகாதேவ தேசாய் இறந்தது குறித்து அவருடைய மனைவியாருக்கும் குமாரருக்கும் காந்திஜி அனுப்பிய துக்கச் செய்தி அக்கிரமமாக காலதாமதம் செய்யப்பட்டது போன்றவை. இதற்கு அரசாங்கம் தன்னுடைய போக்கை வெளிப்படுத்தும் வகையில் அனுப்பிய பதில்களை 2, 5, 9-ஆம் கடிதங்களில் காணலாம்.

நெ. 12-ஆவது கடிதத்தை முக்கியமாக கவனிக்கவேண்டும். 'நவஜீவன்' அச்சகத்தின்மீது நடவடிக்கை எடுக்கும்படி உத்தர விடப்பட்டிருந்த ஆமதாபாத் ஜில்லா மாஜிஸ்டிரேட், தமக்கு அனுப்பப்பட்ட உத்தரவைத் தவறுகப் புரிந்து கொண்டு "1933-ஆம் ஆண்டிலிருந்து 'ஹரிஜன்' பத்திரிகைக் கட்டுகளை யெல்லாம் அழித்தே விட்டார்" என்று அரசாங்கம் இக் கடிதத்தில் ஒப்புக் கொண்டிருக்கிறது.

1942 நவம்பரில், சிமூர் சம்பவங்களுக்காக பேராசிரியர் பன்ஸாலி உண்ணுவிரதமிருந்த சமயத்தில், அது தார்மிக ரீதியில் தவறுனது என்று அவருக்குத் தோன்றினுல் உண்ணுவிரதத்தைக் கைவிடும்படி அவரைத் தூண்டுவதற்கு நேரடியாக அவருடன் டெலிபோனில் பேசுவதற்கு ஏற்பாடு செய்யும்படி காந்திஜி அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டார். ஆனுல், அரசாங்கம் அனுமதிக்க மறுத்துவிட்டது. (கடிதங்கள்: நெ. 13, 16).

## 2

*ஆகஸ்டு கலவரங்களைப்பற்றியும், 1943 பிப்ரவரியில் காந்திஜி மேற்கொண்ட உண்ணாவிரத சம்பந்தமாகவும், லார்டு லின்லித்கோவுக்கும், இந்திய அரசாங்கத்திற்கும், காந்திஜிக்கும் நடந்த கடிதப்போக்குவரத்துகள் அடங்கியதே இப் பகுதி.*

காங்கிரசின் ஆகஸ்டு தீர்மானம் பற்றியும், அதன் பேரில் அரசாங்கம் எடுத்துக்கொண்ட நடவடிக்கை சம்பந்தமாகவும் அரசாங்கம் வெளியிட்ட அறிக்கைக்குப் பதிலாக, காந்திஜி 1942 ஆகஸ்டு 14-ஆம் தேதி லார்டு லின்லித்கோவுக்கு எழுதியதே இதில் அடங்கிய முதல் கடிதம். இக்கடிதம், காந்திஜி கைதியான பிறகு ஐந்தாம் நாள் எழுதப்பட்டதாகும். எந்தக் கட்டத்திலும் காங்கிரஸ் பலாத்காரத்தை எண்ணியதே இல்லை என்று காந்திஜி இக்கடிதத்தில் திட்டவட்டமாக மறுத்திருப்பது முக்கியமாக கவனிக்க வேண்டியதாகும். இதற்குச் சில வாரங்களுக்குப் பின் காந்திஜி அரசாங்கத்திற்கு எழுதிய மற்றோர் கடிதத்தில், காங்கிரசின் அகிம்சைக் கொள்கை இன்னும் அதிக பலமாக வற்புறுத்திக் கூறப்பட்டிருக்கின்றது. (கடிதம் நெ. 19) வைஸ்ராய்க்கு எழுதிய கடிதத்தில் காந்திஜி, நேச தேசங்களின் லட்சியத்தை ஏற்றுக் கொள்ள இந்தியா தயாராக இருக்கிறது என்றும், முஸ்லிம் லீக் அமைக்கும் எந்த தேசீய சர்க்கார் விஷயத்திலும் விசுவாசத்துடன் நடந்துகொள்ள காங்கிரஸ் தயாராக இருக்கிறது என்றும் கூறியிருக்கிறார். இந்திய அரசாங்கத்தின் கொள்கை முழுவதையும்பற்றி புனராலோசனை செய்யுமாறும் அதில் காந்திஜி கூறி முடித்திருக்கிறார். இச்சந்தர்ப்பத்தில் கவனிக்க வேண்டிய ஒரு உண்மை இருக்கிறது. காங்கிரஸ் பலாத்காரத்தைத் தூண்டிவிடுகிறது என்று அரசாங்கம் கூறியதுடன், தங்களுடைய அடக்கு முறைக் கொள்கை நியாயமானது என்று காட்டவும் அது தொடர்ந்து முயற்சி செய்து வந்தது. காந்திஜியின் உண்ணாவிரதத்தினால் அரசாங்கத்திற்கு நிர்ப்பந்தம் ஏற்படும்வரையில் அது இக்கடிதப் போக்குவரத்துகளை பிரசுரிக்கவுமில்லை; அவற்றின்மீது எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவுமில்லை.

நான்கு மாதங்களுக்குப் பிறகு புத்தாண்டு சமயத்தில் லார்டு லின்லித்கோவுக்கு காந்திஜி தமது சொந்த முறையில் ஒரு கடிதம் எழுதி, திரும்பவும் கடிதப் போக்குவரத்தை ஆரம்பித்தார். காந்திஜி தமது கடிதங்களில் குறிப்பிட்டதாவது:

1. நெருக்கடி உண்டானது, அரசாங்கம் அவசரப்பட்டு எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளினாலேயன்றி, 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற தீர்மானம் நிறைவேறியதனால் அல்ல. சமரசத்திற்கு வழி காண்பதற்காக வைஸ்ராயைச் சந்தித்துப் பேச அனுமதி கேட்கத் தாம் தயாராக இருப்பதை காந்திஜி பகிரங்கமாக அறிவித்திருக்கிறார். சமரசப் பேச்சு முறிந்தாலன்றி சட்ட மறுப்பை ஆரம்பிக்க உத்தேசிக்கவில்லையாகையால்

அவர் வைஸ்ராய்க்கு எழுதும் வரையிலாவது அரசாங்கம் பொறுத்திருந்திருக்கலாம்.

2. 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற தீர்மானத்தின் நோக்கம், நேச தேசத்தினரின் யுத்த முயற்சியில் இந்தியா தீவிரமாகப் பங்கு கொள்ளுவதற்கு வேண்டிய நிலைமை ஏற்படும் படிச் செய்வதே ஆகும்.

3. 'ஆபத்தான' அல்லது வேறு விதமான எந்தக் காரியத் திற்கும் வேண்டிய முன்னேற்பாடுகள் எதையும் காங்கிரஸ் செய் யவே இல்லை. சில சந்தர்ப்பங்களில் காங்கிரசின் பெயரால் சட்ட மறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்க அதிகாரம் அளிக்கப்பட்டிருந்த ஒரே ஒருவர் காந்திஜிதான். ஆனால், அவர் அப்படிச் செய்வ தற்கும், இது சம்பந்தமாக இன்னது செய்ய வேண்டும் என்று அறிவிப்பதற்கும் முன்பே கைது செய்யப்பட்டுவிட்டார்.

4. என்றும் போலவே அவர் தொடர்ந்து அகிம்சையில் பூரண நம்பிக்கையுள்ளவராக இருந்ததால், கடுமையான தணிக் கைக்கு உட்பட்ட பத்திரிகைச் செய்திகளைக் கொண்டும், எப் பொழுதுமே தவறானவை என்று நிரூபிக்கப்பட்டிருக்கும் அரசாங்க அறிக்கைகளை ஆதாரமாக வைத்துக் கொண்டும், பொதுஜன பலாத்காரம் என்று சொல்லப்பட்டதை அவரால் கண்டிக்க முடியவில்லை.

லார்டு லின்லித்கோவின் கடிதங்களின்படி அரசாங்கத்தின் நிலை இதுதான்:

(அ) தம்முடைய கொள்கை பலாத்காரத்தில் கொண்டு போய் விட்டுவிடும் என்பதை காந்திஜி "எதிர்பார்த்தார்"; அதை "மன்னித்து விடவும் அவர் தயாராயிருந்தார்"; பின்னல் ஏற்பட்ட பலாத்காரச் செயல்கள், முன்கூட்டியே காங்கிரஸ் தலைவர்களால் ஏற்பாடு செய்யப்பட்டவை என்பதை நிரூபிப் பதற்கு "ஏராளமான" சாட்சியங்கள் இருக்கின்றன. ஆகை யால், 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற கொள்கையை மேற்கொண்டதால் ஏற்பட்ட நிலைமைக்கான பொறுப்பை, காங்கிரஸோ, முக்கியமாக காந்திஜியோ எளிதில் தட்டிக் கழித்து விடமுடியாது.

(ஆ) காந்திஜியுடன் சமரசப் பேச்சு நடத்துவதற்கு இருக் கக் கூடிய ஒரே அடிப்படை இதுதான் :

(1) ஆகஸ்டு 8-ந் தேதி நிறைவேற்றிய தீர்மானத்தையும், அத் தீர்மானம் வெளியிடும் கொள்கையையும் காந்திஜி நிரா கரித்து அதிலிருந்து அவர் விலகிவிட வேண்டும்.

(2) எதிர்கால சம்பந்தமாக சரியான வாக்குறுதிகளையும் அளிக்க வேண்டும்.

இதற்குப் பதிலளித்த காந்திஜி, தம் மீதும், காங்கிரஸ்மீதும் அரசாங்கம் சுமத்தியிருக்கும் குற்றச்சாட்டு உண்மையானது என்பதை, "ஆங்கில நீதி விசாரணை முறைக்கு ஏற்றவகையி லான" அத்தாட்சிகளைக் கொண்டு நிரூபிக்க வேண்டியது அரசாங்கமே என்றார்.

பாரபட்சமற்ற நீதிச் சபை முன்பு தாம் விசாரிக்கப்பட வேண்டும் என்று கேட்க காந்திஜிக்கு உரிமை இருந்தபோதி லும், அந்த உரிமையை விட்டுக்கொடுத்துவிட அவர் தயாராக இருந்தார். ஆனால், வைஸ்ராயைத் தாம் பேட்டி கண்டு நேரில் பேச வேண்டும் அல்லது அரசாங்கத்தின் மனதை அறிந்த வேறு ஒருவர் தம்மைக் கண்டு பேசி, தம் மனதில் மாறுதல் ஏற்படும் படிச் செய்ய தம்மிடம் அவரை அனுப்ப வேண்டும் என்றார் காந்திஜி. இதனால் தம் தவறை தாம் உணர நேர்ந்தால், அதற்கு வேண்டிய பரிகாரங்களைச் செய்துவிட தாம் தயார் என்றும் காந்திஜி அறிவித்தார். இதற்கு மாறாக, காங்கிரசின் சார்பில் தாம் ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று விரும்பப்படுமானால், கலந்து ஆலோசிப்பதற்கும் வேண்டிய நட வடிக்கை எடுப்பதற்கும் சௌகரியமாக இருப்பதை முன்னிட்டு காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர்களுடன் தம்மையும் சேர்த்து வைக்க வேண்டும் என்றும் காந்திஜி கேட்டார்.

இந்த இரண்டு கோரிக்கைகளில் எதையும் ஏற்றுக்கொள்ள அரசாங்கம் மறுத்துவிட்டது. அதன் பேரில் காந்திஜி, இருபத் தோரு நாள் உண்ணாவிரதத்தை மேற்கொண்டார்.

காந்திஜியின் இம் முடிவு அறிவிக்கப்பட்டதும், உண்ணா விரதம் இருப்பதற்கும் அக் காலத்திற்கும் அவரை விடுதலை செய்யத் தயாராக இருப்பதாக அரசாங்கம் அறிவித்தது.

இதற்குப் பதில் அனுப்பிய காந்திஜி, சுதந்திரத்துடன் இருப் பவராக உண்ணாவிரதம் இருக்க வேண்டும் என்பது தமது எண் ணமல்ல என்று அறிவித்துவிட்டார். தவறான சாக்குப்போக்கைக் கூறி விடுதலையடையும் விருப்பம் தமக்கு இல்லை என்றும் தெரி வித்தார். கைதியாகவோ, காவலில் வைக்கப்பட்டவராகவோ உண்ணாவிரதம் இருப்பதில் தாம் திருப்தியடைவதாகக் கூறினார். அச்சமயத்தில் இக்கடிதத்தை அரசாங்கம் பிரசுரிக்கவில்லை. எப்படியாவது விடுதலை பெற்றுவிட வேண்டும் என்ற நோக்கத் தின் பேரில் காந்திஜி உண்ணாவிரதம் இருக்கிறார் என்ற பொருள் ஏற்படும் வகையில் அப்பொழுது அரசாங்கம் அறிக்கை வெளி யிட்டது!

லார்டு லின்லித்கோவுக்கு காந்திஜி கடைசியாக எழுதிய கடிதம், பதவியிலிருந்து விலகும் வைஸ்ராயின் மனச்சாட்சிக்கு வேண்டுகோள் விடுக்கும் முறையில் எழுதப்பட்டதாகும். "தம்மு டைய நண்பன் என்று ஒரு சமயம் வைஸ்ராயினால் கருதப்பட்டவ

ரிடம் பொய்மை கற்பிக்கப்படும்" அவரது (வைஸ்ராயின்) தவறை எடுத்துக் கூறுவதற்காக எழுதப்பட்டது அக்கடிதம். அவரைப் பொறுத்தவரையில் இக் கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்பதை லார்டு லின்லித்கோவின் பதில் காட்டிவிட்டது.

## 3

இப்பகுதியில் பத்து (*39* முதல் *48* வரை) கடிதங்கள் அடங்கி யிருக்கின்றன. உண்ணாவிரதத்தின் போது காந்திஜி எவ்விதம் நடத்தப்பட்டார் என்பதை இக்கடிதங்கள் காட்டுகின்றன. உண்ணாவிரதத்தின்போது நண்பர்களும் உறவினர்களும் வந்து பார்க்க அனுமதிக்கப்பட்டனர். காந்திஜி விரும்பும் நர்ஸு களையும் வைத்திய ஆலோசகர்களையும் வைத்துக்கொள்ளவும் அரசாங்கம் அனுமதித்தது. ஆனால் அரசாங்கம் பின்னால் நடந்து கொண்டதில், இந்தப்பெருந்தன்மையும் நல்லெண்ணமும் காணப் படவில்லை. இந்த வசதிகளை நடைமுறையில் கொண்டுவருவது சம்பந்தமாக காந்திஜி அடிக்கடி அரசாங்கத்திற்கு எழுதி விளக் கம் கேட்க வேண்டியிருந்தது. அளிக்கப்பட்ட வசதிகளை முற்றி லும் பயன்படுத்திக் கொள்ளமுடியாத வகையில் வேண்டுமென்றே பிறப்பிக்கப்படுபவைகளாக சில உத்தரவுகள் இருந்தன. உண்ணா விரதத்தினால் காந்திஜிக்கு பலவீனம் அதிகரித்து வந்தது. பார்க்க வருகிறவர்களிடம் தமக்குப் பதிலாக வேறு யாராவது பேச அனுமதிக்க வேண்டும் என்று காந்திஜி கேட்டிருந்தார். இதை அரசாங்கம் அனுமதிக்காதது இதற்கு ஒரு உதாரணம் (கடிதம் செ. *43*.)

## 4

இப்பகுதியிலிருக்கும் முதல் கடிதம், உண்ணாவிரதம் ஆரம்ப மானவுடனேயே காந்திஜி எழுதியதாகும். அரசாங்க அறிக்கை யில் தம்மீது சுமத்தப்பட்டிருந்த சில குற்றச்சாட்டுகளுக்கு அதில் காந்திஜி பதில் சொல்லியிருக்கிறார். காந்திஜி எழுதியவைகளி லும் பேச்சிலும் "பகிரங்கமான புரட்சி", "சுருக்கமானது, அதி வேகமானது", "இறுதிவரையில் போராட்டம்" என்ற வாசகங்க ளெல்லாம் காணப்படுவதாக அரசாங்க அறிக்கையில் குறிப்பிட் டிருந்தது. இவையெல்லாம் முற்றிலும் அகிம்சை சம்பந்த மாகவே குறிப்பிடப்பட்டன. அப்படியிருந்தும் அரசாங்கம் அவற்றை காந்திஜிக்கு எதிராக உபயோகப்படுத்தியது. "செய் அல்லது செத்துவிடு" என்று காந்திஜி கூறியதும் அரசாங்க அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது. இப் போராட்டம் பலாத்காரமற்றதாக இருக்க வேண்டும் என்பதற்கு இது ருசு வாகாது என்றும் அந்த அறிக்கை கூறியது. ஆனால், தாம் இதைச் சொன்னதன் மூலம் விரும்பியது, ஒவ்வொரு அகிம்சைப் போர் வீரரையும் வேறு கொள்கைகளை யுடையவர்களிட

யிருந்து பிரித்து ஒரு சின்னமாகக் காட்டுவதற்கே என்றும் காந்திஜி விளக்கினர். இந்த அகிம்சைப் போர் வீரர்கள், இந்தியாவுக்குச் சுதந்திரத்தை ஈட்டிக் கொடுக்க வேண்டும்; இல்லையானல் அகிம்சை முறையில் அதை அடையும் முயற்சியில் சாகவேண்டும் என்ருர் காந்திஜி.

காந்திஜியையும் காங்கிரஸையும் இழிவுபடுத்துவதற்கான முயற்சிகள் தொடர்ந்து நடந்துவந்தன. பிப்ரவரி 15-இல் உள்துறை மந்திரி அசெம்பிளியில் பேசினர். அதில், முன்பே சுமத்தப்பட்ட குற்றச் சாட்டுகளைத் திரும்பவும் குறிப்பிட்டதோடு மேற்கொண்டும் சில குற்றச்சாட்டுகளை எடுத்துக் கூறினர். அதில் உண்மையற்ற, தவருன கூற்றுகள் நிறைந்திருந்தன. உண்ணுவிரதம் முடிந்த பிறகு காந்திஜி அந்தப் பிரசங்கத்தைப் படித்தார். மே 21-ஆம் தேதி அதற்குப் பதிலாக நீண்ட கடிதம் ஒன்று எழுதினர். (கடிதம் நெ. 51) உள்துறை மந்திரியின் பேச்சில் அடங்கியிருந்த பல தவறுகளையும், திரித்துக் கூறப்பட்டிருந்தவைகளையும் அக்கடிதத்தில் காந்திஜி எடுத்துக் காட்டினர்.

இதற்குப் பதிலளித்த உள்துறை மந்திரி, தாம் சொன்னது சரியானது என்பதற்கு ஆதாரம் காட்டவுமில்லை, தமது குற்றச் சாட்டை வாபஸ் வாங்கிக் கொள்ளவுமில்லை. ஆனல், அரசாங்கத்தின் மனப்போக்கிற்கும் காந்திஜியின் போக்கிற்கும் "அடிப்படையான மாறுபாடுகள்" இருப்பதால், காந்திஜியின் கடிதத்தில் கூறியிருக்கும் பல விஷயங்களைக் குறித்தும் விவாதித்துப் பயனில்லை என்று பதில் எழுதினர்!

இரு தரத்தாருக்கும் இடையே "அடிப்படையான மாறுபாடுகள்" இருக்கலாம்; ஆனல், "கண்டுபிடிக்கப்படும் தவறுகளைத் திருத்திக் கொள்ளுவதற்கு அவை தடையாகிவிடமாட்டா" என்று காந்திஜி எழுதியதற்கு பதிலே இல்லை!

ஸ்ரீ ஜின்னு ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில், காந்திஜி தமக்குக் கடிதம் எழுதட்டும் என்று கூறியிருந்தார். அதை அனுசரித்து காந்திஜி, 1943 மே 4-ஆம் தேதி ஸ்ரீ ஜின்னுவுக்கு ஒரு கடிதம் எழுதினர். தம்மிடம் வரும்படியும், வகுப்புப் பிரச்னையில் ஒரு முடிவுக்கு வந்து தீருவது என்ற உறுதியுடன் நேரில் பேசலாம் என்றும் காந்திஜி அதில் கூறியிருந்தார். அது சாத்தியமில்லையானல், அவ் விஷயமாக தமக்கு எழுதுமாறும் ஸ்ரீ ஜின்னுவைக் கேட்டிருந்தார். காந்திஜியின் இக்கடிதத்தை ஸ்ரீ ஜின்னுவுக்கு அனுப்ப அரசாங்கம் மறுத்துவிட்டது. ஆனல், இது சம்பந்தமாக அரசாங்கம் வெளியிடப்போகும் ஒரு அறிக்கையின் நகலை காந்திஜிக்கு அனுப்பியிருந்தார்கள். காந்திஜியின் கடித சம்பந்தமாகத் தவருன அபிப்பிராயத்தை உண்டாக்கும் விதத்தில் அக்கடிதத்தின் சுருக்கம் அந்த அறிக்கையில் கொடுக்கப்பட்டிருந்தது.

அரசாங்கத்தின் இச்செய்கையை ஆட்சேபித்து காந்திஜி எழுதினர். அரசாங்க அறிக்கையில் சில மாறுதல்கள் செய்யப் பட்டிருக்கின்றன என்று காந்திஜி கூறியதோடு, இது சம்பந்தமாக தமக்கும் அரசாங்கத்திற்கும் நடந்த கடிதப் போக்குவரத்துகளை பத்திரிகைகளுக்கு வெளியிடுமாறும் கேட்டார்.

லார்டுகள் சபையில் லார்டு சாமுவல் பேசியிருந்த விவரத்தை, உண்ணாவிரதம் முடிந்த பிறகு, காந்திஜி 'ஹிந்து' பத்திரிகையில் படித்தார். அதில், அவர் மீதும் காங்கிரஸ் மீதும் அநியாயமான கண்டனங்கள் அடங்கியிருந்தன. அந்தக் குற்றச் சாட்டுகளையெல்லாம் ஆதாரங்களுடன் மறுத்து காந்திஜி நீண்ட கடிதமொன்று எழுதினர்.

சிறையில் அடைக்கப்பட்ட காங்கிரஸ்காரர்கள் மீது அவர் களுக்குத் தெரியாமல் அரசாங்கம் பொய்ப் பிரசாரம் செய்து கொண்டிருந்தது. அத்தகைய பிரசாரத்திற்கு விடை அளிக்கவோ அல்லது அதை மறுக்கவோ சிறைபட்டிருந்த எந்த காங்கிரஸ் காரருக்கும் சந்தர்ப்பமளிப்பதில்லை என்று அரசாங்கம் அனுசரித்து வந்த கொள்கையைப் பின் பற்றி, லார்டு சாமுவலுக்கு காந்திஜி எழுதிய கடிதத்தையும் அனுப்புவதற்கு அரசாங்கம் மறுத்துவிட்டது. அரசாங்கத்தின் இந்த முடிவை காந்திஜி ஆட்சேபித்தார். 'அக்கிரமமாகத் தவறான கருத்து ஏற்படும்படி செய்யப்பட்டிருப்பதை மறுத்துக் கூறுவதற்கு ஒரு கைதிக்குக் கூட இருக்கும் சாதாரண உரிமையை இது தடுப்பதாகும்" என்று காந்திஜி எழுதினர். எனினும், அவரது கண்டனத்தை அரசாங்கம் லட்சியம் செய்யவில்லை.

ஜூன், ஜூலை மாதங்களில் பலவிதமான வதந்திகள் பத்திரிகைகளில் அடிப்பட்டன. ஆகஸ்டு தீர்மானத்தை வாபஸ் வாங்கிக் கொண்டு அரசாங்கத்திற்கு காந்திஜி கடிதம் எழுதி யிருக்கிருர் என்பதும் ஒரு வதந்தி. ஆனல், அத்தீர்மானத்தை வாபஸ் வாங்கிக் கொள்ளுவதற்கு தமக்கு விருப்பமில்லை, தமக்கு அதிகாரமும் இல்லை; ஆகையால் இந்த வதந்திகளை மறுத்து அறிக்கை வெளியிடுமாறு காந்திஜி அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டார். முந்திய கோரிக்கைகளைப் போன்றே இதுவும் நிராகரிக்கப்பட்டது.

காந்திஜியின் உண்ணாவிரதம் ஆரம்பமான பிறகு, காங்கிரஸ் மீதும், காந்திஜி மீதும் குற்றஞ்சாட்டி, "1942—43-இல் நடந்த கலவரங்களுக்கு காங்கிரஸின் பொறுப்பு" என்ற துண்டுப் பிரசுரம் ஒன்றை இந்திய அரசாங்கம் வெளியிட்டது. ஜூலை 15-ஆம் தேதி இதற்கு ஒரு நீண்ட பதிலை காந்திஜி அனுப்பினர். காந்திஜி எழுதியவைகளிலிருந்து சில விஷயங்களைத் தாறுமாறான முறையில் எடுத்து சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமில்லாமல் அவற்றை உபயோகித்து அவற்றிற்கு மோசமான பொருள் ஏற்படும்படி அரசாங்கம் அப்பிரசுரத்தில் செய்திருந்தது.

காந்திஜி எழுதிய தமது பதிலில், அவ்விஷயங்களைச் சரியான இடத்தில் வைத்து அவற்றின் உண்மையான பொருள் இன்னது என்பதையும் விளக்கிக் காட்டினார். அந்தத் துண்டுப் பிரசுரத்தை எழுதியவர், வேண்டும் என்றே திரித்துக் கூறவும், தவறான பொருள் ஏற்படும்படி செய்யவும், உண்மையை மறைத்துப் பொய் கூறவும் செய்திருக்கும் தந்திரமான முயற்சியைச் சுட்டிக் காட்டுவதற்கு காந்திஜி தமது நீண்ட கடிதத்தின் பெரும் பகுதியையும் எடுத்துக் கொள்ள வேண்டியிருந்தது.

தவறாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது என்பதற்கு ஓர் உதாரணம், அத்துண்டுப் பிரசுரத்தின் 34-ஆம் பாராவாகும். "கூறப்பட்டிருக்கும் யோசனையில் வாபஸ் வாங்குவதற்கோ அல்லது சமரசப் பேச்சிற்கோ இடமே இல்லை" என்று காந்திஜி கூறியிருப்பதாக அதில் சொல்லப்பட்டிருக்கிறது. அதோடு, "இன்னுமொரு சந்தர்ப்பமளிப்பது என்பதற்கே இல்லை. ஏனெனில், இது ஒரு பகிரங்கமான புரட்சி" என்று காந்திஜி கூறியதாகவும் அப்பிரசுரம் சொல்லுகிறது. பிரசுரமாகியிருக்கும் வார்தா பேட்டியில் "ஒரு பகுதி திரித்துக் கூறப்பட்டிருக்கிறது; மற்றொரு பகுதி இடைச் செருகல் ஆகும்" என்று காந்திஜி அக்கடிதத்தில் கூறுகிறார். காந்திஜி கூறியதன் சரியான விவரம் அப்பிரசுரத்தை எழுதியவரின் எதிரிலிருந்தும் கூட, தவறான முறையில் அவர் எடுத்துக்காட்டியதோடு திருப்தியடைந்துவிடாமல், ஆதாரமற்ற "அசோசியேடட் பிரஸ்" செய்தியிலிருந்தும் காந்திஜியின் கடிதத்தில் இருப்பது போல் பிறர் எண்ணும்படி இரு வாக்கியங்களைச் சேர்த்துக் கொண்டிருக்கிறார்!

இந்த மானக்கேடான பொய்யை காந்திஜி அம்பலப்படுத்தியிருந்தும், அரசாங்கம் கௌரவமாக அதற்குப் பரிகாரம் செய்யவில்லை; அதற்கு மாறாக, காந்திஜி கூறியதை நம்பாதவகையிலும், அவருடைய நல்லெண்ணத்திற்குக் களங்கமுண்டாக்கும் வகையிலும் நடந்துகொண்டது. அதிருஷ்டவசமாக 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை, 1942 ஜூலை 16-ஆம் தேதி (வெளியூர்) பதிப்பில், சம்பந்தப்பட்ட இந்த வார்தா பேட்டியை கீழ்க்கண்டவாறு பிரசுரித்திருந்தது:

> பிறகு சேவாகிராமத்தில் நிருபர்கள் காந்திஜியைப் பேட்டிகண்டு பேசிய போது தீர்மானம் சம்பந்தமான கேள்விகளுக்கு வருமாறு பதில் கூறினார் :
>
> "இந்த யோசனைகளில் சமரசப் பேச்சை வாபஸ் வாங்கிக் கொண்டுவிடுவதற்கு எந்த இடமும் இல்லை; ஒன்று, அவர்கள் இந்தியாவின் சுதந்திரத்தை ஒப்புக்கொள்ள வேண்டும், அல்லது ஒப்புக்கொள்ள முடியாது என்று சொல்லிவிட வேண்டும்."

'அசோசியேடட் பிரஸ் ஆப் இந்தியா' செய்தி ஸ்தாபனம் கொடுத்திருக்கும் இச்செய்தியும் காந்திஜி கூறுவதே சரி என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. அதோடு இன்னுமொரு விஷயத்தை

யும் கவனிக்க வேண்டும். "இன்னுமொரு சந்தர்ப்பம் அளிப்பது என்பதற்கே இடமில்லை. ஏனெனில் இது பகிரங்கமானதோர் புரட்சி" என்பது 'ஸ்டேட்ஸ்மன்' பிரசுரித்திருக்கும் செய்தியில் காணப்படவில்லை!

இந்தியாவிலிருந்து பிரிட்டிஷர் எல்லோரும் வெளியேறிப் போய்விட வேண்டும் என்று காந்திஜி கேட்கிறார் என்ற குற்றச் சாட்டை, காந்திஜி கடிதத்திலிருக்கும் 12 முதல் 16 வரையுள்ள பாராக்கள் மறுக்கின்றன. காந்திஜி கேட்டிருப்பதெல்லாம், பிரிட்டிஷ் அதிகாரம் வாபஸாக வேண்டும் என்பதேயல்லாமல் தனிப்பட்ட ஆங்கிலேயர்கள் எல்லோரும் வெளியேறிவிட வேண்டும் என்பதல்ல. ஜப்பானுக்கு எதிராக, இந்தியாவை ராணுவ தளமாக உபயோகித்துக் கொள்ளுவதற்குக்கூட காந்திஜி சம்மதித்திருக்கிறார்.

காங்கிரஸும் காந்திஜியும் தோல்வி மனப்பான்மையுள்ளவர்கள், ஜப்பானுக்கு சாதகமானவர்கள் என்ற குற்றச்சாட்டுக்கு காந்திஜி எழுதிய கடிதத்தின் 18 முதல் 40 வரையிலுள்ள பாராக்கள் பதிலளிக்கின்றன. "எதிரிகள் வெற்றியடைந்துவிடுவார்கள்" என்று காந்திஜி நம்பாதது மாத்திரமல்ல, இதற்கு மாறாக நேச தேசத்தினரே வெற்றியடைவார்கள் என்று பகிரங்கமாகக் கூறியிருக்கிறார். (கடிதத்தின் 19, 21, 25-ஆவது பாராக்கள்) அரசாங்கத்தின் பொசுக்கல் கொள்கையை காந்திஜி எதிர்த்திருப்பதற்குக் காரணம், அவரது இழி குணமோ அல்லது ஜப்பானுக்கு ஆதரவான மன நிலையோ தான் என்ற குற்றச்சாட்டை அவரது கடிதத்தின் 30, 41-ஆம் பாராக்கள் மறுத்திருக்கின்றன. முடிவாக, "அவர்களின் (ஜப்பானியரின்) கோரிக்கைக்கு உடன்படவும் தயாராக இருக்கிறார்" என்று கூறப்பட்டிருப்பது எல்லோரும் அறிந்த உண்மைகளுக்குப் புறம்பானது என்றும் காந்திஜி தமது பதிலில் கூறியிருக்கிறார் (பாராக்கள் 22, 32).

போராட்டத்திற்கு காந்திஜியோ, காங்கிரஸோ திட்டமிடவுமில்லை, தூண்டிவிடவுமில்லை, பலாத்காரத்தை அனுமதிக்கவுமில்லை, பலாத்காரச் செயல்களை மன்னித்துவிடத் தயாராக இருந்ததுமில்லை என்று, காந்திஜியின் பதிலில் 45 முதல் 63 வரையிலுள்ள பாராக்கள் அரசாங்கத்தின் குற்றச்சாட்டை மறுக்கின்றன. முற்றிலும் பலாத்காரமில்லாதிருக்க வேண்டும் என்றே காங்கிரஸ் மக்களுக்கு போதித்து வந்திருக்கிறது. முன்னால் கலவரங்கள் மூண்டுவிட்ட சமயங்களிலெல்லாம் அவற்றைச் சமாளிப்பதற்கு காங்கிரஸ் ஸ்தாபனம் முழுதும் தீவிரமான நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது. ஏழு தடவைகளில் இதற்காக காந்திஜியே உண்ணாவிரதத்தை மேற்கொண்டிருக்கிறார் (பாரா 52). காங்கிரஸ்காரர்கள் பலாத்காரத்தில் ஈடுபடுவதாக இருந்தால், அவர்கள் மத்தியில் தம்மை உயிருடன் காணமுடியாது என்றும் காந்திஜி கூறியிருக்கிறார். (பாரா 68.) சில சந்தர்ப்பங்கள் ஏற்படும்போது

ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் தாமே சொந்தமாக நடவடிக்கை எடுத்துக் கொள்ள சுதந்திரமுள்ளவராக இருக்கவேண்டும் என்று கூறியிருப்பதும்*, நடக்கவிருக்கும் போராட்ட சம்பந்தமாக ராணுவச் சொற்களை உபயோகித்திருப்பதும் அகிம்சையை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும்போது கொஞ்சமும் தவறில்லாதவை, களங்கமற்றவை.

அரசாங்கத்தின் துண்டுப் பிரசுர ஆசிரியர் செய்திருக்கும் இன்னும் அதிகப் படுமோசமான காரியம், போராட்டம் எப்படியிருக்கும் என்பதைப் பற்றிக் கூறப்பட்டிருந்த முறைகளில் அகிம்சையைப் பற்றிச் சொல்லியிருந்ததையெல்லாம் அடியோடு நிராகரித்துவிட்டு, கைதாவதற்கு முன்னால் வெளியிட்டிருந்த வேலைத்திட்டம், அறிவிப்பு எல்லாம் 'மதிப்பற்றவை' என்றும், 'ஏமாற்றுப் பேச்சு' என்றும் சொல்லியிருப்பதுதான். பைபிளில் 'கூடாது' என்றிருக்கும் சொல்லை நீக்கிவிட்டு அந்த ஆக்ஞைகளை, திருட்டு, கொலை போன்றவைகளுக்குச் சாதகமாகக் குறிப்பிடுவதைப் போன்ற செயலே இதுவாகும். அத்துண்டுப் பிரசுரத்தின் ஆசிரியர், காந்திஜி எதனால் வாழ்ந்தாரோ, எதற்காக வாழ்ந்தாரோ அதை மறுத்திருப்பதன் மூலம், அவரது உயர்ந்த பண்புகள் எல்லாவற்றையுமே மறுத்திருக்கிறார்.

"செய் அல்லது செத்துவிடு" என்ற சொற்களை காந்திஜி உபயோகித்திருந்ததைக் குறித்து அரசாங்கம் தனது கடிதங்களில் பிறகும் குறிப்பிட்டிருந்தது. (கடிதம் நெ. 79). இதற்கு

* ஆகஸ்டு தீர்மானத்தில் கண்ட இப்பகுதியை அரசாங்கத்தின் பிரசுரம் வெளியிட்டிருக்கிறது. இதில் புதுமையானது எதுவும் இல்லை. 1931 பிப்ரவரியில் காந்தி-இர்வின் பேச்சு முறிந்துவிடும் என்ற நிலைமை இருந்தபோது, காங்கிரஸ் காரியக்கமிட்டி இதேபோன்ற ஒரு முடிவையே செய்தது. பின்னால் ஏற்பட்ட நிலைமையினால் அத்தீர்மானத்தைப் பிரசுரிக்க வேண்டிய அவசியமில்லாது போயிற்று. பண்டித நேரு தமது சுயசரிதையில் அத்தீர்மானத்தைக் குறித்து வருமாறு விவரித்திருக்கிறார்:

"தற்காலிகத் தலைவராக வேலை செய்துவருகிறவர் கைது செய்யப்பட்டுவிடுவாரானால், தமக்குப் பதிலாக ஒரு தலைவரை அவர் நியமித்துவிட்டுப் போவார்; காரியக் கமிட்டியில் காலியாக இருக்கும் ஸ்தானங்களுக்கும் நியமனம் செய்வார். இதுவரை இதுவே வழக்கத்தில் இருந்துவந்தது. பதிலாக நியமிக்கப்படும் காரியக் கமிட்டிகள் வேலை செய்வதே இல்லை. எந்த விஷயத்திலும் முன்கூட்டி முடிவு செய்வதற்கு அத்தகைய கமிட்டிக்கு எந்த அதிகாரமும் இல்லை. அவர்கள். சிறைக்கு மாத்திரமே போக முடியும். என்றாலும் இப்படி தொடர்ந்து நியமித்துக் கொண்டுபோவதன்மூலம் 'காங்கிரசை'த் தவறான நிலையில் வைத்துவிடக் கூடிய அபாயமும் இருந்தது. எனவே டில்லியில் நடந்த காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம், இனி காரியக் கமிட்டியை நியமிப்பது என்பது இல்லை என்று தீர்மானித்தது. சிறைப்படாமல் காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் அல்லது அங்கத்தினர் வெளியிலிருக்கும் வரையில் அவர்கள் முழுக் காரியக் கமிட்டியாகவே இயங்குவார்கள். அவர்கள் எல்லோருமே சிறைப்பட்டு விடுவார்களானால், அப்பொழுது காரியக் கமிட்டி வேலைசெய்யாது. அப்பொழுது காரியக் கமிட்டியின் அதிகாரம் இந்நாட்டிலுள்ள ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் ஏற்பட்டுவிடுவதோடு, அவர்கள் விடாப்பிடியாகப் போராட்டத்தை நடத்திக்கொண்டு போவார்கள் என்றும் ஆடம்பரமான வார்த்தைகளில் சொன்னோம்."

காந்திஜி தமது 49, 51–ஆவது கடிதங்களிலேயே பதில் சொல்லி யிருக்கிறார். அதேபோல, காந்திஜி வெளியிட்டதாகக் கூறப்பட்ட அனேமதேயமான 'கடைசிச் செய்தி'யையும் (குற்றச்சாட்டின் குறிப்பு 10), தாம் எந்த விதமான அறிவிப்பும் வெளியிடவில்லை என்று காந்திஜி மறுத்துள்ளார். (46–ஆவது பாரா.) இந்தக் கடைசிச் செய்தி என்று கூறப்பட்டதெல்லாம், உண்மையில், 1942 ஆகஸ்டு 7, 8–ஆம் தேதிகளில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் பேசியபோது காந்திஜி கூறியவற்றிலிருந்து அங்கு ஒன்றும், இங்கு ஒன்றுமாகப் பொறுக்கி எடுக்கப்பட்ட வாக்கியங்கள் அடங்கியதேயாகும்!

குற்றச்சாட்டில் 4, 5–ஆவது அத்தியாயங்களுக்கு காந்திஜி பதில் சொல்லாமலேயே விட்டுவிட்டார். நடந்த கலவரங்களின் தன்மையைப் பற்றியவையே அந்த அத்தியாயங்கள். இவற்றில் கூறப்பட்டவை ஒரு தலைப்பட்சமானவை; ஆதாரமற்ற தஸ்தாவேஜிகள். அதனாலேயே இவற்றிற்கு காந்திஜி பதில் கூற வில்லை. ஸ்ரீ கிருஷ்ணன் நாயரின் விஷயத்திலிருந்து இதில் எச்ச ரிக்கை அவசியமாகிறது என்பது நன்கு விளங்கும். பிரபலமான காங்கிரஸ் தலைவர்கள் எல்லோரும் கைது செய்யப்பட்டுவிட்ட பிறகு ஏற்பட்ட கலவரங்களுக்கு காங்கிரஸே பொறுப்பு என்ப தற்கு ஒரு ருசுவாக அக் குற்றச்சாட்டில் ஸ்ரீ கிருஷ்ணன் நாயரின் விஷயம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பலாத்காரத்தில் ஈடுபட்ட தாகக் குற்றஞ் சாட்டி அவரைக் கைது செய்தார்கள். இதைப் பற்றி மத்திய சட்டசபையில் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு அர சாங்கம் அளித்த கீழ்க்கண்ட பதிலிலிருந்து, அரசாங்கத்தின் கூற்று தெளிவாக விளங்கும் :

கிருஷ்ணன் நாயர், டில்லி காங்கிரஸ் ஊழியர். அவரை லாகூர் ஹைகோர்ட் விடுதலை செய்துவிட்டது. ஆகவே அவரைப் பற்றி மத்திய சட்ட சபையில் ஸ்ரீ கயூம் ஒரு கேள்வி கேட்டார். அவரை ஹைகோர்ட் விடுதலை செய்துவிட்டதால், அவர் இரண்டு ஆண்டு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டார் என்று 'காங்கிரஸ் பொறுப்பு' என்ற துண்டுப் பிரசுரத்தில் கூறப்பட்டிருப் பதற்கு அரசாங்கம் என்ன பரிகாரம் செய்யப்போகிறது என்று ஸ்ரீ கயூம் கேட்டார். இதற்கு பதிலளித்த உள்துறை மந்திரி, இது விஷயத்தில் அர சாங்கம் எதுவும் செய்யப்போவதில்லை என்றும், ஆனால் சட்டப்படி உரிய நடவடிக்கையை நாயர் எடுத்துக்கொள்ளலாம் என்றும் கூறினார்.

துண்டுப் பிரசுரத்தில் வெளியிட்டிருக்கும் குற்றச்சாட்டை வாபஸ் வாங்கிக் கொண்டுவிட உள்துறை மந்திரி தயாராக இருக்கிறாரா என்று சர்தார் சாந்த சிங் கேட்டார்.

உள்துறை மந்திரி: துண்டுப் பிரசுரத்திற்கு இன்னுமொரு பதிப்பு வெளியிட வேண்டிய கிராக்கி இருக்குமானால், அதில் திருத்தம் செய்து விடுகிறேன். (சிரிப்பு)

ஸ்ரீ அப்துல் கயூம்: வருமான வரி விதிகளுக்குத் திருத்தச் சீட்டுகள் வெளியிடுவது போன்று இதற்கும் ஒரு திருத்தச் சீட்டை கனம் மந்திரி வெளி யிடுவாரா? (மேலும் சிரிப்பு)

ஸ்ரீ கிருஷ்ணன் நாயர் இன்னும் பாதுகாப்புக் கைதியாக சிறையிலேயே வைக்கப்பட்டிருக்கிறார்; கோர்ட் விடுதலை செய்தும் கூட அவர் விடுதலை அடையவில்லை என்பதை இது தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

கலவரத்தைப் பற்றிய பொறுப்பு சம்பந்தப்பட்ட விஷயம் கடிதத்தில் 67 முதல் 73 வரையிலுள்ள பாராக்களில் கூறப்பட்டிருக்கிறது. இதுதான் காந்திஜியினுடைய வாதத்தின் சுருக்கம்:

'1942-43-இல் நடந்த கலவரங்களுக்குக் காங்கிரஸ் பொறுப்பு' என்ற துண்டுப் பிரசுரத்தில் ஒரு விஷயத்தை அரசாங்கமே ஒப்புக் கொண்டிருக்கிறது. 9-ஆம் தேதி பம்பாயில் அங்குமிங்குமாக 'கலவரங்கள்' நடந்தன என்று அரசாங்கம் கூறுகிறது. 9, 10-ஆம் தேதிகளில் மற்றும் சில பெரிய நகரங்களிலும் அங்குமிங்குமாக 'கலவரங்கள்' நடந்தன. அமைதியான ஆரவாரங்கள், ஊர்வலங்களைக் கொண்டவையே அவை. நிலைமை மோசமானதெல்லாம் ஆகஸ்டு மத்தியில்தான். முதலில் அரசாங்கம் தலைவர்கள் எல்லோரையும் கைது செய்தது. பிறகு கடுமையான அடக்கு முறையைக் கையாண்டு அமைதியான ஊர்வலங்கள் போன்றவைகளையும் தடுத்தது. இவையே மக்களை வெறிபிடித்த நிலைமைக்குக் கொண்டுபோய்விட்டன என்று காந்திஜி கூறுவதை அரசாங்கத்தின் துண்டுப் பிரசுரம் வெளியிட்டிருக்கும் சந்தர்ப்பங்களே நிரூபிக்கின்றன. மக்கள் தன்னடக்கத்தை இழந்துவிட்டது, காங்கிரஸினால் என்று சொல்லுவதற்கில்லை. மனிதரின் சகிப்புத் தன்மைக்கும் எல்லையுண்டு என்பதையே இது காட்டுகிறது. காங்கிரஸைப் பொறுத்தவரையில், பிரிட்டிஷார் வெளியேற வேண்டும் என்ற காந்திஜியின் யோசனையை அனுசரித்து விசேஷ நிலைமை எதையும் அது உண்டாக்கவில்லை. பொது ஜனப் போராட்டத்தை ஆரம்பிப்பதற்கான முழு அதிகாரமும் காந்திஜிக்கே அளிக்கப்பட்டிருந்தது. எனினும் அவர் அரசாங்கத்துடன் சமரசம் பேச உத்தேசித்திருந்ததால், போராட்டத்தை ஆரம்பிப்பதற்கான எந்த நடவடிக்கையையும் அவர் எடுத்துக்கொள்ளவில்லை; அதற்கான அறிவிப்பு எதையும் அவர் வெளியிடவுமில்லை. 1942-ஆகஸ்டு 8-ஆம் தேதி இரவு வரையில் காங்கிரஸின் நடவடிக்கை முழுதும் தீர்மானங்களை நிறைவேற்றுவதில்தான் இருந்தது. 9-ஆம் தேதி விடிவதற்கு முன்பு காங்கிரஸே சிறையில் அடைக்கப்பட்டுவிட்டது! அதற்குப் பின்னால் நடந்ததெல்லாம் அரசாங்கத்தினுடைய செயல்களின் நேரடியான விளைவுகளே. காங்கிரஸின் கோரிக்கையை ஏற்றுக் கொள்ளாததனால் அரசாங்கத்தையே ஸ்தம்பித்துவிடும்படிச் செய்துவிடுவது என்ற முயற்சி, காங்கிரஸின் கோரிக்கை எவ்வளவு தூய்மையானது என்பதையே நிரூபிக்கிறது. "ஜனநாயகத்திற்கு எதிரான கூட்டு வல்லரசுகளுடன் போராட அவர்கள் கொண்டிருந்த உறுதியை வீணாக்கும் நிர்வாகத்தை ஸ்தம்பிக்கச் செய்துவிடுவது என்பதற்காக, காங்கிரஸ்காரர்கள் சாகவும்

தயாராயிருந்தது உண்மை என்பதை அம்முயற்சி உறுதிப் படுத்துகிறது.'' (பாரா 43).

இந்தியாவின் அபிலாஷைகளை, ஒவ்வொரு கட்டத்திலும் அரசாங்கம் சிதறடித்துக் கொண்டுவந்தது. இந்த மனச் சோர்வி லிருந்து பிறந்ததுதான், 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற கோஷம். அது சுதந்திர இயக்கத்திற்கு உருவத்தை அளித்தது. உலக நெருக்கடி ஏற்பட்டுள்ள சமயத்தில் தங்கள் பங்கைச் செய் வதற்கு மக்கள் துடித்துக் கொண்டிருந்ததை உணர்ந்து கொள்ள அரசாங்கம் தவறியதோடு, அதனுடன் தொடர்பு கொண்டிருந்த வர்கள் மீதும் அவநம்பிக்கை கொண்டது. அவர்களைச் சிறையி லடைத்து ஆக்க நடவடிக்கைகளுக்கும் முட்டுக்கட்டை போட்டு விட்டதன் மூலம், யுத்த முயற்சிக்கு அரசாங்கமே மிகப் பெரிய இடையூறாகிவிட்டது.

ஆகையால், தம் மீதும் தமது சகாக்கள் மீதும் சுமத்தப் பட்டிருக்கும் குற்றச்சாட்டுகளை அரசாங்கம் வ்ாபஸ் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று காந்திஜி கேட்டார். அதோடு தமது பதிலை அரசாங்கம் பிரசுரிக்க வேண்டும் என்றும் கூறினர்.

இதற்கு, அக்டோபர் 14-ஆம் தேதி அரசாங்கம் அனுப்பிய பதிலில், இந்த தஸ்தாவேஜுகளைப் பிரசுரித்தது, பொது ஜனங்கள் அறியட்டும் என்பதற்காகவே யன்றி காந்திஜிக்குத் திருப்தி ஏற்படும்படிச் செய்வதற்கு அல்ல என்று கூறியிருந்தனர்; தமது பதிலையும் பிரசுரிக்கவேண்டும் என்று காந்திஜி கோரியதை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டார்கள்; மறைமுகமாக மிரட்ட லையும் வெளியிட்டார்கள். அரசாங்கத்திற்கு காந்திஜி 'தாமே வலுவில் முன் வந்து எழுதியிருக்கும்' கடிதத்தில் அவர் 'ஒப்புக் கொண்டிருக்கும்' பல விஷயங்களையும் தங்களுக்கு உசிதம் என்று தோன்றும் வகையில், எச்சமயத்திலும் எந்த விதத்திலும் உப யோகித்துக் கொள்ளும் உரிமை தங்களுக்கு இருக்கிறது என்றும் கூறியிருந்தார்கள் !

காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர்களைச் சந்திக்க தம்மை அனுமதிக்கும்படி காந்திஜி கோரியிருந்ததையும் நிராகரித்து விட்டார்கள். காரியக் கமிட்டி உறுப்பினர்களின் கருத்து காந்திஜியின் கருத்துக்கு மாறுபட்டதாக இருக்கிறது என்பதற் கான அறிகுறி எதையும் காணோம் என்று அந்த நிராகரிப்புக்குக் காரணம் கூறினர்.

இதற்கு காந்திஜி அனுப்பிய பதிலில், தம்மீது சாட்டப்பட்ட குற்றங்களையும், தாம் பதிலாக அரசாங்கத்தின் மீது சாட்டிய குற்றங்களையும் பாரபட்சமற்ற ஒரு நீதிச் சபையின் பரிசீலனைக்கு விடும்படி கேட்டுக் கொண்டார். தம்முடைய செல்வாக்குத்தான் மக்களைக் கெடுத்துவிட்டது என்று அர சாங்கம் கருதுமானல், தம்மைச் சிறையில் வைத்துக்கொண்டு

முற்ற காங்கிரஸ்காரர்களையெல்லாம் விடுதலை செய்துவிடும் படியும் காந்திஜி கேட்டார்.

இக்கடிதத்தையும், ஸர். ரெஜினல்டு மாக்ஸ்வெலுக்கும் லார்டு சாமுவலுக்கும் காந்திஜி எழுதிய கடிதங்களையும் (கடிதங்கள் நெ. *51*, *53*, *62*) வாசகர்கள் முழுமையும் வாசிக்கவேண்டும்.

## 6

இப்பகுதியில் *83* முதல் *106* வரையிலுள்ள கடிதங்கள், ஸ்ரீமதி கஸ்தூரிபாய் *1942*-இல் கைதானது முதல் நோய்வாய்ப் பட்டிருந்ததையும், சிறையில் அவர் *1944* பிப்ரவரி *22*-ஆம் தேதி காலமானதையும் பற்றியவை. நெருங்கிய உறவினர்களைப் பார்க்கவும், சிசுரூஷைக்கும், வைத்திய உதவிக்கும் அரசாங்கத் துடன் நீண்டகாலம் கடிதப்போக்குவரத்து நடத்தித்தான் சில சலுகைகளைப் பெற முடிந்தது. அப்படிக் கிடைத்த சில உதவி களும், ஒவ்வொரு விஷயத்திலும் மிகவும் காலங்கடந்து கிடைத் தவைகளாகவே இருந்தன.

அவர் காலமானதும், அவரது உடலை அவருடைய குமாரர்க ளிடமும் உறவினர்களிடமும் ஒப்படைத்துவிட வேண்டும் என்ற கோரிக்கையும் அரசாங்கத்தினால் நிராகரிப்பட்டது. எனவே, அவரது உடலை ஆகாகான் அரண்மனைக்குள்ளேயே தகனம் செய்ய வேண்டியதாயிற்று.

*1944* மார்ச்சில் ஸ்ரீ பட்லர் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் ஒரு அறிக்கை வெளியிட்டார். ஸ்ரீமதி கஸ்தூரிபாயின் நோயைக் குறித்தும் அவர் இறந்தது பற்றியும் அதிகத் தவறான, தப்பெண்ணம் உண்டாக்கக் கூடிய விவரங்களே அந்த அறிக் கையில் அடங்கியிருந்தன. இதைக் குறித்து காந்திஜி தமது ஆட்சேபணையைத் தெரிவித்துக் கொண்டார். ஆனால், அதற்குப் பரிகாரம் தேட அரசாங்கம் மறுத்துவிட்டது. லார்டு வேவலுக்கு விடுத்த வேண்டுகோளினாலும் எந்தப் பலனும் உண்டாகவில்லை. முடிவாக இந்திய அரசாங்கத்தினிடமிருந்து கிடைத்த கடிதம், (கடிதம் நெ. *106*) குதிரை கீழே தள்ளியதுமின்றி குழியும் பறித்த கதையாக இருந்தது.

## 7

நவம்பர், டிசம்பர் மாதங்களில், அவமதிப்பை உண்டாக்கும் படுமோசமான அறிக்கைகளும் கேலிச் சித்திரங்களும் பிரிட்டிஷ் பத்திரிகைகளிலிருந்து எடுக்கப்பட்டு சில இந்தியப் பத்திரிகை களில் பிரசுரிக்கப்பட்டன. இவை யாவும், முக்கியமாக காந்திஜிக்கு எதிராகப் பிரசுரிக்கப்பட்டவையே. காந்திஜி ஜப்பானுக்கு உடந்தையான தேசத் துரோகி என்று அவற்றில் சித்திரிக்கப்பட்டிருந்தார்! ஸ்ரீமதி மீராபென்னை, அவர் விருப்பப்

படி ஆடும் ஒரு கருவி என்றும், ரகசிய தூதர் என்றும் அவை குறிப்பிட்டன. 1942 கிறிஸ்துமஸ் சமயத்தில் ஸ்ரீமதி மீராபென், லார்டு லின்லித்கோவுக்கு எழுதிய கடிதத்தில் இதைக் கண்டித்திருந்தார். 1942 கோடை காலத்தில் தாம் ஒரிஸாவிலிருந்த போது, தமக்கும் காந்திஜிக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தின் முக்கியமான பிரதிகளை லார்டு லின்லித்கோவுக்கு அவர் அனுப்பியுமிருந்தார். ஒரிஸாவில் கிழக்குக் கரையோரப் பகுதிகளிலிருந்து சிவில் நிர்வாகத்தையே வெளியேற்ற அரசாங்கம் உத்தரவுகளைப் பிறப்பித்துக் கொண்டிருந்த சமயத்தில், படையெடுத்து வரக்கூடிய ஜப்பானியருக்கு எதிராக அகிம்சை அடிப்படையில் முற்றிலும் ஒத்துழையாமையை மேற்கொள்ள காந்திஜி ஏற்பாடு செய்து கொண்டிருந்தார் என்பதை இக் கடிதங்கள் தெளிவாகக் காட்டின. தமது கண்டனக் கடிதத்தையும், காந்திஜியுடன் தாம் நடத்திய கடிதப் போக்குவரத்துகளையும் பிரசுரிக்கும்படியும் ஸ்ரீமதி மீராபென் கேட்டிருந்தார். ஆனால், இக்கடிதம் கிடைத்ததாகக்கூட வைஸ்ராயிடமிருந்து பதில் வரவில்லை.

1944-இல் இக்கடிதங்களைக் குறித்து சட்டசபையில் பிரஸ்தாபம் வந்தது. அப்பொழுது பதிலளித்த உள்துறை மந்திரி, காங்கிரஸ் ஜப்பானுக்குச் சாதகமாக இருக்கிறது என்று அரசாங்கம் எந்தக் குற்றமும் சாட்டவில்லையாகையால், இக்கடிதங்களைப் பிரசுரிப்பதால் காங்கிரஸ் கட்சிக்கு எத்தகைய சாதகமும் இல்லை என்றார்! காங்கிரஸுக்குத் "தோல்வி மனப்பான்மை" இருக்கிறது என்றும், "ஜப்பானியரின் நிபந்தனைகளை ஒப்புக்கொள்ள அது தயாராயிருக்கிறது" என்றும் அரசாங்கம் காங்கிரஸ் மீது குற்றஞ்சாட்டியது. இந்தக் குற்றச்சாட்டை மறுக்கும் ஆதாரபூர்வமான ருசுக்கள் இக்கடிதப்போக்குவரத்தில் அடங்கியிருந்தன.

லார்டு லின்லித்கோவுக்கு ஸ்ரீமதி மீரா பென் எழுதிய கடிதத்தில் அவர் குறிப்பிட்டிருந்ததைப் போல, அவர்மீது (மீரா பென்மீது) அவமானகரமான குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டிருப்பதால், கடிதப் போக்குவரத்துகளை பிரசுரித்தாகவேண்டியது அவசியம் என்று காந்திஜியும் கூறினர். அப்படிப் பிரசுரிப்பது காங்கிரஸுக்கு உதவியாக இருக்குமா, இருக்காதா என்ற கேள்வி எழவேண்டிய அவசியமில்லை என்றும் குறிப்பிட்டார். ஆனால், அரசாங்கம் நகர்ந்து கொடுக்க மறுத்துவிட்டது.

## 8

புதிய வைஸ்ராய் வந்ததும், அரசியல் நெருக்கடியைத் தீர்க்க காந்திஜி மற்றோர் முயற்சி செய்து பார்த்தார். முன்னலிருந்த வைஸ்ராயிடமிருந்து தமக்கும் மற்ற காங்கிரஸ்காரர்களுக்கும் நீதி கிடைக்கும்படி செய்ய அவரால் முடியவில்லை. புதிய வைஸ்ராயிடமிருந்தாவது நியாயம் கிடைக்குமா என்று பார்த்தார். அகமத்

நகருக்கும் ஆகாகான் அரண்மனைக்கும் வரும்படி வைஸ்ராயை அழைத்தார். தாம் சிறைவைத்திருப்பவர்களின் உள்ளத்தில் இருப்பது இன்னது என்பதை அறிந்து கொள்ளவருமாறு அவரைக் கேட்டுக் கொண்டார். அப்படி வந்துபார்த்தால், 'நாஜிஸம், பாஸிஸம், ஜப்பானிஸம் போன்றவற்றை எதிர்த்துப் போராடுவதற்கு அதிக உதவி செய்பவர்களே இவர்கள்' என்பதைக் கண்டு கொள்ளலாம் என்றும் அறிவித்தார். ஆகஸ்டு தீர்மானத்தை வாபஸ் வாங்கிக் கொண்டுவிடவேண்டும் என்று கூறியதற்கும் காந்திஜி பதில் சொல்லியிருந்தார். அந்தத் தீர்மானம் எல்லோரும் ஒன்று கூடிச் செய்தது; கௌரவமாகவும் மனச்சாட்சியின்படியும் அதை வாபஸ் வாங்கிக் கொள்ளுவதாக இருந்தால், எல்லோரும் சேர்ந்து, கூடி ஆலோசித்து முடிவு செய்துதான் அப்படிச் செய்ய முடியும் என்றும் காந்திஜி அறிவித்தார்.

இதற்கு லார்டு வேவல் எழுதியிருந்த பதில், அரசியல் பிரச்னையை மூட்டை கட்டி வைத்துவிட அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது என்பதையும், முந்திய வைஸ்ராயின் கொள்கையே தொடர்ந்து பின்பற்றப்படும் என்பதையுமே தெளிவாக அறிவித்தது.

## 9

பல்வேறு விஷயங்களையொட்டிய கடிதங்கள் கொண்டது இந்தக் கடைசிப் பகுதி. காந்தி-இர்வின் ஒப்பந்தத்தின்படி ஏற்பட்ட உப்பு விதிகளில் செய்ய வேண்டிய திருத்தம், சாதாரண சிறைக்கு தம்மை மாற்றிவிடுவதால் தம்மைச் சிறைவைத்திருப்பதன் காரணமாக ஏற்படும் செலவு குறையும் என்பது, சிறையில் நோயுற்றிருக்கும்போது தம்மைப் பார்க்க வருபவர்கள் சம்பந்தமான நிபந்தனை, ஸ்ரீமதி கஸ்தூரிபாய், ஸ்ரீ மகாதேவ தேசாய் ஆகியவர்கள் சமாதி அடைந்த இடத்தை ஆர்ஜிதம் செய்வது ஆகியவற்றைப் பற்றி காந்திஜி எழுதிய கடிதங்களும் இப்பகுதியில் அடங்கியிருக்கின்றன.

*1—3—1945.* —பியாரிலால்.

# அரசாங்கத்துக்கு காந்திஜியின் கடிதங்கள்

## பம்பாய் அரசாங்கத்துடன் கடிதப் போக்குவரத்து

### 1

### ஸ்ரீ ஜி. ஜி. மேத்தாவிடம் அக்கிரமம்

*10—8—1942*

*அன்புள்ள ஸர் ரோஜர் லம்லி,*

*என்னையும் மற்ற சக கைதிகளையும் ஏற்றிச் சென்ற ரயில் ஞாயிற்றுக்கிழமையன்று சிஞ்ச்வாடுக்குப் போய்ச் சேர்ந்ததும், ரயிலிலிருந்து இறங்கும்படி எங்களில் சிலர் உத்தரவிடப்பட்டோம். என்னையும், ஸ்ரீமதி சரோஜினி தேவி, ஸ்ரீமதி மீராபென், ஸ்ரீ மகாதேவ தேசாய் ஆகியவர்களையும் மோட்டாரில் ஏறும்படி சொன்னார்கள். மோட்டாருக்குப் பக்கத்தில் இரண்டு லாரிகள் வரிசையாக நிறுத்தப்பட்டிருந்தன. மோட்டார் எங்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்தது எங்களுக்கு மரியாதை காட்டுவதற்காகவே என்பதில் எனக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்லை. எங்களுடன் வந்த அதிகாரிகள் தங்கள் கடமையை சாமர்த்தியமாகவும் மரியாதையுடனும் நிறைவேற்றினார்கள் என்பதையும் நான் ஒப்புக்கொள்ள வேண்டும்.*

*என்றாலும், எங்களுடனிருந்த சக கைதிகள் லாரிகளில் ஏறிக்கொள்ள வேண்டும் என்று உத்தரவிடப்பட்டபோது, என்னை மிகவும் கேவலப்படுத்துவதாகவே எனக்குத் தோன்றியது. எல்லோரையுமே மோட்டாரில் கொண்டுபோக முடியாது என்பதை உணர்கிறேன். இதற்கு முன்னால் நான் சிறை மோட்டார் 'வான்'களில் கொண்டுபோகப்பட்டிருக்கிறேன். இந்தத் தடவையும் கூட, எங்கள் தோழர்களுடனேயே எங்களையும் கொண்டுபோயிருக்க வேண்டும். இச்சம்பவத்தைப் பற்றி நான் இங்கு குறிப்பிடுவதன் நோக்கம் இதுதான்: இப்பொழுது நிலைமை மாறியிருக்கிறது; என் மனநிலையும் மாறுதலடைந்திருக்கிறது. இதற்கு முன்னால் எனக்குக் காட்டப்பட்ட விசேஷ சலுகைகளை ஏற்றுக் கொண்டிருந்தபோதிலும், அவற்றை இனியும் நான் ஏற்றுக்கொள்ள முடியாது. இதை அரசாங்கத்திற்கு*

அறிவிப்பதற்காகவே இச்சம்பவத்தை இங்கே குறிப்பிடுகிறேன். எனது உடலின் தேவையை முன்னிட்டு அரசாங்கம் எனக்கு விசேஷ உணவை அனுமதித்து வரும்வரையில், அதைத் தவிர, என் தோழர்களுக்குக் கிடைக்காத வேறு எந்தச் சலுகைகளையும் வசதிகளையும் இந்தத் தடவை நான் ஏற்றுக் கொள்ளுவதில்லை என்றிருக்கிறேன்.

உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டிய இன்னொரு விஷயமும் இருக்கிறது. என் மக்களுக்கு ஒன்று கூறியிருக்கிறேன். இந்தத் தடவை நமது முறை சிறை வாசத்தை வரவேற்பது அல்ல; இன்னும் அதிகமான தியாகத்திற்கு நாம் தயாராக இருக்க வேண்டும் என்பதுதான். ஆகையால் விரும்புகிறவர்கள், தாங்கள் கைது செய்யப்படுவதை அமைதியான முறையில் எதிர்க்கலாம் என்று மக்களுக்குச் சொல்லியிருக்கிறேன். எனவே எங்கள் கோஷ்டியிலிருந்த ஓர் இளைஞர், அத்தகைய எதிர்ப்பை மேற்கொண்டார். ஆகையால் அவரை பலவந்தமாகச் சிறை வண்டிக்குள் இழுத்து ஏற்றினார்கள். இது ஆபாசமான காரியம். ஆத்திரமடைந்த ஓர் ஆங்கில சார்ஜண்டு அவரிடம் முரட்டுத்தனமாக நடந்து கொண்டதோடு, மரக்கட்டையைத் தூக்கிப் போடுவது போன்று அவரை லாரிக்குள் தூக்கிப்போட்டது பார்ப்பதற்கு வேதனை தருவதாகவே இருந்தது. அந்த சார்ஜண்டு கண்டிக்கப் பட வேண்டும் என்பதே என் கருத்து. இதற்கு முன் இத்தகைய ஆபாசக் காட்சிகள் எதுவும் இல்லாமலேயே, இப்போராட்டம் மிகக் கசப்பான கட்டத்தை அடைந்திருக்கிறது.

என்னுடன் கைதானவர்கள் எல்லோரையும் ஒரே இடத்தில் வைப்பதற்குப் போதுமான அளவு விசாலமாகவே இந்தத் தற்காலிக சிறை இருக்கிறது. அப்படிக் கைதானவர்களில் சர்தார் பட்டேலும் அவர் குமாரியும் இருவர். அவர் குமாரியே அவருக்குப் பணிவிடை செய்பவராகவும், சமையல் செய்பவராகவும் இருந்து வருகிறார். இதற்கு முன்பு சிறைப்பட்ட சமயத்தில் சர்தாருக்கு ஏற்பட்ட குடல் கோளாறு இன்னும் தீரவே இல்லை. ஆகையால், அவரைப் பற்றி எனக்குக் கவலை அதிகமாக இருக்கிறது. அவர் சிறையிலிருந்து விடுதலை அடைந்ததிலிருந்து அவருடைய ஆகாரம் முதலியவற்றை நானே கவனித்து வருகிறேன். அவரையும் அவர் மகளையும் என்னுடன் வைக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்; என்னுடன் கைதான மற்றவர்களையும் என்னுடனேயே வைக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். சர்தாரையும் அவர் குமாரியையும் போல் முக்கியமான காரணங்களுக்காக அல்ல, ஆபத்தான குற்றவாளிகளாக இருந்தாலன்றி, ஒரே காரணத்திற்காகக் கைது செய்யப்பட்ட சக ஊழியர்களைப் பிரித்து வைப்பது நியாயமல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

எனக்கு செய்திப் பத்திரிகைகள் கொடுக்கப்படமாட்டா என்று சிறை அதிகாரி என்னிடம் கூறினார். ரெயிலில் என்னுடனிருந்த சக கைதி ஒருவர், 'ஈவினிங் நியூஸ்' பத்திரிகை

யின் ஞாயிறுப் பதிப்பு ஒன்றை என்னிடம் கொடுத்தார். இந்த நெருக்கடியைச் சமாளிப்பதற்கு இந்திய அரசாங்கம் மேற்கொண்டிருக்கும் கொள்கை நியாயமானது என்று கூறும் அரசாங்கத்தின் தீர்மானம் இப்பத்திரிகையில் பிரசுரமாகியிருக்கிறது. முற்றிலும் தவறான விஷயங்கள் அதில் அடங்கியிருப்பதால், அவற்றை மறுத்துக் கூற நான் அனுமதிக்கப்படவேண்டும். சிறைக்கு வெளியில் என்ன நடக்கிறது என்பதை நான் அறிந்தாலன்றி, இதையும், இதுபோன்ற காரியங்களையும் நான் செய்ய இயலாது.

நான் கேட்டிருக்கும் இவ்விஷயங்களையொட்டி விரைவான ஒரு முடிவை நான் எதிர்பார்க்கலாமா?

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி.

## 2

உள்துறை இலாகா,
பம்பாய் கோட்டை,
14 ஆகஸ்டு, 1942.

மோ. க. காந்தி அவர்களுக்கு,
ஆகாகான் அரண்மனை,
எராவ்டா.

ஐயா,

சென்ற 10-ஆம் தேதி மே. த. கவர்னருக்குத் தாங்கள் எழுதியிருந்த கடிதம் சம்பந்தமாக வருமாறு அறிவிக்கும்படி எனக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது. நீங்கள் சிறை வைக்கப்பட்டிருப்பதன் சம்பந்தமான நிபந்தனைகளில் இப்போதைக்கு எந்த மாறுதலும் செய்ய உத்தேசிக்கப்படவில்லை. ஆகையால், ஸ்ரீ வல்லபாய் பட்டேலையும் அவர் குமாரியையும் ஆகாகான் அரண்மனையிலேயே சிறைவைக்க வேண்டும் என்ற உங்கள் கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. உங்களுக்கு செய்திப் பத்திரிகைகளைக் கொடுக்கும் உத்தேசமும் அரசாங்கத்திற்குத் தற்போது இல்லை.

உங்கள் பணிவுள்ள ஊழியன்,
கே. எம். ஸ்லேடன்,
பம்பாய் அரசாங்க உள்துறை இலாகா காரியதரிசி.

## 3

# கடிதங்கள் எழுதுவது பற்றி

*(பாதுகாப்புக் கைதிகள் கடிதங்கள் எழுதுவது, வந்த கடிதங்களைப் பெறுவதன் சம்பந்தமான விதிகளை 1942 ஆகஸ்டு 26-ந் தேதி இரவு 9-30 மணிக்கு சிறை அதிகாரி காந்திஜிக்கு அறிவித்தார்.)*

பாதுகாப்புக் கைதிகள், தங்கள் குடும்பத்தினருக்கு மாத்திரமே கடிதங்கள் எழுதவும், அவர்களிடமிருந்து கடிதங்களைப் பெறவும் அனுமதிக்கப்படுவார்கள்.

அந்தக் கடிதங்களில் கண்டிப்பாக சொந்த விஷயங்களும், குடும்ப விஷயங்களும் மாத்திரமே இருக்க வேண்டும்.

தாங்கள் எங்கு சிறை வைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதைக் காட்டும் எதுவும், எழுதும் கடிதங்களில் இருக்கக்கூடாது. தங்கள் குடும்பத்திற்குக் கடிதம் எழுதும்போது, தங்களுக்கு அவர்கள் பதில் எழுதுகையில், 'பம்பாய் அரசாங்கக் காரியதரிசி மேல்பார்த்து' என்று விலாசமிட்டு எழுதும்படி அறிவிக்க வேண்டும்.

ஸ்ரீ. மோ. க. காந்தி, தாம் பார்க்க விரும்பும் பத்திரிகைகளை, அவர் கைதியானதிலிருந்து பழைய பிரதிகளையும் சேர்த்து, நியாயமான ஒரு அளவு வரையில் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம். எந்தெந்தப் பத்திரிகைகள் அவருக்கு வேண்டும் என்பதற்கு ஒரு ஜாபிதா அவரிடமிருந்து பெற்று அதை உடனே அரசாங்கத்திற்கு அனுப்ப வேண்டும்.

## 4

பம்பாய் அரசாங்க உள்துறை இலாகா காரியதரிசிக்கு,

அன்புள்ள ஐயா,

முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக நான், குடும்ப வாழ்க்கை வாழ்வதை விட்டுவிட்டேன். என் கருத்துக்களில் பங்கு கொள்கிறவர்களுடன் சேர்ந்து ஆசிரம வாழ்க்கையே நடத்திவருகிறேன். இது அரசாங்கத்திற்குத் தெரியாது என்பது, பாதுகாப்புக் கைதிகள் கடிதங்கள் எழுதுவது சம்பந்தமாக அரசாங்கம் பிறப்பித்திருக்கும் உத்தரவுகளிலிருந்து தெரிகிறது. இப்பொழுது நான் இழந்திருக்கும் மகாதேவ தேசாய், ஒப்பிடுவதற்கு இயலாத வகையில் என் சகாவாக வாழ்ந்து வந்தவர். அவர் மனைவியாரும், அவருடைய ஒரே மகனும் பல ஆண்டுகள் என்

னுடன் ஆசிரம வாழ்க்கை வாழ்ந்தவர்கள். கணவரை இழந்திருக்கும் அவர் மனைவிக்கோ, அவர் குமாரனுக்கோ அல்லது ஆசிரமத்தில் வசித்துவரும் இறந்தவரின் குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்களுக்கோ நான் எழுதக்கூடாது என்றால், வேறு யாருக்குமே கடிதம் எழுதுவதில் எனக்கு அக்கறை இருக்க முடியாது. சொந்த விஷயங்கள் பற்றியும் குடும்ப விஷயங்கள் பற்றியும் மாத்திரம் நான் எழுதிக்கொண்டிருப்பது என்பதும் முடியாத காரியம். எழுத என்னை அனுமதிப்பதாக இருந்தால், காலஞ்சென்றவரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த பல விஷயங்களைப் பற்றியும் என்ன செய்ய வேண்டும் என்பதை நான் அறிவிக்க வேண்டும். என்னுடைய நடவடிக்கைகளில் மிகக் குறைந்த பங்கு கொண்டது அரசியல் விஷயம். இவைகளுக்கும் அரசியலுக்கும் சம்பந்தமில்லை. அகில இந்திய நூற்போர் சங்கம் போன்ற பல ஸ்தாபனங்கள் எப்படி நடக்க வேண்டும் என்பதை அப்போதைக்கப்போது நான் அறிவித்து வருகிறேன். சேவாகிராம ஆசிரமத்திலேயே, சமூக வேலை, கல்வி, ஜீவகாருண்யமான காரியங்கள் போன்ற எத்தனையோ நடவடிக்கைகள் இருக்கின்றன. ஆண்ட்ரூஸ் நினைவு நிதி வேறு இருக்கிறது. என் அதிகாரத்தில் பணமும் ஏராளமாக இருக்கிறது. எப்படிச் செலவிடுவது என்பது பற்றி அப்போதைக்கப்போது நான் அறிவிப்பது எனக்கு சாத்தியமாக இருக்க வேண்டும். இக்காரியங்களை முன்னிட்டு, சாந்திநிகேதனத்தில் இருப்பவர்களுடன் நான் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ளவும் வேண்டியிருக்கிறது. மகாதேவ தேசாயுடன் எனக்குக் கூட்டுச் செயலாளராக இருந்த பியாரிலால் நய்யாரின் உதவியும் என் மனைவியின் துணையும் எனக்கு இருக்கும் என்று நான் கைதானபோது அறிவித்தார்கள். அவரும் இன்னும் அனுப்பப்படவில்லை. அவர் இப்பொழுது எங்கிருக்கிறார் என்று சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜெனரலைக் கேட்டிருக்கிறேன். அவரைப்பற்றியோ, குடல் சம்பந்தமான கோளாறுக்காக என் மேற்பார்வையில் இருந்துவந்தவரான சர்தார் வல்லபாய் பட்டேலைக் குறித்தோ எனக்கு எந்தவிதமான தகவலும் கிடைக்கவில்லை. அவர்களுடைய தேகநிலை குறித்தும், அவர்களுடைய நலனைக் குறித்தும் அவர்களுடன் நான் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ள முடியாது என்றால், என்னைப் பொறுத்தவரையில் கடிதங்கள் எழுத நான் அனுமதிக்கப்பட்டிருக்கிறேன் என்பதற்கு எவ்விதப் பொருளுமில்லை.

இக்கடிதத்தில் கண்டவாறு கடிதங்கள் எழுத எனக்கு வசதிகள் அளிக்க அரசாங்கத்தினால் முடியாமற்போனாலும்கூட, எனக்குள்ள கஷ்டத்தையாவது உணர்வார்கள் என்று நம்புகிறேன்.

*சிறை முகாம்,*
*27—8—1942.*

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி.**

## 5

உள்துறை இலாகா,
பம்பாய் கோட்டை, 22, செப், 1942.

பம்பாய் அரசாங்க உள்துறை இலாகா காரியதரிசியிடமிருந்து,

மோ. க. காந்தி அவர்களுக்கு,

ஐயா,

1942 ஆகஸ்டு 27-ஆம் தேதியிட்டு தாங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. சொந்த, குடும்ப விஷயங்களைப் பற்றி மாத்திரம், சேவாகிராம ஆசிரமத்தில் யார் யாருடன் கடிதப்போக்குவரத்து வைத்துக்கொள்ள நீங்கள் விரும்புகிறீர்கள்? இவ்விஷயமாக எனக்கு ஒரு ஜாபிதாவை அனுப்பும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுமாறு எனக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது. முற்றிலும் சொந்த, குடும்ப சம்பந்தமான விஷயங்களைத் தவிர மற்றும் சில விஷயங்களைப் பற்றியும் கடிதங்கள் எழுதவும், பெறவும் மேற்கொண்டு அனுமதி வேண்டும் என்றும் நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். உங்கள் கடிதப் போக்குவரத்தை நீங்கள் மேலும் அதிகரித்துக்கொண்டுபோக அனுமதிப்பது, நீங்கள் சிறை வைக்கப்பட்டிருப்பதன் நோக்கத்திற்கு உகந்ததாக இராது என்று அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

உங்கள் பணிவுள்ள ஊழியன்,
ஜே. எம். ஸ்லேடன்.

## 6

பம்பாய் அரசாங்கக் காரியதரிசிக்கு,
பம்பாய்.

ஐயா,

செப்டம்பர் 22-ஆம் தேதிக் கடிதம் கிடைத்தது. 1942 ஆகஸ்டு 27-ஆம் தேதி நான் எழுதிய கடிதத்தில் கண்டபடி அரசியல் அல்லாத விஷயங்களைக் குறித்துக்கூட என் கடிதங்களில் எழுதக் கூடாது என்றிருப்பதால், எனக்கு அளித்திருக்கும் சலுகையை நான் உபயோகித்துக் கொள்ளுவதற்கில்லை.

சிறை முகாம்,
25-9-1942

உங்கள் அன்புள்ள,
மோ. க. காந்தி.

# 7

# மகாதேவ தேசாய் இறந்தது பற்றிய தந்தி

*சிமன்லால்,*
*ஆசிரமம், சேவாகிராமம்,*
*வார்தா.*

*மகாதேவ் திடீரென இறந்துவிட்டார். இறந்துவிடுவார் என்பதற்கான அறிகுறியே இல்லை. காலை ஆகாரம் உட்கொண்டார். என்னுடன் நடந்தார். சுசீலாவும் சிறை டாக்டர்களும் தங்களால் இயன்றதையெல்லாம் செய்து பார்த்தார்கள். ஆனால், கடவுள் சித்தம் வேறு விதமாக இருந்துவிட்டது. நானும் சுசீலாவும் உடலுக்கு நீராட்டினோம். மலர் தூவி உடல் அமைதியாகக் கிடத்தி வைக்கப்பட்டிருக்கிறது. ஊதுவத்திகளைக் கொளுத்தி வைத்துள்ளோம். சுசீலாவும் நானும் கீதை பாராயணம் செய்து வருகிறோம். யோகியின், தேசத் தியாகியின் மரணத்தை மகாதேவ் அடைந்தார். துக்கத்திற்கு இடங்கொடுத்துவிட வேண்டாம் என்று துர்க்கா, பாப்லா, சுசீலாவுக்குச் சொல்லவும். இத்தகைய உயர்ந்த மரணத்தைக் குறித்து சந்தோஷப்படவே வேண்டும். என் முன்னிலையில் தகனக் கிரியை நடக்கிறது. அஸ்தியை வைத்திருப்பேன். ஆசிரமத்திலேயே இருக்கும்படி துர்க்காவுக்குச் சொல்லவும். ஆனால், போகவிரும்புவாரானால் அவருடைய சொந்தக்காரரிடம் அவர் போகலாம். பாப்லா தைரியமாக இருந்து மகாதேவின் இடத்தை சிறந்த முறையில் நிறைவு செய்ய தன்னை தயாராக்கிக் கொள்ளுவான் என்று நம்புகிறேன். அன்பு.*

*15-8-1942.* பாபு

# 8

*பம்பாய் அரசாங்க உள்துறைக் காரியதரிசி,*
*பம்பாய்.*

*ஐயா,*

*காலஞ்சென்ற ஸ்ரீ மகாதேவ தேசாயின் மனைவியும் குமாரனும் எழுதிய கடிதங்களை கான்பதூர் கேட்லே நேற்று அன்புடன் என்னிடம் கொடுத்தார். இக்கடிதங்களை அவர் என்னிடம் கொடுத்த போது, என் 'கடிதத்தை' அனுப்புவதில் காலதாமதம் ஏற்பட்டதைக் குறித்து எனக்குத் தாம் விளக்கம் கூறவேண்டியிருக்கிறது*

என்றும் சொன்னார் என்றாலும், அவர் என்னிடம் எந்தச் சமாதானமும் கூறமுடியவில்லை. அந்த மோசமான காலதாமதத்திற்காக அவர் சம்பிரதாயமான வருத்தத்தைக்கூடத் தெரிவிக்கவில்லை. கணவரை இழந்த மனைவி, தந்தையை இழந்த தனயனின் உணர்ச்சிகளைக்கூட பம்பாய் அரசாங்கக் காரியாலயம் மதிக்க மறுக்கிறது என்றே தோன்றுகிறது.

நான் அனுப்பிய செய்தி, தந்தியே என்பது பார்த்தாலே நன்றாகத் தெரியக்கூடியது. அதை அவசரத் தந்திச் செய்தியாக அனுப்பவேண்டும் என்ற கோரிக்கையுடன் அது சிறை இன்ஸ்பெக்டர் ஜெனரலிடம் கொடுக்கப்பட்டது. ஆனால், அது ஒரு கடிதத்தைப் போல் தபாலில் போடப்பட்டிருக்கிறது என்பது எனக்குக் கிடைத்திருக்கும் கடிதங்களிலிருந்து தெரிகிறது. தந்தி மூலம் அனுப்பக் கொடுத்த செய்தி ஏன் தபாலில் போடப்பட்டிருக்கிறது? இது எனக்குத் தெரிவிக்கப்பட வேண்டும் என்று விரும்புகிறேன். 27-8-42-இல் நான் எழுதிய கடிதத்திற்கும் எனக்கு பதில் கிடைக்கவில்லை என்பதையும் அரசாங்கத்திற்கு ஞாபகப்படுத்துகிறேன். விதவையும் அவர் குமாரரும் இவ்விஷயத்தில் உதாரணங்கள். என் மனைவியிடமிருந்தும் என்னிடமிருந்தும் கடிதங்களைப் பெற்றாலன்றி அவர்கள் ஆறுதல் அடைய மாட்டார்கள். ஆனால், தடை உத்தரவின் காரணத்தால் நாங்கள் கடிதங்கள் எழுதுவதற்கில்லை.

சிறை முகாம்,
19, செப்டம்பர், 1942.

உங்கள் அன்புள்ள,
மோ. க. காந்தி
(பாதுகாப்புக் கைதி)

## 9

உள்துறை இலாகா (அரசியல்)
பம்பாய் கோட்டை, 24-9-1942.

பம்பாய் அரசாங்க உள்துறை
இலாகா காரியதரிசியிடமிருந்து,

மோ. க. காந்தி அவர்களுக்கு,

ஐயா,

19-ஆம் தேதியிட்ட தங்கள் கடிதம் கிடைத்தது. காலஞ்சென்ற ஸ்ரீ மகாதேவ தேசாயின் மனைவியாருக்குத் தாங்கள் அனுப்பிய செய்தி காலதாமதமானதற்கு ஒரு தப்பெண்ணமே காரணமாகும். அதைக் குறித்து அரசாங்கம் வருந்துகிறது. பத்திரிகைகளில் முன்பே வெளியாகியிருப்பது போன்று, இந்தத்

தாமதத்திற்காக ஸ்ரீ மகாதேவ தேசாயின் மனைவியாருக்கு இந்திய அரசாங்கம் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறது.

உங்கள் கடிதப் போக்குவரத்து சம்பந்தமாக உங்கள் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கும் மற்ற விஷயம்பற்றி, 1942 செப்டம்பர் 22-ஆம் தேதியிட்ட அரசாங்கத்தின் கடிதத்தை தங்கள் கவனத்திற்குக் கொண்டுவருகிறேன்.

தங்கள் பணிவுள்ள ஊழியன்,
ஜே. எம். ஸ்லேடன்,
பம்பாய் அரசாங்க உள்துறை காரியதரிசி.

## 10

# நவஜீவன் அச்சக சொத்து பறிமுதல், 'ஹரிஜன்' தகனம்

பம்பாய் அரசாங்க உள்துறை காரியதரிசிக்கு,
பம்பாய்.

ஐயா,

'பம்பாய் கிரானிகிள்' பத்திரிகையின் 24-ஆம் தேதி இதழிலிருந்து ஒரு செய்தியைக் கத்தரித்து இத்துடன் அனுப்பியிருக்கிறேன். சம்பந்தப்பட்ட விஷயத்தை எழுதியிருப்பவரின் அச்சம் நியாயம்தானா என்பதையும், நியாயம்தான் என்றால் எந்த அளவுக்கு நியாயம் என்பதையும் எனக்கு அறிவித்தால் நன்றியுள்ளவனாக இருப்பேன்.

சிறை முகாம்,
26-10-1942

உங்கள் அன்புள்ள,
மோ. க. காந்தி

## 11

(நெ. 10 கடிதத்தில் அடக்கம் செய்திருந்த விஷயம் :)

# அரசாங்கமும் 'நவஜீவன்' அச்சகமும்

'கிரானிகிள்' ஆசிரியர் அவர்களுக்கு,

ஐயா,

மகாத்மா காந்தியின் 'ஹரிஜன்', அதைச் சேர்ந்த வாரப் பத்திரிகைகளின் பிரசுரத்தை நிறுத்துவதற்காக அரசாங்கம் 'நவஜீவன்' அச்சகத்தைச் சோதனையிட்டு, அதையும் அதன் பிரசுரங்கள் எல்லாவற்றையும் கைப்பற்றிக் கொண்டது. ஆனால் கொஞ்ச காலத்திற்குப் பிறகு அதன் பிரசுரங்களை மாத்

திரம் திருப்பிக் கொடுத்தது. இந்தச் சோதனை, பிரசுரங்களைக் கைப்பற்றியது, திருப்பிக் கொடுத்தது ஆகியவைகளைக் குறித்து அரை குறையான, தவறான செய்திகள் அப்போதைக்கப்போது பத்திரிகைகளில் வெளிவந்து கொண்டிருந்தன. ஆகையால் தொடர்ந்து நடைபெற்ற இச்சம்பவங்களைப் பற்றிய விவரங்களை சுருக்கமாகப் பொதுஜனங்களுக்கு அறிவிப்பது அவசியமாகிறது.

காந்திஜியும், (இப்பொழுது காலஞ் சென்ற) ஸ்ரீ மகாதேவ தேசாயும் 1942 ஆகஸ்டு 9–ஆம் தேதி கைதானபிறகு, ஸ்ரீ கிஷோர்லால் மஷ்ருவாலாவை ஆசிரியராகக் கொண்டு 'ஹரிஜன்' வெளிவந்து கொண்டிருந்தது

இதில் ஒரு இதழ் பிரசுரமானதும், 1942 ஆகஸ்டு 21–ஆம் தேதி, 'நவஜீவன்' அச்சகத்தை போலீஸார் சோதனையிட்டு, அச்சுக் கோர்க்கப்பட்டிருந்த பாரங்கள், தட்டுகள், ஆகஸ்டு 23-ஆம் தேதி வெளியிடுவதற்காக அச்சிட்டு வைத்திருந்த 'ஹரிஜன்' பிரதிகள் ஆகியவற்றைக் கைப்பற்றினர்; அதோடு அச்சகம் முழுவதையும் தளவாடங்களையும் கைப்பற்றிக் கொண்டார்கள்; அன்றிரவும் மறுநாளும், அச்சு யந்திரத்தின் முக்கியமான பகுதிகளை அப்புறப்படுத்தியதுடன், 'ஹரிஜன்' பத்திரிகையின் பழைய, புதிய பிரதிகள் எல்லாவற்றையும், அது சம்பந்தமான மற்ற பத்திரிகைகளின் பிரதிகளையும், 1933-இல் இருந்து 1942 வரையிலான 'ஹரிஜன்' பத்திரிகையின் 'பைண்டு' தொகுப்புகளையும் எடுத்துக் கொண்டுபோய்விட்டனர். புத்தகசாலை, சில கையெழுத்துப் பிரதிகள், சாதாரண மாதப் பத்திரிகைகளின் கட்டுகள், டைப் அடிக்கும் யந்திரம், பிரதி எடுக்கும் யந்திரம், மண்ணெண்ணை டின்கள் ஆகியவைகளையும் கூட அவர்கள் எடுத்துக் கொண்டு போயினர். பிரசுர இலாகா கட்டிடம், புத்தக 'பைண்டு' செய்யுமிடம், அச்சுக் காகிதக் கிடங்கு ஆகிய கட்டிடங்களை யெல்லாம் அதிகாரிகள் பூட்டி முத்திரை வைத்துவிட்டார்கள்.

மூடிவிட வேண்டும் என்று அரசாங்கம் உத்தரவிட்டதும், எல்லா வாரப் பத்திரிகைகளையும் மூடிவிடும்படி மானேஜருக்கு காந்திஜி அறிவித்திருக்கிறார் என்ற செய்தி 19—7—42 'ஹரிஜனி'ல் வெளிவந்திருக்கிறது. அதன்படி காந்திஜியின் கட்டளைகளை மானேஜர் முற்றிலும் நிறைவேற்றியிருப்பார். ஆனால், அதற்குள் அரசாங்கம் அவ்விதமெல்லாம் செய்துவிட்டது. பறிமுதல் செய்வதற்காகப் பிறப்பிக்கப்பட்ட ஆரம்ப உத்தரவில், பிரசுரித்திருந்த புத்தகங்கள், புத்தகசாலை ஆகியவைகளைக் கைப்பற்றுவதன் சம்பந்தமாக எதுவும் இல்லை. அப்படியிருந்தும், எல்லா இலாகாக்களையும் அரசாங்கம் முத்திரையிட்டு போலீஸ், ராவணுக் காவலும் போட்டுவிட்டது.

இவ்வாறே ஒருமாத காலம் நடந்துவந்தது. திடீரென்று 1942 செப்டம்பர் 25-ஆம் தேதி நகர மாஜிஸ்டிரேட், மானேஜர் யார் என்று விசாரித்து அவரை தமக்கு முன்னால் ஆஜராகும்படி கூறினர். அச்சகம், அச்சுக் காகிதம், 'ஹரிஜன்' பைல்கள் ஆகியவைகளைத் தவிர மற்றவையெல்லாம் திருப்பித் தரப்படும் என்று வாய்மூலம் சொன்னர். அவ்விதமே மறுநாள் 'ஸீல்'களை உடைத்து பிரசுரமாகியிருந்த புத்தகங்களை ஒப்படைத்தார்கள். அதே சமயத்தில் அச்சடிக்காத காகிதம், எழுத்துக்கள், மற்ற அச்சக சாமான்கள் ஆகியவைகளை மோட்டார் லாரியில் குப்பை கூளத்தைப் போல் வாரிப் போட்டு அப்புறப்படுத்திவிட்டார்கள். அச்சு யந்திரத்தை திருப்பிக் கொடுத்துவிட அவர்கள் விரும்பினர். ஆனால், முன்னால் அப்புறப்படுத்திவிட்ட யந்திரப் பகுதிகளைத்

திருப்பித்தர மறுத்துவிட்டார்கள். கொடுப்பதை வாங்கிக் கொள்ளும்படி மானேஜரிடம் சொன்னார்கள். கொடுப்பதை அப்படியே வாங்கிக்கொள்ளாமற் போனால், காவலுக்கு இருக்கும் போலீஸார் அகற்றப்பட்டுவிடுவார்கள் என்றும், பிறகு யந்திரத்திற்கு அவர்தான் பொறுப்பாளியாக வேண்டும் என்றும் மானேஜரிடம் கூறினார்கள். அச்சகத்திற்குப் பொறுப்பாக இருந்த மானேஜர், 'முக்கியமான பகுதிகள் இல்லாமல் யந்திரம் வேலை செய்யாது. எனவே, பிரித்துப் போடப்பட்ட நிலையில் அதை நான் ஏன் ஏற்றுக்கொள்ள வேண்டும்?' என்று கேட்டார்.

பிறகு நகர மாஜிஸ்டிரேட், அங்கிருந்து போலீஸ் காவலை நீக்கிவிட்டார். இப்பொழுது அக்கட்டிடம் அரசாங்கத்தின் வசம் இல்லை என்று அக்கட்டடத்தின் கதவில் ஒரு அறிவிப்பையும் எழுதி ஒட்டினார். ஆகையால் அதன் பின்னர் நகர மாஜிஸ்டிரேட், அக்கட்டிடத்தின் சாவிகளை ரிஜிஸ்தர் தபால் மூலம் அச்சக மானேஜருக்கு அனுப்பினார். அதை மானேஜர் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்.

இவ்விதம் 'நவஜீவன்' காரியாலயத்திற்கு அதன் புத்தகசாலை, அது பிரசுரித்திருந்த புத்தகங்கள் முதலியன திரும்பக் கிடைத்தன. ஆனால் பிரித்துப் போடப்பட்டிருந்த, வேலை செய்யமுடியாத யந்திரம், இன்னும் 'நவஜீவன்' காரியாலயத்தில் கிடந்தாலும் அது அக்காரியாலயத்தின் வசமில்லை. ரூ. 50,000 பெறுமானமுள்ள அச்சுக் காகிதம், அச்சு எழுத்துக்கள், சில முக்கியமான கையெழுத்துப் பிரதிகள், மண்ணெண்ணை டின்கள், டைப் அடிக்கும் யந்திரம், பிரதி எடுக்கும் யந்திரம், ஒரு மின்சார விசிறி, ஆரம்பம் முதல் கடைசிவரையிலான 'ஹரிஜன்' பிரதிகளின் 'பைல்கள்' ஆகியவை திருப்பிக் கொடுக்கப்படவில்லை. அது மாத்திரமல்ல. 'ஹரிஜன்' பத்திரிகையின் 'பைல்கள்' கொளுத்தப்பட்டுவிட்டன என்று உள்ளூர் தினப் பத்திரிகை ஒன்று 28—9—1942-இல் ஒரு செய்தியை வெளியிட்டிருக்கிறது. இச் செய்தியை இதுவரையில் அரசாங்கம் மறுக்கவுமில்லை.

'பம்பாய் கிரானிகிள்' கூறுவதுபோன்று, அதுபோன்ற அட்டூழியங்களைச் செய்யும் குற்றத்தை எந்த அரசாங்கமாவது செய்யக்கூடும் என்று நாங்கள் நம்பவில்லை. இது சம்பந்தமாக ஒரு அறிக்கையை வெளியிடுவது அரசாங்கத்திற்கே நல்லது.

'நவஜீவன்' காரியாலயம்,
அகமதாபாத், 20, அக்டோபர், 1942.

உங்கள்,
கரீம்பாய் வோரா,

## 12

உள்துறை இலாகா (அரசியல்)
பம்பாய் கோட்டை, 5, நவம்பர், 1942.

பம்பாய் அரசாங்க உள்துறை இலாகா காரியதரிசியிடமிருந்து,
மோ. க. காந்தி அவர்களுக்கு,

ஐயா,

சென்ற அக்டோபர் 26-ந் தேதி தாங்கள் எழுதியிருந்த கடிதத்திற்கு வருமாறு பதிலளிக்கும்படி உத்தரவிடப்

டிருக்கிறேன். நவஜீவன் பிரசுராலயத்திலிருந்து கைப்பற்றப்பட்ட 'ஹரிஜன்' பழைய பிரதிகள், புத்தகங்கள், மற்றக் காகிதங்கள் போன்ற ஆட்சேபகரமானவைகளை யெல்லாம் அழித்து விடும்படி அகமதாபாத் ஜில்லா மாஜிஸ்டிரேட்டுக்கு அரசாங்கம் அறிவித்திருந்தது. ஆட்சேபகரமானதாக இல்லாத மற்றவைகளை அவற்றின் சொந்தக்காரருக்குத் திருப்பிக் கொடுத்துவிடுமாறும் தெரிவித்திருந்தது.

1933-ஆம் வருடத்திலிருந்து பிரசுரமான எல்லா 'ஹரிஜன்' பிரதிகளும் சேர்ந்ததே என்று ஜில்லா மாஜிஸ்டிரேட் அந்த உத்தரவுக்கு பொருள் படுத்திக்கொண்டுவிட்டார். உண்மையில் அவையெல்லாம் எரிக்கப்பட்டுவிட்டன.

தங்கள் பணிவுள்ள ஊழியன்

ஜே. எம். ஸ்லேடன்.

# 13

# பேராசிரியர் பன்சாலியின் உண்ணாவிரதம்

**அவசரத் தந்தி**

உள்துறை இலாகா காரியதரிசி,

பம்பாய் அரசாங்கம்.

ஒரு சமயம் எல்பின்ஸ்டன் கல்லூரியைச் சேர்ந்தவராக இருந்த பேராசிரியர் பன்சாலி, 1920-இல் கல்லூரியை விட்டுச் சென்று சபர்மதி ஆசிரமத்தில் சேர்ந்தார். சிமூரில் நடந்த அட்டூழியங்களை ஆட்சேபித்து, வார்தாவிலுள்ள சேவாகிராம ஆசிரமத்திற்கு அருகில் அவர் தண்ணீர்கூட அருந்தாமல் உண்ணாவிரதமிருந்து வருகிறார் என்று பத்திரிகைகளில் செய்தி பிரசுரமாகியிருக்கிறது. உண்ணாவிரதத்தின் காரணத்தையும், அவருடைய நிலைமையையும் அறிந்து கொள்வதற்காக சூபரிண்டெண்டின் மூலம் அவருடன் நேரடியான தந்தித் தொடர்பை வைத்துக் கொள்ளவிரும்புகிறேன். தார்மிக ரீதியில் அவருடைய உண்ணாவிரதம் நியாயமற்றதாக இருந்தால், அதை அவர் கைவிடும்படி தூண்டவும் விரும்புகிறேன். ஜீவகாருண்யம் காரணமாகவே நான் இவ்விதம் கேட்டுக்கொள்கிறேன்.

24-11-1942. காந்தி.

## 14

*சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜெனரல்.*
*பம்பாய் அரசாங்கம்.*

*ஐயா,*

*உண்ணாவிரதம் இருந்துவருவதாகக் கூறப்படும் பேராசிரியர் பன்சாலியைக் குறித்து பம்பாய் அரசாங்க உள்துறை இலாகா காரியதரிசிக்கு நான் கொடுத்த அவசரத் தந்தியின் விவரத்தை நேற்று இரவு சுமார் 8-45 மணிக்கு உங்களுக்கு அனுப்பியிருந்தேன். சென்னை 'ஹிந்து' பத்திரிகை பிரசுரித்திருக்கும் செய்தியிலிருந்து, 11—ஆம் தேதியிலிருந்து அவர் உண்ணாவிரதம் இருந்து வருகிறார் என்று தெரிகிறது. சென்ற புதன் கிழமையிலிருந்து அவர் உண்ணாவிரதம் இருக்கிறார் என்று 'பம்பாய் கிராணிகிள்' பத்திரிகை கூறுகிறது. இதனால் இயல்பாகவே நான் அதிகக் கவலையடைகிறேன், இத்தகைய காரியங்களில் காலம் மிகவும் முக்கியமானது. ஆகையால், என் தந்திக்கு அவசரமாக பதில் அளிக்கும்படி டெலிபோன் மூலமோ, தந்தி மூலமோ பம்பாய் அரசாங்கத்தை நீங்கள் கேட்டுக் கொள்ளுவீர்களானால் நன்றியுள்ளவனாக இருப்பேன்.*

*25-11-42*

*தங்கள்,*
**மோ. க. காந்தி.**

## 15

*உள்துறை இலாகா (அரசியல்)*
*பம்பாய் கோட்டை, 30, நவ, 1932.*

*பம்பாய் அரசாங்க உள்துறை இலாகா துணைக் காரியதரிசியிடமிருந்து,*

*மோ. க. காந்தி அவர்களுக்கு,*

*ஐயா,*

*பேராசிரியர் பன்சாலியின் உண்ணாவிரதத்தைக் குறித்து 24-ஆம் தேதி தாங்கள் அனுப்பிய தந்திச் செய்தி அரசாங்கத்திற்குக் கிடைத்தது.*

*அவருடன் தந்தி மூலம் தொடர்பு கொள்ள நீங்கள் அனுமதிக்கப்பட வேண்டும் என்ற உங்கள் கோரிக்கையை அனுமதிக்க இயலாது என்ற அரசாங்கத்தின் பதிலை உங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.*

என்றாலும், ஜீவகாருண்யமான காரணங்களுக்காக அவருக்கு நீங்கள் உண்ணாவிரதத்தைக் கைவிடும்படி புத்திமதி கூற விரும்புவீர்களாயின், அதை அனுப்புவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை இந்த அரசாங்கம் செய்யும்.

உங்கள் பணிவுள்ள ஊழியன்,
(ஒப்பம்)
பம்பாய் அரசாங்க உள்துறை இலாகா
துணைக் காரியதரிசி.

## 16

சிறை முகாம்,
4, டிசம்பர், 1942.

பம்பாய் அரசாங்க துணைக் காரியதரிசிக்கு,

ஐயா,

நீங்கள் 30-ஆம் தேதி எழுதிய கடிதம், நேற்று பிற்பகல் (3-ஆம் தேதி) எனக்குக் கிடைத்ததைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். என் அருமை ஊழியரின் உயிர் ஆபத்தான நிலையில் இருந்துவருகிறது. அதை முன்னிட்டு அரசாங்கத்திற்கு அவசரத் தந்திச் செய்தி அனுப்பியிருந்தேன். நான் தந்தி அனுப்பியபின் பத்துநாட்கள் கழித்து தபாலில் பதில் அனுப்பியிருப்பதுகுறித்து எனது ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

என் கோரிக்கையை ஏற்றுக் கொள்ள அரசாங்கம் மறுத்துவிட்டதைக் குறித்து வருந்துகிறேன். குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் உண்ணாவிரதம் இருப்பது நியாயம், அவசியம் என்று நான் நம்புகிறேன். ஆகையால், பேராசிரியர் பன்சாலியின் உண்ணாவிரதத்திற்கு நியாயமான காரணம் இல்லை என்பதை நான் அறிந்தாலன்றி, உண்ணாவிரதத்தைக் கைவிடும்படி அவருக்கு யோசனை கூற முடியாதவனாக இருக்கிறேன். பத்திரிகைச் செய்திகளை நம்புவதாக இருந்தால், அவருடைய உண்ணாவிரதத்திற்கு நியாயமான காரணம் இருக்கிறது என்றே தோன்றுகிறது. எனவே என் நண்பரை நான் இழக்கத்தான் வேண்டும் என்றால், அவரை இழப்பதோடு நான் திருப்தியடைய வேண்டியதுதான்!

உங்கள்,
மோ. க. காந்தி.

பகுதி இரண்டு

# லார்டு லின்லித்கோ, இந்திய அரசாங்கத்துடன் கடிதப் போக்குவரத்து

## 17

## ஆகஸ்டு சம்பவங்களைப் பற்றிய ஆரம்பக் கடிதங்கள்

*ஆகாகான் மாளிகை,*
*எராவ்டா, 14—8—1942.*

*அன்புள்ள லார்டு லின்லித்கோ,*

*இந்திய அரசாங்கம் நெருக்கடியை உண்டாக்கிவிட்டது தவறு. செய்த காரியம் நியாயம் என்பதற்கு அரசாங்கம் வெளியிட்டிருக்கும் விளக்கத்தில் திரித்துக் கூறப்பட்டிருப்பவைகளும், தவருகச் சொல்லப்பட்டிருப்பவைகளுமே நிறைந்திருக்கின்றன. இந்திய 'சகாக்களின்' அங்கீகாரம் உங்களுக்கு இருந்தது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தியாவில் அத்தகைய சேவையாளர்கள் உங்களுக்கு எப்பொழுதும் கிடைப்பார்கள் என்பதைத் தவிர அதில் வேறு முக்கியத்துவம் எதுவும் இல்லை. மக்களும் கட்சிகளும் சொல்லுவது எதுவாக இருந்தாலும், அதையெல்லாம் கவனிக்காமல் பிரிட்டிஷ் அரசாங்கம் வெளியேறிவிட வேண்டும் என்ற கோரிக்கை நியாயமானது என்பதையே அந்த ஒத்துழைப்பு மேலும் நிரூபிக்கிறது.*

*பொது ஜனங்களைக் கொண்டு நான் நடவடிக்கையில் இறங்கும் வரையிலாவது அரசாங்கம் பொறுத்திருந்திருக்கலாம். திட்டமான நடவடிக்கையில் இறங்குவதற்கு முன்னல் உங்களுக்கு ஒரு கடிதம் அனுப்ப யோசித்துக் கொண்டிருப்பதாக பகிரங்கமாகக் கூறியிருந்தேன். காங்கிரஸ் கூறுவதைப் பாரபட்சமின்றி பரிசீலனை செய்யும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுவதாகவே அது இருந்திருக்கும். காங்கிரஸின் கோரிக்கையில் கண்டுபிடிக்கப்பட்ட குறைகள் ஒவ்வொன்றையும் காங்கிரஸ் தாமதமின்றிப் பூர்த்தி செய்துள்ளது என்பதையும் நீங்கள் அறிவீர்கள். ஆகையால் நீங்கள் சந்தர்ப்பமளித்திருந்தால்*

ஒவ்வொரு குறைபாட்டையும் நான் சீர்திருத்தியிருப்பேன். அவசரப்பட்டு அரசாங்கம் நடவடிக்கையில் இறங்கிவிட்டது எவரையும் வருமாறு எண்ணும்படியே செய்யும்: நேரடி நடவடிக்கை சம்பந்தமாக மிகுந்த எச்சரிக்கையுடனும் நிதானத்தோடும் காங்கிரஸ் நடந்து கொள்ளுகிறது. இதனால் இப்பொழுதே ஏற்பட்டு வருவது போன்று உலக அபிப்பிராயம் காங்கிரஸுக்குச் சாதகமானதாக மாறிவிடும். காங்கிரசின் கோரிக்கையை நிராகரித்ததற்கு அரசாங்கம் கூறும் காரணம் அர்த்தமற்ற கூற்று என்பதும் அம்பலமாகிவிடும். இதற்கெல்லாம் பயந்துதான் அரசாங்கம் நெருக்கடியை உண்டாக்கிவிட்டது என்றுதான் யாரும் நினைக்க நேரும். வெள்ளிக்கிழமை நான் செய்த பிரசங்கம், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேறிய பிறகு சனிக்கிழமை இரவு நான் பேசியது ஆகியவற்றின் ஆதார பூர்வமான விவரம் கிடைக்கும் வரையில் அரசாங்கம் கட்டாயம் பொறுத்திருந்திருக்க வேண்டும். அவசரப்பட்டு நான் நடவடிக்கை எடுத்துக்கொள்ள மாட்டேன் என்பதை அப்பிரசங்கங்களில் நீங்கள் கண்டிருப்பீர்கள். அப் பிரசங்கங்களில் கூறப்பட்டிருந்த இடைக்காலத்தை நீங்கள் பயன்படுத்திக் கொண்டிருக்கவும் வேண்டும்; காங்கிரசின் கோரிக்கையைத் திருப்தி செய்வது சாத்தியமா என்பதையும் பரிசீலனை செய்திருக்க வேண்டும்.

"புத்திசாலித்தனமான யோசனைகளுக்குக் காங்கிரஸ் செவி கொடுக்கும் என்ற நம்பிக்கையில் இந்திய அரசாங்கம் பொறுமையுடன் காத்திருந்தது. ஆனால், அந்த நம்பிக்கையில் அரசாங்கம் ஏமாற்றமே அடைந்தது" என்று அரசாங்கத்தின் விளக்கம் கூறுகிறது. இங்கே 'புத்திசாலித்தனமான யோசனைகள்' என்பது, காங்கிரஸ் தனது கோரிக்கையைக் கைவிடுவது என்பதுதான் என்று கருதுகிறேன். இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுப்பது என்று உத்தரவாதம் அளிப்பதாக உறுதி கூறியிருக்கும் ஒரு அரசாங்கம், எப்பொழுதுமே நியாயமானதாக இருக்கும் ஒரு கோரிக்கையை காங்கிரஸ் கைவிடும் என்று எதிர்பார்ப்பானேன்? கோரும் கட்சியுடன் பொறுமையுடன் நியாயத்தைக் கூறி விவாதிப்பதற்கு பதிலாக அரசாங்கம் உடனே அடக்குமுறையில் இறங்கியது. அடக்கு முறையினால் மாத்திரமே சமாளிக்கக் கூடிய ஒரு சவாலா அது? ஒரு கோரிக்கையை ஒப்புக்கொண்டு விடுவது "இந்தியாவைக் குழப்பத்தில் ஆழ்த்திவிடும்" என்று சொல்லுவது, மனித வர்க்கத்தின் அறிவையே அவமதிப்பதாகும் என நான் துணிந்து கூறுவேன். அது எப்படியானாலும், கோரிக்கையை அவசரப்பட்டு நிராகரித்தது, தேச மக்களையும் அரசாங்கத்தையும் குழப்பத்தில் ஆழ்த்திவிட்டது. நேச தேச லட்சியத்தை இந்தியா முற்றிலும் ஆதரிக்க காங்கிரஸ் எல்லா முயற்சிகளையும் செய்து வந்தது.

அரசாங்கத்தின் விளக்க அறிக்கை வருமாறு கூறுகிறது: "சட்ட விரோதமான செயல்களுக்கும், சில விஷயங்களில் பலாத்காரமான நடவடிக்கைகளுக்கும் காங்கிரஸ் கட்சி

ஏற்பாடுகளைக் கொஞ்ச காலமாகவே செய்து வந்தது என்பதையும் கவர்னர் ஜெனரல் அறிந்தே இருந்தார். மற்றவைகளுடன், போக்குவரத்து சாதனங்களுக்கும் பொதுஜன உபயோகத்திற்கான சேவைகளுக்கும் இடையூறுகளை விளைவிப்பது, வேலை நிறுத்தங்களை உண்டாக்குவது, அரசாங்க ஊழியர்களின் ராஜ விசுவாசத்தைக் குலைப்பது, படைக்கு ஆள் திரட்டுவது உள்ளிட்ட பாதுகாப்பு ஏற்பாடுகளுக்குக் குந்தகம் விளைவிப்பது போன்றவைகளுக்காகவே ஏற்பாடு செய்யப்பட்டு வந்தன.'' இது, உண்மையை முற்றிலும் திரித்துக் கூறுவதாகும். எந்தக் கட்டத்திலும் பலாத்காரத்தைப்பற்றி சிந்திக்கப்பட்டதே இல்லை. அகிம்சையில் எதைச் சேர்க்கலாம் என்பதற்குக் கொடுக்கப்பட்ட விளக்கம், காங்கிரஸ் பலாத்காரச் செயல்களுக்குத் தயார் செய்து கொண்டுவந்தது என்று மோசமான, தந்திரமான வகையில் திரித்துக் கூறப்பட்டிருக்கிறது. ரகசியமாக எதையுமே செய்வதில்லையாகையால், எல்லா விஷயங்களும் காங்கிரஸ் வட்டாரங்களில் பகிரங்கமாகவே விவாதிக்கப்பட்டு வந்தன. பிரிட்டிஷ் மக்களுக்குத் தீமையை விளைவிப்பதாக இருப்பதால் நீங்கள் வகிக்கும் உத்தியோகத்தை விட்டுவிடும்படி நான் உங்களைக் கேட்டுக்கொள்ளுவது, உங்கள் ராஜபக்தியைக் குலைப்பதாக எப்படி ஆகும்? முக்கியமான காங்கிரஸ்காரர்களை சிறையில் வைத்துவிட்டு, தவறான அபிப்பிராயத்தை உண்டாக்கும் இவ் விஷயத்தை அவர்களுக்குத் தெரியாமல் அரசாங்கம் பிரசுரித்திருக்கிறது. இதற்குப் பதிலாக இந்திய அரசாங்கம், "அபாயகரமான ஏற்பாடுகளை காங்கிரஸ் செய்துவந்தது" என்பது தெரிந்ததுமே சம்பந்தப்பட்டவர்களைக் கைது செய்து, ஏற்பாடு செய்ததற்காக நடவடிக்கை எடுத்திருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் நியாயமாக நடந்ததாகவும் இருக்கும். ஆனால், விளக்க அறிக்கையில் ஆதாரமற்ற குற்றச்சாட்டுகளை அரசாங்கம் வெளியிட்டிருப்பதால், அக்கிரமமாக நடந்துகொள்ளுகிறார்கள் என்ற குற்றச்சாட்டுக்கு அவர்களே ஆளாகிறார்கள்.

அரசாங்கம் கட்டாயமாக கவனித்துத் தீரும்படி செய்வதற்குப் போதுமான தியாக உணர்ச்சியை மக்களிடையே எழுப்புவதுதான் காங்கிரஸ் இயக்கத்தின் முழு நோக்கமாகும். எந்த அளவுக்குப் பொதுஜன ஆதரவு அதற்கு இருக்கிறது என்பதை நிரூபிப்பதும் அதன் நோக்கம். ஆகையால் இந்தச் சமயத்தில், அகிம்சையையே லட்சியமாகக்கொண்ட ஒரு பொதுஜன இயக்கத்தை நசுக்க முற்படுவது புத்திசாலித்தனமா?

அரசாங்கத்தின் விளக்க அறிக்கை மேலும் வருமாறு கூறுகிறது: ''காங்கிரஸ் இந்திய மக்களுக்காகப் பேசவல்ல பொதுஜனப் பிரதிநிதித்துவம் வாய்ந்தது அல்ல என்றாலும், தனது ஆதிக்கத்தை ஏற்படுத்துவதற்காகவும், எதேச்சாதிகாரக் கொள்கையை நிறைவேற்றுவதற்காகவும், அதனுடைய தலைவர்கள், இந்தியரை பூரண வளர்ச்சி பெற்ற ஒரு தேச மக்களாகச்

செய்யும் முயற்சிக்கு இடைவிடாது முட்டுக்கட்டை போட்டு வந்திருக்கிறார்கள்.'' இந்தியாவின் மிகப் பழமையான தேசீய ஸ்தாபனத்தின் மீது இவ்வாறு குற்றங்கூறுவது அக்கிரமமான அவமதிப்பாகும். ஏனெனில், சுதந்திரமடைவதற்குச் செய்யப் பட்ட ஒவ்வொரு தேசீய முயற்சிக்கும் இந்த அரசாங்கம் முட்டுக்கட்டை போட்டு வந்திருக்கிறது. எத்தகைய முறைகளைக் கைக்கொண்டாவது காங்கிரஸை நசுக்கிவிடவும் அது முற்பட் டிருக்கிறது. இதைப் பொது தஸ்தாவேஜுகளைக் கொண்டே நிரூபிக்க முடியும். இப்படியிருக்கும் அரசாங்கம் மேற்கண்டவாறு கூறுவது வெட்கக்கேடேயாகும்.

இந்தியாவுக்குச் சுதந்திரப் பிரகடனம் செய்யும் அதே சமயத்தில், ஒரு நிலையான தற்காலிக அரசாங்கத்தை காங் கிரஸினால் அமைக்க முடியும் என்ற நம்பிக்கை அரசாங்கத்திற்கு இல்லையானால், அப்படி ஒரு அரசாங்கத்தை அமைக்கும்படி முஸ் லிம் லீகிடம் அரசாங்கம் சொல்லட்டும் என்று காங்கிரஸ் கோரி யது. லீக் அமைக்கும் எந்த தேசீய அரசாங்கத்தையும் காங் கிரஸ் விசுவாசத்துடன் ஏற்றுக்கொள்ளும் என்றும் கூறியது. காங் கிரஸின் இந்தக் கோரிக்கையை யோசிக்கவும் இந்திய அரசாங்கம் சம்மதிக்கவில்லை. காங்கிரஸ் இவ்விதம் யோசனை கூறியிருக் கும்போது, சர்வாதிகாரப் போக்குடையது என்று காங்கிரஸ்மீது சுமத்தப்பட்டிருக்கும் குற்றச்சாட்டு எவ்வாறு பொருந்தும்?

அரசாங்கம் அளிக்க விரும்பியதையும் நான் பரிசீலனை செய் கிறேன். ''யுத்தம் முடிந்ததும், ஒரு தனிக் கட்சி என்று இல்லா மல் எல்லோரையும் கலந்த ஓர் அடிப்படையில், தன்னுடைய நிலைமைக்கு ஏற்றது என்று தான் கருதும் ஓர் அரசாங்க முறையை, பூரண சுதந்திரத்துடன், தனக்குத்தானே இந்தியா தீர்மானித்துக் கொள்ளும்.'' அரசாங்கத்தின் இந்த அறிவிப்பிற்கும் உண்மைக் கும் ஏதாவது சம்பந்தம் உண்டா? எல்லாக் கட்சிகளும் இப் பொழுது ஒன்றுபட்டு இருக்கவில்லை. யுத்தத்திற்குப் பிறகு, தங்கள் கைக்குச் சுதந்திரம் வருவதற்கு முன்னாலேயே கட்சிகள் காரியத்தில் ஈடுபட வேண்டும் என்றால், அப்பொழுது இக்கட்சி களுக்குள் ஒற்றுமை இருப்பதற்கும் ஏதாவது சாத்தியம் உண்டா? காளான்கள் போல கட்சிகள் முளைத்துக்கொண்டே இருக்கின் றன. ஏனெனில், காங்கிரஸையும் அதன் நடவடிக்கைகளையும் அக் கட்சிகள் எதிர்த்துக் கொண்டிருக்குமாயின் அதுவே போதும்! அத்தகைய கட்சிகளை அரசாங்கம் வரவேற்கும். இதற்கு முன்பும் அரசாங்கம் அவ்விதமே செய்துவந்திருக்கிறது. சுதந்திரத்திற்கு உதட்டளவில் அவை வணக்கம் தெரிவித்து வருவதைப்பற்றியோ, அக்கட்சிகள் எவ்வளவு தூரம் மக்களுக்குப் பிரதிநிதித்துவம் வாய்ந்தவை என்பதைப் பற்றியோ அரசாங்கத்திற்கு அக்க றையோ, கவலையோ எதுவும் இல்லை. அரசாங்கத்தின் யோசனை இயல்பாகவே ஏமாற்றமும் வெறுப்பும் ஏற்படும்படி செய்வதாக இருக்கிறது. அதனால்தான், முதலில் நீ வெளியேறிவிடு என்று கோஷம் செய்கிறோம். இதைத் தவிர வேறு வழியில்லை. பிரிட்

டிஷ் ஆட்சி முடிவடைந்து, அடிமைத் தனத்திலிருந்து சுதந்திரத்திற்கு அரசியல் அந்தஸ்தில் அடிப்படையான மாறுதல் ஏற்பட்டால்தான், தற்காலிகமாகவோ, நிரந்தரமாகவோ உண்மையான பிரதிநிதித்துவ அரசாங்கம் அமைவது சாத்தியம். அக்கோரிக்கையின் கர்த்தாக்களை உயிரோடு புதைத்துவிட்டதனுல் நெருக்கடி தீர்ந்துவிடவில்லை. நெருக்கடி மேலும் தீவிரமாகும்படியே அது செய்திருக்கிறது.

அரசாங்கத்தின் விளக்கம் மேலும் கூறுவதாவது: "எதிர்காலத்தைப்பற்றி நிச்சயமில்லாமலிருக்கும் கோடிக்கணக்கான இந்திய மக்கள், வீரத்தியாகம் செய்து வீழ்ச்சியுற்ற நாடுகளின் துக்ககரமான படிப்பினையை லட்சியம் செய்யாமல், படையெடுத்து வருகின்றவர்களின் கையில் தங்களை அர்ப்பணித்துக் கொள்ளத் தயாராயிருக்கிறுர்கள் என்று காங்கிரஸ் கட்சி கூறுகிறது. இப் பெரிய நாட்டின் மக்களுடைய உண்மையான உணர்ச்சியை இது பிரதிபலிப்பதாக இந்திய அரசாங்கம் ஏற்றுக் கொள்ளவே முடியாது." கோடிக்கணக்கானவர்களின் விஷயம் எனக்குத் தெரியாது. ஆனுல் காங்கிரஸ் கூறியதற்கு ஆதரவாக என் சொந்த சாட்சியத்தை நான் அளிக்க முடியும். காங்கிரஸின் சாட்சியத்தை நம்பாமலிருப்பது அரசாங்கத்தின் விருப்பத்தைப் பொறுத்தது. தனக்கு அபாயம் ஏற்பட்டிருப்பதாக சொல்லப்படுவதை, எந்த ஏகாதிபத்திய ஆட்சியும் விரும்புவதில்லை. மற்ற ஏகாதிபத்திய வல்லரசுகளுக்கு ஏற்பட்ட கதி பிரிட்டனுக்கும் ஏற்பட்டுவிடக்கூடாது என்பதில் காங்கிரஸ் கவலை கொண்டிருப்பதனுலேயே, இந்தியாவை சுதந்திர நாடாகப் பிரகடனம் செய்து ஏகாதிபத்தியத்தை தானே கைவிட்டுவிடும்படி காங்கிரஸ் பிரிட்டனைக் கேட்கிறது. நட்புடன் கூடிய நோக்கம் தவிர வேறு எந்த எண்ணமும் காங்கிரசுக்கு இல்லை. இந்தியாவின் நன்மைக்காகவே யன்றி பிரிட்டிஷ் மக்களின், மனிதவர்க்கத்தின் நன்மைக்காகவே ஏகாதிபத்தியத்தைக் கொன்றுவிட காங்கிரஸ் முற்பட்டிருக்கிறது. மாருகக் கூறப்படுவது எதுவானுலும், அகில இந்தியாவின், உலகத்தின் நன்மையைத் தவிர தனது சொந்த நன்மை என்பது காங்கிரஸுக்கு எதுவுமே இல்லை என்று நான் நிச்சயமாகக் கூறுவேன்.

விளக்க அறிக்கையின் முடிவுரையில் வருமாறு கூறப்பட்டிருக்கிறது: "இந்தியாவைப் பாதுகாப்பது, யுத்தத்தில் ஈடுபடுவதற்கான இந்தியாவின் சக்தியைப் பாதுகாத்து வருவது, இந்தியாவின் நலன்களைப் பாதுகாப்பது, இந்திய மக்களின் பல்வேறு பிரிவினரிடையேயும் அச்சமோ, சலுகையோ இல்லாமல் நடுநிலைமையுடன் நடந்துகொள்ளுவது ஆகியவற்றின் பொறுப்பு இந்திய அரசாங்கத்தையே சார்ந்ததாக இருந்துவருகிறது." மலாயாவிலும், சிங்கப்பூரிலும், பர்மாவிலும் ஏற்பட்ட அனுபவத்திற்குப் பிறகு அரசாங்கம் இவ்விதம் கூறுவது உண்மைக்கு நேர் மாறுன கேலிக்கூத்தே ஆகும் என்பதைத் தவிர நான் வேறு என்ன கூற முடியும்? கட்சிகளின் சிருஷ்டிக்கும், அவை

தொடர்ந்து இருந்துவருவதற்கும் பொறுப்பாளி அரசாங்கம்தான் என்பது பிரத்தியட்சமாகத் தெரிந்தும், கட்சிகளிடையே நடு நிலைமையுடன் நடந்துகொள்ளுவதாக இந்திய அரசாங்கம் சொல் லிக் கொள்ளுவது விசனிக்கத்தக்கதாகும்.

இன்னுமொன்றும் சொல்ல விரும்புகிறேன். பிரகடனம் செய்யப்பட்டிருக்கும் லட்சியம், இந்திய அரசாங்கத்தையும் எங் களையும் பொறுத்தவரையில் ஒன்றேதான். திட்டமாகச் சொல்லு வதானால், சீனாவின், ரஷ்யாவின் சுதந்திரத்தைப் பாதுகாப்பது தான் அது. இந்த லட்சியத்தில் வெற்றிபெறுவதற்கு இந்தியா வின் சுதந்திரம் அவசியமில்லை என்று இந்திய அரசாங்கம் கருது கிறது. நான் இதற்கு முற்றிலும் மாறாக எண்ணுகிறேன். ஜவாஹர்லால் நேருவையே இதில் நான் அளவுகோலாகக் கொண் டிருக்கிறேன். அவருக்கு நேரடியான தொடர்பு இருப்பதால், சீனாவுக்கும் ரஷ்யாவுக்கும் ஏற்படக்கூடிய நாசங்களையும் துன்பத் தையும் குறித்து, என்னைவிட, உங்களைக்காட்டிலும் கூட, அதிக மாக அவர் வருந்துகிறார். இந்தத் துயரத்தில், ஏகாதிபத்தியத் துடன் தமக்குள்ள பழைய சண்டையைக் கூட அவர் மறக்க முயன்றார். நாஜிஸம், பாஸிசம் ஆகியவற்றைக் குறித்து, என்னை விட அவர் அதிகமாக நடுங்குகிறார். பல நாட்கள் தொடர்ந்து அவருடன் விவாதித்தேன். என் நிலைமையை எதிர்த்து அவர் என்னுடன் ஆவேசத்தோடு போராடினார். அதை சொற்களால் நான் வர்ணித்துவிட முடியாது. ஆனால் நியாயமான உண்மைகள் அவரை வெற்றி கொண்டன. இந்தியாவுக்கு சுதந்திரமில்லையா னால் மற்றிரு நாடுகளின் சுதந்திரத்திற்கும் ஆபத்துதான் என்ப தைத் தெளிவாகக் கண்டபோது அவர் எனக்கு உடன்பட்டார். அத்தகைய சக்திவாய்ந்த நண்பரையும், நேச நாட்டின் சகாவை யும் சிறையில் அடைத்ததன் மூலம் நீங்கள் தவறு செய்திருக்கி றீர்கள் என்பது நிச்சயம்.

லட்சியம் ஒன்றாக இருந்தும் கூட, காங்கிரசின் கோரிக் கைக்கு அரசாங்கம் ஆலோசனையற்ற அவசர அடக்குமுறையின் மூலம் பதில் அளித்திருக்கிறது. பிரிட்டிஷ் அரசாங்கத்தை இவ் விதம் செய்யும்படி தூண்டியது, எப்படியும் இந்தியாவில் தங்க ளுடைய பிடியையும் ஆதிக்கத்தையும் விட்டுவிடுவதில்லை என்ற தவிர்க்க முடியாத ஏகாதிபத்தியக் கொள்கையின் அந்தரங்க மான உறுதியே யன்றி, நேச தேச லட்சியம் அல்ல. இவ்விதம் நான் ஊகிப்பதைக் குறித்து நீங்கள் ஆச்சரியப்படமாட்டீர்கள். அரசாங்கம் இவ்விதம் உறுதிகொண்டிருப்பதால்தான், காங்கிரஸ் கோரிக்கை நிராகரிக்கப்பட்டது; அவசரம் அவசரமாக அடக்கு முறையிலும் அரசாங்கம் இறங்கியது.

சரித்திரம் என்றுமே கண்டறியாத வகையில் போரில் பரஸ் பரம் படுகொலைகள் நடந்துவருவது எவரையும் திக்குமுக்காடச் செய்வதாக இருக்கிறது. ஆனால், இந்தப் படுகொலையைத் தொடர்ந்து உண்மை படுகொலை செய்யப்பட்டிருப்பதும், அர

சாங்கத்தின் விளக்கத் தீர்மானம் பொய் மயமாக இருப்பதும் காங்கிரஸின் நிலைக்கு பலம் அளிப்பவையாக இருக்கின்றன.

இக் கடிதத்தை உங்களுக்கு அனுப்பவேண்டியிருப்பதற்காக மிகவும் வேதனைப்படுகிறேன். ஆனால், உங்களுடைய நடவடிக்கையை நான் எவ்வளவு வெறுத்தாலும், நீங்கள் அறிந்த அந்த பழைய நண்பனாகவே நான் இன்னும் இருந்துவருகிறேன். இந்திய அரசாங்கத்தின் கொள்கை முழுவதையும் புனராலோசனை செய்ய வேண்டும் என்று நான் மீண்டும் வேண்டிக்கொள்ளுகிறேன். பிரிட்டிஷ் மக்களின் உண்மையான நண்பன் என்று கூறிக்கொள்ளும் ஒருவனின் இந்த வேண்டுகோளை அலட்சியம் செய்யாதீர்கள்.

கடவுள் உங்களுக்கு நல்வழி காட்டுவாராக!

உங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 18

வைஸ்ராய் மாளிகை,
புதுடில்லி, 22 ஆக. 1942

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

தாங்கள் ஆகஸ்டு 14-ஆம் தேதி எழுதிய கடிதம் இரண்டொரு நாட்களுக்கு முன்புதான் கிடைத்தது. அதற்காக மிகுந்த நன்றி.

தங்கள் கடிதத்தில் அன்புடன் நீங்கள் தெரிவித்திருந்த விஷயங்களை அதிக கவனத்துடன் படித்தேன் என்பதை நான் சொல்லத் தேவையில்லை. உங்கள் கருத்துக்களை ஆழ்ந்து சிந்தித்தேன். ஆனால் முடிவாக, சபையோடுகூடிய கவர்னர் ஜெனரலின் தீர்மானத்தைக் குறித்து நீங்கள் குறைகூறியிருப்பதையோ, இந்திய அரசாங்கத்தின் கொள்கை முழுவதையும் மீண்டும் புனராலோசனை செய்ய வேண்டும் என்று நீங்கள் கோரியிருப்பதையோ நான் ஏற்றுக் கொள்ளுவது சாத்தியமில்லை என்றே அஞ்சுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
லின்லித்கோ

# 19

இந்திய அரசாங்கக் காரியதரிசி,
உள்துறை இலாகா,
புது டில்லி.

ஐயா,

காங்கிரஸ் சம்பந்தமாக இப்பொழுது அரசாங்கம் மேற்கொண்டிருக்கும் கொள்கையை அங்கீகரித்து, இந்திய மந்திரிகளும் மற்றவர்களும் துதிபாடி கோஷ்டிகானம் செய்கிறார்கள். என்னாலும் வைஸ்ராய்க்கு நான் எழுதுவதாக இருந்த கடிதம் கிடைத்து அதன் பலனை அறியும்வரையிலாவது அரசாங்கம் பொறுத்திருந்திருக்குமானால், தேசத்திற்கு எந்த ஆபத்தும் நேர்ந்திராது என்று நான் துணிந்து கூறுவேன்; அறிவிக்கப்படும் வருந்தத்தக்க நாசங்களையும் நிச்சயமாகத் தவிர்திருக்கலாம்.

மாறாகக் கூறப்படுபவை எவையாயினும், அகிம்சையே இப்பொழுதும் காங்கிரஸின் அசைக்க முடியாத கொள்கையாக இருந்துவருகிறது என்று நான் கூறுகிறேன். ஒரேயடியாக எல்லா காங்கிரஸ் தலைவர்களும் கைது செய்யப்பட்டது, மக்களுக்கு ஆத்திரத்தை உண்டாக்கி சுய கட்டுதிட்டங்களை மீறி நடக்கும்படி செய்திருக்கிறது. இப்போது ஏற்பட்டிருக்கும் நாசங்களுக்கு அரசாங்கம்தான் பொறுப்பே யன்றி காங்கிரஸ் அல்ல என்று கருதுகிறேன். அரசாங்கம் செய்யக்கூடிய ஒரே சரியான காரியம், காங்கிரஸ் தலைவர்களை விடுதலை செய்து, அடக்குமுறை நடவடிக்கைகளை யெல்லாம் வாபஸ் வாங்கிக்கொண்டு, சமரசத்திற்கான வழிகளை ஆராய்வதே என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. பகிரங்கமான பலாத்காரச் செயல்கள் எதையும் சமாளிப்பதற்கான அபரிமிதமான சக்தி நிச்சயமாக அரசாங்கத்திற்கு இருக்கிறது. அடக்குமுறை, அதிருப்தியையும் மனக்கசப்பையுமே உண்டாக்கும்.

எனக்குப் பத்திரிகைகள் கிடைப்பதற்கு அரசாங்கம் அனுமதியளித்திருக்கிறது. ஆகையால், நாட்டில் நடக்கும் வருந்தத்தக்க சம்பவங்களைக் குறித்து என் கருத்தை அரசாங்கத்திற்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன் என்று எண்ணுகிறேன். இது போன்ற கடிதங்களை எழுதிக்கொண்டிருக்க கைதி என்ற முறையில் எனக்கு உரிமையில்லை என்று அரசாங்கம் கருதுமானால் அதைச் சொல்ல வேண்டியதும் அரசாங்கமே. பிறகு இந்தத் தவறைத் திரும்ப நான் செய்யமாட்டேன்.

23-9-1942

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 20

சிறைமுகாம்,
13, பிப்ரவரி, 1943.

சர் ரிச்சர்டு டாட்டன்ஹாமுக்கு,
இந்திய அரசாங்க உள்துறை இலாகா,
புது டில்லி.

அன்புள்ள ஐயா,

காந்திஜி இன்றைய பத்திரிகைகளைப் படித்துக்கொண்டிருந்தபோது கீழ்வரும் விஷயம் வெளியாகியிருந்ததைக் கவனித்தார்: "இக்கடிதத்திற்கு, அது கிடைத்ததாக மாத்திரம் பதில் அனுப்பப்பட்டிருக்கிறது" என்ற விஷயம் காந்திஜிக்கும் வைஸ்ராய்க்கும் நடந்த கடிதப்போக்குவரத்து பிரசுரிக்கப்பட்டிருப்பதில் அடிக்குறிப்பாகத் தரப்பட்டிருக்கிறது. அப்படி எந்தவிதமான பதிலும் தமக்குக் கிடைக்கவில்லை என்றும், தம்முடைய இந்த மறுப்பைப் பிரசுரிக்க வேண்டும் என்றும் என்னை அறிவிக்கச் சொல்லியிருக்கிறார்.

உங்கள் உண்மையுள்ள,
பியாரிலால்.

## 21

3-4-1943-இல் சிறை முகாம் சூபரிண்டெண்ட் மூலம் வந்தது:

"ஸ்ரீ. காந்திக்காக ஸ்ரீ. பியாரிலால் பிப்ரவரி 13-ஆம் தேதி எழுதிய கடிதத்திற்கு இந்தப் பதிலை தயவு செய்து ஸ்ரீ காந்திக்கு அறிவிப்பீர்களா? இந்திய அரசாங்க உள்துறை இலாகா காரியதரிசிக்கு 23-9-'42-இல் ஸ்ரீ காந்தி எழுதிய கடிதம் கிடைத்தது என்ற பதில் சிறை முகாமின் அதிகாரியின் மூலம் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் அறிவிக்கப்பட்ட செய்தி, எழுத்து மூலம் அனுப்பிய பதில் போன்றதுதான் என்று அரசாங்கம் கருதுகிறது."



காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் சிறைபட்டிருந்த அகமத்நகர் கோட்டை.



புனாவிலுள்ள ஆகா கான் மாளிகை: 1942-லிருந்து காந்திஜி, அன்னை கஸ்தூரிபாய்,
ஸ்ரீ மகாதேவ தேசாய் ஆகியோர் சிறைவைக்கப்பட்டிருந்த இடம்.

# 22

# உண்ணாவிரதத்திற்கு முன்னரும் பின்னரும்

**சொந்தப் பார்வைக்கு**

*சிறை முகாம்,*
*புத்தாண்டு பிறக்கும் தறுவாயில், 1942*

*அன்புள்ள லார்டு லின்லித்கோ,*

*முற்றிலும் சொந்த முறையில் இக்கடிதம் எழுதுகிறேன். தங்களுக்கு எதிராக என் மனத்தில் வைத்திருக்கும் ஒரு சச்சரவை, பைபிள் விதித்திருக்கும் ஆக்ஞைக்கு மாறாக, பல நாட்கள் அப்படியே இருந்துவர அனுமதித்துவிட்டேன். ஆனால், உங்களுக்கு எதிராக என் உள்ளத்தில் இடைவிடாத வேதனையைத் தருவதாக இருந்துவருவதை நான் வெளியிடாமல் பழைய ஆண்டு முடிந்துவிடுவதை நான் விரும்பவில்லை. நாம் நண்பர்களாக இருந்தோம் என்று எண்ணினேன்; அப்படி எண்ணிக்கொள்ளவே இன்னும் ஆசைப்படுகிறேன். என்றாலும், ஆகஸ்டு 9-ஆம் தேதிக்குப் பிறகு நடந்திருப்பவை, நீங்கள் இன்னும் என்னை நண்பனாகவே கருதுகிறீர்களா என்று வியப்படையச் செய்கின்றன. நீங்கள் வீற்றிருக்கும் அரியாசனத்தில் வீற்றிருந்த வேறு எவருடனும், உங்களிடம் நான் பழகியது போன்று அவ்வளவு நெருங்கிப் பழகியது இல்லை என்றே எண்ணுகிறேன்.*

*நீங்கள் என்னைக் கைது செய்தது, அதன் பிறகு நீங்கள் வெளியிட்ட அறிக்கை, ராஜாஜிக்கு நீங்கள் அனுப்பிய பதில், அதில் கொடுக்கப்பட்டிருந்த காரணங்கள், ஸ்ரீ அமெரி என்னைத் தாக்கியிருப்பது, இவை போன்று நான் சொல்லக்கூடிய இன்னும் பல சம்பவங்கள், ஏதாவது ஒரு கட்டத்தில் என் யோக்கியப் பொறுப்பில் நீங்கள் சந்தேகம் கொண்டிருக்க வேண்டும் என்பதையே காட்டுகின்றன. இதன் சம்பந்தமாக மற்ற காங்கிரஸ்காரர்கள் குறிப்பிடப்பட்டிருப்பது சாதாரணமாகத்தான். காங்கிரஸுக்கு கற்பிக்கப்பட்டிருக்கும் தீமைகளுக்கெல்லாம் மூலகாரணமும், முக்கியமான பொறுப்பாளியும் நான்தான் என்று தோன்றுகிறது. நான் உங்கள் நண்பனாக இல்லாமற் போய்விடவில்லை என்றிருந்தால், கடுமையான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளுவதற்கு முன்னால், நீங்கள் என்னை அழைத்து, உங்கள் சந்தேகங்களை என்னிடம் சொல்லி, நீங்கள் உண்மை*

என்று எண்ணியவைகளை ஏன் ஊர்ஜிதம் செய்து கொண்டிருக்கக் கூடாது?

மற்றவர்கள் என்னைப் பார்ப்பது போலவே, என்னை நானே ஊடுருவிப் பார்த்துக் கொள்ளும் ஆற்றல் எனக்கு உண்டு. ஆனால், இந்த விஷயத்தில் நான் படுமோசமான தோல்வியடைந் திருக்கிறேன். இது பற்றி என்னைக் குறித்து அரசாங்க வட்டாரங் களில் கூறப்பட்டிருப்பவைகளெல்லாம் அப்பட்டமான பொய்க் கூற்றுகளாகும்.

செத்துக் கொண்டிருக்கும் நண்பருடன் நான் தொடர்பு வைத்துக் கொள்ள இயலாத அளவுக்கு, என் மதிப்பு குறைந்து விட்டது! சிமூர் விவகாரம் பற்றி உண்ணாவிரதமிருந்து வரும் பேராசிரியர் பன்சாலியைப் பற்றியே குறிப்பிடுகிறேன்!!!

காங்கிரஸ்காரர்கள் என்று சொல்லப்படும் சிலர் செய்த தாகக் கூறப்படும் பலாத்காரத்தை நான் கண்டிக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கிறார்கள். ஆனால், அப்படி நான் கண்டிப்ப தற்கு, கடுமையாகத் தணிக்கை செய்யப்பட்டு பத்திரிகைகளில் வெளிவந்து கொண்டிருக்கும் செய்திகளைத் தவிர வேறு ஆதாரம் எதுவும் எனக்கு இல்லை. இந்தச் செய்திகளில் எனக்குக் கொஞ்சமும் நம்பிக்கையே இல்லை என்பதை நான் ஒப்புக் கொண்டே ஆகவேண்டும். நான் இன்னும் எவ்வளவோ எழுத லாம். ஆனால், என் துயரக் கதையை நீட்டிக்கொண்டே போக நான் விரும்பவில்லை. மற்ற விவரங்களை நீங்கள் தெரிந்துகொள்ளு வதற்கு, நான் கூறியிருப்பதே போதும் என்று நிச்சயமாகக் கருதுகிறேன்.

வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் பலாத்காரத்திற்கும் பொய்மைக்கும் பதிலாக, மனித வர்க்கத்தினிடையே சத்தியத்தை யும் அகிம்சையையும் பரப்புவது என்று என் மனத்தில் 1906-இல் உதயமாயிற்று. அந்த லட்சியத்தைப் பிரசாரம் செய்வது என்ற உறுதியுடனேயே 1914 இறுதியில் நான் தென்னாப்பிரிக்காவி லிருந்து இந்தியாவுக்கு வந்தேன். இதையெல்லாம் நீங்கள் அறிவீர்கள். தோல்வி என்பதையே அறியாதது சத்தியாக்கிரக தருமம். அந்த லட்சியத்தைப் பரப்புவதற்குள்ள பல வழிகளில் சிறையும் ஒன்றாகும். ஆனால், அதற்கும் ஓர் எல்லை உண்டு. என்னை ஓர் அரண்மனையில் வைத்திருக்கிறீர்கள்; அதில் மனித னுக்குத் தேவையான நியாயமான எல்லா வசதிகளும் செய்யப் பட்டிருக்கின்றன. தங்கள் கையில் அதிகாரம் உள்ளவர்கள், ஒரு பாவமும் அறியாதவர்களுக்கு இழைத்துவிட்ட தவறை ஒரு நாளைக்கு உணர்வார்கள் என்ற நம்பிக்கையின்பேரில், அளிக்கப் பட்டிருக்கும் வசதிகளில், இன்பத்திற்காக அல்ல, கடமைக் காகவே பங்கு கொண்டுவருகிறேன். ஆறுமாத காலம் பொறுத்துப் பார்ப்பது என்று முடிவு செய்து கொண்டேன். அந்தக் காலம் முடியப் போகிறது. அதேபோல என் பொறுமை யும் எல்லையை நெருங்கிக்கொண்டிருக்கிறது. சோதனை ஏற்படும்

இதுபோன்ற சமயங்களில், சத்தியாக்கிரக தருமத்தை நான் அறிந்த வரையில், அது ஒரு பரிகாரத்தையும் விதிக்கிறது. ஒரே வாக்கியத்தில் சொல்வதானல், "உண்ணுவிரதத்தின் மூலம் உடலை வதைத்துக்கொள்ளுவது" என்பதே அது. எல்லா முயற்சியும் செய்து பார்த்து கடைசி ஆயுதமாகத்தான் அதை உபயோகிக்க வேண்டும் என்றும் அதே தருமம் விதிக்கின்றது. அதை நான் தவிர்க்க முடியுமானல், அதை உபயோகிக்க நான் விரும்பவில்லை.

அதைத் தவிர்க்க ஒரு வழியும் இருக்கிறது. அது இதுதான். தவறு அல்லது தவறுகளை நான் செய்தேன் என்பதை நான் உணரும்படி செய்யுங்கள்; நான் அதற்குப் பூரண பரகாரம் தேடி விடுகிறேன். என்னைக் கூப்பிட்டுப் பேசலாம்; அல்லது உங்கள் மனத்தை அறிந்தவரும், நான் உணரும்படி செய்யக்கூடியவரு மான ஒருவரை என்னிடம் அனுப்பலாம். உங்களுக்கு மனம் மாத்திரம் இருந்தால் இன்னும் எத்தனையோ வழிகள் இருக் கின்றன.

தங்களிடமிருந்து சீக்கிரமே பதிலை எதிர்பார்க்கலாமா?

புத்தாண்டு எல்லோருக்கும் சாந்தியை அளிப்பதாக!

உங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி.**

# 23

சொந்தப் பார்வைக்கு

வைஸ்ராய் மாளிகை,
புதுடில்லி, 13 ஜனவரி, 1943.

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

டிசம்பர் 31-ஆம் தேதி சொந்த முறையில் எனக்கு நீங்கள் எழுதிய கடிதத்திற்கு நன்றி. அக்கடிதம் இப்பொழுதுதான் எனக்குக் கிடைத்தது. முற்றிலும் சொந்த முறையில் அக்கடிதம் இருக்கிறது என்பதை ஏற்றுக் கொள்ளுகிறேன். அதில் மனம் விட்டுக் கூறப்பட்டிருப்பதையும் வரவேற்கிறேன். நீங்களும் அப்படியே விரும்புவீர்களாகையால், என் பதிலும் உங்கள் கடிதத் தைப்போன்றே மனம்விட்டுக் கூறுவதாகவும், முற்றிலும் சொந்த முறையில் கூறுவதாகவும் இருக்கும்.

உங்கள் கடிதத்தைக் குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன். ஏனெனில், நமது முந்திய உறவுக்கு ஏற்றவகையில் மனம்விட்டு உங்களுக்குச் சொல்லுவதானல், சமீப மாதங்களில் எனக்கு மிகுந்த மனவருத்தம் ஏற்பட்டுளது. இதற்குக் காரணம், முத லாவதாக சென்ற ஆகஸ்டு மாதம் காங்கிரஸ் அனுசரித்த

கொள்கை. இரண்டாவதாக, அந்தக் கொள்கையினால் நாடெங்கும் எழுந்த பலாத்காரச் செயல்களும் குற்றங்களும். அவ்விதம் எழத்தான் செய்யும் என்பது தெளிவாகத் தெரிந்ததேயாகும். (வெளி ஆக்கிரமிப்பினால் இந்தியாவுக்கு ஏற்படக்கூடிய ஆபத்தைக் குறித்து நான் எதுவும் சொல்லவில்லை) அந்த பலாத்காரத்தையும் குற்றங்களையும் கண்டித்து நீங்களோ, காரியக்கமிட்டியோ ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. நீங்கள் முதலில் புனாவில் இருந்த போது, உங்களுக்குப் பத்திரிகைகள் கிடைப்பதில்லை என்பதை அறிவேன். நீங்கள் மௌனமாக இருந்துவிட்டதற்கு அதுவே காரணம் என்று ஏற்றுக்கொண்டேன். நீங்களும் காரியக்கமிட்டியினரும் என்னென்ன பத்திரிகைகளை விரும்பினீர்களோ அப்பத்திரிகைகளை உங்களுக்குக் கொடுக்க ஏற்பாடுசெய்த பிறகு, நடந்துகொண்டிருப்பவைகளைக் குறித்து அப்பத்திரிகைகளில் வெளியாகிய விவரங்கள் எங்களையெல்லாம் செய்ததைப் போன்றே உங்களையும் திடுக்கிட வைத்து வேதனைப்படச் செய்திருக்கும் என்று நிச்சயமாக எண்ணினேன். அதைக் குறித்து திட்டவட்டமான உங்கள் கண்டனங்களை வெளியிட்டு அதை எல்லோரும் அறியச் செய்ய ஆவலுடனிருப்பீர்கள் என்றும் நினைத்தேன். ஆனால், அப்படி எதுவும் நடக்கவில்லை. உண்மையில் இது எனக்குப் பெரிய ஏமாற்றத்தைக் கொடுத்தது. இந்தக் கொலைகள், போலீஸ் அதிகாரிகளை உயிருடன் கொளுத்தியது, ரெயில்களைக் கவிழ்த்தது, சொத்துக்கள் நாசமாக்கப்பட்டது, இந்த இளம் மாணவர்களைத் தவறான வழியில் செலுத்தியது ஆகியவை, இந்தியாவின் நற்பெயருக்கும் காங்கிரஸ் கட்சிக்கும் தீங்கு உண்டாக்கிவிட்டதை எண்ணும்போது இன்னும் அதிக ஏமாற்றமடைகிறேன். நீங்கள் குறிப்பிடும் பத்திரிகைச் செய்திகள், ஆதாரமான செய்திகள் என்று உங்களுக்குச் சொல்லிக் கொள்ளுகிறேன். அச்செய்திகள் கெட்ட கதைகளைக் கூறுவதால் அவை உண்மையாக இல்லாமலிருக்கவேண்டும் என்றுதான் நானும் விரும்புகிறேன். காங்கிரஸ் இயக்கத்திலும், கட்சியிலும், அதன் தலைமையின் கீழ் இருப்பவர்களிடத்திலும் உங்களுடைய அதிகாரத்திற்கு மகத்தான செல்வாக்கு இருக்கிறது என்பதை நான் நன்றாக அறிவேன். அதிகமாக மனம் விட்டு மீண்டும் கூறுவதானால், பெரும்பொறுப்பு உங்களுடையது அல்ல என்று நான் எண்ணவேண்டும் என்றுதான் விரும்புகிறேன். (துரதிர்ஷ்டவசமாக, ஆரம்பப் பொறுப்பு தலைவர்களுடையதாக இருந்தாலும், மற்றவர்கள், சட்டத்தை மீறுகிறவர்கள் என்ற முறையிலோ அல்லது அவர்களுடைய நடவடிக்கைகள் காரணமாக துன்பப்படுவோர் என்ற முறையிலோ அவற்றின் விளைவுகளை அனுபவிக்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள்.)

ஆனால், நடந்துவிட்ட சம்பவங்களை மனத்திற்கொண்டு, சென்ற கோடைகாலத்தில் மேற்கொண்ட கொள்கையிலிருந்து பின்வாங்கிவிடுவதுடன் அக்கொள்கையிலிருந்து விலகிக் கொண்

டும்விட நீங்கள் விரும்புகிறீர்கள் என்று உங்கள் கடிதம் பொருள் படுகிறது என்று நான் எண்ணுகிறேன். நான் அப்படி எண்ணுவது சரிதான் என்றால், அதை நீங்கள் எனக்குத் தெரிவித்து விட்டால் போதும். நான் உடனே விஷயத்தை மேற்கொண்டும் கவனிக்கிறேன். உங்கள் நோக்கத்தைப் புரிந்து கொள்ள நான் தவறியிருப்பேனாயின், எந்த விஷயத்தில் நான் அப்படித் தவறியிருக்கிறேன் என்பதைத் தாமதமின்றி எனக்குத் தெரிவியுங்கள். என்ன திட்டமான யோசனையை எனக்கு அறிவிக்க விரும்புகிறீகள் என்பதையும் கூறுங்கள். என்னைப் பல ஆண்டுகளாக நீங்கள் நன்றாக அறிவீர்கள். உங்களிடமிருந்து வரும் எந்தச் செய்தியையும் எப்பொழுதும் போலவே மிகுந்த கவனத்துடன் நான் படிப்பேன், அதற்கு முழு மதிப்பும் கொடுப்பேன், உங்கள் உணர்ச்சிகளையும் நோக்கங்களையும் புரிந்து கொள்ள ஆழ்ந்த ஆவலுடன் அதை அணுகுவேன் என்பதையும் நீங்கள் அறிவீர்கள்.

தங்கள் உண்மையுள்ள,
லின்லித்கோ.

## 24

சொந்தப் பார்வைக்கு

சிறைமுகாம்,
*19—1—1943.*

அன்புள்ள லார்டு லின்லித்கோ,

*13*-ஆம் தேதியிட்ட உங்கள் அன்பான கடிதம் நேற்று பிற்பகல் *2-30* மணிக்கு எனக்குக் கிடைத்தது. உங்களிடமிருந்து பதிலே வராதோ என்று நான் மிகுந்த மனச்சோர்வுடன் இருந்தேன். என் பொறுமையின்மைக்கு தயவு செய்து மன்னியுங்கள்.

உங்களுடைய மதிப்பை நான் இழந்துவிடவில்லை என்பதை உங்கள் கடிதம் காட்டுவதாக இருப்பதால், அது எனக்கு மகிழ்ச்சியை அளிக்கிறது.

டிசம்பர் *31*-ஆம் தேதி நான் உங்களுக்கு எழுதிய கடிதம் உங்கள் மீது கோபத்தினால் உறுமுவதாக இருக்கிறது. உங்கள் கடிதம் பதிலுக்கு உறுமுவதாக இருக்கிறது. என்னை நீங்கள் கைது செய்தது சரி என்றும், செய்ய வேண்டிய சிலவற்றைச் செய்யாத தவறை நான் செய்து விட்டதாக நீங்கள் கருதுவதால் வருத்தப்படுகிறீர்கள் என்றும் உங்கள் கடிதம் பொருள் படுகிறது.

என் கடிதத்திலிருந்து நீங்கள் செய்துள்ள முடிவு சரியானது அல்ல என்றே அஞ்சுகிறேன். நீங்கள் கொடுத்திருக்கும் விளக்

கத்தின் பேரில், நான் எழுதிய கடிதத்தையே திரும்பப் படித்துப் பார்த்தேன். ஆனால், நீங்கள் சொல்லியிருக்கும் பொருளை அதில் நான் காணவில்லை. நம் கடிதப் போக்குவரத்தினால் ஒரு பலனும் ஏற்படவில்லை என்றால், நாடு முழுவதும் ஏற்பட்டிருக்கும் பஞ்சத்தினால் கோடிக்கணக்கான மக்கள் அனுபவித்துவரும் துயரம் உள்பட நாட்டில் நடந்துகொண்டிருப்பவைகளை வேறு திக்கற்று பார்த்துக் கொண்டிருப்பவனாகவே நான் இருக்க வேண்டியது தான் என்றால், நான் உண்ணாவிரதம் இருக்கவே விரும்பினேன்; இன்னும் அவ்விதமே விரும்புகிறேன்.

என் கடிதத்திற்கு நீங்கள் செய்யும் வியாக்கியானத்தை நான் ஏற்றுக் கொள்ளவில்லையானால், திட்டவட்டமான ஒரு யோசனையை நான் கூறவேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள். காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர்களின் மத்தியில் என்னை நீங்கள் வைத்தால்தான் நான் அதைச் செய்ய முடியும்.

நீங்கள் கருதுவதுபோல் நான் செய்துவிட்ட தவறையோ, அல்லது அதைவிட இன்னும் மோசமான காரியத்தையோ நான் மனதார உணரும்படிச் செய்துவிடுவீர்களாயின், என்னுடைய செயல் சம்பந்தப்பட்டவரையில், யாரையும் நான் கலந்தாலோசிக்க வேண்டிய அவசியமில்லை; குற்றத்தைப் பகிரங்கமாகவும் பூரணமாகவும் ஒப்புக் கொண்டு அதற்கு வேண்டிய பரிகாரத்தையும் செய்துவிடுவேன். ஆனால், எந்தத் தவறையும் நான் செய்திருப்பதாக என் மனத்திற்குத் தோன்றவில்லை. 1942 செப்டம்பர் 23-ஆம் தேதி இந்திய அரசாங்க உள்துறை இலாகா காரியதரிசிக்கு நான் எழுதிய கடிதத்தைப் பார்த்திருப்பீர்கள் என்றே நினைக்கிறேன். அதில் கூறியிருப்பதையும், 1942 ஆகஸ்டு 14-ஆம் தேதி உங்களுக்கு எழுதிய கடிதத்தில் கூறியிருப்பதையுமே மீண்டும் நான் உறுதி செய்கிறேன்.

சென்ற ஆகஸ்டு 9-ஆம் தேதிக்குப் பிறகு நடந்திருப்பவைகளைக் குறித்து உண்மையில் வருந்துகிறேன். ஆனால், இதற்கு முழுப் பொறுப்பாளியும் இந்திய அரசாங்கம்தான் என்று நான் சொல்லவில்லையா? மேலும் என் செல்வாக்கை உபயோகிக்கவோ, நான் கட்டுப் படுத்தவோ முடியாத சம்பவங்களைக் குறித்து நான் எந்த அபிப்பிராயத்தையும் கூறிவிட முடியாது. அதோடு அச்சம்பவங்களைக் குறித்து ஒரு தலைப்பட்சமான விவரங்களையே நான் அறிந்துள்ளேன். உங்கள் இலாகா அதிகாரிகள் உங்கள் முன்னால் வைக்கும் தகவல்களை அப்படியே நம்பிவிட நீங்கள் கடமைப்பட்டிருக்கிறீர்கள். ஆனால், நானும் அப்படியே நம்பிவிட வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்கமாட்டீர்கள். அத்தகைய தகவல்கள் தவறானவை என்று இதற்கு முன்னால் அடிக்கடி நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. இதனாலேயே, டிசம்பர் 31-ஆம் தேதி உங்களுக்கு நான் எழுதிய கடிதத்தில், எந்தத் தகவல்களின் பேரில் நீங்கள் திட்டமான முடிவுக்கு வந்திருக்கிறீர்களோ அவை சரியானவை என்று நான் நம்பும்படி செய்யுங்கள் என்று கூறினேன். நான் என்ன அறிக்கை விடுக்கவேண்டும் என்று நீங்கள் விரும்பி

கிறீர்களோ அதை நான் விடுப்பதில் இருக்கும் அடிப்படையான கஷ்டங்களை நீங்களும் ஒருவேளை உணரக்கூடும்.

என்றாலும், நான் எப்பொழுதும் இருந்துவருவதைப் போன்று இப்பொழுதும் அகிம்சையில் திடமான நம்பிக்கையுள்ளவன்; இதை நான் எங்கிருந்தும் பகிரங்கமாகக் கூறுவேன். காங்கிரஸ் ஊழியர்களிடம் ஏதாவது பலாத்காரம் இருக்குமானால், அதைப் பகிரங்கமாகவும், கொஞ்சமும் சந்தேகத்திற்கு இடம் வைக்காமலும் கண்டித்து வந்திருக்கிறேன். இது உங்களுக்குத் தெரியாமலிருக்கலாம். இதற்காகப் பல தடவைகளில் பகிரங்கமாகத் தவ விரதமும் கூட மேற்கொண்டிருக்கிறேன். உதாரணங்களையெல்லாம் கூறி நான் உங்களுக்கு அலுப்புத் தட்டும்படி செய்யக்கூடாது. அத்தகைய சந்தர்ப்பம் ஒவ்வொன்றிலும் நான் சுயேச்சையானவனாக இருந்துவந்தேன் என்பதை இங்கு குறிப்பிட்டுச் சொல்ல விரும்புகிறேன்.

இந்தத் தடவை, நான் பணிவுடன் தெரிவித்துக்கொண்டிருப்பதைப் போன்று, செய்ததற்குப் பரிகாரம் தேட வேண்டியது அரசாங்கமே. உங்கள் அபிப்பிராயத்தை மறுத்து நான் ஓர் அபிப்பிராயத்தைக் கூறுவதற்காக மன்னியுங்கள். உங்களைக் கண்டு பேச அனுமதி கோரப்போகிறேன் என்று ஆகஸ்டு 8-ஆம் தேதி இரவு அறிவித்திருந்தேன். அதன்படி உங்களைக் கண்டு பேச அனுமதித்து, நீங்கள் எதுவும் செய்யாமல் இருந்திருப்பீர்களானால், நல்லதைத் தவிர வேறு எதுவும் நிகழ்ந்திருக்காது என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். ஆனால், அவ்விதம் நடக்கவில்லை.

இந்திய அரசாங்கம் இதற்கு முன்னாலும் தன்னுடைய தவறை ஒப்புக் கொண்டிருக்கிறது என்பதை இங்கே உங்களுக்கு நினைவுபடுத்துகிறேன். உதாரணமாக பஞ்சாபில், காலஞ்சென்ற ஜெனரல் டயரின் நடத்தையை அரசாங்கம் கண்டித்தது. ஐக்கிய மாகாணத்தில், கான்பூரில் ஒரு மசூதியின் ஒரு புறத்தை அரசாங்கம் திரும்பவும் கொடுத்துவிட்டது. வங்காளத்தில், பிரிவினை ரத்து செய்யப்பட்டது. அதற்கு முன்னால் பெரிய பொதுஜன பலாத்காரச் செயல்கள் நடந்திருந்தும், அரசாங்கம் மேற்கண்ட காரியங்களையெல்லாம் செய்தது.

இப்போது எனது கோரிக்கையைச் சுருக்கமாகக் கூறுகிறேன் :

1. தனிப்பட்ட முறையில் நான் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று நீங்கள் விரும்புவீர்களானால், தவறு செய்திருக்கிறேன் என்று நான் உணரும்படி செய்யுங்கள். அப்பொழுது அதற்கு வேண்டிய பரிகாரத்தைச் செய்கிறேன்.

2. காங்கிரஸின் சார்பில் ஏதாவது யோசனை சொல்ல வேண்டும் என்று நீங்கள் விரும்புவீர்களானால், காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர்களுடன் என்னையும் நீங்கள் சேர்த்து வையுங்கள்.

இந்த நெருக்கடியான நிலைமையைத் தீர்ப்பது எவ்வாறு திடமான ஒரு முடிவுக்கு வருமாறு உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

எனது பதில் தெளிவாக இல்லை என்றோ அல்லது உங்கள் கடிதம் முழுவதற்கும் நான் பதிலளிக்கவில்லை என்றோ நீங்கள் கருதுவீர்களானால், நான் எங்கு தவறியிருக்கிறேன் என்பதை எனக்குக் குறிப்பிடுங்கள். உங்களுக்குத் திருப்தியளிக்க நான் முயற்சி செய்கிறேன்.

நான் எதையும் மனத்தில் மறைத்து வைத்திருக்கவில்லை.

உங்களுக்கு நான் எழுதும் கடிதங்கள், பம்பாய் அரசாங்கத்தின் மூலம் அனுப்பப்படுகின்றன என்று அறிகிறேன். இந்த முறையினால் கொஞ்சம் காலதாமதம் ஏற்பட்டே தீரும். இவ்விஷயத்தில் காலம் முக்கியமானதாகையால், நான் உங்களுக்கு எழுதும் கடிதங்களை சிறை முகாம் சூபரிண்டெண்டே நேரில் உங்களுக்கு அனுப்பிவிடும்படி நீங்கள் உத்தரவு பிறப்பிக்கலாம்.

உங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி.**

## 25

**சொந்தப் பார்வைக்கு**

வைஸ்ராய் மாளிகை
புது டில்லி, 25—1—1943

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஜனவரி 19–ஆம் தேதி, சொந்த முறையில் தாங்கள் எழுதிய கடிதத்திற்கு நன்றி. அது எனக்கு இப்பொழுதுதான் கிடைத்தது. அதை நான் மிகுந்த உன்னிப்புடனும் கவனமாகவும் படித்தேன் என்பதை சொல்லத் தேவையில்லை. ஆனால் நான் இன்னும் இருளிலேயே இருக்கிறேன் என்று அஞ்சுகிறேன். என் முந்திய கடிதத்தில் சில விஷயங்களை உங்களுக்குத் தெளிவுபடுத்தியிருக்கிறேன். சம்பவங்களின் போக்கும், நடந்துகொண்டுவருபவைகளை நான் அறிந்திருப்பதும், நான் விரும்பாவிடினும்கூட, நான் ஒரே ஒரு முடிவுக்கு வரும்படியே செய்கின்றன. பலாத்காரக் குற்ற இயக்கமும், புரட்சி நடவடிக்கைகளும் சென்ற ஆகஸ்டிலிருந்து இந்தியாவின் நற்பெயருக்கு மிகுந்த தீங்கை விளைவித்திருக்கின்றன. காங்கிரஸ் இயக்கமும், சென்ற ஆகஸ்டில் முடிவு செய்த சமயத்தில் அதன் முழு அங்கீகாரமும் பெற்ற பிரதிநிதியான நீங்களுமே அவைகளுக்குப் பொறுப்பாளி என்று கருதுகிறேன். அகிம்சையைப்பற்றி நீங்கள் கூறியிருப்பதையும் கவ

னித்தேன். பலாத்காரத்தை எந்தவித சந்தேகத்திற்கும் இடம் வைக்காமல் நீங்கள் கண்டித்திருப்பதைக் குறித்தும் நான் மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். உங்கள் அகிம்சைக் கொள்கைக்கு நீங்கள் முன்பு அதிக முக்கியத்துவம் கொடுத்து வந்திருப்பதையும் நான் நன்கு அறிவேன். ஆனல், உங்களைப் பின்பற்றுகிறவர்களில் சிலருடைய முழு ஆதரவையாவது உங்கள் கொள்கை பெறவில்லை என்பதையே இந்த சில மாதங்களில் நடந்திருக்கும் சம்பவங்களும், இன்று நடந்துவரும் சம்பவங்களும் காட்டுகின்றன. நீங்கள் உபதேசித்து வந்த லட்சியத்தை நிறைவேற்றுவதில் அவர்கள் தவறியிருக்கிருர்கள் என்ற உண்மை மாத்திரம், காங்கிரசும் அதை ஆதரிப்பவர்களும் செய்திருக்கும் பலாத்காரச் செயல்களினல் தங்கள் உயிரை இழந்திருப்பவர்களின் உறவினருக்கும், சொத்துக்களை இழந்து பெருந் துன்பங்களை அடைந்திருப்பவர்களுக்கும் சரியான பதிலாகிவிடாது. இதற்கு, முழுப் பொறுப்பையும் இந்திய சர்க்கார் மீதே சுமத்துவதாக நீங்கள் கூறுவதும் சரியான பதில் என்று நான் ஏற்றுக் கொள்ளுவதற்கில்லை. இவ்விஷயத்திலுள்ள உண்மை நிலையை சமாளிக்க வேண்டியவர்களாக நாங்கள் இருக்கிருேம்; அவற்றை சமாளித்தே ஆகவேண்டும். என் முந்திய கடிதத்தில் நான் தெளிவாக எடுத்துக்காட்டியிருப்பதைப் போன்று, நீங்கள் ஏதாவது சொல்ல விரும்பினல் அதைக் கேட்கவும், நீங்கள் திட்டமான யோசனை எதையாவது கூறினல் அதை அறியவும் நான் மிகுந்த ஆவலுடன் இருக்கிறேன். என்ருலும், இந்த விஷயத்தில் நியாயத்தைச் செய்ய வேண்டியது காங்கிரசும் நீங்களுமேயன்றி இந்திய அரசாங்கம் அல்ல என்ற உண்மையில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை.

ஆகையால் ஆகஸ்டு 9-ஆம் தேதி தீர்மானத்தையும், அதில் அடங்கியிருக்கும் கொள்கையையும் நிராகரிப்பதாகவோ, அல்லது அதிலிருந்து விலகிக் கொள்ளுவதாகவோ எனக்கு அறிவிக்க வேண்டும் என்று நீங்கள் ஆர்வத்துடன் இருப்பீர்களாயின், எதிர்காலத்தைக் குறித்துப் பொருத்தமான வாக்குறுதியையும் எனக்கு அளிப்பீர்களானல், இவ்விஷயத்தை மேற்கொண்டும் கவனிக்க நான் தயாராக இருக்கிறேன் என்பதை நான் சொல்லத் தேவையில்லை. இந்த விஷயத்தில் மிகவும் தெளிவாக இருக்க வேண்டியது மிகவும் அவசியம். சாத்தியமான அளவு தெள்ளத் தெளிவான சொற்களில் நான் அதை விளக்கியிருப்பதை நீங்கள் தவருக எடுத்துக்கொள்ள மாட்டீர்கள் என்பதை நான் அறிவேன்.

எனக்கு நீங்கள் அனுப்பும் கடிதம் எதுவும் பம்பாய் கவர்னரின் மூலம் அனுப்ப ஏற்பாடு செய்யும்படி அவரை நான் கேட்கப் போகிறேன். அதன் பலனுக, உங்கள் கடிதம் வந்து சேருவதில் தாமதம் ஏற்படாமலிருக்குமென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**லின்லித்கோ.**

## 26

சிறை முகாம்,
29—1—1943

அன்புள்ள லார்டு லின்லித்கோ,

என்னுடைய 19-ஆம் தேதி கடிதத்திற்கு நீங்கள் உடனே பதில் அளித்திருப்பதற்காக நான் நன்றி தெரிவிக்க வேண்டும்.

உங்கள் கடிதம் தெளிவாக இருக்கிறது என்று நீங்கள் கூறுவதை ஒப்புக்கொள்ள வேண்டும் என்றே விரும்புகிறேன். ஒரு குறிப்பிட்ட கருத்தை நீங்கள் பலமாகப் பற்றிக்கொண்டிருப்பதனுல் மாத்திரமே அது தெளிவானது என்று கருத நீங்கள் விரும்பமாட்டீர்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன். சென்ற ஆகஸ்டு 9-ஆம் தேதியும் அதற்குப் பிறகும் ஏற்பட்ட பொதுஜன பலாத்காரச் செயல்கள், முக்கியமான காங்கிரஸ் ஊழியர்கள் எல்லோரும் ஒரேயடியாகக் கைது செய்யப்பட்ட பிறகு நிகழ்ந்திருந்தும், காங்கிரஸின் ஆகஸ்டு தீர்மானத்தினுல்தான் அவை ஏற்பட்டன என்று நீங்கள் அபிப்பிராயம் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் அபிப்பிராயம் நியாயமானது என்பதை நான் உணர்ந்து கொள்ளும்படி செய்வதற்கு நீங்கள் ஒரு தடவையாவது முயற்சி செய்ய வேண்டும் என்று நான் வேண்டிக் கொண்டேன்; என் கடைசி மூச்சு இருக்கும்வரையில் இவ்விதமே நான் வேண்டிக் கொள்வேன். நடந்திருப்பதாகக் கூறப்படும் பலாத்காரத்திற்கு அரசாங்கம் மேற்கொண்ட கடுமையான, அவசியமில்லாத நடவடிக்கையே காரணமல்லவா? உங்கள் அபிப்பிராயத்தில், ஆகஸ்டு தீர்மானத்தின் எந்தப் பகுதி கெடுதலானது, ஆட்சேபகரமானது என்பதைக் கூட நீங்கள் கூறவில்லை. எந்த விதத்திலும் அந்தத் தீர்மானம் காங்கிரசின் அகிம்சைக் கொள்கையிலிருந்து விலகுவதாக இல்லை. ஒவ்வோர் அம்சத்திலும், முறையிலும், நிச்சயமாக பாஸிஸத்திற்கு எதிரானதாகவே அது இருக்கிறது. பலன் தரத்தக்க விதத்திலும், தேசம் முழுவதும் ஒத்துழைப்பை அளிப்பது எந்தவகையில் சாத்தியமாகுமோ அந்த வகையிலேயே யுத்த முயற்சிக்கு ஒத்துழைப்பை அளிப்பதாகவும் அத்தீர்மானம் கூறுகிறது.

இதெல்லாம் கண்டனத்திற்கு இடம் அளிப்பதாகுமா? தீர்மானத்தில், சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிப்பது என்று கூறும் பகுதியைக் குறித்து ஆட்சேபணை ஏற்படக்கூடும். ஆனல், அதனளவில் அது ஆட்சேபணைக்குக் காரணமாகிவிடாது. ஏனெனில், 'காந்தி-இர்வின் ஒப்பந்தம்' என்பதில் சட்ட மறுப்புக் கொள்கை அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. நான் உங்களைக் கண்டு பேசுவதற்கு அனுமதி கோருவதாக இருந்தேன். அந்தச் சட்ட மறுப்புக் கூட, உங்களைச் சந்தித்துப் பேசியதன் முடிவு தெரிவதற்கு முன் ஆரம்பிக்கப் படுவதாக இல்லை. பிறகு, காங்கிரஸ்

மீதும் என் மீதும், இந்தியா மந்திரி போன்ற பொறுப்பு வாய்ந்த ஒருவர் சுமத்திய, நிரூபிக்காத, என் கருத்துப்படி நிரூபிக்க முடியாத குற்றச்சாட்டுகளை எடுத்துக்கொள்ளுவோம்.

தாங்கள் சொன்னதே சரி என்று சாதித்துக் கொண்டிருக்காமல், சரியான சாட்சியங்களின் மூலம் தங்களுடைய நடவடிக்கை சரி என்பதை நிரூபிக்க வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பு என்று நான் நிச்சயமாகக் கூறுவேன்.

ஆனால், காங்கிரஸ்காரர்கள் என்று சொல்லப்படுகிறவர்களால் செய்யப்பட்ட கொலைகளைப் பற்றிய உண்மைகளை என் மீது நீங்கள் வீசுகிறீர்கள். கொலைகளைப் பற்றிய உண்மைகளை உங்களைப்போலவே நானும் காண்கிறேன். வெறிபிடித்துப் போகும் அளவிற்கு மக்களை அரசாங்கம் நிர்ப்பந்தப்படுத்திவிட்டது என்பதுதான் இதற்கு நான் அளிக்கும் பதிலாகும். முன்பே குறிப்பிட்டிருப்பதைப் போன்று, கைது செய்வதன் மூலம் பலாத்காரத்தை அரசாங்கம் உண்டுபண்ணிவிட்டது. அரசாங்கம் கையாளும் பலாத்காரம் எந்தவிதத்திலும் குறைந்தது அல்ல. ஏனெனில், மிகப் பெரிய முறையில் வகுக்கப்பட்டது அந்த பலாத்காரம்! ஒரு பல்லுக்கு பதிலாக ஒரு பல்லைப் பிடுங்கிவிடவேண்டும் என்ற மோஸஸின் சட்டத்தையும் சர்க்காரின் பலாத்காரம் மிஞ்சிவிட்டது. ஒருவர் செய்த குற்றத்திற்காக பத்தாயிரம் பேருக்கு தண்டனை கொடுக்கவேண்டும் என்பதே அவர்களுடைய சட்டமாக இருக்கிறது. யார் அடித்தாலும் திருப்பி அடிக்கக் கூடாது என்று ஏசுநாதர் கூறியதற்கு இங்கே இடமே இல்லை. சர்வ வல்லமையுள்ள இந்திய அரசாங்கத்தின் அடக்குமுறைகளை வேறு எந்தவிதமாகவும் நான் விளக்கிக் கூறமுடியாது.

இந்தச் சோகக் கதை ஒருபுறமிருக்க, இந்தியாவெங்கும் வியாபித்திருக்கும் பற்றுக்குறையின் காரணமாக, கோடிக்கணக்கான ஏழைகள் கஷ்டப்படுகிறார்கள். இச்சமயத்தில் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபைக்குப் பொறுப்புவாய்ந்த உண்மையான தேசீய சர்க்கார் இருந்துவருமானல், இந்த நிலைமையை முற்றிலும் தடுத்துவிட முடியாமற்போனாலும், கஷ்டத்தை பெரும் அளவுக்குக் குறைத்திருக்க முடியும் என்று நான் எண்ணுமல் இருக்க முடியவில்லை.

இப்பொழுதும் என் வேதனையைப் போக்கும் மருந்து கிடைக்காது போகுமானல், சத்தியாக்கிரகிகளுக்கு உரியதான தருமத்தை நான் மேற்கொண்டுதான் ஆகவேண்டும். அதாவது சக்திக்கு ஏற்ற வகையில் உண்ணுவிரதமிருப்பதுதான் அது. பிப்ரவரி 9-ஆம் தேதி காலை ஆகாரத்திற்குப் பிறகு நான் அதை ஆரம்பிக்க வேண்டும். இது இருபத்தோரு நாள் உண்ணுவிரதம். மார்ச் 2-ஆம் தேதி காலையில் அது முடிவுறும். வழக்கமாக என் உண்ணுவிரத சமயங்களில் உப்பு கலந்த தண்ணீரை நான் சாப்பிடுவது உண்டு. ஆனால், இப்பொழுது என் உடலுக்கு தண்ணீர் ஒத்துக்கொள்ளுவதில்லை. ஆகையால் இந்தத் தடவை தண்ணீரை

அருந்தக்கூடியதாக இருக்கும்படிச் செய்வதற்காக எலுமிச்சை ரகப் பழங்களின் சாற்றைக் கலந்து சேர்த்துக் கொள்ளுவது என்றிருக்கிறேன். ஏனெனில், சாகும்வரையில் பட்டினி கிடக்க வேண்டும் என்பது என் விருப்பமல்ல; கடவுள் சித்தமிருந்தால் இந்தச் சோதனையிலிருந்து பிழைக்க வேண்டும் என்பதே எனது விருப்பம். தேவையான பரிகார முறைகளை மேற்கொள்வதன் மூலம், உண்ணாவிரதம் முன்பதாகவே முடிந்துவிடும்படி அரசாங்கம் செய்யலாம்.

என் முந்திய இரு கடிதங்களில் குறிப்பிட்டதுபோல் இக்கடிதத்தில் சொந்தப்பார்வைக்கு என்று நான் குறிப்பிடவில்லை. அவை எந்த வகையிலும் அந்தரங்கமானவையும் அல்ல. அவை சொந்த முறையில் ஒரு வேண்டுகோளேயாகும்.

தங்கள் உண்மையுள்ள நண்பன்,

**மோ. க. காந்தி**

**பின் குறிப்பு**

பின் கண்டவை கவனக்குறைவினால் மேற்கண்ட கடிதத்தில் விடுபட்டுவிட்டது: காங்கிரஸ் தன்னுடைய ஆகஸ்டு தீர்மானத்தின் மூலம் தனக்கு என்று எதையும் கேட்கவில்லை. இந்த முக்கியமான உண்மையை அரசாங்கம் கவனிக்கத் தவறிவிட்டது, அலட்சியம் செய்துவிட்டது என்பது தெளிவாகிறது. அதன் கோரிக்கைகள் மக்கள் எல்லோருக்கும் பொதுவானவை. ஒரு தேசீய அரசாங்கத்தை அமைக்கும்படி காயிதே ஆஜம் ஜின்னாவை அரசாங்கம் அழைப்பதையும் காங்கிரஸ் விரும்பியது; அதை ஏற்கவும் தயாராக இருந்தது. யுத்த காலத்தின் தேவைக்கு முரணின்றி ஒப்புக்கொள்ளப்படும் ஏற்பாடுகளுக்கு உட்பட்டதாக அந்த அரசாங்கம் இருக்க வேண்டும். தக்க வகையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபையின் அதிகாரத்திற்கு உட்பட்டதாகவும் அந்த அரசாங்கம் இருக்கவேண்டும் என்பதே காங்கிரஸின் கோரிக்கை. ஸ்ரீமதி சரோஜினி தேவியைத் தவிர காரியக்கமிட்டி உறுப்பினர்கள் வேறு யாரும் என்னுடன் இல்லாத நிலையில் நான் இப்பொழுது தனியாக இருந்து வருகிறேன். ஆகையால் அவர்களுடைய இப்போதைய மன நிலை என்ன என்பது எனக்குத் தெரியாது. எனினும் கமிட்டி தனது கருத்தை இப்பொழுது மாற்றிக்கொண்டிருப்பதற்கில்லை.

**மோ. க. காந்தி**

## 27

*வைஸ்ராய் மாளிகை,*
*புதுடில்லி, 5—2—1943*

*அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

*இப்பொழுதுதான் எனக்குக் கிடைத்துள்ள ஜனவரி 29-ஆம் தேதியிட்ட தங்கள் கடிதத்திற்கு மிக்க நன்றி. எப்பொழுதும் போலவே உங்கள் மனத்தைப் புரிந்து கொள்ளுவதற்காகவும், முழு நியாயத்துடன் உங்கள் வாதத்தைப் பரிசீலனை செய்வதற்காகவும் பூரண கவனத்துடனும், மிகுந்த சிரத்தையுடனும் உங்கள் கடிதத்தைப் படித்தேன். ஆனால், சென்ற ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில் நடந்த வருந்தத்தக்க கலவரங்களுக்கு காங்கிரசும், சொந்த முறையில் நீங்களுமே பொறுப்பாளி என்ற என் கருத்து மாறவில்லை எனறே அஞ்சுகிறேன்.*

*என் முந்திய கடிதத்தில் ஒன்று கூறினேன். காங்கிரஸ் இயக்கமும், சென்ற ஆகஸ்டு தீர்மானம் செய்தபோது அதன் அங்கீகாரம் பெற்ற முழு அதிகாரமும் வகித்த தலைவர் என்ற முறையில் நீங்களுமே, பின்னால் மூண்ட பலாத்காரச் செயல்களுக்கும் குற்றங்களுக்கும் பொறுப்பாளிகள் என்பது என் கருத்து என்று கூறினேன். உண்மை நிலவரங்களைப் பற்றி நான் அறிந்திருப்பவை, நான் வேறு விதமாக நினைப்பதற்கு இடம் கொடுக்கவில்லை. இதற்கு நீங்கள் கூறும் பதிலில், என் கருத்து சரியானதே என்பதை நீங்கள் உணர்ந்துகொள்ளும்படிச் செய்ய நான் முயற்சிக்க வேண்டும் என்று திரும்பவும் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். தகவல்களை அறிந்துகொள்ள திறந்த மனத்தோடு நீங்கள் விரும்புகிறீர்கள் என்பதை எதிர்பார்க்க எனக்கு உரிமை உண்டு. உங்களுடைய முந்திய கடிதங்களில் அதற்கான அறிகுறி இருந்திருக்குமானால், உங்கள் கோரிக்கைக்கு நான் முன்பே சிறிதும் தயக்கமின்றி உடன்பட்டிருப்பேன். உங்கள் கடிதம் ஒவ்வொன்றிலும், சமீபத்தில் நடந்த சம்பவங்களைக் குறித்து வெளியாகும் செய்திகள் சம்பந்தமாக உங்களுடைய ஆழ்ந்த அவநம்பிக்கையையே நீங்கள் தெரிவித்து வந்திருக்கிறீர்கள். என்றாலும் உங்கள் கடைசிக் கடிதத்தில், அதே தகவல்களை அடிப்படையாகக் கொண்டு, முழுத் தவறையும் இந்திய அரசாங்கத்தின்மீது போட்டுவிட நீங்கள் தயங்கவில்லை. அந்தத் தகவல்களை நான் நம்புகிறேன். ஆனால், அவை சரியானவை என்று நீங்கள் ஏற்றுக் கொள்ளுவீர்களென நான் எதிர்பார்க்க முடியாது என்று அதே சமயத்தில் நீங்கள் கூறியிருக்கிறீர்கள். அப்படியிருக்க, எதைக் குறித்தும் நீங்கள் நிச்சயமாக நம்பும்படி செய்ய என்னால் முடியும் என்று நீங்கள் எப்படி எதிர்பார்க்கிறீர்கள் அல்லது எவ்விதம் விரும்புகிறீர்கள் என்பது எனக்கு விளங்கவில்லை. ஆனால் ஆகஸ்டு 8-ஆம் தேதி காங்கிரஸ் செய்த தீர்மானத்தில், அதன் கோரிக்கைகளை ஆதரித்துப் பொதுஜனப் போராட்டத்தை ஆரம்-*

பிப்பதாகப் பிரகடனம் செய்யப்பட்டிருக்கிறது; உங்களைத் தலைவராகவும் நியமித்திருக்கிறது; இயக்கத்தின் தலைமைக்குக் குறுக்கீடு ஏற்படும் போது எல்லா காங்கிரஸ்காரர்களும் அவரவர்களுக்கு ஏற்ற வகையில் செயல்படலாம் என்று அதிகாரம் அளித்திருக்கிறது. அதற்குப் பிறகு ஏற்பட்ட பலாத்காரம், நாசவேலை, பயங்கரச் செயல்கள் ஆகிய வருந்தத்தக்க காரியங்களுக்குக் காங்கிரசும் அதன் தலைவர்களுமே பொறுப்பாளிகள் என்பதற்கு இந்திய அரசாங்கம் சொல்லிவரும் காரணங்களில் இந்திய சர்க்கார் எதையும் ரகசியமாக வைத்ததில்லை. இந்த வகையில் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றிய ஒரு ஸ்தாபனத்திற்கு, அதன் பின் ஏற்பட்ட சம்பவங்களுக்குத் தான் பொறுப்பாளி அல்ல என்று சொல்லிவிட எவ்வித உரிமையும் இல்லை. இந்தக் கொள்கையினால் பலாத்காரம் ஏற்படும் என்று நீங்களும் உங்கள் நண்பர்களும் எதிர்பார்த்தீர்கள். அதை மன்னித்துவிடவும் நீங்கள் தயாராயிருந்தீர்கள். ஆலோசித்து செய்யப்பட்ட ஒரு திட்டத்தின் ஒரு பகுதியே பின்னால் ஏற்பட்ட பலாத்காரச் செயல்கள் ஆகும். காங்கிரஸ் தலைவர்கள் கைதியாவதற்கு வெகு காலத்திற்கு முன்பே இது ஆலோசிக்கப்பட்டு இப்போது செயல்பட்டிருக்கிறது என்பதற்குச் சாட்சியம் இருக்கிறது. காங்கிரஸ்மீது சாட்டப்படும் குற்றத்தின் பொதுவான தன்மை இன்னதென்பதை, செப்டம்பர் 15-ஆம் தேதியன்று மத்திய சட்டசபைக் கூட்டத்தில் பேசும்போது உள்துறை மந்திரி பகிரங்கமாக எடுத்துக் கூறியிருக்கிறார். மேற்கொண்டு தகவல் தங்களுக்குத் தேவையானால், அதைப் பார்க்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். இதுபற்றி பத்திரிகைகளில் வெளியான செய்தியையும் நீங்கள் பார்த்திருப்பீர்கள். அது போதாது என்றால், நீங்கள் பார்ப்பதற்கு அதன் முழு விவரத்தையும் இத்துடன் அனுப்பியிருக்கிறேன். கிடைத்திருக்கும் ஏராளமான சாட்சியங்களெல்லாம், அப்பொழுது வந்த முடிவையே ஊர்ஜிதம் செய்வனவாக இருக்கின்றன என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் பெயரால் வெளியிடப்பட்டிருக்கும் சுற்றறிக்கையின் ரகசிய அறிவிப்பின்படியே நாசவேலைகள் செய்யப்பட்டிருக்கின்றன. பலாத்காரத்திற்கும் கொலைகளுக்கும் பிரபலமான காங்கிரஸ்காரர்கள் ஏற்பாடு செய்ததோடு, அக்காரியங்களில் தாராளமாக ஈடுபட்டுமிருக்கிறார்கள். இப்பொழுதும்கூட, ரகசிய காங்கிரஸ் ஸ்தாபனம் ஒன்று வேலை செய்துகொண்டு வருகிறது. இதில் மற்றவர்களுடன் காங்கிரஸ் காரியக்கமிட்டி உறுப்பினர் ஒருவரின் மனைவி முக்கியமான பங்கு கொண்டிருக்கிறார். இந்த இயக்கம், வெடிகுண்டு வீசுவதற்கும், மற்ற பயங்கரச் செயல்களுக்கும் திட்டமிட்டுத் தீவிரமாக வேலை செய்துவருகிறது. இத்தகைய செயல்கள் நாடெங்கும் வெறுப்பை உண்டாக்கியிருக்கின்றன. இவை சம்பந்தமாக ஏராளமான தகவல்கள் என்னிடம் இருக்கின்றன. இந்தத் தகவல்களின் பேரில் நாங்கள் வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளவில்லை, அதை பகிரங்கப்

படுத்தவில்லை என்ருல், அதற்குக் காரணம் அதற்கு வேண்டிய காலம் இன்னும் வரவில்லை என்பதுதான். ஆனல் ஒன்றை மாத்திரம் நீங்கள் நிச்சயமாக நம்பலாம். சீக்கிரத்திலோ அல்லது பிறகோ காங்கிரஸ்மீதுள்ள குற்றங்களுக்கு அது பதில் சொல்லியே ஆக வேண்டும். அப்பொழுது, உங்களால் முடிந்தால் நீங்களும் உங்கள் சகாக்களும் குற்றவாளிகள் அல்ல என்பதை உலகத்தின் முன்பு நிருபித்துக் கொள்ள வேண்டிவரலாம். அவ்விதம் செய்யாமல், இதற்கு மத்தியில் நீங்கள் செய்ய உத்தேசித்துள்ள காரியத்தைப் போன்று எதையாவது செய்வீர்களானல், சுலபமாகத் தப்பித்துக்கொண்டுவிட ஒரு வழியைக் கண்டு பிடிக்க முற்படுவீர்களானல், தீர்ப்பு உங்களுக்கு எதிரானதாகவே இருக்கும்.

"காந்தி-இர்வின் ஒப்பந்தம்" என்று நீங்கள் கூறும் 1931 மார்ச்சு 5-ஆம் தேதி ஏற்பட்ட டில்லி சமரச ஒப்பந்தத்தில், சட்டமறுப்புக் கொள்கை மறை முகமாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது என்று நீங்கள் கூறுவதைப் படித்து ஆச்சரியமடைகிறேன். அந்த தஸ்தாவேஜியைத் திரும்பவும் படித்துப் பார்த்தேன். சட்டமறுப்பு தீவிரமாக நிறுத்தப்படும்; இதற்குப் பதிலாக அரசாங்கம் சில நடவடிக்கைகளை மேற்கொள்ளும் என்பது தான் அந்த ஒப்பந்தத்தின் அடிப்படையாகும். இத்தகைய ஒரு தஸ்தாவேஜியில் சட்டமறுப்பு இயக்கம் இருக்கிறது என்பதைக் குறிப்பிட வேண்டியது இயல்பானதே. ஆனல், சட்டமறுப்பு எந்தச் சந்தர்ப்பத்திலும் நியாயம் என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதாகக் காட்டுவதற்கு எதையுமே அதில் நான் காணவில்லை. எனது அரசாங்கமும் அப்படிக் கருதவில்லை என்பதைக் குறித்து நான் இன்னும் தெளிவாகக் கூறவேண்டிய அவசியமும் இல்லை.

நீங்கள் கூற முன்வந்திருக்கும் கருத்தை ஏற்றுக்கொள்ளுவதாக இருந்தால், சமாதானத்தையும் ஒழுங்கையும் காப்பாற்ற வேண்டிய பொறுப்பை வகிக்க இந்நாட்டின் அதிகாரத்தைப் பெற்ற அரசாங்கம், பகிரங்கமான கலகம் என்று நீங்களே விவரிக்கும் சதிகார, புரட்சி இயக்கங்களை எந்த ஆட்சேபணையுமின்றி அனுமதித்துவிட வேண்டும் என்ருகிறது; பலாத்காரத்திற்கான ஏற்பாடுகளை அனுமதித்து, போக்குவரத்து வசதிகளுக்கு இடையூறை உண்டாக்கி ஒரு பாவமும் அறியாதவர்களைத் தாக்கவும், போலீஸ் அதிகாரிகளையும் மற்றவர்களையும் கொல்லவும் தங்குதடையின்றி அனுமதித்துக் கொண்டிருக்க வேண்டும் என்ருகிறது. உங்கள் மீதும், காங்கிரஸ் தலைவர்கள் மீதும் முன்பே கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்ளத் தவறிவிட்டோம் என்று நானும் என் அரசாங்கமும் பகிரங்கமாகக் குற்றஞ்சாட்டப்படலாம். ஆனல், நீங்கள் என்ன முடிவைச் செய்திருக்கிறீர்களோ அதிலிருந்து வாபசாகி அதை மாற்றிக் கொள்ள எல்லாவிதமான சந்தர்ப்பங்களையும் உங்களுக்கும் காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கும் அளிப்பது என்பதே எப்போதும் என்னுடைய, என் அரசாங்கத்தினுடைய ஆர்வமாக இருந்துவந்திருக்கிறது. "செய் அல்லது

மடிந்துபோ'' என்று நீங்கள் முடிவாகக் கூறியது மல்லாமல் சென்ற ஜூன், ஜூலை மாதங்களில் நீங்கள் வெளியிட்ட அறிக்கையும், ஜூலை 14-ஆம் தேதி காரியக்கமிட்டி நிறைவேற்றிய அசல் தீர்மானமும், சமரசத்திற்கு இனி இடமே இல்லை என்று அதே நாளில் நீங்கள் கூறியதும், எப்படியும் இது பகிரங்கமான கலகமே என்று நீங்கள் சொன்னதும் ஆபத்தானவை, குறிப்பிடத் தக்கவை. ஆனால், பொறுமையுடனிருந்தோம். அரசாங்கம் இந்திய மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமையை நிறைவேற்றுவதால் காங்கிரஸின் போக்கை இன்னும் சகித்துக்கொண்டிருந்து பயனில்லை என்பதை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டித் தீர்மானம் தெளிவாக்கியவரையில் பொறுத்திருந்தோம். ஆனால் அந்தப் பொறுமை, அதற்குத் தகுதியற்றவர்களிடம் காட்டிய பொறுமையாகியது.

முடிவாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். உங்கள் மனத்தில் நீங்கள் செய்துகொண்டிருக்கும் முடிவைப்பற்றி எனக்குக் கூறியிருக்கிறீர்கள். உங்கள் தேக நிலையையும் வயதையும் கவனிக்கும் போது, உங்களுடைய இந்த முடிவு எனக்கு அதிக வருத்தத்தை அளிக்கிறது. அம்முடிவை மாற்றிக் கொள்ளவேண்டும் என்ற புத்திசாலித்தனமான யோசனைகளுக்கு நீங்கள் செவிசாய்ப்பீர்கள் என்பதே எனது நம்பிக்கையும் பிரார்த்தனையுமாகும். ஆனால், அபாயத்திற்குக் காரணமான உண்ணாவிரதத்தை மேற்கொள்ளுவதா, இல்லையா என்ற முடிவுக்குவர வேண்டிய பொறுப்பு முற்றிலும் உங்களைச் சார்ந்தது. அதற்கும் அதன் விளைவுகளுக்கும் முழுப் பொறுப்பும் உங்களை மாத்திரமே சாரும். நான் கூறியிருப்பவைகளைக் கொண்டு உங்கள் முடிவை நீங்கள் திரும்பவும் நன்றாகச் சிந்திப்பீர்கள் என்றே மனப்பூர்வமாக நம்புகிறேன். இதைப் பற்றி நன்றாகச் சிந்தித்து முடிவுக்கு வருவீர்களானால், அதை நான் வரவேற்பேன். வேண்டும் என்றே நீங்கள் உயிருக்கு ஆபத்தை உண்டாக்கிக்கொண்டுவிடக் கூடாது என்பதில் இயல்பாக எனக்குள்ள கவலையினால் மாத்திரமல்ல, உண்ணாவிரதத்தை அரசியல் காரியங்களுக்காக உபயோகிப்பது மோசமான அரசியல் மோசடி (ஹிம்சை) என்றும், அதற்கு தார்மிக நியாயம் எதுவும் இருக்க முடியாது என்றும் நான் கருதுகிறேன். முன்னால் நீங்கள் எழுதிவந்திருப்பவைகளிலிருந்து இதுதான் உங்கள் கருத்து என்றும் அறிகிறேன்.

உங்கள் உண்மையுள்ள,
லின்லித்கோ

## 28

வைஸ்ராய் மாளிகை, புதுடில்லி,
5-2-1943

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

வைஸ்ராய்க்கு நீங்கள் ஜனவரி 29-ம் தேதி எழுதியிருக்கும் கடிதத்தில், உங்கள் முந்திய இரு கடிதங்களைப் போன்று 'தனது பார்வைக்கு' என்று நீங்கள் குறிப்பிடவில்லை என்றும், முந்திய அந்த இரு கடிதங்களும் எந்த வகையிலும் அந்தரங்க மானவை அல்ல என்றும், சொந்த முறையில் விடுத்த வேண்டு கோளே என்றும் நீங்கள் கூறியிருக்கிறீர்கள். வைஸ்ராயும் இது வரையில் 'சொந்தப் பார்வைக்கு' என்பதை சாதாரணமான சம்பிரதாயப் பொருளிலேயே கருதிவந்திருப்பதோடு அதன்படி தாம் எழுதிய பதில்களிலும் அதேபோல குறிப்பிட்டிருந்தார். நீங்கள் கூறியிருப்பதிலிருந்து, இக்கடிதங்களும் அவற்றிற்கு அவர் எழுதிய பதில்களும் 'சொந்தப் பார்வைக்கு' என்று குறிப்பிட் டிருந்தாலும், அவைகளை வெளியிடுவதற்கு உங்களுக்கு எந்த ஆட்சேபணையும் இருக்க முடியாது என்றே அவர் கருதுகிறார். இதுபற்றி எனக்கு அன்புடன் அறிவிப்பீர்கள் என்றே எதிர் பார்க்கிறேன்.

உங்கள் உண்மையுள்ள,
ஜி. லெயித்வெயிட்

## 29

சிறை முகாம்,
7—2—1943

அன்புள்ள ஸர் கில்பர்ட்,

இவ்வளவு நாட்கள் கழித்து உங்கள் கையெழுத்தைப் பார்த்து அதிக மகிழ்ச்சியடைகிறேன். இரு கடிதங்கள் அந்த ரங்கமானவை அல்ல என்று நான் கூறியபோது, நீங்கள் சொல்லு வதையே கருத்தில் கொண்டு கூறினேன். ஆனால், அக்கடிதங்கள் என்னைப் பொறுத்தவரை அந்தரங்கமானவையல்ல என்றாலும், அந்தரங்கமானவை என்று வைஸ்ராய் கருதினால் அப்படியே கொள்ளலாம். அவற்றிற்கு அனுப்பப்பட்ட இரு பதில்களையும் அவர் அப்படியே வைத்துக்கொள்ளலாம். அப்படியானால் அந்த நான்கு கடிதங்களையும் அவர் பிரசுரிக்காமல் இருந்துவிடலாம். என்னைப் பொறுத்த வரையில், சென்ற ஆகஸ்டு 14-ஆம் தேதி

நான் எழுதிய கடிதத்திலிருந்து, இந்திய அரசாங்க உள்துறை இலாகா காரியதரிசிக்கு நான் எழுதிய கடிதம் உள்பட எல்லாக் கடிதங்களையும் பிரசுரிக்கவேண்டும் என்பதுதான் எனது வேண்டுகோள் ஆகும்.

உங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 30

*சிறை முகாம்,*
*7—2—1943*

அன்புள்ள லார்டு லின்லித்கோ,

சென்ற ஜனவரி 29-ஆம் தேதி நான் எழுதிய கடிதத்திற்கு நீங்கள் 5-ஆம் தேதி நீண்ட பதில் அனுப்பியிருக்கிறீர்கள். அதற்காக நான் தங்களுக்கு நன்றி செலுத்த வேண்டும்.

நீங்கள் கடைசியாகக் குறிப்பிட்டிருக்கும் விஷயத்தை முதலில் எடுத்துக் கொள்ளுகிறேன். 9-ஆம் தேதி ஆரம்பிப்பதாக இருக்கும் உண்ணாவிரதத்தைப் பற்றியதே அது. ஒரு சத்தியாக்கிரகியின் நோக்கோடு கவனித்தால், உங்கள் கடிதம், உண்ணாவிரதமிருக்கும்படி அழைப்பதாகவே இருக்கிறது. இதற்கான பொறுப்பும், இதன் விளைவுகளும் முற்றிலும் என்னைச் சார்ந்தவையே என்பதில் சந்தேகமில்லை. உங்கள் பேனாவிலிருந்து ஒரு தவறு நேர நீங்கள் இடம் கொடுத்திருக்கிறீர்கள். அதை நான் எதிர்பார்க்கவே இல்லை. இந்த உண்ணாவிரதம், "சங்கடமான நிலையிலிருந்து தப்பித்துக் கொண்டுவிட சுலபமான வழியைக் காணும் முயற்சி" என்று, உங்கள் கடிதத்தின் இரண்டாவது பாராவில் கடைசி வாக்கியத்தில் விவரித்திருக்கிறீர்கள். அத்தகைய மோசமான, கோழைத்தனமான நோக்கம் எனக்கு இருப்பதாக, நீங்கள், அதுவும் ஒரு நண்பர், கற்பிப்பதை என்னால் அறிந்து கொள்ளவே முடியவில்லை. "அது ஒருவிதமான அரசியல் மோசடி" என்றும் உண்ணாவிரதத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். இது சம்பந்தமாக நான் முன்னால் எழுதியிருப்பவைகளையும் எனக்கு விரோதமாக எடுத்துக்காட்டுகிறீர்கள். நான் எழுதியிருப்பவைகளின்படி நடக்கத் தயாராயிருக்கிறேன்; நான் முடிவு செய்திருக்கும் காரியம் நான் எழுதியிருப்பவைகளுக்கு எந்தவிதத்திலும் முரண்பாடானதல்ல என்றே கருதுகிறேன். நான் எழுதியிருப்பவைகளை நீங்கள் படித்துப் பார்த்தது உண்டா என்றும் வியப்படைகிறேன்.

நான் செய்திருக்கும் தவறை நான் உணர்ந்து கொள்ளும்படிச் செய்யுங்கள் என்று உங்களைக் கேட்டுக் கொண்ட

போது, திறந்த மனத்தோடுதான் உங்களை அணுகினேன் என்று சொல்லிக் கொள்ளுகிறேன். பிரசுரமாகியிருக்கும் செய்திகள் விஷயத்தில் "மிகுந்த அவநம்பிக்கை" கொண்டிருப்பது, நான் திறந்த மனத்துடன் இருக்கிறேன் என்பதற்கு எந்த வகையிலும் முரண்பாடானதாகாது.

"இந்தக் கொள்கை பலாத்காரத்தில் கொண்டுபோய்விடும் என்று நான் எதிர்பார்த்தேன்," "அதை மன்னித்துவிடவும் தயாராயிருந்தேன்", "பின்னல் ஏற்பட்ட பலாத்காரச் செயல்கள், காங்கிரஸ் தலைவர்கள் கைது செய்யப்படுவதற்கு வெகு காலத்திற்கு முன்பே திட்டமிட்டு முடிவு செய்யப்பட்ட காரியத்தின் ஒரு பகுதி", என்றெல்லாம் நீங்கள் கூறுவதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். இப்போதைக்கு என் நண்பர்கள் சார்பில் நான் எதுவும் கூறவில்லை. இத்தகைய பெரிய குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரமான சாட்சியம் எதையும் நான் காணவில்லை. இதன் சம்பந்தமான சாட்சியங்கள் இன்னும் வெளியிடப்படவில்லை என்பதை நீங்களே ஒப்புக் கொள்ளுகிறீர்கள். உள்துறை மந்திரியின் பிரசங்கத்தின் நகல் ஒன்றை எனக்கு அனுப்பிவைத்திருக்கிறீர்கள். சர்க்கார் தரப்பு வக்கீலின் ஆரம்பப் பிரசங்கமாக அதைக் கொள்ளலாமே யன்றி, அதில் வேறு எதுவுமில்லை. காங்கிரஸ்காரர்கள்மீது ஆதாரமற்ற குற்றச்சாட்டுகளே அதில் இருக்கின்றன. திடீரென பலாத்காரச் செயல்கள் ஆரம்பமானதை ரசமான பாஷையில் அவர் விவரித்திருக்கிறார் என்பது உண்மையே. ஆனால், அக்கலவரம் ஏன் ஏற்பட்டது என்பதைப் பற்றி அவர் எதுவும் சொல்லவில்லை. அது ஏன் ஏற்பட்டது என்பதற்கு நான் காரணம் கூறியிருக்கிறேன். ஆண்களையும் பெண்களையும், அவர்களை விசாரிப்பதற்கு முன்னால், அவர்களுடைய வாதங்களைக் கேட்பதற்கு முன்னால், நீங்கள் குற்றவாளிகளாக்கியிருக்கிறீர்கள். அவர்கள் மீது நீங்கள் சாட்டும் குற்றத்திற்கு சாட்சியம் காட்டும்படி நான் உங்களைக் கேட்பதில் நிச்சயமாகத் தவறு எதுவும் இல்லை. உங்கள் கடிதத்தில் நீங்கள் கூறியிருப்பவை திருப்தி அளிப்பவையாகவும் இல்லை. ஆங்கில நீதிச் சட்டத்திற்கிணங்க சாட்சியங்கள் பொருத்தமானவையாக இருக்க வேண்டும்.

காரியக் கமிட்டி உறுப்பினர் ஒருவரின் மனைவி. "வெடி குண்டு வீசுவதற்கும் மற்ற பயங்கரச் செயல்களுக்கும் திட்டமிட்டு வருகிறார்" என்றால், அவர்மீது கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்து விசாரித்து, அவர் குற்றவாளி என்றால் தண்டிக்க வேண்டும். நீங்கள் குறிப்பிடும் பெண்மணி, அவர் செய்துவருவதாகக் கூறப்படும் காரியங்களை, ஆகஸ்டு 9-ந்தேதி எல்லோரும் ஒரேயடியாகக் கைது செய்யப்பட்ட பிறகே செய்திருக்கக்கூடும். இவ்விதம் கைது செய்யப்பட்டதைத் தான் கலப்பற்ற பலாத்காரச் செயல் என்று நான் துணிந்து கூறினேன்.

காங்கிரஸ் மீதுள்ள குற்றச்சாட்டுகளை வெளியிடுவதற்கான சமயம் இன்னும் வரவில்லை என்று நீங்கள் கூறுகிறீர்கள். இந்தக் குற்றச்சாட்டுகளை பாரபட்சமற்ற நீதிச் சபை முன்பு வைத்தால் அவை யாவும் கொஞ்சமும் ஆதாரமற்றவை என்ற முடிவு ஏற்படவும்கூடும், அல்லது தண்டிக்கப்பட்டிருப்பவர்களில் சிலர் இதற்கு மத்தியில் இறந்து போகவும்கூடும், அல்லது உயிருடன் இருப்பவர்கள் கொண்டு வரக்கூடிய சில சாட்சியங்கள் அப்பொழுது கிடைக்காதவையாகவும் போய்விடக்கூடும். இவையெல்லாம் சாத்தியமே என்பதைப்பற்றி நீங்கள் எப்பொழுதாவது சிந்தித்துப் பார்த்தது உண்டா?

இந்திய அரசாங்கத்தின் சார்பில், அப்போது பதவியில் இருந்த வைஸ்ராய்க்கும், காங்கிரஸின் சார்பில் எனக்குமிடையே 1931 மார்ச்சு 5-ஆம் தேதி ஏற்பட்ட சமரச ஒப்பந்தத்தில் சட்டமறுப்புக் கொள்கை மறைமுகமாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது என்பதை நான் திரும்பவும் கூறுகிறேன். அந்த ஒப்பந்தம் செய்து கொள்ளும் எண்ணம் ஏற்படுவதற்கு முன்பே முக்கியமான காங்கிரஸ்காரர்கள் விடுதலை செய்யப்பட்டார்கள் என்பதை நீங்கள் அறிவீர்கள் என்றே நம்புகிறேன். அந்த ஒப்பந்தத்தின் படி காங்கிரஸ்காரர்களுக்குச் சில ஈடுகளும் செய்து கொடுக்கப்பட்டன. சில விஷயங்களை அரசாங்கம் நிறைவேற்றிவைக்கும் என்ற நிபந்தனையின் பேரிலேயே சட்டமறுப்பு கைவிடப்பட்டது. உண்மையில், குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் சட்டமறுப்பு நியாயமானது என்பதை ஏற்றுக் கொண்டதாகவே அது ஆகிறது என்பது என் கருத்து. ஆகையால், சட்டமறுப்பை உங்கள் அரசாங்கம் "சட்ட சம்மதமானது என்று எந்தச் சந்தர்ப்பத்திலும் ஏற்றுக் கொள்ளுவதற்கில்லை" என்று நீங்கள் கூறுவது விசித்திரமாகவே தோன்றுகிறது. "சாத்விக எதிர்ப்பு" என்ற பெயரில் அது சட்ட சம்மதமானது என்று பிரிட்டிஷ் அரசாங்கமும் ஏற்றுக் கொண்டிருப்பதையும் நீங்கள் கவனிக்கவில்லை.

கடைசியாக, என் கடிதங்களில் ஒன்றில், கலப்பற்ற அகிம்சையைப் பின்பற்றி நடந்துவருகிறேன் என்று நான் கூறியிருப்பதற்கு முற்றிலும் முரண்பாடான பொருளை நீங்கள் காண்கிறீர்கள். ஏனெனில், என் கடிதத்திற்கு நீங்கள் எழுதியிருக்கும் பதிலில், "நீங்கள் கூற முன்வந்திருக்கும் கருத்தை ஏற்றுக் கொள்ளுவதாக இருந்தால், சமாதானத்தையும் ஒழுங்கையும் காப்பாற்ற வேண்டிய பொறுப்பை வகிக்க இந்த நாட்டின் அங்கீகாரத்தைப் பெற்றுள்ள அரசாங்கம், பகிரங்கமான கலகம் என்று நீங்களே விவரிக்கும் சதிகாரப் புரட்சி இயக்கங்களை எந்த ஆட்சேபமுமின்றி அனுமதித்துவிட வேண்டும் என்றாகிறது. பலாத்காரத்திற்கான ஏற்பாடுகளை அனுமதித்து, போக்குவரத்து வசதிகளுக்கு இடையூறுகளை உண்டாக்கி, ஒரு பாவமும் அறியாதவர்களைத் தாக்கவும், போலீஸ் அதிகாரிகளையும் மற்றவர்களையும் கொல்லவும் தங்கு தடையின்றி அனுமதித்துக் கொண்டிருக்க வேண்டும் என்றாகிறது" என்று கூறியிருக்கிறீர்கள். இத்தகைய

காரியங்களை அனுமதிக்கவேண்டும் என நான் கேட்கக் கூடியவன் என்று என்னை நீங்கள் நினைப்பதாக இருந்தால், நான் உங்களுடைய விசித்திரமான நண்பனாகவே இருக்கவேண்டும்!

எனக்கு இருப்பதாகச் சொல்லப்படும் கருத்துக்கள், நான் கூறியதாகச் சொல்லப்படுபவை ஆகியவை பற்றி விரிவான பதில் சொல்ல நான் முயற்சிக்கவில்லை. அப்படி பதில் சொல்லிக் கொண்டிருப்பதற்கு இது இடமும் அல்ல, காலமும் அன்று. உடனே பதில் சொல்லியாக வேண்டும் என்று என் மனத்தில் தோன்றியவற்றிற்கு மாத்திரமே பதில் சொல்லியிருக்கிறேன். எனக்கு நானே மேற்கொள்ளத் தீர்மானித்திருக்கும் சோதனையி லிருந்து நான் தப்பித்துக் கொள்ளுவதற்கு நீங்கள் எனக்குக் கொஞ்சமும் இடம் வைக்கவில்லை. அக்காரியத்தை, சாத்திய மானவரை மிகத் தெளிவான மனச்சாட்சியுடன் 9-ஆம் தேதி நான் ஆரம்பிக்கிறேன். "அதை, அரசியல் கபட தந்திர முறை" என்று நீங்கள் வர்ணித்திருந்தபோதிலும், என்னைப் பொறுத்தவரையில், உங்களிடமிருந்து நான் பெற முடியாமற் போய்விட்ட நீதியை, மகோன்னதமான ஆண்டவன் நீதி மன்றத்தினிடம் முறையிட்டுக் கொள்ளுவதற்காகவே அதை ஆரம்பிக்கிறேன். இந்த தெய்விக சோதனைக்குப் பிறகு நான் உயிரோடு இராமற் போவேனாயின், நான் நிரபராதி என்ற முழு நம்பிக்கையுடன் இறுதித் தீர்ப்புக் கூறும் பீடத்திற்கு நான் போவேன். சர்வ வல்லமையுள்ள அரசாங் கத்தின் பிரதிநிதி என்ற வகையில் உங்களைப்பற்றியும், தன் நாட்டிற்கும் அதன் மூலம் மனித வர்க்கத்திற்கும் சேவை செய்ய முயன்ற சாதாரண மனிதன் என்ற வகையில் என்னைப் பற்றியும் வருங்காலமே தீர்ப்புக் கூறும்.

என் முந்திய கடிதத்தை அவசரத்தில் எழுதினேன். ஆகை யால் அதில் ஒரு முக்கியமான பகுதி கடைசியில் தனியாகச் சேர்க்கப்பட்டிருந்தது. மகாதேவ தேசாயின் கடிதத்தின் நகல் ஒன்றை இத்துடன் வைத்திருக்கிறேன். பின்னால் சேர்க்கப் பட்டிருந்த பகுதி, இக்கடிதத்தில் அதற்கு உரிய இடத்தில் சேர்க் கப்பட்டிருப்பதை நீங்கள் காணலாம்.

உங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

(இக்கடிதத்துடன் காந்தி அடக்கம் செய்து அனுப்பியிருந்த கடிதம் இங்கே கொடுக்கப்படவில்லை. முன்னால் 74-ஆம் பக்கத்தில் வெளியாகி யிருக்கும் 26-ஆம் கடிதத்தின் நகலையே காந்திஜி செ. 30 கடிதத்துடன் அடக் கம் செய்திருந்தார். ஆனால், இந்த நகலுக்கும் அசல் கடிதத்திற்கும் ஒரே ஒரு வேற்றுமைதான். அதாவது, கடிதத்தின் கடைசியில் சேர்க்கப்பட்டிருக்கும் பின் குறிப்பு நகலில் மூன்றாவது பாராவாகச் சேர்க்கப்பட்டிருப்பதே. "காங் கிரஸ், தன்னுடைய ஆகஸ்டு தீர்மானத்தின் மூலம்" என்று ஆரம்பமாகி, "ஸ்ரீமதி சரோஜினி தேவியைத் தவிர, காரியக் கமிட்டி உறுப்பினர்கள் வேறு

யாரும் என்னுடன் இல்லாத நிலையில், நான் இப்பொழுது தனியாக இருந்து வருகிறேன். ஆகையால், அவர்களுடைய இப்போதைய மன நிலை என்ன என்பது எனக்குத் தெரியாது. எனினும், கமிட்டி தனது கருத்தை இப்பொழுது மாற்றிக் கொண்டிருப்பதற்கில்லை" என்று முடியும் வரையில் 26-ஆவது கடிதத்தின் பின் குறிப்பாகக் கொடுக்கப்பட்டுளது.)

# 31

(தபால் மூலம் கிடைத்தது)

**அந்தரங்கமானது**

உள்துறை இலாகா,
புதுடில்லி,
7—2—1943

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

சில சந்தர்ப்பங்களை முன்னிட்டு, நீங்கள் 21-நாள் உண்ணு விரதத்தை மேற்கொள்ள முடிவு செய்திருப்பதாகத் தமக்கு அறிவித்திருக்கிறீர்கள் என்று மே. த. வைஸ்ராய் இந்திய அரசாங்கத்திற்குத் தெரிவித்திருக்கிறார். உங்களுடைய இந்த முடிவைக் குறித்து அரசாங்கம் தீர கவனித்தது. தாங்கள் இப்பொழுது கொண்டிருக்கும் நோக்கத்தைக் கைவிடவில்லையாயின், அரசாங்கம் அவ்விஷயமாக என்ன முடிவுக்கு வந்திருக்கிறது என்பதை ஓர் அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதன் பிரதி ஒன்று இத்துடன் அடக்கம் செய்யப்பட்டிருக்கிறது. சீக்கிரத்தில் இந்த அறிக்கை பத்திரிகைகளுக்கு வெளியிடப்படும்.

2. நீங்கள் உண்ணுவிரதம் இருப்பதைப் பார்த்துக் கொண்டிருக்க அரசாங்கம் கொஞ்சமும் விரும்பவில்லை. இதை அவர்களுடைய அறிக்கையிலிருந்து நீங்கள் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். உங்களுக்கு ஒரு விஷயத்தை அறிவிக்கும்படியும் உத்தரவிடப்பட்டிருக்கிறேன். அறிக்கை தெளிவாகக் காட்டுவதைப் போன்று, உங்கள் எண்ணத்தில் நீங்கள் பிடிவாதமாக இருப்பீர்களாயின், அந்த உண்ணுவிரதத்திற்காக, அது ஆரம்பமாவதிலிருந்து முடியும் வரையில், உங்களை விடுதலை செய்து வைப்பது என்றும் அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது. உங்கள் உணணுவிரத காலத்தில் விரும்பும் இடத்திற்கு நீங்கள் போவதிலும் அரசாங்கத்திற்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை. ஆகா கான் அரண்மனைக்கு வெளியில் நீங்கள் தங்குவதற்கான இடவசதிக்கு ஏற்பாடு செய்துகொள்ள உங்களால் முடியும் என்றும் அரசாங்கம் நம்புகிறது.

3. இந்த ஏற்பாட்டைப் பயன்படுத்திக் கொள்ள ஏதாவது காரணங்களை முன்னிட்டு உங்களால் முடியவில்லையானால், உங்களுடைய அந்த முடிவுக்காக சர்க்கார் மிகவும் வருந்துவார்கள். ஆயினும், இதற்கு ஏற்றவகையில், இப்பொழுது உங்களுக்கு அனுப்பப்பட்டிருக்கும் அறிக்கை நகலில் சில மாறுதல்களைச் செய்து அரசாங்கம் வெளியிடும். ஆனால் அரசாங்கம் மனப்பூர்வமாகவும் கவலையுடனும் ஒரு விஷயத்தை மீண்டும் தெரிவித்துக் கொள்ளவிரும்புகிறது. அரசாங்கம் இவ்விஷயத்தில் எவ்வளவு முக்கியத்துவம் அளித்திருக்கிறதோ அதே முக்கியத்துவத்தை நீங்களும் அளித்து, இப்பொழுது நீங்கள் தற்காலிகமாகச் செய்திருக்கும் முடிவைத் தொடர்ந்து வற்புறுத்தமாட்டீர்கள் என்றே நம்புகிறது. அப்படிச் செய்வீர்களாயின், அரசாங்கம் எந்த விதமான அறிக்கையையும் வெளியிட வேண்டிய அவசியம் ஏற்படாது.

உங்கள் உண்மையுள்ள,

ஆர். டாட்டன்ஹாம்.

குறிப்பு: பிப்ரவரி 8.

இவ்விஷயம் அவசரமானதாக இருப்பதை முன்னிட்டு இக் கடிதத்தின் விவரத்தை உங்களுக்கு இன்றே தெரிவிப்பதற்காக நேற்று கவர்னரின் காரியதரிசிக்கு தந்தி மூலம் இது அறிவிக்கப் பட்டது.

## 32

# அரசாங்க அறிக்கையின் நகல்

(அரசாங்கம் வெளியிட உத்தேசித்த அறிக்கையின் நகலும் முன்கூட்டியே காந்திஜிக்கு அனுப்பப்பட்டது. அது கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:)

பிப்ரவரி 9–ஆம் தேதியிலிருந்து மூன்று வார காலத்திற்கு உண்ணாவிரதம் இருக்கப் போவதாக ஸ்ரீ காந்தி, மே. த. வைஸ்ராய்க்கு அறிவித்திருக்கிறார். சக்திக்கு ஏற்றதான உண்ணாவிரதம் அது. சாகும் வரையில் உண்ணாவிரதமிருப்பதில்லை என்பதும் இச் சோதனையைச் சமாளித்துப் பிழைத்திருக்க வேண்டும் என்பதுமே ஸ்ரீ காந்தியின் விருப்பமாகையால், அருந்துவதற்கு ஏற்றதாக இருக்கும்படி செய்வதற்காக தண்ணீரில் எலுமிச்சைப் பழ ரசத்தைக் கலந்து கொள்ளுவது என்றும் இருக்கிறார். அரசியல் காரியங்களுக்காக இந்த ஆயுதத்தை உபயோகிப்பதைக் குறித்து இந்திய அரசாங்கம் வருந்துகிறது. இதற்கு

எந்தவிதமான நியாயமும் இல்லை என்றே அரசாங்கம் கருது கிறது. பலவந்தப்படுத்தும் அம்சமும் இதில் அடங்கியிருக்கிறது என்பதை முன்பு ஸ்ரீ காந்தியும் ஒப்புக்கொண்டிருக்கிறார். இந்தச் சமயத்தில் இந்த ஆயுதத்தை உபயோகிப்பது அவசியம் என்று ஸ்ரீ காந்தி முடிவு செய்திருப்பதைக் குறித்தும், அவரும், காங் கிரஸ் கட்சியிலுள்ள அவருடைய சக ஊழியர்களும் ஆரம்பித் துள்ள இயக்கத்தின் சம்பந்தமாக அரசாங்கம் சொல்லியிருப்ப தையும் செய்திருப்பதையும் இதற்குக் காரணமாக அவர் கூறுவ தைக் குறித்தும் இந்திய அரசாங்கம் தனது வருத்தத்தைத்தான் தெரிவித்துக் கொள்ள முடியும். இந்த உண்ணாவிரதம், அரசாங் கத்தைப் பொறுத்தவரையில், தனது கொள்கையில் எந்தவித மாறுதலையும் உண்டாக்கிவிட இடம் கொடுக்கும் நோக்கம் இந் திய அரசாங்கத்திற்கு இல்லை. அத்துடன் இந்த உண்ணாவிரதத்தி னால் ஸ்ரீ காந்தியின் தேகநிலையில் ஏற்படும் விளைவுகளுக்கும் அர சாங்கம் பொறுப்பாளியல்ல. ஸ்ரீ காந்தி உண்ணாவிரதம் இருக்கா மல் தடுத்துவிட அரசாங்கத்தினால் முடியாது. உண்ணாவிரதம் இருக்க அவர் முடிவு செய்துவிடுவாரானால், அதிலிருக்கும் அபா யம் காரணமாக தமது சொந்தப் பொறுப்பில், சொந்த ஏற்பாடு களுடனேயே அதை அவர் ஆரம்பிக்க வேண்டும். ஆகையால் உண்ணாவிரதத்திற்காக, உண்ணாவிரதம் இருக்கும் காலம் வரை யில் அவரை விடுதலை செய்வது என்று அரசாங்கம் முடிவு செய் திருக்கிறது. அவருடன் இருப்பவர்களில் யாராவது அவருடன் செல்ல விரும்புவார்களானால் அவர்களும் விடுதலை செய்யப்படு வார்கள்.

சென்ற ஆகஸ்டில் ஆரம்பிக்கப்பட்ட இயக்கம், அதன் வளர்ச்சி ஆகியவைகளைக் குறித்தும், அதைச் சமாளிக்க அரசாங் கம் எடுத்துக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்ட நடவடிக் கைகளைக் குறித்தும் விரிவான அறிக்கை ஒன்றை இந்திய அர சாங்கம் சீக்கிரத்திலேயே வெளியிடுவதாக இருக்கிறது. ஆனால், சென்ற சில மாதங்களில் நடந்திருக்கும் சம்பவங்களைக் குறித்து சுருக்கமாகக் கூறுவதற்கு ஏற்ற சந்தர்ப்பம் இது என்றும் அர சாங்கம் கருதுகிறது.

ஸ்ரீ காந்தியும் காங்கிரஸ் கட்சியும், "இந்தியாவிலிருந்து வெளியேறு" என்ற கோரிக்கையைக் கொண்டு வந்ததனால் ஏற் பட்ட விளைவுகளுக்குத் தாங்கள் பொறுப்பாளிகள் அல்ல என்று ஸ்ரீ காந்தி, வைஸ்ராயுடன் நடத்திய கடிதப் போக்குவரத்தில் மறுத்திருக்கிறார். பரிசீலனை செய்ய முற்பட்டால் இந்த வாதம் நிற்க முடியாது.

இந்த இயக்கம் ஆரம்பிக்கப்படுவதற்கு முன்னால் தாமே வெளியிட்ட அறிக்கையில் ஸ்ரீ காந்தி, இப்பொழுது இருக்கும் ஒழுங்கிற்கு பதிலாக அராஜகம் ஏற்படும் என்பதை அறிந்தேயிருந் தார். "இது முடிவு வரையில் நடத்தியாக வேண்டிய போர். இப்போரில் எவ்வளவு பெரிய ஆபத்து நேர்ந்தாலும் நான் தயங் கக் கூடாது" என்றும் அவர் கூறியிருக்கிறார்.

வைஸ்ராயைச் சந்திக்க தாம் விரும்புவதாக ஸ்ரீ காந்தி கூறியது பிரமாதப்படுத்தப்படுகிறது. ஆகையால் ஒரு விஷயத்தைக் குறிப்பிட வேண்டியது அவசியமாகிறது. காரியக் கமிட்டியின் தீர்மானம் நிறைவேறிய பிறகு தாம் பத்திரிகைகளுக்கு வெளியிட்ட அறிக்கையில் ஸ்ரீ காந்தி, வாபஸாவது அல்லது சமரசம் பேசுவது என்பதற்கு இடமே இல்லை என்று கூறியிருக்கிறார். இன்னும் ஒரு சந்தர்ப்பம் கொடுத்துப் பார்ப்பது என்ற பேச்சிற்கும் இடம் இல்லை என்று அவர் குறிப்பிட்டிருக்கிறார். சாத்தியமான வரையில் அதிக வேகமாகவும், சீக்கிரத்திலும் முடிக்க வேண்டிய பகிரங்கப் புரட்சி இது என்றும் கூறியுள்ளார். "செய், இல்லாவிட்டால் செத்துவிடு" என்பது அவர் கடைசியாக விடுத்த செய்தியாகும். சட்டப்படி அமைந்திருக்கும் அரசாங்கத்திற்கு எதிராகவும், நாட்டின் வாழ்க்கை எந்த ஸ்தாபனங்களின் மூலமும் சேவையாளரைக் கொண்டும் நடத்தப்படுகிறதோ அவைகளின் மீதும், அசாதாரணமான சிரமமும் கஷ்டங்களும் இருக்கும் சமயத்தில், ஜப்பானிய ஆக்கிரமிப்பினால் இந்தியாவுக்குப் பேராபத்து ஏற்பட்டிருக்கும் நேரத்திலும் ஆரம்பிக்கப்பட்டிருக்கும் இப்போராட்டம் சம்பந்தமாக காங்கிரஸ் மேலிடம் கொண்டிருக்கும் நோக்கம் இன்னது என்பது ஸ்ரீ காந்தியுடன் நெருங்கிய தொடர்புள்ளவர்கள் பேசியவற்றிலிருந்து நன்றாகத் தெளிவாகிறது.

என்ன செய்ய வேண்டும் என்பதைக் குறித்து பல ஸ்தாபனங்களும் வெளியிட்டிருக்கும் யோசனைகளடங்கிய துண்டுப் பிரசுரங்கள், இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் தாராளமாக வினியோகிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றின் சாட்சியத்திலிருந்து, அவை தங்களால் வெளியிடப்பட்டவை அல்ல என்றோ, தங்கள் அங்கீகாரம் பெற்றவை அல்ல என்றோ மறுத்துவிட முடியாது. அரசாங்க நிர்வாகம் ஸ்தம்பித்துவிடும்படிச் செய்வதற்கு என்னென்ன முறைகள் அனுசரிக்கப்பட வேண்டும் என்பதற்கான திட்டவட்டமான அறிவிப்புகள் அவற்றில் அடங்கியிருக்கின்றன. ஆந்திர மாகாண காங்கிரஸ் கமிட்டியிலிருந்து ஜூலை 29-ஆம் தேதி வெளியிடப்பட்டிருக்கும் ஒரு சுற்றறிக்கை, இதற்கு ஓர் உதாரணம் ஆகும். நாடு முழுவதிலும், ஒன்றுக்கொன்று தொலை தூரத்திலிருக்கும் பகுதிகளிலும் ரெயில் பாதைகளையும் மற்ற போக்குவரத்து சாதனங்களையும் தாக்குவதற்கு, விசேஷமான கருவிகளும் சிறந்த நுட்ப ஞானமும் தேவைப்படுவதாக இருக்கும் முறைகள் ஒரே மாதிரியாக உபயோகப்பட்டிருப்பதும் கவனிக்கத் தக்கதாகும். ரெயில்வே ஸ்டேஷன்களிலுள்ள கண்ட்ரோல் அறைகளிலும் கருவிகளிலும் முக்கியமாக அவர்கள் கவனம் செலுத்தியிருக்கிறார்கள். தந்தி, டெலிபோன் கம்பிகள் நாசப்படுத்தப்பட்டிருக்கின்றன. இவையெல்லாம் செய்யப்பட்டிருக்கும் விதத்திலிருந்து, மிகவும் ஜாக்கிரதையாகத் திட்டமிட்டு, மிகவும் தெளிவாகத் தெரிந்தவர்களைக் கொண்டு அவையெல்லாம் செய்யப்பட்டிருக்கின்றன என்பது வெளியாகிறது. இத்தகைய புரட்சி நடவடிக்கைளெல்லாம் காங்

கிரஸ் பிரசாரத்தினால் ஏற்பட்டவை அல்ல என்றும், ஸ்ரீ காந்தியும் காங்கிரஸ் தலைவர்களும் கைது செய்யப்பட்டதால் ஏற்பட்டவை என்றுமே கருதவேண்டும் என்றால், இதிலிருந்து ஒருகேள்வி எழுகிறது. இந்த பலாத்கார, நாச வேலைகளில் ஈடுபட்ட பதினாயிரக் கணக்கானவர்கள், பொதுமக்களில் வேறு எந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள் என்பதே அக் கேள்வி. காங்கிரஸ்காரர்கள் இதற்குப் பொறுப்பாளிகள் அல்ல என்று சொல்லப்படுமானால், காங்கிரஸ்காரர்களல்லாதவர்கள் மீது இதற்குப் பொறுப்பைப் போடுவது அசாதாரணமானது என்பதைத் தவிர வேறு எதுவும் கூறுவதற்கில்லை.

காங்கிரஸ் கட்சியினிடத்தில் பக்தியுள்ளவர்கள் அகிம்சை முறையிலிருந்து சிறிதும் வழுவாமல் நடந்து கொண்டிருக்கிறார்கள், காங்கிரஸ் கட்சியில் சேராமல் வெளியில் இருப்பவர்களே, தாங்கள் பின்பற்றாத இயக்கத்தின் தலைவர்கள் கைதியானதைக் குறித்து தங்கள் வெறுப்பைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று நாடு நம்பவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறார்கள்! காங்கிரஸ்காரர்கள்தான் பலாத்காரத்தைத் தூண்டிவிடும் வேலையில் திரும்பத் திரும்ப ஈடுபட்டு வருகிறார்கள் அல்லது மோசமான குழப்பங்களை உண்டாக்கிவரும் காங்கிரஸ் நடவடிக்கைகளை நிறைவேற்றிவருகிறார்கள் என்ற உண்மை ஒன்றே, அந்த வாதத்திற்கு நேரடியான சரியான பதிலாகும்.

காங்கிரஸ் கட்சிக்கு வெளியிலுள்ள அரசியல் கட்சிகளுக்கும் கோஷ்டிகளுக்கும் இந்த விஷயத்தில் எந்த விதமான மயக்கமும் இல்லை. திட்டமான வகையில் இந்த இயக்கத்தில் கலந்துகொள்ளாமல் அவை ஒதுங்கி இருப்பதோடு, அதனால் ஏற்பட்டிருக்கும் பலாத்காரத்தையும் அவை கண்டித்தும் இருப்பதிலிருந்தே இதை நன்கு அறியலாம். முக்கியமாக முஸ்லிம் லீக், காங்கிரஸ் கட்சியிலிருப்பவர்கள் அனுசரித்துக்கொண்டு போகும் கொள்கையின் தன்மையையும் நோக்கத்தையும் பல தடவைகளில் வற்புறுத்திக் கூறியிருக்கிறது. நாட்டின் அரசாங்கத்தின் மீது முழு ஆதிக்கமும் காங்கிரசுக்கே இருக்க வேண்டும் என்பது தான் "வெளியேறிவிடு" என்ற முழக்கத்தின் உண்மையான பொருள்; பொதுஜன சட்டமறுப்பு, அராஜகத்திலும் ஏராளமான பொருட் சேதத்திலும் உயிர்ச் சேதத்திலும் முடிந்திருக்கிறது என்ற கருத்தை முஸ்லிம் லீக் காரியக்கமிட்டி ஆகஸ்டு 20-ஆம் தேதியே தெரிவித்திருக்கிறது; பிறகும் பன்முறை இதை வற்புறுத்திக் கூறியிருக்கிறது. நாட்டின் அரசியல் வாழ்விலுள்ள மற்றவர்களும் இதேபோன்ற அபிப்பிராயத்தையே தெரிவித்திருக்கிறார்கள். அப்படியிருக்க, ஏற்பட்டிருக்கும் பலாத்காரம் தங்களுடைய கொள்கையினாலோ வேலைத் திட்டத்தினாலோ அல்ல என்று காங்கிரஸ் கட்சி சொல்லுவதாக இருந்தால், ஏராளமான சாட்சியங்களுக்கு எதிராகவே அவர்களுடைய கூற்று இருக்கிறது என்று ஆகும்.

வைஸ்ராய்க்கு ஸ்ரீ காந்தி எழுதியிருக்கும் கடிதத்தில், பொறுப்பையெல்லாம் இந்திய சர்க்கார் மீதே சுமத்திவிட முற்பட்டிருக்கிறார். அப்படிக் கூறுவது சரியென்று ஏற்றுக் கொள்ள இந்திய அரசாங்கம் திட்டவட்டமாக மறுக்கிறது. இப்போது உண்டாக்கப்பட்டிருக்கும் நிலைமையினால் உணவுப் பிரச்னை அதிக மோசமாகியிருக்கிறது. எதிரியை முறியடித்தாக வேண்டிய முக்கியமான பணியில் மக்களின் சக்தியெல்லாம் ஒன்றுதிரட்டப்பட வேண்டியிருக்கும் இச்சமயத்தில், இந்தியா வின் சுதந்திரத்திற்கும், காமன்வெல்துக்கும், உலகுக்கும் ஆபத்தை உண்டாக்கும்வகையில் சென்ற சில மாதங்களாக நிகழ்ந்துவரும் பலாத்காரச் செயல்கள், நாட்டின் அமைதியான வாழ்க்கையையே பாழாக்கியிருக்கின்றன. இதற்கெல்லாம் அர சாங்கமே பொறுப்பு என்று கூறுவது அக்கிரமமாகும்.

## 33

சிறை முகாம்,
*8—2—1943*

அன்புள்ள ஸர் ரிச்சர்டு,

உங்கள் கடிதத்தை மிகவும் கவனமாகப் படித்துப் பார்த் தேன். நான் மேற்கொள்ள உத்தேசித்திருக்கும் உண்ணு விரதத்தை நிறுத்திவிடும்படிச் செய்யக்கூடிய எதுவுமே எனக்கும் வைஸ்ராய்க்கும் நடந்த கடிதப்போக்கு வரத்திலோ அல்லது உங்கள் கடிதத்திலோ இல்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நான் மேற்கொள்ளப் போகும் விரதத்தைத் தடுப்பதோ, நிறுத்திவைப்பதோ எந்த நிபந்தனை களை மேற்கொண்டால் ஆகும் என்பதை வைஸ்ராய்க்கு நான் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறேன்.

என் சௌகரியத்திற்காக தற்காலிகமான விடுதலை எனக்கு அளிக்கப்படுமானால் அது எனக்குத் தேவையில்லை. காவலில் வைக்கப்பட்டவனாகவோ, கைதியாகவோ என் உண்ணு விரதத்தை நான் மேற்கொள்ளுவதே எனக்குப் போதும். என்னை விடுதலை செய்வது அரசாங்கத்தின் சௌகரியத்தை முன்னிட்டு என்று இருக்குமானால், அப்படி விடுதலை அடைய எனக்கு அதிக விருப்பம்தான் என்றாலும், அவர்களுடைய இஷ்டத்திற்கெல்லாம் உடன்பட்டுக்கொண்டிருக்க என்னால் இயலாது. இன்னுமொன்றும் கூறுவேன். உண்ணுவிரதத்தினால் அரசாங்கத்திற்கு இயல்பாக ஏற்படக் கூடிய அசௌகரியத்தைத் தவிர, ஒரு கைதி என்ற முறையில் அரசாங்கத்திற்கு அசௌகரியம் ஏற்படாதவாறு மனித சாத்தியமான எல்லா வகையிலும் முயற்சி செய்வேன்.

நான் மேற்கொள்ள உத்தேசித்திருக்கும் உண்ணுவிரதம், சுதந்திர மானவனுக மேற்கொள்ள திட்டமிடப்படவில்லை. ஏற்கனவே ஏற்பட்ட சந்தர்ப்பங்களைப் போல, சுதந்திரமானவனுக நான் உண்ணுரவிதம் இருக்க வேண்டிய சந்தர்ப்பமும் மீண்டும் ஏற்பட லாம். ஆகையால் நான் விடுதலை செய்யப்படுவேனுயின், மேற் கண்ட கடிதப் போக்குவரத்திற்கிணங்க உண்ணுவிரதம் இருக் காமல், நிலைமையைத் திரும்பவும் புனராலோசனை செய்து என்ன செய்வது என்பதைப் பிறகு முடிவு செய்வேன். போலிக் கார ணங்களைக் கொண்டு விடுதலையாகிவிடவேண்டும் என்ற ஆசை எனக்கு இல்லை. எனக்கு விரோதமாக என்னதான் சொல்லப் பட்டாலும் சரி, எனக்கு வாழ்க்கையை வாழ்வதற்கு உகந்ததாகச் செய்துவரும் எனது சத்திய, அகிம்சை விரதத்தை நான் பொய்த்துப் போகும்படி செய்துவிட முடியாது. என்னை மாத் திரமே திருப்தி செய்து கொள்வதற்காகவாவது நான் இதைக் கூறுகிறேன். இப்பொழுது இருந்துவருவதுபோன்று வெளி இருள் என்னைச் சூழ்ந்து கொண்டிருக்கும் இச்சமயத்தில், எனது நம்பிக் கையைப் பகிரங்கமாக திரும்பத் திரும்பக் கூறிக் கொள்ளுவது எனக்கு நன்மையையே அளிக்கிறது.

இந்தக் கடிதத்தின் மீது அரசாங்கம் அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வரும்படி நான் செய்யக்கூடாது. உங்கள் கடிதம் டெலிபோன் மூலம் அனுப்பப்பட்டிருக்கிறது என்பதை அறி கிறேன். அவசியமாஞல், அரசாங்கத்திற்கும் போதுமான அவ காசம் அளிப்பதற்காக என் உண்ணுவிரதத்தை 10-ஆம் தேதி புதன்கிழமை வரையில் நிறுத்தி வைக்கிறேன்.

அரசாங்கம் வெளியிடுவதாக இருக்கும் அறிக்கையின் நகலை நீங்கள் அனுப்பியிருக்கிறீர்கள். அதுபற்றி நான் எந்தக் கருத்தும் தெரிவிப்பதற்கில்லை. நான் என் கருத்தைத் தெரிவிக்க வேண்டும் என்ருல், அது எனக்கு அநீதி செய்வதாக இருக்கிறது என்றே கூறுவேன். இதில் செய்திருக்கவேண்டிய சரியான காரியம் என்னவெனில், கடிதப் போக்குவரத்து முழுவதையுமே பிரசுரித்து, பொதுமக்கள் தங்களுக்குத் தாங்களே ஒரு முடிவுக்கு வரும்படி விட்டிருக்கவேண்டும்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 34

**அந்தரங்கமானது**

உள்துறை இலாகா,
இந்திய அரசாங்கம்,
புதுடில்லி, 9-2-1943

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

1943 பிப்ரவரி 8-ஆம் தேதி நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. அக்கடிதம் சபையோடு கூடிய கவர்னர் ஜெனரல் முன்பு வைக்கப்பட்டது. நீங்கள் செய்திருக்கும் முடிவை இந்திய அரசாங்கம் மிகுந்த வருத்தத்துடன் கவனித்துளது. முன்பு இருந்தது போலவே இப்பொழுதும் அரசாங்கத்தின் நிலைமை இருந்துவருகிறது. அதாவது, உங்கள் உண்ணாவிரதத்திற்காக, உண்ணாவிரத காலத்திற்கு உங்களை விடுதலை செய்து வைக்க அரசாங்கம் தயாராகவே இருக்கிறது. ஆனால், அதைப் பயன் படுத்திக் கொள்ள நீங்கள் விரும்பவில்லையாயின், சிறையில் வைக்கப்பட்டிருக்கும்போதே நீங்கள் உண்ணாவிரதம் இருப்பீர்களாயின், உங்கள் முழுப் பொறுப்பில் எந்த அபாயத்துக்கும் துணிந்தே அப்படி நீங்கள் செய்வதாக ஆகும். அப்படி உண்ணாவிரதம் இருப்பீர்களானால், அந்தக் காலத்தில் உங்கள் வைத்தியர்களை வைத்துக்கொள்ள உங்களுக்கு உரிமை உண்டு. அக்காலத்தில் அரசாங்கத்தின் அனுமதி பெற்று நண்பர்களும் உங்களை வந்து பார்க்கலாம். உண்ணாவிரதம் இருப்பீர்களாயின், இந்திய அரசாங்கம் வெளியிட விரும்பும் அறிக்கையில் அப்பொழுது அதற்கு ஏற்றவாறு திருத்தங்கள் செய்யப்படும்.

உங்கள் உண்மையுள்ள,
ஆர். டாட்டன்ஹாம்

(இக்கடிதம் 9—2—43-ஆம் தேதி தமக்கு டில்லியிலிருந்து டெலிபோன் மூலம் வந்ததாக பம்பாய் அரசாங்கக் காரியதரிசி ஸ்ரீ இர்வின் காந்திஜிக்கு அறிவித்தார்.)

## 35

[இந்திய அரசாங்கத்தின் சார்பில் 1943 பிப்ரவரி 7-ஆம் தேதி ஸர் டாட்டன்ஹாம் காந்திஜிக்கு எழுதியிருந்த கடிதத்துடன் அரசாங்கம் வெளியிட உத்தேசித்திருக்கும் ஓர் அறிக்கையின் நகலும் வைக்கப்பட்டிருந்தது. காந்திஜி உண்ணாவிரதமிருந்தால் அந்த அறிக்கையை வெளியிடுவதாக இருந்தார்கள். உண்ணாவிரதமிருந்தால் அந்த விரத காலத்தில் அவர் விடுதலை செய்யப்படுவார் என்று அதில் கண்டிருந்தது. ஆனால், உண்ணாவிரத காலத்திற்கென்று விடு

தலையடைய தாம் விரும்பவில்லை என்றும், அந்தச் சலுகை தமக்குத் தேவையில்லை என்றும் காந்திஜி பிப்ரவரி 8-ஆம் தேதி எழுதிய கடிதத்தில் கூறிவிட்டார். அதன்பேரிலேயே தாங்கள் வெளியிடப்போவதாக முன்னால் அனுப்பியிருந்த நகலில் சில மாறுதல்களைச் செய்து அரசாங்கம் ஒரு அறிக்கையை வெளியிட்டது. இந்த மாறுதல்கள், முக்கியமாக, உண்ணாவிரத காலத்தில் விடுதலையாவதை காந்திஜி விரும்பவில்லை என்று குறிப்பிடப்பட்டிருப்பவையேயாகும். ஆகையால், இந்த அறிக்கையில் மாறுதல்கள் செய்யப்பட்டிருக்கும் முதல் பாரா மாத்திரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்றப்படி அந்த அறிக்கையின் விவரம் முழுவதும் 87-ஆம் பக்கத்தில் வெளியாகியுள்ள அறிக்கையில் இருப்பதே தான்.]

''பிப்ரவரி 9-ஆம் தேதியிலிருந்து மூன்று வார காலத்திற்குத் தாம் உண்ணாவிரதம் இருக்கப் போவதாக ஸ்ரீ காந்தி, மே. த. வைஸ்ராய்க்கு அறிவித்திருக்கிறார். சக்திக்கு ஏற்றதான உண்ணாவிரதம் அது. சாகும் வரையில் உண்ணாவிரதம் இருப்பதில்லை என்பதும், இச்சோதனையைச் சமாளித்து பிழைத்திருக்க வேண்டும் என்பதுமே ஸ்ரீ காந்தியின் விருப்பமாகையால், அருந்துவதற்கு ஏற்றதாக இருக்கும்படி செய்வதற்காக தண்ணீரில் எலுமிச்சைப் பழ ரசத்தைக் கலந்து கொள்ளுவது என்றும் இருக்கிறார். அரசியல் காரியங்களுக்காக இந்த ஆயுதத்தை உபயோகிப்பதைக் குறித்து இந்திய அரசாங்கம் வருந்துகிறது. இதற்கு எந்தவிதமான நியாயமும் இல்லை என்றே அரசாங்கம் கருதுகிறது. பலவந்தப்படுத்தும் அம்சமும் இதில் அடங்கியிருக்கிறது என்பதை முன்பு ஸ்ரீ காந்தியும் ஒப்புக்கொண்டிருக்கிறார். இந்தச் சமயத்தில் இந்த ஆயுதத்தை உபயோகிப்பது அவசியம் என்று ஸ்ரீ காந்தி முடிவு செய்திருப்பதைக் குறித்தும், அவரும் காங்கிரஸ் கட்சியிலுள்ள அவருடைய சக ஊழியர்களும் ஆரம்பித்துள்ள இயக்கத்தின் சம்பந்தமாக அரசாங்கம் சொல்லியிருப்பதையும், செய்திருப்பதையும் இதற்குக் காரணமாக அவர் கூறுவதைக் குறித்தும் இந்திய அரசாங்கம் தனது வருத்தத்தைத்தான் தெரிவித்துக் கொள்ள முடியும். இந்த உண்ணாவிரதம், அரசாங்கத்தைப் பொறுத்த வரையில், தனது கொள்கையில் எந்தவித மாறுதலையும் உண்டாக்கிவிட இடம் கொடுக்கும் நோக்கம் இந்திய அரசாங்கத்திற்கு இல்லை. அத்துடன், இந்த உண்ணாவிரதத்தினால் ஸ்ரீ காந்தியின் தேக நிலையில் ஏற்படும் எந்த விளைவுகளுக்கும் அரசாங்கம் பொறுப்பாளி அல்ல. உண்ணாவிரதத்தை மேற்கொள்ளாமல் ஸ்ரீ காந்தியைத் தடுத்துவிட முடியாது என்றாலும், உண்ணாவிரதம் இருப்பது என்றே அவர் முடிவு செய்துவிடுவாரானால், சுதந்திரமானவராகவும், தமது சொந்த ஏற்பாடுகளின் மூலமும் அதை அவர் மேற்கொள்ளட்டும் என்று அரசாங்கம் விரும்புகிறது. இந்த உண்ணாவிரதத்திற்கும், அதன் விளைவுகளுக்கும் முழுப் பொறுப்பும் அவருடையதே என்பதை இதனால் தெளிவுபடுத்திவிடவும் அரசாங்கம் விரும்புகிறது. அர

சாங்கத்திற்கு அவர் அறிவித்திருக்கிறபடி அவர் உண்ணாவிரதம் இருக்கப் போவதாக இருந்தால், உண்ணாவிரதம் இருக்கவும் உண்ணாவிரத காலத்திற்கும் அவர் விடுதலை செய்யப்படுவார் என்று ஸ்ரீ காந்திக்கு அரசாங்கம் அறிவித்தது. ஸ்ரீகாந்தியுடன் இப்பொழுது இருந்துவரும் அவருடைய கோஷ்டியினரில் எவராவது அவருடன் செல்ல விரும்பினால், அவர்களும் விடுதலை செய்யப்படுவார்கள் என்றும் அறிவிக்கப்பட்டது. இதற்கு ஸ்ரீ காந்தி எழுதியிருக்கும் பதிலில், தாம் விடுதலை செய்யப்பட்டால், தாம் உத்தேசித்திருக்கும் உண்ணாவிரதத்தைக் கைவிட்டுவிடத் தயார் என்றும், இதைச் செய்யத் தவறினால் பாதுகாப்புக் கைதியாகவே உண்ணாவிரதம் இருக்கப்போவதாகவும் கூறியிருக்கிறார். நிபந்தனையின்றி விடுதலை செய்தால்தான் அவர் உண்ணாவிரதம் இருக்காமல் தடுக்கமுடியும் என்பது இதிலிருந்து தெளிவாகிறது. இதற்கு உடன்பட இந்திய அரசாங்கம் தயாராயில்லை. முன்னால் இருந்ததைப் போன்றே அரசாங்கத்தின் நிலைமை இப்பொழுதும் இருந்து வருகிறது. அதாவது, உண்ணாவிரதம் இருப்பதற்காக உண்ணாவிரத காலத்திற்கு அவரை விடுதலை செய்து வைக்க அரசாங்கம் தயாராயிருக்கிறது. ஆனால், இந்த உண்மையைப் பயன்படுத்திக்கொள்ள ஸ்ரீ காந்தி தயாராயில்லையென்றால், சிறை வைக்கப்பட்டிருக்கும்போதே உண்ணாவிரதம் இருக்க அவர் முடிவு செய்துவிடுவாரானால் அவர் தமது சொந்தப் பொறுப்பிலேயே, சொந்த முறையில் அபாயத்துக்குத் துணிந்தே அவ்விதம் செய்பவராவார். அப்படி உண்ணாவிரதம் இருந்தால், அவர் தமது சொந்த வைத்தியர்களுக்கும் ஏற்பாடு செய்துகொள்ளலாம். அந்தக் காலத்தில் அரசாங்கத்தின் அனுமதி பெற்றுப் பார்க்க வரும் நண்பர்களையும் அவர் சந்தித்துப் பேசலாம்."

## 36

சிறைமுகாம்,
*27—9—1943*

அன்புள்ள லார்டு லின்லித்கோ,

நீங்கள் இந்தியாவிலிருந்து புறப்படப்போகும் இந்தச் சமயத்தில் உங்களுக்கு ஒரு வார்த்தை தெரிவிக்க விரும்புகிறேன்.

நான் அறிந்து கொள்ளும் கௌரவம் பெற்ற மிகப் பெரிய அதிகாரிகளுள் உங்களைப் போன்று வேறு யாரும் எனக்கு அவ்வளவு வருத்தத்திற்குக் காரணமாக இருந்ததில்லை. பொய்மைக்கு, அதிலும் ஒரு சமயம் உங்களுடைய நண்பன் என்று நீங்கள் கருதியவர் விஷயத்தில் பொய்மைக்கு நீங்கள் இடம் கொடுத்திருப்பதை எண்ணும்போது என் மனம் துடிக்கின்றது. ஒரு பெரிய நாட்டின் பிரதிநிதியாகிய நீங்கள் துக்ககரமான ஒரு

தவறைச் செய்யும்படி தூண்டப்பட்டீர்கள் என்பதை உங்கள் உள்ளத்தில் கடவுள் என்றைக்காவது உணர்த்துவார் என்று நான் நம்புவதோடு, பிரார்த்தனையும் செய்கிறேன்.

என் நல்வாழ்த்துக்களுடன்,

உங்கள் நண்பன்,
மோ. க. காந்தி

## 37

**சொந்தப் பார்வைக்கு**

வைஸ்ராய் முகாம், இந்தியா,
(சிம்லா) 7—10—1943

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

செப்டம்பர் 27–ஆம் தேதி நீங்கள் எழுதிய கடிதம் எனக்குக் கிடைத்தது. நான் செய்த எந்தக் காரியங்களோ அல்லது பேச்சுகளோ தாங்கள் விவரிப்பதைப் போன்ற உணர்ச்சியை உங்களுக்கு உண்டாக்கியிருப்பதைக் குறித்து உண்மையில் வருந்துகிறேன். ஆனால், சம்பந்தப்பட்ட சம்பவங்களைப் பற்றி நீங்கள் கூறும் வியாக்கியானத்தை நான் சிறிதும் ஏற்றுக்கொள்ள முடியாதவனாக இருக்கிறேன் என்பதை, என்னால் முடிந்த அளவு சாந்தமாக எடுத்துக்கூற நான் அனுமதிக்கப்படவே வேண்டும்.

காலத்திற்கும் சிந்தனைக்கும் இருக்கும் திருத்தும் சக்தி சம்பந்தப்பட்டவரையில், அது யாருக்கும், எங்கும், எக்காலத்தும் உண்மையாகும். புத்திசாலியான யாரும் அதைநிராகரித்துவிட முடியாது.

உங்கள் உண்மையுள்ள,
லின்லித்கோ.

(இக்கடிதம் 15-10-1943-இல் காந்திஜிக்குக் கிடைத்தது.)

பகுதி மூன்று

# உண்ணாவிரதத்தின் போது

## 38

சிறைமுகாம்,
12-2-1943

அன்புள்ள கர்னல் பண்டாரி

நான் தெரிவித்துக்கொள்ள வேண்டிய விருப்பம் ஏதாவது இருந்தால், அவற்றை அவசரமாகத் தங்களுக்குத் தெரிவிக்கும்படி அரசாங்கம் உங்களுக்கு அறிவித்திருக்கிறது என்று என்னிடம் கூறினீர்கள். நண்பர்கள் பார்க்க வருவதை ஒழுங்குபடுத்துவது சம்பந்தமாக அரசாங்கம் அறிவித்திருக்கும் விவரங்கள் அடங்கிய பிரதியையும் எனக்குக் கொடுத்தீர்கள். பார்க்க வருகிறவர்கள் சம்பந்தமாக நான் கூறிக்கொள்ள விரும்புவது இதுதான்:

1. இதை என் முடிவுக்கு விட்டுவிடுவது என்பது நியாயமே அல்ல. இப்பொழுது என் மனம் இருக்கும் நிலையில் பார்க்க வருகிறவர்கள் சம்பந்தமாக நானாக எந்த முடிவுக்கும் வருவதற்கில்லை. ஆகையால் பார்க்க வருகிறவர்களை நான் பார்க்கலாம் என்று அரசாங்கம் விரும்பினால், பொது மக்களில் முக்கியமாக என்னைப் பார்க்க விரும்புவோர் அனுமதிக்கப்படுவார்கள் என்று பொதுமக்களுக்கு அவர்கள் அறிவிக்க வேண்டும். அவர்களின் பெயர்களை எனக்கு அறிவிக்க வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், என்னைப் பார்க்க விரும்பும் எந்த நண்பரின் விருப்பத்தையும் நான் தடுக்கமாட்டேன். என் குழந்தைகளும் மற்ற உறவினர்களும், ஆசிரமத்தைச் சேர்ந்தவர்களும், எனது பல நடவடிக்கைகளிலும் நெருங்கிய தொடர்புள்ள மற்ற நண்பர்களும் என்னைப் பார்க்க விரும்பக் கூடும். உதாரணமாக ராஜாஜி, சமூகப் பிரச்னை சம்பந்தமாக என்னை சந்தித்துப் பேசவேண்டும் என்று இப்பொழுதே அரசாங்கத்தினிடம் அனுமதி கோரியிருக்கிறார். அந்த விஷயமாகவோ அல்லது வேறு காரியமாகவோ அவர் என்னைச் சந்தித்துப் பேச விரும்புவாரானால், அவரைப் பார்ப்பது எனக்கு மகிழ்ச்சியையே கொடுக்கும். ஆனால், அவர் விஷயத்தில் கூட, நானாக அவர் பெயரை அரசாங்கத்திற்கு அறிவிக்க முற்படமாட்டேன்.

2. பார்க்க வருகிறவர்கள், என்னுடன் விவாதிக்கும் விஷயங்கள் சம்பந்தமாக எந்தத் தடையும் இல்லாமல் அனுமதிக்கப்படுவார்களானால், இந்த விவாதங்கள் பிரசுரிக்கப்பட வேண்டும்.

இல்லாவிடில் விவாதத்தின் நோக்கம் பெரிதும் வீணுகிவிடும். ஒரு போதும், ஒரு சந்தர்ப்பத்திலும் ஜப்பான் உள்பட பாசிஸ்டு நாடுகளுக்கு எந்த விதத்திலும் சாதகமாக இருக்கக்கூடிய விவாதத்தை நானே அனுமதிக்கமாட்டேன். இதில் வெளியார் வற்புறுத்தல் எதுவும் தேவையில்லை. விவாதிக்கும் நோக்கத்துடன் வருகிறவர்களை அனுமதிப்பதாயிருந்தால், அத்தகைய விவாதங்கள் உண்ணுவிரதத்தின் ஆரம்பகாலத்திலேயே நடப்பதற்கு ஏற்றவகையில், நான் கூறிய யோசனைப்படி அரசாங்கம் ஓர் அறிவிப்பை இப்பொழுதே வெளியிட்டுவிட வேண்டும்.

3. ஆசிரமத்தில் இதற்கு முன்னுல் எனக்குச் சேவை செய்து கொண்டிருந்தவர்களும், பணிவிடை செய்துவந்தவர்களும், முந்திய உண்ணுவிரத காலங்களில் என்னைக் கவனித்துவந்தவர்களும் என்னுடன் தங்கியிருந்து எனக்குப் பணிவிடை செய்வதில் பங்கு கொள்ள விரும்பக்கூடும். அவர்கள் அவ்விதம் விரும்புவார்களானுல் அவர்களை அனுமதிக்க வேண்டும். இதன் சம்பந்தமாக பொது அறிவிப்பை வெளியிடுவதிலுள்ள கஷ்டத்தை நான் உணர்கிறேன். அரசாங்கம் ஏற்றுக்கொள்ளுவதாக இருந்தால், இவ்விஷயமாக நான் ஒரு யோசனை கூறுவேன். காலஞ்சென்ற சேத் யமுனுலால் பஜாஜின் மனைவி ஸ்ரீமதி ஜானகி தேவிக்கு, இதற்கு முன்னுல் எனக்குச் சேவை செய்தவர்களையெல்லாம் தெரியும். அவர்களில் யாராவது என் உண்ணுவிரதத்தின்போது எனக்குச் சேவை செய்வதில் பங்கு கொள்ள விரும்புவார்களானுல், அவர்களின் பெயர்களை சர்க்காருக்கு அறிவித்தால் அவர்கள் அனுமதிக்கப்படுவார்கள் என்று ஸ்ரீமதி ஜானகி தேவிக்கு அறிவிக்க வேண்டும்.

மற்றும் இரு விஷயங்கள் இருக்கின்றன. பம்பாய் முன்னுள் மேயர் ஸ்ரீ மதுரதாஸ் திரிகம்ஜி, வெகு காலத்திற்கு முன்பு இறந்துவிட்ட என் சகோதரிகளில் ஒருவரின் கொள்ளுப் பேரன். அவரது தேகநிலை எப்படி இருக்கிறது என்பதை அறிய நான் வெகு ஆவலுடனும் கவலையுடனும் இருந்துவருகிறேன். இந்தத் தகவலை நான் அறிந்துகொள்ளும்படி அரசாங்கம் செய்யலாம். அல்லது ஸ்ரீ திரிகம்ஜியை எனக்கு எழுதுவதற்கு அனுமதிக்கலாம். அப்படி எழுதுவதற்கு முடியாதவாறு அவரது தேகநிலை இருக்குமானுல், அவர் சார்பில் வேறு ஒருவர் எனக்கு முழுத் தகவலையும் அறிவிப்பதற்கு அரசாங்கம் அனுமதிக்கலாம். நான் கைதுசெய்யப்பட்ட சமயத்தில் அநேகமாக அவர் பிழைக்கமாட்டார் என்று கைவிட்டுவிடும் நிலைமையே இருந்தது. அறுவை சிகிச்சை வெற்றிகரமாக நடந்ததாகப் பத்திரிகைகளில் படித்தேன்.

மற்றெரு விஷயம், இன்று இங்கே கிடைத்துள்ள 'பம்பாய் கிராணிகிள்' பத்திரிகையில் வெளியாகியிருக்கும் ஒரு செய்தியைப் பற்றியது. பேராசிரியர் பன்சாலி மற்றெரு உண்ணுவிரதத்தை மேற்கொண்டிருக்கிருர் என்பதே அந்தச் செய்தி. இந்தத் தடவை, எனக்கு அனுதாபமாக அவர் உண்ணுவிரதமிருக்க முற்பட்டிருக்

கிறூர். காலதாமதம் ஏற்படாமல் இருப்பதற்காக, மிகத் துரிதமாக அறிவிப்பது எந்த வகையில் சாத்தியமோ அவ்வகையில் கீழ்க் கண்ட என் செய்தியை அவசரத் தந்தி மூலமோ அல்லது டெலி போன் மூலமோ அவருக்கு அரசாங்கம் அறிவிக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

"உங்களுடைய அனுதாப உண்ணாவிரதத்தைப் பற்றி இப்பொழுதுதான் படித்தேன். சிமூர் சம்பந்தமாக மேற்கொண்டிருந்த நீண்டகால உண்ணா விரதத்தை இப்பொழுதுதான் நீங்கள் முடித்திருக்கிறீர்கள். அதை உங்கள் விசேஷப் பணியாக மேற்கொண்டீர்கள். ஆகையால் நீங்களாகவே மேற் கொண்டிருக்கும் அப்பணியைச் செய்து முடிப்பதற்கு உங்கள் உடம்பை நீங்கள் சீக்கிரமாகத் தேற்றிக் கொள்ளவேண்டும். என் விஷயத்தில் கடவுள் சித்தம்போல் நடக்கட்டும் என்று விட்டுவிடுங்கள். உயிருக்கு அபாயத்தை விளைவிப்பதாக இருந்த உண்ணாவிரதத்தை, இப்பொழுதுதான் முடித்தீர்கள். அவ்விதம் இராமலிருந்தால், விஷேசப் பணியையும் நீங்கள் மேற்கொள்ளாமல் இருந்திருப்பீர்களானல், இதில் நான் தலையிட்டிருக்கவே மாட்டேன்."

இவ்விஷயத்தில் என் கோரிக்கைக்கு அரசாங்கம் உடன் படுவதாக இருந்தால், என் செய்தியை எந்த மாற்றமுமின்றி அவருக்கு அனுப்பிவைக்கக் கோருகிறேன். என் செய்தியினுல் விரும்பும் பலன் கிடைக்காவிட்டால், அவருடன் மேலும் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ள அரசாங்கம் அனுமதிக்க வேண்டும் என்பதும் எனது விருப்பமாகும்.

உங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 39

[கீழ்க்கண்ட தகவலை கர்னல் பண்டாரி 1943 பிப்ரவரி 12-ஆம் தேதி பிற்பகல் 1-10 மணிக்கு நேரில் காந்திஜியிடம் அறிவித்தார்.]

1. யாரைக் கண்டு பேசுவது என்பதை முற்றிலும் ஸ்ரீ காந்தியே முடிவு செய்துகொள்ளவேண்டும்.

2. விவாதிக்கும் விஷயங்கள் சம்பந்தமாக எந்தத் தடை களும் இருக்காது.

3. பேட்டியளிக்கும்போது ஒரு அரசாங்க அதிகாரி உட னிருப்பார்.

4. விவாதிக்கும் விஷயங்களைப் பிரசுரிப்பதில் கட்டுப் பாடுகள் இருக்கும்.

## 40

(1943 பிப்ரவரி 16-ஆம் தேதி அரசாங்கம் எழுதிய கடிதத்திலிருந்து கீழ்க்கண்ட விஷயங்களை கர்னல் பண்டாரி காந்திஜிக்கு அறிவித்தார். பிப்ரவரி 14-ஆம் தேதி காந்திஜி கர்னல் பண்டாரிக்கு எழுதிய கடிதங்களுக்கு அரசாங்கம் அளித்த பதிலே இது :)

*பாரா 1.* யார் தம்மை வந்து பார்க்கவேண்டும் என்பது பற்றி ஸ்ரீ காந்தி தாமே எதுவும் கூறப்போவதில்லை என்றால், இதில் அரசாங்கத்தின் விருப்பம் என்பதும் எதுவுமில்லை. ஆகையால் பிப்ரவரி 10-ஆம் தேதி வெளியிட்ட அறிக்கையில் கண்டதற்கு அதிகமாக எந்த அறிவிப்பையும் வெளியிடவேண்டிய அவசியம் இருப்பதாக அரசாங்கம் கருதவில்லை. உண்ணாவிரதம் இருக்கும் சமயத்தில் அவரைப் பார்க்க விரும்புகிறவர்கள் அரசாங்கத்தின் அனுமதியின் பேரில் தாராளமாகப் பார்க்கலாம் என்று அரசாங்கம் அந்த அறிக்கையில் கூறியிருக்கிறது. ஆரம்பத்தில் செய்த முடிவையே அரசாங்கம் அனுசரிக்கிறது. எந்தக் குறிப்பிட்ட நபர் விஷயத்திலும் அரசாங்கத்திற்கு ஆட்சேபணை இல்லாதிருந்தால், நண்பர்கள் என்ற முறையில் ஸ்ரீ காந்தியைப் பார்க்க விரும்பிக் கேட்டுக்கொண்டிருப்பவர்களின் பட்டியலை, விவரம் அறிவதற்காக அவருக்கு அரசாங்கம் அனுப்பும். அவரோ அல்லது அவருடைய ஆலோசகர்களோ, தமக்கு உசிதம் என்று தோன்றும் வகையில் அதன் பேரில் வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம்.

*பாரா 2.* இந்த பாராவில் கொடுக்கப்பட்டிருக்கும் உறுதிமொழியைக் குறித்து அரசாங்கம் மகிழ்ச்சியடைகிறது. ஆனால், ஆரம்பத்தில் செய்த முடிவையே அரசாங்கம் பின்பற்ற வேண்டியிருப்பதற்காக வருந்துகிறது. பேட்டியின்போது பேசப்படும் விஷயங்கள், அரசாங்கத்தின் திட்டமான அங்கீகாரமில்லாமல் பிரசுரிக்கப்படக் கூடாது என்பதே ஆரம்பத்தில் செய்த முடிவாகும்.

*பாரா 3.* அதிகப்படியாக ஒன்று அல்லது இரண்டு நர்ஸ்கள் அவசியம் என்று சிறைச்சாலை இனிஸ்பெக்டர் ஜெனரல் கருதினால், இவ்விஷயம் நிச்சயமாக அனுதாபத்துடன் கவனிக்கப்படும்.

*பாராக்கள் 5, 6:* பேராசிரியர் பன்சாலிக்கு அனுப்புவதற்காக காந்தி அறிவித்த நகல் செய்தியில் சிமூரைப்பற்றிய பிரஸ்தாபம் இருப்பதுடன், அது சம்பந்தமாக அவர் தொடர்ந்து கிளர்ச்சியை நடத்திவரவேண்டும் என்றும் இருப்பதால், அச்செய்தியை அப்படியே இந்திய அரசாங்கம் அனுப்ப முடியாததைக் குறித்து வருந்துகிறது. என்றாலும், முதல் உண்ணாவிரதத்திலிருந்து இப்பொழுதுதான் உடல் தேறிவருவதால், இந்த உண்ணாவிரதத்தை கைவிட்டு விடவேண்டும் என்று காந்தி விரும்புகிறார் என்பதை

பேராசிரியர் பன்சாலிக்கு அறிவிக்க அரசாங்கம் தயாராக இருக்கிறது. அல்லது ஸ்ரீ காந்தி தமது சொந்த சொற்களில் வேறு மாற்றுச் செய்தி அனுப்புவதாயிருந்தால், அதைப் பரிசீலனை செய்து அனுப்பவும் அரசாங்கம் தயாராயிருக்கிறது.

கடிதத்தின் 4-வது பாராவில், மதுரதாஸ் திரிகம்ஜியின் தேகநிலை பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. இதைக் குறித்து பம்பாய் அரசாங்கம் விசாரித்துவருகிறது. கிடைக்கும் தகவல்களை சாத்தியமானவரை சீக்கிரமாகவே அரசாங்கம் ஸ்ரீ காந்திக்கு அறிவிக்கும். இதற்கிடையே, ஸ்ரீ காந்திக்கு தாமே சொந்த விஷயமாகவும் குடும்ப விஷயங்களைக் குறித்தும் நேரே எழுதலாம் என்று ஸ்ரீ மதுரதாஸுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## 41

சிறைமுகாம்,
24-2-1943

அன்புள்ள கர்னல் பண்டாரி,

கண்டு பேச வருகிறவர்கள் சம்பந்தமாக அரசாங்கம் அறிவித்திருப்பதைப் புரிந்து கொள்ளுவதில், எனக்கும் கான் பகதூர் கடேலிக்கும் முரண்பாடு இருக்கிறது என்றே தோன்றுகிறது. நீங்கள் அன்புடன் எனக்குப் படித்துக் காட்டிய கடிதங்களிலிருந்தும் அரசாங்க அறிவிப்புகளிலிருந்தும் நான் வருமாறு தெரிந்து கொண்டேன்: என்னைப் பார்க்க வருகிறவர்கள் விவாதிக்கும் விஷயம், நேரம் ஆகியவற்றைக் குறித்து எந்தக் கட்டுப்பாடும் இல்லை; அவசியமானல் அரசாங்க சிப்பந்தி ஒருவர் உடனிருப்பார் என்பதே நான் அறிந்து கொண்டதாகும். அதோடு உடல் நிலை காரணமாக நான் தொடர்ந்து விவாதித்துக் கொண்டிருக்க முடியாமற் போனுல், விவாதத்தை முடித்துவைக்கும் பொறுப்பை ஸ்ரீ பியாரிலாலிடம் விட்டுவிடுவேன். பார்த்துப் பேச வருகிறவர்களில் என்னுடன் நெருங்கிய தொடர்புள்ளவர்களை என் மனைவி இயல்பாகவே பார்த்துப் பேசுவாள். என்னைப் பொறுத்தவரையில் நான் அதிகமாகப் பேச முடியாது. மிகச் சொற்ப நிமிடங்களே நான் பேசலாம் என்று டாக்டர்களும் கட்டுப்படுத்த வேண்டியவர்களாக இருக்கிறுர்கள். ஆனல், நானும் பேச வருகிறவர்களும் மாத்திரமே பேசலாம் என்பது கான் பகதூரின் கட்டளையாக இருக்கிறது. இதுதான் நிலைமை என்றுல் இது மோசமானதாகும். சேத் ஆர். டி. பிர்லா வந்தார். அதேபோல ஸ்ரீ கமல்நயன் பஜாஜும் வந்திருந்தார். நான் ஒழுங்குபடுத்தி நடத்திக் கொண்டுவரும் டிரஸ்டு[illegible]பற்றியெல்லாம் அவர்களுக்கு நன்றுகத் தெரிய[illegible]அவர்கள் வந்திருந்ததை இயல்பாகவே நான் பயன்ப[illegible]கொண்டு,

டிரஸ்டுகள் சம்பந்தமாக அவர்களுடன் விவாதிக்கும்படி ஸ்ரீ பியாரிலாலுக்கு அறிவித்திருந்தேன். அவரும் அவை சம்பந்தமாக அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். தரும சங்கடமான ஒரு கடமையை கான்பகதூர் நிறைவேற்றியாக வேண்டியிருந்தது. அதை அவர் உறுதியுடன் நிறைவேற்றிவந்ததோடு, சந்தர்ப்பத்தையொட்டி அதிக கண்ணியமாயும் நடந்துகொண்டார். என்னைக் கண்டுபேச வருகிறவர்கள் குறிப்பு எழுதிக் கொள்ளவோ, எழுதியது எதையும் எடுத்துப் போகவோ அனுமதிக்கக் கூடாது என்று தமக்குக் கண்டிப்பான உத்தரவு இருப்பதாக கான்பகதூர் கூறுகிறார். உண்ணாவிரத நாட்களிலும், பிறகு உடம்பைத் தேற்றிக் கொள்ளும் சமயத்திலும், சாத்தியமானால் இத்தகைய காரியங்களால் எனக்குத் தொல்லை ஏற்படாமல் இருப்பதையே நான் விரும்புகிறேன். ஆகையால், கான்பகதூரும் நானும் பரஸ்பரம் புரிந்து கொள்ளும்வகையில் தெளிவான உத்தரவுகள் இருப்பது நல்லது என்று விரும்புகிறேன். அவைகளை மீறி எதுவும் செய்ய நான் விரும்பவில்லை.

என் மகன் ஸ்ரீ தேவதாஸ் காந்தி, தான் விரும்பும் வரையில் என்னுடன் அரண்மனையில் தங்கியிருக்க அனுமதிக்கப்பட்டிருக்கிறான். இந்தக் காலத்தில் தான் பேச நினைக்கும் போதெல்லாம் என்னுடன் ஏதேதோ விஷயங்களைப் பற்றியெல்லாம் அவன் பேசுகிறான். அந்த சமயங்களிலெல்லாம் இயற்கையாகவே கான் பகதூர் எங்களுடன் இருக்க முடியாது. இந்திய அரசாங்கம், பம்பாய் அரசாங்கம் ஆகியவற்றிற்கும் எனக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தையெல்லாம் அவனுக்குக் காட்டும்படி ஸ்ரீ பியாரிலாலிடம் கூறியிருக்கிறேன். இக்கடிதப் போக்குவரத்தின் நகல்களை என் மகனிடம் கொடுக்கவேண்டும் என்பதும் எனது நோக்கமாகும். ஆனால் கான்பகதூர் இதைத் தடுத்திருப்பதால், அரசாங்கத்தின் உத்தரவு வரும்வரையில் கடிதங்களுக்கு நகல்கள் எடுக்க வேண்டாம் என்று என் மகனிடம் கூறியிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 42

1943 பிப்ரவரி 26-ஆம் தேதி காந்திஜி எழுதியிருந்த கடிதத்திற்கு அரசாங்கத்தினிடமிருந்து கிடைத்த கீழ்க்கண்ட உத்தரவை கர்னல் பண்டாரி காந்திஜிக்கு அறிவித்தார்:

வருகிறவர்களுடன் பேசும்போது அரசாங்க அதிகாரி ஒருவர் உடனிருக்க வேண்டும் என்பதே எப்பொழுதும் அரசாங்கத்தின் நோக்கமாக இருந்து வருகிறது. இதை தேவதாஸ், ராம

தாஸ் விஷயத்தில், அவர்களுடைய தந்தையின் நிலைமையை உத்தேசித்து, அவருடன் பேசுவதன் சம்பந்தமாக அரசாங்கம் இதுவரை வற்புறுத்தவில்லை. ஆனால், அவரது நிலைமை இப் பொழுது அபிவிருத்தியடைந்து வருவதால், அவர்கள் அவரை ஒரு நாளைக்கு இரண்டு அல்லது மூன்று தடவை சந்தித்துப் பேச அனுமதிக்க வேண்டும் என்றும், அப்படிப் பேசும் போது மற்றவர்களைப் போன்றே அதே நிபந்தனைக்கு அவர்களும் உட் பட்டே இருக்க வேண்டும் என்றும் அரசாங்கம் விரும்புகிறது.

அரசாங்கம் அனுமதித்த இந்த ஏற்பாட்டின் நோக்கம் என்ன வெனில், நண்பர்களுடன் ஸ்ரீ காந்தி பேசும் போது, சிறை வைக்கப்பட்டிருக்கும் மற்றவர்கள் உடனிருப்பதையோ, விவாதத் தில் கலந்து கொள்ளுவதையோ அரசாங்கம் ஆட்சேபிக்கவில்லை. ஆனால், ஒருவரைச் சந்தித்து பேசுவதை ஸ்ரீ காந்தியே முடித்து விட்ட பிறகோ அல்லது தொடர்ந்து பேசிக் கொண்டிருக்க அவ ரால் இயலாத பொழுதோ, அந்தப் பேட்டி முடிந்துவிட்டதாகவே கருதப்படும்; சிறைவைக்கப்பட்டிருக்கும் மற்றவர்கள் அவர் சார் பில் தொடர்ந்து பேச்சை நடத்த அனுமதிக்கப்படமாட்டார்கள்.

ஸ்ரீ காந்தியுடன் நடத்திய கடிதப் போக்குவரத்தின் பிர திகளை சிறை முகாமுக்கு வெளியே எடுத்துச் செல்ல அனுமதிக்க வேண்டும் என்று அரசாங்கம் நினைக்கவில்லை.

## 43

சிறை முகாம்,
2-3-1943

அன்புள்ள கர்னல் பண்டாரி,

நாளை நான் உண்ணாவிரதத்தை முடிக்கும் சமயத்தில் இருப் பதற்கு வெளியார்களில் என் குமாரர்கள் இருவரைத் தவிர வேறு எவரையும் அனுமதிப்பதில்லை என்று அரசாங்கம் கட்டுப்பாடு விதித்திருக்கிறது. இதை, என் மௌன விரத தினமான நேற்று அன்புடன் நீங்கள் எனக்கு அறிவித்தீர்கள். எனக்குக் காட்டும் இந்தச் சலுகைக்காக நான் நன்றி செலுத்திய போதி லும், அதைப் பயன்படுத்திக் கொள்ள முடியாதவனாக இருக்கிறேன். ஏனெனில், எனக்குப் பிறந்த பிள்ளை களுக்கும் ஏராளமான மற்றவர்களுக்குமிடையே நான் எவ்வித வேற்றுமையும் பாராட்டுவதில்லை என்பதை அரசாங்கம் அறியும். அவர்களைப் போன்றே எல்லோரும் எனக்கு அன்பார்ந்தவர்களே. நான் உண்ணாவிரதத்தை நிறுத்தும் சமயத்தில் உடனிருக்க வெளி யார் யாரையாவது அனுமதிப்பதாக இருந்தால், இப்பொழுது புனாவில் இருந்துவருகிறவர்களும், உண்ணாவிரதத்தின் போது அனுமதிக்கப்பட்டவர்களுமான சுமார் ஐம்பது பேர்களையும் அர

சாங்கம் அனுமதிக்க வேண்டும் என்று மூன்று, நான்கு நாட்களுக்கு முன்னுல் உங்களிடம் கூறினேன். ஆனல் நான் கோரியபடி நடைபெறப் போவதில்லை என்பதை இப்பொழுது அறிந்து கொண்டுள்ளேன்.

உங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 44

சிறை முகாம்
12-3-1943

அன்புள்ள கர்னல் பண்டாரி,

இன்று காலை பேசிக்கொண்டிருந்ததை ஒட்டி கீழ்க்கண்ட விஷயங்களை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறோம்.

ஸ்ரீமதி காந்தியைப் பொறுத்தவரையில், அவர் விடாத கபத்தினுல் பாதிக்கப்பட்டிருக்கிருர்; மார்பில் வலி இருந்துவருவதாகவும் கூறுகிருர். அவருடைய இருதயம் அதிதுரிதமாக வேலை செய்து கொண்டிருக்கிறது. இதயத் துடிப்பு நிமிடத்திற்கு 180 வீதம் இருக்கிறது. அடிக்கடி, குறிப்பாக காலை நேரங்களில் அவருடைய முகத்திலும் கண் இமைகளிலும் வீக்கமும் இருந்து வருவதை நீங்கள் கவனித்திருப்பீர்கள். காந்திஜி உடனிருப்பது அவருக்கு ஆறுதல் அளிப்பதாக இருந்தாலும், அவருடைய உடல் கோளாறுகள் மன நிலையையும் பாதித்து வருகின்றன. இவைகளையெல்லாம் முன்னிட்டு அவருடன் எப்போதும் ஒரு 'நர்ஸ்' இருக்க வேண்டியது அவசியம் என்று கருதுகிறோம். அவருடைய மொழி பேசுகிறவரும், அவருக்குத் தெரிந்தவருமான ஒருவர் அவருடன் இருக்கும்படி செய்வது நன்ருக இருக்கும்.

காந்திஜியைப்பற்றிய வரையில், இன்னும் ஒரு மாதத்திற்கு மேல் அவருக்கு மிகுந்த அக்கறையுடன் பணிவிடை செய்துவர வேண்டியது அவசியம் என்று கருதுகிறோம். கனு காந்தி அவரிடம் அதிக அன்புள்ளவர். அவருடைய தேவைகளைக் குறிப்பறிந்து செய்வதில் தேர்ச்சி பெற்றவர். ஆகவே, அந்தக் காலத்தில் அவரை காந்திஜியுடன் இருக்கும்படி செய்வது சிறந்ததாகும். அரசாங்கத்திற்கு எந்த ஆட்சேபணையும் இல்லையானுல், தேவைப்படும் வரையில் காந்திஜியுடன் இருக்க அவர் தயாராயிருக்கிருர்.

உங்கள் உண்மையுள்ள,
எம். டி. டி. கில்டர்
எஸ். நய்யார்

## 45

சிறை முகாம்,
13-3-1943

அன்புள்ள கர்னல் பண்டாரி,

என் உடல் நிலை குணமடைந்து வரும் காலத்தில் டாக்டர்கள் அபிப்பிராயப்படி ஒரு மாத காலத்திற்கு மேற்படாமல் கனு காந்தி என்னுடன் இருக்க வேண்டும் என்பது பற்றிக் காலையில் பேசிக் கொண்டிருந்தோம். இது சம்பந்தமாக ஒன்று கூற விரும்புகிறேன். அந்தக் காலத்தில் அவர் என்னுடன் இருந்துவர அரசாங்கம் அனுமதிக்காது போகுமாயின், அவருடைய சேவை எவ்வளவுதான் முக்கியமாக இருந்தாலும் அது இல்லாமலேயே நான் இருந்துதான் தீர வேண்டும். என்னுடைய இந்த கதியற்ற நிலையிலும், இதற்கு நானே முழுப் பொறுப்பாளி என்பதை நான் நன்கு அறிந்திருந்த போதிலும், நான் இவ்விதம் நடத்தப்படுவதை விரும்பவில்லை என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். இது, நான் கைதி என்பதை இடைவிடாமல் சுட்டிக் காட்டுவதாகவே இருக்கிறது. ஆனால், கனு காந்திக்குப் பதிலாக வேறு ஒருவரை நியமிக்கத் தயாராக இருப்பதாய்க் கூறுவது என்னை அவமதிப்பதாகவே இருக்கிறது. எனினும், இத்தகைய அவமதிப்பான சலுகைகள் தனக்கு வேண்டாம் என்று சொல்ல ஒரு கைதிக்கும் உரிமை உண்டு.

உங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 46

சிறை முகாம்,
13-3-1943

அன்புள்ள கர்னல் பண்டாரி,

காந்திஜி உண்ணாவிரதத்தை ஆரம்பித்தபின், அவரைக் கவனிக்க ஸ்ரீ மேத்தாவின் உதவி அவசியம் என்று தெரிந்ததும், அவருடைய சேவை தேவைப்படுகிறது என்று நாங்கள் கேட்டது உங்களுக்கு நினைவிருக்கும். காந்திஜி முன்பு உண்ணாவிரதம் இருந்தபோது அவர் மிகப் பயனுள்ள சேவை செய்திருக்கிறார். காந்திஜிக்கும் அவரிடம் முழு நம்பிக்கை இருக்கிறது.

உண்ணாவிரதம் முடிவடையும் சமயத்தில், காந்திஜி உடம்பு நன்கு குணமடையும் வரையில் ஸ்ரீ மேத்தாவின் சேவை கிடைக்கும்படி செய்யுமாறு உங்களைக் கேட்டுக் கொண்டிருந்தோம். அப்படியிருக்க, 17-ஆம் தேதியிலிருந்து அவரது சேவை முடிந்து விடும் என்று இன்று காலை எங்களுக்கு நீங்கள் அறிவித்தபோது நாங்கள் ஆச்சரியமடைந்தோம். என்றாலும், உடம்பு தேறிவர வேண்டிய காலம் இன்னும் எந்தவகையிலும் முடிந்துவிடவில்லை என்ற எங்கள் கருத்தைக் குறிப்பாகத் தெரிவித்துக் கொள்ளு

கிறோம். காந்திஜி இன்னும் படுத்த படுக்கையாகவே இருக்கிறார். தாமே எழுந்து நடமாட முடியாத நிலையிலும் இருக்கிறார் என்பதை எங்களுடன் நீங்களும் நேரில் பார்த்தீர்கள். ஆகையால், மேத்தாவின் சேவை இந்த மாத முடிவு வரையிலாவது தொடர்ந்து இருந்துவர வேண்டியது அவசியம் என்பதே எங்கள் கருத்து. எங்கள் கருத்தை உடனே அரசாங்கத்திற்கு நீங்கள் தயவு செய்து அறிவிக்க வேண்டும் என்று விரும்புகிறோம்.

உங்கள் உண்மையுள்ள,

**எம். டி. டி கில்டர்**

**எஸ். நய்யார்**

## 47

சிறைமுகாம்,
*20-3-1943*

அன்புள்ள கர்னல் பண்டாரி,

இன்று காலை காந்தியுடன் நீங்கள் பேசிக்கொண்டிருந்த போது, ஸ்ரீ தின்ஷா மேத்தா காந்திஜியை கவனித்துக் கொண்டு வருவதைப் பற்றிக் கூறினீர்கள். அநேகமாக இனி நானே அவர் செய்துவந்த காரியங்களைக் கவனித்துக் கொள்ளலாமாகையால், அவர் வந்துபோவதை நிறுத்திவிடலாம் என்று கருதுவதாக நீங்கள் சொன்னீர்கள். நீங்கள் கருதியது சரியல்ல என்றே அஞ்சுகிறேன். சில ஆண்டுகளாக நான் காந்திஜிக்குப் பணிவிடை செய்துவருகிறேன் என்பது உண்மையே. சாதாரண காலங்களில் அவருக்கு நான் உடம்பைப் பிடித்துவிடுவது உண்டு. எனினும் அதில் எனக்கு விசேஷமான பயிற்சி எதுவும் இல்லை. உண்ணாவிரதத்திற்குப் பிறகு காந்திஜியின் உடல் சிறுகச் சிறுக பலம் பெற்று வரும்போது, அவருக்குத் தேவைப்படும் சிகிச்சையை அளிப்பதற்கு வேண்டிய திறமையோ, அனுபவமோ ஸ்ரீ மேத்தாவுக்கு இருப்பதைப் போன்று எனக்கு இல்லை. 1932-இல் காந்திஜி இருபத்தொன்று நாள் உண்ணாவிரதமிருந்த போது, உடனிருந்து அவருக்கு சிகிச்சை செய்த அனுபவம் ஸ்ரீ மேத்தாவுக்கு இருக்கிறது என்பதையும் நீங்கள் அறிந்திருக்கக் கூடும். அப்பொழுது நான் நாஸிக் சிறையில் கைதியாக இருந்தேன். அச்சமயம் உடம்பைப் பிடித்துவிடுவது போன்ற சிகிச்சைகளைத் தொடர்ந்து மூன்று மாதங்கள் வரை செய்ய வேண்டியிருந்தது. இந்த உண்மைகளை அதிகாரிகளின் கவனத்திற்குக் கொண்டுவருவதற்காகவும், காந்திஜியின் உடல் இப்பொழுதிருக்கும் நிலையில் சிகிச்சை செய்வதில் எனக்குள்ள குறைபாடுகளைத் தெரிவித்துக் கொள்ளுவதற்காகவும் இதை எழுதுவது அவசியம் என்று கருதுகிறேன்.

உங்கள் உண்மையுள்ள,

**பியாரிலால்**

பகுதி நான்கு

# உண்ணாவிரதத்திற்குப் பிறகு

## 48

## பியாரிலாலின் கடிதம்

*சிறை முகாம்,*
*18, பிப்ரவரி, 1943*

*சர் ரிச்சர்டு டாட்டென்ஹாம்,*
*இந்திய அரசாங்க உள்துறை இலாகா,*
*புது டில்லி.*

*அன்புள்ள ஸர் ரிச்சர்டு டாட்டென்ஹாமுக்கு,*

*உங்களுடன் தொடர்பு கொள்ளும் வாய்ப்பு எனக்கு இருந்ததில்லை. சென்ற இருபது ஆண்டுகளாக காந்திஜிக்கு ஸ்ரீ மகாதேவ தேசாயுடன் நான் துணைச் செயலாளனாக இருந்து வருகிறேன். காந்திஜியின் உண்ணாவிரதம் பற்றி இந்திய அரசாங்கம் 1943 பிப்ரவரி 10-ஆம் தேதி பத்திரிகைகளுக்கு வெளியிட்டிருக்கும் அறிக்கையைக் குறித்தே இக்கடிதம் எழுதவேண்டியதாயிற்று. ஸ்ரீ மகாதேவ தேசாயை நீங்கள் நேரில் அறிவீர்கள். அவர் இன்று உயிருடன் இருந்திருப்பாரானால், அந்த அறிக்கையில் காந்திஜியின்மீது கூறப்பட்டிருக்கும் பல குற்றச்சாட்டுகளையும், அவரைப்பற்றி தவறான அபிப்பிராயம் ஏற்படும்படிச் செய்யப்பட்டிருப்பதையும், தமது அற்புதமான சிறந்த ஞாபக சக்தியைக் கொண்டு திட்டவட்டமாக மறுத்து எழுதியிருப்பார்; உண்மையை எல்லோரும் உணரும்படியும் செய்திருப்பார். அவர் இல்லாததால், அந்தக் கடமை என்மீது சுமந்திருக்கிறது. ஸ்ரீ மகாதேவ தேசாய்க்கு பதிலாக இருப்பதற்குக் கொஞ்சமும் தகுதியில்லாதவன் நான். என்றாலும் இந்தக் குற்றச்சாட்டுகளை மறுக்கும்வகையில், எனக்கு நேரில் தெரிந்தவைகளை நான் எழுத்து மூலம் குறிப்பிடாமற் போவேனாயின், என் கடமையைச் செய்யத் தவறியவனாவேன்.*

*சர்க்கார் அறிக்கையில் காணப்படும் கீழ்வருவனவற்றைக் குறிப்பிடுகிறேன்:*

“ இயக்கம் ஆரம்பிக்கப்படுவதற்கு முன்னால் ஸ்ரீ காந்தியே வெளியிட்ட அறிக்கையில், இப்பொழுது இருக்கும் முறைக்குப் பதிலாக அராஜகமே

ஏற்பட வேண்டும் என்று கூறியிருக்கிறார். இப்போராட்டம் இறுதிவரையில் நடக்கும் போர் என்றும் குறிப்பிட்டுள்ளார். அதில் என்னதான் பெரிய ஆபத்துகள் நேர்ந்தபோதிலும் அவற்றைக் கண்டு தாம் தயங்கப் போவதில்லை என்றும் கூறியுள்ளார். வைஸ்ராயை அவர் சந்திக்கத் தயாராக இருப்பதாகக் கூறியது பற்றிப் பிரமாதப்படுத்தப்படுகிறது. இச்சந்தர்ப்பத்தில் ஒரு விஷயத்தைக் குறிப்பிட வேண்டியது அவசியம். சென்ற ஜுலை 14-ஆம் தேதி காரியக்கமிட்டியில் தீர்மானம் நிறைவேறிய பிறகு, ஸ்ரீ காந்தி பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில், இந்த யோசனையில் சமரசம் பேசுவது, வாபஸ் வாங்குவது என்பதற்கு இடமே இல்லை என்றார். சாத்தியமானவரையில் எவ்வளவு சுருக்கமானதாகவும் துரிதமானதாகவும் இருக்கக் கூடிய பகிரங்கப் புரட்சியே இதுவாகையால், இன்னுமொரு சந்தர்ப்பம் கொடுத்துப் பார்ப்பது என்ற பேச்சிற்கே இடமில்லை என்றும் சொன்னார். கடைசியாக அவர் விடுத்த செய்தி, 'செய் அல்லது செத்துவிடு' என்பதே."

உத்தேசிக்கப்பட்டிருந்த சட்டமறுப்புப் போராட்ட விஷயத்தில் தமது கொள்கையான அகிம்சையைக் காந்திஜி கை விட்டுவிட்டார்; அப்போராட்டத்தை நடத்துவதில் பலாத்காரத்தை அவர் அனுமதித்துவிட்டார்; அதை மன்னித்துவிடவும் தயாராயிருந்தார் என்றெல்லாம் பொதுமக்கள் ஊகித்துக் கொள்ளும்படி செய்ய வேண்டும் என்பதே உண்மையில் அரசாங்கத்தின் நோக்கம் என்று தெரிகிறது. மேலே எடுத்துக் கொடுக்கப்பட்டிருப்பதில், அகிம்சையை அடிப்படையாகக் கொண்டு காந்திஜி கூறியதை பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்டதாகப் பொருள் படும்படி வார்த்தைகள் பிரித்தெடுத்து மாற்றப்பட்டிருக்கின்றன! அவர் கடைசியாக வெளியிட்ட செய்தியான, "செய் அல்லது செத்துவிடு" என்பதையே எடுத்துக் கொள்ளுவோம். "செய் அல்லது கொல்" என்பதற்கு முற்றிலும் மாறானது இந்தக் கருத்து. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் முடிவுரையாக ஹிந்துஸ்தானியில் தாம் பேசியபோது காந்திஜி இதைச் சொன்னார். முந்திய நாள் ஹிந்துஸ்தானி பிரசங்கத்தில் அவர் சொன்னதற்குச் தொடர்ச்சியே இது. அவருடைய முந்திய பிரசங்கம் முழுவதிலும் அகிம்சை தர்மத்தில் தமக்குள்ள முழு நம்பிக்கையையும் அவர் வற்புறுத்திக் கூறினார். அதைப் பின்பற்றி நடக்கும்படியும் அவர் மக்களைக் கேட்டுக் கொண்டார். தமது பேச்சை இரண்டே வார்த்தைகளில் கடைசியாக அவர் சுருக்கிச் சொன்னார். "உங்கள் கடமையைச் செய்யுங்கள்; அதை நிறைவேற்றுவதில் நீங்கள் சாகவேண்டி வந்தாலும் செத்துமடியுங்கள்" என்றுதான் அந்த இருசொற்களின் பொருள். இப்பிரசங்கத்தின் முழுவிவரமும் பத்திரிகைகளில் வெளிவர அனுமதிக்கப்பட்டதா என்பது எனக்குத் தெரியாது. அப்பேச்சு முற்றிலும் அகிம்சையை வற்புறுத்துவதாக இருந்தது என்பதைக் காட்டுவதற்கு, என் ஞாபகத்திலிருந்து சிலவற்றை மாத்திரம் அப்பிரசங்கத்திலிருந்து எடுத்துக் கூறுகிறேன்:

"1920-இல் இருந்த அதே காந்திதான் நான். அப்பொழுது அகிம்சையை எவ்வளவு முக்கியமாகக் கருதினேனோ அதே

போலவே இப்பொழுதும் முக்கியமாகக் கருதுகிறேன். ஆகையால் அகிம்சையில் யாருக்காவது நம்பிக்கை இல்லையென்றால், அப்படிப் பட்டவர்கள் இந்தத் தீர்மானத்தை ஆதரித்து வோட்டு அளிக்க வேண்டாம்."

"இப்பொழுது இந்தப் போராட்டம் அகிம்சையை வேராகக் கொண்டது. ஹிம்சைத் தீயில் உலகம் பொசுங்கிக் கொண்டு விடுதலைக்காகத் தவித்துக் கொண்டிருக்கும் இந்த நெருக்கடியான சமயத்தில், கடவுள் எனக்கு அளித்திருக்கும் விசேஷ ஆற்றலை நான் உபயோகிக்கத் தவறிவிடுவேனாயின், கடவுள் என்னை மன்னிக்கவே மாட்டார்."

"இந்தத் தீர்மானத்தில் பிரிட்டிஷார்மீது எத்தகைய துவேஷமும் இல்லை. மக்கள் வெறிபிடித்துப் போய், ஆங்கிலேயர்கள் மீது பலாத்காரத்தை உபயோகிப்பார்களாயின், அதைப் பார்த்துக்கொண்டிருக்க அவர்களிடையே என்னை அவர்கள் உயிருடன் காணமாட்டார்கள். அத்தகைய நிலைக்கு, அந்த அட்டூழியங்களைச் செய்தவர்களே பொறுப்பாளிகளாக இருப்பார்கள்."

காந்திஜியின் வாயிலிருந்து இந்த மொழிகள் வரவர நானும் ஸ்ரீ மகாதேவ தேசாயும் அவற்றைக் குறித்துக் கொண்டோம். இந்தச் சொற்பொழிவுகளைப் பற்றி எடுத்த குறிப்புகள் இப்பொழுது இங்கே என்னிடம் இல்லை; என்றாலும் அவை இருக்கின்றன. இந்தச் சொற்பொழிவுகளின் சாரம் ஸ்ரீ மகாதேவ தேசாயின் சொந்தக் கையெழுத்தில் இப்பொழுது என்னிடம் இருக்கின்றன. காந்திஜி இங்கு வந்ததும் அவருடைய உபயோகத்திற்காக இதை ஸ்ரீ தேசாய் தயாரித்திருந்தார். அவர் இறந்த பிறகு அவர், வைத்திருந்த காகிதங்களில் இதுவும் இருப்பதைக் கண்டோம்.

என்னுடைய வாதத்தை வற்புறுத்த இங்கு இன்னுமொரு விஷயத்தையும் குறிப்பிட விரும்புகிறேன். சென்ற ஆகஸ்டு 9-ஆம் தேதி காந்திஜி, தம்மை அதிகாரிகள் கைது செய்வதற்காகத் தாமே வெளியேறுவதற்கு முன்னால் அவர் என்னிடம் பிர்லா மாளிகையில் சொல்லிப் போனதையே இங்கு குறிப்பிடுகிறேன். அவர் சொன்னதாவது: "சுதந்திரப் போரில் கலந்துகொள்ளும் அகிம்சை வீரர் ஒவ்வொருவரும் 'செய் அல்லது இறந்துவிடு' என்பதை ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதி தன் உடையில் ஒட்டிக் கொள்ளட்டும். சத்தியாக்கிரகம் செய்யும்போது அவர் இறப்பாரானால், அகிம்சையை ஆதரிக்காதவர்களிடமிருந்து தாம் மாறுபட்டவர் என்பதைக் காட்டுவதற்காகவே இந்த அடையாளம்." அன்று காலை காந்திஜியைச் சந்திப்பதற்காக பல லாரிகள் நிறைய காங்கிரஸ் ஊழியர்களின் பிரதிநிதிகள் பிர்லா மாளிகைக்கு வந்தார்கள். முதல் நாள் நிறைவேறிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானம் சம்பந்தமாக தமது விருப்பம் என்ன என்பதை காந்திஜி அவர்களுக்கு விளக்கிக் கூறுவதாக இருந்தார்.

ஆனால் காந்திஜி அங்கே இல்லாமற்போனதால், அவர் கடைசியாகக் கூறிச் சென்ற செய்தியை அவர்களுக்கு நான் சொன்னேன். காந்திஜியின் கருத்து என்ன என்பதைக்குறித்து எனக்குத் தெரிந்ததையும் எடுத்துக் கூறினேன். சட்ட மறுப்புப் போரை நடத்தும்படி நேர்ந்தால், அகிம்சையை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொருவரும் முழு அளவுக்கும் அதில் ஈடுபட்டாக வேண்டும். அவர்களுடனிருந்து கொண்டு இரு விஷயங்களை காந்திஜி பார்த்துக் கொண்டிருக்க மாட்டார். கோழைத்தனமாகப் போராட்டத்தைக் கைவிட்டுவிடுவதும், தங்கள் அளவில் பலாத்காரச் செயலில் ஈடுபடுவதுமே அவை.

வைஸ்ராயைச் சந்திக்கத் தயாராயிருப்பதாக காந்திஜி சொன்னதைப் பொறுத்தவரையில், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் தமது முடிவுரையிலேயே அவர் இதை அறிவித்தார். வார்தா காரியக் கமிட்டியில் தீர்மானம் நிறைவேறிய பிறகு, ஜூலை 14-ஆம் தேதி பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில் காந்திஜி, இந்த யோசனையில் வாபஸ் வாங்கிக் கொள்ளுவதற்கோ, சமரசம் பேசுவதற்கோ இடமே இல்லை என்று கூறிவிட்டார் என்று அரசாங்க அறிக்கை கூறுகிறது. இதைச் சொல்லி, வைஸ்ராயை காந்திஜி பார்க்க விரும்பினர் என்பதை அந்த அறிக்கை மறுக்கிறது. வைஸ்ராயைக் கண்டு பேச தாம் அனுமதி கோரப் போவதாகவும், அப்படிக் கண்டு பேசுவதன் முடிவு தெரியும் வரையில் தாம் சட்ட மறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்கப் போவதில்லை என்றும் காந்திஜி அ. இ. கா. கமிட்டியின் முன்பு திட்டவட்டமாகக் கூறினர். அதைத் தொடர்ந்து கீழ்க்கண்ட இரு பத்திரிகைப் பேட்டிகளையும் அளித்தார். ஆகையால் சர்க்கார் அறிக்கை கூறுவது சரியா என்பதற்கு இந்தப் பேட்டிகளையும் சேர்த்துப் பார்க்க வேண்டும். அப்பேட்டியின் நகலை நானே திருத்தினேன். திருத்தப்பட்ட அந்த நகல் என்னிடம் இல்லாததால், 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை கொடுத்திருக்கும் விவரத்தோடு நான் திருப்தியடைய வேண்டியதே. இதில் சில எழுத்துப் பிழைகளும் இருக்கின்றன.

'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் 7-8-1942-இல் வெளியான விவரமாவது:

## 'கேள்விகளுக்கு ஸ்ரீ காந்தியின் பதில்கள்'

பம்பாய், ஆகஸ்டு, 6-

அஸோசியேடெட் பிரஸுக்கு காந்திஜி அளித்த பிரத்தியேக பேட்டியில், காங்கிரஸ் காரியக் கமிட்டியின் புதிய தீர்மானம் பற்றி கேட்ட பல கேள்விகளுக்கும் பதில் கூறினர்.

**கேள்வி:** அத்தீர்மானத்தின் பொருள், போரா, அல்லது சமாதானமா? போர் பிரகடனம் என்பதுதான் அதன் பொருள் என்றும், தீர்மானத்தின் கடைசி மூன்று பாராக்

கள் தான் உண்மையில் செயல் முறைப் பகுதி என்றும் முக்கியமாக வெளி நாட்டுப் பத்திரிகையாளரின் விளக்கம் கூறுகிறது.

தீர்மானத்தின் முக்கியமான கருத்து முதல் பகுதியில் இருக்கிறதா அல்லது கடைசிப் பகுதியில் இருக்கிறதா?

**பதில்**: எந்த அகிம்சைப் போரிலும், எதிர்காலத்திலும் சரி, நடைமுறையிலும் சரி, முக்கியத்துவம் எப்பொழுதுமே சமாதானத்தில்தான் இருக்கிறது. தவிர்க்க முடியாத அவசியம் ஏற்படும் போதுதான் போரில் ஈடுபடும்படி நேருகிறது.

**கே**: தற்காலிக அரசாங்கத்தை உடனே அமைக்க வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அப்படியானால், அது எப்படி அமலுக்கு வரும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்? தீர்மானத்தை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கீகரிப்பதற்கும், பொதுஜனப் போராட்டத்தை ஆரம்பிப்பதற்கும் மத்தியில் இடைக்காலம் இருக்கும் என்று நினைக்கிறீர்களா?

**ப**: பிரிட்டிஷாரின் நல்லெண்ணத்துடன் சுதந்திரம் ஏற்படுமாயின், அநேகமாக அதே சமயத்தில் தற்காலிக அரசாங்கம் ஒன்றும் ஏற்படுத்தப்படும் என்று நான் எதிர்பார்க்கிறேன். அது அகிம்சையையும், பொது மக்களின் விருப்பத்தையும், நம்பிக்கையையும் அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டியது அவசியமாகும். எல்லாக் கட்சிகளின் சுயேச்சையான, தன்னிச்சையான ஒத்துழைப்பைப் பெறுவதாகவும் அது இருக்கவேண்டியது அவசியம்.

**கே**: பொதுஜனப் போராட்டத்தை ஆரம்பிப்பதற்கு முன், காங்கிரஸுக்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குமிடையே சமரசப் பேச்சு நடக்கும் என்று கருதுகிறீர்களா?

**ப**: காங்கிரஸ் தீர்மானத்திற்கும் பொதுஜனப் போராட்டத்தை ஆரம்பிப்பதற்குமிடையில், இடைக்காலம் இருக்கும் என்றே நிச்சயமாகக் கருதுகிறேன். என் வழக்கத்தை அனுசரித்து நான் என்ன செய்யவேண்டும் என்று விரும்புகிறேனே அதை, ஒரு விதமான சமரசப் பேச்சு என்று சொல்லலாமா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், நிச்சயமாக வைஸ்ராய்க்கு ஒரு கடிதம் போகும். அது இறுதி எச்சரிக்கையாக இல்லாமல், தகராறைத் தவிர்ப்பதற்கான ஒரு மனப்பூர்வமான வேண்டுகோளாகவே இருக்கும். அதற்கு ஆதரவான பதில் கிடைக்குமானால், அப்பொழுது என் கடிதமே சமரசப் பேச்சுக்கு அடிப்படையாக இருக்கும்.

**கே**: அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் கடைசிக்கோரிக்கைக்கு, பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடமிருந்தும் ஐக்கிய நாடுகள் சங்கத்தினிடமிருந்தும் பதில் வர நீங்கள் அதிக

பட்சம் எவ்வளவு காலம் காத்திருக்கத் தயாராக இருக்கிறீர்கள்.

ப: எந்த நோக்கத்தின் பேரில் உடனே வெளியேறிவிட வேண்டும் என்று கோரப்படுகிறதோ அதுவே, நீண்ட இடைக்காலத்தை அனுமதிப்பதற்கில்லை என்பதைக் காட்டுகிறது. ஏதோ சாதகமான நிலைமை ஏற்படலாம் என்ற நோக்கத்துடனேயே இடைக்கால அவகாசம் கொடுக்கப்படுகிறது. எனினும், அந்த இடைக்காலத்தில் போர் நிறுத்தப்படமாட்டாது. சுதந்திர இந்தியாவின் முழு ஆதரவையும் யுத்த முயற்சிக்குச் சாதகமாகத் திரட்ட வேண்டும் என்பதில் காரியக் கமிட்டியே அதிக ஆர்வத்துடன் இருக்கிறது; இதைச் செய்ய வேண்டும் என்றும் அவசரப்படுகிறது. இந்தியா முழுவதிலும் மோசமான வகையில் உண்டாக்கப்பட்டிருக்கும் செயலற்ற நிலையை, நமது சக்திக்கு அப்பாற்பட்ட சந்தர்ப்பங்களுக்கு அவசியமான காலத்திற்கு மேல் நீடித்துக்கொண்டு போவது காங்கிரஸ், பிரிட்டிஷ் சர்க்கார் ஆகிய இரு சாராருமே செய்யும் பெரும் தவருக முடியும்.

* * *

## 'நியூஸ் கிராணிகிளு'க்கு ஸ்ரீ காந்தியின் பதில்

பம்பாய், ஆகஸ்டு, 8

'நியூஸ் கிராணிகிள்' எழுதியிருந்த தலையங்கத்திற்குப் பதிலாக ஸ்ரீ காந்தி இன்று பேட்டியில் கூறியதாவது :

"தீர்மானம் இன்று மாலை நிறைவேறிவிடுமானல் சோகநாடகத்தில் நானே பிரதான நடிகனக இருப்பேன். ஆகையால் நான் பிரிட்டிஷாரிடம் துவேஷம் காட்டும் குற்றத்தைச் செய்பவனுகிறேன் என்றோ, பகைவர்களான அச்சு நாடுகளுடன் சமாதானமாகப் போவதை விரும்புகிறேன் என்றோ பொறுப்புள்ள பிரிட்டிஷார் யாராவது கருதுவார்களானல் அது பயங்கரமானதாகும். பிரிட்டிஷார் மீது எனக்கு துவேஷம் இருக்கிறது என்று சமீபகாலத்தில் வேறு எந்த பிரிட்டிஷாரும் என்மீது குற்றஞ்சாட்டியதில்லை. என்றாலும், நான் குற்றவாளி அல்ல என்பதைத் திட்டவட்டமாக மறுக்கிறேன். என் மக்கள் மீது எனக்கு எவ்வளவு அன்பு உண்டோ அவ்வளவு அன்பு பிரிட்டிஷார் மீதும் எனக்கு உண்டு. இதற்காக நான் பெருமை பாராட்டிக் கொள்ளவில்லை. ஏனெனில், எந்த விதி விலக்கும் இல்லாமல் மனித வர்க்கத்தினர் எல்லோரிடத்திலும் எனக்குச் சமமான அன்பு இருக்கிறது. பதிலுக்கு அவர்கள் அன்பு காட்டவேண்டும் என்று நான் கோரவில்லை. உலகத்தில் எனக்கு விரோதியே இல்லை. அதுவே என் சித்தாந்தம்.

"தீர்மானத்தைத் தயாரித்தவர்கள் எதிர்பார்க்கும் கஷ்டங்களுக்கெல்லாம் அதில் வகைகள் செய்யப்பட்டிருக்கின்றன. பொருத்தமான

எல்லாவகையான வாதங்களுக்கும் அதில் பதில் சொல்லப்பட்டிருக்கிறது. நியாயமான கண்டனம் ஏதாவது இருக்குமானால் அதை ஆலோசித்து அதற்கு வேண்டிய பரிகாரம் செய்யவும் காங்கிரஸ் தயாராக இருக்கிறது என்று காங்கிரஸின் சார்பில் நான் சொல்ல முடியும். இந்தியாவின் சுதந்திரத்தை உடனடியாக ஒப்புக்கொண்டுவிடுவதில் என்னென்ன கஷ்டங்கள் இருக்கின்றன என்பதைக் குறித்து உடனடியாக விவாதிக்கும் சிரமத்தைக்கூட பொறுப்புவாய்ந்தவர்கள் யாரும் எடுத்துக்கொள்ளவில்லை. யுத்தம் நடந்து கொண்டிருக்கும்வரையில் நேச தேசத்தினரின் ராணுவ நடவடிக்கைகளுக்கு காங்கிரஸ் தனது சம்மதத்தை அளித்திருப்பதே, எத்தகைய கண்டனத்திற்கும் சரியான பதிலாகும்.

"இந்தியாவின் சுதந்திரத்தை ஒப்புக் கொண்டுவிடுவதானால் பிரிட்டிஷாருக்கோ, நேசதேசத்தினருக்கோ ஆபத்து எதுவும் ஏற்படுவதற்கில்லை. ஆபத்தெல்லாம் இந்தியாவுக்குதான் இருக்கிறது. ஆனால் எந்த அபாயத்தையும் சமாளிக்க இந்தியா தயாராயிருக்கிறது. யுத்தத்தைத் தொடர்ந்து நடத்திக் கொண்டு போவதைப் பொறுத்தவரை பிரிட்டிஷாருக்கு ஆபத்து எதுவுமில்லை என்பது மாத்திரமல்ல, அவர்களுக்கு லாபமும் இருக்கிறது. நீதியான இந்த ஒரு காரியத்தைச் செய்துவிடுவதன் மூலம், 40 கோடி மக்களைக் கொண்ட ஒரு நேச நாட்டை பிரிட்டன் அடைவதுடன், நீதி வழங்கியுள்ளோம் என்ற உணர்வினால் ஏற்படும் பலத்தையும் பிரிட்டன் பெறுகிறது."

"சாத்தியமானவரையில் துரிதமானதாகவும் வேகமானதாகவும் இருக்கக்கூடிய பகிரங்கப் புரட்சி"என்பதை இப்போது எடுத்துக் கொள்வோம். சத்தியாக்கிரகத்தைப் பற்றிக் கூறும் போது ராணுவ சொற்களையே வழக்கமாக காந்திஜி உபயோகித்து வந்திருக்கிறார் என்பது எல்லோரும் பொதுவாக அறிந்த விஷயம். அதனாலேயே இந்தப் போராட்டத்தை "அகிம்சைப் புரட்சி" என்று அவர் வர்ணித்தார். தன்னையே 'புரட்சிக்காரன்' என்றும், காங்கிரஸை 'புரட்சி ஸ்தாபனம்' என்றும் மனம்விட்டும் பகிரங்கமாகவும் அடிக்கடி கூறியும் வந்திருக்கிறார். "சாத்தியமான வரையில் துரிதமானதாகவும் வேகமானதாகவும்" என்று அவர் சொன்னதற்கு, பின் வரும் விவரங்கள் விளக்கமாக அமைந்திருக்கின்றன :

"கேள்வி : எவ்வளவு சீக்கிரத்தில் வெற்றி பெறலாம் என்று நீங்கள் எண்ணுகிறீர்கள்? அந்த வேகத்திற்குப் பூரணமான பொது வேலை நிறுத்தம் அவசியமானது அல்லவா?

"பதில் : மக்கள் நம்பினாலும் சரி, நம்பாது போனாலும் சரி, அகிம்சை நடவடிக்கையின் முடிவு முற்றிலும் கடவுளிடமே இருக்கிறது. எனக்கு என்ன பலம் இருந்தாலும் அது என் சொந்த பலம் அல்ல. அதன் ஒவ்வொரு துளியும் சத்தியமாகிய கடவுளிடமிருந்து வருகிறது. அவர் ஆகாயத்தில் மேகங்களிடையே இல்லை. அவர் என் வாழ்வின் ஒவ்வோர் அணுவிலும் இருக்கிறார். ஆகையால் ஜெனரல் வேவலைப் போல நான் திட்டவட்டமாக எதையும கூறிவிட முடியாது. தமது படை அமைப்பும், செய்யும் ஏற்பாடுகளும், அறிய முடியாத, புலனுக்கு புலப்படாத கடவுள் அல்லது சத்தியம் என்ற சக்தியோ, அல்லது மனித அறிவு அளிக்கும் வேறு எந்தப் பெயரைக் கொண்ட சக்தியோ

தோற்கடித்துவிட முடியாததாக இருக்கவேண்டும், இருக்க முடியும் என்று ஜெனரல் வேவல் எண்ணுகிறார். அவர் அப்படித்தான் எண்ண வேண்டும். ஆனால் அது என்னால் முடியாது.

"என்றாலும், துரிதமாக முடிவதற்குப் பொது வேலை நிறுத்தம் அவசியம் என்று நீங்கள் சொல்லுவது சரியே. அது என் நோக்கத்திற்கு அப்பாற்பட்டது அல்ல. ஆனால், பொது ஜனப் போராட்டம் விரோத உணர்ச்சியினால் உருவாவது அல்ல, மிகுந்த நட்பு உணர்ச்சியினால் உருவாவதே யாகும். அவ்விதம் நான் திரும்பத் திரும்பக் கூறிவருவதை அனுசரித்தே நான் ஒவ்வொரு முறையையும் கைக்கொள்வேன். ஆகையால் நான் முழு எச்சரிக்கை யுடன் முன் செல்ல வேண்டும். பொது வேலை நிறுத்தம் தவிர்க்க முடியாத அவசியமாகிவிடுமானால், அதற்கும் நான் பின்வாங்க மாட்டேன்."

—'ஸ்டேட்ஸ்மன்'–7—8—1942

"இந்தியாவின் மனமுவந்த ஒத்துழைப்பைப் பெற்றாலன்றி, பிரிட்டன் அது இருந்துவரும் பேரபாய நிலையிலிருந்து விடுபட முடியாது என்று இங்குள்ள நாம் கருதுகிறோம். தாங்கள் இன்று சுதந்திரமாக இருக்கிறோம் என்ற எண்ணம் மக்களுக்கு ஏற்பட்டாலன்றி, அந்த ஒத்துழைப்பு சாத்திய மில்லை. அந்நிய ஆதிக்கத்தின் கீழ் நீண்டகாலம் அவதிப்பட்டு அடைந்த சுதந்திரத்தை அவர்கள் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமானால், மக்கள் துரிதமாகச் செயல்பட வேண்டும். அவர்களுக்கு உற்சாகம் ஏற்படும்படிச் செய்ய உண்மையான செயல் அத்தியாவசியமாக இருக்கும்போது, வாக்குறுதி களினால் மாத்திரம் ஏராளமான பொதுமக்களின் இயல்பை யாராலும் மாற்றிவிட முடியாது."

—'ஸ்டேட்ஸ்மன்' – 9—8—1942

"இறுதியில் நடைபெறப்போகும் போராட்டம்; இதில் எவ்வளவு பேராபத்து இருந்தாலும் அதற்கும் தயாராக இருக்கத் தயங்கமாட்டேன்" என்று காந்திஜி கூறியதற்கு அரசாங்க அறிக்கை கற்பிக்கும் விஷமத்தனமான பொருள் தவறு என்பதை மேலே சொன்ன கருத்துக்கள் தெளிவாக்குகின்றன.

"இயக்கத்தின் தலைவர் விஷயத்தில் குறுக்கீடு ஏற்படும் போது, எல்லா காங்கிரஸ்காரர்களும் தங்களுக்குத் தாங்களே செயல்பட வேண்டும்" என்று காந்திஜி கூறியிருப்பது தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டிருக்கிறது; எல்லாத் தரத்தினரும் தங்களைத் தாங்களே தலைவர்களாக எண்ணிக் கொண்டு மக்களைத் தவறான வழியில் நடத்திச் சென்று விடுகின்றனர் என்பது முந்திய அனுபவ மாகும். ஆகையால் அகிம்சை முறையை அனுசரித்து ஒவ்வொரு வரும் தமக்கு உசிதம் எனத் தோன்றிய வகையில் தாமே செயல் பட வேண்டும் என்றே காந்திஜி முன்னெச்சரிக்கையுடன் அவ் வாறு கூறினார்.

உங்கள் உண்மையுள்ள,

பியாரிலால்

## 49

உள்துறை இலாகா,
புது டில்லி,
24-2-1943

பியாரிலால்,
சிறை முகாம்,
புனா.

அன்புள்ள ஸ்ரீ பியாரிலால்,

ஸர் ரிச்சர்டு டாட்டென்ஹாமுக்கு நீங்கள் எழுதிய பிப்ரவரி 18-ஆம் தேதிக் கடிதம் கிடைத்தது என்று அறிவிக்கும்படி அவர் விரும்பியதற்கிணங்கவே, இதை எழுதியிருக்கிறேன்.

உங்கள் உண்மையுள்ள,
**எஸ். ஜே. எல். ஆலிவர்**

## 50

# சர் ரெஜினல்டு மாக்ஸ்வெல்லின் பிரசங்கம்

சிறை முகாம்,
21-5-1943

சர் ரெஜினல்டு மாக்ஸ்வெல்,
உள்துறை மந்திரி,
இந்திய அரசாங்கம், புதுடில்லி.

அன்புள்ள ஸர் ரெஜினல்டு மாக்ஸ்வெல்,

எனது உண்ணாவிரதத்தைக் குறித்து மத்திய சட்டசபையில் வந்த அரசாங்கத் தீர்மானத்தின் மீது நீங்கள் பிப்ரவரி 15-ஆம் தேதி செய்த பிரசங்கத்தை இம்மாதம் 10-ஆம் தேதிதான் நான் படித்தேன். அதற்கு பதில் சொல்ல வேண்டியது அவசியம் என்று உடனே கருதினேன். இன்னும் முன்பே அதை நான் படித்திருக்க வேண்டும் என்பதே என் விருப்பம்.

நீங்கள் கோபத்துடனிருக்கிறீர்கள் என்பதை நான் காண்கிறேன்; அல்லது அந்தப் பிரசங்கத்தைச் செய்த போதாவது நீங்கள் கோபத்துடன் இருந்திருக்கவேண்டும். சந்தேகமின்றி நீங்கள் தவறான விவரங்களையெல்லாம் சொல்லியிருப்பதற்கு நான் வேறு எந்தக் காரணத்தையும் காணமுடியவில்லை. அவற்றை

எடுத்துக் காட்டும் ஒரு முயற்சியே இக்கடிதம். நீங்கள் ஓர் அதிகாரி என்ற முறையில் நான் இதை எழுதவில்லை. ஆனால் மனிதனுக்கு மனிதன் என்ற முறையிலேயே இதை எழுதுகிறேன். உங்கள் பிரசங்கத்தைப் படித்ததும் எனக்கு ஏற்பட்ட முதல் எண்ணம், உண்மைகளை அது வேண்டும் என்றே திரித்துக் கூறுகிறது என்பதுதான். ஆனால் சீக்கிரத்திலேயே என் கருத்தை மாற்றிக் கொண்டேன். உங்கள் பிரசங்கத்தின் போக்குக்குச் சாதகமான பொருள் கொள்ளுவது சாத்தியம் என்றிருக்கும் வரையில், பாதகமான அர்த்தத்தை நிராகரித்துவிட வேண்டியதே; திரித்துக் கூறப்பட்டிருப்பவை என்று எனக்குத் தோன்றுபவையெல்லாம் வேண்டும் என்றே திரித்துக் கூறப்பட்டிருப்பவை அல்ல என்று நான் எண்ணிக்கொள்ளவேண்டியதே.

''உண்ணாவிரதத்தில் கொண்டுபோய்விட்ட கடிதப் போக்குவரத்து இருக்கிறது. அதைக் குறித்து யாரும் அவரவருக்குத் தோன்றும்வகையில் பொருள் கொள்ளலாம்" என்று சொல்லியிருக்கிறீர்கள். என்றாலும் உங்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்கு, "கீழ்க்கண்ட உண்மைகளை அடிப்படையாகக் கொண்டு அவற்றை வாசிக்கலாம்" என்றும் சொல்லியிருக்கிறீர்கள். அப்படியாயின், அவர்கள் விருப்பம்போல் பொருள் செய்து கொள்ள நீங்கள் விட்டீர்களா?

நீங்கள் குறிப்பிட்ட "உண்மை"களை இப்பொழுது வரிசைக் கிரமமாக எடுத்துக் கொள்ளுகிறேன்:

1. "ஆகஸ்டு 8–ஆம் தேதி காங்கிரஸ் கட்சி இந்தத் தீர்மானத்தைச் செய்த சமயத்தில், இந்நாட்டின் மீது ஜப்பான் படையெடுக்கக் கூடும் என்ற எண்ணம் இருந்துவந்தது."

அந்த எண்ணம் காங்கிரஸினுடையது, ஆனால் அதற்கு ஆதாரமில்லை என்ற பொருளையே நீங்கள் அவ்விதம் கூறியிருக்கிறீர்கள் என்று தோன்றுகிறது. ஆனால் உண்மை என்னவெனில், அத்தகைய எண்ணத்தை உண்டாக்கியதே அரசாங்கம்தான். அதை வலியுறுத்திக் காட்டுவதற்காக அரசாங்கம் நகைக்கத் தக்கவை என்று கூடத் தோன்றும் செயல்களிலும் ஈடுபட்டது.

2. "பிரிட்டிஷ் அதிகாரம் இந்தியாவிலிருந்து வாபஸாக வேண்டும் என்று கேட்டதோடு, பிரிட்டிஷ் அதிகாரத்திற்கு பகிரங்கமான விரோதியாகவும் காங்கிரஸை வைத்துக் கொள்ள முற்பட்டது. இவ்விதம் செய்வதன் மூலம், ஜப்பானியப் படையெடுப்பு வெற்றிபெற்றால் தனக்குச் சில சாதகங்கள் ஏற்படும் என்று காங்கிரஸ் கட்சி எண்ணியிருக்கலாம்."

இது உண்மையல்ல. அதோடு உங்கள் கருத்து உண்மைக்கு முற்றிலும் மாறானதாகும். ஜப்பானியரின் வெற்றியிலிருந்து சாதகமடையலாம் என்று காங்கிரஸ் ஒருபோதும் எண்ணியதுமில்லை, அதை விரும்பியதும் இல்லை. இதற்கு மாறாக, அத்தகைய நிலை ஏற்பட்டுவிடக்கூடாது என்று காங்கிரஸ் திகில்

அடைந்தது. அந்த பயம்தான், பிரிட்டிஷ் ஆட்சி உடனே முடிவடைந்துவிட வேண்டும் என்ற ஆர்வத்தை உண்டாக்கியது. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் (1942 ஆகஸ்டு 8-ஆம் தேதி) தீர்மானமும் நான் எழுதியவைகளும் இவற்றையெல்லாம் தெளிவாகக் காட்டுகின்றன.

3. "ஆறு மாதங்களுக்குப் பிறகு இன்று, இப்போதைக்காவது ஜப்பானிய ஆபத்து குறைந்திருக்கிறது. எனவே அவர்களிடமிருந்து உடனடியாக நம்பிக்கை அளிக்கக்கூடியது எதுவும் இல்லை."

இதுவும் உங்களுடைய அபிப்பிராயமே. ஆனால் ஜப்பானிய ஆபத்து குறைந்துவிடவில்லை என்பதே என் கருத்தாகும். அந்த அபாயம் இன்னும் இந்தியாவை மிரட்டிக் கொண்டிருக்கிறது. "அந்த வகையிலிருந்து உடனடியாக நம்பிக்கை அளிப்பதற்கு எதுவும் இல்லை" என்று நீங்கள் அவதூருகக் கூறுகிறீர்கள். முன்னால் கூறப்பட்ட தீர்மானமும் நான் எழுதியவைகளும், அவற்றிற்கு நேர்மாருன உட்பொருள் கொண்டவை என்று நீங்கள் எண்ணி அதை நிரூபித்தாலன்றி, அப்படி நீங்கள் கூறியதை வாபஸ் வாங்கிக் கொண்டாக வேண்டும்.

4. "காங்கிரஸ் ஆரம்பித்த இயக்கம் திட்டவட்டமாக முறியடிக்கப்பட்டிருக்கிறது."

இக்கூற்றை நான் எதிர்த்தே ஆகவேண்டும். சத்தியாக்கிரகத்திற்கு தோல்வி என்பதே இல்லை. அடிகள், அதிலும் கொடுமையான அடிகள் கொடுக்கக் கொடுக்க அது செழித்து வளர்ச்சியடைகின்றது. ஆனால் மன ஆறுதலுக்காக அந்த உட்பொருளுக்கு நான் போகவேண்டிய அவசியமில்லை. "ஒரு முறை ஆரம்பமாகிவிட்ட சுதந்திரப்போர், ரத்தஞ்சிந்தும் தந்தையினிடமிருந்து மகனுக்குச் சொத்தாகப் போகிறது" என்று இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் ஆட்சியின் பள்ளிக்கூடங்களிலேயே நான் படித்துக் கற்றுக் கொண்டிருக்கிறேன். முயற்சியை விட்டுவிடாமலிருக்கும் வரையில், லட்சியத்தை அடைவது எப்பொழுது என்பது அவ்வளவு முக்கியமானதல்ல. அறுபது ஆண்டுகளுக்கு முன்னால் காங்கிரஸை ஆரம்பித்தபோதே லட்சியம் உதயமாகிவிட்டது. 1919 ஏப்ரல் 6-ஆம் தேதி அகில இந்திய சத்தியாக்கிரகம் ஆரம்பமானபோது இந்தியாவின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடி வரையில் மக்களிடையே விழிப்பு ஏற்பட்டது. சில காங்கிரஸ்காரர்கள் எதிர்பார்த்தபடி போராட்டத்தின் உடனடியான நோக்கம் உடனே நிறைவேறிவிடவில்லை என்பது உண்மையே. நீங்கள் விரும்பினல், இதைக் கொண்டு நிச்சயமாக மன ஆறுதல் அடையலாம். ஆனல், 'திட்டவட்டமாகவோ', அல்லது வேறு எந்த விதத்திலோ, இயக்கம் 'முறியடிக்கப்பட்டிருக்கிறது' என்பதற்கு அது ஆதாரமாகாது. தோல்வி என்பதையே கண்டறியாதவர்கள் தாங்கள் என்று சொல்லிக் கொள்ளும் ஓர் இனத்தைச் சேர்ந்த ஒருவர், பொதுஜன உணர்ச்சியை அடக்கி ஒடுக்கியதனல் எழுந்த ஒரு பொதுஜன போராட்டத்தை பயங்கரமான அதிகாரத்

தைக் கொண்டு அடக்கிவிட்டோம் என்று சொல்லிக் கொள்ளுவது, எப்பொழுதும் புத்திசாலித்தனமானது அல்ல என்பது மாத்திரமன்று, கௌரவமானதும் அல்ல.

5. " ஆகையால், இழந்துவிட்ட கௌரவத்தை, முடியுமானால் திரும்பப் பெற்று புனர்வாழ்வு பெற முயற்சிக்கலாம் என்பதுதான் இப்பொழுது காங்கிரஸ் கட்சியின் நோக்கமாகும்."

உங்கள் சொந்த அனுபவமே, இந்தத் தவறான அபிப்பிராயத்தை நிச்சயமாக மாற்ற வேண்டும். காங்கிரஸை ஒடுக்குவதற்காகச் செய்யப்பட்ட ஒவ்வொரு முயற்சியும் அதற்கு அதிக கௌரவத்தையும் பொதுஜன ஆதரவையுமே உண்டாக்கியிருக்கிறது என்பதை நான் எப்படி அறிவேனோ அதைப்போலவே நீங்களும் அறிவீர்கள். காங்கிரசை நசுக்கிவிடுவதற்காக, இப்பொழுது கடைசியாக செய்யப்பட்டிருக்கும் முயற்சி, அதற்கு மாறான பலனை உண்டாக்கிவிடப் போவதில்லை. ஆகையால், 'இழந்த கௌரவம்', 'திரும்பப் பெறுவது' என்ற பிரச்னைகள் எழுவதற்கே இல்லை.

6. " இவ்வாறாக, இப்பொழுது அவர்கள் கொண்டிருக்கும் அக்கறையெல்லாம், தங்கள் தீர்மானத்தைத் தொடர்ந்து ஏற்பட்ட விளைவுகளுக்குத் தாங்கள் பொறுப்பாளிகளல்ல என்று மறுப்பதில்தான இருக்கிறது. வைஸ்ராயுடன் ஸ்ரீ காந்தி நடத்திய கடிதப் போக்கு வரத்தில் இதைப் பற்றிக் கூறியிருக்கிறார். சங்கடமான உண்மைகளெல்லாம், அவை நிரூபிக்கப்படவில்லை என்று கூறி இப்போது தட்டிக்கழிக்கப்படுகின்றன."

'அவர்கள்' என்று கூறப்படுவது 'நான்' என்று மாத்திரமே பொருள்படும். ஏனெனில், உங்கள் பிரசங்கம் நெடுகிலும் என்னையே குறியாகக் கொண்டு தாக்கியிருக்கிறீர்கள். இப்பொழுது என்பது என் உண்ணாவிரதத்தின்போது என்பதேயாகும். வைஸ்ராய்க்கு நான் ஆகஸ்டு 14-ஆம் தேதி எழுதியபோது நான் பொறுப்பாளி அல்ல என்று கூறி மறுத்தேன் என்பதை உங்களுக்கு நினைவு படுத்துகிறேன். ஆகஸ்டு 9-ஆம் தேதி எல்லோரையும் ஒரேயடியாகக் கைது செய்ததன் மூலம் மக்களுக்கு ஆத்திரமூட்டி அவர்களை வெறிபிடித்துப் போகும் நிலைக்குக் கொண்டுபோய்விட்டது அரசாங்கம்தான். அதற்கெல்லாம் பொறுப்பாளி அரசாங்கம்தான் என்று அதே கடிதத்தில் கூறினேன். பொறுப்பெல்லாம் அரசாங்கத்தினுடையதாக இருக்கும்போது, 'சங்கடமான உண்மைகள்' என்று நீங்கள் கூறுவது எனக்குச் சங்கடமானவை அல்ல. ஆனால், 'உண்மைகள்' என்று நீங்கள் கூறுவனவெல்லாம் ஒரு தலைப்பட்சமானவை, ருசுக்கள் இல்லாதவை.

7. "' திட்டமான சாட்சியங்களைக் கொண்டு தாங்கள் செய்தது சரி என்று அரசாங்கம்தான் காட்டவேண்டும் என்று சந்தேகத்திற்கு இடமின்றி நிச்சயமாகக் கூறுவேன்' என்று கூறுகிறார் ஸ்ரீ காந்தி. தாங்கள் செய்தது நியாயம்தான் என்று அவர்கள் யாரிடம் நிரூபிக்க வேண்டும்?"

*சர்தார் சாந்த சிங்: பாரபட்சமற்ற ஒரு விசாரணைக் கமிட்டியின் முன்னுல்.*

*சர்தார் சாந்த சிங்கின் பதில் சரியான பதில் அல்லவா? இந்தக் கேள்வியை நீங்கள் கேட்காமலிருந்தால் எவ்வளவு நன்ருக இருந்திருக்கும். ஏனெனில் இதற்கு முன்னுலேயே, உதாரணமாக ஜாலியன்வாலாபாக் படுகொலைக்குப் பிறகு இந்திய அரசாங்கம் தாங்கள் செய்தது சரி என்பதைக் காட்டுவதற்காக விசாரணைக் கமிட்டியை நியமிக்கவேண்டிய அவசியம் ஏற்படவில்லையா?*

*ஆனுல் நீங்கள் மேலும் வருமாறு கூறியிருக்கிறீர்கள்.*

*8. "தமது கடிதங்களில் மற்ருேரிடத்தில் ஸ்ரீ காந்தி இதைத் தெளிவாகக் கூறுகிருர். 'நானே தவறு செய்துவிட்டேன் என்பதை நான் உணரும்படி செய்யுங்கள். அதற்கான பரிகாரங்களைச் செய்துவிடுகிறேன்' என்று அவர் கூறுகிருர். அப்படியில்லை என்ருல் இன்னுமொன்றையாவது செய்ய வேண்டும் என்கிருர். 'காங்கிரஸ் சார்பில் நான் ஏதாவது யோசனை கூறவேண்டும் என்று நீங்கள் விரும்பினுல், காரியக்கமிட்டி உறுப்பினர்களுடன் என்னைச் சேர்த்துவையுங்கள்' என்கிருர். உண்ணுவிரதம் இருப்பதென்று அவர் யோசித்த சமயத்தில் இவையே அவரது நிபந்தனைகள் என்பது இதிலிருந்து நன்கு தெரியும். இதைத் தவிர அவர் உருவான கோரிக்கை எதையும் குறிப்பிடவில்லை."*

*இங்கே எனக்கு இரட்டை அநீதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. நண்பர் என்று கருதிய ஒருவருக்கு என் கடிதங்கள் எழுதப்பட்டவை என்ற உண்மையை நீங்கள் கவனிக்கத் தவறிவிட்டீர்கள். அத்துடன், வைஸ்ராய் தமது கடிதத்தில் தெளிவான யோசனை கூறும்படி என்னைக் கேட்டிருந்தார் என்பதையும் நீங்கள் கவனிக்கவில்லை. இந்த இரண்டு உண்மைகளையும் நீங்கள் மனத்தில் கொண்டு பேசியிருந்தீர்களாயின், எனக்கு இழைத்திருப்பதைப் போன்ற தவறைச் செய்திருக்க மாட்டீர்கள். ஆனுல், உங்களுடைய 9-ஆவது குற்றச்சாட்டிற்கு இப்பொழுது நான் வருகிறேன். நான் கூறுவது என்ன என்பது அப்போது உங்களுக்குத் தெளிவாகத் தெரியும்.*

*9. "ஆனுல் இப்பொழுது புதிய விளக்கங்கள் வெளிப்படுகின்றன. அரசாங்கம் அவருடைய கோரிக்கைகளில் எதற்கும் உடன்படாமல், உண்ணுவிரதம் இருப்பதற்காகவும் உண்ணுவிரதமிருக்கும் காலத்திற்கும் அவரை விடுதலை செய்யத் தயாராயிருப்பதாக ஸ்ரீ காந்திக்கு அறிவித்தது. உண்ணுவிரதத்தின் விளைவுகளுக்கு எந்த விதத்திலும் அரசாங்கம் பொறுப்பாளி அல்ல என்பதைத் தெளிவு படுத்துவதற்காகவே அரசாங்கம் அவ்விதம் அறிவித்தது. அதற்கு ஸ்ரீ காந்தி அளித்த பதிலில், கைதியாகவே உண்ணுவிரதமிருக்கத் தாம் முடிவு செய்திருப்பதாகவும், தம்மை விடுதலை செய்தால் உடனே உண்ணுவிரதம் நிறுத்தப்பட்டுவிடும் என்றும் கூறினுர். இவ்விதம் அவர் விடுதலை செய்யப்பட்டிருப்பாராஞல், உண்ணுவிரதம் இருப்பதற்கு என்ன நோக்கத்தை அவர் கூறியிருந்தாரோ அது நிறைவேருமற் போயிருந்தாலும், உண்ணுவிரதம்*

பின்னணிக்குப் போயிருக்கும். சுதந்திரமானவராக அவர் இந்தக் கோரிக்கைகளைக் கேட்கவும் மாட்டார், உண்ணாவிரதம் இருக்கவும் மாட்டார். இந்த வகையில் பார்த்தால், தம்மை விடுதலை செய்யவேண்டும் என்பதற்காகவே அவர் உண்ணாவிரதம் இருக்க விரும்பினார் என்று தோன்றும்.''

என்னை விடுதலை செய்யத் தயார் என்று அறிவித்த கடிதத்துடன் அரசாங்கம் வெளியிடுவதற்கு இருந்த ஓர் அறிக்கையின் நகலையும் எனக்கு அனுப்பியிருந்தார்கள். ''உண்ணாவிரதத்தின் விளைவுகளுக்கு அரசாங்கம் பொறுப்பை ஏற்றுக் கொள்ள விரும்பாததால் என்னை விடுதலை செய்யத் தயாராயிருப்பதாக'' அக்கடிதம் கூறவில்லை. அவமதிப்பான அந்த வாக்கியத்தை நான் பார்த்திருப்பேனாயின் அதை ஏற்க அப்பட்டமாக மறுத்து பதில் கூறியிருப்பேன். என் மனத்தில் கபடமின்றி அந்த யோசனையை நியாயமான முறையில் அர்த்தம் செய்து கொண்டேன். அதை ஏன் ஏற்றுக் கொள்ளுவதற்கில்லை என்பதையும் என் பதிலில் நான் விவரமாகக் குறிப்பிட்டிருந்தேன். என் பழக்கத்தை அனுசரித்து, எந்தவகையிலும் எந்த உருவிலும் அரசாங்கம் தவறாக எண்ணிக் கொண்டுவிடக்கூடாது என்பதற்காக, உண்ணாவிரதம் இருக்கும் யோசனை எவ்விதம் வந்தது, சுதந்திரமாக இருப்பவனாக அதை நான் ஏன் மேற்கொள்ள முடியாது என்பதையெல்லாம் பற்றி அவர்களுக்கு எடுத்துக் கூறினேன். உண்ணாவிரதமிருக்கும் நாளை, அரசாங்கத்தின் வசதிக்காக, என் விருப்பத்திற்கு மாறாகக் கூட, ஒரு நாளைக்கு தள்ளிப்போடவும் முன் வந்தேன். அந்த யோசனையையும் அறிக்கையின் நகலையும் என்னிடம் கொடுப்பதற்காகக் கொண்டு வந்த ஸ்ரீ இர்வின், நான் காட்டிய இந்த மரியாதையைப் பாராட்டினார். என்னுடைய இந்த பதிலை, திருத்திய அறிக்கையை வெளியிட்ட சமயத்தில், பொது ஜனங்களுக்குக் கூறாமல் அரசாங்கம் ஏன் மறைத்தது? அதற்குப் பதிலாக விரும்பத்தகாத ஒரு வியாக்கியானத்தையும் ஏன் கூற முன்வந்தது? என்னுடைய கடிதம் ஒரு முக்கியமான சாட்சியம் அல்லவா?

இரண்டாவது அநீதியை இப்பொழுது கவனிக்கலாம். நான் விடுதலை செய்யப்பட்டிருப்பேனாயின், எந்த நோக்கத்தின் பேரில் உண்ணாவிரதமிருக்கப்போவதாகக் கூறினேனோ அது பின்னணிக்குப் போயிருக்கும் என்று கூறுகிறீர்கள். சுதந்திரமாக உள்ளவன் என்ற நிலையில் இந்தக் கோரிக்கைகளை நான் விடுத்திருக்கமாட்டேன், உண்ணாவிரதமும் இருந்திருக்கமாட்டேன் என்றும் சொல்லுகிறீர்கள். காங்கிரஸ்மீதும் என் மீதும் சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகளைக் குறித்து பாரபட்சமற்ற பகிரங்க விசாரணையை நடத்தவேண்டும் என்று சுதந்திரமானவன் என்ற வகையில் நான் கிளர்ச்சி செய்ய முற்பட்டிருப்பேன். சிறை வைக்கப்பட்டிருக்கும் காங்கிரஸ்காரர்களைப் பார்க்க அனுமதி வேண்டும் என்றும் கேட்டிருப்பேன். என்னுடைய கிளர்ச்சி அரசாங்கத்தின் நிலையில் எத்தகைய மாறுதலையும் ஏற்படுத்தாவிடில், அப்பொழுதும் நான் உண்ணாவிரதம் இருந்திருப்பேன். நீங்கள் கடுமையான

ஆத்திரத்தில் பேசியிருக்கிறீர்கள். இல்லாவிடில், என் கடிதத்தி லேயே இவையெல்லாம் தெளிவாகத் தெரிவதை நீங்கள் கண்டி ருப்பீர்கள். நான் முன்னால் நடந்து கொண்டிருக்கும் விதமும், நீங்கள் இவற்றையெல்லாம் அறிந்து கொள்ளுவதற்கு உதவியாக இருந்திருக்கும். அதற்குப் பதிலாக, சாதாரணமாகப் படித்துப் பார்த்தால் நீங்கள் ஊகிக்க உரிமையில்லாத ஒரு பொருளை அக்கடிதத்திலிருந்து ஊகித்துக் கொண்டிருக்கிறீர்கள். மேலும், காங்கிரஸ்காரர்களும், காங்கிரஸ்காரர்களல்லாதவர்களும் இழைத் திருப்பதாகச் சொல்லப்படும் நாசவேலைகளின் கதையையும் ஆராய்ந்து பார்க்கும் சந்தர்ப்பமும், சுதந்திரமானவன் என்ற முறையில் எனக்கு இருந்திருக்கும். வேண்டும் என்றே கொலைச் செயல்களை அவர்கள் செய்திருக்கிறார்கள் என்று நான் கண்டால், இதற்கு முன்பு நான் செய்திருப்பதைப் போன்றே இப்பொழு தும் உண்ணாவிரதம் இருந்திருப்பேன். ஆகையால் நான் விடுதலை செய்யப்பட்டிருப்பேனாயின், வைஸ்ராய்க்கு நான் எழுதிய கடிதத் தில் கண்ட கோரிக்கைகள் பின்னணிக்குப் போயிருக்கமாட்டா என்பதை நீங்கள் காணலாம். ஏனெனில், உண்ணாவிரதமின்றியே அக்கோரிக்கைகளை வேறு வழியிலும் நான் வற்புறுத்தியிருக்க முடியும். எனவே, விடுதலையாக வேண்டும் என்ற விருப்பத்திற் கும் உண்ணாவிரதத்திற்கும் எள்ளளவும் சம்பந்தமே இல்லை. மேலும் ஒரு சத்தியாக்கிரகிக்கு சிறையிலிருப்பது சங்கடமான ஒரு விஷயம் அல்ல. ஏனெனில், அவனுக்கு சிறையே சுதந்திரத்திற்கு ஒரு வாயில் ஆகும்.

10. "அவருக்கு எதிராக காங்கிரஸ் காரியக்கமிட்டியின் தீர்மானங் கள் பலவற்றை நான் குறிப்பிட முடியும். ....ஸ்ரீ. காந்தியே அவ்விஷயத்தைக் குறித்து 'ஹரிஜன்' பத்திரிகையில் 1939 ஆகஸ்டு 19—ஆம் தேதி எழுதியிருக் கிறார். 'உண்ணாவிரதம் உண்மையிலேயே ஒரு தொத்து நோய் போலவே ஆகிவிட்டது' என்று அவரே கூறியிருக்கிறார்."

நீங்கள் குறிப்பிட்டிருக்கும் என் அபிப்பிராயத்தில் இப் பொழுது எந்தவிதமான மாறுதலும் ஏற்பட்டுவிடவில்லை. நீங்கள் எடுத்துக் காட்டியிருக்கும் என் கருத்தை எந்தவிதமான ஆத் திரமுமின்றி நீங்கள் படித்திருப்பீர்களானால், என் கடிதத்திற்கு நீங்கள் அத்தகைய வியாக்கியானம் செய்திருக்கமாட்டீர்கள்.

11. "ஸ்ரீ காந்தி, தமது ராஜ்கோட் உண்ணாவிரததிற்குப் பிறகு உண்ணா விரத தத்துவத்தைக் குறித்து 1939 மே 20-ஆம்தேதி 'ஹரிஜன், பத்திரிகை யில் ஏதோ கூறியிருக்கிறார்.' அது ஹிம்சையினால் களங்கமாகிவிட்டது என்பதை இப்பொழுது நான் காண்கிறேன்' என்கிறார். மேலும் அவர், 'அகிம்சை வழியோ மனத்தை மாற்றும் முறையோ, இதுவல்ல,' என்றும் சொல்லுகிறார்."

என்னுடைய கட்டுரையை நீங்கள் முற்றிலும் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள் என்பதைக் கூற வேண்டியிருப் பதற்காக வருந்துகிறேன். நான் எழுதியவைகளைத் தொகுத்து ஏ. ஹிங்கொரானி வெளியிட்ட புத்தகம் அதிருஷ்டவசமாக என் னிடம் இருக்கிறது. "சுதேச மன்னர்களுக்கும் அவர்களுடைய

மக்களுக்கும்'' என்ற பெயரில் அப்புத்தகம் வெளிவந்திருக்கிறது. அதிலிருந்து நீங்கள் குறிப்பிடும் 'ஹரிஜன்' கட்டுரையைக் கீழே கொடுக்கிறேன்: ''முன்பு மேற்கொண்ட உண்ணாவிரதங்களையெல்லாம்விட இது வெற்றியடைந்திருக்கிறது என்று சொல்ல, உண்ணாவிரதத்தின் முடிவில், என்னை நானே அனுமதித்துக் கொண்டேன். ஆனால் அது ஹிம்சையினால் களங்கமுற்றிருந்தது என்பதை இப்பொழுது காண்கிறேன். உண்ணாவிரதத்தை மேற்கொண்டபோது பிரிட்டிஷ் மேலதிகாரம் உடனே தலையிட வேண்டும் என்று கோரினேன். தாகூர் சாகிப் அளித்திருந்த வாக்குறுதியை நிறைவேற்றும்படிச் செய்வதற்காகவே இவ்வாறு செய்துவிட்டேன். இது அகிம்சை வழியோ அல்லது மனத்தை மாற்றும் முறையோ அல்ல; இது ஹிம்சை அல்லது கட்டாயப்படுத்தும் வழியாகும். என் உண்ணாவிரதம் தூய்மையானதாக இருந்திருக்க வேண்டுமானால், தாகூர் சாகிபை மாத்திரமே நான் கேட்டிருக்க வேண்டும். அவர் மனம் இளகும்படிச் செய்ய என்னால் முடியாவிடில், நான் மனத்திருப்தியுடன் இறக்க முற்பட்டிருக்க வேண்டும்....'' சந்தர்ப்பப் பொருத்தமின்றி அங்கொன்றும் இங்கொன்றுமாக சில வாக்கியங்களை மாத்திரம் எடுத்து நீங்கள் தவறாக உபயோகித்திருப்பதை உணருகிறீர்கள் என்றே நம்புகிறேன். என்னுடைய அந்த உண்ணாவிரதம் அகிம்சையினால் களங்கமுற்றது என்று நான் கூறியது, அதை ஆரம்பித்ததே தவறு என்பதனால் அல்ல; ஆனால், பிரிட்டிஷ் மேலதிகாரத்தின் தலையீட்டை நான் நாடினேன் என்பதனாலேயே அவ்வாறு சொன்னேன். அக்கட்டுரையைப் பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது என்றே நினைக்கிறேன். அது எப்படியாயினும், தாங்கள் செய்திருக்கும் தவறைத் திருத்திக் கொள்ளுவீர்கள் என்று நான் எதிர்பார்க்கலாமா? ராஜ்கோட் சம்பவம் என் வாழ்க்கையிலேயே மிகவும் மகிழ்ச்சியளிக்கக் கூடிய ஒன்றாகும். ஏனெனில், செய்த தவறை ஒப்புக்கொண்டு தீர்ப்பின் பலனைத் தியாகம் செய்வதன் மூலம் கடவுள் அதற்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ள எனக்கு தைரியத்தை அளித்தார். பிராயச்சித்தம் செய்து கொண்டதால், என் பலம் அதிகமாகியது.

12. *'' என்னைப் பொறுத்தவரையில், ஒரு விஷயத்தை நான் ஒப்புக்கொள்ளவே வேண்டும். எதிராளியின் காருண்ய உணர்ச்சியையும், பலவீனர்களிடம் காட்டும் வீரனின் தயையையும் அல்லது இரக்கத்தையும் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளப் பார்ப்பதோ, முற்றிலும் லோகாயதமான பலனை அடைவதற்காக, பொதுஜன உணர்ச்சியைத் தூண்டிவிடுவதற்காக தெய்விகப் பொறுப்பான உயிரை அற்பமாக எண்ணுவதோ, நாகரிகம், கண்ணியம் ஆகியவற்றைப் பற்றி மேற்கத்திய நாட்டினர் கொண்டிருக்கும் கருத்துக்கு நேர்முரணானதாகும்.''*

என்னைக் காட்டிலும் உங்களுக்கு அதிகமாகத் தெரிந்திருக்கக்கூடிய ஒரு விஷயத்தைக் குறித்து அதிக எச்சரிக்கையுடனேயே நான் பேச வேண்டும். என்றாலும், காலஞ் சென்ற மாக்ஸ்வினி மேற்கொண்ட சரித்திரப் புகழ்பெற்ற உண்ணாவிரதத்

தைக் குறித்து உங்களுக்கு நினைவுபடுத்துகிறேன். சிறையிலேயே சாகும்படி அவரை பிரிட்டிஷ் அரசாங்கம் விட்டுவிட்டது என் பதை அறிவேன். ஆனால், ஐரிஷ் மக்கள், அவரை வீரர் என்றும், லட்சியத்திற்காக உயிரை அர்ப்பணம் செய்த தியாகி என்றும் பாராட்டினார்கள். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் செய்கை "முதல் தரமான அரசியல் தவறு" என்று காலஞ்சென்ற ஸ்ரீ ஆஸ்குவித் கூறினார் என எட்வர்டு தாம்ஸன் தாம் எழுதிய நூலில் குறிப் பிட்டிருக்கிறார். அந்த ஆசிரியர் மேலும் கூறுவதாவது: "அங் குலம் அங்குலமாக மாக்ஸ்வினி சாக அனுமதிக்கப்பட்டபோது, உலகம் ஆச்சரியத்துடனும் அனுதாபத்துடனும் அதைக் கவனித் துக் கொண்டிருந்தது. எண்ணற்ற பிரிட்டிஷ் ஆண்களும் பெண் களும், அப்படி அடிமுட்டாள்தனமாக இருக்க வேண்டாம் என்று தங்கள் அரசாங்கத்தைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள்." எதிராளியின் காருண்ய உணர்ச்சியையும் வீரன் பலவீனர்களிடம் காட்டும் பெருந்தன்மையையும், இரக்கத்தையும் பயன்படுத்தி நலன்பெறப் பார்ப்பது, நேர்மையைப் பற்றிய மேற்கத்திய நாட் டினரின் கருத்துக்கு முரணானதா? எதிராளியின் உயிரை ரகசிய மாகவோ, அல்லது பகிரங்கமாகவோ போக்குவது சிறந்ததா அல்லது உண்ணாவிரதத்தினாலோ அல்லது தன்னைத் தானே பலியிடும் வேறு எந்தக் காரியத்தினாலோ எதிராளியிடம் உயர்ந்த உணர்ச்சிக்கு இடம் உண்டு என்ற நம்பிக்கையுடன் அந்த உணர்ச்சிகளைத் தூண்டுவது சிறந்ததா? அல்லது எதிராளியின் உயிரைத் துச்சமாக மதித்து அவரையும் அவரை அண்டியிருப் பவர்களையும் அழித்துவிட முயற்சிப்பது சிறந்ததா?

13. "அவர் சொல்லுவதெல்லாம் இதுதான்: 'அரசாங்கம் சரியா கவே நடந்திருக்கிறது என்றும், தவறு செய்திருப்பது காங்கிரஸ்தான் என் றும், நீங்கள் கூறுகிறீர்கள். காங்கிரஸ் சரியாகவே நடந்து கொண்டிருக்கிறது, தவறு செய்திருப்பது அரசாங்கமே என்று நான் சொல்லுகிறேன். எது சரி என் பதை நிரூபிக்கும் பொறுப்பை உங்களிடமே விட்டுவிடுகிறேன். இதில் எது சரி என்பதை உணர்ந்து கொள்ளவேண்டிய ஒருவன் நானே. ஒன்று, நீங்கள் தவறு செய்திருக்கிறீர்கள் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும் அல்லது நீங் கள் கூறவேண்டிய நியாயத்தையெல்லாம் என்னிடம் சொல்லி என்னையே இதில் ஏக மத்தியஸ்தராக வைக்கவேண்டும். இப்பொழுது நடக்கும் யுத்தத் திற்கு பொறுப்பாளி யார் என்பதில் தீர்ப்புக் கூற ஹிட்லரையே நீதிபதியாக நியமிக்கவேண்டும் என்று ஐக்கிய நாடுகளைக் கேட்பதுபோல் ஸ்ரீ காந்தியின் கோரிக்கையும் இருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. குற்றவாளியை, தன் சொந்த வழக்கில் தானே தீர்ப்புக்கூற நீதிபதியின் ஸ்தானத்தில் வைத்துவிடுவது இந்நாட்டில் வழக்கமில்லை!"

இப்படிக் கூறுவது, வைஸ்ராய்க்கு நான் எழுதிய கடிதங்களை நேர்மையற்ற முறையில் கேலிக்கூத்து செய்வதாகும். நான் சொன்னதெல்லாம் இதுதான்: "என்னை உங்களுடைய நண்பனா கக் கருத நீங்கள் அனுமதித்திருக்கிறீர்கள். என் உரிமையை வற் புறுத்தி, என்னைக் கோர்ட்டு முன்பு விசாரிக்கவேண்டும் என்று நான் கேட்கவில்லை. நான் தவறு செய்திருக்கிறேன் என்று நீங்கள்

குற்றஞ்சாட்டுகிறீர்கள். ஆனால் நானோ, உங்கள் அரசாங்கம் தான் தவறு செய்திருக்கிறது என்று வாதிக்கிறேன். உங்கள் அரசாங்கத்தின் குற்றத்தை நீங்கள் ஒப்புக்கொள்ள மறுக்கிறீர்கள். எனவே, என்ன தவறு செய்திருக்கிறேன் என்பதை நான் அறிந்துகொள்ளும்படி செய்ய நீங்கள் எனக்குக் கடமைப்பட்டிருக்கிறீர்கள். எந்த விஷயத்தில் தவறு செய்திருக்கிறேன் என்பதுபற்றி எனக்கு ஒன்றும் தெரியவில்லை. தவறு செய்திருப்பதாக நான் உணர்ந்துகொள்ளும்படி செய்வீர்களாயின், போதுமான பரிகாரங்களை நான் செய்துவிடுவேன்." என்னுடைய சாதாரணமான கோரிக்கையை எனக்கு விரோதமாகவே நீங்கள் உபயோகித்திருக்கிறீர்கள். தன்னுடைய வழக்கைத் தானே விசாரித்துத் தீர்ப்புக் கூறுவதற்காக நியமிக்கப்பட்ட ஒரு கற்பனை ஹிட்லருக்கு என்னை ஒப்பிட்டிருக்கிறீர்கள். என் சொந்தக் கடிதங்களுக்கு நான் கூறியிருக்கும் விளக்கங்களை நீங்கள் ஒப்புக்கொள்ளவில்லையானால், இந்தப் போட்டி விளக்கங்களை பாரபட்சமற்ற ஒரு நீதிபதி ஆராயட்டும் என்று நான் கேட்கக் கூடாதா? தான் எப்பொழுதும் நியாயமாகவே நடப்பதாகவும், ஆடு தான் எப்பொழுதும் குற்றம் செய்கிறது என்றும் ஓநாய் சொன்ன கதையை நான் நினைவூட்டினால், அது ஆட்சேபகரமான உதாரணமாகுமா?

14. "பகிரங்கமான ஒரு புரட்சியின் தலைவர் ஸ்ரீ காந்தி. அவர் பகிரங்கமான ஒரு புரட்சிக்காரராக இருந்துவரும் வரையில் அந்த உரிமையை (அவர் கூறுவதையும் கேட்கவேண்டும் என்ற உரிமையை) அவர் இழந்து விட்டவரே ஆவார். தமது சொந்த முறையில் வெற்றியினாலேயே தாம் இயங்குவதாக அவர் சொல்லிக் கொள்ள முடியாது. சட்டத்தை அவர் மறுத்து வருகையில், அதே சட்டத்தின் பாதுகாப்பில் அவர் பொது வாழ்க்கையில் பங்கு எடுத்துக் கொள்ளமுடியாது."

கண்டிப்பாக அகிம்சையை அனுசரிப்பவன் என்ற அடிப்படை உண்மையை நீங்கள் விட்டிருக்கிறீர்கள் என்பதைத் தவிர, நான் பகிரங்கமான ஒரு புரட்சியின் தலைவன் என்று நீங்கள் என்னை வர்ணித்திருப்பது சரியானதே. இப்படி விட்டிருப்பது, கிறிஸ்தவ வேதத்திலுள்ள கட்டளைகளில் உள்ள 'கூடாது' என்ற சொல்லை விட்டுவிட்டு, கொல்லுவதற்கும், திருடுவது போன்றவைகளுக்கும் ஆதரவாக அக்கட்டளைகளை எடுத்துக்காட்டுவதற்கு ஒப்பானதாகும். அந்தச் சொற்றொடரை நீங்கள் அலட்சியமாகக் கருதலாம்; அல்லது நீங்கள் விரும்பியபடி யெல்லாம் அதற்கு நீங்கள் வியாக்கியானம் செய்யலாம். ஆனால் ஒருவர் கூறியதை நீங்கள் மேற்கோளாகக் குறிப்பிடும்போது, அவர் சொன்ன விஷயத்தையே முற்றிலும் மாற்றிவிடும் வகையில் எதையும் நீங்கள் அவர் கூறியதிலிருந்து நீக்கிவிட்டுச் சொல்லக்கூடாது. என்னை நானே ஒரு பகிரங்கமான புரட்சிக்காரன் என்று பலதடவைகளில் கூறிக்கொண்டு வந்திருக்கிறேன். இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டிற்காக நான் லண்டனுக்குச் சென்றிருந்த போதும் இதையே சொல்லியிருக்கிறேன். ஆனால்,என் மீதுநீங்கள்

என்ன குற்றச்சாட்டை இப்பொழுது சுமத்தியிருக்கிறீர்களோ இது இதற்கு முன்னால் சுமத்தப்பட்டதில்லை. நான் பொதுஜன சட்டமறுப்பு இயக்கத்தை நடத்திக் கொண்டிருந்த போதிலும், நானும் பங்கு எடுத்துக்கொள்ளும் ஒரு சமரச மகாநாட்டைக் கூட்ட லார்டு ரீடிங் தயாராக இருந்தார் என்பது உங்களுக்கு நினைவிருக்கலாம். ஆனால், அச்சமயம் சிறையிலிருந்த அலி சகோதரர்களை விடுதலை செய்தாக வேண்டும் என்று நான் வற்புறுத்தியதனால் சமரச மகாநாடு கூட்டப்படவில்லை. புரட்சி செய்தவர்களான வாட் டைலரும், ஜான் ஹாம்டனும் வீரர்கள் என்றுதான் நான் வாலிபனாக இருந்தபோது எனக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்ட பிரிட்டிஷ் சரித்திரம் போதித்தது. சமீப காலத்தில் பிரிட்டிஷ் சர்க்கார், ஐரிஷ் புரட்சிக்காரர்களுடன், அவர்களுடைய கைகள் ரத்தம் தோய்ந்தவைகளாக இருந்தபோதிலும் சமரசம் செய்துகொண்டார்கள். ஆனால் என் புரட்சி குற்றமற்றதாக இருந்தும், பலாத்காரத்துடன் எந்த வகையிலும் தொடர்பு இல்லாததாக இருந்தும் நான் மாத்திரம் ஏன் ஒதுக்கப்பட்டவனாக இருக்க வேண்டும்?

நீங்கள் புதியதோர் தத்துவத்தைப் பிரகடனம் செய்திருக்கிறீர்கள் என்று நான் கூறுவது முற்றிலும் சரியே என்றாலும், ஒரு விஷயத்தை நீங்கள் சரியாகக் கூறியிருக்கிறீர்கள் என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். "அவருடைய முறை வெற்றி பெறுவதன் மூலம் மாத்திரமே எதையும் செய்துவிட்டதாக அவர் சொல்லிக் கொள்ள முடியும்" என்று நீங்கள் கூறியிருப்பதையே குறிப்பிடுகிறேன். சத்தியத்தையும் அகிம்சையையும் அடிப்படையாகக் கொண்டதாக என் முறை இருப்பதனால், அது எந்த அளவுக்கு அனுசரிக்கப்படுகிறதோ அந்த அளவுக்கு அது எப்போதும் வெற்றியையே கொடுக்கிறது. ஆகையால், என்னுடைய முறையின் அதன் அடிப்படைக் கொள்கையின் வெற்றியினால் மாத்திரமே, எந்த அளவுக்கு நான் அவற்றை சரியானபடி அனுசரிக்கிறேனோ அதற்கு ஏற்றாற்போல நான் எப்பொழுதும் செயல் புரிந்து வருகிறேன்.

15. "பிரசுரமாகியிருக்கும் கடிதங்கள் சிலவற்றில் ஸ்ரீ காந்தி, தாம் வைஸ்ராயைச் சந்தித்துப் பேச உத்தேசித்திருந்ததைக் குறித்துப் பிரமாதப்படுத்தியிருக்கிறார். ஆனால், காங்கிரஸ் தீர்மானம் மாற்றப்படாமல் அப்படியே இருந்து வந்ததுடன், 'செய் அல்லது செத்துப்போ' என்று ஸ்ரீ காந்தி சொன்னதும் அப்படியே இருந்து வந்தது. தாம் கூறியதில் வாபஸ் வாங்குவதற்கோ, சமரசப் பேச்சிற்கோ இடமே இல்லை என்று தாம் வெளியிட்ட அறிக்கையில் ஸ்ரீ காந்தி ஜுலை 14-ஆம் தேதி கூறியிருக்கிறார் என்பது, அவருடைய உண்ணாவிரத சம்பந்தமாக அரசாங்கம் வெளியிட்ட அறிக்கையில் பொது மக்களுக்கு முன்பே ஞாபகப்படுத்தப்பட்டிருக்கிறது. அவர் சொன்னதை அப்படியே திரும்பவும் நினைவுபடுத்துகிறேன்....... 'நீங்கள் ஒவ்வொருவரும் இந்த நேரத்திலிருந்து, சுதந்திரமான ஆண்களாகவும் பெண்களாகவும் உங்களை நினைத்துக்கொள்ளுவதுடன், சுதந்திரமானவர்களாகவும், இனியும் நீங்கள் இந்த ஏகாதிபத்தியத்தின் காலடியின் கீழ் இல்லை என்றும் எண்ணி நடந்து

கொள்ள வேண்டும்.' இப்பொழுது அவர் சொல்லியிருக்கும் இதையும் கேளுங்கள்: 'மந்திரி பதவிகளுக்காகவோ அதுபோன்றவைகளுக்காகவோ நான் வைஸ்ராயிடம் பேரம் பேசப் போவதில்லை. நான் சொல்லுவதை நம்புங்கள். பூரண சுதந்திரத்திற்குக் குறைவான எதையும் கொண்டு நான் திருப்தியடைந்துவிடப்போவதில்லை.' 'நாம் செய்ய வேண்டும் அல்லது சாக வேண்டும்.' 'நாம் இந்தியாவை சுதந்திர நாடாக்க வேண்டும் அல்லது அந்த முயற்சியில் சாக வேண்டும்.' 'இது பகிரங்கப் புரட்சியே'."

ஜூலை 14-ஆம் தேதி நான் பத்திரிகைகளுக்கு வெளியிட்ட அறிக்கையிலிருந்து மேலே குறிப்பிட்டதை நீங்கள் எடுத்துக் கூறியிருக்கிறீர்கள். அது ஜூலை 19-ஆம் தேதி 'ஹரிஜன்' பத்திரிகையிலும் பிரசுரமாகியிருக்கிறது. முதலாவதாக, நீங்கள் எடுத்துக் கூறியிருப்பதில் முக்கியமான ஒரு தவறை எடுத்துக் காட்டுகிறேன். கூறப்பட்டிருக்கும் யோசனையில் சமரசப் பேச்சு என்பதற்கோ, வாபஸ் வாங்குவது என்பதற்கோ எந்த இடமும் வைக்கப்படவில்லை என்று நான் கூறியிருப்பதாகச் சொல்லியிருக்கிறீர்கள். உண்மையில் நான் சொல்லியிருப்பது இது தான்: "வெளியேற வேண்டும் என்ற யோசனையில் சமரசப் பேச்சு என்பதற்கு இடமே இல்லை." இவ்விரண்டு வாக்கியங்களுக்கும் உள்ள வேற்றுமை முக்கியமானது என்பதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்கள். நான் சொன்னதைத் தவருக எடுத்துக்காட்டியிருக்கிறீர்கள் என்பது மாத்திரமல்ல. என் அறிக்கை, 'ஹரிஜன்' பத்திரிகையில் மூன்று பத்திகள் வந்திருக்கின்றன. நான் எவ்வளவு எச்சரிக்கையுடன் வேலை செய்துவருகிறேன் என்பதற்கு அந்த அறிக்கையில் நான் சொல்லியிருப்பவைகளையெல்லாம் குறிப்பிடாமல் விட்டிருக்கிறீர்கள். அந்த அறிக்கையிலிருந்து சில வாக்கியங்களைக் கூறுகிறேன். "வெளியேறுவதன் சம்பந்தமாக பிரிட்டிஷார் சமரசப் பேச்சை நடத்தக்கூடும். அவர்கள் அவ்விதம் செய்வார்களானல், அது அவர்களுக்கு மிகுந்த பெருமையைக் கொடுக்கும். அப்பொழுது அது, வெளியேறும் ஒரு விஷயமாகவே இராது. எவ்வளவுதான் கால தாமதம் செய்துவிட்டபோதிலும், பல கட்சிகளின் அபிப்பிராயங்களையும் கேட்டுக் கொண்டிராமல் இப்பொழுதாவது இந்தியாவின் சுதந்திரத்தை அங்கீகரிக்கும் விவேகம் பிரிட்டிஷாருக்கு ஏற்படுமானல், எல்லாக் காரியமும் சாத்தியமே. ஆனல் நான் வற்புறுத்த விரும்பும் விஷயம் இதுதான்." இங்குதான் நீங்கள் தவருகக் குறிப்பிட்டிருக்கும் வாக்கியம் வருகிறது. என் அறிக்கையில் அடுத்தபடியாகக் கூறியிருப்பது இதுதான்: "சுதந்திரத்தை அவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டும் அல்லது மறுத்துவிட வேண்டும். சுதந்திரத்தை ஒப்புக்கொண்டு விட்டதும் தொடர்ந்து சில விஷயங்கள் நடக்கும். ஏனெனில், அந்த ஒரே காரியத்தினல் பிரிட்டிஷ் பிரதிநிதிகள் இந்தியாவிலேயே பெரிய மாறுதலை உண்டாக்கியவர்களாவதோடு, எண்ணற்ற சமயங்களில் ஏமாற்றமடைந்து மனக் கசப்படைந்திருக்கும் இந்திய மக்களுக்குப் புதிய நம்பிக்கையை உண்டாக்கியவர்களும் ஆவர். ஆகையால் பிரிட்டிஷ் மக்களின் சார்பாக இந்த மாபெரும் செயலை பிரிட்டிஷ் அரசாங்கம்

புரியும் போது, அந்த நாளே இந்தியாவின் சரித்திரத்திலும் உல கின் சரித்திரத்திலும் மிக மிக முக்கியமானதாக இருக்கும். நான் கூறியதுபோல், யுத்தத்தின் முடிவு சம்பந்தமாகவும் அது முக்கிய மான மாறுதலை உண்டாக்கும்.'' அறிக்கையிலிருந்து முழுமையு மாக நான் எடுத்துக் காட்டியிருப்பதிலிருந்து வெற்றியை உறுதிப் படுத்தவும், ஜப்பானிய ஆக்கிரமிப்பைத் தடுக்கவும் என்ன செய்ய முடியுமோ அதெல்லாம் செய்யப்பட்டிருக்கின்றன என்பதை நீங் கள் காணலாம். என் விவேகத்தை நீங்கள் பாராட்டாமலிருக்க லாம். ஆனால், என் நல்லெண்ணத்தை நீங்கள் மறுக்க முடியாது.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் நான் பேசி யது சம்பந்தமான முழு விவரமும் என்னிடம் இல்லாது போயி னும், அப்பேச்சுகள் பற்றிய முழுக் குறிப்புகளும் அநேகமாக என் னிடம் இருக்கின்றன. அவற்றிலிருந்து நீங்கள் குறிப்பிட்டிருப் பவை சரியாக இருக்கின்றன என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். அகிம்சையை அடிப்படையாகக் கொண்டே எல்லாம் செய்யப் பட்டன என்பதை மனத்தில் வைத்துக்கொள்வீர்களானால், எனது பேச்சுகள் எத்தகைய ஆட்சேபணைக்கும் இடமில்லா தவைகளாகின்றன. கட்டளைகளை நிறைவேற்றி உங்கள் கடமை யைச் செய்யுங்கள். அவசியமானால் அம் முயற்சியில் உயிரைக் கொடுங்கள் என்பதுதான், 'செய் அல்லது செத்து விடு' என்பதற் குத் தெளிவான பொருள் ஆகும்.

சுதந்திரம் அடைந்துவிட்டவர்களாக எண்ணிக் கொள்ளும் படி மக்களை நான் கேட்டுக்கொண்டதன் சம்பந்தமாக, என்னிட மிருக்கும் குறிப்புகளிலிருந்து கீழ்க்கண்ட விஷயங்களை எடுத்துக் கூறுகிறேன்: "உண்மையில் போராட்டம் இப்பொழுது ஆரம்ப மாகிவிடவில்லை. என்னிடம் சில அதிகாரங்களை மாத்திரமே நீங்கள் ஒப்படைத்திருக்கிறீர்கள். வைஸ்ராயைச் சந்தித்து, காங்கிரஸின் கோரிக்கையை ஏற்றுக் கொள்ளும்படி அவரைக் கேட்டுக் கொள்ளுவதுதான் எனது முதல் நடவடிக்கையாக இருக்கும். இதற்கு இரண்டு, மூன்று வாரங்கள் ஆகலாம், இதற்கிடையே நீங்கள் செய்ய வேண்டியது என்ன? அதை உங்களுக்குச் சொல்லுகிறேன். ராட்டை இருக்கிறது. அகிம்சைப் போராட்டத்தில் ராட்டைக்கு நிரந்தரமான இடம் இருக்கிறது என்பதை மௌலானா சாகிப் உணரும்படி செய்வதற்கு அவருடன் நான் போராடவே வேண்டியிருந்தது, நீங்கள் நிறைவேற்று வதற்கு, பதினான்கு அம்சங்கள் கொண்ட வேலைத் திட்டமும் உங்களுக்கு இருக்கிறது. நீங்கள் செய்ய வேண்டியது இன்னு மொன்றும் இருக்கிறது. அதுதான் நிர்மாண வேலைத் திட்டத் திற்கு உயிரளிக்கும். இந்தக் கணத்திலிருந்து நீங்கள் ஒவ்வொரு வரும் தம்மை சுதந்திரம் அடைந்துவிட்ட ஆடவராகவும் பெண் ணாகவும் கருத வேண்டும். சுதந்திரம் அடைந்துவிட்டவர்களாகவும் ஏகாதிபத்தியத்தின் காலடியில் இன்னும் நீங்கள் கிடந்து வர வில்லை என்றும் எண்ணிக்கொண்டு காரியங்களைச் செய்யவும் முற்பட வேண்டும். இது வீண் டம்பப் பேச்சு அல்ல. உண்மை

யாகவே சுதந்திர உணர்ச்சியை நீங்கள் வளர்த்துக் கொண்டாக வேண்டும். ஒரு அடிமை, தான் சுதந்திரமடைந்து விட்டதாக எப்பொழுது எண்ணிக்கொண்டுவிடுகிருனே அப்பொழுதே அவனுடைய அடிமைச் சங்கிலி தகர்ந்துவிடுகிறது. அப்பொழுது அவன் தன்னுடைய எஜமானனிடம் வருமாறு சொல்லுவான்: "நான் இவ்வளவு காலமும் உங்களுக்கு அடிமையாக இருந்தேன்; ஆனல் இனியும் நான் உங்கள் அடிமையல்ல. நீங்கள் என்னைக் கொன்றுவிடலாம். அப்படிக் கொல்லவில்லையானல், என்னை அடிமைத்தனத்திலிருந்து விடுதலை செய்யுங்கள். இதைத் தவிர உங்களிடம் அதிகமாக நான் எதையும் கேட்கவில்லை. ஏனெனில் இனி உணவுக்கும் உடைக்கும் உங்களை நம்பியிருப்பதற்குப் பதிலாக கடவுளையே நான் நம்பியிருப்பேன். சுதந்திர ஆர்வத்தைக் கடவுள் எனக்கு அளித்திருக்கிருர். ஆகையால் நான் சுதந்திரம் அடைந்துவிட்டவனுகவே கருதிக்கொள்ளுகிறேன்." 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற கோஷத்தைக் கண்டு நீங்கள் கோபமடைவது ஒருபுறமிருக்க, நீங்கள் என் பேச்சிலிருந்து எடுத்துக்காட்டியிருக்கும் மேற்கோளில் ஆட்சேபிக்கத்தக்கது ஏதாவது இருக்கிறதா என்பதை உங்களை நீங்களே கேட்டுக் கொள்ளுங்கள். சுதந்திரம் அடைய ஆர்வம் கொண்டிருக்கும் ஒருவர், முதலில் சுதந்திர உணர்ச்சியை வளர்த்துக் கொண்டு, விளைவு எதுவானலும் அதைப் பொருட்படுத்தாமல் அதன்படி நடக்கவும் வேண்டாமா?

16. "ஒருவர் நியாயத்தை உணரும்படி செய்வதற்கு, பொதுஜனப் புரட்சி என்ற தீர்மானத்தை ஆயுதமாக வைத்துக்கொண்டு அவரிடம் பேசுவது, சமாதானமாகவும், நல் வார்த்தைகளின் மூலமும் அவர் அறியும்படி செய்வதற்கான ஒரு முறை அல்ல. இரு கட்சியினரும் ஏற்கனவே எத்தகைய முடிவும் செய்து தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளாமல் இருப்பதுடன், மற்றொரு தரப்பினரைப் பலவந்தமாக வற்புறுத்தாமல் இருப்பதுதான் சமரசமாகப் பேசித் தீர்வு காண்பது என்பதன் சாரமாகும். எந்தச் சந்தர்ப்பத்திலும் இதுதான் உண்மையானது. ஆனல் ஒரு தனிப்பட்டவரும் அவரை ஆளும் அரசாங்கமும் சம்பந்தப்பட்ட விஷயத்தில்,இது இன்னும் அதிக முக்கியமானதாகிறது. ஒரு பிரஜைக்கு, அரசாங்கத்துடன் சமநிலையில் இருந்து கொண்டு எந்தப் பிரச்னையையும் தீர்த்துக்கொள்ள உரிமை இல்லை. அதிலும் பகிரங்கமான மிரட்டலுடன் அவர் அரசாங்கத்தை அணுகுவது கூடவே கூடாது."

முதலிலேயே இதில் ஒரு திருத்தம் செய்ய நான் விரும்புகிறேன். தீர்மானம், பொதுஜனப் புரட்சியைப் பிரகடனம் செய்யவில்லை. "சென்ற இருபத்தைந்து வருடங்களாக நடத்திவந்திருக்கும் அமைதியான போராட்டத்தின் மூலம் நாடு அடைந்திருக்கும் எல்லா அகிம்சை சக்தியையும், சாத்தியமான அளவு விரிவானவகையில் அகிம்சையை அடிப்படையாகக் கொண்டு பொதுஜனப் போராட்டத்தை ஆரம்பிப்பதற்கே" தீர்மானம் அனுமதி கொடுத்திருக்கிறது. இதற்காக எடுத்துக்கொள்ளும் நடவடிக்கைகளுக்கு நான் வழிகாட்ட வேண்டும் என்றும்

தீர்மானம் கூறுகிறது. இந்தப் பொதுஜனப் போராட்டத்திற்கு அனுமதியளிக்கும் தீர்மானத்தின் அதே பகுதியில், சுதந்திரத் திற்காக பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் ஐக்கிய நாடுகள் சபைக்கும் வேண்டுகோளும் விடுக்கப்பட்டிருக்கிறது. எதைப் பற்றியும் முதலிலேயே ஒரு தீர்மானம் செய்து தங்களைக் கட்டுப் படுத்திக் கொள்ளாமல் இருதரப்பினரும் இருக்கவேண்டும். யாரும் மற்றொரு தரப்பினரை பலவந்தமாக வற்புறுத் தாமல் இருக்கவேண்டும் என்பதுதான் சமரசப் பேச்சு என்பதன் சாரம். இதில் சந்தேகமில்லை. எனினும் இன்றைய உண்மையான நிலைமை இதுதான். ஒரு கட்சியினரிடம் மிக மிக அதிகமான பலம் இருக்கிறது; மற்றொரு தரப்பினரிடம் அத்தகைய பலம் எதுவுமே இல்லை. உடனடியாக சுதந்திரம் அடைந்தாக வேண்டும் என்பதைத் தவிர, காங்கிரஸ் வேறு எதிலும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கவில்லை. இது ஒன்றைத் தவிர, மற்ற எந்த விஷயமாகவும் தாராளமாகவும் எவ்விதக் கட்டுப்பாடுமின்றியும் சமரசப் பேச்சை நடத்தலாம்.

பிரஜையைப் பற்றியும் அரசாங்கத்தைப்பற்றியும் நீங்கள் கூறியிருப்பது, 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற கோஷத் திற்கு ஒரு பதில் என்பதை நான் அறிவேன். ஆனால் அந்த கோஷம் அடிப்படையில் நேர்மையானது. பிரஜை-அரசாங்கம் என்ற தத்துவமெல்லாம் உண்மையற்ற, அர்த்தமற்ற பத்தாம் பசலிப் பேச்சு. இந்தியா அடிமையாக இருப்பதென்பது சகிக்க முடியாதஅவமானம் என்று காங்கிரஸ் உணர்ந்ததால்தான் அதற்கு எதிராக காங்கிரஸ் எழுந்தது. ஒழுங்காக அமைந்த ஒரு அரசாங் கம், மக்களின் அதிகாரத்திற்கு உட்பட்டது. மக்களின் தலைமீது இருந்து கொண்டு ஆளுவது அல்ல அது; ஆனால் அரசாங்கத்தை அமைப்பதும் அகற்றுவதும் மக்களே ஆவர்.

ஆகஸ்டு 8-ஆம் தேதி தீர்மானத்தில் பகிரங்கமாகவோ அல்லது ரகசியமாகவோ எவ்வித மிரட்டலும் இல்லை. எந்த எல்லைக்கு உட்பட்டு பேச்சு வார்த்தை நடத்தலாம் என்பதை அது நிர்ணயித்தது. எடுத்துக்கொள்ளும் நடவடிக்கை பலாத்காரம் அற்றது, துன்பங்களைத் தானே அனுபவித் துக் கொள்ளுவது என்பதே. காங்கிரஸ் எதையும் ஒளிக்காமல் எல்லாவற்றையும் பகிரங்கமாகக் கூறியிருக்கிறது என்பதை நீங்கள் பாராட்டாமல், ஆதாரமற்ற ஊகங்களுக்கு நீங்கள் இடம் கொடுத்து இந்த இயக்கம் முழுமைக்கும் மோசமான அர்த் தத்தைக் கற்பித்திருக்கிறீர்கள். சென்ற ஆகஸ்டு 8-ஆம் தேதிக்குப் பிறகு எந்த காங்கிரஸ்வாதியாவது ஏதாவது பலாத் காரச் செயல்களில் ஈடுபட்டிருப்பாராயின், தீர்மானத்திலிருந்து மிகத் தெளிவாகப் புலனாகிறபடி, அவையெல்லாம் காங்கிரசின் அங்கீகாரம் பெற்றவையே அல்ல. என்ன செய்யவேண்டும் என்பதை நான் அறிவிப்பதற்கு, அரசாங்கம் எந்தவிதமான அவ காசமும் கொடுக்கவில்லை. 8-ஆம் தேதி நடுநிசிக்குப் பிறகு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் முடிந்து 9-ஆம் தேதி

பொழுது விடிவதற்கு முன்னாலேயே, நான் செய்த குற்றம் இன்னது என்பதைக்கூட என்னிடம் கூருமல், போலீஸ் கமிஷனர் என்னைத் தூக்கிக்கொண்டு போய்விட்டார். காரியக் கமிட்டி உறுப்பினர்களையும், பம்பாயில் அப்பொழுது இருந்த முக்கியமான காங்கிரஸ்காரர்களையும் அவ்வாறே தூக்கிக் கொண்டுபோய்விட்டார்கள். இந்நிலைமையில், அரசாங்கமே பலாத்காரத்தை வருவித்துக்கொண்டது என்றும், அமைதியான முறையில் இயக்கம் நடந்துகொண்டு போவதை அரசாங்கம் விரும்பவில்லை என்றும் நான் சொன்னால் அது மிகையாகுமா?

பகிரங்கப் புரட்சி ஒன்று நிகழ்ந்து, அதில் நீங்களும் முக்கிய மான பங்கு எடுத்துக்கொண்ட ஒரு சம்பவத்தை இப்பொழுது உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். சர்தார் வல்லபாய் பட்டே லின் தலைமையில் நடந்த பிரபலமான பர்தோலி போராட்டத் தையே குறிப்பிடுகிறேன். அவர் சட்டமறுப்புப் போராட்டத் தையே நடத்திக்கொண்டிருந்தார். இந்தப் போராட்டம் ஒரு கட்டத்தை அடைந்த போது, அதன் சம்பந்தமாக ஒரு அமைதியான முடிவு ஏற்பட்டுத் தீரவேண்டும் என்று அப் பொழுது பம்பாய் கவர்னராக இருந்தவர் உணர்ந்தார். அப் பொழுது கவர்னராக இருந்தவரும் சர்தாரும் சந்தித்துப் பேசி யதன் பலனாக ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது என்பதையும், அதில் நீங்களும் ஒரு மதிப்பு மிக்க உறுப்பினராக இருந்தீர்கள் என்பதும் உங்களுக்கு நினைவிருக்கும். அக் கமிட்டி செய்த முடிவு களில் அநேகம் சட்டமறுப்பாளருக்குச் சாதகமாகவே இருந்தன. ஒரு புரட்சிக்காரருடன் சமரசம் பேச முற்பட்டது அந்த கவர்னர் செய்த தவறு என்றும், அக்கமிட்டியில் உறுப்பினராக இருக்க நீங்கள் இசைந்தது தவறு என்றும் நீங்கள் விரும்பினால் இப் பொழுது சொல்லக்கூடும். ஒரு கமிட்டியை நியமிப்பதற்குப் பதி லாக கவர்னர் கடுமையான அடக்குமுறையைக் கையாண்டிருந் தால் என்ன நிகழ்ந்திருக்கும் என்ற மாருன நிலையையும் சிந்தித் துப் பாருங்கள். மக்கள் தன்னடக்கத்தை இழந்து பலாத்காரச் செயல்களில் ஈடுபட்டிருந்தால், அதற்கு அரசாங்கமே பொறுப் பாளி என்று ஏற்பட்டிருக்காதா?

17. "இந்தியாவின் அமைதியை இவ்வளவு சீர் குலைத்து, ஒரு பாவமும் அறியாத இத்தனை பேருடைய உயிருக்கும் உடைமைகளுக்கும் நாசத்தை உண்டாக்கி, நாட்டை பயங்கரமான அபாயத்தின் எல்லைக்குக் கொண்டுவந்து விட்ட சமீபகால சம்பவங்களுக்கு ஸ்ரீ காந்தியே பொறுப்பாளி என்று அரசாங்கம் கூறுகிறது. பலாத்காரச் செயல்களுக்கு அவர் சொந்த முறையில் உடந்தையாக இருந்தார் என்று நான் கூறவில்லை.........ஆனல், அவரும் அவருடைய சகாக்களும் முன்கூட்டியே உன்னிப்பாகச் செய்துவைத்திருந்த ஏற்பாடுகளுக்குத் தீ வைத்துவிட்டவர் அவரே. அதற்கான காலம் வருவ தற்கு முன்னாலேயே அவர் அப்படிச் செய்ய நேர்ந்தது நமது அதிர்ஷ்ட மேயன்றி அவர் செய்துவிட்ட தவறு அல்ல. இந்த முறையினாலேயே தாங்கள் விரும்பியதை அடைந்துவிட முடியும் என்று அவர்கள் நம்பினார்கள். அது பலிக்காமற் போய்விட்ட பிறகு, அதை அவர்கள் ஆட்சேபிக்க முற்பட

லாம். என்றாலும், அச்சம்பவங்களுக்கு அவர்கள்தான் பொறுப்பாளிகள். அவைகளுடன் தமக்கு எவ்வித தொடர்பும் இல்லை என்று ஸ்ரீ காந்தி விலகிக் கொள்ள விரும்புவாராயின், காரியக் கமிட்டி உறுப்பினர்களைக் கலந்து கொள்ளாமலேயே அவர் தமது சார்பில் பேச முற்பட்டிருக்கலாம். காங்கிரசின் புரட்சியை ரத்துச் செய்யாமல், செய்த தவறுகளுக்கு ஈடு எதுவும் செய்யாமல், எதிர்காலத்தைக் குறித்து எவ்வித உறுதிமொழியும்கூடக் கொடுக்காமல், எதுவுமே நடைபெறாததுபோல் நாட்டின் பொது வாழ்வில் எந்தச் சமயத்திலும் ஈடுபடுவதாகக் கூறவும், தம்மை ஒரு நல்ல மனிதர் என்று அரசாங்கமும் சமூகமும் வரவேற்க வேண்டும் என்றும் அவர் உரிமை கொண்டாட முடியுமா?"

உங்களால் விவரிக்கப்பட்டுள்ள துரதிர்ஷ்டவசமான சம்பவங்களுக்கு எத்தகைய பொறுப்பையும் நான் ஒப்புக் கொள்ள முடியாது. ஆனால் அச்சம்பவங்களுக்கு முற்றிலும் அரசாங்கம் தான் பொறுப்பாளி என்று சரித்திரம் கூறும் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. முன்னேற்பாடாக எதுவும் செய்யப்படவே இல்லை. எனவே, இராத ஒன்றுக்கு நான் தீ வைத்திருக்க முடியாது. முன்னேற்பாடாக எந்தக் காரியமும் நடைபெறாமல் இருந்திருக்கும்போது, அதற்கான காலம் பக்குவம் அடைவதற்கு முன்பே தீ வைக்கப்பட்டதென்ற பிரச்னையே எழ இடமில்லை. மக்களிடமிருந்து அவர்களுடைய தலைவர்களை அப்புறப்படுத்தியதை 'நமது அதிர்ஷ்டம்' என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால், அவ்விதம் தலைவர்களை அப்புறப்படுத்தியது, சம்பந்தப்பட்ட எல்லோருக்குமே பயங்கரமான ஒரு துரதிர்ஷ்டமாகும். நான் செய்துள்ள, செய்ய உத்தேசித்துள்ள எதையும் நான் மறுக்க விரும்பவில்லை. நான் செய்த எதைக் குறித்தும் நான் வருந்தவுமில்லை. ஏனெனில், நான் யாருக்கும் எவ்விதத் தவறும் இழைத்ததாக எனக்குத் தெரியவில்லை. எந்த விதத்திலும், எந்த உருவத்திலும் பலாத்காரத்தை நான் வெறுக்கிறேன் என்று எண்ணிக்கையற்ற தடவைகளில் கூறியிருக்கிறேன். எனினும் நேரடியாக எனக்குத் தெரியாத விஷயங்களைக் குறித்து நான் எத்தகைய அபிப்பிராயமும் கூற முடியாது. பலாத்காரத்திலிருந்து நான் விலகிக்கொள்வது சாத்தியமாக இருக்க வேண்டும் என்பதற்காக, காரியக் கமிட்டியுடன் கலந்து ஆலோசிக்க எனக்கு அனுமதி கொடுக்க வேண்டும் என்று நான் ஒருபோதும் கேட்டதில்லை. ஆனால், காரியக் கமிட்டியின் சார்பில் நான் ஏதாவது யோசனைகள் கூறவேண்டும் என்று அரசாங்கம் எதிர் பார்த்தால், அக்கமிட்டியினரைப் பார்க்க அனுமதி அளிக்க வேண்டும் என்றே கேட்டேன். காங்கிரசின் கலப்பற்ற அகிம்சைப் புரட்சியை நான் ரத்துச் செய்ய முடியாது. அப்புரட்சியைக் குறித்து நான் பெருமையே அடைகிறேன் என் மனச்சாட்சியின்படி நான் குற்றம் எதுவும் செய்யாததால், அதற்காக நான் செய்ய வேண்டிய பரிகாரம் எதுவும் இல்லை. நான் குற்றம் எதுவும் செய்யவில்லை என்று கருதும்போது, எதிர்காலத்தைப் பற்றிய உறுதி மொழிகள் கொடுக்க வேண்டும் என்பதற்கே இடமில்லை. எனவே, நாட்டின் பொதுவாழ்வில் மீண்டும் பிரவே

சிப்பது அல்லது ஒரு நல்ல மனிதர் என்று அரசாங்கத்திலும் சமூகத்திலும் வரவேற்கப்படுவது என்ற பிரச்னையும் எழவில்லை. கைதியாகவே இருந்து வருவதைக் குறித்து நான் முற்றிலும் திருப்தியடைகிறேன். நாட்டின் பொது வாழ்விலோ அல்லது அரசாங்கத்திலோ வற்புறுத்தி இடம் எதுவும் தேடிக் கொள்ள நான் ஒருபோதும் முற்படவில்லை. நான் இந்தியாவின் பணிவுள்ள ஒரு ஊழியன் என்பதைத் தவிர வேறு யாருமில்லை. எனக்குத் தேவையான ஒரே நற்சாட்சிப் பத்திரம், என் அந்தராத்மாவிடமிருந்து கிடைக்கும் நற்சாட்சிப் பத்திரமேயாகும். உங்கள் பிரசங்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்கு நீங்கள் சொன்னதெல்லாம் கோபத்தினால் உருவான உங்களுடைய அபிப்பிராயங்களேயன்றி, உண்மைகள் அல்ல என்பதை நீங்கள் உணருவீர்கள் என்று நம்புகிறேன்.

முடிவாக, இந்தக் கடிதத்தை நான் ஏன் எழுதியிருக்கிறேன்? உங்களுடைய கோபத்திற்கு, கோபத்துடன் பதில் அளிக்க வேண்டும் என்பதற்காக இதை நான் எழுதவில்லை; என் வார்த்தைகளில் இருக்கும் அந்தரங்க சுத்தியை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்ற நம்பிக்கையுடனேயே இதை நான் எழுதியிருக்கிறேன். யாருடைய மனத்தையும், கல்நெஞ்சமுள்ள அதிகாரியின் மனத்தையும் கூட மாற்றுவதில் நான் எக்காலத்திலும் சோர்வு அடைந்து விடுவதில்லை. ஜெனரல் ஸ்மட்ஸ் மனமாற்றம் அடைந்தார், அதாவது சமரசமாகப் பேசுவதற்கு இசைந்தார். 1914—இல் அவருக்கும் எனக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தின் ஷரத்துகளுக்கு இணங்க பரிகார முறைகள் அடங்கிய மசோதாவைக் கொண்டுவந்து அவர் பேசிய போது, அதை அவர் ஒப்புக் கொண்டார். எனது நம்பிக்கையையோ அல்லது குடியேறிய இந்திய மக்களின் நம்பிக்கையையோ அவர் நிறைவேற்றவில்லை என்பது ஒரு துக்ககரமான கதையாகும். எனினும், அது தற்போதைய வாதத்திற்குப் புறம்பான விஷயம். என் நினைவில் உள்ள இதுபோன்ற ஏராளமான சம்பவங்களை நான் கூற முடியும். இத்தகைய மனமாற்றங்களைக் குறித்தோ, அல்லது சமரச நிகழ்ச்சிகளைக் குறித்தோ நான் பெருமை பாராட்டிக் கொள்ளவில்லை. அவை முற்றிலும் என் மூலம் வெளிப்பட்ட சத்தியத்தின், அகிம்சையின் செயல் முறைகளேயாகும். சாராம்சத்தில் எல்லா உயிர்களும் ஒன்றே, அந்த நிலையை உணர்ந்து கொள்ளவே மனிதர்கள் அறிந்தோ, அல்லது அறியாமலோ செயல் புரிந்து வருகிறார்கள் என்ற நம்பிக்கையை, தத்துவத்தை நான் ஆதரிப்பவன். இது, நிச்சயமாகக் கடவுள் இருக்கிறார் என்பதில் நிரந்தரமான நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டதாகும். நமது விதியைக் குறித்து முடிவாகத் தீர்ப்புக் கூறுபவர் அவரே. அவரின்றி ஓர் அணுவும் அசைவதில்லை என்றாலும், உங்களுடைய மனத்தைக் கூட மாற்றுவதில் சோர்வடையக் கூடாது என்றே எனது நம்பிக்கை எனக்குக் கற்பிக்கின்றது. கடவுள் சித்தமிருந்தால், என்னுடைய வார்த்தைக்கு உங்களுடைய

உள்ளத்தைத் தொடக்கூடிய சக்தியை அவர் கொடுக்கலாம். முயற்சி செய்வதுதான் என் வேலை. பலன் கடவுளின் கையில் இருக்கிறது.

மோ. க. காந்தி

## 51

புதுடில்லி,
17-6-1943

சொந்தப் பார்வைக்கு,

அன்புள்ள ஸ்ரீ காந்தி

உங்களுடைய மே 21உ கடிதம் கிடைத்தது. பிப்ரவரி 15உ நான் அசெம்பிளியில் பேசியதைக் குறித்து நீங்கள் செய்துள்ள வியாக்கியானங்களை நான் அக்கறையுடன் வாசித்தேன். ஆகஸ்டு 8-இல் நிறைவேறிய காங்கிரஸ் தீர்மானத்தையொட்டியும், பின்னர் நிகழ்ந்த கலவரங்களுக்கு காங்கிரஸ் பொறுப்பு பற்றியும் நீங்கள் வைஸ்ராய்க்கு எழுதிய கடிதங்களில் உங்களுடைய நிலைமை எப்படி இருந்ததோ அதுபோலவேதான் இன்னும் இருந்து வருகிறது என்பதைக் காண்கிறேன். அச்சம்பவங்களுக்கு நீங்கள் கூற முற்பட்டுள்ள காரணங்களை அரசாங்கம் ஒருபோதும் ஒப்புக் கொண்டதில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். இந்த மூலாதாரமான வேற்றுமை தொடர்ந்து இருந்து வரும் வரையில், உங்கள் கடிதத்தில் கூறப்பட்டுள்ள மற்ற விஷயங்களைக் குறித்து பலன் தரத்தக்க விதத்தில் விவாதிப்பதற்குப் போதிய பொதுவான அம்சம் எதுவும் இல்லை என்று நான் வருத்தத்துடன் முடிவுசெய்ய வேண்டியவனாக இருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஆர். மாக்ஸ்வெல்

## 52

சிறை முகாம்,
23-6-1943

அன்புள்ள சர் ரெஜினல்டு மாக்ஸ்வெல்,

என்னுடைய மே 21உ கடிதத்திற்கு இம்மாதம் 17உ தாங்கள் எழுதியுள்ள பதில் 21உ தான் எனக்குக் கிடைத்தது. அதற்காக நன்றி.

நம்மிடையே உள்ள மூலாதாரமான வேற்றுமையை என்னுடைய பதில் அகற்றிவிடுமென நான் நம்பிக்கொண்டிருக்கவில்லை. எனினும் தெரிந்துகொண்ட தவறுகளை ஒப்புக்கொள்ளவும், திருத்திக் கொள்ளவும் அந்த வேற்றுமை ஒரு தடையாக இராதென்று நான் நம்பிக்கொண்டிருந்தேன், இன்னும் நம்ப விரும்புகிறேன். சென்ற பிப்ரவரி 15-ஆம் தேதி தாங்கள் அசெம்பிளியில் செய்த பிரசங்கத்தில் உள்ள சில தவறுகளை என்னுடைய கடிதம் எடுத்துக் காட்டியது என்றே நினைத்தேன், இன்னும் நினைக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 53

# ஸ்ரீ ஜின்னுவுக்குக் கடிதம்

சிறை முகாம்,
4—5—1943

அன்புள்ள காயிதே ஆஜம்,

நான் சிறைபட்ட சிறிது காலத்திற்குப் பிறகு, நான் விரும்பும் பத்திரிகைகளின் ஜாபிதா ஒன்றைத் தங்களிடம் கொடுக்கும்படி அதிகாரிகள் என்னைக் கேட்டார்கள். அந்த ஜாபிதாவில் நான் 'டான்' பத்திரிகையையும் சேர்த்துக்கொண்டேன். சற்றேறக்குறைய ஒழுங்காகவே அது எனக்குக் கிடைத்து வருகிறது. அது எனக்குக் கிடைக்கும் போதெல்லாம், அதை நான் மிகுந்த அக்கறையுடன் வாசிக்கிறேன். 'டான்' பத்திரிகையில் வெளியாகும் லீக் நடவடிக்கைகளை நான் தொடர்ந்து வாசித்துக் கொண்டு வந்திருக்கிறேன். உங்களுக்கு எழுதும்படி நீங்கள் விடுத்துள்ள அழைப்பை நான் அதில் பார்த்தேன். அதனுல்தான் கடிதம் எழுதுகிறேன்.

உங்களுடைய அழைப்பை நான் வரவேற்கிறேன். நாம் கடிதங்களின் மூலம் பேசிக்கொள்வதைக் காட்டிலும், நேருக்கு நேராகச் சந்தித்துப் பேசவேண்டும் என்றே நான் யோசனை கூறுகிறேன். எனினும், உங்கள் விருப்பப்படி செய்கிறேன்.

இந்தக் கடிதம் உங்களுக்கு அனுப்பப்படுமென நான் நம்புகிறேன். எனது யோசனைக்கு நீங்கள் இணங்குவீர்களாயின், நீங்கள் என்னைப் பார்க்க வருவதற்கு அரசாங்கம் அனுமதிக்கும் என்றும் நம்புகிறேன்.

ஒரு விஷயத்தை நான் சொல்லிவிடுவதே சிறந்ததாகும். உங்களுடைய அழைப்பில் 'ஆல்' விகுதியொன்று இருப்பதாகத்

தோன்றுகிறது. என்னுடைய மனத்தை நான் மாற்றிக் கொண்டால் மாத்திரமே உங்களுக்கு நான் எழுதவேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்களா? மனிதர்களின் மனத்தை கடவுள் ஒருவரே அறிவார். நீங்கள் என்னை, நான் எப்படி இருக்கிறேனோ அப்படியே எடுத்துக் கொள்ள வேண்டுமென விரும்புகிறேன்.

சமூக ஒற்றுமை என்ற மகத்தான பிரச்னையை நீங்களும் நானும் ஏன் அணுகக்கூடாது? அதில் சம்பந்தப்பட்ட அல்லது அதில் அக்கறை கொண்ட எல்லோரும் ஒப்புக் கொள்ளக்கூடிய விதத்தில் நாம் ஒன்று சேர்ந்து, அந்தப் பிரச்னையைத் தீர்க்க பொதுவான ஒரு வழியைக் கண்டு பிடிக்க வேண்டுமென்ற உறுதியுடன் ஏன் வேலை செய்யக் கூடாது?

தங்கள் உண்மையுள்ள,
மோ க. காந்தி

## 54

சிறை முகாம்,
4—5—1943

காரியதரிசி
இந்திய அரசாங்க உள்துறை இலாகா,
புதுடில்லி.

ஐயா,

இத்துடன் இணைக்கப்பட்டுள்ள கடிதத்தைத் தாங்கள் தயவு செய்து காயிதே ஆஜம் ஜின்னாவுக்கு அனுப்புவீர்களா?

தங்கள் நம்பிக்கையுள்ள,
மோ. க. காந்தி

## 55

உள்துறை இலாகா,
புது டில்லி,
24—5—1943

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

மே 4-ஆம் தேதி நீங்கள் எழுதியுள்ள கடிதத்தில், ஸ்ரீ ஜின்னாவுக்கு நீங்கள் எழுதியிருக்கும் கடிதத்தை அவருக்கு அனுப்பிவைக்கும்படி இந்திய அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள். அக்கடிதத்திற்கு நான் பின்வருமாறு பதில் அளிக்க வேண்டியவனாக இருக்கிறேன்: உங்களுடைய கடிதத்தை அவருக்கு அனுப்ப

முடியாது என்று இந்திய அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது. நீங்கள் காவலில் இருக்கும் வரையில் உங்களுடைய கடிதப் போக்குவரத்துக்கும், பேட்டிகளுக்கும் கட்டுப்பாடுகள் விதிக்கப் பட்டிருப்பது உங்களுக்குத் தெரியும். அவற்றிற்கிணங்கவே, இந்திய அரசாங்கம் அவ்விதம் தீர்மானித்திருக்கிறது. இவ்விஷய மாக அரசாங்கம் விரைவில் ஓர் அறிக்கையை வெளியிட உத்தே சித்திருக்கிறது. அந்த அறிக்கையின் பிரதி ஒன்றை முன்கூட்டியே உங்களுக்கு இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அந்தக் கடிதத்தை ஸ்ரீ ஜின்னாவுக்கு அனுப்ப முடியாததுபற்றியும், அதற்குக் காரணங் களும் அந்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளன.

# 56

# அரசாங்கத்தின் அறிக்கை

ஸ்ரீ ஜின்னாவைத் தாம் சந்திக்க விரும்புவதாக ஸ்ரீ காந்தி சுருக்கமாக ஒரு கடிதம் எழுதி அவருக்கு அனுப்பும்படி இந்திய அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டுள்ளார்.

ஸ்ரீ காந்தியுடன் கடிதப் போக்கு வரத்து, பேட்டிகள் சம்பந் தமாக இந்திய அரசாங்கத்தின் கொள்கை தெரிந்ததே. அதற் கிணங்க, இந்தக் கடிதத்தை அவ்விதம் அனுப்ப முடியாது என்று இந்திய அரசாங்கம் தீர்மானித்துள்ளது; இந்தத் தீர்மானத்தை ஸ்ரீ காந்திக்கும் ஸ்ரீ ஜின்னாவுக்கும் அறிவித்திருக்கிறது. சட்ட விரோதமான ஒரு பொதுஜன இயக்கத்தை நடத்த முற்பட்டதற் காகக் காவலில் வைக்கப்பட்டுள்ள ஒருவருடன் தொடர்பு வைத்துக்கொள்ளவோ அல்லது அவருடன் கடிதப் போக்கு வரத்து நடத்தவோ வசதிகள் அளிக்க அரசாங்கம் தயாராக இல்லை. அந்த இயக்கம், நெருக்கடியான சமயத்தில் இந்தி யாவின் யுத்த முயற்சிக்குப் பெரிதும் இடையூறாக இருந்து வருகிறது. நாட்டின் பொது வாழ்வில் பங்கு எடுத்துக் கொள்ள அவரை மீண்டும் அனுமதிப்பதால் அபாயம் ஏற்படாது என்று இந்திய அரசாங்கத்திற்குத் திருப்தி உண்டாகும்படி செய்வது ஸ்ரீ காந்தியின் கையிலேயே இருக்கிறது. அவர் அவ்வாறு செய்யும்வரையில், அவர் அனுபவித்துவரும் அசௌகரியங்கள் யாவும் அவரால் சிருஷ்டித்துக் கொள்ளப்பட்டவையே.

## 57

சிறை முகாம்,
27—5—1943

அன்புள்ள சர் ரிச்சர்ட் டாட்டென்ஹாம்,

காயிதே ஆஜம் ஜின்னுவுக்கு நான் எழுதிய கடிதத்தை அனுப்பவேண்டுமென்ற எனது வேண்டுகோளை நிராகரித்து நீங்கள் 24–ஆம் தேதி எழுதிய கடிதம் நேற்று மாலை எனக்குக் கிடைத்தது. நான் ஜின்னுவுக்கு எழுதிய கடிதமும், பின்னர் இம்மாதம் 15—ஆம் தேதி லார்டு சாமுவலுக்கு எழுதிய கடிதமும் அவர்களுக்கு அனுப்பப்பட்டுவிட்டனவா என்று கேட்டு நேற்றுத் தான் நான் சிறை அதிகாரிக்கு எழுதினேன்.

அரசாங்கம் செய்துள்ள தீர்மானத்திற்காக நான் வருந்து கிறேன். தமக்குக் கடிதம் எழுதும்படி காயிதே ஆஜம் ஒரு பகிரங்கக் கூட்டத்தில் கேட்டுக் கொண்டதற்குப் பதிலாகவே நான் அக்கடிதத்தை எழுதினேன். நான் அவருக்கு எழுதினல், அக் கடிதம் அவருக்கு அனுப்பப்படும் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்படும்படியாக காயிதே ஆஜமின் பேச்சு இருந்தது. அவரும் நானும் சந்தித்துப் பேச வேண்டும் அல்லது பரஸ்பரம் தொடர்பாவது வைத்துக்கொள்ளவேண்டும் என்பதில் பொது மக்களும் அக்கறையுடையவர்களாக இருக்கிருர்கள். அவரைச் சந்தித்துப் பேச நான் எப்போதுமே ஆர்வம் உடையவனுக இருக்கிறேன். அவ்விதம் சந்தித்துப் பேசினுல், எல்லோரும் ஒப்புக் கொள்ளக் கூடிய விதத்தில் சமூகப் பிணக்கிற்கு ஏதாவ தொரு தீர்வு காணலாம். எனவே அந்தக் கடிதத்தை அவருக்கு அனுப்பாதது, பொது மக்களுக்குத்தான் அதிக அசௌகரிய மாகும். அரசாங்கம் எனக்கு விதித்துள்ள கட்டுப்பாடுகளை, ஒரு சத்தியாக்கிரகி என்ற முறையில் நான் அசௌகரியங்களாகக் கருதாமலிருக்கலாம். என்னுடைய சக ஊழியர்கள், என்னு டைய உறவினர்களைக் காட்டிலும் எனக்கு ஒரு விதத்தில் அதிக மாக நெருங்கியவர்கள். எனவே, சக ஊழியர்களுக்குக் கடிதங்கள் எழுத நான் அனுமதிக்கப்படாததால், என்னுடைய உறவினர் களுக்கு எழுதும் உரிமையை நான் நிராகரித்து விட்டேன்.

அரசாங்கம் வெளியிட உத்தேசித்துள்ள அறிக்கையின் பிரதி யொன்றை நீங்கள் முன்னதாகவே எனக்கு அன்புடன் அனுப்பி யிருக்கிறீர்கள். அதில் சில திருத்தங்கள் செய்ய வேண்டியது அவசியமாகும். ஏனெனில், அது உண்மைக்கு மாறுனதாக இருக் கிறது.

பொதுஜன இயக்கத்தை நான் கைவிடாததால், இந்தி யாவின் யுத்த முயற்சிக்குத் தடை ஏற்பட்டிருப்பதாக அந்த

அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பொதுஜன இயக்கத்தை ஆரம்பிக்கும்படி சென்ற ஆகஸ்டு 8-ஆம் தேதி காங்கிரஸ் எனக்கு அதிகாரம் அளித்தது. தவிர, அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட பொதுஜன இயங்கம் முற்றிலும் சட்ட பூர்வமானதென்றும், அரசாங்கம், பொதுமக்கள் எல்லோருடைய நலனுக்கும் உகந்ததென்றும் நான் கருதுகிறேன். இது அரசாங்கத்துக்குத் தெரியும். இயக்கத்தை ஆரம்பிக்க அரசாங்கம் எனக்கு அவகாசம் அளிக்கவுமில்லை. எனவே, ஒருபோதும் ஆரம்பிக்கப்படாத ஓர் இயக்கம் "இந்தியாவின்" யுத்த முயற்சிக்குத் தடையாக எப்படி இருக்க முடியும்? முக்கியமான காங்கிரஸ்காரர்களையெல்லாம் அரசாங்கம் கைது செய்ததன் விளைவாக பொது மக்கள் ஆத்திரம் அடைந்ததால் யுத்த முயற்சிக்கு இடையூறு ஏற்பட்டிருக்குமாயின், அதன் சம்பந்தமான பொறுப்பு முற்றிலும் அரசாங்கத்தினுடையதேயாகும். சீனா, ருஷ்யா உள்பட நேச தேசங்களின் லட்சியத்திற்குச் சாதகமாக இந்தியா முழுவதும் யுத்த முயற்சியில் ஈடுபடவேண்டும் என்பதற்காகவே பொதுஜன இயக்கத்திற்கு ஆகஸ்டு மாதம் நிறைவேறிய தீர்மானம் அனுமதி கொடுத்தது. ருஷ்யாவுக்கும் சீனாவுக்கும் ஏற்பட்ட அபாயம் சென்ற ஆகஸ்டு மாதம் உச்ச நிலையை அடைந்திருந்தது. இப்போது கூட அந்த அபாயத்திலிருந்து அந்த நாடுகள் விடுதலை அடைந்துவிடவில்லை என்பதே எனது அபிப்பிராயமாகும். இந்தியாவில் செய்யப்பட்டுவரும் யுத்த முயற்சிகள் யாவும் இந்தியாவின் யுத்த முயற்சி அல்ல, அந்நிய அரசாங்கத்தின் யுத்த முயற்சியே. இவ்விதம் நான் கூறுவது தன்னை அவமதிப்பதாகும் என அரசாங்கம் வருந்தாதென்றே நம்புகிறேன். ஆகஸ்டு தீர்மானத்தில் கண்டபடி காங்கிரசின் கோரிக்கைக்கு அரசாங்கம் இணங்கியிருந்தால், மானிட வர்க்கத்தின் விடுதலையைப் பெறுவதற்கும், அபாயகரமான பாசிஸம், நாஜிஸம், ஜப்பானிஸம், ஏகாதிபத்தியம் ஆகியவற்றை உலகத்திலிருந்து ஒழித்துவிடுவதற்கும் ஈடு இணையில்லாத வகையில் பொதுமக்கள் முயற்சியெடுத்திருப்பார்கள் என்று நான் கூறுகிறேன். நான் அவ்விதம் கூறுவது முற்றிலும் தவறாக இருக்கலாம். இருந்தாலும், அதுதான் தீர்க்காலோசனையுடன் கூடிய, உண்மையான எனது அபிப்பிராயமாகும்.

அந்த அறிக்கை உண்மைக்கு ஒத்ததாக இருக்க வேண்டுமாயின், அதன் முதல் பாராவில் கீழ்க்கண்டவாறு திருத்தம் செய்யவேண்டும்: "ஸ்ரீ காந்தி, அவர் விருப்பப்படி தமக்குக் கடிதம் எழுதவோ அல்லது தம்மைச் சந்திக்கவோ ஆர்வத்துடன் இருப்பதாக தமக்குக் கடிதம் எழுதும்படி ஸ்ரீ ஜின்னா பொதுக்கூட்டத்தில் விடுத்த அழைப்பிற்கிணங்க ஸ்ரீ காந்தி அவருக்குச் சுருக்கமாக ஒரு கடிதம் எழுதி, அதை ஸ்ரீ ஜின்னாவுக்கு அனுப்பும்படி இந்திய அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டுள்ளார்.'

அறிக்கையிலுள்ள மற்றப் பகுதிகளும் எனது கோரிக்கைக் கிணங்க தகுதியான முறையில் திருத்தப்படுமென நான் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 58

சிறை முகாம்,
28—5—1943

அன்புள்ள சர் ரிச்சர்டு டாட்டென்ஹாம்,

நீங்கள் 24-ஆம் தேதி எழுதிய கடிதத்திற்கு எனது பதிலை நேற்று ஒரு மணிக்கு சிறை அதிகாரியிடம் கொடுத்தேன். அரசாங்க அறிக்கை வெளியாவதற்கு முன் எனது கடிதம் உங்களுக்குக் கிடைக்கவேண்டும் என்ற நம்பிக்கையுடன் நான் அவசரமாக அதை எழுதி அனுப்பினேன். எனவே நேற்று மாலை கிடைத்த பத்திரிகையிலேயே அந்த அறிக்கை வெளியாகியிருந்ததைக் குறித்து நான் ஆச்சரியமும் வருத்தமும் அடைந்தேன். அந்த அறிக்கையின் விளைவாக லண்டனில் எழுந்துள்ள அபிப்பிராயங்களைப் பற்றிய ராய்ட்டர் செய்தியும் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கிறது. இந்நிலையில், முன்னதாகவே அறிக்கையின் பிரதியொன்று எனக்கு அனுப்பப்பட்டதற்கு அர்த்தமேயில்லை. அந்த அறிக்கை உண்மைக்கு முரணாக இருப்பதுடன், எனக்கு அநீதி செய்வதாகவும் இருக்கிறது. எனவே, இதற்கு ஓரளவாவது எனக்குப் பரிகாரம் செய்வதற்கான ஒரேவழி, நமக்குள் நடந்த கடிதப் போக்குவரத்தை வெளியிடுவதுதான். ஆகையால், அதை வெளியிடும்படி நான் கேட்டுக்கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 59

உள்துறை இலாகா,
புது டில்லி, 4—6—1943

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

1943 மே 27-ஆம் தேதி சர் ரிச்சர்ட் டாட்டென்ஹாமுக்கு நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது என்றும், இந்திய அரசாங்கம் அதைப் பற்றி ஆலோசித்தது என்றும், ஆனால் ஏற்கனவே வெளி

யாகியுள்ள அறிக்கையில் எவ்வித மாறுதலும் செய்யவேண்டியது அவசியமென அரசாங்கம் கருதவில்லை என்றும் தங்களுக்கு அறிவிக்கும்படி எனக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது.

தங்கள் உண்மையுள்ள,
**கான்ரான் ஸ்மித்**

## 60

உள்துறை இலாகா,
புது டில்லி, 7—6—1943

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

1943 மே 28-ஆம் தேதி தாங்கள் சர் ரிச்சர்டு டாட்டென் ஹாமுக்கு எழுதிய கடிதத்திற்கு பின்வருமாறு பதில் அளிக்கும்படி எனக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது: நீங்கள் ஸ்ரீ ஜின்னுவுக்கு எழுதிய கடிதத்தை அவருக்கு அனுப்பாததற்கு அரசாங்கம் கூறும் காரணங்கள் அடங்கிய அறிக்கையின் பிரதி, நீங்கள் விவரம் அறிந்து கொள்வதற்காக உங்களுடைய சொந்தப் பார்வைக்கு அனுப்பப்பட்டது. எனவே, அந்தக் கடிதப் போக்குவரத்தை வெளியிடுவதற்கான காரணம் எதுவும் இல்லை என்பது பற்றி அரசாங்கம் வருந்துகிறது.

தங்கள் உண்மையுள்ள,
**கான்ரான் ஸ்மித்**

[இந்தக் கடிதம் காந்திஜிக்கு 11—6—1943-இல் கிடைத்தது.]

## 61

# லார்டு சாமுவலுக்குக் கடிதம்

சிறை முகாம்,
15—5—1943

அன்புள்ள லார்டு சாமுவல்,

ஏப்ரல் 8-ஆம் தேதி வெளியான 'ஹிந்து' பத்திரிகையிலிருந்து கத்தரிக்கப்பட்ட ஒரு ராய்ட்டர் செய்தியை இத்துடன் இணைத்துள்ளேன். அது, லார்டு சபையில் சமீபத்தில் நடந்த விவாதத்தின்போது நீங்கள் செய்த பிரசங்கத்தின் சுருக்கமேயாகும். அந்தச் சுருக்கம் சரியானதுதான் என்றே வைத்துக்கொண்டால், தங்களுக்கு இந்தக் கடிதம் எழுதவேண்டியது அவசியம் என்று எனக்குத் தோன்றுகிறது.

அந்தப் பிரசங்கம் எனக்கு வேதனையைக் கொடுத்திருக்கிறது. காங்கிரசுக்கும் எனக்கும் விரோதமாக இந்திய அரசாங்கம் வெளியிட்ட ஒரு தலைப்பட்சமான, அநீதியான அறிக்கை முழுவதையும் நீங்கள் அப்படியே ஆதரிப்பீர்கள் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை.

நீங்கள் ஒரு தத்துவ ஞானி, லிபரல் கட்சியைச் சேர்ந்தவர். தத்துவ மனப்பான்மை கொண்டவர்கள் எதிலும் பற்றற்றவர்களாக இருப்பார்கள் என்பதே எனது அபிப்பிராயமாகும். எல்லா மனிதர்களிடமும், எல்லா விஷயங்களிலும் அனுதாபத்துடன் நடந்து கொள்பவர்களே 'லிபரல்' கொள்கையுடையவர்கள்.

எனக்குத் தோன்றுவது போல், அரசாங்கம் கூறியுள்ளவற்றிலிருந்து நீங்கள் செய்துள்ள முடிவுகளுக்கு எவ்வித ஆதாரமும் இல்லை.

உங்களுடைய பிரசங்கம் அடங்கிய சுருக்கமான செய்தியிலிருந்து நான் சில விஷயங்களைத் தேர்ந்தெடுத்துக் கூறுகிறேன். அவை உண்மைகளுக்கு முரணுக இருக்கின்றன என்பதே எனது அபிப்பிராயமாகும்.

1. "ஜனநாயக தத்துவத்தையே காங்கிரஸ் கட்சி பெரிதும் உதறித் தள்ளிவிட்டது."

காங்கிரஸ் கட்சி ஜனநாயக தத்துவத்தை எக்காலத்திலும் உதறித் தள்ளியதில்லை. அது ஜனநாயகத்தை நோக்கி நாளுக்கு நாள் முன்னேறியே வந்திருக்கிறது. அமைதியாகவும், சட்டத்திற்குட்பட்ட முறைகளைக் கைக்கொண்டும் சுதந்திர லட்சியத்தை அடைய வேண்டும் என்பதை ஆதரித்து ஒரு வருடத்துக்கு நான்கு அணு சந்தா செலுத்தும் ஒவ்வொருவரும் காங்கிரசில் உறுப்பினர் ஆகமுடியும்.

2. "காங்கிரஸ் சர்வாதிகாரத்தை நோக்கிச் சென்றுகொண்டிருப்பதற்கான அறிகுறிகள் தென்படுகின்றன."

முன்பு இருந்துவந்த காங்கிரஸ் மந்திரி சபைகள், காங்கிரஸ் காரியக் கமிட்டியின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு இருந்ததை அடிப்படையாகக் கொண்டே நீங்கள் அவ்விதம் குற்றம் சாட்டியிருக்கிறீர்கள். பிரிட்டிஷ் பார்லிமெண்டில் வெற்றிபெற்ற கட்சியும் அவ்விதமே செய்வதில்லையா? ஜனநாயகம் பூரணமான பக்குவ நிலையை அடைந்த பின்னர் கூட கட்சிகள்தான் தேர்தல்களை நடத்திக் கொண்டிருக்கும்; கட்சி அங்கத்தினர்களின் செயல்களும் கொள்கைகளும் கட்சியின் நிர்வாகக் கமிட்டிகளுக்கு உட்பட்டுத்தான் இருக்கும். தனிப்பட்ட காங்கிரஸ் காரர்கள், கட்சி நிர்வாகத்தின் தொடர்பின்றி தேர்தல்களை நடத்துவதில்லை. அபேட்சகர்கள் உத்தியோக தோரணையில் காங்கிரசினுலேயே தேர்ந்தெடுக்கப்படுகிருர்கள். அவர்களுக்கு அகில இந்தியத் தலைவர்கள் உதவி செய்கிருர்கள். ஆக்ஸ்போர்ட்

அகராதியின்படி, 'சர்வாதிகாரம்' என்ருல், 'வேறு கட்சிகளையோ அல்லது போட்டிக் கட்சியிடம் விசுவாசம் காட்டுவதையோ அனுமதிக்காத ஒரு கட்சி' என்பதே பொருள்படும். தவிர, அது தன் ஆதிக்கம் நிலைத்திருக்கும்படி செய்வதற்கு பலாத்காரத்தையும் உபயோகிக்க வேண்டும். ஆனல் அதற்கு மாருக 'சர்வாதிகார ஆட்சி' என்ருல், 'ஆட்சி புரியும் ஒரே ஒரு கட்சி' என்பதே அர்த்தமாகும். ஒரு காங்கிரஸ் அங்கத்தினருக்கு, காங்கிரஸ் தலைவரைப் போலவோ அல்லது காரியக் கமிட்டி அங்கத்தினர்களைப் போலவோ அதே சுதந்திரம் உண்டு. காங்கிரசுக்கு உள்ளேயும் கட்சிகள் இருக்கின்றன. எல்லாவற்றையும் காட்டிலும் மேலாக, காங்கிரஸ் பலாத்காரத்தைத் தவிர்த்திருக்கிறது. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி எந்த நேரத்திலும் காரியக் கமிட்டி அங்கத்தினர்களைத் தள்ளிவிட்டு, வேறு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்க முடியும்.

3. "சட்டசபைகளின் ஆதரவு இல்லை என்பதற்காக காங்கிரஸ் மந்திரி சபைகள் ராஜிநாமா செய்யவில்லை. சட்டப்படி மாத்திரமே அவர்கள் வாக்காளர்களுக்குப் பொறுப்பாளிகளாக இருந்தார்கள்; ஆனல் உண்மையில் அவர்கள் காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கும் காங்கிரஸ் மேலிடத்திற்கும்தான் பொறுப்பாளிகளாக இருந்தார்கள். அவர்கள் ராஜிநாமா செய்ததற்கு அதுதான் காரணம். எனவே அது ஜனநாயகம் அல்ல. அது சர்வாதிகாரமே ஆகும்."

எல்லா உண்மைகளையும் நீங்கள் அறிந்திருந்தால், இவ்விதம் நீங்கள் சொல்லியிருக்கமாட்டீர்கள். காங்கிரஸ் மந்திரிகள் உண்மையில் காங்கிரஸ் காரியக் கமிட்டிக்குப் பொறுப்பாளிகளாக இருப்பதன் காரணமாக வாக்காளர்களிடம் அவர்களுக்குள்ள பொறுப்பு குறைந்துவிடவில்லை. இதற்கு சாதாரணமான, நியாயமான காரணம் உண்டு. அதாவது, எந்த வாக்காளர்களுக்கு மந்திரிகள் பொறுப்பாளிகளோ அந்த வாக்காளர்களிடமிருந்தே காரியக் கமிட்டி அதிகாரத்தையும் மதிப்பையும் பெறுகிறது. காங்கிரசுக்கு உள்ள மதிப்பிற்கு ஒரே காரணம், அது மக்களுக்குச் செய்துவரும் தொண்டேயாகும். உண்மை என்னவெனில், மந்திரிகள் அந்தந்த மாகாண சட்டசபைகளிலுள்ள தங்கள் கட்சி அங்கத்தினர்களுடன் கலந்தாலோசித்து, அவர்களுடைய சம்மதத்தின் மீதே தங்கள் பதவிகளை ராஜிநாமா செய்தனர். ஆனல், இந்திய அரசாங்கம்தான் சர்வாதிகாரத்தின் முழு உருவாகத் திகழ்கின்றது. ஏனெனில், இந்தியாவில் உள்ள எவருக்கும் இந்திய அரசாங்கம் பொறுப்பாளி அல்ல. சர்வாதிகாரத்தில் ஊறிக்கிடக்கும் ஓர் அரசாங்கம், இந்தியாவிலுள்ள களங்கமற்ற ஒரு ஜனநாயக ஸ்தாபனத்திற்கு எதிராக அதே குற்றச்சாட்டை அதாவது சர்வாதிகார ஸ்தாபனம் என்ற குற்றச்சாட்டைக் கொண்டு வருவது துக்ககரமான கேலிக்கூத்தேயாகும்.

4. "எந்த நாட்டிலும் இராத படுமோசமான கட்சிப் பிரிவினை இந்தியாவில் இருப்பது துரதிர்ஷ்டமாகும். அதாவது, கட்சிப் பிரிவினை மத சமூகங்களை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கிறது."

மத சமூகங்களை அடிப்படையாகக் கொண்டு இந்தியாவில் உள்ள அரசியல் கட்சிகள் பிரிக்கப்பட்டிருக்கவில்லை. காங்கிரஸ், அதன் ஆரம்பகாலத்திலிருந்தே முற்றிலும் அரசியல் ஸ்தாபன மாகவே இருந்து வந்திருக்கிறது. கிறிஸ்தவர்கள், பார்சிகள், முஸ்லிம்கள், ஹிந்துக்கள் உட்பட பிரிட்டிஷாரும், இந்தியர்களும் அதன் தலைவர்களாக இருந்திருக்கிறார்கள். இந்தியாவிலுள்ள மற்றொரு அரசியல் ஸ்தாபனம் மிதவாதிகள் கட்சியாகும். இனப் பற்று எதுவும் இல்லாத வேறு அரசியல் ஸ்தாபனங்களும் இந்தியாவில் இருக்கின்றன. இங்கு மதத்தை அடிப்படையாகக் கொண்ட வகுப்புவாத ஸ்தாபனங்கள் இருக்கின்றன என்பதும், அவர்கள் அரசியலில் பங்கு எடுத்துக் கொள்கிறார்கள் என்பதும் முற்றிலும் உண்மையே. எனினும் அந்த உண்மை, உங்களுடைய திட்டவட்டமான கூற்றை ஆதரிப்பதாகாது. அந்த ஸ்தாபனங்கள் மிகவும் முக்கியமானவை என்பதையோ, அவை நாட்டின் அரசியலில் தீவிரமாகப் பங்கு எடுத்துக் கொள்கின்றன என்பதையோ நான் குறைத்துக் கூற விரும்பவில்லை. ஆனால், அவை இந்தியாவிலுள்ள அரசியல் மனம் படைத்த மக்களின் பிரதிநிதி ஸ்தாபனங்கள் அல்ல என்றே உறுதியாகக் கூறுகிறேன். இந்திய அரசாங்கம் வேண்டுமென்றே பிரித்தாளும் கொள்கையை மேற் கொண்டிருப்பதன் பலனாகவே, அத்தகைய அரசியல்-மத ஸ்தாபனங்கள் உருவாகியுள்ளன என்பதைச் சரித்திர பூர்வமாக ருசுப் பிக்க முடியும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் செல்வாக்கு இந்தியாவிலிருந்து அறவே போய்விடுமாயின், இந்தியாவில் முற்றிலும் எல்லா வகுப்புகளும் பிரிவுகளும் அடங்கிய அரசியல் கட்சிகளே இயங்கிவரும்.

5. *"அதிகமாக மதிப்பிட்டாலும், இந்தியாவிலுள்ள மக்களில் பாதிப் பேருக்கு மேற்பட்டவர்களின் சார்பில்தான் காங்கிரஸ் பேச முடியும். அப்படியிருந்தும்கூட, அதன் சர்வாதிகாரப் போக்கு காரணமாக இந்தியாவிலுள்ள எல்லோருடைய சார்பிலும் பேசுவதாக அது கூறிக்கொள்கிறது."*

காங்கிரசிலுள்ள அங்கத்தினர்களின் தொகையைக்கொண்டு அதன் பிரதிநிதித்துவத் தன்மையை நீங்கள் அளவிடுவதாயின், இந்தியாவிலுள்ள பாதி ஜனத்தொகைக்குக்கூட அது பிரதிநிதி ஸ்தாபனமாக இருக்க முடியாது. இந்தியாவிலுள்ள மகத்தான ஜனத்தொகையுடன், சற்றேறக்குறைய நாற்பது கோடி மக்களுடன் ஒப்பிடும்போது, காங்கிரஸ் அங்கத்தினர்களின் தொகை மிக மிகக் குறைவேயாகும். 1920–லிருந்துதான் காங்கிரசில் அங்கத்தினர்கள் சேர ஆரம்பித்தனர். அதற்கு முன், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கே காங்கிரஸ் பிரதிநிதி ஸ்தாபனமாக இருந்தது. பல்வேறு அரசியல் சங்கங்களும் அந்தக் கமிட்டிக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுத்து வந்தன. அப்படியிருந்தும், எனக்குத் தெரிந்த வரையில் காங்கிரஸ், சமஸ்தான மன்னர்கள் உட்பட எல்லா மக்களின் சார்பிலும் பேசுவதாகவே எப்போதும் கூறிவந்திருக்கிறது. அந்நியரின் ஆதிக்கத்தில் இருக்கும் ஒரு தேசத்திற்கு, ஒரே ஒரு அரசியல் லட்சியம்தான் இருக்க முடியும்.

அதாவது அந்த ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவது ஒன்றே அதன் லட்சியமாக இருக்க முடியும். அந்த விடுதலை உணர்ச்சியையே காங்கிரஸ் எப்போதும் வெளியிட்டு வந்திருக்கிறது. எனவே இந்நிலையில், அது இந்தியா முழுமைக்குமே தான் பிரதிநிதி ஸ்தாபனம் என்று கூறிக்கொள்வதை மறுக்க முடியாது. சில கட்சிகள் காங்கிரசின் பிரதிநிதித்துவத் தன்மையை மறுக்கிறது என்பதற்காக, காங்கிரஸ் நாட்டின் பிரதிநிதி ஸ்தாபனம் அல்ல என்று கூறிவிட முடியாது.

6. "இந்தியாவிலிருந்து வெளியேறிவிட வேண்டும் என்று ஸ்ரீ காந்தி பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடம் கூறியபோது, ஆட்சிப் பொறுப்பை காங்கிரஸ் மேற்கொள்ளும் என்று சொன்னார்."

இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் வெளியேறியதும் ஆட்சிப் பொறுப்பை காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளும் என்று நான் ஒரு போதும் கூறியதில்லை. சென்ற பிப்ரவரி 29–ஆம் தேதி வைஸ்ராய்க்கு எழுதிய கடிதத்தில் நான் கூறியது இதுதான்: "ஆகஸ்டு தீர்மானத்தின் மூலம் காங்கிரஸ் தனக்கென்று எதுவும் கேட்கவில்லை என்ற மூலாதாரமான உண்மையை அரசாங்கம் கவனிக்கத் தவறிவிட்டது. அதன் கோரிக்கைகள் யாவும் மக்களின் நலனுக்காகவேயாகும். ஒரு தேசீய அரசாங்கத்தை அமைப்பதற்காக காயிதே ஆஜம் ஜின்னாவை அரசாங்கம் அழைப்பதற்கும் அது இசைந்தது. அவ்விதம் அமைக்கும்போது அவசியமான சில சமரச ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்றும், அத்தகைய அரசாங்கம் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சட்டசபைக்குப் பொறுப்பாளியாக இருக்க வேண்டும் என்றுமே காங்கிரஸ் கோரியது. ஸ்ரீமதி சரோஜினி தேவியைத் தவிர காரியக் கமிட்டி அங்கத்தினர்களுடன் எனக்கு இப்போது எவ்விதத் தொடர்பும் இல்லை. எனவே, அவர்களின் தற்போதைய மன நிலையைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது. எனினும், கமிட்டி அங்கத்தினர்கள் தங்களுடைய மனத்தை மாற்றிக் கொண்டிருப்பார்களென நான் நினைக்கவில்லை.

7. "யுத்த நடவடிக்கைகளில் ஈடுபடாமல் இந்தியாவில் காங்கிரஸ் இருந்ததுபோல் இந்த தேசமோ (பிரிட்டனே), கானடாவோ, ஆஸ்திரேலியாவோ, நியூஸீலந்தோ, தென்னாப்பிரிக்காவோ அல்லது அமெரிக்காவோ நடவடிக்கைகளில் ஈடுபடாமல் இருந்திருந்தால், எல்லா இடங்களிலும் சுதந்திர லட்சியம் புதையுண்டு போயிருக்கும். மனிதவர்க்கத்தின் லட்சியத்தைக் கைவிடுவதன் மூலம் இந்தியாவுக்குப் பெருமை ஏற்பட்டுவிடாது என்பதை காங்கிரஸ் தலைவர்கள் உணர்ந்து கொள்ளாதது பரிதாபமாகும்."

பிரிட்டனும், அமெரிக்காவும் முற்றிலும் சுதந்திர நாடுகள். கானடாவும் மற்ற குடியேற்ற நாடுகளும்கூட நடைமுறையில் சுதந்திர நாடுகளே. அப்படியிருக்க, நீங்கள் இந்தியாவை அந்த நாடுகளுடன் எவ்விதம் ஒப்பிட்டுக் கூற முடியும்? நீங்கள் குறிப்பிட்ட நாடுகள் அனுபவித்துவரும் சுதந்திரத்தில் எள்ளளவாவது இந்தியாவுக்கு இருக்கிறதா? இந்தியா இன்னும் சுதந்திரம் அடைந்த

பாடில்லே. நேச தேசங்கள் தோல்வி அடைந்துவிடுவதாக வைத்துக்கொள்வோம். ராணுவ நிர்ப்பந்தம் காரணமாக இந்தியாவிலிருந்து நேச தேசத் துருப்புகள் வாபசாகிவிடுவதாகவும் வைத்துக்கொள்வோம். அவ்விதம் நேருமென நான் எதிர்பார்க்கவில்லே. ஒரு வேளே அவ்விதம் நேர்ந்துவிட்டால், நீங்கள் குறிப்பிட்டுள்ள நாடுகள் யாவும் அவற்றின் சுதந்திரத்தை இழந்துவிடலாம். ஆனல் அப்போதும் இந்தியா தனது தற்காப்பற்ற நிலேயில் பழைய எஜமானர்களின் ஸ்தானத்தில் புதிய எஜமானர்களின் கீழ் இருக்கும்படி நேரும். வக்கிரபுத்தி காரணமாக காங்கிரஸ் யுத்தத்தில் பங்கு எடுத்துக்கொள்ளாமலில்லே. சுதந்திரமின்றி காங்கிரசோ அல்லது வேறு எந்த ஸ்தாபனமோ நேச தேசங்களின் லட்சியத்திற்கான உற்சாகத்தைப் பொதுமக்களிடையே தூண்ட முடியாது. எதிர்காலத்தில் சுதந்திரம் அளிப்பதாகக் கூறும் வெறும் உறுதிமொழியினல் மாத்திரம் அத்தகைய அற்புதத்தைச் சாதித்துவிட முடியாது. மனித வர்க்கத்தினுடைய லட்சியத்தின் பிரதிநிதியாக இந்தியா விளங்க வேண்டுமாயின், அந்த லட்சியத்திற்காகப் போராடும் பொறுப்பை இந்தியா ஏற்க வேண்டுமாயின், சுதந்திர ஒளியை அது இப்போதே பெறவேண்டும். 'இந்தியாவைவிட்டு வெளியேறு' என்ற கோஷம், இந்த உண்மையை உணர்ந்துகொண்டதிலிருந்து எழுந்ததே யாகும். குளிரினல் நடுங்கி விறைக்கும் ஒரு மனிதனிடம், ஏதோ எதிர்காலத்தில் சூரிய வெப்பம் வருமென்று உறுதிகூறுவதால், அவனது நடுக்கத்தைப் போக்கி அவனது உடலில் உஷ்ணத்தை உண்டாக்கிவிட முடியுமா?

பெரும் பரிதாபம் என்னவெனில், எனது செல்வாக்கின் கீழ் காங்கிரஸ் எதைச் செய்தாலும், எதைக் கூறினலும் அதை ஆட்சி புரிவோர் நம்ப மறுப்பதுதான். காங்கிரஸ் செய்வதும் சொல்லுவதும் தீமை என்றும் ஆட்சியாளர்கள் திடீரென்று கண்டுபிடித்திருக்கிறார்கள். இவ்விஷயத்தை நீங்கள் தெளிவாக அறிந்துகொள்ள வேண்டுமாயின், காங்கிரசுடனும், காங்கிரஸ்காரர்களுடனும் எனக்குள்ள தொடர்பை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். காங்கிரசுடன் எனக்குள்ள தொடர்பையெல்லாம் அறவே கத்தரித்துக்கொள்ளும் முயற்சியில் 1935-இல் நான் வெற்றி பெற்றேன். எனினும் காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர்களுக்கும் எனக்குமிடையே மனத்தாங்கல் எதுவுமில்லே. நான் உத்தியோக தோரணேயில் காங்கிரசுடன் தொடர்பு வைத்துக்கொண்டிருந்தபோது, காங்கிரசில் இருப்பது, என்னேக் கட்டிவைத்திருப்பது போல் எனக்குத் தோன்றியது; காரியக்கமிட்டி அங்கத்தினர்களுக்கும் அப்படியே இருந்தது. அகிம்சையைப் பற்றிய எனது கருத்துக்களின் விளேவாக கட்டுப்பாடுகள் அதிகமாகி வந்தன. காரியக்கமிட்டி அங்கத்தினர்களால் அவற்றைத் தாங்க முடியவில்லே. எனவே, எனது 'செல்வாக்கு முற்றிலும் தார்மிக முறையில் இருக்க வேண்டும்' என்பதை நான் உணர்ந்தேன். எனக்கு அரசியல் ஆசை எதுவுமில்லே. எனது

அரசியல், சத்தியத்திற்கும் அகிம்சைக்கும் உட்பட்டதேயாகும். எனது வாழ்க்கை முழுவதும் அவ்விதமே நான் நடைமுறையில் அனுசரித்து வந்திருக்கிறேன். எனவே, நான்கு அணு சந்தா செலுத்தி காங்கிரஸ் அங்கத்தினராக இருப்பதைக்கூடக் கைவிடும் அளவுக்கு காங்கிரசில் எனக்குள்ள உத்தியோகத் தொடர்பைக் கத்தரித்துக் கொள்வதற்கு எனது சக உறுப்பினர் கள் என்னை அனுமதித்தனர். அகிம்சைக் கொள்கை அல்லது சமூக ஒற்றுமைப் பிரச்னை பற்றி என்னுடன் கலந்து ஆலோசிக்க வேண்டியது அவசியம் என்று காரியக் கமிட்டி உறுப்பினர்கள் கருதும்போது மாத்திரமே கமிட்டிக் கூட்டங்களுக்கு நான் வர வேண்டும் என்றும் எங்களுக்குள் ஏற்பாடு செய்து கொண்டோம். அதிலிருந்து, காங்கிரசின் வழக்கமான அலுவல்களுடன் நான் முற்றிலும் தொடர்பற்றவனாகவே இருந்து வருகிறேன். எனவே, நான் இல்லாமலேயே காரியக் கமிட்டிக் கூட்டங்களில் பல நடந் திருக்கின்றன. அவற்றின் நடவடிக்கைகள் பத்திரிகைகளில் வெளியானபோதுதான் அவற்றை நான் படித்தேன். காரியக் கமிட்டி உறுப்பினர்கள் சுதந்திர மனம் படைத்தவர்கள். புதிய நிலைமை காரணமாக எழும் பிரச்னைகள் சம்பந்தப்பட்ட வரையில் அகிம்சையை மேற்கொள்ளும் விஷயமாக எனது ஆலோசனையை அவர்கள் ஒப்புக்கொள்ளுமுன், என்னுடன் அவர்கள் அடிக்கடி நீண்ட நேரம் விவாதிப்பது உண்டு. ஆகையால், நியாய வரம்பு மீறி அவர்கள் என் செல்வாக்கிற்கு உட்பட்டவர்களாக இருக் கிறார்கள் என்று கூறுவது அவர்களுக்கும் எனக்கும் நீதி செய்வ தாகாது. சமீப காலம் வரையில்கூட, காரியக் கமிட்டி உறுப்பி னர்களில் பெரும்பாலோர் பல தடவைகளிலும் எனது ஆலோச னையை நிராகரித்திருக்கிறார்கள் என்பதைப் பொது மக்கள் அறிவர்.

8. "யுத்த நடவடிக்கைகளிலிருந்து காங்கிரஸ் விலகிக் கொண்டதுடன் நிற்கவில்லை. ஆட்களோ அல்லது பணமோ கொடுத்து பிரிட்டிஷாரின் யுத்த முயற்சிக்கு உதவி செய்வது தவறு என்றும், அகிம்சையின் மூலம் எல்லா யுத்தத்தையும் எதிர்ப்பதே போற்றத்தக்க முயற்சி என்றும் ஒரு கொள்கையை தீர யோசித்து வேண்டுமென்றே பிரகடனம் செய்துவந்திருக்கிறார்கள். அகிம்சையின் பெயரால் அவர்கள் ஓர் இயக்கத்தை நடத்தியிருக்கிறார்கள். அந்த இயக்கம் பல இடங்களிலும் கடுமையான பலாத்காரத்தில் வந்து முடிந் திருக்கிறது. அந்தக் கலவரங்களுக்கு இந்திய காங்கிரஸ் தலைவர்கள் உடந்தையாக இருந்தார்கள் என்பதை அரசாங்க அறிக்கை தெளிவாக ருசுப்பித்திருக்கிறது."

கற்பனைக் கதைகளால் பிரிட்டிஷ் பொதுமக்களின் மனத்தில் எவ்வளவு தூரம் தப்பெண்ணம் ஏற்படும்படி செய்யப்பட்டிருக் கிறது என்பதை, இந்தக் குற்றச்சாட்டு காட்டுகிறது. சந்தர்ப்பப் பொருத்தமின்றி சில வாக்கியங்களை மாத்திரம் பிரித்து எடுத்து இந்திய அரசாங்க அறிக்கை காங்கிரஸ்மீது குற்றஞ்சாட்டியிருப் பதைப் போலவே மேற்கண்ட கூற்றும் இருக்கிறது. சுதந்திரம் பெறவேண்டும் என்பதைப் பொறுத்த மட்டில், அகிம்சைக் கொள்

கையையே கடைப்பிடிப்பதென காங்கிரஸ் உறுதி கொண்டிருக்கிறது. அந்த லட்சியத்தை மனத்திற்கொண்டே சென்ற இருபது ஆண்டுகளாக காங்கிரஸ் போராடி வருகிறது. அகிம்சை நடவடிக்கைகளில் சில குற்றம் குறைகள் இருக்கலாம் என்றாலும், அது பெரும் அளவுக்கு வெற்றியடைந்திருக்கிறது என்றே நினைக்கிறேன். எனினும், அகிம்சையின் மூலம் யுத்த எதிர்ப்புப் பகட்டில் அது ஒருபோதும் ஈடுபட்டதில்லை. யுத்தத்தை எதிர்க்கத் தனக்கு உரிமை உண்டென்று காங்கிரஸ் கூறி அதை நடைமுறையிலும் அனுசரித்திருந்தால், இந்தியாவின் நிலையே மாறியிருக்கும்; கட்டுக்கோப்பான பலாத்காரத்தை கட்டுக்கோப்பான அகிம்சை வெற்றிகரமாகச் சமாளிக்கும் அற்புதமான காட்சியை உலகம் கண்டிருக்கும். எனினும், முழு அகிம்சை கோரும் அளவுக்கு ஓரிடத்திலும் மனித இயற்கை மேன்மையான நிலைக்கு உயரவில்லை. ஆகஸ்டு 8-ஆம் தேதிக்குப் பிறகு ஏற்பட்ட கலவரங்களுக்குக் காரணம், காங்கிரஸ் கைக்கொண்ட எந்த நடவடிக்கையும் அல்ல. இந்தியா முழுவதும் காங்கிரஸ் தலைவர்களை அரசாங்கம் கைது செய்ததே மக்களிடையே மனக் கொதிப்பு ஏற்படும்படி செய்துவிட்டது. முற்றிலும் அதுதான் கலகங்களுக்குக் காரணமாகும். அதிலும், அந்தச் சமயத்தில் அவ்விதம் கைது செய்தது, மனத் தத்துவ ரீதியாக முற்றிலும் தவறாகும். காங்கிரஸ்காரர்களுக்கு எதிராக ஏதாவது கூறுவதாயின், கோபமூட்டும் நடவடிக்கைகளைப் பொறுமையாக சகித்துக் கொண்டிருக்கும் அளவுக்கு அகிம்சையில் அவர்களும் மற்றவர்களும் உயர்ந்த நிலையை அடையவில்லை எனலாம். இந்திய அரசாங்க அறிக்கை, பத்திரிகைகளுக்கு விடுப்பதற்கான சிறந்த அறிக்கையெனினும், ஓர் அரசாங்க தஸ்தாவேஜு என்ற முறையில் அது சிறந்ததல்ல என்று நீங்கள் ஒப்புக்கொண்டிருந்தும் கூட, அந்த அறிக்கையை ஆதாரமாகக் கொண்டு நீங்கள் ஒருதலைப்பட்சமாக முடிவு செய்தது எனக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கிறது. அந்த அறிக்கை குறிப்பிடும் பிரசங்கங்களையே நீங்கள் வாசிப்பீர்களாயின், ஆகஸ்டு 9-ஆம் தேதியும் அதற்குப் பிறகும் அரசாங்கம் துரதிர்ஷ்டவசமாக எல்லோரையும் கைது செய்ததற்கு எள்ளளவும் நியாயம் இல்லை என்பதைக் காட்டுவதற்கான ஏராளமான ஆதாரங்களை அதில் நீங்கள் காண்பீர்கள்; கைது செய்யப்பட்ட தலைவர்களுக்கு விரோதமாகக் கொண்டுவரப்பட்ட குற்றச்சாட்டுகளுக்கும் சிறிதும் ஆதாரமில்லை என்பதையும் நீங்கள் காண்பீர்கள். அந்தக் குற்றச்சாட்டுகள், நீதி மன்றம் எதிலும் ருசுப்பிக்கப்படவில்லை.

9. "ஸ்ரீ காந்தி முற்றிலும் சட்டவிரோதமான அரசியல் விவாத முறையைக் கொண்டு நம்மை எதிர்க்கவும், உண்ணாவிரதத்தின் மூலம் மிரட்டி, இரக்கம், அனுதாபம் போன்ற சிறந்த மனித உணர்ச்சிகளைத் தமது சுயநலத்திற்கு உபயோகப்படுத்திக் கொள்ளவும் முற்பட்டார். அவரது உண்ணாவிரதம் சம்பந்தப்பட்டவரையில், அவருக்குப் பெருமை அளிக்கக்கூடிய ஒரே ஒரு விஷயம் என்னவெனில், அவர் அதை முடித்ததுதான்!"

என்னுடைய 'உண்ணாவிரதத்தைப்பற்றி வர்ணிக்க நீங்கள் கடுமையான ஒரு சொல்லை உபயோகித்திருக்கிறீர்கள். வைஸ்ராயும் அதே வார்த்தையை உபயோகிக்கத் தயங்கவில்லை. ஒரு வேளை நீங்கள் அறியாமையினால் அந்த வார்த்தையை உபயோகித்திருக்கலாம். ஆனால், வைஸ்ராய்க்கு அத்தகைய சாக்கு எதுவும் இருப்பதற்கில்லை. ஏனெனில், நான் எழுதிய கடிதங்கள் அவர் முன்னிலையில் இருக்கின்றன. நான் உங்களுக்கு சொல்லக்கூடியதெல்லாம், உண்ணாவிரதம் சத்தியாக்கிரகத்தின் ஒரு முக்கியமான அம்சம் என்பதுதான். ஒரு சத்தியாக்கிரகியின் இறுதியான ஆயுதம் அதுதான். தமக்கு தவறு இழைக்கப்பட்டிருக்கிறது என்ற உணர்ச்சியில் ஒரு மனிதன் தன் உடலையே வருத்திக் கொள்வதில் மிரட்டல் என்ன இருக்கிறது? தங்களுக்கு இழைக்கப்பட்ட தவறுகளை அகற்ற வேண்டும் என்பதற்காக, தென்னாப்பிரிக்காவில் சத்தியாக்கிரகக் கைதிகள் உண்ணாவிரதம் இருந்தது, உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். அவர்களைப் போலவே இந்தியாவிலும் செய்திருக்கிறார்கள். நான் மேற்கொண்ட ஓர் உண்ணாவிரதத்தைப்பற்றி உங்களுக்குத் தெரியும். அப்போது நீங்கள் ஒரு மந்திரியாக இருந்தீர்கள். எனது உண்ணாவிரதத்தின் பலனாக, பிரிட்டிஷ் சர்க்கார் தங்களுடைய தீர்மானத்தை மாற்றிக்கொள்ளும்படி நேர்ந்தது அல்லவா? அந்த உண்ணாவிரதத்தையே நான் குறிப்பிடுகிறேன். அந்தத் தீர்மானம் மாற்றப்படாமல் நிலைத்து இருந்திருந்தால், அது தீண்டாமை சாபக்கேடு நிரந்தரமாக இருக்கும்படி செய்திருக்கும். அந்தத் தீர்மானம் மாற்றப்பட்டதால், அத்தகைய ஆபத்து தவிர்க்கப்பட்டது.

நான் சமீபத்தில் மேற்கொண்ட உண்ணாவிரதத்தை அறிவித்து இந்திய அரசாங்கம் வெளியிட்ட அறிக்கை, உண்ணாவிரதம் ஆரம்பமான பிறகு வெளியிடப்பட்டதாகும். நான் சிறையிலிருந்து விடுதலை அடைவதற்காக அந்த உண்ணாவிரதத்தை நான் மேற்கொண்டதாக இந்திய அரசாங்கம் என்மீது குற்றம் சாட்டியிருந்தது. அது முற்றிலும் பொய்யான குற்றச்சாட்டு ஆகும். அரசாங்க அறிக்கைக்குப் பதிலளித்து நான் எழுதிய கடிதத்திலுள்ள விவரங்களை திரித்துக் கூறி அவ்விதம் குற்றம் சாட்டியிருக்கிறார்கள். பிப்ரவரி 8வ நான் எழுதிய கடிதத்தை அரசாங்க அறிக்கை வெளியான சமயத்தில் வெளியிடாமல் அமுக்கிவிட்டார்கள். நீங்கள் இவ்விஷயத்தைப் பரிசீலனை செய்வீர்களானால், பத்திரிகைகளில் வெளியான கீழ்க்கண்ட கடிதங்களை நீங்கள் பார்வையிட வேண்டுமென்று நான் கோருகிறேன்.

| | |
|---|---|
| வைஸ்ராய்க்கு என் கடிதம் | 1942–ஆம் ஆண்டு இறுதியில் |
| வைஸ்ராயின் பதில் | 13-1-9143 |
| என் கடிதம் | 19-1-1943 |
| வைஸ்ராயின் பதில் | 25-1-1943 |
| என் கடிதம் | 29-1-1943 |
| வைஸ்ராயின் பதில் | 5-2-1943 |

என் கடிதம் 8-2-1943
சர் ஆர். டாட்டென்ஹாமின் கடிதம் 7-2-1943
எனது பதில் 8-2-1943

நான் உண்ணுவிரதத்தை முடித்ததற்காக என்னை நீங்கள் பாராட்டியிருக்கிறீர்கள். நான் உண்ணுவிரதத்தை முடித்தேன் என்ற எண்ணம் உங்களுக்கு எப்படி ஏற்பட்டது என்பது எனக்குத் தெரியவில்லை. உரிய காலத்திற்கு முன் நான் உண்ணு விரதத்தை முடித்திருந்தால், அத்தகைய முடிவு எனக்கு கௌரவத்தைக் கொடுப்பதாகாது என்றே நான் கூறுவேன். முன்பே அறிவித்திருந்தபடி குறிப்பிட்ட தேதியிலேயே உண்ணுவிரதம் முடிவடைந்தது. எனவே, அதைக் குறித்து நான் பெருமை பாராட்டிக் கொள்வதற்கில்லை.

10. "ஒரு சமரசத்திற்கு வரவேண்டும் என்ற உண்மையான ஆர்வம் காங்கிரசுக்கு இருந்திருக்குமாயின், எந்தக் காரணங்களுக்காக சமரசப் பேச்சு வார்த்தைகள் முறிந்தனவோ அந்தக் காரணங்களுக்காக அவை முறிந்திருக்க மாட்டா."

உண்மையான ஒருவர் சமரசம் செய்துகொள்ளும் விஷயத்தில் இதைக் காட்டிலும் உண்மையான, அதிகமான ஆர்வம் காட்டியிருக்க முடியாது என்பதை, காங்கிரஸ் தலைவர் மௌலானா அபுல் கலாம் ஆஸாதும், நீண்டகாலம் சமரசப் பேச்சு வார்த்தைகள் நடத்திய பண்டித நேருவும் விடுத்துள்ள அறிக்கை தெளிவாகக் காட்டுகிறது என்றே நினைக்கிறேன். இச் சந்தர்ப்பத்தில் ஒன்றை நினைவில் வைத்துக் கொள்வது நலமாகும். அதாவது பண்டித நேரு, சர் ஸ்டாப்போர்ட் கிரிப்ஸின் நெருங்கிய நண்பராக இருந்தார், இன்னும் இருக்கிறார். சர் கிரிப்ஸின் அழைப்பிற்கு இணங்கவே அவர் அலகாபாத்திலிருந்து வந்தார். எனவே, சமரசப் பேச்சு வார்த்தைகள் வெற்றி பெறும்படி செய்ய அவர் தம்மால் இயன்ற முயற்சியையெல்லாம் செய்யாமலிருக்க முடியவில்லை. சமரச முயற்சி தோல்வியுற்றது பற்றிய வரலாறு இனிமேல்தான் எழுதப்பட வேண்டும். அது எழுதப்படும்போது, சமரசப்பேச்சு தோல்வியடைந்ததற்குக் காரணம் காங்கிரஸ் அல்ல என்பதைக் காணலாம்.

என் கடிதம் உங்களுக்கு சலிப்பு உண்டாகும்படி செய்யவில்லை என்றே நம்புகிறேன். சத்தியம் ஏராளமான பொய்க் கூற்றுகளால் மறைக்கப்பட்டிருக்கிறது. ஒரு மகத்தான ஸ்தாபனத்திற்கு நீதி வழங்காவிடினும், தற்போதைய தகராறைப் பாரபட்சமற்ற விசாரணைக்கு விடுவதையே சத்தியமாகிய லட்சியம் கோருகின்றது.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

லார்டு சாமுவல்,
லார்டு சபை,
லண்டன்.

## 62

உள்துறை இலாகா,
புதுடில்லி, 26—5—1943

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

மே 15-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதமும், அத்துடன் இணைக்கப்பட்டு லார்டு சாமுவலுக்கு நீங்கள் எழுதிய கடிதமும் வந்து சேர்ந்தன. மற்றொரு சந்தர்ப்பத்தில் உங்களுக்கு விவரித்துக் கூறப்பட்டுள்ள அதே காரணங்களை முன்னிட்டு, அக்கடிதத்தை லார்டு சாமுவலுக்கு அனுப்ப முடியாது என்று இந்திய அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**ஆர். டாட்டென்ஹாம்**

## 63

சிறை முகாம்,
1—6—1943

அன்புள்ள சர் ரிச்சர்டு டாட்டென்ஹாம்,

லார்டு சாமுவலுக்கு நான் எழுதிய கடிதம் சம்பந்தமாக இந்திய அரசாங்கம் செய்துள்ள தீர்மானத்தைத் தெரிவித்து தாங்கள் சென்ற மாதம் 26-ஆம் தேதி எழுதிய குறிப்பு கிடைத்தது. அது அரசியல் கடிதம் அல்ல என்பதையும், லார்டு சபை அங்கத்தினருக்கு எழுதிய ஒரு புகார் என்பதையும் உங்களுக்குக் கூற விரும்புகிறேன். ஆதாரமற்ற கூற்றுகளின் மீது அவர் தவறான கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார். எனக்கு அநீதி செய்யும் அந்தத் தவறுகளையே, அவருக்கு எழுதியுள்ள கடிதத்தில் சுட்டிக் காட்டியிருக்கிறேன். தன்னைப் பற்றி அவதூறாகக் கூறப்பட்டுள்ள விஷயங்களைத் திருத்த, ஒரு கைதிக்குக் கூட சாதாரண உரிமை உண்டு. இந்திய அரசாங்கத்தின் தீர்மானம் அந்த உரிமைக்குத் தடை விதிப்பதாக இருக்கிறது. தவிர, காயிதே ஆஜம் ஜின்னாவுக்கு நான் எழுதிய கடிதம் சம்பந்தமாக அரசாங்கம் செய்த தீர்மானத்தை, லார்டு சாமுவலுக்கு நான் எழுதிய கடிதத்தின் விஷயத்தில் அமலுக்குக் கொண்டுவருவது முற்றிலும் பொருத்தமற்றதாகும். எனவே, அத்தீர்மானத்தைப் புனராலோசனை செய்யும்படி கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 64

உள்துறை இலாகா,
புது டில்லி, 7—6—1943

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

லார்டு சாமுவலுக்கு நீங்கள் எழுதிய கடிதம் சம்பந்தமாக அரசாங்கத்தின் தீர்மானத்தை யொட்டி நீங்கள் 1943 ஜூன் 1-ஆம் தேதி சர் ரிச்சர்ட் டாட்டென்ஹாமுக்கு எழுதிய கடிதம் கிடைத்தது. தங்கள் தீர்மானத்தை மாற்றிக் கொள்வதற்கு யாதொரு காரணமும் இல்லை என்று அரசாங்கம் வருந்துகிறது. இதைத் தங்களுக்குத் தெரிவிக்கும்படி எனக்கு உத்தர விடப்பட்டிருக்கிறது.

தங்கள் உண்மையுள்ள,
**கான்ரான் ஸ்மித்**

## 65

வைகவுண்ட் சாமுவல், ஜி. ஸி. பி. அண்டு ஸி.,
32, போர்ச்செஸ்டர் டெர்ரஸ்,
லண்டன், டபிள்யூ-2.

25—7—1944

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

1943 மே 15-ஆம் தேதி தாங்கள் எனக்கு எழுதிய கடிதம் விமானத் தபாலில் இப்போது கிடைத்தது. நீங்கள் சிறையில் இருந்தபோது இந்திய அரசாங்கம் எனக்கு அனுப்ப மறுத்து விட்ட கடிதத்தையே இப்போது நீங்கள் அனுப்பியிருக்கிறீர்கள்.

1943 ஏப்ரல் மாதம் நான் லார்டு சபையில் பேசிய போது குறிப்பிட்ட சில விஷயங்களையொட்டி நீங்கள் அக்கறையுடன் கவனம் செலுத்தியிருப்பதற்காக நான் நன்றியுள்ளவனாக இருக்கிறேன். என்னுடைய பிரசங்கமும் உங்களுடைய கடிதமும் 'ஸ்ரீ காந்தியுடன் கடிதப் போக்குவரத்து' என்று சமீபத்தில் அரசாங்கம் வெளியிட்ட பிரசுரத்தில் வெளியாகியிருக்கின்றன.

நீங்கள் அக்கடிதம் எழுதி இவ்வளவு காலமாகிவிட்டது. சந்தர்ப்பங்களும் இப்போது மாறிவிட்டன. இங்கிலையில் உங்கள் கடிதத்தில் அடங்கியுள்ள பல விஷயங்களுக்கும் நான் பதில் அளிப்பதால் யாதொரு பலனும் ஏற்படாது என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள்; நான் பதில் அளிக்காவிடில், அதை மரியாதைக் குறைவாகவும் தாங்கள் கருத மாட்டீர்கள். "இந்தி

யாவிலிருந்து வெளியேற வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டுள்ள ஸ்ரீ காந்தி, அரசாங்க நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ள வேண்டிய பொறுப்பு காங்கிரசைச் சேர்ந்தது என்று கூறினார்'' என்று என் பிரசங்கத்தில் நான் குறிப்பிட்டேன். அதை நீங்கள் உங்கள் கடிதத்தின் ஆறாவது பாராவில் மறுத்திருக்கிறீர்கள். நீங்கள் எழுதியவற்றிலிருந்து கொடுக்கப்பட்ட மேற்கோள்களை ஆதாரமாகக் கொண்டே அவ்விதம் நான் கூறினேன். நீங்கள் 'ஹரிஜனில்' எழுதிய கட்டுரைகளை, பேராசிரியர் கூப்லண்ட் 'இந்தியாவின் அரசியல் பிரச்னை' என்ற நூலில் மேற்கோள்களாகக் கொடுத்துள்ளார். அவை பின்வருமாறு:

"ஆட்சிப் பொறுப்பை ஏற்பதற்குப் போதிய பலம் எந்த ஒரு கட்சிக்காவது இருக்கிறது என்பதை பிரிட்டிஷ் அரசாங்கம் அங்கீகரித்தால், அவர்கள் எல்லாக் கட்சிகளுக்குமிடையே ஒரு பொதுவான ஒப்பந்தம் ஏற்படவேண்டும் என்று கேட்கமாட்டார்கள். இன்று காங்கிரசுக்கு அத்தகைய பலம் இல்லை என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். எதிர்ப்பையெல்லாம் சமாளித்தே காங்கிரஸ் இன்றைய நிலையை அடைந்திருக்கிறது. காங்கிரஸ் பலவீனம் அடைந்துவிடாமலும், போதிய பொறுமையுடனும் இருந்தால், ஆட்சிப் பொறுப்பை ஏற்பதற்குப் போதுமான பலத்தை அது வளர்த்துக் கொள்ளும். நாம் முன்னேற்றம் அடைவதற்கு முன் எல்லாக் கட்சிகளுடனும் ஓர் ஒப்பந்தத்திற்கு வரவேண்டும் என்ற மயக்கத்தை நமக்கு நாமே சிருஷ்டித்துக் கொண்டுள்ளோம்.''

—'ஹரிஜன்' - 15—6—1940

"ஸ்ரீ காந்தி பேசுகையில், சமஸ்தானங்களில் தலையிடுவதில்லை என்ற தம்முடைய கொள்கையை காங்கிரஸ் கைவிடும்படியான நிர்ப்பந்தம் ஏற்படலாம் என்று எச்சரிக்கை செய்தார். இந்தியாவில் பிரிட்டிஷ் வல்லரசின் ஸ்தானத்திற்கு எதிர்காலத்தில் வரப்போகும் ஒரு ஸ்தாபனத்துடன் நட்பு உறவுகளை வளர்த்துக் கொள்ளும்படி ஸ்ரீ காந்தி சமஸ்தான மன்னர்களுக்கு புத்திமதி கூறியதுடன், அந்த எதிர்காலம் அதிக தூரத்தில் இல்லை என்றும், நட்பு முறையிலேயே பிரிட்டிஷ் வல்லரசுடன் அத்தகைய ஒரு சமரசம் செய்துகொள்ளலாம் என்று தாம் நம்புவதாகவும் குறிப்பிட்டார்.''

— 'ஹரிஜன்' – 3—12—1938

தற்போதைய யுத்தகாலத்தில் நீங்களும் காங்கிரஸ் கட்சியும் அனுசரித்துவரும் கொள்கை, என்னையும், அநேகமாக இந்த நாட்டில் உள்ள இந்திய தேசீய இயக்கத்தின் நண்பர்கள் யாவரையும் உங்களுக்கு எதிராக இருக்கும்படி நிர்ப்பந்தப்படுத்தியிருப்பதைக் குறித்து நான் மிகவும் வருந்துகிறேன். அத்தகைய நிலைமை மாறுமாயின், நான் மிகவும் மகிழ்ச்சியடைவேன்.

என்னை நம்புங்கள்,
தங்கள் உண்மையுள்ள,
சாமுவல்

## 66

முகாம்: பஞ்சகனி,
8—6—1945

அன்புள்ள நண்பருக்கு,

1944 ஜூலை 25-ஆம் தேதி நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. லார்டு சபையில் நீங்கள் செய்த பிரசங்கத்தில் உள்ள பல்வேறு விஷயங்களையுமொட்டி, இவ்வளவு காலம் கடந்தபின் விவரமாக விவாதிக்க முற்படுவது லாபகரமானது அல்ல என்று நீங்கள் கூறுவது சரியே.

இருந்தாலும், உங்கள் கடிதத்தில் உள்ள ஒரு விஷயம் பதில் எழுதும்படி எனக்கு சவால் விடுப்பதாக இருக்கிறது. "இந்தியாவிலிருந்து வெளியேறும்படி பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கேட்டுள்ள ஸ்ரீ காந்தி, ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்வது காங்கிரஸின் கடமையாகும் என்று குறிப்பிட்டுள்ளார்" என்று நீங்கள் லார்டு சபையில் கூறியதற்கு ஆதாரமாக நான் எழுதியவற்றிலிருந்து இரண்டு பகுதிகளை மேற்கோள்களாக எடுத்துக் காட்டியிருக்கிறீர்கள். இது, காங்கிரஸின் சர்வாதிகாரப் போக்கைக் குறிப்பிடுகிறது என்றும் வாதித்திருக்கிறீர்கள்.

உங்களுடைய கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள 'ஹரிஜன்' கட்டுரைகள் முழுவதையும் நான் பார்த்தேன். நீங்களும் பார்ப்பதற்கு சௌகரியமாக இத்துடன் அவற்றின் பிரதிகள் இணைக்கப்பட்டிருக்கின்றன.

'ஹரிஜனி'லிருந்து நீங்கள் எடுத்துக் காட்டியுள்ள பகுதிகள் முறையே 15-6-1940-லும், 3-12-1938-லும் வெளியானவை. பிரஸ்தாப வாதத்திற்கு அவை பொருத்தமற்றவை என்பதைக் கவனிக்க நீங்கள் தவறமாட்டீர்கள். 'பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேற வேண்டும்' என்று 1942 ஆகஸ்டில் காங்கிரஸ் செய்த தீர்மானம், காங்கிரஸ் தலைவர் மௌலானா அபுல் கலாம் ஆஸாத் உத்தியோகதோரணையில் விடுத்த பிரகடனத்தில் அடங்கியிருக்கிறது. என்னுடைய சென்ற கடிதத்தில் இதைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன். அந்தத் தீர்மானம் அமலுக்கு வரவேண்டும் என்பதில் காங்கிரஸ் உறுதி கொண்டிருக்கிறது. எனவே இதற்கும், நான் 'ஹரிஜனி'ல் எழுதியிருப்பதற்கும் என்ன சம்பந்தம் என்பதுதான் தெரியவில்லை.

தவிர, நீங்கள் கொடுத்துள்ள மேற்கோள்கள் சர்வாதிகாரப் போக்கை வெளிப்படுத்துகின்றன என்று நீங்கள் கூறும் விளக்கம் சரியல்ல என்பதே உண்மையாகும். ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளத் தயாராகவும் தகுதிவாய்ந்ததாகவும் இருக்கும் ஒரு ஸ்தாபனம் இந்தியாவில் இருந்தால், தாங்கள் ஆட்சி அதிகாரத்தை மகிழ்ச்சியுடன் விட்டுவிடத் தயாராக இருப்பதாக பிரிட்டிஷ் சர்க்கார் அடிக்கடி பிரகடனம் செய்திருக்கின்றனர். அந்த மகத்தான கடமையை வகிப்பதற்குத்

தன்னைத் தகுதியாக்கிக்கொள்ள காங்கிரஸ் முயற்சிப்பதில் என்ன தவறு இருக்கிறது? காங்கிரஸ் தனக்காக அதிகாரத்தை விரும்பவில்லை; இந்தியாவில் உள்ள மக்கள் யாவருக்கும் அதிகாரம் இருக்க வேண்டும் என்றே விரும்புகிறது. இதை நீங்கள் மேற்கோள் காட்டியுள்ள அதே கட்டுரையில் நான் முற்றிலும் தெளிவாகக் கூறியிருக்கிறேன். அக் கட்டுரையின் சுருக்கம் இதுதான்: 'எதிரிகள் கூறுவதுபோல் தனித்து நின்று சர்வாதிகாரம் செலுத்துவதை,காங்கிரசின் அகிம்சைக் கொள்கை தடுக்கின்றது. அதற்கு மாருக, அது எல்லாக் கட்சிகளுடனும் உறவுகொண்டு, சந்தேகத்தைப் போக்கி, தன்னுடைய அந்தரங்க சுத்தியிலும் நம்பிக்கை உண்டாகும்படி செய்ய வேண்டியிருக்கிறது.''

தேசம் முழுவதையும் தன் அபிப்பிராயத்திற்கு மாற்றவும், தேசத்தின் பிரதிநிதியாக விளங்கவும் முயற்சிப்பது ஒரு ஜன நாயக நாட்டிலுள்ள ஒவ்வொரு கட்சியின் சாதாரணமான லட்சியம் அல்லவா? பார்லிமெண்டில் பெரும்பான்மையான ஸ்தானங்களைப் பெற்றுள்ள ஒரு கட்சி, நிர்வாக அதிகாரத்திலிருந்து விலகும் கட்சியினிடமிருந்து நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொள்வதில்லையா? கட்சி முறையை அடிப்படையாகக் கொண்டுள்ள அரசாங்கத்தில், கூட்டு மந்திரி சபை எப்போதாவது அமைக்கப்படுமேயன்றி வழக்கமாக அமைக்கப்படுவதில்லை அல்லவா? அப்படியிருக்க, மற்றக் கட்சிகளுடன் ஒருமை ஏற்பட வேண்டுமென்பதற்காக காங்கிரஸ் அதன் லட்சியத்தைத் தியாகம் செய்யவோ அல்லது குறைத்துக்கொள்ளவோ மறுப்பதை, எவ்விதம் சர்வாதிகாரம் என்று கூறமுடியும்?

மன்னர்களைப் பற்றிய கட்டுரையில் உள்ள இரண்டாவது பகுதியை எடுத்துக்கொள்வோம். சமஸ்தானங்களுடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ளும்படி இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டில் பிரிட்டிஷ் சர்க்கார்தான் காங்கிரசைக் கேட்டுக் கொண்டார்கள் என்பதைச் சுட்டிக்காட்ட வேண்டியது அவசியமாகியிருக்கிறது. எனவே, சமரசம் செய்துகொள்வதற்காக மன்னர்களை அழைப்பதில் எவ்விதமான தவறும் இருக்க முடியாது.

இதன் சம்பந்தமாக, ஒரு முக்கியமான உண்மையை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். நல்ல வார்த்தைகள்கூறி மனத்தை மாற்றுவது, தான் துன்பத்திற்கு உள்ளாவது,—இவற்றைத் தவிர காங்கிரசுக்கு வேறு அதிகாரம் இல்லை. இதற்கு மாருக, சர்வாதிகார தத்துவத்தின் அடிப்படையும் மூலாதாரமான அம்சமும் பலாத்காரமே அல்லவா? அகிம்சை சம்பந்தமாக எனது அந்தரங்க சுத்தியிலும், காங்கிரசின் அந்தரங்க சுத்தியிலும் உங்களுக்கு நம்பிக்கை இருக்குமாயின், நானோ, காங்கிரசோ சர்வாதிகாரப் போக்குடன் இருப்பதாக நீங்கள் குற்றம் சாட்ட முடியாது.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி,**

## 67

32, போர்ச்செஸ்டர் டெர்ரஸ் டபிள்யூ-2
பாடிங்டன் 0040,
2—7—1945

எனது அன்புள்ள நண்பருக்கு,

இந்தியாவைப் பற்றி நான் செய்த பிரசங்கங்கள் ஒன்றில் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு விஷயத்திற்குப் பதிலளித்து முழுவிவரங்களுடன் எழுதும் சிரமத்தை நீங்கள் மேற்கொண்டதற்காக நன்றியுள்ளவனாக இருக்கிறேன். எனினும், எனக்கு அவ்விஷயமாக இன்னும் திருப்தி ஏற்படவில்லை என்று கூற நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் உடனடியாக வெளியேறிவிட வேண்டும் என்பதே உங்களுடைய கோரிக்கையாகும். அரசாங்க அதிகாரங்கள் யாரிடமாவது மாற்றப்பட வேண்டும்; இல்லாவிடில், ஒழுங்கை நிலைநிறுத்த முடியாது; சமுதாய அமைப்பும் சீர்குலைந்துவிடும். நிர்வாகப் பொறுப்பை காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளும் என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். அதை நியாயமானது என்று கருத வேண்டும் என்றும், எல்லாக் கட்சிகளையும் அணைத்துக்கொண்டு செல்ல காங்கிரஸ் மனப்பூர்வமாக விரும்புகிறது என்றும், அவ்விதம் செய்ய முயற்சித்து வருகிறது என்றும் நீங்கள் அழுத்தமாகக் கூறுகிறீர்கள். ஆமாம்; இருந்தாலும், ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்வது உடனடியாகவும் நிச்சயமாகவும் இருப்பினும், எல்லாக் கட்சிகளிடையேயும் ஒற்றுமை ஏற்படுவது எதிர்காலத்தைப் பொறுத்ததாக இருக்கிறது, நிச்சயமற்றதாகவும் இருக்கிறது.

பிரிட்டனும் மற்ற நாடுகளும் பெரும்பான்மையோரின் ஆதரவுடன் அரசாங்க நிர்வாகத்தை நடத்திவருகின்றன. எனவே, எதிர்காலத்தில் ஏற்படப்போகும் ஒரு புதிய அரசாங்கத்தை அவற்றிற்குச் சமமாக ஒப்பிட்டுக் கூறமுடியாது. சமூகத்தின் முக்கிய பிரிவுகளிடையே ஓரளவாவது பொதுவான உடன்பாடு இருக்கவேண்டும். பிரிட்டனிலும், நீண்ட காலமாக ஸ்தாபிக்கப்பட்டுள்ள அரசாங்கங்களையுடைய மற்ற நாடுகளிலும் அவ்வித உடன்பாடு ஏற்கனவேயே ஏற்பட்டுள்ளது. "முஸ்லிம்களுடன் ஓர் ஒப்பந்தத்துக்கு வராமல், சுயராஜ்யம் ஏற்பட முடியாது" என்று சில ஆண்டுகளுக்கு முன் நீங்களே கூறியது எனக்கு நினைவிருக்கிறது. சிம்லாவில் நடைபெற்றுவரும் மகாநாட்டின் மூலம் அத்தகைய ஒப்பந்தம் ஏற்படுவதற்கு வழி பிறக்கும் என நான் மனப்பூர்வமாக நம்புகிறேன். இக்கடிதத்தை நான் எழுதிக்

கொண்டிருக்கும் இச்சமயத்தில், அதன் முடிவு என்னவாகும் என்பது நிச்சயமற்றதாக இருந்து வருகிறது.

நல் வாழ்த்துக்களுடன்,
தங்களுடைய மிகவும் உண்மையுள்ள,
சாமுவல்

## 68

*சிறை முகாம்,*
*16—7—1943*

காரியதரிசி,
இந்திய அரசாங்க உள்துறை இலாகா,
புது டில்லி.

ஐயா,

சென்ற வருடம் ஆகஸ்டு மாதம் 8ஃ அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் நிறைவேறிய தீர்மானத்தை நான் வாபஸ் வாங்கிக் கொள்வதாக வைஸ்ராய்க்குக் கடிதம் எழுதியிருக்கிறேன் என்று இடைவிடாத வதந்தி உலவி வருவதை, தினசரிப் பத்திரிகைகளிலிருந்து நான் தெரிந்துகொண்டுள்ளேன். அந்த வதந்தியையொட்டி பல்வேறு கற்பனைகள் உருவாகிவருவதையும் நான் காண்கிறேன். அந்த வதந்திக்கு அரசாங்கம் ஒரு மறுப்பு வெளியிடவேண்டுமென நான் யோசனை கூறுகிறேன். ஏனெனில் அந்தத் தீர்மானத்தை வாபஸ் செய்துகொள்ள எனக்கு அதிகாரம் இல்லை, விருப்பமும் இல்லை. மனித வர்க்கத்தின் சுதந்திர லட்சியமானது, இந்தியாவுக்கு உடனடியாக சுதந்திரம் கிடைப்பதையே பொறுத்திருக்கிறது. அந்த லட்சியம் நிறைவேறுவதற்கு பலன்தரத்தக்க முறையில் காங்கிரஸ் உதவி செய்ய வேண்டுமாயின், அ. இ. கா. கமிட்டியில் நிறைவேறிய தீர்மானம் ஒன்றுதான் அதற்குற்ற வழியாகும்.

தங்கள்,
மோ. க. காந்தி

## 69

*இந்திய அரசாங்கம்,*
*உள்துறை இலாகா, புதுடில்லி,*
*29—7—1943*

மோ. க. காந்தி அவர்களுக்கு,

ஐயா,

உங்களுடைய ஜுலை 16-ஆம் தேதி கடிதம் கிடைத்தது. ஒரு வதந்தியைப் பற்றி அதில் நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவ் வதந்திக்கு ஒரு மறுப்பு வெளியிட வேண்டியது அவசியமென்று இந்திய அரசாங்கம் கருதவில்லை என்பதை உங்களுக்கு நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

தங்கள்,
ஆர். டாட்டென்ஹாம்
காரியதரிசி, இந்திய அரசாங்கம்,

பகுதி ஐந்து

# அரசாங்கத்தின் துண்டுப் பிரசுரம்

## 70

## காங்கிரஸ்மீது குற்றச்சாட்டு

சிறை முகாம்,
5-3-1943

அன்புள்ள சர் ரிச்சர்டு டாட்டென்ஹாம்,

காங்கிரசுக்கும் காந்திஜிக்கும் எதிரான குற்றச்சாட்டு களுக்கு ஆதாரமான சாட்சியங்கள் அடங்கிய ஒரு துண்டுப் பிரசுரத்தை உள்துறை இலாகா வெளியிட்டிருக்கிறது அல்லவா? அதன் பிரதி ஒன்றை தமக்கு அனுப்பிவைக்க வேண்டும் என்று காந்திஜி விரும்புகிறுர்.

தங்கள் உண்மையுள்ள,
பியாரிலால்

## 71

சிறை முகாம்.
23-3-1943

அன்புள்ள சர் ரிச்சர்டு டாட்டென்ஹாம்,

சென்ற 5-ஆம் தேதி நான் எழுதிய கடிதத்திற்கு யாதொரு பதிலும் கிடைக்கவில்லை என்பதை உங்களுக்கு ஞாப கப்படுத்தலாமா? காங்கிரசுக்கும் காந்திஜிக்கும் எதிரான குற்றச் சாட்டுகளுக்கு ஆதாரமான சாட்சியங்களுடன் உள்துறை இலாகா

வெளியிட்ட துண்டுப் பிரசுரத்தைத் தமக்கு அனுப்பிவைக்க வேண்டுமென காந்திஜி விரும்புவதாக அதில் குறிப்பிட்டிருந் தேன்.

தங்கள் உண்மையுள்ள,
பியாரிலால்

# 72

# உள்துறை இலாகாவின் பதில்

புதுடில்லி
19-3-1943

ஸ்ரீ பியாரிலால்,
சிறைமுகாம், புனா.

அன்புள்ள ஐயா,

"1942-43 கலவரங்களுக்கு காங்கிரஸ் பொறுப்பு" என்ற தலைப்பில் பிரசுரமான இந்திய அரசாங்க வெளியீட்டின் பிரதி யொன்று வேண்டுமென ஸ்ரீ காந்தி விரும்புகிறார் என்று நீங்கள் மார்ச் 5-ஆம் தேதி எழுதிய கடிதம் சில தினங்களுக்கு முன் எனக்குக் கிடைத்தது. அப்படியாயின், அந்தப் பிரதியொன்றை நாங்கள் மகிழ்ச்சியுடன் அனுப்புகிறோம்.

தங்கள் உண்மையுள்ள
டாட்டென்ஹாம்

# 73

சிறை முகாம்,
26-3-1943

சர் ரிச்சர்டு டாட்டென்ஹாம்,
இந்திய அரசாங்க உள்துறை இலாகா,
புதுடில்லி.

அன்புள்ள ஐயா,

மார்ச் 19-ஆம் தேதி நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. மார்ச் 5-ஆம் தேதி நான் எழுதிய கடிதத்தைப் பற்றிய உங்களு

டைய விளக்கம் சரிதான். "1942-43 கலவரங்களுக்கு காங்கிரஸ் பொறுப்பு" என்ற துண்டுப் பிரசுரத்தின் பிரதியொன்றை அனுப்பிவைத்தால், காந்திஜி நன்றியுள்ளவராக இருப்பார்.

தங்கள் உண்மையுள்ள,
பியாரிலால்

## 74

# அனுப்பி வைத்திருக்கிறேன்

இந்திய அரசாங்கம்,
உள்துறை இலாகா,
புதுடில்லி, 5-4-1943.

ஸ்ரீ பியாரிலால்,
சிறை முகாம், புனா.

அன்புள்ள ஐயா,

மார்ச் 26-ஆம் தேதி நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. ஸ்ரீ காந்தி கேட்டுக் கொண்டதற்கிணங்க "1942-43 கலவரங்களுக்கு காங்கிரஸ் பொறுப்பு" என்ற துண்டுப் பிரசுரத்தின் பிரதியொன்றை இத்துடன் அனுப்பிவைத்திருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஆர். டாட்டென்ஹாம்.

## 75

சிறை முகாம்,
15-4-1943

அன்புள்ள ஐயா,

"1942–43 கலவரங்களுக்கு காங்கிரஸ் பொறுப்பு" என்ற துண்டுப் பிரசுரத்தை அனுப்பி வைத்ததற்காக நன்றி.

தங்கள் உண்மையுள்ள
பியாரிலால்

# 76

# பொய்க் குற்றச் சாட்டுகளுக்கு காந்திஜியின் பதில்*

*சிறை முகாம்,*
*15-7-1943*

*காரியதரிசி,*
*இந்திய அரசாங்க உள்துறை இலாகா,*
*புதுடில்லி.*

*அன்புள்ள ஐயா,*

*"1942-43 கலவரங்களுக்கு காங்கிரஸ் பொறுப்பு" என்ற தலைப்புடன் இந்திய அரசாங்கம் பிரசுரித்துள்ள வெளியீட்டின் ஒரு பிரதி வேண்டும் என்று கேட்டுக்கொண்டு சென்ற மார்ச் மாதம் 5-ஆம் தேதி நான் ஒரு கடிதம் எழுதியிருந்தேன். அந்த வேண்டுகோளுக்கு இணங்க, அதன் பிரதி ஒன்று ஏப்ரல் 13-ஆம் தேதி எனக்குக் கிடைத்தது. அதில் சிவப்பு மையால் பல திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றில் சில குறிப்பிடத்தக்கவையாக இருக்கின்றன.*

*2. அந்தப் பிரசுரத்தில் வெளியாகியுள்ள விஷயங்களை அடிப்படையாகக்கொண்டே காங்கிரஸ்மீதும் என்மீதும் குற்றச்சாட்டுகள் தயாரிக்கப்பட்டிருக்கின்றன என்றும், சாட்சியங்களை அடிப்படையாகக்கொண்டு தயாரிக்கப்படவில்லை என்றும் கருதுகிறேன். ஏனெனில் அதன் முன்னுரையில் கூறப்பட்டிருப்பது போல், அவை பொது மக்கள் பார்க்கும்படி பிரசுரிக்கப்படவில்லை.*

*3. முன்னுரை சுருக்கமாக இருக்கிறது. அதில் இந்திய அரசாங்க உள்துறை இலாகா காரியதரிசி சர். ஆர். டாட்டென்ஹாம் கையெழுத்திட்டுள்ளார். அதில் பிப்ரவரி 13 என்ற தேதி குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதாவது,*

---

* அரசாங்கத்தின் சிவப்பு நாடா முறைக்கு அதாவது அனுவசியமான காலதாமதத்திற்கு மேற்கண்ட கடிதத்துக்கு முந்திய சில கடிதங்கள் உதாரணமாகும். அரசாங்கத்தின் ஆதாரமற்ற குற்றச்சாட்டுகள் பொய்க் கூற்றுகள் என்பதை ஆதாரபூர்வமாக விளக்கி காந்திஜி எழுதியுள்ள மேற்கண்ட 76-ஆம் கடிதம்தான் ஏராளமான பக்கங்கள் கொண்ட நீண்ட கடிதமாகும். 77 பாராக்கள் உள்ள இந்தக் கடிதத்திற்கு ஆதாரமாக 70 பக்கங்கள் வரையில் பின் சேர்க்கைப் பகுதிகளும் இருக்கின்றன. இந்தப் பின்சேர்க்கைப் பகுதியில் உள்ள விவரங்கள் ஆங்காங்கு காந்திஜியின் மற்றக் கடிதங்களில் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. எனவே, அவை இக் கடிதத்தின் இறுதியில் தனியாகக் கொடுக்கப்படவில்லை. கடிதத்தில் உள்ள 77 பாராக்களும் சுருக்கப்பட்டிருப்பதால், பியாரிலால் தமது முன்னுரையில் கொடுத்துள்ள பாராக்களின் எண்களுக்கும் இவற்றிற்கும் வேற்றுமை இருந்தாலும், கடிதத்தின் முக்கியமான பகுதிகள் அப்படியே கொடுக்கப்பட்டுள்ளன.

—ஆசிரியர்.



1942 ஆகஸ்டு மாதம் பம்பாயில் நடந்த சரித்திரப் புகழ்பெற்ற
அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் காந்திஜியும், ஸ்ரீமதி சரோஜினிதேவியும்.



'இந்தியாவைவிட்டு வெளியேறுக' என்ற சரித்திரப் புகழ்பெற்ற தீர்மானத்தை காந்திஜி தயாரிக்கிறார்.

சமீபத்தில் நான் உண்ணாவிரதம் ஆரம்பித்த மூன்று நாட்களுக்குப் பிறகு அது வெளியிடப்பட்டிருக்கிறது. அது அபசகுனமான ஒரு தேதியாகும்.* என்னைக் குறியாக வைத்துக் குற்றஞ்சாட்டியுள்ள ஒரு தஸ்தாவேஜை வெளியிடுவதற்கு, நான் உண்ணாவிரதம் இருந்த காலத்தை ஏன் தேர்ந்தெடுத்தனர்?

4. அதன் முன்னுரை இவ்விதம் ஆரம்பமாகிறது:

"பல்வேறு இடங்களிலிருந்தும் அரசாங்கத்திற்கு வந்துள்ள கோரிக்கைகளுக்கிணங்க, பல உண்மைகள் அடங்கிய ஓர் அறிக்கையை இப்போது அரசாங்கம் தயாரித்திருக்கிறது. 1942 ஆகஸ்டு 8-ந் தேதி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி பொதுஜன இயக்கத்திற்கு அனுமதி அளித்ததைத் தொடர்ந்து நடந்த கலவரங்களுக்கு ஸ்ரீ காந்தியும் காங்கிரஸ் மேலிடமுமே பொறுப்பாளி என்பதன் சம்பந்தமாகவே அந்த அறிக்கை தயாரிக்கப்பட்டிருக்கிறது."

இது தவறான ஒரு கூற்று என்பது தெளிவாகும். "அ. இ. கா. கமிட்டியினால் பொதுஜன இயக்கம் அனுமதிக்கப்பட்டதைத் தொடர்ந்து" கலவரங்கள் ஏற்படவில்லை. எனக்குத் தெரிந்தவரையில், இந்தியா முழுவதும் உள்ள முக்கியமான காங்கிரஸ்வாதிகள் கைதியானதைத் தொடர்ந்தே கலவரங்கள் உண்டாயின. *1943 பிப்ரவரி 7-ஆம் தேதி கடைசியாக நான் வைஸ்ராய்க்குக் கடிதம் எழுதினேன்.* நான் அவருக்கு எழுதிய கடிதங்களில், என் மீதுள்ள 'குற்றத்தை' ஆதாரங்களுடன் நிரூபிக்கும்படி நான் கேட்டிருந்தது அரசாங்கத்திற்குத் தெரியும். இப்போது கொடுக்கப்பட்டுள்ள சாட்சியத்தை, அந்தப் பிரச்னையை நான் எழுப்பிய காலத்தில் கொடுத்திருக்கலாம். அப்போது என்னுடைய வேண்டுகோளுக்கு அரசாங்கம் இணங்கியிருந்தால், நிச்சயமாக ஒரு நன்மை ஏற்பட்டிருக்கும். எனக்கு விரோதமாகக் கொண்டுவந்த குற்றச்சாட்டுகளுக்கு நான் அளிக்கும் பதிலைக் கேட்டிருக்கலாம். நான் உண்ணாவிரதத்தை மேற்கொள்வது, அதன் காரணமாகத் தாமதப்பட்டிருக்கும். அரசாங்கம் என்னிடம் பொறுமையுடன் நடந்து கொண்டிருந்தால், ஒரு வேளை எனது உண்ணாவிரதத்தைக்கூட அது தடுத்திருக்கலாம்.

5. முன்னுரையில் பின்கண்ட வாக்கியமும் அடங்கியிருக்கிறது: "அநேகமாக இந்த அறிக்கையில் கண்டுள்ள உண்மைகள் யாவும் ஏற்கனவே பொதுஜனங்கள் அறிந்தவையே." ஆகையால் பொதுஜனங்களைப் பொறுத்தமட்டில், உண்ணாவிரத காலத்தில் அரசாங்கம் இந்த அறிக்கையை வெளியிட வேண்டிய அவசியம் எதுவும் இல்லை. இத்தகைய வாதம், என்னை ஓர் விஷயத்தை ஊகித்துக்கொள்ளும்படி செய்திருக்கிறது. அதாவது, எனது மரணத்தை எதிர்பார்த்தே அரசாங்கம் அவ்வித அறிக்கையை

* குறிப்பாக பிரிட்டன் முதலிய மேநாடுகளில் 13 என்ற இலக்கம் அபசகுனத்தைக் குறிக்கிறதென்றும், அது துரதிர்ஷ்டத்தைக் கொடுக்கும் ஓர் எண் என்றும் ஒரு நம்பிக்கை நிலவி வருகிறது. அதையே காந்திஜி மேலே சுட்டிக் காட்டியுள்ளார்.

வெளியிட்டது என்பதுதான். நான் நிச்சயமாக இறந்துவிடுவேன் என்று வைத்தியர்கள் அபிப்பிராயப்பட்டிருக்கவேண்டும். அதற்கு முன் நான் நீண்ட காலம் உண்ணுவிரதம் இருந்தபோது கூட வைத்தியர்கள் அவ்விதமே அஞ்சினுர்கள். எனினும், எனது ஊகம் முற்றிலும் தவறு என்றும், அரசாங்கம் அத்தகைய அறிக்கை வெளியிடுவதற்கு எனது உண்ணுவிரத காலத்தைத் தேர்ந்தெடுத்ததற்கு நியாயமான, சட்ட பூர்வமான காரணம் இருக்க வேண்டும் என்றுமே நம்புகிறேன். அந்த வெளியீடு, என் மீதும் காங்கிரஸ் மீதும் ஒரு குற்றச்சாட்டு என்பதைத் தவிர வேறு ஒன்றுமில்லை. என்னுடைய ஊகத்தை நான் எழுத்து மூலம் குறிப்பிட்டதற்காக மன்னிக்கப்படுவேன் என்றே நம்புகிறேன். அந்த ஊகம் உண்மையாக இருக்குமாயின், அது அரசாங்கத்திற்கு அவமானத்தை உண்டாக்கும். எனினும், இந்த சந்தேகத்தை என் மனத்திற்குள்ளேயே வைத்துக்கொண்டு, என்னிடம் அவர்கள் நடந்துகொள்வதைக் குறித்து தவருன முடிவுக்கு வருவதை விடுத்து என் மனத்தில் உள்ளதை வெளியிட்டதன் மூலம், நான் அரசாங்கத்தினிடம் நேர்மையாக நடந்துகொண்டுள்ளேன் என்றே கருதுகிறேன்.

6. இப்போது நான் குற்றச் சாட்டிற்கே வருகிறேன். ஒரு சர்க்கார் வக்கீல் தமது வழக்கை விவரித்துக் கூறுவதுபோல் அந்தக் குற்றச்சாட்டு இருக்கிறது. பிரஸ்தாப வழக்கில் சர்க்கார் வக்கீலே போலீஸ்காரராகவும், சிறை அதிகாரியாகவும் இருக்கிருர். அவர் முதலில் தம் பிடியில் அகப்படுவோரைக் கைது செய்து வாய்ப்பூட்டு போட்டு விடுகிருர். பின்னர் அவர்களுக்குத் தெரியாமல் வழக்கை ஆரம்பிக்கிருர்!

7. நான் அந்த அறிக்கையை மறுபடியும் வாசித்தேன். என் தோழர்களிடமிருந்த 'ஹரிஜன்' பத்திரிகையின் முந்திய இதழ்களை வாசித்துப் பார்த்தேன். அரசாங்கம் வெளியிட்டுள்ள குற்றச் சாட்டில் ஆதாரமற்ற ஊகங்களும், மறைமுகமான தாக்குதல்களும் நிறைந்து கிடக்கின்றன. ஆனல் நான் எழுதியிருப்பவைகளும், செய்துள்ள காரியங்களும் அத்தகைய ஊகங்களுக்கும் மறைமுகமான தாக்குதல்களுக்கும் சிறிதும் இடம் கொடுப்பவையாக இல்லை. அந்த அறிக்கையைத் தயாரித்தவர், நான் எழுதியிருப்பவைகளில் என்னைப் பற்றி எதைக் கண்டாரோ அதையே காண நான் விரும்பினேன் என்ருலும், எனது அந்த முயற்சியில் நான் முற்றிலும் தோல்வியடைந்துள்ளேன்.

8. அந்தக் குற்றச்சாட்டு தவருன ஒரு கூற்றுடன் ஆரம்பமாகிறது. அதாவது, "இந்தியாவின் தற்காப்புக்கு உதவியாக இந்தியாவுக்குள் அந்நிய சிப்பாய்கள் கொண்டுவரப்படுவதைக்" குறித்து நான் வருந்துவதாகக் கூறப்பட்டிருக்கிறது. அந்தக் குற்றச்சாட்டு 'ஹரிஜனி'ல் வெளியாகியுள்ள ஒரு கட்டுரையை அடிப்படையாகக் கொண்டதாகும். அந்நிய சிப்பாய்களைக் கொண்டு இந்தியாவைப் பாதுகாக்க வேண்டும் என்பதை நான் நம்ப முடி

யாது என்று அக்கட்டுரையில் குறிப்பிட்டுள்ளேன். இந்தியாவின் தற்காப்பே குறிக்கோள் எனில், பயிற்சி பெற்ற இந்திய சிப்பாய்களை வெளிநாடுகளுக்கு அனுப்பிவிட்டு, அந்நிய சிப்பாய்களை இந்தியாவிற்குக் கொண்டு வருவானேன்? இந்தியாவின் விடுதலைக்காக என்றே பிறந்து வாழ்ந்து வரும் காங்கிரஸ் ஸ்தாபனத்தை ஏன் நசுக்க வேண்டும்? இந்தியா தற்காப்பு செய்யப்படவில்லை; காரியங்கள் இப்படியே தொடர்ந்து நடந்து கொண்டு வந்தால், இப்போது இருப்பதை காட்டிலும் இந்தியா யுத்தத்தின் இறுதியில் இன்னும் பாதாளத்தில் அமுங்கிவிடும்; அதன் விளைவாக இந்தியா 'விடுதலை' என்ற வார்த்தையையே மறந்து விடலாம்; —இந்த உண்மை, ஏப்ரல் 16-ஆம் தேதி நான் அந்தக் கட்டுரையை எழுதியபோது இருந்ததைக் காட்டிலும் இப்போது என் மனத்திற்கு இன்னும் அதிகத் தெளிவாகத் தெரிகிறது. அரசாங்க அறிக்கையின் ஆசிரியர் குறிப்பிட்டிருக்கும் 'ஹரிஜன்' கட்டுரையிலிருந்து பொருத்தமான பகுதியை நான் இங்கே தருகிறேன்:

"இவ்விஷயமாக எனக்கு மனச்சாந்தி இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். இந்தியாவில் உள்ள கோடிக்கணக்கானவர்களிடையேயிருந்து எண்ணிக்கையற்ற சிப்பாய்களைப் பயிற்சி செய்ய முடியாதா? உலகத்தில் உள்ள மற்றெந்த சிப்பாயையும்போல் இந்திய சிப்பாய்கள் சிறந்த போர் வீரர்களாக விளங்கமாட்டார்களா? அப்படியிருக்க, இந்தியாவின் தற்காப்புக்கு அந்நிய சிப்பாய்களை ஏன் கொண்டுவர வேண்டும்? அமெரிக்கர்களின் உதவி என்பதற்கு என்ன பொருள் என்பதை நாம் அறிவோம். இறுதியில், பிரிட்டிஷ் ஆட்சியுடன் இந்தியாவில் அமெரிக்க ஆட்சியும் ஏற்படாவிட்டாலும், அமெரிக்காவின் செல்வாக்கு ஏற்பட்டுவிடும் என்பதே அதன் அர்த்தம். அது, நேச தேசங்களின் வெற்றிக்காகக் கொடுக்கப்படும் பயங்கரமான விலையாகும். இந்தியாவின் தற்காப்பு என்று கூறப்படும் இந்த எல்லா ஏற்பாடுகளுக்கும் இடையே இந்தியாவின் விடுதலைக்கான அறிகுறி எதையும் நான் காணவில்லை. அது முற்றிலும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தற்காப்பிற்கான ஏற்பாடுகளேயாகும். இதை மறுத்து யார் என்ன சொன்னாலும், உண்மை அதுதான்." 'ஹரிஜன்' - 26—4—1942.

9. குற்றச் சாட்டின் இரண்டாவது பாரா, பொருள் பொதிந்த இந்த வாக்கியத்துடன் ஆரம்பமாகிறது:

"இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் வாபசாக வேண்டும் என்று ஸ்ரீ காந்தி முதன் முதலாகக் கூறிய காலத்திலும், ஆகஸ்டு மாதம் 7-ந் தேதி பம்பாயில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடிய காலத்திலும், காங்கிரஸ் மேலிடத்தாரும், பின்னர் காங்கிரஸ் ஸ்தாபனமும் பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து இந்தியாவை இறுதியாக விடுவிக்கும் நோக்கத்துடன் ஒரு பொது ஜன இயக்கத்தை ஆரம்பிப்பதற்கான ஏற்பாடுகளை முழு மனத்துடன் செய்து வந்தார்கள் என்று ஊகிக்கலாம்."

மேற்கண்ட வாக்கியத்தில் 'ஊகிக்கலாம்' என்பதை முக்கியமாக கவனிக்கும்படி நான் வற்புறுத்துகிறேன். சிறிதும் சந்தேகத்

துக்கு இடமின்றி பகிரங்கமாக நடைபெறும் ஓர் இயக்கத்தைப் பற்றி ஊகிப்பதற்கு ஏன் இடம் அளிக்க வேண்டும்? யாரும் மறுக்க விரும்பாத அற்ப விஷயம் கூட பிரமாதப்படுத்தப்படுகிறது. பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து இந்தியாவை விடுவிப்பதற்கான பூர்வாங்க ஏற்பாடுகள் 1920-ஆம் ஆண்டிலேயே ஆரம்பமாகி விட்டன. குற்றச்சாட்டில் குறிப்பிடப்பட்டிருப்பதுபோல், "இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் வாபசாக வேண்டும் என்று நான் கேட்டுக் கொண்டதிலிருந்து" அந்த ஏற்பாடுகள் ஆரம்பமாகவில்லை. 1920-ஆம் ஆண்டிலிருந்து அதற்கான ஓர் இயக்கத்தை ஆரம்பிப்பதற்கான முயற்சிகள் ஒரு காலத்திலும் குன்றவில்லை. காங்கிரஸ் தலைவர்களின் ஏராளமான பிரசங்கங்களிலிருந்தும், காங்கிரஸ் தீர்மானங்களிலிருந்தும் இதை நிரூபிக்க முடியும். இளைஞர்களான, பொறுமையற்ற காங்கிரஸ்வாதிகளும், அதிக வயதானவர்களும் கூட பொதுஜன இயக்கத்தை விரைவில் ஆரம்பிக்கும்படி சிற்சில சமயங்களில் என்னை வற்புறுத்தத் தயங்கவில்லை. ஆனல், அவ்விஷயமாக அவர்களைக் காட்டிலும் நான் நன்கு அறிவேன். எனவே, அவர்களுடைய உற்சாகத்தை நான் கட்டுப்படுத்தி வந்தேன். அத்தகைய கட்டுப்பாட்டிற்கு அவர்கள் மகிழ்ச்சியுடன் உடன்பட்டார்கள் என்பதை நான் நன்றியுடன் ஒத்துக் கொள்ள வேண்டும். நீண்ட காலமாக நடந்துவந்துள்ள ஏற்பாட்டை, இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் வாபசாக வேண்டும் என்று நான் கூறியதற்கும், ஆகஸ்டு 7-ஆம் தேதி பம்பாயில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திற்கும் இடையே உள்ள காலத்தில் நடந்ததாகக் கூறுவது முற்றிலும் தவருகும், தப்பெண்ணத்தை உண்டாக்குவதுமாகும். 1942 ஏப்ரல் 26-ஆம் தேதியிலிருந்து அவ்விஷயமாக விசேஷ ஏற்பாடுகள் எதுவும் நடந்ததாக எனக்குத் தெரியவில்லை.

10. இத்தகைய இயக்கத்தைப் பரிசீலனை செய்வதற்கு, அதன் சம்பந்தமான உண்மையான நோக்கங்களைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளவேண்டியது, அவசியமான முதற்படியாகும் என்று அதே பாராவில் கூறப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு விஷயமும் எழுத்து மூலம் தெளிவாக இருக்கும்போது, நோக்கங்களை எதற்காகத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்? எனது நோக்கங்களில் ஒளிவு மறைவு எதுவும் இல்லையென நான் தயக்கமின்றிக் கூற முடியும். இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் ஆட்சி உடனடியாக வாபசாக வேண்டும் என்று ஏன் கேட்டேன் என்பது, பகிரங்கமாக அலசி அலசி விவாதிக்கப்பட்டிருக்கிறது.

11. குற்றச் சாட்டின் 2-ஆவது பக்கத்தில், 10-5-1942-ல் வெளியான எனது கட்டுரையிலிருந்து "தேவையான ஒரு விஷயம்" என்ற ஒரு பகுதியை எடுத்துக் கொண்டு, எனது சக்தி முழுவதையும் "மகோன்னதமான இந்த ஒரு காரியத்தை"ச் சாதிப்பதற்காகச் செலவிடுவேன் என்று நான் கூறியதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அந்தப் பகுதியை மாத்திரம் தனியாகப் பிரித்து, அதில் ஏதோ மர்மம் இருப்பதுபோல் தோன்றும்.

படி செய்திருக்கிறார்கள். ஓர் ஆங்கில நண்பருடன் விவாதித்த போது, "மகோன்னதமான செயல்" என்ற வார்த்தைகளை நான் உபயோகித்தேன். அந்தப் பகுதியை மாத்திரம் தனியாகப் பிரிக்காமல், எந்தச் சந்தர்ப்பத்தில் நான் அவ்விதம் கூறினேன் என்பதைக் கவனித்தால், அதில் மர்மமானதோ அல்லது ஆட்சேபகரமானதோ எதுவும் இல்லை என்பது தெரியும். அந்த விவாதத்திலிருந்து பொருத்தமான பகுதிகளை இங்கே குறிப்பிடுகிறேன் :

"பிரிட்டிஷாரும் இந்தியர்களும் யுத்தம் நடந்து கொண்டிருக்கையிலேயே, யுத்தத்திற்குப் பிறகு அல்ல, சமரசமாக ஒருவரிடமிருந்து மற்றொருவர் அடியோடு பிரியவேண்டிய காலம் வந்திருக்கிறது என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும். இரு நாடுகளின் பாதுகாப்பும், உலகத்தின் பாதுகாப்பும் கூட அவ்விதம் செய்வதையே பொறுத்திருக்கிறது. பிரிட்டிஷாருக்கும் இந்தியர்களுக்குமிடையே பிளவு அதிகமாகிவருவதை இந்தக் கண்ணால் நான் தெளிவாகக் காண்கிறேன். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஒவ்வொரு காரியமும், அதன் சுயநலத்திற்காகவும் பாதுகாப்பிற்காகவுமே செய்யப்பட்டு வருகிறது என்று கருதப்படுகிறது. அத்தகைய வியாக்கியானம் சரியானதென்றே நான் எண்ணுகிறேன். பிரிட்டிஷாருக்கும் இந்தியர்களுக்குமிடையே பொதுவான நலன் என்று எதுவுமே இல்லை. நிற இறுமாப்பு ஒரு தீமையாகக் கருதப்படவில்லை, ஒரு தர்மமாகக் கருதப்படுகிறது! இந்த நிலை இந்தியாவில் மாத்திரமல்ல, உண்மையில் ஆப்பிரிக்கா, பர்மா, இலங்கை முதலிய நாடுகளிலும் இருந்துவருகிறது. நிற இறுமாப்பைத் தவிர வேறு எதனாலும் அந்த நாடுகளை அடக்கியாள முடியாது.

"இது ஒரு கடுமையான நோய். கடுமையான முறைகளின் மூலமே இதற்குப் பரிகாரம் செய்யவேண்டும். அதற்கான பரிகார முறையை நான் கூறியிருக்கிறேன். அதாவது, இந்தியாவிலிருந்தாவது பிரிட்டிஷார் உடனடியாகவும், ஒழுங்காகவும் வெளியேறிவிடவேண்டும். உண்மையில், அவர்கள் ஆதிக்கம் செலுத்தும் ஐரோப்பியரல்லாத எல்லா நாடுகளிலிருந்தும் வாபசாகிவிடவேண்டும். அவ்விதம் செய்வது, பிரிட்டிஷ் மக்களின் மிகவும் தைரியமான, பரிசுத்தமான ஒரு செயலாக இருக்கும். அவ்விதம் செய்வதால், நேசதேசங்களின் லட்சியம் முற்றிலும் தார்மிக அடிப்படையைக் கொண்டதாகிவிடும். அதன் பலனாக, யுத்தத்தில் ஈடுபட்டுள்ள நாடுகளுக்கிடையே கூட மிகவும் கௌரவமான ஒரு சமாதானம் ஏற்படுவதற்கு வழி பிறக்கலாம். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பரிசுத்தமான முடிவு பாசிஸம், நாஜிஸம் ஆகியவற்றின் முடிவாகவும் இருக்கும். பாசிஸமும் நாஜிஸமும் ஏகாதிபத்தியத்தின் கிளைகளே. எனவே மேற்கண்ட யோசனையின்படி பிரிட்டிஷார் செயலில் ஈடுபடுவார்களாயின், அது பாசிஸம், நாஜிஸத்தின் தீவிரத்தைக் கூட மழுங்கச் செய்துவிடும்.

"ஆங்கில நண்பர் கூறியுள்ள யோசனையின்படி, தேசீய இந்தியா உதவி செய்வதன் மூலம் பிரிட்டிஷாரின் துன்பத்திற்குப் பரிகாரம் ஏற்பட்டுவிடாது. அவ்விதம் உதவி செய்யும் விஷயமாக இந்தியா உற்சாகம் கொள்ளும்படி செய்தால் கூட, அதற்கான சாதனங்கள் இந்தியாவினிடம் இல்லை. சூரியன் இராத நேரத்தில், சூரியனின் காந்தியை ஒருவர் எப்படி உணர்ந்து கொள்ள

முடியாதோ, அது போலவே இந்தியாவும் சுதந்திரத்தை நடைமுறையில் அனுபவிக்காமல் அதன் ஒளியையும் பெருமையையும் உணர்ந்துகொள்ள முடியாது. நம்மில் பலராலும், அமைதியாகவும் மன நிம்மதியுடனும் முற்றிலும் சுதந்திர இந்தியாவைக் கற்பனைசெய்து கொள்ளவும் முடியாது. சுதந்திர ஒளி வருமுன் அதிர்ச்சியே இந்தியாவின் முதல் அனுபவமாக இருக்கும். அத்தகைய அதிர்ச்சி அவசியமுமாகும். இந்தியா ஒரு மாபெரும் தேசம். முதல் அதிர்ச்சி ஏற்பட்டதும் இந்தியா என்ன செய்யும், அதன் பலனாக என்ன ஏற்படும் என்பதை யாராலும் சொல்ல முடியாது.

"எனவே அந்த மகோன்னதமான லட்சியத்தை அடைவதற்கு நான் என் முழு சக்தியையும் அர்ப்பணம் செய்ய வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தியாவுக்கு பிரிட்டன் இழைத்துள்ள தவறை, அந்தக் கடிதத்தை எழுதியவர் ஒப்புக் கொள்கிறார். அவருக்கு நான் கூறும் யோசனை என்னவெனில், பிரிட்டிஷாரின் வெற்றிக்கான முதல் நிபந்தனை, அந்தத் தவறை இப்போது திருத்திக் கொள்வதேயாகும். வெற்றிக்கு முன்பே,—பிறகு அல்ல,—அவர்கள் தங்கள் தவறைத் திருத்திக் கொள்ளவேண்டும். இந்தியாவில் பிரிட்டிஷார் இருப்பது, இந்தியாவின் மீது படையெடுக்கும்படி ஜப்பானை அழைப்பதற்கொப்பாகும். பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேறிவிட்டால், ஜப்பான் இந்தியாமீது படையெடுப்பதற்கான காரணம் மறைந்துவிடும். அப்போதும்கூட ஜப்பான் படையெடுப்பதாக வைத்துக் கொண்டாலும், சுதந்திர இந்தியா அதை நன்கு சமாளிக்கக்கூடியதாக இருக்கும். கலப்பற்ற ஒத்துழையாமை அப்போது மிகவும் தீவிரமாக மேற்கொள்ளப்படும்."

—'ஹரிஜன்' – 10-5-1942.

மேலே, "மகோன்னதமான லட்சியம்" என்பது பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேறுவதை மாத்திரம் குறிக்கவில்லை. அதற்கு முன்பும் பின்பும் உள்ள நிலையையே குறிக்கிறது. அது ஒருவருடைய சக்தி முழுவதையும் மாத்திரமல்ல, நூற்றுக்கணக்கானவர்களின் சக்தி முழுவதையும் உபயோகிப்பதற்குத் தகுதி வாய்ந்த ஒரு காரியமாகும். ஆங்கில நண்பரின் கடிதத்திற்கு நான் பின்வருமாறு பதில் எழுத ஆரம்பித்தேன் :

"யுத்தம் பிரகடனம் செய்யப்பட்டபின் லார்டு லின்லித்கோவை நான் முதன் முதலாக பேட்டி கண்டு பேசியதன் சம்பந்தமாக எனது கருத்துக்களை அவருக்கு எழுதிய கடிதத்தில் விவரித்தேன். அவற்றையேதான் இப்போது நான் திரும்பவும் கூறமுடியும். அக்கடிதத்திலிருந்து எதையும் நான் வாபஸ் வாங்கிக் கொள்வதற்கில்லை. அதில் கண்டுள்ள எதையும் குறித்து நான் வருந்தவும் இல்லை. முன்பு இருந்ததைப் போலவே இப்போதும் நான் பிரிட்டிஷாரின் நண்பனாகவே இருந்துவருகிறேன். எனினும் அவர்களுடைய சிறந்த குணங்களை நான் உணர்ந்து கொண்டிருப்பதைப் போலவே, அவர்களுடைய குறைகளையும் உணர்ந்து கொண்டுள்ளேன்."

—'ஹரிஜன்' – 10—5—1942

நான் எழுதியிருப்பவைகளை வாசித்துப் பூரணமாக அறிந்து கொள்வதற்குப் பூர்வாங்கமாக, இந்த உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். இந்தியா, இங்கிலாந்து

ஆகிய இரு நாடுகளின் பரஸ்பர நன்மையை முக்கியமாகக் கொண்டே இந்த இயக்கம் முழுவதும் உருவாகியிருக்கிறது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக, அந்தக் கடிதம் எழுதியவர் இந்தப் பூர்வாங்கமான நிலைமையை உணராமல், வர்ணக் கண்ணாடிகளின் மூலம் நான் எழுதியவற்றைப் பார்க்கிறார். நான் எழுதியவற்றி லிருந்து சில வாக்கியங்களையும் அடைமொழிகளையும் மாத்திரம், பொருத்தமின்றி தனியாகப் பிரித்து, சிலவற்றை விட்டு விட்டு, தன் விருப்பப்படி அவற்றிற்கு அர்த்தம் செய்து கொண்டுள்ளார். மேற்கண்ட கட்டுரையிலிருந்து, முற்றிலும் ஜப்பானியர் விஷயத் திலேயே நாம் கலப்பற்ற ஒத்துழையாமையை மேற்கொள்ள வேண்டும் என்று நான் கூறியிருப்பது தெளிவாகத் தெரிகிறது.

*12.* இரண்டாவது பக்கம் கடைசி பாரா பின்வருமாறு ஆரம்ப மாகிறது :

''ஆரம்பகாலத்தில் ஸ்ரீ காந்தியின் ''இந்தியாவைவிட்டு வெளியேறுக'' என்ற இயக்கம், இந்தியாவிலிருந்து பிரிட்டிஷாரும், பிரிட்டிஷ் துருப்புகளும், நேசதேசத் துருப்புகளும் அடியோடு வெளியேறிவிடவேண்டும் என்ற நோக்கத் துடனேயே ஆரம்பிக்கப்பட்டது. அதற்கு, பரந்த முறையில் அவ்விதமே வியாக்கியானமும் செய்யப்பட்டது."

இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் யாவரும் வெளியேறிவிட வேண்டும் என்று பொருள்படும்படியாக நான் எழுதியிருப்பவை களில் ஏதாவது வாக்கியங்கள் இருக்கின்றனவா என்று நான் தேடிப்பார்த்தேன். எனது நண்பர்களும் அவ்விதமே தேடிப் பார்த்தார்கள். *26-4-1942*-இல் வெளியான 'ஹரிஜன்' கட்டுரை யில் உள்ள ஒரு வாக்கியத்தை மேலெழுந்தவாரியாக வாசித்தால், அவ்வித வியாக்கியானத்திற்கு இடமேற்படுகிறது என்பது உண்மையே. அவ்விஷயமாக ஓர் ஆங்கில நண்பர் எனது கவனத்தை ஈர்த்தபோது, மே 24-ஆம் தேதி 'ஹரிஜனி'ல் நான் பின்வருமாறு எழுதினேன் :

"இந்தியாவிலிருந்து வெளியேறிவிடும்படி பிரிட்டிஷாரை நான் கேட்டுக் கொண்டதைக் குறித்து சிலருடைய மனத்தில் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது என்று நிச்சயமாகத் தெரிகிறது. இந்தியாவையும் இந்திய மக்களையும் தாம் விரும்புவதாகவும், இந்தியாவை விட்டுத் தாமாக வெளியேறுவதைத் தாம் விரும்பவில்லை என்றும் பிரிட்டனைச் சேர்ந்த ஒருவர் எனக்கு எழுதியிருக்கிறார். ஆட்சி அதிகாரத்தை மேற்கொண்டுள்ள பிரிட்டிஷாருக்கும் தனி நபர்களான பிரிட்டிஷாருக்கும் உள்ள வேற்றுமையை அவர் அறிந்து கொள்ளாமல் குழப்பிக் கொண்டிருக்கிறார். பிரிட்டிஷ் மக்களுடன் இந்தியாவுக்கு எவ்வித சச்சரவும் இல்லை. எனக்கு நூற்றுக்கணக்கான பிரிட்டிஷ் நண்பர்கள் இருக் கிறார்கள். பிரிட்டிஷ் மக்களுடன் என்னைப் பிணைப்பதற்கு, ஆண்ட்ரூசின் நட்பே போதுமானது.''

பிரிட்டிஷ் ஆட்சி அதிகாரம் வெளியேறிவிடவேண்டும் என்பதே எனது தெளிவான நோக்கமாகும். என்மீது குற்றச் சாட்டை தயாரித்தபோது, எனது கருத்துகளை விளக்கும் தெளி

வான இந்தப் பிரகடனம் அவரது முன்னிலையில் இருந்தும் கூட, இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் வெளியேறிவிட வேண்டும் என்பதே எனது பிரகடனத்தின் கருத்தாகும் என்று அவர் எப்படிக் கூறமுடியும்? அவ்விதமே "பரந்த முறையில் வியாக்கியானம் செய்யப்படுவதாக" எனக்குத் தெரியவில்லை. இந்தக் கூற்றுக்கு ஆதாரமாக அவர் எதுவும் கூறவில்லை.

*13.* அதே பாராவில் அவர் மேலும் கூறுவதாவது:

"ஜூன் மாதம் 14-ஆம் தேதி வாக்கிலேயே அவர் தமது திட்டத்திற்கிணங்க, 'அமெரிக்க, பிரிட்டிஷ் ராணுவங்களின் பிரதம தளபதி, இந்தியா தங்களுடைய ராணுவ தளமாக இருப்பதற்கு உகந்ததல்ல என்று தீர்மானித்திருப்பதாக' கற்பனை செய்து கொண்டார்."

"அவரது திட்டத்திற்கிணங்க" என்பது ஆதாரமற்ற இடைச் செருகல் ஆகும். பல பத்திரிகைப் பிரதிநிதிகள் என்னைப் பேட்டி கண்டதிலிருந்தே அவ்விவரங்கள் எடுக்கப்பட்டுள்ளன. அவர்கள் கேட்ட பல கேள்விகளுக்கும் நான் விடையளித்துக் கொண்டிருந்தேன். ஒரு கூட்டத்தில் நான் அவர்களைத் திருப்பி பின்வருமாறு ஒரு கேள்வி கேட்டேன். "நான் கூறிய யோசனை ஒரு புறமிருக்க, யுத்த தந்திர காரணங்களை முன்னிட்டு பர்மாவிலிருந்து இங்கிலாந்து வெளியேறியதைப் போலவே இந்தியாவிலிருந்தும் வெளியேறுவதாக வைத்துக்கொள்வோம். அப்போது என்ன நேரும்? இந்தியா அப்போது என்ன செய்யும்?"

அவர்கள் இவ்விதம் பதில் அளித்தார்கள்: "அதை உங்களிடமிருந்து தெரிந்து கொள்வதற்காகத்தான் நாங்கள் வந்திருக்கிறோம் உங்களிடமிருந்து அதை அறிந்து கொள்ளவேண்டும் என்பதே எங்களுடைய விருப்பமாகும்."

மறுபடியும் அவர்களுக்கு நான் இவ்விதம் பதில் அளித்தேன்: "நல்லது. அங்கேதான் என்னுடைய அகிம்சை வருகின்றது. ஏனெனில், எங்களிடம் ஆயுதங்கள் இல்லை. அமெரிக்க, பிரிட்டிஷ் படைகளின் பிரதம ராணுவ தளபதி, ஒரு ராணுவதளம் என்ற முறையில் இந்தியா பலனற்றது என்று தீர்மானிப்பதாகவும், எனவே அவர்கள் வேறு ஏதாவது ஒரு தளத்திற்குச் சென்று, நேச தேசத் துருப்புகளை அங்கே கொண்டுபோய் வைப்பதாகவும் வைத்துக் கொள்வோம். அதை நாம் தவிர்க்க முடியாது. அப்போது நாம் நம்மிடம் இருக்கும் பலத்தில் நம்பிக்கை வைப்பதைத் தவிர வேறு வழியில்லை. குறிப்பிடத்தக்க விதத்தில் நம்மிடம் ராணுவங்கள் இல்லை, ராணுவ சாதனங்கள் இல்லை, ராணுவத் திறமையும் இல்லை. நம்மிடம் இருக்கக்கூடிய ஒன்றே ஒன்று அகிம்சைதான்."

என்னுடைய 'திட்டம்' எதையும் நான் பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கு விளக்கிக் கூறவில்லை என்பது மேற்கண்ட வாக்கியங்களிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. சில கற்பனைகளை அடிப்

படையாகக் கொண்ட சாத்தியக்கூறுகளைப் பற்றியே நான் அவர்களுடன் விவாதித்துக் கொண்டிருந்தேன்.

*14.* இந்திய அரசாங்க வெளியீட்டைத் தயாரித்தவர் மேலும் கூறுவதாவது :

*"பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேறிவிட்டால், பின்னர் இந்தியா மீது ஜப்பான் படையெடுப்பதற்கு யாதொரு காரணமும் இராது. பிரிட்டிஷ் படைகளும், நேச தேசங்களின் படைகளும் இன்னும் இந்தியாவில் இருக்கும் போது, ஜப்பானியர் படையெடுப்பதற்கான காரணத்தை எவ்விதம் அகற்றுவது? இதுதான் ஸ்ரீ காந்தியின் திட்டமாகும். ஸ்ரீ காந்தியின் ஆதி நோக்கத்தைப் பற்றிய சரியான விளக்கம் இதுதான் என்ற நம்பிக்கை மேற்கண்ட வாக்கியங்களிலிருந்து மேலும் பலமடைந்துள்ளது."*

நான் ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதைப் போல், பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேறிவிட வேண்டும் என்று நான் எக் காலத்திலும் எண்ணியதில்லை. ஆனால், பிரிட்டிஷ் படைகளும், நேச தேசப் படைகளும் நிச்சயமாக வெளியேறிவிட வேண்டும் என்பதே எனது எண்ணமாகும். எனவே, இதற்கு "விளக்கம்" எதுவும் தேவையில்லை. ஏனெனில், இது உண்மையாகும். எனினும், நேரான, திட்டவட்டமான அந்த வாக்கியத்தை கோணலாகத் தோன்றும்படி செய்திருக்கிறார்கள்.

*15.* அவர் மேலும் கூறுவதாவது :

*"அதே சமயத்தில், பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேறியதும், இந்திய ராணுவம் கலைக்கப்படும் என்றும் அவர் தெளிவாகக் குறிப்பிட்டார்."*

நான் அவ்விதம் கூறவில்லை. நான் செய்ததென்ன வெனில், பிரிட்டிஷார் இந்தியாவைவிட்டு வெளியேறிவிட்டால் செய்ய வேண்டிய காரியங்களைப் பற்றி பேட்டிக்கு வந்த பத்திரிகைப் பிரதிநிதிகளுடன் விவாதித்தேன். இந்திய ராணுவம் பிரிட்டிஷாரின் சிருஷ்டியாதலால், பிரிட்டிஷார் வெளியேறியதும், வரும் அரசாங்கம் ஓர் உடன்படிக்கையின் மூலம் இந்திய ராணுவ நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டாலன்றி இந்திய ராணுவம் கலைக் கப்பட்டுவிடும் என்று நான் உத்தேசமாகக் கூறினேன். சமரச ஒப்பந்தத்துடனும், இரு சாராரிடையும் நிலவும் நல்லெண்ணத் துடனும், பிரிட்டிஷாரின் வெளியேற்றம் நடைபெறுமாயின், இத்தகைய விஷயங்களைத் தீர்ப்பதில் கஷ்டம் இராது.

*16.* அதே பாராவிலிருந்தே பின் வரும் வாக்கியங்களையும் கொடுத்துள்ளேன் :

*"இந்த எதிர்ப்புக்குப் பணிந்தும், காரியக்கமிட்டி அங்கத்தினர்களிடையே உள்ள கருத்து வேற்றுமைகளைத் தீர்க்கும் நோக்கத்துடனும், ஸ்ரீ காந்தி தாம் முதலில் கூறிய யோசனைகளில் உள்ள குறையைக் கண்டு பிடித்தார். எனவே ஜூன் 14-ம் தேதி "ஹரிஜனி" ல் அவர் அக்குறையைச் சீர்படுத்துவதற்கான முறையை மேற்கொண்டார். அதாவது, இந்தியாவில் தேசீய அரசாங்கம் உருவாகும் போது, அது, திட்டவட்டமான சில நிபந்தனை*

களுக்கு உட்பட்டு இந்திய பூமியில் ஐக்கிய நாடுகளின் துருப்புகள் இருப்பதை மாத்திரமே சகித்துக் கொண்டிருக்கும்; அதற்கு மேல் அத்துருப்புகளுக்கு யாதொரு உதவியும் அளிக்காது, என்று மர்மமாகக் குறிப்பிட்டார். அதற்கு அடுத்த வாரம் ஓர் அமெரிக்கப் பத்திரிகை பிரதிநிதி அவரைப் பேட்டி கண்ட போது, ஸ்ரீ காந்தி அவ்விஷயத்தை மேற்கொண்டு திட்டமாகக் குறிப்பிட்டார். இந்தியாவிலிருந்துகொண்டு நேச நாட்டுப் படைகள் நடவடிக்கைகளை மேற்கொள்ள சுதந்திர இந்தியா அனுமதிக்கவேண்டும் என்பது அவரது எண்ணமா என்று அந்தப் பத்திரிகை பிரதிநிதி கேட்டதற்கு, 'அதுதான் என் எண்ணம். அப்போதுதான் மக்களின் உண்மையான ஒத்துழைப்பை நீங்கள் காண்பீர்கள்' என்றார் ஸ்ரீ காந்தி. மேலும், நேச தேசங்களின் படைகள் இந்தியாவிலிருந்து அறவே வெளியேறிவிடவேண்டும் என்பது தமது எண்ண மில்லை என்றும், இந்தியா பூரண விடுதலை அடைந்து விட்டால், அவை வெளியேற வேண்டும் என்று தாம் வற்புறுத்த முடியாது என்றும் அவர் கூறினர்."

இந்திய அரசாங்க வெளியீட்டைத் தயாரித்தவரின் மனப் போக்கை, இது எனக்கு நன்கு விளக்குவதாக இருக்கிறது. எனது வாக்கியங்களில் தெளிவாகத் தெரியும் கருத்தை விட்டு விட்டு, அதற்கு மாறான நோக்கங்களைக் கண்டுபிடிப்பதையே அது அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. எதிராளிகள் அந்நியர்களாயினும், இந்தியப் பத்திரிகைகளாயினும், காங்கிரஸ் வாதிகளாயினும் அவர்களுடைய எதிர்ப்பின் தீவிரத்தை வழி காட்டியாகக் கொண்டு நான் நடந்துகொண்டு வருவேனாயின், அதைப் பகிரங்கமாகக் கூற நான் தயங்கமாட்டேன். எனது அறிவிற்கோ அல்லது உள்ளத்திற்கோ உகந்ததாக இராத எதிர்ப்பை நான் எதிர்த்து நிற்கும் ஆற்றல் வாய்ந்தவன் என்பது எல்லோரும் அறிந்த விஷயமாகும். அது போலவே, எனது அறிவிற்கோ, உள்ளத்திற்கோ உகந்ததாக இருக்கும் எதிர்ப்பிற்கு நான் விட்டுக் கொடுப்பவன் என்பதும் எல்லோரும் அறிந்ததே. ஆனால் ஐயம் திரிபுக்கு இடமில்லாத உண்மை என்னவெனில், பிரிட்டிஷார் வெளியேற வேண்டும் என்ற யோசனையை நான் நாட்டு மக்களுக்குத் தெரிவித்தபோது, ஒரே ஒரு எண்ணம்தான் என்னை ஆட்கொண்டிருந்தது. அதாவது இந்தியா காப்பாற்றப்பட வேண்டுமாயின், அதைப் போலவே நேச நாடுகளின் லட்சியமும் காப்பாற்றப்பட வேண்டுமாயின், யுத்தத்தில் இந்தியா பலனளிக்கத்தக்க விதத்தில் மாத்திரமல்ல, திட்டவட்டமாகவும் தனது கடமையை நிறைவேற்ற வேண்டு மாயின், இந்தியா இப்போது பூரண சுதந்திரம் பெற்றுத் தீர வேண்டும். இந்தியாவின் சுதந்திரத்தைப் பிரகடனம் செய்ய பிரிட்டிஷ் அரசாங்கம் ஆர்வமுள்ளதாக இருந்தாலும், தனது சொந்தத் தற்காப்புக்காகவும், சீனாவின் தற்காப்புக்காகவும் பிரிட்டன் தன் துருப்புகளை இந்தியாவிலேயே வைத்துக்கொள்ள விரும்பலாம். அத்தகைய நிலையில் எனது நிலைமை என்ன? இந்தச் சங்கடத்தை, ஸ்ரீ லூயி பிஷர் என்னிடம் சுட்டிக்காட்டினர் என்பது எல்லோரும் அறிந்ததாகும். அவர் சேவா கிராமத்திற்கு

வந்து என்னுடன் சற்றேறக்குறைய ஒரு வாரம் தங்கியிருந்தார். எங்களிடையே நடந்த விவாதத்தின் முடிவில் அவர் என்னைச் சில கேள்விகள் கேட்டார். அவரது கேள்விகளும், எனது விடைகளும் அடங்கிய கட்டுரை முழுவதையும் கீழே கொடுத்துள்ளேன். அது 1942 ஜூன் 7-ஆம் தேதி எழுதப்பட்டு, 14-ஆம் தேதி 'ஹரிஜனி'ல் வெளியாகியது :

## முக்கிய கேள்விகள்

எனது புதிய யோசனையில் அடங்கியுள்ள உட்கருத்துக்களைப் பற்றி ஒரு நண்பர் என்னுடன் விவாதித்துக் கொண்டிருந்தார். விவாதம் கோவையாக இராதது இயல்பேயாகும். எனவே, அதன் சம்பந்தமாகக் கேள்விகளைத் தயாரிக்கும்படியும், அவற்றிற்கு நான் 'ஹரிஜன்' மூலம் விடையளிப்பதாயும் அவரிடம் கூறினேன். அவர் அதற்கு இசைந்து கீழ்க்கண்ட கேள்விகளைத் தயாரித்துக் கொடுத்தார் :

**கேள்வி :** இந்தியாவிலிருந்து உடனே வெளியேறிவிடும்படி நீங்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கேட்கிறீர்கள். பிரிட்டிஷார் வெளியேறியபின், இந்தியர்கள் ஒரு தேசீய அரசாங்கத்தை அமைப்பார்களா? அத்தகைய ஓர் இந்திய அரசாங்கத்தில் எந்தப் பிரிவுகள் அல்லது கட்சிகள் கலந்து கொள்ளும் ?

**பதில் :** எனது யோசனை ஒரு தலைப்பட்சமானது. இந்தியர்கள் என்ன செய்வார்கள் அல்லது செய்யமாட்டார்கள் என்பதைச் சிறிதும் யோசிக்காமலேயே பிரிட்டிஷார் அந்த யோசனையின்படி நடந்து கொள்ள வேண்டும். அவர்கள் வெளியேறியதும் இந்தியாவில் தற்காலிகமாக குழப்பம் ஏற்படும் என்று வைத்துக் கொண்டே நான் பேசுகிறேன். ஆனால் பிரிட்டிஷாரின் வெளியேற்றம் ஒழுங்கான முறையில் நடைபெறுமாயின், அவர்கள் வெளியேறியதும் இந்தியத் தலைவர்களால் ஒரு தற்காலிக அரசாங்கம் அமைக்கப்படும். மற்றொன்றும் நிகழலாம். அதாவது, நாட்டைப் பற்றிய சிந்தனையே இல்லாமல், தங்களைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பவர்கள் அதிகாரத்திற்கு வர முயற்சிக்கலாம். அவர்கள் கொந்தளிப்பை உண்டாக்கும் சக்திகளை ஒன்று சேர்த்துக்கொண்டு, எங்கேயாவது, எப்படியாவது அதிகாரத்தைக் கைப்பற்ற முயற்சிப்பார்கள். பிரிட்டிஷார் பூரணமாகவும். இறுதியாகவும், யோக்கியமாகவும் வெளியேறிய பின், விவேகமுள்ள தலைவர்கள் தங்களுடைய பொறுப்பை உணர்ந்து, தற்காலிகமாக தங்களுடைய வேற்றுமைகளை மறந்து, பிரிட்டிஷ் ஆட்சியாளர்களால் விட்டுச் செல்லப்பட்டுள்ள சாதனங்களைக் கொண்டு ஒரு தற்காலிக

அரசாங்கத்தை அமைப்பார்களென நான் நம்ப வேண்டும். நிர்வாக சபையில் ஆட்களையோ அல்லது நபர்களையோ சேர்ப்பதையும், நிர்வாக சபையிலிருந்து அவர்களை நிராகரிப்பதையும் ஒழுங்கு படுத்தும் அதிகாரம் யாருக்கும் இராது. எனவே, அடக்கமும் கட்டுப்பாடும் மாத்திரமே அவ்விஷயத்தில் வழிகாட்டியாக இருக்கும். அவ்விதம் நிகழுமாயின், காங்கிரஸ், லீக், சமஸ்தானங்களின் பிரதிநிதிகள் நிர்வாக சபையில் இடம்பெற அனுமதிக்கப்படுவார்கள். தற்காலிக அரசாங்கம் அமைக்கும் விஷயமாக அவர்களுக்குள் சாதாரணமான ஓர் ஒப்பந்தம் ஏற்படலாம். எனினும், இதெல்லாம் வெறும் கற்பனையேயன்றி வேறு ஒன்றுமில்லை.

கே : ஜப்பானுக்கும் அச்சு வல்லரசுகளுக்கும் எதிராக ராணுவ நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கான ஒரு தளமாக இந்தியாவை உபயோகிப்பதற்கு, இந்திய தேசீய அரசாங்கம் ஐக்கிய நாடுகளுக்கு அனுமதி அளிக்குமா?

ப : தேசீய அரசாங்கம் அமைக்கப்படுவதாக வைத்துக்கொள்வோம். அந்த அரசாங்கம் நான் எதிர்பார்ப்பதுபோல் அமையுமாயின், ஆக்கிரமிப்பு நாடுகளுக்கு எதிராக தற்காப்பு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளும் விஷயமாக ஐக்கிய நாடுகளுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொள்வதே அது செய்யும் முதல் காரியமாக இருக்கும். அது, இந்தியாவின், ஐக்கிய நாடுகளின் பொதுவான லட்சியமாதலால், பாசிஸ்டு நாடுகளுடன் இந்தியா யாதொரு தொடர்பும் வைத்துக் கொள்ளாது. ஐக்கிய நாடுகளுக்கு உதவி புரிய இந்தியா தார்மிக ரீதியில் கடமைப்பட்டிருக்கிறது

கே : பாசிஸ்டு ஆக்கிரமிப்பாளர்களுக்கு விரோதமாக நடைபெறும் இந்த யுத்தத்தில், ஐக்கிய நாடுகளுக்கு இந்தியா மேற்கொண்டு என்ன உதவி அளிக்கும்?

ப : கற்பனை செய்துகொள்ளப்பட்டுள்ள தேசீய அரசாங்கத்திற்கு வழி காட்டுவதில் எனக்கு ஏதாவது பங்கு இருக்குமாயின், திட்டவட்டமான நிபந்தனைகளின் கீழ் இந்திய பூமியில் ஐக்கிய நாடுகள் இருப்பதை சகித்துக் கொண்டிருப்பதற்கு மேல் இந்தியா யாதொரு உதவியும் அளிக்காது. எனினும், எந்த இந்தியரும் ஐக்கியநாடுகளுக்கு உதவியாக ராணுவத்தில் சேருவதற்கோ அல்லது பண உதவி அளிப்பதற்கோ யாதொரு தடையும் இராது. பிரிட்டிஷ் அதிகாரம் வெளியேறுவதுடன், இந்திய ராணுவம் கலைக்கப்பட்டுவிடும் என்பதை அறிந்துகொள்ள வேண்டும். மேலே நான் குறிப்பிட்டது போல் தேசீய அரசாங்க நிர்வாகத்தில் எனக்கு ஏதாவது செல்வாக்கு இருக்குமாயின், அதன் சக்தி, கௌரவம், சாதனங்கள் யாவையும் உலக அமைதி ஏற்படுவதற்

காக உபயோகிக்கும்படி செய்வேன். எனினும் தேசீய அரசாங்கம் ஏற்பட்டபின் என்னுடைய குரல் கேட்பாரின்றி வனாந்தரத்தில் கத்தும் குரலாகிவிடலாம்; தேசீய இந்தியா யுத்த வெறி கொண்டுவிடலாம்.

**கே:** இந்தியாவுக்கும் நேச வல்லரசுகளுக்கும் ஏற்படும் இந்த ஒத்துழைப்பு, கூட்டு சேரும் நேச உடன்படிக்கையின் கீழ் அமுலுக்கு வரவேண்டுமா அல்லது பரஸ்பர உதவியை அடிப்படையாகக் கொண்ட ஒப்பந்தத்தின் கீழ் ஏற்பட வேண்டுமா?

**ப:** இந்தக் கேள்விக்கான நிலை இன்னும் பக்குவமடையவில்லை. அது எப்படிபாயினும், இரு சாராருக்கும் உள்ள உறவுகள், உடன்படிக்கையின் மூலம் ஒழுங்கு செய்யப்பட்டாலும் அல்லது சமரச ஒப்பந்தத்தின் மூலம் ஒழுங்கு செய்யப்பட்டாலும், அது ஒருபெரிய விஷயமல்ல. அவ்விரண்டிற்கும் இடையே நான் யாதொரு வேற்றுமையையும் காணவில்லை.

எனது நிலையை நான் சாரமாகக் கூறுகிறேன். என்னைப் பொறுத்தமட்டில் ஒரே ஒரு விஷயம்தான் உறுதியானது, நிச்சயமானது. நேச தேசங்கள் வெற்றிபெற வேண்டுமாயின், ஒரு மகத்தான தேசத்தின் இந்த இயற்கையற்ற வீழ்ச்சி நிற்கவேண்டும். ஆனால், அதற்கான தார்மிக அடிப்படை நேச தேசங்களுக்கு இல்லை. பாசிஸ்டு, நாஜி வல்லரசுகளுக்கும் நேச தேசங்களுக்குமிடையே நான் யாதொரு வேற்றுமையையும் காணவில்லை. எல்லோரும் சுரண்டுவோர்தான். தங்களுடைய நோக்கத்தை நிறை வேற்றிக் கொள்ளும் அளவுக்கு எல்லோருமே கொடியவர்களாக இருந்துவருகிறார்கள். அமெரிக்காவும், பிரிட்டனும் மகத்தான தேசங்களே. ஆனால் அவைகளுடைய மகத்துவம், ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் உள்ள வாயில்லா மனித வர்க்கத்தின் நீதிச் சபையின் முன்னிலையில் தூசி போலவே கருதப்படும். அவர்களுக்கு இழைத்த தவறுகளுக்குப் பரிகாரம் செய்யும் சக்தி, அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் மாத்திரமே உண்டு. அவை தங்கள் கைகளிலுள்ள அசுத்தத்தைப் போக்கி சுத்தம் செய்து கொண்டாலொழிய, மனித சுதந்திரம் போன்றவற்றைப் பற்றிப் பேச அவைகளுக்கு உரிமையில்லை. அவைகள் அவ்விதம் தங்களைச் சுத்தம் செய்து கொள்ள வேண்டியது அவசியம். அப்போதுதான்,- அதற்குமுன் அல்ல, - அவை ஒரு புதிய ஒழுங்கிற்காகப் போராடும் நாடுகளாக இருக்கும். இதுதான் உண்மையான நிலை-மற்றவையெல்லாம் வெறும் கற்பனையேயாகும். எனது அந்தரங்க சுத்திக்கு ஒரு சோதனையாகவும், எனது யோசனையை ஓர் உருவான முறையில் விளக்குவதற்காகவுமே இதைக் கூறியுள்ளேன்.

ஸ்ரீ லூயி பிஷர் கேட்ட கேள்விகளுக்கு நான் அளித்த பதில்கள் சுருக்கமான எனது அறிக்கையல்ல; ஒரு வாரம் வரையில் அவருடன் விவாதித்த பிறகு அவர் கேட்ட திட்ட வட்டமான கேள்விகளுக்கு நான் அளித்த திட்டவட்டமான பதில்களாகும். பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் இந்தியாவி லிருந்து வெளியேறவேண்டும் என்பதை எனது பதில்கள் தெளிவாக்கி யிருக்கின்றன. இவ்விஷயத்தை, அமெரிக்கப் பத்திரிகைப் பிரதிநிதியான ஸ்ரீ க்ரோவரிடம் மேலும் தெளி வாகக் கூறியிருக்கிறேன். அவரது முக்கியமான கேள்வி களும் எனது விடைகளும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

## உலகம் முழுவதும் உணரும் காலம் வரும்

ஸ்ரீ க்ரோவர்: நீங்கள் ஏதோ ஒரு புதிய இயக்கத்தை ஆரம்பிப்ப தற்கு திட்டமிட்டு வருவதாக, பரந்த முறையில் ஓர் எண்ணம் நிலவி வருகிறது. அந்தத் திட்டத்தின் தன்மை என்ன ?

ப: எனது இயக்கத்தையொட்டி அரசாங்கத்தின் போக்கும் மக்களின் போக்கும் எப்படி இருக்கும் என்பதையே அது பொறுத்திருக்கிறது. அவ்விஷயமாக, இங்கே பொதுமக் களின் அபிப்பிராயமும், வெளி உலகின் அபிப்பிராயமும் எப்படி இருக்கிறது என்பதைக் கண்டுபிடிக்க நான் முயற் சித்து வருகிறேன்.

கே: அபிப்பிராயம் என்று நீங்கள் கூறும்போது, உங்களுடைய புதிய யோசனையையொட்டி அவர்களுடைய அபிப்பிராயத் தைத் தானே குறிப்பிடுகிறீர்கள்?

ப: ஆம். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி இன்றே முடிந்துவிட வேண்டும் என்ற யோசனையையொட்டித்தான். இதைக் கேட்டு நீங்கள் திடுக்கிடுகின்றீர்களா?

"நான் திடுக்கிடவில்லை. ஏனெனில் பிரிட்டிஷ் ஆட்சி முடியவேண்டும் என்று நீங்கள் வெகுகாலமாகக் கூறிவருவ துடன், அதற்காக உழைத்தும் வருகிறீர்கள் அல்லவா?" என்றார் ஸ்ரீ க்ரோவர்.

காந்திஜி: நீங்கள் கூறுவது சரிதான். பல ஆண்டுகளாக நான் அதற்காக உழைத்து வருகிறேன். ஆனால், இப்போது அதற்கு திட்டமான ஓர் உருவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. உலகத்தில் அமைதி ஏற்படவேண்டுமாயின், இன்றே இந்தி யாவிலிருந்து பிரிட்டிஷ் ஆட்சி அதிகாரம் போய்விட வேண்டும்; அதுதான் சீனாவுக்கும், ருஷ்யாவுக்கும், நேச தேசங்களின் லட்சியத்துக்கும் நன்மை பயக்கும். நேச தேசங்களின் லட்சியத்துக்கு அதனால் எவ்விதம் நன்மை ஏற்படும் என்பதை நான் உங்களுக்கு விளக்கிக் கூறுகிறேன்.

இந்தியாவுக்கு பூரண சுதந்திரம் அளிப்பதால், இந்தியாவின் சக்திக்கு விடுதலை ஏற்படும். எனவே, இந்தியா உலக நெருக்கடியைத் தீர்ப்பதற்கு உதவி செய்ய சுதந்திரம் ஏற்படும். இன்று நேச தேசங்கள் ஒரு பிரம்மாண்டமான பிணத்தின் பளுவைச் சுமந்து கொண்டிருக்கிறார்கள். அதாவது ஒரு மாபெரும் தேசம் பிரிட்டனின் காலடியில் விழுந்து கிடக்கின்றது; நேச தேசங்களின் காலடியிலும் என்று கூட நான் சொல்லுவேன். ஏனெனில், யுத்தத்திற்குப் பண உதவியும் சாதன உதவியும் அளிப்பதில் அமெரிக்கா முக்கிய பங்கு எடுத்துக் கொண்டு வருகிறது. அமெரிக்காவின் சாதன பலம் எல்லையற்றது. எனவே, இந்தியாவை இந்த நிலையில் வைத்திருக்கும் குற்றத்தில் அமெரிக்காவும் ஒரு பங்காளியாக இருந்து வருகிறது.

**கே:** இந்தியாவிற்கு பூரண சுதந்திரம் அளிக்கப்பட்டபின் அமெரிக்க, நேசதேசத் துருப்புகள் இந்தியாவிலிருந்து கொண்டு நடவடிக்கைகளை மேற்கொள்வதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்களா?

**ப:** நான் ஒப்புக்கொள்வேன். அப்போதுதான் நீங்கள் மக்களின் உண்மையான ஒத்துழைப்பைக் காண்பீர்கள். இல்லாவிடில், நீங்கள் செய்யும் முயற்சிகள் யாவும் தோல்வியுறும். இப்போது இந்தியாவைத் தனது ஆதிக்கத்தின் கீழ் வைத்துக்கொண்டிருப்பதால்தான், இந்தியாவிலிருந்து பிரிட்டன் சாதனங்களைப் பெற முடிகின்றது. ஆனால், நாளை பிரிட்டன் பெறும் உதவியெல்லாம், சுதந்திர இந்தியாவிலிருந்து பெறும் உண்மையான உதவியாக இருக்கும்.

**கே:** ஆதிக்கத்தின் கீழ் இருக்கும் இந்தியா, ஜப்பானின் ஆக்கிரமிப்பை எதிர்த்து நிற்க நேச தேசங்கள் மேற்கொள்ளும் நடவடிக்கைகளுக்குத் தடையாக இருக்கிறது என்று நீங்கள் எண்ணுகிறீர்களா?

**ப:** ஆம், அது தடையாகத்தான் இருக்கிறது.

**கே:** இந்தியாவிலிருந்து தற்போதுள்ள நேச தேசத் துருப்புகளெல்லாம் வாபசாகிவிடவேண்டும் என்பது உங்களுடைய எண்ணமா?

**ப:** வாபசாகிவிட வேண்டும் என்ற அவசியமில்லை.

**கே:** இவ்விஷயமாகத்தான் மிகுந்த தப்பெண்ணம் நிலவி வருகிறது.

**ப:** நான் எழுதி வருவதையெல்லாம் நீங்கள் ஊன்றிக் கவனிக்க வேண்டும். 'ஹரிஜன்' பத்திரிகையின் இவ்வார இதழில் இந்தப் பிரச்னையைப் பூராவாகப் பரிசீலனை செய்திருக்கிறேன். இந்தியா முற்றிலும் சுதந்திரம் பெறவேண்டும் என்ற நிபந்தனையின் மீது நான் அவர்களை வெளியேற

வேண்டும் என்று கூறவில்லை. இந்தியா பூரண சுதந்திரம் அடைந்துவிட்டால், அவர்கள் வெளியேற வேண்டும் என்று நான் வற்புறுத்த முடியாது. ஏனெனில், இந்தியாவுக்கு வரும்படி ஜப்பானை நான் அழைக்கிறேன் என்ற குற்றச் சாட்டை என் சக்தி முழுவதையும் உபயோகித்து எதிர்க்க நான் விரும்புகிறேன்.

**கே:** உங்களுடைய யோசனை நிராகரிக்கப்படுவதாக வைத்துக் கொள்வோம். அப்போது நீங்கள் அடுத்தபடியாக என்ன செய்வீர்கள்?

**ப:** அடுத்தபடியாக என்னுடைய நடவடிக்கை உலகம் முழுவதும் உணரக்கூடிய விதத்தில் இருக்கும். பிரிட்டிஷ் துருப்புகளின் போக்குவரத்தில் குறுக்கிடக்கூடிய விதத்தில் அது இல்லாமலிருக்கலாம். எனினும், அது பிரிட்டிஷாரின் கவனத்தை ஈர்க்கும் என்பது நிச்சயம். என்னுடைய யோசனையை அவர்கள் நிராகரிப்பது தவறாகும். பிரிட்டன் வெற்றிபெறுவதற்காகவும், சீனாவின் பாதுகாப்பிற்காகவும் இந்தியா அடிமையாக இருக்கவேண்டும் என்று பிரிட்டிஷார் கூறுவார்களா? அந்த இழிவான நிலையை நான் ஒப்புக்கொள்ள முடியாது. விடுதலை பெற்ற சுதந்திர இந்தியா, சீனாவின் பாதுகாப்பில் முக்கிய பங்கு எடுத்துக் கொள்ள முடியும். இந்தியா, சீனாவுக்கு உண்மையான உதவி எதுவும் அளிப்பதாக நான் கருதவில்லை. நேச தேசங்களுக்கு தர்ம சங்கடமான நிலைமையை உண்டாக்கக் கூடாது என்ற கொள்கையை இது வரையில் நாங்கள் பின்பற்றிவருகிறோம். இப்போது அதே கொள்கையையே நாங்கள் பின்பற்றுவோம். ஆனால், அந்தக் கொள்கையைப் பயன்படுத்திக் கொண்டு இந்தியாவின் கழுத்தில் உள்ள பிடியை பிரிட்டன் பலப்படுத்திக் கொள்வதை நாங்கள் அனுமதிக்க முடியாது. இன்றைய நிலைமை அப்படித்தான் இருக்கிறது. உதாரணமாக, இன்று ஆயிரக்கணக்கானவர்கள் தங்கள் வீடுவாசல்களைவிட்டு வெளியேறும்படி கேட்டுக்கொள்ளப்பட்டு வருகிறார்கள். அவர்களுக்கோ போவதற்கு இடமில்லை: பயிர் செய்வதற்கு பூமி இல்லை; கஷ்ட காலத்தைச் சமாளிக்கப் பணமில்லை. பிரிட்டிஷாரை தர்ம சங்கடமான நிலைக்கு உள்ளாக்கக் கூடாது என்ற எங்களுடைய கொள்கைக்கு நாங்கள் பெறும் வெகுமதி இதுதான். எந்த சுதந்திர நாட்டிலும் இவ்விதம் நடைபெறுவது முடியாத காரியம். இத்தகைய நிலைக்கு இந்தியா உட்பட்டுவருவதை நான் சகித்துக் கொண்டிருக்க முடியாது. அவ்விதம் இருப்பது மிக்க இழிவும் அடிமைத் தனமும் ஆகும். ஒரு நாடு முழுவதும் அத்தகைய அடிமைத் தனத்தை ஒப்புக் கொள்ளுமாயின், பின்னர் அது என்றென்றும் சுதந்திரத்தை இழப்பதற்கு இசைந்துவிட்டது என்றே அர்த்தமாகும்.

# பிரிட்டிஷாரின் வெற்றி இந்தியாவுக்கு லாபமா?

**கே:** *நீங்கள் விரும்புவதெல்லாம், இந்தியாவில் பிரிட்டிஷாருக்கு உள்ள நிர்வாக அதிகாரப் பிடிப்பு தளரவேண்டும் என்பது தான். பின்னர் ராணுவ நடவடிக்கைகளுக்கு நீங்கள் முட்டுக்கட்டை போடமாட்டீர்கள் அல்லவா?*

**ப:** அது எனக்குத் தெரியாது. கலப்பற்ற சுதந்திரத்தையே நான் விரும்புகிறேன். இந்தியாவில் பிரிட்டிஷாருக்கு உள்ள கழுத்தை நெறிக்கும் பிடியை இறுக்குவதற்கு ராணுவ நடவடிக்கைகள் உதவியாக இருக்குமாயின், அதையும் நான் எதிர்ப்பேன். என்னுடைய சுதந்திரத்தைப் பறி கொடுத்தாவது, பிரிட்டிஷாருக்கு மேன்மேலும் உதவி செய்யும் தர்மவான் நான் அல்ல. ஒரு பிணம், ஜீவனுடன் இருக்கும் உடலுக்கு யாதொரு உதவியும் அளிக்க முடியாது. இதை நீங்கள் உணர வேண்டும் என்பதுதான் என் விருப்பம். இரட்டைப் பாவமான பளுவை நேச தேசங்கள் சுமந்து கொண்டிருக்கின்றன. ஒன்று, இந்தியாவை அடிமைத்தனத்தில் ஆழ்த்தி வைத்திருக்கும் பாவம்; மற்றொன்று நீக்ரோக்களையும், ஆப்பிரிக்க சுதேசிகளையும் அடிமைகளாக வைத்திருக்கும் பாவம். இந்தப் பாவங்களை அவை சுமந்துவரும் வரையில், நேச தேசங்கள் தார்மிக லட்சியத்திற்காக யுத்தம் செய்கின்றன என்று கூறுவதற்கில்லை.

**கே:** *நேச தேசங்கள் வெற்றிபெற்ற பின் சுதந்திர இந்தியா உதயமாகும். எனவே, அந்த வரப்பிரசாதம், நேச தேசங்களுக்கு வெற்றிகிடைக்கும் வரையில் ஏன் காத்திருக்கக் கூடாது?*

**ப:** சென்ற உலக யுத்தத்தில் அவை வெற்றி பெற்றபின் ரௌலட் சட்டம், ராணுவச் சட்டம், அமிருதசரஸ் படுகொலை ஆகியவை எங்களுக்கு வரப்பிரசாதமாகக் கிடைத்தன.

**கே:** *நேச தேசங்கள் வெற்றி பெற்றால், பொருளாதார, கைத் தொழில் துறைகளில், அரசாங்கத்தின் அருளால் அல்ல, சந்தர்ப்பங்கள் காரணமாக, அதிக சுபிட்சம் ஏற்படும். அத்தகைய சுபிட்சம் சுயராஜ்யத்திற்கான பாதையில் மற்றொரு படியாக இருக்கும் அல்லவா?*

**ப:** முன்னர் கைத்தொழில் துறைகளில் ஏற்பட்ட நன்மைகள், பிரிட்டன் விருப்பத்துடன் அளித்தவையல்ல. வேண்டா வெறுப்பாகவே பிரிட்டன் அவற்றை அளிக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது. இந்த யுத்தத்திற்குப் பிறகும் ஏற்படக் கூடிய அத்தகைய நன்மைகளில் எனக்கு நம்பிக்கை

இல்லை. அந்த நன்மைகள் மேற்கொண்டு இந்தியாவை இறுக்கும் அடிமைத் தளைகளாக இருக்கலாம். தவிர, யுத்தம் நடந்துவரும் இச்சமயத்தில் பிரிட்டன் அனுசரித்துவரும் கைத்தொழில் கொள்கையைப் பார்க்கும்போது, அத்த கைய நன்மைகள் ஏற்படுமா என்பது சந்தேகம்தான்.

## அமெரிக்கா என்ன செய்ய முடியும்?

**கே:** இந்தியாவில் பிரிட்டனுக்கு உள்ள பிடியை விட்டுவிடும்படி பிரிட்டனைத் தூண்டும் விஷயமாக, அமெரிக்காவினிடமிருந்து நீங்கள் எத்தகைய உதவியையும் எதிர்பார்க்க வில்லை அல்லவா?

**ப:** உண்மையில் நான் அவ்விஷயமாக அமெரிக்காவினிட மிருந்து உதவியை எதிர்பார்க்கிறேன்.

**கே:** அதில் நீங்கள் வெற்றிபெறுவது சாத்தியமென நினைக்கின் றீர்களா?

**ப:** சாத்தியமென்றே நினைக்கிறேன். நீதி கிடைக்கும் விஷயத் தில் அமெரிக்கா தன் முழு சக்தியையும் உபயோகிக்க வேண்டுமென எதிர்பார்க்க எனக்கு எத்தகைய உரிமையும் உண்டு.

**கே:** பிரிட்டிஷார் இந்தியாவிலேயே இருப்பதை தான் ஆதரிப் பதாக அமெரிக்கா உறுதிமொழி கொடுத்திருக்கிறதென நீங்கள் நினைக்கவில்லையா?

**ப:** நான் அவ்விதம் நம்பவில்லை. எனினும் ராஜதந்திரத்தில் பிரிட்டிஷார் கெட்டிக்காரர்களாதலின், இந்தியாவுக்கு உதவி புரியவேண்டுமென அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல் டும் அமெரிக்கா மக்களும் விரும்பினாலும்கூட, பிரிட்டிஷார் தங்கள் முயற்சியில் வெற்றி பெறலாம். இந்தியாவின் லட்சி யத்திற்கு விரோதமாக அமெரிக்காவில் பிரிட்டிஷார் கட்டுக் கோப்பான முறையில் பிரசாரம் செய்துவருகிறார்கள். எனவே, அமெரிக்காவில் இந்தியாவின் நண்பர்களாக இருக்கும் ஒரு சிலரின் குரல் யாருடைய காதிலும் விழுவதற் கில்லை.

**கே:** அந்தக் குரல் மெதுவாக நாளடைவில் அமெரிக்கர்களின் காதில் விழலாம் அல்லவா?

**ப:** தாமதமாகவா? நான் நீண்டகாலம் காத்திருந்து பார்த்து விட்டேன். இனி என்னால் காத்திருக்க முடியாது. இந்த யுத்தத்தில் 40 கோடி மக்களுக்கு எதுவும் கூற உரிமையில்லை என்பது பயங்கரமான, துக்ககரமான ஒரு நிலையாகும்.

எங்கள் பங்கைச் செய்ய எங்களுக்குச் சுதந்திரம் இருக்குமாயின், ஜப்பானின் படையெடுப்பைத் தடுத்து, சீனவைக் காப்பாற்ற எங்களால் முடியும்.

## நீங்கள் என்ன உறுதிமொழி கூறுகிறீர்கள் ?

ஸ்ரீ க்ரோவர் கேட்ட மற்ருெரு கேள்விக்குப் பதிலளிக்கையில் காந்திஜி கூறியதாவது: இந்தியா, தான் செய்யும் எத்தகைய தொண்டிற்கும் வெகுமதியாக சுதந்திரத்தைக் கோரவில்லே. சுதந்திரம் தனது உரிமை என்றே அதைக் கோருகிறது.

கே: இந்தியா சுதந்திர நாடு என்று பிரகடனம் செய்யப்படுமாயின், சீனவைக் காப்பாற்ற இந்தியா உருவான முறையில் என்ன செய்யும்?

ப: இந்தியா மகத்தான காரியங்களேச் செய்யும் என்று நான் உடனடியாகக் கூறமுடியும். எனினும் அவற்றை திட்டவட்டமாக நான் கூற முடியாமல் இருக்கலாம். அப்போது இந்தியாவில் எத்தகைய அரசாங்கம் இருக்கும் என்பது எனக்குத் தெரியாது. இங்கே பல அரசியல் கட்சிகள் இருக்கின்றன. அவையெல்லாம் சேர்ந்து ஒழுங்கான ஒரு தேசீய அரசாங்கத்தை அமைக்க முற்படும் என்று எதிர்பார்க்கிறேன். இப்போது அவை பிரிட்டிஷாரின் தயவையே எதிர்பார்க்கின்றன. இப்போதுள்ள சூழ்நிலே ஊழல் மயமாகவும் படுமோசமாகவும் இருக்கிறது. ஒரு பிணம் மீண்டும் உயிர் பெற்று எழுவதற்கான சாத்தியக் கூறுகள் இருக்கின்றன என்று யார் எதிர் பார்க்க முடியும்? தற்போது நேச தேசங்களுக்குத் தாங்க முடியாத ஒரு சுமையாகவே இந்தியா இருந்து வருகிறது.

கே: தாங்க முடியாத ஒரு சுமை என்று நீங்கள் கூறுவதன் அர்த்தம் என்ன? இங்கே பிரிட்டிஷ், அமெரிக்க நலன்களுக்கு இந்தியா அபாயமாக இருந்துவருகிறது என்று அர்த்தமா?

ப: ஆம். அது அபாயம்தான். குமுறிக் கொண்டிருக்கும் இந்தியா திடீரென்று என்ன செய்யும் என்பதை யாராலும் கூற முடியாது.

கே: இந்தியா விஷயத்தில் சரியாக நடந்து கொள்ளும்படி உண்மையிலேயே அமெரிக்கா பிரிட்டனே நிர்ப்பந்தப்படுத்துமாயின், அம் முயற்சிக்கு நீங்கள் ஆதரவு அளிப்பீர்களா?

ப: நான? 73 ஆண்டுகளே என் தோளில் சுமந்து கொண்டிருக்கும் நான் என்ன செய்ய முடியும்? எனினும், அந்

நிலையில் சுதந்திரமான ஒரு மாபெரும் தேசத்தின் மனப்பூர்வமான ஒத்துழைப்பை நீங்கள் பெற முடியும். நிச்சயமாக எனது ஒத்துழைப்பு இருக்கவே இருக்கிறது. வாராவாரம் எழுதுவதன் மூலம் எனக்குள்ள அற்ப செல்வாக்கையும் நான் உபயோகிக்க முடியும். ஆனால் என் செல்வாக்கைக் காட்டிலும் இந்தியாவின் செல்வாக்கு எவ்வளவோ மடங்கு அதிகமானது. இன்று நாடெங்கும் அதிருப்தி நிலவுவதால் தான், ஜப்பானின் முன்னேற்றத்தைத் தடுக்க தீவிரமான எதிர்ப்பு எதுவும் இல்லை. நாங்கள் விடுதலை பெற்ற விநாடியிலேயே, கிடைப்பதற்கரிய சுதந்திரத்தை முழு சக்தியையும் உபயோகித்துப் பேணிப் பாதுகாக்கும் தேசமாக மாறி விடுவோம். எனவே, நாங்கள் நேச தேங்களின் லட்சியம் நிறைவேறுவதற்கும் உதவி புரிய முன்வருவோம். இந்தியாவிலிருந்து நேச தேசத் துருப்புகள் வெளியேறி பத்திரமான தளத்திற்குச் செல்லும்படி ஜப்பானியர் நிர்ப்பந்தப் படுத்துவார்களாயின், இன்று இந்தியா முழுவதும் ஜப்பானுக்கு எதிராக ஆயுதம் ஏந்திப் பொங்கி எழும் என்று நான் கூற முடியாது. சில பர்மியர்கள் செய்ததுபோல் இந்தியர்களும் ஜப்பானியருடன் ஒத்துழைத்துத் தங்களை இழிவுபடுத்திக் கொள்வார்களோ என்ற பயமும் எனக்கு இருக்கிறது. இந்திய மக்கள் ஜப்பானியரை ஏகோபித்து எதிர்க்க வேண்டும் என்பதே எனது விருப்பம். இந்தியா சுதந்திர நாடாக இருந்தால் அவ்விதமே எதிர்க்கும். இந்தியாவுக்கு அது ஒரு புதிய அனுபவமாக இருக்கும். இருபத்து நான்குமணி நேரத்தில் அதன் மனம் அடியோடு மாறிவிடும், அப்போது எல்லாக் கட்சிகளும் ஒரே மனிதரைப்போல் நடந்து கொள்ளும். ஜீவ சக்தியுடன் கூடிய இந்த சுதந்திரம் இன்றே பிரகடனப்படுத்தப்படுமாயின், இந்தியா ஒரு சக்தி வாய்ந்த நேச தேசமாக மாறிவிடும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

கே: சுதந்திரப் பிரகடனம் செய்வதற்கு வகுப்பு வேற்றுமை ஒரு தடையாக இருக்கும் அல்லவா? ஆனால், அமெரிக்கா சுதந்திரம் பெறுவதற்குமுன் அங்கேயும் பல ராஜ்யங்களிடையேயும் அதிக ஒற்றுமை நிலவவில்லை.

ப: மூன்றுவது கட்சியின் (பிரிட்டனின்) தீய செல்வாக்கு வாபசான உடனேயே இந்தியாவில் உள்ள கட்சிகள் உண்மை நிலையை நேருக்கு நேராகச் சமாளிப்பதற்காக, தங்களுடைய வேற்றுமையை மறந்து ஒற்றுமை அடையும். எங்களைப் பிரித்து வைத்துள்ள பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் மறைந்த உடனேயே, வகுப்புச் சண்டைகளும் மறைந்துவிடும் என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும்.

## டொமினியன் அந்தஸ்து ஏன் கூடாது ?

கே : இன்று இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்து அளிப்ப தாகப் பிரகடனம் செய்யப்பட்டால், சுதந்திரத்தைப்போல் அதுவும் சிறந்ததல்லவா?

ப : அது சிறந்ததல்ல. அரைகுறையான முறைகளை நாங்கள் ஏற்க முடியாது. சுதந்திரம் கொடுப்பது இந்தக் கட்சிக்கோ அல்லது அந்தக் கட்சிக்கோ அல்ல; விவரிக்க முடியாத இந்தியா முழுவதற்கும்தான் சுதந்திரம் கொடுக்க வேண்டும். இந்தியாவை பிரிட்டிஷார் தங்கள் வசத்தில் வைத்துக் கொண்டிருப்பது தவறாகும். அந்தத் தவறைச் சீர்படுத்த வேண்டும். இந்தியாவை அதன் விருப்பப்படி விட்டுவிடுவது தான் அவ்விதம் சீர்படுத்துவதற்கான வழியாகும்.

('ஹரிஜன்' — 21-6-1942)

17. இந்த அத்தியாயத்தின் மற்றப் பகுதிகள் யாவும், அலகாபாத்துக்கு நான் அனுப்பிய நகல் தீர்மானத்தைப்பற்றிய அலங்காரமான வர்ணனையேயாகும். அந்தத் தீர்மானத்தைப் பற்றி பண்டித ஜவாஹர்லால் நேருவும், ஸ்ரீ ராஜகோபாலாச்சாரி யாரும் கூறியதாகச் சொல்லப்படும் கருத்துகளும் அதில் குறிப் பிடப்பட்டுள்ளன.

ராஜாஜிக்கும் எனக்கும் உள்ள கருத்து வேற்றுமை பற்றி நான் அமெரிக்க நிருபரான ஸ்ரீ க்ரோவரிடம் பின் வருமாறு கூறினேன் :

ராஜாஜிக்கு ஜப்பானியரிடமுள்ள பயமே பிரிட்டிஷ் ஆட்சி யைச் சகித்துக்கொள்ளும்படி அவரைச் செய்திருக்கிறது. யுத்தம் முடியும் வரையில் சுதந்திரப் பிரச்னையை ஒத்திவைக்க அவர் விரும்புகிறார். ஆனால், நான் கூறுவது அதற்கு மாறாகும். அதாவது யுத்தத்தில் இறுதி வெற்றி பெறவேண்டுமாயின், இந்தியர் தன் பங்கைச் செய்வதற்கு வசதியாக விடுதலை பெறவேண்டும் என்று நான் கூறுகிறேன். நான் இவ்விதம் கூறுவதில் தவறு எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. எனக்குள் நான் நீண்ட காலம் விவாதித்த பின்னரே இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன். அவரசப்பட்டோ அல்லது கோபம் கொண்டோ நான் எதுவும் செய்யவில்லை. ஜப்பானுக்கு அணுவளவாவது ஆதரவு அளிக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கு இல்லை. இந்தியாவின் சுதந்திரம் இந்தியாவுக்கு மாத்திரமல்ல, சீனாவுக்கும், நேச தேசங் களின் லட்சியத்திற்கும் கூட அவசியமாகும்.

18. முதலாவது அத்தியாயம் எனது நகல் தீர்மானத்தை யொட்டி இந்த வியாக்கியானத்துடன் முடிவடைகின்றது.

"அலகாபாத்திற்கு (காந்திஜியினால்) அனுப்பப்பட்ட நகல் தீர்மானம் ஜப்பானுக்கு ஆதரவளிப்பதாகவும், ஜப்பானின் அணைப்பை நாடி ஓடுவதா கவும் இருக்கிறது."

பண்டித ஜவாஹர்லால் விடுத்ததாகக் கூறப்படும் அறிக்கையை அவர் மறுத்திருந்தும், ராஜாஜிக்கும் எனக்கும் உள்ள வேற்றுமையை நான் தெளிவாகக் கூறியிருந்தும்கூட மேற்கண்ட விதம் எழுதப்பட்டிருக்கிறது!

*19.* அரசாங்க அறிக்கையிலிருந்து மேலே கொடுக்கப்பட்டுள்ள வாக்கியங்களில் அடங்கியிருக்கும் கருத்துக்குச் சிறிதும் ஆதாரம் இல்லை என்பதை, ஆகஸ்டு 5-ஆம்தேதி 'பம்பாய் கிரானிகிள்' பத்திரிகையில் வெளியாகியுள்ள எனது அறிக்கையின் பின் கண்ட பகுதிகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம் :

"அந்த நகல் தீர்மானத்தில் பல விஷயங்கள் சேர்க்கப்பட வேண்டியிருக்கின்றன. அந்நிய நாட்டு விவகாரங்களை பண்டித ஜவாஹர்லால் ஆழ்ந்து பரிசீலனை செய்திருப்பதால், அதில் விட்டிருப்பதை அவர் சேர்த்துக் கொள்வார் என்று நான் காரியக் கமிட்டியில் உள்ள நண்பர்களிடம் கூறினேன். ஜெர்மனியும், ஜப்பானும் யுத்தத்தில் வெற்றிபெறுமென நான் எக்காலத்திலும், மறந்துபோய்க்கூட கூறியதில்லை. அது மாத்திரமல்ல, பிரிட்டன் தனது ஏகாதிபத்திய ஆசையைக் கைவிடுமாயின், ஜெர்மனியும் ஜப்பானும் யுத்தத்தில் வெற்றிபெற முடியாதென்றும் பல தடவைகளில் குறிப்பிட்டிருக்கிறேன். இந்த அபிப்பிராயத்தை 'ஹரிஜனி'ல் பல தடவை கூறியிருக்கிறேன். பிரிட்டனும், அமெரிக்காவும் வெற்றிபெற வேண்டும் என்பதே என்னுடைய ஆர்வமும் மற்றவர்களுடைய ஆர்வமுமாகும். அப்படியிருந்தும் கூட, பிரிட்டனுக்கும் நேச தேசங்களுக்கும் நெருக்கடியான இந்தக் கட்டத்தில் ஆபத்து ஏற்படுமாயின், நூற்றைம்பது ஆண்டுகளாக அது சுமந்து வந்துள்ள ஏகாதிபத்தியக் களங்கத்தைக் கைகழுவ பிடிவாதத்துடன் மறுத்ததே அதற்குக் காரணமாக இருக்கும் என்பதை மீண்டும் இங்கே திருப்பிக் கூறுகிறேன்."

திட்டவட்டமான இந்த அறிக்கைக்குப் பிறகும் கூட, இந்த யுத்தத்தில் அச்சு நாடுகள் வெற்றி பெறும் என்பதே எனது உறுதியான அபிப்பிராயம் என்றும், அதன் காரணமாகவே 'பிரிட்டிஷார் வெளியேற வேண்டும்' என்ற தீர்மானம் உருவானதாகவும் அரசாங்க அறிக்கையைத் தயாரித்தவர் கூறுவது விந்தையாகவே இருக்கிறது.

*20.* அதே குற்றச்சாட்டுக்கு ஆதரவாக அவர் கூறுவதாவது :

"அலகாபாத்தில் நடந்த காரியக் கமிட்டிக் கூட்டத்திற்குப் பிறகும் கூட ஸ்ரீ காந்தியின் நிலை இவ்விதமே இருந்து வந்தது என்பது, ஒரு கேள்விக்கு அவர் அளித்த பதிலிலிருந்து தெளிவாகியது. அந்தக் கேள்வியும் பதிலும் ஜூலை 19-ஆம் தேதி 'ஹரிஜனி'ல் வெளியாகியிருக்கின்றன:

**கேள்வி :** ஜெர்மானியர்களுடனும், ஜப்பானியர்களுடனும் பிரிட்டன் கணக்கைத் தீர்த்துக் கொள்ளும்வரையில், உங்களுடைய இயக்கத்தைத் தள்ளி வைப்பது புத்திசாலித்தனம் அல்லவா?

பதில் : இல்லை. ஏனெனில், எங்களுடைய உதவியின்றி நீங்கள் ஜெர்மானியர்களுடன் கணக்கைத் தீர்த்துக் கொள்ள முடியாது.''

மேற்கண்ட கட்டுரையிலிருந்து சில பகுதிகளை நான் கீழே தருகிறேன் :

என்னை பேட்டி கண்ட லண்டன் 'டெயிலி எக்ஸ்பிரஸ் பத்திரிகையின் நிருபரான ஸ்ரீ யங் இரண்டே நிமிடநேரம் என்னைப் பேட்டி காணவேண்டும் என்று கூறினர். அதற்கு நான் இசைந்தேன்.

இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் வெளியேற வேண்டும் என்ற கோரிக்கை நிராகரிக்கப்பட்டால், ஏதாவது ஒருவிதமான இயக்கத்தை ஆரம்பிக்க நான் முடிவு செய்துள்ளேன் என்று அவரிடம் கூறினேன்.

**கேள்வி :** இந்தியாவிற்குள் ஜப்பானியர் வரமுடியாமல் தடுப்பதில் உள்ள கஷ்டத்தை உங்களுடைய இயக்கம் அதிகமாக்குமா அல்லது குறைக்குமா ?

**பதில் :** எங்களுடைய இயக்கம் ஜப்பானியர் இந்தியாவிற்குள் வருவதை மிகவும் கடினமாகச் செய்துவிடும்.

**கே :** ஆனல், யுத்தம் முழுவதையும் மொத்தமாக எண்ணிப் பாருங்கள். நேசதேசங்கள் வெற்றி பெறுவதற்கு உங்களுடைய புதிய இயக்கம் உதவியாக இருக்கும் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா ? நேச தேசங்களின் வெற்றியையே நீங்களும் விரும்புவதாகக் கூறியிருக்கிறீர்களே?

**ப :** ஆம். நான் கூறிய யோசனை ஒப்புக் கொள்ளப்பட்டால்...

**கே :** நீங்கள் கூறிய யோசனை என்ன? பிரிட்டன் சாத்துவிக யுத்தத்தில் ஈடுபட வேண்டும் என்று கூறுகிறீர்களா?

**ப :** இல்லை, இல்லை. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி முடிவடைய வேண்டும் என்பதே எனது யோசனையாகும். அது ஒப்புக் கொள்ளப்பட்டால், நேச தேச வல்லரசுகள் வெற்றிபெறுவது நிச்சயம்தான். அப்போது இந்தியா சுதந்திரமான ஒரு வல்லரசாகத் திகழும். அவ்விதமாக இந்தியா ஓர் உண்மையான நேச தேசமாக இருக்கும். ஆனல் இப்போதோ, இந்தியா ஓர் அடிமை நாடாக இருக்கிறது. அனுதாபத்துடன் ஆலோசனை செய்வார்களாயின், அந்த இயக்கத்தின் பலன் மிகவும் விரைவில் கிடைக்கும் வெற்றியாகத்தான் இருக்கும். ஆனல் பிரிட்டிஷார் இதைச் சரிவரப் புரிந்து கொள்ளாமல் இந்தியாவை நசுக்க விரும்புவார்களாயின், அதனல் ஏற்படக்கூடிய விளைவுகளுக்கு அவர்கள்தான் பொறுப்பாளிகளாக இருப்பார்களேயொழிய, நான் அல்ல.

**கே :** நீங்கள் லண்டனில் இருந்திருக்கிறீர்கள். பிரிட்டிஷ் மக்கள் கொடிய வெடிகுண்டுமாரிக்கு இலக்காகி வருவதைக் குறித்து நீங்கள் எதுவும் கூறுவதற்கில்லையா?

**ப :** எவ்வளவோ சொல்லுவதற்கு இருக்கிறது. லண்டனில் ஒவ்வொரு மூலை முடுக்கையும் நான் அறிவேன். பல ஆண்டுகளுக்கு முன் நான் மூன்று வருடகாலம் அந்நகரில் வசித்தேன். ஆக்ஸ்போர்ட், கேம்பிரிட்ஜ், மாஞ்செஸ்டர் முதலிய இடங்களிலும் சிறிது காலம் வசித்தேன். எனினும், குறிப்பாக லண்டனை நினைக்கும் போதுதான் எனக்கு வேதனையாக இருக்கிறது. அங்குள்ள மக்களை நினைக்கும்போது என் மனம் உருகுகிறது. அங்குள்ள டெம்பிள் சர்ச்சில் டாக்டர் பார்க்கர் மத உபதேசங்கள் செய்ததை நான் கேட்டிருக்கிறேன். எனவே, டெம்பிள் சர்ச் வெடிகுண்டுமாரிக்கு இலக்காகியதைக் கேட்டபோது என் இதயத்திலிருந்து உதிரம் வடிந்தது. வெஸ்ட்மின்ஸ்டர் ஆலயத்திலும் மற்ற புராதனமான கட்டிடங்களிலும் வெடிகுண்டுகள் விழுந்தது, எனக்கு ஆழ்ந்த துக்கத்தைக் கொடுத்திருக்கிறது.

**கே :** இங்கிலையில், ஜெர்மானியர்களுடனும் ஜப்பானியர்களுடனும் நாங்கள் கணக்கைத் தீர்த்துக் கொள்ளும்வரையில், உங்களுடைய இயக்கத்தைத் தள்ளிவைப்பது புத்திசாலித்தனம் அல்லவா?

**ப :** அல்ல. ஏனென்றால், எங்களுடைய உதவியின்றி நீங்கள் ஜெர்மானியர்களுடன் கணக்கைத் தீர்த்துக் கொள்ள முடியாது. நாங்கள் சுதந்திரமாக இருந்தால், எங்கள் விருப்பப்படி நாங்கள் உங்களுடன் நூறு சதவிகிதம் ஒத்துழைக்க முடியும். இந்த சாதாரண விஷயத்தை எவரும் அறிந்துகொள்ளாதது விந்தையாக இருக்கிறது. இன்று பிரிட்டனுக்கு அடிமை இந்தியாவிலிருந்து யாதொரு உதவியும் கிடைக்கவில்லை. நாளை இந்தியா சுதந்திரம் அடைந்த உடனேயே பிரிட்டனுக்கு மகத்தான தார்மிக பலமும், ஒரு சுதந்திர நாட்டின் உறவும் உதவியும் கிடைக்கின்றன. இது இங்கிலாந்தின் சக்தியை மிகவும் அதிகமாக்கிவிடும்.

மேற்கண்ட பேட்டியிலிருந்து ஒரே ஒரு வாக்கியத்தை மாத்திரம் தனியாகப் பிரித்தெடுத்து, நான் அச்சு நாடுகளுக்கு ஆதரவான மனப்பான்மையுடையவன் என்று காட்டப்பட்டிருக்கிறது!

21. ஆகஸ்டு 14-ஆம் தேதி நான் வைஸ்ராய்க்கு எழுதிய கடிதத்திலிருந்தும் ஒன்றிரண்டு வாக்கியங்கள் மாத்திரம் தனியாகப் பிரித்தெடுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

அந்தக் கடிதத்தில் உள்ள முக்கியமான பகுதியைக் கீழே கொடுத்திருக்கிறேன்:

"பிரகடனம் செய்யப்பட்டுள்ள லட்சியம் இந்திய அரசாங்கத்துக்கும் நமக்கும் பொதுவானது. சீனு, ருஷ்யாவின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதே அந்த லட்சியமாகும். அந்த லட்சியத்தில் வெற்றிபெற இந்தியாவுக்கு சுதந்திரம் அவசியமில்லை என்று இந்திய அரசாங்கம் எண்ணுகிறது. ஆனல் நானே, அதற்கு நேர் மாருக நினைக்கிறேன். இவ்விஷயத்தில் நான் ஜவாஹர்லால் நேருவையே எனது அளவு கோலாக எடுத்துக்கொண்டிருக்கிறேன். சீனவுடனும் ருஷ்யாவுடனும் அவர் தொடர்பு உள்ளவர், எனவே என்னைக் காட்டிலும்,-உங்களைக் காட்டிலும் என்று கூட நான் சொல்லலாம்-அவர் தான், சீனவுக்கும் ருஷ்யாவுக்கும் ஏற்படவிருக்கும் அழிவைக் குறித்து மிகவும் துக்கமடைகிருர். அந்த துக்கத்தில் அவர் ஏகாதிபத்தியத்துடன் இருந்துவரும் பழைய சண்டையைக் கூட மறந்துவிட முயற்சித்தார். நாஜிஸக் கொள்கையோ அல்லது பாசிஸக் கொள்கையோ வெற்றியடைவது, என்னைக் காட்டிலும் அவருக்கு அதிக நடுக்கத்தை உண்டாக்கியிருக்கிறது. அப்படிப்பட்ட சக்திவாய்ந்த ஒரு நண்பரை நீங்கள் சிறையில் வைத்திருப்பது நிச்சயமாகத் தவறேயாகும்".

அரசாங்க அறிக்கையைத் தயாரித்தவர் மேற்கண்ட முழு விவரங்களையும் கொடுக்காமல், அங்கு ஒன்றும் இங்கு ஒன்றுமாக ஒன்றிரண்டு வாக்கியங்களை மாத்திரம் எடுத்துக் கூறி தவருன அபிப்பிராயம் ஏற்படும்படி செய்திருக்கிருர்.

22. அவரது குற்றச்சாட்டுக்கு இதற்கு மேலும்கூட நான் பதில் கூறவேண்டியது அவசியமெனில், ஸ்ரீமதி மீராபென்னுக்கு நான் எழுதிய கடிதமானது சரியான விடையாகும். அது முன் பின் யோசனையின்றி திடீரென்று எழுதப்பட்ட கடிதமாகும். பத்திரிகைகளில் வெளியிட வேண்டும் என்ற நோக்கத்துடன் அது எழுதப்பட்டதல்ல. அவர் கேட்டிருந்த கேள்விகளுக்குப் பதிலளித்தே நான் அக் கடிதம் எழுதியிருந்தேன். ஜப்பானியர் எந்த விநாடியிலும் இந்தியாவைத் தாக்கலாமென்றும், அப்படித் தாக்கினல் அவர்கள் எளிதில் முன்னேறிவிடுவார்கள் என்றும் மீராபென் குறிப்பிட்டிருந்தார். நான் அளித்த பதிலில், எனது நிலைமை என்ன என்பதுபற்றி சந்தேகத்திற்கே இடம் வைக்கவில்லை. அலகாபாத்தில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திற்குப் பிறகே அக் கடிதம் எழுதப்பட்டது. இந்தக் கடிதப்போக்கு வரத்தின் பிரதிகளுடன் ஸ்ரீமதி மீராபென் லார்டு லின்லித்கோவுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அக் கடிதம் வந்து சேர்ந்ததாகக்கூட பதில் வரவில்லை. அதை வாசிக்காமலேயே அப்பால் போட்டிருக்க மாட்டார்கள் என்றே நம்புகிறேன்.

23. காங்கிரஸ் சம்பந்தமான எவ்விஷயத்திலும் தீமையைக் காண்பதே, அரசாங்க அறிக்கையின் ஆசிரியருடைய நோக்கமென்று தோன்றுகிறது. உதாரணமாக, 'இந்தியாவைப் பாதுகாக்க பிரிட்டனுக்கு சக்தி இல்லை' என்ற என் வாக்கியத்தை

மாத்திரம் அவர் எடுத்துக் கூறியிருக்கிறார். ஆனால் அந்த வாக்கியத்திற்குப்பின் கீழ்க்கண்ட வாக்கியங்கள் உள்ளன.

"பிரிட்டன் செய்வதெல்லாம் அதன் சொந்தப் பாதுகாப்பிற்காகவே செய்துவருவது இயல்பேயாகும். இந்தியாவின் நலன்களுக்கும் பிரிட்டனின் நலன்களுக்கும் நிரந்தரமான போராட்டம் இருந்துவருகிறது. எனவே தற்காப்பு சம்பந்தமாக அவர்களுடைய நோக்கத்திற்கும் இந்தியர்களின் நோக்கத்திற்கும் வேற்றுமை இருக்கிறது. இந்தியாவில் உள்ள அரசியல் கட்சிகளிடம் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு நம்பிக்கை இல்லை. முக்கியமாக இந்தியாவை அடிமைத்தனத்தில் ஆழ்த்தி வைத்திருப்பதற்காகவே, இந்திய ராணுவம் பராமரிக்கப்பட்டு வருகிறது. சாதாரண மக்களிடமிருந்து ராணுவம் அறவே ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. எனவே, அந்த ராணுவத்தை இந்திய மக்கள் எவ்விதத்திலும் தங்களுடைய ராணுவம் என்று சொல்லிக்கொள்ள முடியாது. மக்களிடம் பிரிட்டனின் அவநம்பிக்கைக் கொள்கை இன்று தொடர்ந்து வருவதால், தேசீய தற்காப்பு நிர்வாகம் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்தியப் பிரதிநிதிகளிடம் ஒப்படைக்கப்படவில்லை."

24. அதன்பின் கீழ்க்கண்ட வாக்கியமும் தனியாகப் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. "இந்தியா விடுதலை செய்யப்பட்டால், ஜப்பானுடன் சமரசம் செய்துகொள்வதே அதன் முதன் வேலையாக இருக்கும்." ஆனால் மேற்கண்ட வாக்கியத்துடன் பின்கண்ட வாக்கியங்களையும் சேர்த்து வாசிக்க வேண்டும் :

"ஜப்பானிடமோ அல்லது மற்ற எந்த நாட்டினிடமோ இந்தியாவுக்கு பகை இல்லை என்று ஜப்பானிய அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் இந்தக் கமிட்டி உறுதி கூற விரும்புகிறது. எல்லா விதமான அந்நிய ஆதிக்கத்திலிருந்தும் விடுதலை பெறவேண்டும் என்று மாத்திரமே இந்தியா விரும்புகிறது. இந்த விடுதலைப் போராட்டத்தில் இந்தியா உலகத்தின் எந்த இடத்திலிருந்தும் அனுதாபத்தை வரவேற்கிறதெனினும், எந்த அந்நிய நாட்டிலிருந்தும் ராணுவ உதவியை விரும்பவில்லை. இந்தியா சாத்துவிக பலத்தின்மூலம் சுதந்திரம் பெறவும், பெற்ற சுதந்திரத்தைப் பாதுகாக்கவும் விரும்புகிறது. எனவே, இந்தியாமீது ஜப்பானுக்கு எவ்விதமான தீய நோக்கமும் இல்லையென இக் கமிட்டி நம்புகிறது. ஜப்பான் இந்தியாவைத் தாக்கினால், இந்தியாவின் வேண்டுகோளுக்கு பிரிட்டன் செவி சாய்க்காவிட்டால், காங்கிரசை வழிகாட்டியாகக் கருதும் எல்லோரும் ஜப்பானியப் படைகளுடன் ஒத்துழைக்க முற்றிலும் சாத்துவிகமான முறையில் மறுத்துவிட வேண்டும்; அவைகளுக்கு யாதொரு உதவியும் அளிக்கக் கூடாது.

இந்தச் சாதாரணமான சாத்துவிக ஒத்துழையாமைக் கொள்கையை அறிந்துகொள்வது கடினமானதல்ல.

1. ஆக்கிரமிப்பாளருக்கு நாம் அடி பணியக் கூடாது; அவர்களின் கட்டளைகளுக்கும் கீழ்ப்படியக் கூடாது.

2. அவர்களுடைய தயவை நாம் எதிர்பார்க்கக் கூடாது. லஞ்சம் கொடுப்பதுபோன்ற அவர்களுடைய வலையிலும் நாம் விழுந்துவிடக்கூடாது. எனினும், அவர்கள் மீது நமக்கு துவேஷமோ, தீய எண்ணமோ இருக்கக்கூடாது.

3. நமது வயல்களை அவர்கள் ஆக்கிரமித்துக்கொள்ள விரும்பினால், நாம் அவைகளை விட்டுக்கொடுக்க மறுத்துவிட வேண்டும். அம் முயற்சியில் நாம் இறப்பதாக இருந்தால்கூட அதைப் பொருட்படுத்தக் கூடாது.

4. ஆக்கிரமிப்பாளர்கள் நோயினால் துன்பத்திற்கு உள்ளாகியும், தாகம் தாங்க முடியாமலும் நமது உதவியை நாடுவார்களாயின், அச் சந்தர்ப்பத்தில் அவர்களுக்கு உதவியளிக்க நாம் மறுக்கக்கூடாது.

5. பிரிட்டிஷ் படைகளும் ஜப்பானியப் படைகளும் போரிடும் இடங்களில் நமது ஒத்துழையாமை அவசியமற்றது என்பதுடன், அதனால் பலனும் ஏற்படாது.

தற்போது பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் நமது ஒத்துழையாமை ஓர் எல்லைக்கு உட்பட்டதாக இருக்கிறது. அவர்கள் யுத்தம் செய்கையில் நாம் பூரண ஒத்துழையாமையை மேற்கொள்வோமாயின், நம்மை நாமே ஜப்பானியர்களின் கையில் ஒப்படைத்துக்கொண்டதாகிவிடும். நாம் பிரிட்டிஷாருக்கு தீவிரமான முறையில் உதவியும் அளிக்கக்கூடாது. அவர்களுடைய முயற்சியில் நாம் குறுக்கிடக்கூடாது என்பதைத் தவிர, பிரிட்டிஷார் நம்மிடமிருந்து யாதொரு உதவியையும் கோரவில்லை. அடிமைகள் என்ற முறையில் மாத்திரமே அவர்கள் நம்முடைய உதவியை விரும்புகிறார்கள். எனினும், இந்த நிலையை நாம் ஒரு காலத்திலும் ஒப்புக்கொள்ள முடியாது.

ஜப்பானியர்களுடன் ஒத்துழைக்க மறுப்பது, ஓர் எல்லைக்கு உட்பட்டதாகவே இருக்கும். ஒரு சிலரே அதில் கலந்துகொள்வார்கள். அவர்களுடைய ஒத்துழையாமை பூரணமானதாகவும் உண்மையானதாகவும் இருக்குமாயின், அது நிச்சயமாக வெற்றி பெறும். ஆனால் சுயராஜ்யத்தை உண்மையாக நிர்மாணிப்பது, இந்தியாவில் உள்ள கோடிக்கணக்கான மக்கள் ஆக்க வேலைகளை மனப்பூர்வமாக நிறைவேற்றுவதையே பொறுத்திருக்கிறது. அவ்விதம் செய்தாலன்றி, நாடு முழுவதும் நீண்ட காலத் துயிலிலிருந்து எழுவது முடியாத காரியம். பிரிட்டிஷார் இங்கேயே இருந்தாலும் சரி, இராவிட்டாலும் சரி, வேலையில்லாத் திண்டாட்டத்தை அடியோடு நீக்குவதும், பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் இடையே உள்ள ஏற்றத் தாழ்வை அகற்றுவதும், வகுப்புப் போராட்டத்தை ஒழிப்பதும், தீண்டாமைப் பேயை ஓட்டுவதும், கொள்ளைக்காரர்களைச் சீர்திருத்தி அவர்களிட

மிருந்து மக்களைக் காப்பாற்றுவதும் எப்போதுமே நமது கடமையாகும். இந்த தேச நிர்மாண வேலைகளில் கோடிக்கணக்கான மக்களும் நிரந்தரமான அக்கறை எடுத்துக்கொள்ளாவிடில், சுதந்திரம் ஒரு கனவாகவே இருந்துவருவதுடன், சாத்துவிகத்தினுலோ அல்லது பலாத்காரத்தினுலோ அதை அடைவதும் சாத்தியமில்லாமற் போய்விடும்.''

இதிலிருந்து எனது நிலையோ அல்லது காரியக் கமிட்டியின் நிலையோ ஜப்பானுக்கு சாதகமாகவும், பிரிட்டிஷாருக்கு விரோதமாகவும் இருக்கிறதென்று ஊகிப்பதற்கு இடமேயில்லை. அதற்கு மாருக, ஆக்கிரமிப்பை உறுதியுடன் எதிர்க்க வேண்டும் என்பதும், நேச தேசங்களின் நிலைபற்றிய கவலையுமே எங்களுடைய நிலையாகும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை நான் தீவிரமாக எதிர்ப்பது பற்றி ஆராய்ச்சி எதுவும் தேவையில்லை. நான் எழுதியிருப்பவைகளிலெல்லாம் அந்த எதிர்ப்பு தெளிவாகத் தெரிகின்றது.

25. ஆகஸ்டு 7, 8 தேதிகளில் நான் நிகழ்த்திய பிரசங்கங்களிலிருந்து சில பகுதிகளை மேற்கோளாகக் காட்டி இந்த விஷயத்தை முடிக்க நான் விரும்புகிறேன்.

''பிரிட்டிஷார் விஷயத்தில் உங்களுடைய நிலை என்ன என்ற ஒரு பிரச்னை இருக்கிறது. மக்களிடையே பிரிட்டிஷாரிடம் துவேஷம் நிலவுவதை நான் கவனித்திருக்கிறேன். பிரிட்டிஷாரின் நடவடிக்கை தங்களுக்கு வெறுப்பைக் கொடுப்பதாக அவர்கள் கூறுகின்றனர். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கும் பிரிட்டிஷ் மக்களுக்குமிடையே யாதொரு வேற்றுமையும் இருப்பதாக அவர்கள் கருதவில்லை. இரண்டும் ஒன்றுதான் என்று அவர்கள் கூறுகின்றனர். பிரிட்டிஷார் மீது மக்களுக்கு உள்ள துவேஷம் காரணமாக, அவர்கள் ஜப்பானியரைக் கூட வரவேற்கலாம். இத்தகைய மனநிலை மிகவும் அபாயகரமானது. இது ஒருவித அடிமைத்தனத்திற்குப் பதிலாக மற்றொரு அடிமைத்தனத்தை வரவேற்பதாகும். மக்கள் இத்தகைய உணர்ச்சியை விட்டுவிட வேண்டும். பிரிட்டிஷ் மக்களுடன் நமக்கு சண்டை எதுவுமில்லை. அவர்களுடைய ஏகாதிபத்தியத்தையே நாம் எதிர்த்துப் போராடி வருகிரும். பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் வெளியேற வேண்டும் என்ற யோசனை கோபம் காரணமாக எழுந்ததல்ல. தற்போதுள்ள நெருக்கடியான நிலையில் இந்தியா தனது நியாயமான பங்கைச் செய்ய வேண்டும் என்ற நோக்கம்தான் அத்தகைய யோசனைக்குக் காரணம். இந்தியா, விரும்பினுலும் விரும்பாவிட்டாலும், அதனிடமிருந்து பணத்தையும் சாதனங்களையும் வற்புறுத்திப் பெறும் ஒரு நிலைமை, இந்தியாவுக்கு மகிழ்ச்சி அளிக்கக் கூடியதல்ல. நமக்குச் சுதந்திரம் இராதவரையில், இது நமது யுத்தம் என்ற உணர்ச்சி நமக்கு ஏற்படாத வரையில், மக்களுக்கு தியாக உணர்ச்சியும் தீரமும் ஏற்படும்படி செய்வது முடியாத காரியம். நாம்போதிய அளவு தியாகம் செய்தால், இந்தி

யாவுக்கு சுதந்திரம் அளிக்காமல் பிரிட்டிஷார் காலம் கடத்த முடியாது என்பதை நான் அறிவேன். எனவே, நாம் துவேஷ உணர்ச்சியை அறவே விட்டுவிட வேண்டும். என்னைப் பொறுத்த மட்டில், நான் பிரிட்டிஷார் மீது எக்காலத்திலும் துவேஷம் கொண்டதில்லை. முன்பு எக்காலத்திலும் இருந்ததைக் காட்டிலும் இப்போதுதான் பிரிட்டிஷாருக்கு நான் சிறந்த நண்பனாக இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. இன்று அவர்கள் துன்பத்திற்குள்ளாகியிருப்பது, அதற்கான காரணங்களில் ஒன்றாகும். அவர்களுடைய தவறுகளிலிருந்து அவர்களைக் காப்பாற்ற நான் முயற்சிப்பதற்கு, அவர்களிடம் எனக்குள்ள நட்பே காரணமாகும். நிலைமையை நான் பார்க்கும்போது, அவர்கள் படுபாதாளத்தில் விழக்கூடிய நிலையில் இருந்துவருகிறார்கள். அந்த ஆபத்தைக் குறித்து அவர்களை எச்சரிக்க வேண்டியது எனது கடமையாக இருக்கிறது. எனது வாழ்க்கையிலேயே மாபெரும் போராட்டத்தை ஆரம்பிக்க நேரலாம் என்ற நிலையில், எனக்கு யார்மீதும் துவேஷம் இருக்கக்கூடாது. எதிராளியின் கஷ்டத்தைச் சாதகமாக உபயோகப்படுத்திக்கொண்டு அவனுக்கு அடிகொடுக்க முற்படுவது, எனக்கு முற்றிலும் வெறுப்பைக் கொடுக்கக்கூடிய ஒரு விஷயமாகும்.

"ஒரு விஷயத்தை நீங்கள் மனத்தில் உறுதியாக வைத்துக் கொள்ள வேண்டுமென நான் விரும்புகிறேன். அதாவது யுத்தத்தில் பிரிட்டிஷார் தோல்வியடைவார்கள் என ஒருபோதும் நம்பாதீர்கள். அவர்கள் கோழைகள் அடங்கிய ஒரு நாட்டினர் அல்ல என்பதை நான் அறிவேன். தோல்வியை ஒப்புக்கொள்ள அவர்கள் இணங்கமாட்டார்கள்; இறுதிவரையில் போராடியே தீருவார்கள். யுத்த தந்திர காரணங்களை முன்னிட்டு மலேயா, சிங்கப்பூர், பர்மா ஆகிய இடங்களிலிருந்து பிரிட்டிஷார் வெளியேறியதைப் போல இந்தியாவிலிருந்தும் வெளியேறுவதாக வைத்துக் கொள்ளுங்கள். அப்போது நமது நிலைமை எப்படி இருக்கும்? அப்போது ஜப்பானியர்கள் இந்தியாமீது படையெடுப்பார்கள். நாம் யாதொரு ஆயத்தமும் செய்யாமல் இருப்போம். ஜப்பானியர் இந்தியாவை ஆக்கிரமித்துக் கொண்டால், சீனா, ருஷ்யா ஆகிய இரு நாடுகளின் கதையும் முடிந்துவிடும். அந்த இரு நாடுகளின் தோல்விக்கும் நான் காரணமாக இருக்க விரும்பவில்லை. அதனால்தான், இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் வெளியேறிவிட வேண்டும் என்று நான் கூறுகிறேன். இவ்விதம் நான் கூறுவது, பிரிட்டிஷாருக்கு ஆத்திரத்தை உண்டாக்கலாம்; அவர்கள் என்னைத் தங்களுடைய விரோதி என்றும் நினைக்கலாம். எனினும் அவர்கள் என்னைத் தங்களுடைய உண்மையான ஒரு நண்பன் என்று கூறும் காலம் பின்னர் வரும்.

"எனவே சாத்தியமாயின், உடனடியாக, இன்றிரவே, நாளை உதயத்திற்கு முன் இந்தியாவுக்கு சுதந்திரம் அளிக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். இந்தியாவின் இந்த சாத்து

விகமான கோரிக்கைக்கு ஐக்கிய நாடுகள் செவி சாய்க்காவிடில் அது அவை செய்யும் ஒரு மாபெரும் தவருக முடியும்.''

பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் வெளியேற வேண்டும் என்று கேட்கும்படி நான் ஏன் காங்கிரசுக்கு ஆலோசனை கூறினேன் என்பதை, இந்த மேற்கோள்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம். அகிம்சையே, அதாவது சுய தியாகம், எதிர்க்காமல், பிறருக்குத் துன்பம் இழைக்காமல், தாங்கள் துன்பத்தை அனுபவிப்பது ஆகியவையே இந்த இயக்கத்தின் உயிர் நாடியாகும்.

எனது நடவடிக்கையால் உண்டாகும் சாத்துவிக சக்தி, இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் வெளியேறும்படி செய்வதற்குப் போதுமானது. அதுபோலவே அந்த சக்தி, இந்தியாவை ஜப்பானியர் ஆக்கிரமித்துக் கொள்வதைத் தடுக்கவும் வல்லமை வாய்ந்தது.

26. ஜப்பானியருக்கு நான் விடுத்த ஒரு வேண்டுகோளி லிருந்து கீழ்க்கண்ட ஒரு வாக்கியத்தை மாத்திரம் மேற்கோளாகக் கூறி, தமது வாதத்தை பலப்படுத்த அரசாங்க அறிக்கையின் ஆசிரியர் முயற்சித்துள்ளார்:

''பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்க்கும் விசேஷமான ஒரு நிலையில் நாங்கள் இருக்கிறோம். அதே சமயத்தில் உங்களுடைய (ஜப்பானியரின்) ஏகாதிபத்தியத்திலும், நாஜிஸத்திலும், எங்களுக்குள்ள வெறுப்பு அதைவிடக் குறைந்ததல்ல,''

இதற்கு அடுத்தாற்போல் உள்ள வாக்கியங்களை அவர், வேண்டுமென்றே விட்டுவிட்டார். கீழ்க்கண்ட, அந்த வாக்கியங்களையும் அவர் மேற்கோளாகக் காட்டியிருந்தால் அவை அவரது வாதத்தை பலப்படுத்தாததுடன், அது முற்றிலும் தவறு என்பதையும் காட்டியிருக்கும்:

''பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை நாம் எதிர்ப்பது, பிரிட்டிஷ் மக்களுக்கு அபாயத்தை உண்டு பண்ண வேண்டும் என்பதற்காக அல்ல. பிரிட்டிஷ் மக்களின் மனத்தை மாற்றவே நாம் விரும்புகிறோம். நம்முடைய இயக்கமானது, பிரிட்டிஷ் ஆட்சி முறையை எதிர்க்கும் ஆயுதமற்ற ஒரு புரட்சியேயாகும். நாட்டிலுள்ள ஒரு முக்கியமான கட்சி, அந்நிய ஆட்சியாளர்களுடன் இருப்பதா அல்லது இறப்பதா என்ற ஒரு போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறது. ஆனல் அது சிநேகபாவமான ஒரு போராட்டமே யாகும்.

''எனினும் இந்தப் போராட்டத்தில் இந்திய மக்கள் அந்நிய வல்லரசுகளின் உதவியை நாடவில்லை. நேச தேசங்களுக்கு தர்ம சங்கடமான நிலைமையை உண்டுபண்ண வேண்டும் என்பதற்காக, நீங்கள் இந்தியாவைத் தாக்கப்போகும் இந்தச் சந்தர்ப்பத்தை நாங்கள் தேர்ந்தெடுப்பதாக நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அது தவருகும். பிரிட்டனின் கஷ்டத்தை எங்களுக்

ருக் கிடைத்த சந்தர்ப்பமாக உபயோகப்படுத்திக்கொள்ள நாங்கள் விரும்பியிருந்தால், மூன்று ஆண்டுகளுக்கு முன் யுத்தம் ஆரம்பமானபோதே நாங்கள் அவ்விதம் செய்திருக்க வேண்டும். இந்தியாவின் சுதந்திரத்தில் உங்களுக்கு மிகுந்த அக்கறை இருப்பதாகக் கூறப்படுகிறது. இதை நாங்கள் நம்புவதாயின், இந்தியாவின் சுதந்திரத்தை பிரிட்டன் ஒப்புக்கொண்டுவிட்டால், பின்னர் இந்தியா மீது நீங்கள் படையெடுப்பதற்கு யாதொரு காரணமும் இல்லை. தவிர, சீனாவுக்கு விரோதமாக நீங்கள் மேற்கொண்டுள்ள இரக்கமற்ற ஆக்கிரமிப்பு, இந்தியாவின் சுதந்திரத்தில் உங்களுக்குள்ள அக்கறைக்கு நேர் முரணாக இருக்கிறது.

"இந்தியா மீது படையெடுத்து வரும்போது, இந்தியா உங்களை வரவேற்கும் என்று நீங்கள் நினைத்துக்கொண்டிருந்தால், அது வீண் மயக்கமாகவே முடியும். பிரிட்டிஷார் வெளியேற வேண்டும் என்பதன் நோக்கமும் இறுதி லட்சியமும், எத்தகைய ஏகாதிபத்திய ஆசையையும் எதிர்த்து நிற்க இந்தியாவைத் தயார் செய்வதே ஆகும்; பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமாயினும், ஜெர்மன் நாஜிஸமாயினும், அல்லது உங்களுடைய மாதிரியாயினும் அதை எதிர்ப்பதற்கு இந்தியாவைத் தயார் செய்வதே ஆகும். இந்தியாவின் சுதந்திரத்தைப் பிரகடனம் செய்யாவிடில், பலாத்காரத்தை ஒரு மதமாக உருவாக்கியிருக்கும் அச்சு நாடுகளின் கூட்டை நேச தேசங்கள் எதிர்த்து நிற்பது முடியாத காரியம். அதைவிட்டுவிட்டு, உங்களுடைய இரக்கமற்ற பலாத்கார முறைகளை நேச தேசங்களும் மேற்கொள்ளுமாயின், உலகத்தில் ஜனநாயகத்தையும், தனி நபர் சுதந்திரத்தையும், பாதுகாக்கப் போவதாக நேச தேசங்கள் கூறுவது அர்த்தமற்ற வெறும் கூற்றாகிவிடும்.

"நீங்கள் வெற்றி பெற்றாலும்கூட, அது உங்கள் கட்சிதான் நியாயமானது என்பதை ருசுப்பிப்பதாகாது; நேச தேசங்களைக் காட்டிலும் உங்களுக்கு அழிக்கும் சக்தி அதிகம் என்பதையே ருசுப்பிப்பதாகும். ஆசியா, ஆப்பிரிக்க மக்களையெல்லாம் அடிமைத்தனத்திலிருந்து விடுதலை செய்து அவர்களுக்கு சுதந்திரம் அளித்தாலன்றி, நேச தேசங்கள் பெறும் வெற்றியும், அவர்களுக்கு அழிக்கும் சக்தி அதிகம் என்பதையே காட்டுவதாகும்.

"நேச தேசத் துருப்புகளுக்கு இந்தியாவில் இடம் கொடுக்க சுதந்திர இந்தியா விரும்புகிறது என்று, பிரிட்டனுக்கு விடுத்த வேண்டுகோளில் நாங்கள் குறிப்பிட்டுள்ளோம். நேச தேசங்களின் லட்சியத்திற்கு எவ்வித அபாயமும் விளைவிக்க நாங்கள் விரும்பவில்லை என்பதும், பிரிட்டன் இந்தியாவைவிட்டு வெளியேறியதும் உங்களை (ஜப்பானியர்களை) வரவேற்க இந்தியா தயாராக இருக்கிறது என்று நீங்கள் எண்ணிவிடாமல் தடுக்க வேண்டும் என்பதுமே இந்த வேண்டுகோளின் நோக்கமாகும். பிரிட்டிஷார் வெளியேறியதும், இந்தியாவை ஆக்கிரமித்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் ஏதாவது உங்களுக்கு இருக்கு

மாயின், எங்களுடைய சக்தியையெல்லாம் உபயோகித்து நாங்கள் உங்களை எதிர்த்து நிற்கத் தவறமாட்டோம் என்பதை நான் மீண்டும் கூறவேண்டியது அவசியமில்லை. இந்தத் தியாகம், உங்களையும், உங்களுடைய பங்காளிகளையும் (ஜெர்மனி) கூட சரியான பாதையில் செலுத்தலாம் என்ற நம்பிக்கையுடனேயே இந்த வேண்டுகோளை அனுப்ப நான் முன் வந்துள்ளேன். இப்போது நீங்கள் மேற்கொண்டுள்ள இரக்கமற்ற பலாத்காரப் பாதை, உங்களுடைய ஆன்மிக அழிவிலும், மானிடர்களை வெறும் யந்திரங்களாகச் செய்வதிலும் வந்து முடியும்.

"எனது வேண்டுகோளுக்கு ஒருவேளை பிரிட்டன் செவி சாய்க்கலாம்; ஆனால் நீங்கள் செவிசாய்ப்பீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு மிகக் குறைவாகவே இருக்கிறது. பிரிட்டிஷார் நீதி உணர்ச்சி அற்றவர்கள் அல்ல என்பதை நான் அறிவேன். அவர்களும் என்னை அறிவார்கள். ஆனால் உங்களைப் பற்றித் தீர்ப்புக் கூற முடியாத நிலையில் நான் இருக்கிறேன். உங்களைப் பற்றி நான் வாசித்ததிலிருந்து தெரிந்துகொண்டது இதுதான்: நீங்கள் வேண்டுகோள் எதற்கும் செவிசாய்ப்பதில்லை; கத்தி ஒன்றுக்குத் தான் செவி கொடுப்பீர்கள்!

"ஆனால், உங்களைப் பற்றிய அந்தக் கருத்து தவறென்றும், உங்கள் உள்ளத்தை மாற்ற முடியும் என்றுமே நினைக்க நான் விரும்புகிறேன்! எனினும் மனித இயல்பில் எனக்கு அழியாத நம்பிக்கை உண்டு. அந்த நம்பிக்கையின் பலத்தை அடிப்படையாகக்கொண்டே இந்தியாவில் ஆரம்பிக்கப்போகும் இயக்கத்தை நான் உருவாக்கியிருக்கிறேன். அந்த நம்பிக்கைதான், உங்களுக்கு இந்த வேண்டுகோளை விடுக்கும்படி என்னைத் தூண்டியிருக்கிறது."

இவ்வளவு நீண்ட மேற்கோளை நான் கொடுத்திருப்பதற்குக் காரணம், அந்த அறிக்கையைத் தயாரித்தவரின் கூற்றுக்கு இது மறைமுகமான பதிலாக இருக்க வேண்டும் என்பதேயாகும். சென்ற ஆகஸ்டு 8-இல் நிறைவேறிய தீர்மானத்திற்கிணங்க நான் உத்தேசித்த இயக்கத்தைப் பற்றி என் மன நிலையை முற்றிலும் அறிந்துகொள்வதற்கும் இது உதவியாக இருக்கும். எனினும், அறிக்கையின் ஆசிரியர் அவரது அம்புறாத் தூணியில் என்னைத் தாக்குவதற்கான பல பாணங்களை வைத்திருக்கிறார். ஜப்பானியரின் கோரிக்கைகளுக்கு நான் இணங்கத் தயாராக இருப்பதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார். அவ்விஷயமாக அவர் கூறுவதாவது:

"ஒருவித உணர்ச்சியின் ஆதிக்கம் காரணமாகவே ஜப்பானியரின் கோரிக்கைகளுக்கு விட்டுக்கொடுக்கும் யோசனை அவர் மனத்தில் உதித்திருக்க வேண்டும். பயங்கரமான யுத்தத்திலிருந்து இந்தியாவைப் பாதுகாக்க வேண்டும் என்ற அவரது ஆர்வமே அத்தகைய உணர்ச்சிக்குக் காரணம் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை."

மற்றொரு விதமாகக் கூறுவதாயின், பிரிட்டிஷ் ஆட்சிக்கு மாற்றாக நான் ஜப்பானிய ஆட்சியை வரவேற்பேன் என்பதே அதன் அர்த்தமாகும். ஆனால், எனது அகிம்சை அவ்வளவு அற்பமானதல்ல. பயங்கரங்களுக்கெல்லாம் பயங்கரமான பிரிட்டிஷ் ஆதிக்கத்திற்கு முடிவு கட்டுவதற்காக எத்தகைய பயங்கரமான யுத்தத்தையும் எதிர்த்துச் சமாளிக்க நான் தயாராக இருக்கிறேன் என்று 'ஹரிஜனி'ல் தெளிவாக எழுதியிருந்தும்கூட, காமாலைக் கண்ணால் பார்ப்பவர்களே நான் மேற்கண்ட விதம் உணர்ச்சி வசப்பட்டவன் என்று கூறமுடியும். பிரிட்டிஷ் ஆதிக்கத்தைப் போலவே வேறு எந்த அந்நிய ஆதிக்கத்தையும் நான் சகிக்க முடியாது. என் மனத்தில் ஆதிக்கம் செலுத்தும் ஒரே உணர்ச்சி, இந்தியா சுதந்திரம் பெறவேண்டும் என்பதுதான், வேறு எதுவும் அல்ல.

27. அரசாங்க அறிக்கையின் 14-ஆம் பக்கத்தில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது :

"ஜூலை 14வ காரியக் கமிட்டியில் தீர்மானம் நிறைவேறிய பிறகு வார்தாவில் நடந்த பத்திரிகைப் பிரதிநிதிகள் மகாநாட்டில் ஸ்ரீ காந்தி கூறிய கீழ்க்கண்ட பிரபல வார்த்தைகள், அப்போதே இறுதிப் போராட்டத்தை ஆரம்பிக்க அவர் தீர்மானித்துவிட்டார் என்பதைக் காட்டுகின்றன. 'பிரிட்டிஷார் வெளியேற வேண்டும் என்ற யோசனை சம்பந்தப்பட்டவரையில் சமரசத்திற்கே இடமில்லை. இனி, மேற்கொண்டு ஒரு சந்தர்ப்பம் அளிப்பதென்ற பேச்சிற்கும் இடமில்லை. ஏனெனில் இது பகிரங்கமான ஒரு புரட்சியே யாகும்.' "

நான் கூறியதாகச் சொல்லப்படும் பிரபல "வார்த்தைகள்," வார்தாவில் நான் அளித்த பேட்டியின் உண்மையான விவரங்களுக்கு நேர்முரணாக இருக்கின்றன. அவ்விவரங்கள் 1942 ஜூலை 19வ 'ஹரிஜனில்' வெளியாகியிருக்கின்றன. வார்தா பேட்டியின் முழு விவரங்களையும் கீழே கொடுத்திருக்கிறேன்.

**கேள்வி :** பிரிட்டிஷ் அரசாங்கம் சமரசப் பேச்சு வார்த்தைகளை ஆரம்பிக்கும் என்று நீங்கள் நம்புகிறீர்களா ?

**பதில் :** அவர்கள் பேச்சு வார்த்தைகளை ஆரம்பிக்கலாம். ஆனால் யாருடன் ஆரம்பிப்பார்கள் என்பதுதான் எனக்குத் தெரியவில்லை. இந்தக் கட்சியையோ அல்லது அந்தக் கட்சியையோ சமாதானப்படுத்துவது என்ற பேச்சிற்கு இடமில்லை. எந்தக் கட்சியின் விருப்பத்தையும் கேட்காமல் பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் யாதொரு நிபந்தனையுமின்றி வெளியேற வேண்டும் என்பதே எங்களுடைய கோரிக்கையாகும். எங்களுடைய கோரிக்கை நீதியை அடிப்படையாகக் கொண்டது. வெளியேறும் விஷயமாக பிரிட்டிஷார் சமரசப் பேச்சுகளை ஆரம்பிக்குமாயின், அது அவர்களுக்குப் பெருமையையே அளிக்கும். காலம் கடந்துவிட்டாலும்கூட, பல்வேறு கட்சிகளின் அபிப்பிராயத்தை கேட்டுக்கொண்டிராமல் பிரிட்டிஷாருக்கு இப்போதாவது

இந்தியாவின் சுதந்திரத்தை அங்கீகரிக்கும் ஞானம் ஏற்பட்டு விட்டால், எதுவும் சாத்தியமே. ஆனால் ஒரு விஷயத்தை மாத்திரம் நான் வற்புறுத்திக்கூற விரும்புகிறேன். அதாவது, வெளியேற வேண்டும் என்ற யோசனையில் சமரசத்திற்கு இடமில்லை! அவர்கள் இந்தியாவின் சுதந்திரத்தை அங்கீகரிக்கிறார்களா? அல்லது அங்கீகரிக்கவில்லையா என்பதே கேள்வி. அங்கீகரித்தால் அதைத் தொடர்ந்து பல சம்பவங்கள் நிகழும். அந்த ஒரே ஒரு நடவடிக்கையால், பிரிட்டிஷார் இந்தியாவின் நிலையையே அடியோடு மாற்றியவர்களாவர்; மக்களுக்கு நம்பிக்கையும் ஏற்படும்படி செய்தவர்களாவர். மக்களின் நம்பிக்கை எண்ணிக்கையற்ற தடவைகளில் பாழ்படுத்தப்பட்டிருக்கிறது. பிரிட்டிஷ் மக்களின் சார்பில் அந்த மகத்தான நடவடிக்கையை மேற்கொள்ளுவார்களாயின் அதாவது இந்தியாவுக்கு சுதந்திரம் அளிப்பார்களாயின், இந்தியாவின் சரித்திரத்திலும், உலக சரித்திரத்திலும் அது ஒரு சுபதினமாக இருக்கும். நான் ஏற்கனவே கூறியதைப் போல, யுத்தத்தின் போக்கையே அது பெரிதும் மாற்றக்கூடும்."

—'ஹரிஜன்' – 19—7—1942

ஆனால் மேலே அரசாங்க அறிக்கையில் குறிப்பிட்டுள்ள வாக்கியங்கள் 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்டவை என்பதை நான் பின்னர் தெரிந்து கொண்டேன். 'ஹரிஜன்' பத்திரிகையில் நான் விவரமாகவும் தெளிவாகவும் குறிப்பிட்டிருக்கும்போது, அரசாங்க அறிக்கையைத் தயாரித்தவர் 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' பத்திரிகையில் தவறாக வெளியாகியுள்ள வாக்கியங்களை மேற்கோளாகக் காட்டியிருப்பது விந்தையாக இருக்கிறது.

28. தவறான அந்த மேற்கோளை அடிப்படையாகக்கொண்டு அரசாங்க அறிக்கையில் கூறப்பட்டுள்ள வாதங்களும், முடிவுகளும், ஊகங்களும் அர்த்தமற்றவையாகி விடுகின்றன. எனவே, அரசாங்கத்தின் அவசர புத்தி காரணமாக ஒரு நெருக்கடி ஏற்பட்டது மாத்திரமல்ல, முன்பின் யோசனையின்றி அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகளால் அவர்கள் நெருக்கடியை வரவேற்றிருக்கிறார்கள். இந்தியா முழுவதும் ஏராளமானவர்களைக் கைது செய்வதற்காகப் பரந்த முறையில் அவர்கள் மேற்கொண்ட நடவடிக்கைகள் திடீரென்று ஒரே நாளில் எடுத்துக் கொள்ளப்பட்டவை அல்ல. சென்ற ஆகஸ்டு 8-ஆம் தேதி நிறைவேறிய தீர்மானத்தினால் இயக்கம் ஆரம்பிக்கப்படவில்லை. நான் நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கு முன்பே என்னையும் இந்தியா முழுவதும் உள்ள முக்கியமான காங்கிரஸ் வாதிகளையும் அதிகாரிகள் கைது செய்துவிட்டார்கள். இவ்விதமாக இயக்கத்தை ஆரம்பித்தது அரசாங்கமேயன்றி, நான் அல்ல. அரசாங்கம் அவ்விதம் செய்ததன் மூலம் நான் கனவிலும் எண்ணாத விதத்தில் இயக்கத்திற்கு உருவம் கொடுத்துவிட்டார்கள்.

'இயக்கம் சுருக்கமாகவும் மிகவும் தீவிரமாகவும் இருக்கும்' என்று நான் கூறியதாகவும் அரசாங்க அறிக்கை கூறுகிறது. ஆனால், அந்த அறிக்கையைத் தயாரித்தவர் கூறுவதைப் போல் அது பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்டிராது ; அகிம்சையையே அடிப்படையாகக் கொண்டிருக்கும். எனினும், அரசாங்கம் மேற்கொண்ட கடுமையான பலாத்கார நடவடிக்கைகளால், இயக்கம் மின்னல் வேகத்தில் நடைபெறும்படி செய்து விட்டார்கள். எனக்கு மூச்சுவிட அவர்கள் இடைவெளி அளித்திருந்தால், நான் வைஸ்ராயை பேட்டி கண்டிருப்பேன் ; காங்கிரஸ் கோரிக்கையின் நியாயத்தை எடுத்துக் காட்டப் பெரு முயற்சி செய்திருப்பேன்,

29. நான் எழுதியவற்றிலிருந்தும் பேசியவற்றிலிருந்தும் சில பகுதிகளை நான் கீழே கொடுத்துள்ளேன். தகராறைத் தவிர்க்கவும், சமரசமாக நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளவும், நேச தேசங்களின் முயற்சிக்கு ஒருபோதும் முட்டுக்கட்டையாக இருக்கக்கூடாது என்ற காங்கிரசின் நோக்கத்தை எடுத்துக் காட்டவும் நான் எவ்வளவு ஆர்வத்துடன் இருந்தேன் என்பதை அவை நிரூபிப்பதாக இருக்கின்றன. "நாங்கள் யாருடனும் பேச விரும்பவில்லை. எங்களுடைய நெஞ்சுறுதியினால் நாங்கள் பிரிட்டிஷாரை வெளியேற்ற முடியும்" என்று நாம் கூறினால், அது முரட்டுத் தனமாகவும் கண்ணியமற்றதாகவும் இருக்கும். பின்னர் காங்கிரஸ் கமிட்டியின் கூட்டம் இராது; தீர்மானங்களும் இரா; நானும் பத்திரிகைப் பிரதிநிதிகளைப் பார்க்க வேண்டிய அவசியம் இராது."

—' ஹரிஜன் ' – 26—7—1942

**கேள்வி :** சுதந்திரம் சம்பந்தப்பட்டவரையில் சமரசத்திற்கு இடமில்லையா ?

**பதில் :** இல்லை, சுதந்திரத்தைப் பொறுத்தமட்டில் சமரசப் பேச்சிற்கே இடமில்லை. முக்கியப் பிரச்னையான சுதந்திரம் பொதுவான லட்சியமாகக் கருதப்படவேண்டும். அப்போது தான் இந்திய-பிரிட்டிஷ் பிரச்னைகள் சம்பந்தமாக சமரசப் பேச்சு சாத்தியமாகும். சமரசப் பேச்சு நடைபெற வேண்டுமாயின், முதலில் இந்தியாவின் சுதந்திரம் அங்கீகரிக்கப்பட வேண்டும்.

—' ஹரிஜன் ' – 24—5—1942

"போராட்டம் இன்றே ஆரம்பமாகிவிடாது. என் கையில் சில அதிகாரங்களை நீங்கள் ஒப்படைத்திருக்கிறீர்கள். வைஸ்ராயைப் பார்த்து, காங்கிரசின் கோரிக்கையை அங்கீகரிக்கும்படி அவரை வேண்டிக் கொள்வதே எனது முதல் நடவடிக்கையாக இருக்கும். இதற்கு இரண்டு அல்லது மூன்று வாரங்கள் செல்லலாம். அதற்கிடையே நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள் ? என்ன செய்ய வேண்டும் என்பதை நான் கூறுகிறேன்; உங்க

ளிடம் ராட்டினம் இருக்கிறது. அகிம்சைப் போராட்டத்தில் ராட்டினத்திற்கு நிரந்தரமான இடம் உண்டு என்பதை மௌலானு சாகிப் உணர்ந்து கொள்ளும்படி செய்ய நான் கடுமை யான முயற்சிசெய்ய வேண்டியிருந்தது. 14 அம்சங்கள் அடங்கிய ஆக்க வேலைத் திட்டம் உங்கள் முன்னிலையில் இருக்கிறது. அதை நீங்கள் நிறைவேற்ற முற்படலாம். இதைக் காட்டிலும் முக்கிய மாக நீங்கள் செய்ய வேண்டிய காரியம் ஒன்றிருக்கிறது. அது தான் ஆக்கத் திட்டத்திற்கு உயிர் அளிக்கக் கூடியது. உங்களில் ஒவ்வொருவரும் இந்த விநாடியிலிருந்து சுதந்திரமுள்ளவராகக் கருதவேண்டும்; ஏகாதிபத்தியத்தின் காலடியிலிருந்து விடுதலை யடைந்து விட்டதாகக் கருதி செயல் புரிய வேண்டும். இது வெறும் பகட்டு வார்த்தையல்ல. உண்மையிலேயே சுதந்திரம் வருவதற்கு முன் நீங்கள் சுதந்திர உணர்ச்சியை வளர்த்துக் கொள்ளவேண்டும். ஓர் அடிமை தன்னை சுதந்திரமுள்ளவனுக நினைக்கும் அந்த விநாடியிலேயே அவனது விலங்குகள் தூள் தூளாகிவிடுகின்றன. 'இனிமேல் நான் எனது உணவுக்கும், உடைக்கும் உங்களை நம்பிக்கொண்டிருப்பதற்குப் பதிலாக கடவுளையே நம்பிக்கொண்டிருக்கப் போகிறேன். கடவுள் எனக்கு சுதந்திர ஆர்வத்தைக் கொடுத்திருக்கிறுர். எனவே நான் என்னை ஒரு சுதந்திர மனிதனுகவே கருதுகிறேன்,' என்று அவன் கூறி விடுகிறுன்.

"மந்திரி பதவிகளுக்காகவோ அல்லது வேறு சலுகைகளுக் காகவோ நான் வைஸ்ராவுடன் பேரம் பேசப்போவதில்லை. பூரண சுதந்திரத்திற்குக் குறைந்த எதுவும் எனக்குத் திருப்தி அளிக்கப் போவதில்லை. உப்பு வரியையும், மதுபானத் தீமையையும் ஒழிப்பதாக வைஸ்ராய் கூறினுலும் கூட. "சுதந்திரத்திற்குக் குறைந்த எதுவும் எனக்குத் திருப்தி அளிக்காது" என்று நான் சொல்லிவிடுவேன்.

"ஒரு சுருக்கமான மந்திரத்தை உங்களுக்குக் கூறுகிறேன். அதை நீங்கள் உங்களுடைய இருதயத்தில் பொறித்துக் கொள்ள லாம். அந்த மந்திரம் இதுதான்: 'ஒன்று நாங்கள் இந்தியா விடுதலை பெறும்படி செய்வோம். இல்லாவிடில் அம் முயற்சியில் மாள்வோம். நாட்டின் அடிமைத்தனம் நீடிப்பதைப் பார்க்க நாங்கள் உயிர்வாழ மாட்டோம்.'

"உண்மையான ஒவ்வொரு காங்கிரஸ் ஆடவரும் பெண்ணும் தளரா உறுதியுடன் போராட்டத்தில் ஈடுபடுவதாகப் பிரதிக்ஞை செய்து கொள்ளவேண்டும். சிறைகளை உங்களுடைய உள்ளத்தி லிருந்து அகற்றிவிடுங்கள். அரசாங்கம் என்னை சுதந்திரமாக விட்டுவைக்குமாயின், சிறைகளை நிரப்பும் கஷ்டத்தை உங்களுக்கு நான் கொடுக்கமாட்டேன். அரசாங்கம் சங்கடமான நிலையி லிருக்கும் இச்சமயத்தில், ஏராளமான கைதிகளைப் பராமரிக்கும் செலவை அரசாங்கத்திற்கு நான் கொடுக்கமாட்டேன். எனவே, இனி ஒவ்வொருவரும் தாங்கள் நாட்டின் சுதந்திரத்திற்காகவே

உண்பதாகவும், வாழ்வதாகவும் கருதவேண்டும். அந்த லட்சியத்தை அடையும் முயற்சியில் இறக்கவும் தயாராக இருக்க வேண்டும். சுதந்திரம் பெறும் வரையில் ஒய்வு எடுத்துக் கொள்வதில்லை என்று நீங்கள் கடவுளின் முன்னிலையில் பிரதிக்ஞை செய்து கொள்ள வேண்டும். உங்கள் மனச் சாட்சியே அதற்குச் சாட்சியாக இருக்கும். தேசத்திற்காக யார் உயிரை இழக்கிருரோ அவர்தான் வாழ்கிருர்; எப்பாடுபட்டாயினும் உயிரைப் பாதுகாக்க முற்படுபவர் உயிரை இழக்கிருர். சுதந்திரம் கோழை உள்ளம் படைத்தவர்களுக்குக் கிடைப்பதில்லை.''

(ஆகஸ்டு 8வ அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் முடிவுரையே மேலே கொடுக்கப் பட்டுளது.)

30 அரசாங்க அறிக்கையின் 11-ஆவது பக்கத்தில் பின் வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது:

''சுருக்கமாகக் கூறுவதாயின், ஜப்பானை எதிர்த்து இந்தியாவைப் பாதுகாக்க அகிம்சை மாத்திரம் போதாது என்பதே ஸ்ரீ காந்தியின் நம்பிக்கையாகும். இந்தியாவைப் பாதுகாக்கும் விஷயமாக நேச தேசங்களுக்குள்ள சக்தியிலும் அவருக்கு நம்பிக்கையில்லை. இந்தியாவைப் பாதுகாக்கும் வல்லமை பிரிட்டனுக்கு இல்லை என்றும் அவர் கூறியிருக்கிருர். இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் வெளியேறியதும் இந்தியாவில் ஒரு தற்காலிக அரசாங்கம் ஏற்பட வேண்டும் என்பதே அவரது நோக்கமாகும். அத்தகைய அரசாங்கமோ அல்லது அராஜகமோ ஏற்படுமென்றும் அவர் ஒப்புக் கொண்டிருக்கிருர். இந்திய ராணுவமும் கலைக்கப்பட வேண்டுமாம். ஆனல் தற்காலிக அரசாங்கம் விதிக்கும் நிபந்தனைகளின் கீழ் நேச தேசப் படைகள் செயல்பட அனுமதிக்க வேண்டும் என்றும் ஸ்ரீ காந்தி கூறியுள்ளார். அச் சந்தர்ப்பத்தில் இந்தியா ஜப்பானுக்கு எதிராக சாத்விக ஒத்துழையாமையில் ஈடுபடுமாம். அந்த தற்காலிக அரசாங்கம் பல்வேறு பிரிவினைகளின் பிரதிநிதி ஸ்தாபனமாக இருக்குமாதலால், தற்காலிக அரசாங்கத்தின் எதிர்கால நடவடிக்கைகளைப் பற்றி காங்கிரசோ அல்லது ஸ்ரீ காந்தியோ திட்டமாக எதுவும் கூறமுடியாது என்பது தெளிவாகும். அதாவது ஜப்பானை எதிர்த்து நின்று இந்தியாவைப் பாதுகாக்க நேச தேசங்களுக்கு அந்த அரசாங்கம் ஆதரவளிக்கும் என்று அவர்கள் உறுதி கூறமுடியாது. தற்காலிக அரசாங்கத்தில் காங்கிரசின் ஆதிக்கமே இருக்கும் என்பது அவர்களுடைய உத்தேசமாக இருந்தாலொழிய, அந்த அரசாங்கத்தின் சார்பில் காங்கிரசோ, ஸ்ரீ காந்தியோ எதுவும் உறுதி கூற முடியாது. ஆனல் அந்த அரசாங்கத்தில் காங்கிரசின் ஆதிக்கமே, காங்கிரஸ் ஹிந்துக்களின் ஆதிக்கமே இருக்கும் என்று முஸ்லிம் லீகும், பொதுவாக முஸ்லிம்களும் கருதுகிருர்கள்; அத்தகைய ஒரு கோஷ்டியின் ஆதிக்கத்தில் உள்ள ஒரு அரசாங்கத்தின் ஆதரவை நேச தேசத் துருப்புகள் நம்பிக்கொண்டிருக்கும்படியான ஒரு நிலைமை ஏற்படும். அத்தகைய ஒரு கோஷ்டியின் தோல்வி மனப்பான்மையும், ஜப்பானுடன் சமரசம் செய்துகொள்ளவேண்டும் என்பதே அதன் தலைவரின் நோக்கம் என்பதும் ஏற்கனவே எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன.''

அரசாங்க அறிக்கையின் சுருக்கமான இந்தப் பகுதி, நான் கூறியவற்றிற்கெல்லாம், எழுதியவற்றிற்கெல்லாம் நேர்மாருக

இருக்கிறது; காங்கிரசின் கொள்கைக்கும், ஆகஸ்டு மாதம் 8ல் நிறைவேறிய தீர்மானத்தில் அடங்கியுள்ள விவரங்களுக்கும் நேர் மாருக இருக்கிறது. எனவே, மேலே குறிப்பிட்டுள்ள மேற்கோள் களை அடிப்படையாகக் கொண்டு எனது கருத்துகளை இங்கே சுருக்கமாகக் கொடுக்கிறேன்:

1. ஜப்பானை மாத்திரமல்ல, உலகம் முழுவதை யுமே எதிர்த்து நின்று இந்தியாவைப் பாதுகாக்கக் கூடிய சக்தி அகிம்சைக்கு மாத்திரமே உண்டு என்பதே எனது நம்பிக்கை யாகும்.

2. அந்நியர் ஆதிக்கத்திலிருந்து இந்தியாவைப் பாது காக்கும் சக்தி பிரிட்டனுக்கு இல்லை என்பதே எனது உறுதியான அபிப்பிராயம். இன்று பிரிட்டன் இந்தியாவின் தற்காப்பிற்காக அல்ல, தன்னுடைய தற்காப்பிற்காகவே யுத்தம் செய்து கொண் டிருக்கிறது; இந்தியாவிலும் மற்ற இடங்களிலும் உள்ள தன் சொந்த நலன்களைப் பாதுகாக்கவே போர் செய்து கொண்டிருக் கிறது. பெரும்பாலும் பிரிட்டனின் நலன்கள் இந்தியாவின் நலன் களுக்கு முரணானவை.

3. பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் வெளியேற வேண்டும் என்பதும், அதே சமயம் ஒரு தற்காலிக அரசாங்கம் ஏற்பட வேண்டும் என்பதுமே, "இந்தியாவிலிருந்து வெளியேறுக" என்ற இயக்கத்தின் நோக்கமாகும். பிரிட்டிஷார் சம்மதித்து இந்தியாவிலிருந்து வெளியேறுவார்களாயின், முக்கியமான எல் லாக் கட்சிகளின் பிரதிநிதிகளும் அடங்கிய அரசாங்கம் ஏற்படும். நிர்ப்பந்தம் காரணமாக பிரிட்டிஷார் வெளியேறுவார்களாயின், சிறிது காலம் வரையில் இந்தியாவில் அராஜக நிலை ஏற்படலாம்.

4. இந்திய ராணுவம் பிரிட்டிஷாரின் சிருஷ்டியாதலால், அது கலைக்கப்பட வேண்டியது இயல்பேயாகும். இல்லாவிடில், அந்த ராணுவம் சுதந்திர இந்திய அரசாங்கத்தினிடம் விசுவாசப் பிரமாணம் செய்து கொள்ளலாம்.

5. நேச தேசங்களுக்கும் சுதந்திர இந்திய அரசாங்கத்திற் கும் இடையே ஏற்படும் ஒப்பந்தத்தில் உள்ள ஷரத்துகளின் கீழ் நேச தேசத் துருப்புகள் இந்தியாவில் இருக்கலாம்.

6. இந்தியா சுதந்திரம் பெற்றால், தன்னால் இயன்றவரையில் ராணுவ உதவி அளிப்பதன் மூலம் ஒத்துழைக்கும். எனினும் ராணுவ உதவி சாத்தியமில்லாத இந்தியாவைச் சேர்ந்த பெரும் பகுதியிலும், மக்கள் மிகுந்த உற்சாகத்துடன் சாத்துவிக நடவடிக் கைகளை மேற்கொள்வார்கள்.

31. தற்காலிக அரசாங்கம் சம்பந்தப்பட்டவரையில் காங் கிரஸ் தீர்மானமே நிலைமையைத் தெளிவுபடுத்தியிருக்கிறது. அத் தீர்மானத்தின் முக்கியமான பகுதிகளைக் கீழே கொடுத்துள் ளேன்:

"இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் வெளியேறி விட வேண்டும் என்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி மீண்டும் வற்புறுத்திக் கூறுகிறது. இந்தியாவின் சுதந்திரம் பிரகடனம் செய்யப்பட்டதும், ஒரு தற்காலிக அரசாங்கம் அமைக்கப்படும். பின்னர் சுதந்திர இந்தியா ஐக்கிய நாடுகளின் நேசதேசமாகிவிடும்; சோதனைகளையும் யுத்தத்தில் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களையும், அந்த நாடுகளுடன் பகிர்ந்து கொள்ளும். தேசத்திலுள்ள முக்கிமான கட்சிகள் கோஷ்டிகளின் ஒத்துழைப்பின் மீதே தற்காலிக அரசாங்கத்தை அமைக்க முடியும். அவ்விதமாக அது, இந்திய மக்களின் முக்கியமான பிரிவினர்களுடைய பிரதிநிதிகள் அடங்கிய ஒரு கூட்டு அரசாங்கமாக இருக்கும். நேச தேச வல்லரசுகளுடன் சேர்ந்து ஆயுத பலம், சாத்துவிக பலம் எல்லாவற்றையும் உபயோகித்து ஆக்கிரமிப்பை எதிர்ப்பதும், இந்தியாவைப் பாதுகாப்பதுமே கூட்டு அரசாங்கத்தின் முழு முதற் கடமையாக இருக்கும். வயல்களிலும், தொழிற்சாலைகளிலும், பிறவிடங்களிலும் வேலை செய்யும் தொழிலாளர்களின் நலனை அபிவிருத்தி செய்வதும் அரசாங்கத்தின் முதற் கடமையாக இருக்கும். ஏனெனில், முக்கியமாக எல்லா அதிகாரங்களும் அவர்கள் கையிலேயே இருக்க வேண்டும். அரசியல் நிர்ணய சபையை அமைப்பதற்கான ஓர் திட்டத்தை அந்த அரசாங்கம் உருவாக்கும். அரசியல் நிர்ணய சபை, எல்லாப் பிரிவினரும் ஒப்புக் கொள்ளக் கூடிய விதத்தில் ஓர் அரசியல் திட்டத்தைத் தயாரிக்கும். இந்தியாவுக்கும் நேச தேசங்களுக்கும் இடையே இருக்க வேண்டிய எதிர்கால உறவுகளை, எல்லா சுதந்திர நாடுகளின் பிரதிநிதிகளும் சேர்ந்து பரஸ்பர நலனையும் ஆக்கிரமிப்பை எதிர்க்கும் பொதுவான லட்சியத்தையும் அடிப்படையாகக் கொண்டு முடிவு செய்வார்கள். மக்கள் ஏகோபித்து உறுதியுடனும் பலத்துடனும் பலன் தரத்தக்க விதத்தில் ஆக்கிரமிப்பை எதிர்த்து நிற்பதற்கு சுதந்திரம் உதவியாக இருக்கும். ஆட்சி அதிகாரத்தை கைப்பற்ற வேண்டும் என்ற நோக்கம் காங்கிரசுக்கு இல்லை என்பதை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி சந்தேகத்துக்கு இடமின்றி தெளிவாகக் கூற விரும்புகிறது. ஆட்சி அதிகாரம் வரும்போது, அது இந்தியாவிலுள்ள எல்லா மக்களுக்கும் சொந்தமானதாக இருக்கும்."

மேற்கண்ட கடைசி வாக்கியங்கள், காங்கிரசின் அந்தரங்க சுத்தியையும், கட்சிச் சார்பற்ற தன்மையையும் விளக்குகின்றன. இந்தியாவிலுள்ள சகல கட்சிகளும் பாசிஸத்திற்கும், நாஜிஸத்திற்கும், ஜப்பானுக்கும் விரோதமானவை. எனவே அத்தகைய கட்சிகளின் பிரதிநிதிகளுடன் அமையும் அரசாங்கம் நேச தேசங்களின் லட்சியத்தை உற்சாகத்துடன் ஆதரிக்கும் என்பது நிச்சயம். இந்தியாவின் சுதந்திரத்தை அங்கீகரிப்பதன் மூலம், நேச தேசங்களின் லட்சியம் உண்மையான ஜனநாயக லட்சியமாக இருக்கும்.

32. காங்கிரஸ் ஆரம்பமானதிலிருந்து சமூக ஒற்றுமையே காங்கிரஸ் திட்டத்தின் முக்கிய அம்சங்களில் ஒன்றாக இருந்து

வந்திருக்கிறது. உலகப் பிரசித்தி பெற்ற, முக்கியமாக முஸ்லிம் உலகத்தில் புகழ் பெற்ற ஒரு முஸ்லிம் பெரியாரே காங்கிரசின் தலைவராக இருந்து வருகிறார். அவரைத் தவிர, காரியக் கமிட்டியிலும் மூன்று முஸ்லிம்கள் இருக்கிறார்கள். அப்படியிருக்க, அரசாங்க அறிக்கையின் ஆசிரியர் முஸ்லிம் லீகின் அபிப்பிராயத்தை தமக்குச் சாதகமாகக் குறிப்பிட்டிருப்பது விந்தையாக இருக்கிறது. ஹிந்துக்களின் ஆதிக்கத்தை ஸ்தாபிப்பதே காங்கிரசின் நோக்கமென்று முஸ்லிம் லீக் குற்றம் சாட்டலாம். ஆனால் மகாவல்லமை பொருந்திய இந்திய அரசாங்கம் முஸ்லிம் லீகின் அபிப்பிராயத்தை ஒரு சாக்காகக் குறிப்பிட முற்பட்டிருப்பது, அதன் கௌரவத்திற்கு உகந்ததன்று. இதில், 'பிரித்து ஆட்சி செய்' என்ற ஏகாதிபத்திய மந்திரத்தின் மணம் வீசுகிறது. லீக், காங்கிரஸ் வேற்றுமைகள் முற்றிலும் குடும்பப் பிரச்னையாகும். அந்நிய ஆதிக்கம் முடிவுறும்போது, அந்தப் பிரச்னை தீர்ந்துவிடும்.

33. அரசாங்க அறிக்கையின் ஆசிரியர் தமது இரண்டாவது அத்தியாயத்தைப் பின்வருமாறு முடித்துள்ளார் :

"காங்கிரஸ் தீர்மானத்தைத் தயாரித்தவர்கள், காங்கிரசின் கோரிக்கையை ஒப்புக்கொண்டால் அது ஐக்கிய நாடுகளின் லட்சியத்துக்கு இடையூறாக இராது என்றும், அதற்கு மாறாக அது உதவியாகவே இருக்கும் என்றும் உண்மையாகவே நம்புகிறார்களா? அது, ஐக்கிய நாடுகளின் லட்சியம் நிறைவேறுவதற்கு உதவியாக இருக்க வேண்டும் என்பது அவர்களுடைய உண்மையான நோக்கமா? உண்மையாகவே அவர்களுக்கு அந்த விருப்பம் இருந்திருந்தால், ஐக்கிய நாடுகளின் லட்சியம் நிறைவேறுவதற்கு உதவியளிக்க வேண்டும் என்பதே அவர்களுடைய நோக்கமாக இருந்திருந்தால், தங்களுடைய யோசனை ஒப்புக்கொள்ளப்பட்டாலன்றி, பொதுஜனப் போராட்டத்தில் ஈடுபடும்படி அவர்கள் தேச மக்களைக் கேட்டுக்கொள்வார்களா? அரசாங்க நிர்வாகம் முழுவதையும், யுத்த முயற்சிகள் யாவையும் சீர்குலைக்க வேண்டும் என்பது அந்த இயக்கத்தின் நோக்கம் அல்லவா? அதற்குச் சில மாதங்களுக்கு முன், ஆட்களையும் பணத்தையும் கொடுத்து யுத்த முயற்சிக்கு உதவி செய்வது 'பாவம்' என்று ஸ்ரீ காந்தியின் கட்டளைக்கிணங்க பிரகடனம் செய்யப்படவில்லையா? எனவே, பிரிட்டனுக்கு ஏற்பட்டுள்ள ஆபத்து தங்களுக்குக் கிடைத்துள்ள சந்தர்ப்பம் என்பதே அவர்களுடைய எண்ணம் என்பதை மறுக்க முடியுமா? ஐக்கிய நாடுகளின் விதி ஊசலாடிக்கொண்டிருக்கும்போது, நிலைமை ஒருவேளை அவர்களுக்குச் சாதகமாக மாறுவதற்கு முன் தங்களுடைய அரசியல் கோரிக்கைகளை வற்புறுத்திப் பெற, கிடைப்பதற்கரிய இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டும் என்பது அவர்களுடைய நம்பிக்கை அல்லவா? இந்தக் கேள்விகளுக்கு விடை என்ன என்பதை வாசகர்களுக்கு விட்டுவிடலாம்."

வாசகர் என்ற முறையிலும், குற்றம் சாட்டப்பட்டுள்ள எதிரி என்ற முறையிலும் நான் மேற்கண்ட கேள்விகளுக்கு பதிலளிக்க வேண்டும். காங்கிரஸ் கோரிக்கையை அங்கீகரித்தால் ஐக்கிய நாடுகளின் லட்சியத்திற்கும், அதாவது உலகம் முழுவதுமுள்ள ஜனநாயகத்திற்கு உதவியாக இருக்கும் என்ப

தற்கும், அந்தக் கோரிக்கையை அங்கீகரிக்காவிடில் நிர்வாகத்தைச் சீர்குலைப்பதற்கான பொதுஜன இயக்கம் ஆரம்பமாகும் என்பதற்கும் இடையே யாதொரு முரண்பாடும் இருப்பதாகத் தெரியவில்லை. அதற்கு மாறாக, கோரிக்கையை அங்கீகரிக்காவிடில் நிர்வாகத்தைச் சீர்குலைப்பதற்கான முயற்சி நடைபெறும் என்பது, அந்தக் கோரிக்கை தூய்மையானது என்பதையே நிரூபிக்கின்றது. ஜனநாயகத்திற்கு விரோதமான கூட்டுநாடுகளை எதிர்த்துப் போராட வேண்டுமென்ற இந்தியாவின் விருப்பத்துக்கு முட்டுகட்டையாக இருக்கும் அரசாங்க நிர்வாகத்தைச் சீர்குலைக்கும் முயற்சியில், காங்கிரஸ்வாதிகள் இறக்கவும் தயாராக இருக்கிறார்கள். இந்நிலையில், அரசாங்கம் காங்கிரசை வேட்டையாட முற்பட்டிருப்பது, ஜனநாயகத்திற்காக அது (அரசாங்கம்) போராடுகிறது என்பது வெறும் பகட்டு என்பதையே நிரூபிக்கின்றது. சரியான முறையில் யுத்தத்தை நடத்த அரசாங்கத்துக்குத் திறமையில்லை என்பதே நாளுக்கு நாள் அதிகமாக ருசுவாகிவருகிறது. இது எனது உறுதியான கருத்தாகும்.

ஒரு வருடத்துக்கு முன் நான் எத்தகைய யுத்தத்தையும் எதிர்த்தேன்; இன்றும் அவ்விதமேதான் எதிர்க்கிறேன். எனினும், நான் ஒரு தனி நபர். எல்லா காங்கிரஸ்வாதிகளும் இந்தக் கருத்தை ஆதரிக்கவில்லை. சாத்துவிகக் கொள்கையைக் கைவிடுவதன்மூலம் இந்தியா விடுதலைபெறுவது சாத்தியமாயின், காங்கிரஸ் இன்று அக்கொள்கையை விட்டுவிடும். அவ்விதம் முயற்சி செய்யும் விஷயமாக எனது ஆலோசனையை நாடுவோருக்கு, அவ்விதமே செய்து, ஜனநாயகத்தில் ஈடுபாடுள்ள நாடுகளை அடிமைத் தனத்திலிருந்து விடுவிக்கும்படி கூற நானும் தயங்கமாட்டேன். அத்தகைய முயற்சிக்கு ராணுவப் பயிற்சி தேவையாயின், மக்கள் தாராளமாக அத்தகைய பயிற்சி பெறலாம். என்னையும், என் போன்ற மனப்போக்கு உடையவர்களையும் எங்களுடைய சாத்துவிகக் கொள்கையைப் பின்பற்றும்படி அவர்கள் விட்டுவிடலாம். போயர் யுத்தத்தின்போதும், சென்ற யுத்தத்தின்போதும் நான் அவ்விதமே செய்தேன். அப்போது நான் பிரிட்டிஷாருக்கு "நல்ல பையனாக" இருந்தேன். ஏனெனில் அப்போது எனது நடவடிக்கை பிரிட்டிஷ் அரசாங்கத்தின் விருப்பத்துக்கு உடன்பாடாக இருந்தது. ஆனால் இப்போது நான் அவர்களுடைய பரம விரோதியாக இருக்கிறேன். என் மனத்தில் இப்போது எந்தவித மாற்றமும் ஏற்பட்டுவிடவில்லை; ஆனால் இப்போது ஏற்பட்டுள்ள சோதனையைச் சமாளிக்கும் திறனும் பிரிட்டிஷாருக்கு இல்லை. பிரிட்டிஷாரின் நல்லெண்ணத்தில் முன்பு எனக்கு நம்பிக்கை இருந்தது; அதனால் உதவி புரிந்தேன். ஆனால் இன்று நான் பிரிட்டிஷாருக்கு இடையூறு செய்வதுபோல் தோன்றுகிறது. பிரிட்டிஷார் மீது வைத்த நம்பிக்கைக்கு உகந்தவாறு அவர்கள் நடந்துகொள்ளாததே அதற்குக் காரணமாகும். நான் இவ்விதம் விடையளித்திருப்பது, கடுமையாக இருப்பது

போல் தோன்றலாம். ஆனால் அதுதான் உண்மை, முற்றிலும் உண்மை.

34. இயக்கம் சாத்துவிகக் கொள்கையையே அடிப்படையாகக் கொண்டிருக்கும் என்று நானும், "காங்கிரஸ் சீடர்களும்" கூறியிருப்பது, வெறும் வாயளவில் தானேயன்றி வேறொன்றுமில்லை என்றும் அரசாங்க அறிக்கையின் கர்த்தா கூறுகிறார். என்னிடமிருப்பதெல்லாம் சாத்துவிகக் கொள்கை ஒன்றுதான். அதனாலேயே நான் வாழ்கிறேன், அதற்காகவே வாழ்கிறேன். அப்படியிருக்க, எனக்கு உயிரைக் காட்டிலும் மேலான அந்தக் கொள்கைக்கே அரசாங்க அறிக்கை மாசு கற்பித்திருக்கிறது.

"இது இறுதிப் போராட்டமாகும். என்ன நேர்ந்தாலும் அந்நியர் ஆதிக்கத்தை எதிர்த்து இறுதிவரை போராடியே தீர வேண்டும்" என்று நான் கூறியிருப்பதற்கு அரசாங்க அறிக்கை விசித்திரமான முறையில் வியாக்கியானம் செய்திருக்கிறது. சாத்துவிக யுத்தத்தில் ஈடுபடுவோர் பிறருடைய ரத்தத்தைச் சிந்தமாட்டார்கள். "என்ன நேர்ந்தாலும்" என்பதற்கு தங்களுடைய ரத்தத்தைச் சிந்துவது என்பதே பொருளாகும். "அது ஆயுதமற்ற ஒரு புரட்சியாகும். அது அதிசீக்கிரத்தில் அதிவேகமாக முடிவடைந்துவிட வேண்டும்" என்று கூறியிருப்பதற்கு உயர்ந்த பொருள் இருக்கிறது. மிகவும் சொகுசான சிறைகளைத் தவிர்க்க வேண்டும் என்பதும், மரணத்தையே உண்மையான நண்பனைத் தழுவிக்கொள்ள வேண்டும் என்பதுமே அதன் அர்த்தமாகும். சிறைக்குச் செல்வதைக் காட்டிலும் மரணத்தை வரவேற்பதே எதிரியின் மனத்தை மிகவும் விரைவில் மாற்ற வல்லது. "கோரமான தீ" என்று நான் குறிப்பிட்டிருப்பதற்கு, அவசியமாயின், மக்கள் ஆயிரக்கணக்கிலும் அதற்கு மேலும் உயிரைத் தியாகம் செய்ய வேண்டும் என்பதே பொருளாகும். ஆனால், இது பின்னர் உண்மையாகவே நிகழ்ந்துவிட்டது. அதிகாரிகளின் எதிர் நடவடிக்கைகள் காரணமாக ஏராளமானவர்கள் உயிரிழந்தனர். சிப்பாய்களும் போலீசாரும் சொல்ல முடியாத அடக்குமுறைகளைக் கைக்கொண்டு மக்கள் மீது வஞ்சம் தீர்த்துக்கொண்டனர் என்பது பத்திரிகைச் செய்திகளிலிருந்தும் பொறுப்புவாய்ந்தவர்களின் அறிக்கையிலிருந்தும் வெளியாயிற்று. 'கலகங்களால் ஏற்படக்கூடிய அபாயகரமான விளைவுகளுக்கு ஸ்ரீ காந்தி தயாராக இருந்தார்' என்று அரசாங்க அறிக்கையின் கர்த்தா கூறுகிறார். அது உண்மையே. பலாத்காரத்தையோ அல்லது சாத்துவிக முறையையோ அடிப்படையாகக் கொண்ட எத்தகைய பெரிய இயக்கத்திலும் அபாயகரமான விளைவுகள் ஏற்பட்டுத்தான் தீரும். எனினும், சாத்துவிக இயக்கத்தின் தன்மையே வேறாகும். கலகங்களைத் தவிர்க்க நான் பெருமுயற்சி செய்திருப்பேன். வைஸ்ராயுடன் சமரசம் செய்துகொள்வதே எனது முதல் நடவடிக்கையாக இருந்திருக்கும். அதுவரையில் அபாயகரமான விளைவுகள் ஏற்படும் என்ற பேச்சிற்கே இடமிராமற்போயிருக்கும். ஆனால், அதற்கு அரசாங்கம் இடம் கொடுக்க

வில்லை. உடனடியாக என்னைச் சிறைப்படுத்திவிட்டார்கள். எனவே, இயக்கம் ஆரம்பிக்கப்படவில்லை; நான் இயக்க சம்பந்தமாக எவ்விதக் கட்டளையும் பிறப்பிக்கவும் இல்லை.

35. தற்போதைய நிர்வாகத்திலுள்ள குற்றம் குறைகளை நான் பூரணமாக உபயோகப்படுத்திக் கொண்டுவருவதாக அரசாங்க அறிக்கையின் கர்த்தா புகார் கூறுகிறார். அவ்விதம் உபயோகப்படுத்திக்கொள்வது, காங்கிரஸ் பிறப்பதற்கு முன்பே ஆரம்பமாகிவிட்டது. பின்னர் அது ஒருபோதும் நிற்கவில்லை. அந்நியரின் ஆதிக்கம் இருக்கும்வரையில் அது எவ்விதம் நிற்க முடியும்?

36. இறுதியாக, ஒவ்வொரு ஆடவரும் பெண்ணும் தங்களைச் சுதந்திரமுள்ளவர்களாகக் கருதி செயல் புரிய வேண்டும் என்று நான் கூறிய வாக்கியத்தை மாத்திரம் குறிப்பிட்டிருக்கிறார்கள். காங்கிரஸ் தீர்மானத்தில் மேற்கண்ட வாக்கியம் அடங்கியுள்ள பகுதி பின் வருமாறு:

"இந்த இயக்கத்தின் அடிப்படை சாத்துவிகம்தான் என்பதை மக்கள் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். காங்கிரஸ் கமிட்டிகள் செயல் புரியாததன் விளைவாகக் கட்டளைகள் பிறப்பிக்க முடியாத ஒரு காலம் வரலாம். அத்தகைய நிலை ஏற்படும்போது இந்த இயக்கத்தில் பங்கு எடுத்துக் கொள்ளும் ஒவ்வொரு ஆடவரும் பெண்ணும் காங்கிரசின் பொதுவான கட்டளைகளுக்கு உட்பட்டு தாங்களே செயல் புரிய வேண்டும். விடுதலையை விரும்பும் ஒவ்வோர் இந்தியரும், விடுதலைக்காகப் பெரு முயற்சி செய்யும் ஒவ்வோர் இந்தியரும் தனக்குத்தானே வழிகாட்டியாக இருந்து கொண்டு ஓய்வின்றி கடினமான பாதையில் முன்னேறிச் செல்ல வேண்டும். அந்தப் பாதை தான் இறுதியாக இந்தியாவின் சுதந்திரத்தில் கொண்டு போய் விடும்."

இந்த வாக்கியங்களில் திடுக்கிடவைக்கும் விஷயம் எதுவும் இல்லை. மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரர்களான தலைவர்களைச் சிறைப்படுத்தும்போது, அவர்களுடைய ஸ்தாபனம் சட்ட விரோதமானதென்று அரசாங்கம் பிரகடனம் செய்யும்போது, மக்கள் தங்களுக்குத் தாங்களேதான் தலைவர்களாக இருந்து கொண்டு செயல் புரிய வேண்டும். முன்பெல்லாம் மக்கள் சிறைகளுக்குச் சென்றார்கள். ஆனால் இப்போது அவர்கள் சிறைகளுக்குச் செல்ல வேண்டியதில்லை, மரணத்தை வரவேற்க வேண்டும். எனவே, சாத்துவிகக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங்களே தலைவராக இருந்துகொண்டு நடவடிக்கையில் ஈடுபட வேண்டும். இந்த நிபந்தனையைக் குறிப்பிடாமல் 'எல்லோரும் தங்களுக்குத் தாங்களே நடவடிக்கைகளில் ஈடுபட வேண்டும்', என்று குறிப்பிட்டிருப்பது, உண்மையை மறைக்கும் மன்னிக்க முடியாத குற்றமாகும்.

37. நான் ஆரம்பிக்க உத்தேசித்துள்ள இயக்கமானது சாத்துவிகமானதாக இருக்கமுடியுமா என்பது பற்றி அறிக்கையின் கர்த்தா அடுத்தபடியாகப் பரிசீலனை செய்ய முற்பட்டுள்ளார். "அந்த இயக்கம் சாத்துவிகமானதாக இருக்க வேண்டும் என்பதே ஸ்ரீ காந்தியின் உத்தேசம்; அவ்விதம் இருக்கும் என்பதே அவரது நம்பிக்கை" என்று அவர் கூறுகிறார். நான் ஆரம்பிக்காத ஓர் இயக்கம் எப்படி இருக்கும் என்பதை யாராலும் கூற முடியாது. அப்படியிருக்க, அது சாத்துவிகமானதாக இருக்க முடியாது என்ற முடிவிற்கு அவர் எப்படி வந்தார் என்பதைக் கவனிப்போம். முற்றிலும் சாத்துவிகமான ஓர் இயக்கத்தையொட்டி நான் ராணுவ பாஷையை உபயோகித்திருப்பதையே, அவர் தமது கூற்றுக்கு ஆதாரமாக எடுத்துக்காட்டியிருக்கிறார். தென்னாப்பிரிக்காவில் என்னுடைய சோதனை ஆரம்பமானதிலிருந்தே நான் ராணுவ பாஷையை உபயோகித்து வருகிறேன். 1908-ஆம் ஆண்டில் நான் சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்ததிலிருந்து நான் உபயோகித்துவரும் ராணுவ பாஷையைக் குறித்து யாரும் தப்பெண்ணம் கொண்டதில்லை. சத்தியாக்கிரகம் ஒரு தார்மிக யுத்தமே. எனவே, அவ்விஷயமாக ராணுவ பாஷையை உபயோகிப்பது இயல்பேயாகும். அநேகமாக நாம் யாவரும் சிற்சில சமயங்களில், 'ஆன்மிக வாள்', 'சத்தியமாகிற வெடிமருந்து', 'பொறுமையாகிற கவசம்', 'கடவுளுடன் மல் யுத்தம்' என்றெல்லாம் உபயோகித்திருக்கலாம். எனினும் அவ்வித வார்த்தைகளை உபயோகிப்பது தவறு என்று யாரும் கூறியதில்லை; அவ்விதம் உபயோகிப்பதை விசித்திரமானதாக யாரும் கருதியதில்லை. ரட்சண்ய சேனையைச் சேர்ந்தவர்கள் கூட ராணுவ பாஷையை உபயோகிப்பதை அறியாதவர்கள் யார்? கொடிய அழிவு ஆயுதங்களை உபயோகிக்கும் ராணுவத் தலைவர்களைப் போல் ரட்சண்ய சேனைத் தலைவர்களுக்கும் கர்னல்கள் என்றும், காப்டன்கள் என்றும் பட்டம் கொடுக்கப்பட்டுள்ளன. எனினும் அவர்களை ராணுவத்தைச் சேர்ந்தவர்களாக யாரும் கருதியதில்லை.

38. 'ஜப்பானியரின் ஆக்கிரமப்பை எதிர்க்க அகிம்சைக் கொள்கைக்கு உள்ள சக்தியில் ஸ்ரீ காந்திக்கு அதிக நம்பிக்கை இல்லை என்பதும் தெளிவாகிறது' என்று அரசாங்க அறிக்கை கூறுகிறது. பலாத்கார யுத்தத்திற்குப் பக்கத்தில் சாத்துவிகக் கொள்கையின் முழு சக்தியையும் காட்டுவது முடியாத காரியம் என்றே நான் கூறியுள்ளேன். ஆக்கிரமப்பை எதிர்த்து நிற்க அகிம்சைக் கொள்கைக்கு சக்தி உண்டா என்பதில் மௌலானா சாகிபுக்கும் பண்டித நேருவுக்கும் சந்தேகம் இருந்துவருவது உண்மையே. எனினும், பிரிட்டிஷ் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடும் விஷயமாக அகிம்சைக் கொள்கையை மேற்கொள்வதில் அவர்களுக்கு மிகுந்த நம்பிக்கை உண்டு. பிரிட்ஷ் ஏகாதிபத்தியத்தைப் போல் ஜப்பானிய ஏகாதிபத்தியத்தையும் தவிர்க்க வேண்டும் என்பதே எனது அபிப்பிராயமாகும்.

எனினும் வரப்போகும் தீமையைக் காட்டிலும்(ஜப்பானிய ஏகாதிபத்தியம்) இப்போதுள்ள தீமையை (பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம்) சமாளிப்பது எளிதாகும் என்பதை 'ஹரிஜனி' லிருந்து எடுக்கப்பட்ட மேற்கோள்களின் மூலம் நான் காட்டியிருக்கிறேன்.

என்னுடைய அகிம்சைக் கொள்கையில் பூரண நம்பிக்கையுள்ளவர்கள் அதிகமாக இல்லை என்பதை நான் உடனடியாக ஒப்புக்கொள்கிறேன். எனது இயக்கத்திற்கு அகிம்சைக் கொள்கையில் பூரணமான அல்லது அரைகுறையான நம்பிக்கையுள்ளவர்கள் தேவையில்லை என்றும் நான் கூறியிருக்கிறேன் என்பதை மறந்துவிடக் கூடாது. சாத்துவிக நடவடிக்கைகளுக்கான விதிகளை மக்கள் நிறைவேற்றினாலே போதுமானது.

39. அரசாங்க அறிக்கையின் மிகவும் மோசமான குற்றச்சாட்டு இதுதான்:

"இதற்கு முன் தாம் ஆரம்பித்த இயக்கங்களையும் ஸ்ரீ காந்தி இப்போது தமக்கு உதாரணமாகக் கொண்டுள்ளார் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். இதற்கு முந்திய இயக்கங்கள் சாத்துவிக இயக்கங்கள் என்றே கூறப்பட்டன. ஆனால் பின்னர் அவை ஒவ்வொன்றும் பயங்கரமான பலாத்கார இயக்கங்களாக மாறிவிட்டன"

தென்னாப்பிரிக்காவில் முதலாவது இயக்கம் ஆரம்பமானதிலிருந்து இதுவரை நடந்துள்ள சாத்துவிக எதிர்ப்பு இயக்கங்களின் ஜாபிதா என் முன் இருக்கிறது. பொதுமக்களின் கோபாவேசமானது துக்ககரமான கொலைகளில் வந்து முடிந்த சம்பவங்கள் என் நினைவில் இருக்கத்தான் செய்கின்றன. பலாத்கார நடவடிக்கைகளில் பொது மக்கள் ஈடுபட்ட இச் சம்பவங்கள் மோசமானவையே என்றாலும், இந்த மாபெரும் நாட்டின் நிலப்பரப்பைக் கவனிக்கும் போது அந்த நடவடிக்கைகள் கொசுக் கடி போன்றவையே. நிலப்பரப்பில் இந்தியா, ரஷ்யாவைச் சேர்க்காமல் ஐரோப்பாவைப் போல் அவ்வளவு பெரியது; ஜனத்தொகையில் ஐரோப்பாவைக் காட்டிலும் பெரியது. ரகசியமாகவோ அல்லது பகிரங்கமாகவோ பலாத்காரம் காங்கிரசின் கொள்கையாக இருக்குமாயின், காங்கிரசின் கட்டுதிட்டமானது அதிகக் கண்டிப்பாக இருந்திராவிடில் கொசுக்கடி போன்ற பலாத்காரமானது எரிமலையைப் போல் வெடித்திருக்கும். அத்தகைய எழுச்சிகள் ஏற்பட்ட ஒவ்வொரு சமயத்திலும், அவற்றைச் சமாளிக்க காங்கிரஸ் ஸ்தாபனம் முழுவதும் மிகத் தீவிரமான முறைகளைக் கைக் கொண்டது. அத்தகைய பல சந்தர்ப்பங்களிலும் நானே உண்ணாவிரதத்தை மேற்கொண்டேன். இவையெல்லாம் பொது மக்களிடையே மிகுந்த பலனை அளித்தன. பலாத்காரக் கலப்பற்ற இயக்கங்களும் நடை பெற்றிருக்கின்றன. தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரகத்தையும், மற்றும் சம்பாரண், கேடா, பர்டோலி, பார்சாத் ஆகிய மற்றும் சில இடங்களில் நடைபெற்ற சத்தியாக்கிரகங்களையும், பலாத்காரக் கலப்பற்ற இயக்கங்

களுக்கு உதாரணமாகக் கூறலாம். அங்கே நடந்த சத்தியாக்கிரக இயக்கங்களில் ஈடுபட்ட மக்கள் சத்தியாக்கிரக விதிகளுக்குக் கட்டுப்பட்டு நடந்தார்கள். அப்படியிருக்க, "இதற்கு முந்திய இயக்கங்கள் சாத்துவிக இயக்கங்கள் என்று கூறப்பட்ட போதிலும், அவை பயங்கரமான பலாத்கார இயக்கங்களாக மாறி விட்டன" என்று அரசாங்க அறிக்கையின் கர்த்தா கூறியிருப்பது, சரித்திர உண்மைக்கே நேர் மாறானதாக இருக்கிறது. இப்போது கூட அரசாங்கம் அனாவசியமாகப் பொதுஜனங்களுக்குக் கோபமூட்டாமல் இருந்திருந்தால், பலாத்கார நடவடிக்கைகள் ஒரு போதும் நிகழ்ந்திரா. மக்கள் பலாத்காரத்தில் ஈடுபடாமல் தவிர்க்கவேண்டும் என்பதில் காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் மிகவும் அக்கறையுடையவர்களாக இருந்தார்கள். அவர்களுக்கு அத்தகைய அக்கறை தர்ம சிந்தனை காரணமாக ஏற்பட்டதன்று. ஆனால், மக்கள் பலாத்கார நடவடிக்கைகளை மேற்கொள்வதன் மூலம் சுதந்திரம் வந்துவிடாது என்பதே அவர்களுடைய அபிப்பிராயமாகும். 1920-ஆம் ஆண்டிற்குமுன் காங்கிரசின்மூலம் மக்கள் முற்றிலும் சாத்துவிகக் கொள்கையையே தெரிந்துகொண்டார்கள். ஏனெனில் சட்ட வரம்புக்கு உட்பட்டுக் கிளர்ச்சி செய்வதிலும், பிரிட்டிஷாரின் உறுதிமொழிகளிலும், பிரகடனங்களிலும் தலைவர்களுக்கு இருந்த நம்பிக்கையே அதற்குக் காரணமாகும். 1920-க்குப் பின் என்னால் தூண்டப்பட்டும், அனுபவத்தின்மீதும், சட்ட வரம்புக்கு உட்பட்ட கிளர்ச்சி மாத்திரம் போதாது என்றும், அது ஓரளவுக்குத்தான் பலனைக் கொடுக்கும் என்றும், அதன் மூலம் ஒரு காலத்திலும் சுதந்திரம் பெற முடியாது என்றும் மக்கள் தெரிந்து கொண்டார்கள். இந்தியா இருக்கும் நிலையில், சாத்துவிக நடவடிக்கைகளினால் மாத்திரமே மிகவும் விரைவில் சுதந்திரம் பெறமுடியும் என்ற நம்பிக்கையும் அவர்களுக்கு ஏற்பட்டது. சென்ற முப்பது வருட அனுபவமானது, தென்னாப்பிரிக்காவில் முதல் ஒன்பது ஆண்டுகள் வரையில் நான் பெற்ற அனுபவமானது, இந்தியாவின் எதிர்காலமும் உலகத்தின் எதிர்காலமும் சாத்துவிகக் கொள்கையையே பொறுத்திருக்கிறது என்பதில் மகத்தான நம்பிக்கையை உண்டாக்கியிருக்கிறது. மானிட வர்க்கத்தில் நசுக்கப்பட்டுத் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களுக்கு இழைக்கப்பட்ட அரசியல், பொருளாதாரத் தவறுகளைச் சீர்படுத்துவதற்கு சிறிதும் அபாயமற்ற, அதே சமயம் மிகவும் சக்திவாய்ந்த வழி சாத்துவிகக் கொள்கைதான். எனவே, அப்படிப்பட்ட கொள்கையை உபதேசித்து வருவோரை, உலகிலேயே மிகவும் சக்திவாய்ந்த அரசாங்கம் செயலற்றுப்போகும்படி செய்திருப்பது துக்ககரமானது. அவ்விதம் செய்ததன் மூலம் பிரிட்டிஷார் உலக அமைதிக்கும், நேச தேசங்களின் லட்சியத்திற்குமே பாதகம் ஏற்படும்படி செய்திருக்கிறார்கள்.

40. எனது சாத்துவிகக் கொள்கை வாயளவில் உபதேசம் செய்வதோடு நின்றுவிடுகிறது என்பதற்கு உதாரணமாக, அர

சாங்க அறிக்கையின் கர்த்தா, நான் எழுதியதைக் கீழ் வருமாறு திரித்துக் கூறியிருக்கிறார்.

''ஸ்ரீ காந்தியின் கொள்கைக்கு இணங்க, எந்தப் போராட்டத்திலும் ஈடுபட்ட இரு எதிரிகளில் பலவீனமாக இருப்பவர் எத்தகைய பலாத்கார முறைகளை மேற்கொண்டாலும் அது சாத்துவிகமான போராட்டமேயாகும்! இதையே வேறுவிதமாகக் கூறுவதாயின், அதிக சக்திவாய்ந்த எதிரிக்கு விரோதமாக மேற்கொள்ளப்படும் பலாத்காரமானது தானகவே சாத்துவிக மாகிவிடுகிறது! இது 'ஆயுதமற்ற புரட்சி'யில் ஈடுபட்டுள்ள கலகக்காரர்களின் சமயோசிதமான கொள்கையே !''

நாள்தோறும் நாம் பெற்றுவரும் அனுபவத்திற்கு முரணுக நான் ஒரு கொள்கையை எவ்வாறு வகுக்க முடியும்? சமமான பலம் உள்ளவர்களிடையே சண்டை நடப்பது மிகவும் அபூர்வ மாகும். எப்போதுமே ஒரு கட்சி மற்றொரு கட்சியை விட பல வீனமானதாகவே இருக்கும். நான் கொடுத்துள்ள உதாரணங் களிலிருந்து ஒரே ஒரு முடிவுக்குத்தான் வர முடியும். அதாவது, பலவீனமான கட்சி எப்போதுமே பலாத்காரத்தை மேற்கொள் வதற்கான ஏற்பாடுகளைச் செய்வதில்லை. எனினும் பலவீனமான ஒருவன் திடீரென்று தாக்கப்படும்போது, அவன் எதிர்பாராத விதமாகவும் விருப்பமின்றியும் தன் கைக்குக் கிடைத்த ஆயு தத்தை எடுத்துக் கொள்கிறான். நான் கொடுத்த முதல் உதார ணம் என்னவெனில், வாளை வைத்துக் கொண்டுள்ள ஒருவன் தன்னந்தனியாக நின்று கொள்ளைக்காரர்களின் ஒரு கூட்டத் தையே எதிர்த்துப் போராடுகிறான். ஒரு பெண் தன் மானத் தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக தன் நகங்களையும், பற்களையும் அல்லது ஒரு குத்துவாளையும் கூட உபயோகிக் கிறாள். அவள் முன்பின் யோசியாமல் அவ்விதம் செய்கிறாள். இதுதான் இரண்டாவது உதாரணம். ஒரு எலி தனது கூர்மை யான பற்களால் பூனையை எதிர்த்துப் போராடுவது மூன்றாவது உதாரணமாகும். தீர்க்காலோசனையுடன் கூடிய பலாத்காரத் திற்கும் மேற்கண்ட உதாரணங்களுக்கும் மிகுந்த வேற்றுமை உண்டு. ஆனால் அத்தகைய போராட்டத்தில் ஈடுபடும் பலவீன மான ஒருவர், ஆக்கிரமிப்பாளரை எதிர்த்து எக்காலத்திலும் வெற்றி பெறுவதில்லை. அவனோ அல்லது அவளோ ஆக்கிரமிப் பாளரின் கோரிக்கைக்கு இணங்குவதைக் காட்டிலும் இறப்பதன் மூலம் தன் மானத்தைக் காப்பாற்றிக்கொள்கிறான், அல்லது காப்பாற்றிக் கொள்கிறாள். எனவே தப்பெண்ணத்திற்கு இட மின்றி மிகவும் ஜாக்கிரதையாகவே நான் வார்த்தைகளை உபயோ கித்துள்ளேன். அதனாலேயே பலத்திலும் எண்ணிக்கையிலும் மிகவும் அதிகமான எதிரிகளை, துணிச்சலுடன் எதிர்த்து நின்ற போலந்து மக்களின் போராட்டத்தை 'பெரிதும் சாத்துவிகப் போராட்டம்' என்று வர்ணித்தேன்.

ஆகஸ்டு 7, 8 தேதிகளில் பம்பாயில் நடந்த அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் நான் பேசிய விவரங்களை இங்கே குறிப் பிடுவது பொருத்தமாக இருக்கும்:

"1920-இல் இருந்த காந்திதான் இன்றைய காந்தியும் என்பதை உங்களுக்கு நான் உறுதியாகக் கூறுகிறேன். எந்த மூலாதாரமான அம்சத்திலும் நான் மாறுதல் அடைந்துவிட வில்லை. அன்று நான் அகிம்சைக்கு எவ்வளவு முக்கியத்துவம் அளித்தேனோ, அதே முக்கியத்துவத்தை இன்றும் அளிக்கிறேன். முன்னரைக் காட்டிலும் இப்போது நான் அகிம்சைக் கொள் கையை அதிகமாக வற்புறுத்துகிறேன். தற்போதுள்ள தீர்மா னத்திற்கும், முன்பு நான் எழுதியவற்றிற்கும் பேசியவற்றிற்கும் உண்மையில் யாதொரு முரண்பாடும் இல்லை. இன்று நான் கூறுவதிலும் செய்வதிலும் முற்றிலும் தூய்மையான அகிம்சை யைத் தவிர வேறு எதுவும் இல்லை என்பதை நீங்கள் அறிந்து கொள்ளவேண்டும் என விரும்புகிறேன். காரியக்கமிட்டியின் நகல் தீர்மானம் அகிம்சையை அடிப்படையாகக் கொண்டது. அது போலவே, இப்போது உத்தேசிக்கப்பட்டுள்ள போராட் டத்தின் வேரும் அகிம்சைதான். எனவே, உங்களில் யாராவது அகிம்சையில் நம்பிக்கையை இழந்திருப்பார்களாயின் அல்லது யாருக்காவது அகிம்சையில் சலிப்பு ஏற்பட்டிருக்குமாயின், அத்தகையோர் இந்தத் தீர்மானத்திற்குச் சாதகமாக வாக்கு கொடுக்க வேண்டாம்.

"எனது நிலையை நான் தெளிவாகக் கூறுகிறேன். விலை யில்லாப் பொக்கிஷமான அகிம்சை ஆயுதத்தை, கடவுள் எனக்கு அருள் புரிந்திருக்கிறார். எனக்கும் எனது அகிம்சைக்கும் இன்று சோதனைக் காலம் ஏற்பட்டிருக்கிறது. ஹிம்சையாகிற ஜ்வாலைகள் பூமியைப் பொசுக்கிவருகின்றன. விடுதலைக்காக பூமி கதறி வருகிறது. அப்படிப்பட்ட இந்த நெருக்கடியான சமயத்தில் கடவுள் கொடுத்துள்ள திறனை நான் உபயோகிக்கத் தவறிவிடு வேனாயின், கடவுள் என்னை மன்னிக்கமாட்டார். அந்த மகத்தான, வரப்பிரசாதமான அகிம்சைக்கு நான் தகுதியற்றவன் என்ற தீர்ப்புக்கு நான் ஆளாவேன். எனவே இப்போது நான் செயலில் இறங்க வேண்டும். நான் தயங்கக்கூடாது; ருஷ்யாவுக்கும் சீனாவுக்கும் ஏற்பட்டுள்ள அபாயத்தை நான் பார்த்துக்கொண் டிருக்கக் கூடாது.

"நம்முடைய போராட்டம் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற் கான போராட்டம் அல்ல; இந்தியாவின் சுதந்திரத்தைப் பெறு வதற்காக நடைபெறும் கலப்பற்ற அகிம்சைப் போராட்டமாகும். பலாத்காரப் போராட்டத்தில் வெற்றிபெற்ற ஒரு தளபதி பெரிதும் ராணுவ பலத்தைக் கொண்டே வெற்றிபெற்று, சர்வாதி கார ஆட்சியை அமைப்பார். ஆனால், அகிம்சைப் போரை அடிப் படையாகக் கொண்ட காங்கிரஸ் திட்டத்தில், சர்வாதிகார ஆட்சிக்கு இடமில்லை. சுதந்திரத்திற்காக அகிம்சைப் போராட் டத்தில் கலந்து கொண்டுள்ள ஒரு சிப்பாய் தனக்காக எதுவும் ஆசைப்படுவதில்லை; அவர் நாட்டின் விடுதலைக்காக மாத்திரமே போராடுகிறார். சுதந்திரம் வந்த பின், நாட்டை யார் ஆட்சி புரிவார்கள் என்பது பற்றி காங்கிரஸ் கவலைப்படவில்லை. நிர்வாக

அதிகாரம் கைக்கு வரும்போது, அது இந்திய மக்களுக்குச் சொந்தமானதாக இருக்கும். அந்த அதிகாரம் யாரிடம் ஒப்படைக்கப்பட வேண்டும் என்பதைத் தீர்மானிப்பவர்களும் இந்திய மக்கள்தான். உதாரணமாக, பார்சி வகுப்பினரிடம் ஆட்சி அதிகாரம் ஒப்படைக்கப்படலாம். நான் விரும்புவதும் அதுதான். அல்லது காங்கிரஸ் வட்டாரங்களில் கேள்விப்படாத வேறு சிலரிடம் அந்த அதிகாரம் ஒப்படைக்கப்படலாம். அப்போது நீங்கள் அதை ஆட்சேபிக்கக் கூடாது. 'இந்தச் சமூகத்தினர் மிக மிகச் சிறுபான்மையினராவர். சுதந்திரப் போராட்டத்தில் அந்தக் கட்சி போதிய பங்கு எடுத்துக்கொள்ளவில்லை. அப்படியிருக்க, ஆட்சி அதிகாரத்தை அதனிடம் ஏன் ஒப்படைக்க வேண்டும்?' என்றெல்லாம் நீங்கள் கேட்கக் கூடாது. காங்கிரஸ் ஸ்தாபனம் ஆரம்பமானதிலிருந்து அது தன் வரையில் வகுப்பு வேற்றுமைக் களங்கத்திற்குச் சிறிதும் இடம் கொடுத்ததில்லை; எப்போதும் தேசம் முழுவதையும் மனத்திற்கொண்டே அது செயல் புரிந்து வந்திருக்கிறது.

''நம்முடைய அகிம்சை பூரணமானதல்ல என்பதையும், குற்றம் குறையுள்ளதென்பதையும் நான் அறிவேன். பூரண அகிம்சையிலிருந்து நாம் வெகு தொலைவில் இருக்கிறோம் என்பதையும் அறிவேன். ஆனால், அகிம்சையில் இறுதியாக தோல்வி என்பதோ அல்லது ஏமாற்றம் என்பதோ இல்லை. நம்மிடம் எத்தனை குறைகள் இருப்பினும், நாம் மேற்கொண்டுள்ள பெரிய காரியம் வெற்றிபெறுமாயின், அதற்குக் காரணம் கடவுளின் அருளாகவே இருக்கும். சென்ற இருபத்திரண்டு ஆண்டுகளாக நாம் மௌனமாகவும் இடைவிடாமலும் செய்த முயற்சி வெற்றி பெறுவதற்குக் கடவுள் உதவி புரிந்தார் என்றே நான் நம்புவேன்.

''உலக சரித்திரத்திலேயே நம்முடைய விடுதலைப் போராட்டத்தைக்காட்டிலும் உண்மையான ஜனநாயகப் போராட்டம் நிகழ்ந்ததில்லை. பிரஞ்சுப் புரட்சியைப் பற்றி கார்லைல் எழுதிய வரலாற்றை நான் சிறையில் இருந்தபோது வாசித்தேன். ருஷ்யப் புரட்சியைப் பற்றி பண்டித ஜவாஹர்லால் என்னிடம் சில விவரங்களைக் கூறினார். எனினும் அவை பலாத்கார ஆயுதங்களைக் கொண்டு நடந்ததால், ஜனநாயக லட்சியத்தை அடைய அவை தவறிவிட்டன. ஆனால், அகிம்சையின்மூலம் அடையும் ஜனநாயகத்தில் எல்லோருக்கும் சமத்துவமான சுதந்திரம் இருக்கும். அத்தகைய ஜனநாயகப் போராட்டத்தில் கலந்துகொள்ளும் படியே இன்று உங்களை நான் அழைக்கிறேன். இதை நீங்கள் உணர்ந்துகொண்டால், ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் உள்ள வேற்றுமைகளை நீங்கள் மறந்துவிடுவீர்கள். பின்னர் நீங்கள் உங்களை எல்லோருக்கும் பொதுவான சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ள இந்தியர்களாகவே கருதுவீர்கள்.

''அகிம்சையின்றி உண்மையான சுதந்திரம் இருக்க முடியாது என்பதே எனது கருத்தாகும். இது மமதை அல்லது தற்

பெருமைகொண்ட ஒருவனுடைய வார்த்தையல்ல, மனப்பூர்வமாக சத்தியத்தை நாடும் ஒருவனது வார்த்தையாகும். காங்கிரஸ் ஆரம்பமானதிலிருந்து அது தன்னை அறியாமலேயே அகிம்சைக் கொள்கையை அடிப்படையாகக்கொண்டு செயல்புரிந்து வந்திருக்கிறது. ஆரம்பகாலத்தில் அதை சட்ட வரம்புக்கு உட்பட்டமுறை என்று கூறிவந்தார்கள். தாதாபாய் நௌரோஜி, பிரோஸ்ஷா மேத்தா ஆகியோர் அதன் அபிமானிகளாகவும், எஜமானர்களாகவும், தேசத்தின் உண்மையான ஊழியர்களாகவும் இருந்து வந்தார்கள். பிறகு அவர்கள் 'கலகக்காரர்களாக' மாறினர்கள். எனினும் கொலை, ரகசியம் போன்ற தீமைகளுக்கு அவர்கள் எக்காலத்திலும் இடம் கொடுக்கவில்லை. பின்னர் வந்த தலைமுறையினர் அந்த அரசியல் தத்துவம் மேலும் விரிவடையும்படி செய்தார்கள். அதாவது காங்கிரசின் தீர்மானத்திற்கிணங்க, சாத்துவிக ஒத்துழையாமைக் கொள்கையை மேற்கொண்டார்கள். உயர்ந்த அகிம்சைத் தத்துவத்துக்கு உட்பட்டு எல்லா காங்கிரஸ்வாதிகளும் நடந்துகொண்டு வருகிருர்கள் என்று நான் கூறவில்லை. காங்கிரசில் பல கருங்காலிகள் இருக்கிருர்கள் என்பதை நான் அறிவேன். அவர்களைக் குறுக்கு விசாரணைக்கு உட்படுத்தாமலேயே அவர்கள்மீது நான் நம்பிக்கை வைத்திருக்கிறேன். அவர்கள்மீது நான் நம்பிக்கை வைத்திருப்பதன் காரணம் என்னவெனில், மனித இயல்பின் சிறப்பில் நான் நம்பிக்கையுடையவன் என்பதே. அத்தகைய இயல்புதான் உண்மையைக் கண்டுகொள்ளும்படியும், நெருக்கடியைச் சமாளிக்கும்படியும் செய்கிறது. வரப்போகும் போராட்டத்தில் அகிம்சைக் கொள்கைதான் சிறந்ததென்பது ருசுவாகும் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. அந்த நம்பிக்கை வீணகிவிட்டால் கூட நான் பின்வாங்கமாட்டேன். அகிம்சையில் எனக்குள்ள நம்பிக்கையைக் கைவிடமாட்டேன். 'அகிம்சைப் படிப்பினையை இன்னும் சரியாகக் கற்றுக்கொள்ளவில்லை. நான் மீண்டும் முயற்சி செய்ய வேண்டும்' என்றுதான் கூறுவேன்."

*41.* என்னுடைய அகிம்சை பலனற்றது என்றும், வெறும் வாய்ப்பேச்சுத்தான் என்றும் கூறியுள்ள அரசாங்க அறிக்கையின் கர்த்தா, பின்னர் தமது கவனத்தை காங்கிரசில் உள்ள எனது சகாக்கள்மீது செலுத்தியுள்ளார். பண்டித நேரு, சர்தார் வல்லபாய் பட்டேல், ஸ்ரீ சங்கரராவ் தேவ் முதலியோர் மாணவர் சமூகத்தைத் தூண்டிவிட்டதாகக் கூறியுள்ளார். மாணவர்கள் மீதும் விவசாயிகள்மீதும் காங்கிரஸ் தலைவர்கள் கவனம் செலுத்த முற்பட்டது இது முதல் தடவை அல்ல. 1920-ஆம் ஆண்டிலேயே ஒத்துழையாமை இயக்கத்தில் சேரும்படி மாணவர்கள் அழைக்கப்பட்டார்கள். பல்லாயிரக் கணக்கான மாணவர்கள், அந்த அழைப்பை ஏற்றுக்கொண்டு தங்களுடைய படிப்பை நிறுத்திவிட்டார்கள். ஆகஸ்டு மாதம் நாங்கள் கைதியானபின், காசி ஹிந்து சர்வகலாசாலையில் என்ன நடந்ததென்பது எனக்குத் தெரியாது. சில மாணவர்கள் தவருன வழியில் சென்றதாகவே வைத்துக்

கொண்டாலும், அவர்களுடைய நடவடிக்கைகளுடன் பண்டித நேருவை சம்பந்தப்படுத்த எவ்வித ஆதாரமும் இல்லை. அவ்விதம் சம்பந்தப்படுத்துவதற்கு திட்ட வட்டமான ருசு வேண்டும். ஆனால், அகிம்சையின்மூலம்தான் சுயராஜ்யம் பெறமுடியும் என்பதில் அவருக்குள்ள நம்பிக்கை வேறெவருக்கும் குறைந்த தல்ல. ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த விவசாயிகள் கூட்டத்தில் அவர் பேசியதிலும் பலாத்காரத்துக்கு ஆதரவாக எதுவும் இல்லை. மற்றத் தலைவர்களும் தங்களுடைய பிரசங்கங்களிலும் பலாத் காரத்தை ஆதரித்து எதுவும் கூறவில்லை. இவற்றைத் தவிர, நான் எழுதியவற்றிலும் பலாத்காரத்தை ஆதரிப்பதற்கான அறிகுறிகூட இல்லை என்பதே எனது உறுதியான அபிப்பிராய மாகும்.

42. அரசாங்க அறிக்கையின் குற்றச்சாட்டில் உள்ள வாதங்கள் ஒரு புறமிருக்க, நான் அறிந்தவரையில் அகிம்சையைப் பற்றி இப்போது சில வார்த்தைகள் கூறவேண்டும். வாழ்க் கையின் எல்லாத் துறைகளிலும் அது பரவவேண்டும் என்பதே இளமைப் பருவத்திலிருந்து, அதாவது சற்றேக்குறைய அறுபது ஆண்டுகளாக எனது லட்சியமாக இருந்து வந்திருக்கிறது. நான் கூறியதன்மீது 1920-இல் காங்கிரஸ் அகிம்சையை ஒரு கொள்கை யாக ஏற்றுக்கொண்டது. உலகத்திற்கு ஆடம்பரமாக விளம்பரப் படுத்த வேண்டும் என்பதற்காக அவ்விதம் செய்யவில்லை. சுயராஜ்யம் பெறுவதற்கு அது ஒரு அத்தியாவசியமான சாதன மாகவே ஏற்றுக்கொள்ளப்பட்டது. காகிதத்தில் அதை ஒரு கொள்கையாக மேற்கொண்டுவிட்டால் மாத்திரம் பலன் ஏற்படாது என்பதை ஆரம்பத்திலேயே காங்கிரஸ்வாதிகள் கண்டனர்; தனி நபர்களும் மக்கள் கூட்டாகவும் அதை உபயோகித்தால்தான் பலன் ஏற்படும் என்பதையும் உணர்ந் தனர். துப்பாக்கியை உபயோகிக்கத் தெரியாதவனின் கையில் இருக்கும் துப்பாக்கியால் எவ்விதம் யாதொரு பலனும் ஏற்படாதோ, அதுபோலவே அகிம்சைக் கொள்கையை வெறும் பட்டயமாக வைத்துக்கொண்டிருப்பதால் மாத்திரம் பயனில்லை. எனினும் துப்பாக்கிக்கும் அகிம்சைக்கும் சிறிதும் சம்பந்தமில்லை. உதாரணமாக, பகைவரைக் காயப்படுத்தவும், கொன்றுவிடவும் கூட பலாத்காரம் உபயோகிக்கப்படுகிறது. பலாத்காரத்தைப் பொறுத்தமட்டில், விரோதியைக்காட்டிலும் அதிக பலாத் காரத்தை உபயோகிப்பவனே வெற்றிபெறுகிறான். ஆனால், விரோதி எவ்வளவு பலாத்கார சக்தி வாய்ந்தவராயினும், அவரை எதிர்த்து சாத்துவிக நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள முடியும். பலவீனர்களின் பலாத்காரம் அதிக பலம் வாய்ந்தவர் களின் பலாத்காரத்தை எதிர்த்து நிற்க முடிவதில்லை. மிகவும் பலவீனர்களின் சாத்துவிக நடவடிக்கை வெற்றிபெறுவது தினசரி நிகழ்ச்சியாகும். இந்தியாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய யந்திரத்தை இயக்குவோரின் உடலுக்கோ, உடைமைகளுக்கோ அபாயம் நேரும்படி செய்யவே கூடாது என்பதே எனது எண்ண

மாகும். எனது அகிம்சைக் கொள்கை, மனிதனுக்கும் அவனது யந்திரத்துக்கும் மூலாதாரமான வேற்றுமை உண்டு என்பதை அடிப்படையாகக் கொண்டது. அபாயகரமான ஓர் யந்திரத்தை நான் தயவுதாட்சண்யமின்றி அழித்துவிடுவேன்; ஆனால் அதை இயக்கும் மனிதனுக்கு ஒருபோதும் நான் தீங்கு இழைக்க மாட்டேன். இந்தக் கொள்கையை என்னுடைய உறவினர்கள், நண்பர்கள், சகபாடிகள் ஆகியோரிடமும் கையாண்டு, அதில் மிகுந்த வெற்றியும் பெற்றிருக்கிறேன்.

43. அகிம்சைக் கொள்கையைப் பற்றிய தமது வியாக்கியானத்தை, அரசாங்க அறிக்கையின் கர்த்தா ஒரு வழியாக முடித்துவிட்டு, ஜூலை 14—இல் நிறைவேறிய வார்தா தீர்மானத்தையும் ஆகஸ்டு 8-இல் நிறைவேறிய பம்பாய் தீர்மானத்தையும், அவற்றின் "பகட்டான நோக்கங்களையும்" கீழ்வருமாறு சுருக்கிக் கொடுத்துள்ளார்:

"1. இந்தியாவில் உள்ள அந்நியரின் ஆதிக்கத்தை அகற்ற வேண்டும்.

2. பிரிட்டனுக்கு எதிராக வளர்ந்து வரும் துவேஷத்தைத் தடுத்து, இந்தியர்களிடையே அந்நியர்களின் ஆக்கிரமிப்பை எதிர்த்து நிற்கும் உணர்ச்சியை உருவாக்க வேண்டும். கோடிக்கணக்கான இந்திய மக்களுக்கு சுதந்திரம் அளித்து, அதன் பலனை எழும் அவர்களுடைய சக்தியையும் உற்சாகத்தையும் உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டும். அவர்களுடைய சக்தியும் உற்சாகமும் மாத்திரமே, இந்தியா பலன் தரத்தக்க விதத்தில் தற்காப்புக்காகவும், யுத்தத்திற்காகவும் தனது பங்கைச் செய்யும்படி தூண்ட வல்லவை.

3. பிரித்தாளும் கொள்கையைப் பின்பற்றிவரும் அந்நிய ஆட்சியை அகற்றுவதன் மூலம் சமூக ஒற்றுமை ஏற்படும்படி செய்ய வேண்டும். அந்நியர் ஆட்சி மறைந்த பின், இந்திய மக்களிடையே உள்ள எல்லாப் பிரிவுகளின் பிரதிநிதிகளும் அடங்கிய தற்காலிக அரசாங்கத்தை அமைக்க வேண்டும்.

4. மானிட வர்க்கத்தில் அடிமைத்தனத்தில் ஆழ்த்தப்பட்டும் ஒடுக்கப்பட்டும் உள்ள எல்லோரையும் ஐக்கிய நாடுகளின் பக்கம் சேரும்படி செய்து, அந்த நாடுகள் தார்மிகத் துறையிலும் ஆன்மிகத் துறையிலும் உலகத்திற்கே தலைமை வகிக்கும்படி செய்ய வேண்டும்.

5. அந்நியரின் ஆதிக்கத்திலுள்ள ஆசிய நாடுகள் சுதந்திரம் பெற உதவி செய்ய வேண்டும். மறுபடியும் அவை ஏதாவதொரு காலனி வல்லரசின் ஆதிக்கத்திற்கு உட்பட்டுவிடாமல் இருக்க வழிவகை செய்ய வேண்டும்.

6. ஓர் உலக ஐக்கிய முறையை அமலுக்குக் கொண்டு வந்து, தேசீய ராணுவம், கடற்படைகள், விமானப் படைகள் முதலியவற்றைக் கலைத்துவிட வேண்டும். எல்லோருடைய பொதுவான நலனுக்காகவும் உலகத்தின் சாதன பலத்தை ஓரிடத்தில் சேமித்து வைக்க வேண்டும்."

மேற்கண்டவற்றில் முதலாவது நோக்கம், அதாவது இந்தியாவிலிருந்து அந்நியரின் ஆதிக்கத்தை அகற்றுவது என்பது உண்மையானதென்பதை அறிக்கையின் கர்த்தா ஒப்புக்கொண்

திள்ளார். அதுதான் வெகு காலமாக காங்கிரசின் லட்சியமாக இருந்து வந்திருக்கிறது. "இந்தியாவிலிருந்து வெளியேறுக" என்ற இயக்கத்தின் நோக்கத்திற்கு அந்த லட்சியம் முரண்பாடானதல்ல. அப்படியிருந்தும், முதலாவது நோக்கம் உண்மையானது என்பதை ஒப்புக்கொண்டுள்ள அவர், தீர்மானங்களிலுள்ள மற்ற அம்சங்களைக் கேலி செய்வது விசித்திரமாக இருக்கிறது. மற்றவையெல்லாம் முதலாவது நோக்கத்தைத் தொடர்ந்து இயல்பாக வருபவை என்பதே எனது அபிப்பிராயமாகும். உதாரணமாக, சமரச ஒப்பந்தத்தின் மூலம் அந்நியர் ஆதிக்கம் போய்விடுமாயின், பிரிட்டனுக்கு விரோதமாக உள்ள துவேஷம் யாதொரு தூண்டுதலுமின்றியே நல்லெண்ணமாக மாறிவிடுகிறது. பின்னர் கோடிக்கணக்கான மக்களின் சக்தி, நேச தேசங்களின் லட்சியத்திற்குச் சாதகமாக இருப்பதற்கான வழி பிறக்கிறது. அதுபோலவே, அந்நியர் ஆதிக்கமாகிற இருள் மறைந்ததும், இரவை பகல் பின் தொடருவது போல் சமூக ஒற்றுமை பின் தொடருகிறது. சற்றேறக்குறைய 40 கோடி மக்கள் விடுதலை பெறும்போது, மானிடவர்க்கத்தைச் சேர்ந்த மற்ற மக்களும் விடுதலை பெறுவர். அந்த விடுதலைக்குக் காரணமான நேச தேசங்களை, அவைகள் கேட்காமலேயே உலகத்தின் தார்மிக, ஆன்மிகத் தலைமைப் பதவி வந்தடைகின்றது.

காங்கிரசுக்கு எதிராக அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகளைப் பற்றிய விவரங்கள் அந்த அறிக்கையில் எதுவுமில்லை. ஆனால் அரசாங்கம் மேற்கொண்ட முறைகளைப் பற்றி பத்திரிகைகளில் வெளியாவதற்கு அனுமதிக்கப்பட்ட விஷயங்களை நம்புவதாயின், அரசாங்கத்தின் அடக்குமுறைகளுக்கு எதிரே, கோபாவேசம் கொண்ட மக்களின் தவறான நடவடிக்கைகள் மிகவும் அற்பமாகிவிடுகின்றன.

44. ஆகஸ்டு 9-ஆம் தேதி எல்லோரையும் கூண்டோடு கைது செய்தபின் நிகழ்ந்த சம்பவங்களுக்கு யார் பொறுப்பாளி என்பதை இப்போது கவனிப்போம். மிகவும் இயற்கையான முறையில் கவனிப்போமாயின், தலைவர்களை அரசாங்கம் கைது செய்த பிறகே கலவரங்கள் ஏற்பட்டதால், கலவரங்களுக்கு அரசாங்கம் கைது செய்ததுதான் காரணமாகும். குற்றச்சாட்டுகள் அடங்கிய அரசாங்க அறிக்கையின் தலைப்பு எடுத்துக்காட்டுவது போல், ஏற்பட்ட கலவரங்களுக்கு காங்கிரஸ் மீது பொறுப்பைச் சுமத்த வேண்டும் என்பதே அதன் நோக்கம் என்பது தெளிவாகிறது. அரசாங்கத்தின் வாதம் இதுதான்:

பிரிட்டிஷார் இந்தியாவை விட்டு வெளியேற வேண்டும் என்ற அபிப்பிராயத்தை நான் முதன் முதலாக 1942 ஏப்ரல் மாதம் வெளியிட்டேன். அதிலிருந்து நானும் பிறகு காங்கிரசும் ஒரு பொதுஜன இயக்கத்திற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தோம். பொதுஜன இயக்கமானது பலாத்காரத்தில் வந்துதான் முடியும். நானும், நான் காட்டும் வழியை ஒப்புக்கொண்ட காங்கிரஸ்வாதிகளும், பலாத்கார நடவடிக்கைகள் நிகழ வேண்

டும் என்ற நோக்கத்துடனேயே இருந்தோம். தலைவர்கள் பலாத்காரத்தை உபதேசித்தும் வந்தார்கள். கலகங்கள் ஏற்படவேண்டும் என்பதே அவர்களுடைய உத்தேசம். பலாத்கார இயக்கம் ஆரம்பமாகும் என்பதை முன்பே அரசாங்கம் அறிந்து எல்லோரையும் கைது செய்து பலாத்காரத்தை முளையிலேயே கிள்ளி எறிந்துவிட்டது. அரசாங்கம் வெளியிட்ட குற்றச்சாட்டு அறிக்கையின் வாதமும் சாரமும் இதுதான்!

பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேற வேண்டும் என்ற எனது யோசனையின் காரணமாக பொதுஜன இயக்கத்திற்கான ஏற்பாடுகள் எதுவும் நடைபெறவில்லை; அவ்வித ஏற்பாடுகளைச் செய்ய நாங்கள் உத்தேசிக்கவுமில்லை; நானோ அல்லது காங்கிரஸ் தலைவர்களில் எவருமோ பலாத்காரம் நிகழ வேண்டுமென்று ஒரு போதும் எண்ணியதில்லை; காங்கிரஸ்வாதிகள் பலாத்கார வெறியாட்டம் எதிலாவது ஈடுபட்டால் என்னை உயிருடன் காண முடியாமற் போகலாம் என்றும் நான் பிரகடனம் செய்தேன்; பொது ஜன இயக்கம் என்னால் ஆரம்பிக்கப்படவேயில்லை; அதை ஆரம்பிக்கும் முழுப் பொறுப்பும் என்னிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது; நான் அரசாங்கத்துடன் சமரசப் பேச்சு நடத்த உத்தேசித்தேன்; சமரசப் பேச்சு முறிந்துவிட்டால்தான் இயக்கத்தை நான் ஆரம்பிக்க வேண்டும் என்று முடிவாகியிருந்தது; சமரசப் பேச்சிற்காக இரண்டு அல்லது மூன்று வார காலம் அவகாசம் கொடுக்கவும் உத்தேசித்திருந்தேன்;—இவற்றையெல்லாம் நான் முன்பே எடுத்துக் காட்டியிருக்கிறேன். எனவே அரசாங்கம் கைது செய்யாமல் இருந்திருந்தால், ஆகஸ்டு 9-ஆம் தேதியும் அதற்குப் பிறகும் நிகழ்ந்த சம்பவங்கள் ஏற்பட்டிரா என்பது தெளிவாகும். முதலாவதாக, சமரசப் பேச்சுகள் வெற்றிபெறுவதற்காக நான் பெரு முயற்சி செய்திருப்பேன். இரண்டாவதாக, நான் அம்முயற்சியில் தோல்வியுற்றால், கலகங்களைத் தவிர்க்க முயற்சி செய்திருப்பேன். சென்ற ஆகஸ்டில் இருந்ததைக் காட்டிலும் அரசாங்கத்தின் அடக்குமுறை சக்தி பின்னர் குறைந்து போயிராது; பின்னர் என்மீதும் காங்கிரஸ் மீதும் அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்வதில் நியாயமும் இருந்திருக்கும். எனவே, நடவடிக்கை எடுக்கு முன் அரசாங்கம், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் நானும் காங்கிரஸ் தலைவர்களும் நிகழ்த்திய பிரசங்கங்களைப் பரிசீலனை செய்திருக்க வேண்டியது கடமையாகும்.

45. தற்போதுள்ள நிலையில், மிகவும் சக்தி வாய்ந்த சாதனங்களுடன் இருக்கும் ஓர் அரசாங்கத்திற்கு எதிராக மேற்கொள்ளும் எந்த பலாத்கார இயக்கமும் வெற்றிபெற முடியாது என்பதை காங்கிரஸ் தலைவர்கள் அறிவர். அதற்காகவாவது இயக்கம் சாத்துவிகமானதாக இருக்கவேண்டும் என்பதில் அவர்கள் ஆர்வமுடையவர்களாக இருந்தார்கள். எனவே மக்கள், அவர்கள் காங்கிரஸ்வாதிகளாயினும் அல்லவாயினும், எத்தகைய பாலத்கார நடவடிக்கைளில் ஈடுபட்டிருந்தாலும்

அவை தலைவர்களின் விருப்பத்திற்கு விரோதமாகச் செய்யப்பட்டவையே. அரசாங்கத்தின் அபிப்பிராயம் இதற்கு மாருக இருந்தால், அவர்கள் அதைப் பாரபட்சமற்ற ஒரு நீதிச் சபையின் முன்னிலையில் சந்தேகத்திற்கு இடமின்றி நிரூபிக்க வேண்டும். கலவரங்களுக்கான காரணம் இவ்வளவு தெளிவாக இருக்கும் போது, பொறுப்பை வேருெருவர் மீது சுமத்த ஏன் முற்பட வேண்டும்? இந்தியா முழுவதும் ஏராளமானவர்களைக் கைதுசெய்ய முற்பட்ட அரசாங்கத்தின் நடவடிக்கை மிகவும் பலாத்காரமானது. அதனுலேயே, காங்கிரஸ்மீது அனுதாபம் கொண்ட மக்கள் தன்னடக்கத்தை இழந்தனர். எனவே, மக்கள் தன்னடக்கத்தை இழந்ததற்கு, காங்கிரஸ்தான் உடந்தையாக இருந்தது என்று கூறிவிட முடியாது. மனித இயல்பின் சகிக்கும் சக்திக்கு எல்லை உண்டு என்பதே அதற்குக் காரணமாகும். அரசாங்கத்தின் நடவடிக்கை மனித இயல்பின் சகிக்கும் சக்தியை மீறிப்போய்விட்டதால், பின்னர் ஏற்பட்ட பலாத்கார எழுச்சிக்கு அரசாங்கமும் அரசாங்கத்தின் கர்த்தாக்களும்தான் பொறுப்பாளிகள் ஆவர். ஆனுல், கைது செய்ய வேண்டியது அவசியமாகியது என்று அரசாங்கம் கூறலாம். அப்படியாயின், அவர்களுடைய நடவடிக்கைகளால் ஏற்பட்ட விளைவுகளுக்கான பொறுப்பை ஏற்றுக்கொள்ள அவர்கள் ஏன் கூச்சப்பட வேண்டும்? தங்களுடைய விருப்பம் தான் சட்டம் என்பதை அரசாங்கம் அறிந்திருக்கும்போது, தங்களுடைய நடவடிக்கைகள் நியாயமானவை என்று ஸ்தாபிக்க வேண்டிய அவசியம் என்ன ஏற்பட்டது என்பதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

46. இப்போது இங்கே அமலில் இருந்துவரும் அரசாங்க முறையைப் பரிசீலனை செய்ய விரும்புகிறேன். மிகப் புராதனமான நாகரிகத்தைக்கொண்ட சற்றேறக் குறைய நாற்பது கோடி மக்கள் அடங்கிய ஒரு ஜன சமூகத்தை, வைஸ்ராய் என்றும் கவர்னர் ஜெனரல் என்றும் கூறப்படும் ஒரு பிரிட்டிஷ் பிரதிநிதி ஆட்சி புரிந்துவருகிருர். அவருக்கு உதவியாக கலெக்டர்கள் என்று கூறப்படும் 250 அதிகாரிகள் இருக்கிருர்கள். அவர்களுக்குப் பக்கபலமாக பலம் பொருந்திய பிரிட்டிஷ் படைகளும், பிரிட்டிஷ் அதிகாரிகளால் பயிற்சி அளிக்கப்பட்ட இந்திய சிப்பாய்களும் இருக்கிருர்கள். அவர்கள் மக்களுடன் எவ்விதத் தொடர்புமின்றி மிகவும் ஜாக்கிரதையாகப் பிரித்து வைக்கப்பட்டிருக்கிருர்கள். வைஸ்ராய்க்கு, அவரது நிர்வாகம் சம்பந்தப்பட்டவரையில் பிரிட்டிஷ் மன்னரைக் காட்டிலும் அதிகமான அதிகாரங்கள் உண்டு. கலெக்டர்களோவெனில், அவர்களுடைய எல்லையில் குட்டி வைஸ்ராய்களாகத் திகழ்கிருர்கள். அவர்களுடைய பெயர்களுக்கேற்ப, அவர்களுடைய முழு முதற்கடமை அவரவருடைய ஜில்லாக்களில் வரி வசூல் செய்வதேயாகும். தண்டனை விதிக்கும் அதிகாரங்களும் அவர்களுக்கு உண்டு. அவர்களுக்கு அவசியமாகத் தோன்றும்போது, தங்களுக்கு உதவியாக ராணுவப் படைகளை அவர்கள் தருவித்துக் கொள்ள

லாம். அவர்களுடைய எல்லைக்கு உட்பட்டிருக்கும் சிறிய ராஜாக்களுக்கும் அவர்கள்தான் அரசியல் ஏஜண்டுகளாவர். அவர்களே அந்த ராஜாக்களின் எஜமானர்கள் எனலாம்.

47. இத்தகைய நிலையை காங்கிரசுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். காங்கிரஸ், உலகிலேயே மிகவும் உண்மையான ஜனநாயக ஸ்தாபனமாகும். அதற்குக் காரணம், அதன் எண்ணிக்கையின் பலம் அல்ல. அதற்குள்ள ஒரே அதிகாரம், அது வேண்டுமென்றே மனப்பூர்வமாக மேற்கொண்டுள்ள சாத்துவிகக் கொள்கையேயாகும். ஆரம்பத்திலிருந்தே காங்கிரஸ் இந்தியா முழுவதற்குமே பிரதிநிதித்துவம் வகிக்க முயற்சிக்கும் ஒரு ஜனநாயக ஸ்தாபனமாக இருந்து வந்திருக்கிறது. அம்முயற்சி எவ்வளவு அற்பமாக இருப்பினும், எவ்வளவு குறைகள் உள்ளதாக இருப்பினும், காங்கிரஸ் தனது அறுபது வருட வரலாற்றில் இந்தியாவின் விடுதலையாகிற துருவ நட்சத்திரத்திலிருந்து தனது பார்வையை அப்பால் அகற்றியதே இல்லை. உண்மையான ஜனநாயகத்தை நோக்கி அது ஒவ்வொரு கட்டமாக முன்னேறி வந்திருக்கிறது. பிரிட்டனிடமிருந்துதான் காங்கிரஸ் ஜனநாயக தத்துவத்தைக் கற்றுக்கொண்டது என்று கூறப்படுமாயின், - அவ்விதமேதான் கூறப்பட்டுவருகிறது-எந்த காங்கிரஸ்வாதியும் அதை ஒரு பெரிய விஷயமாக எண்ணி மறுக்க முற்படமாட்டார். எனினும், அந்த ஜனநாயகத்தின் வேர்களை இந்தியாவில் அமலில் இருந்துவந்த பழைய பஞ்சாயத்து நிர்வாகத்தில் காணலாம். அதனால் நாஜிசத்தையோ, பாசிஸ்டு கொள்கையையோ அல்லது ஜப்பானியரின் ஆதிக்கத்தையோ சகித்துக் கொண்டிருக்க முடியாது. காங்கிரஸ் ஸ்தாபனத்தின் மூச்சே விடுதலைதான். அது, மிகவும் சக்திவாய்ந்த, கட்டுக்கோப்பான ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடி வருகிறது; எத்தகைய ஆதிக்கத்தையும் எதிர்க்கும் முயற்சியில் கடைசி மனிதர் வரையில் உயிர்விடவும் தயாராக இருக்கிறது. அது அகிம்சையை உறுதியாகப் பற்றிக்கொண்டிருக்கும் வரையில், அதை யாரும் எதிர்க்க முடியாது, அதை எதிர்த்து யாரும் வெற்றி பெறவும் முடியாது.

48. காங்கிரஸ்மீது தனக்குள்ள பேராத்திரத்தை அரசாங்கம் வெளிக்காட்டிக் கொண்டுவிட்டது. அந்த ஆத்திரத்திற்குக் காரணம் எதுவாக இருக்க முடியும்? அத்தகைய ஆத்திரத்தை அரசாங்கம் இதற்குமுன் வெளிக்காட்டியதில்லை. "பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேற வேண்டும்" என்ற யோசனை அந்த ஆத்திரத்துக்குக் காரணமா? இந்தியாவில் ஏற்பட்ட கலகங்கள் அவர்களுடைய ஆத்திரத்துக்குக் காரணமாக இருக்க முடியாது. ஏனெனில், பிரிட்டிஷார் வெளியேற வேண்டும் என்ற எனது யோசனை வெளியான உடனேயே அவர்களுக்கு ஆத்திரம் மூண்டுவிட்டது. அவர்களுடைய ஆத்திரம் ஆகஸ்டு மாதம் 9-ஆம் தேதி தலைவர்களைக் கூண்டோடு கைது செய்வதில் வந்து முடிந்தது. தலைவர்களைக் கைதுசெய்ய அவர்கள் முன் கூட்டியே முடிவு செய்துவிட்டார்கள். அதற்கு ஒரு

சாக்கு கிடைக்க வேண்டும் என்பதற்காக ஆகஸ்டு 8ஆம் தேதி காங்கிரஸ் தீர்மானம் நிறைவேறும் வரையில் காத்துக்கொண்டிருந்தார்கள். பிரிட்டிஷ் ஆட்சி வெளியேற வேண்டும் என்ற யோசனையைத் தவிர, அந்தத் தீர்மானத்தில் புதுமை எதுவும் இல்லை. 1920-லிருந்து காங்கிரஸ் திட்டத்தில் பொதுஜன இயக்கங்கள் இடம் பெற்று வந்திருக்கின்றன. எனினும், சுதந்திரம் மாத்திரம் கைக்கு எட்டவில்லை. ஒரு சமயம் ஹிந்து-முஸ்லிம் வேற்றுமை, மற்றொரு சமயம் இந்திய மன்னர்களுக்கு பிரிட்டன் அளித்த உறுதி மொழிகள், வேறொரு சமயம் ஷெட்யூல் வகுப்பினரின் நலன்கள், பிறிதொரு சமயம் ஐரோப்பியர்களின் நலன்கள் முதலியவை சுதந்திரத்திற்கு முட்டுக்கட்டையாக இருந்துவந்திருக்கின்றன. பிரித்தாளும் தந்திரம், பிரிட்டிஷாருக்கு வற்றாத ஒரு கிணறாக இருந்து வந்திருக்கிறது. காலமோ வேகமாகச் சென்று வருகிறது. யுத்தத்தில் ஈடுபட்டுள்ள நாடுகளிடையே ரத்தம் ஆறுகளாக ஓடி வருகின்றது. ஆனால், அரசியலில் பற்றுக் கொண்ட இந்தியா அதைத் தவிர்க்க முடியாத நிர்க்கதியான நிலைமையில் இருந்து கொண்டு அதைப் பார்த்துவருகிறது. மக்களும் உணர்ச்சியற்றவர்களாக இருந்துவருகிறார்கள். "இந்தியாவிலிருந்து வெளியேறுக" என்ற கூக்குரல் எழுந்ததற்கு அது தான் காரணம். அது. விடுதலை இயக்கத்திற்கு ஓர் உருவை அளித்தது. அந்தக் கூக்குரல் ஆட்சேபிக்க முடியாதது. உலக நெருக்கடியில் தங்களுடைய பங்கைச் செய்ய ஆர்வம் கொண்டிருந்தவர்கள், அந்த வேதனைக் கூக்குரலில் தங்களுக்கு ஒரு வழி ஏற்பட்டிருப்பதைக் கண்டார்கள். காங்கிரஸ் கோரிக்கையைத் திருப்திசெய்வது, பிற்போக்கான கூட்டு சக்திகளுக்கு எதிராக ஜனநாயகம் வெற்றிபெறும்படி செய்வதேயாகும். அவ்விதம் வெற்றி பெறுவதன்மூலம், முறையே ஜப்பான், ஜெர்மனி நாடுகளின் அபாயகரமான ஆக்கிரமிப்பிலிருந்து சீனாவையும் ருஷ்யாவையும் விடுவிக்கமுடியும். ஆனால், காங்கிரசின் கோரிக்கை அரசாங்கத்துக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது. அந்தக் கோரிக்கையில் சம்பந்தப்பட்டவர்கள் மீது அரசாங்கத்துக்கு அவநம்பிக்கை ஏற்பட்டது. அதன் விளைவாக அவர்கள் தாங்களே யுத்த முயற்சிக்கு பெரும் முட்டுக்கட்டையாகி விட்டார்கள். யுத்த முயற்சிக்கு காங்கிரஸ் தடையாக இருப்பதாகக் குற்றஞ்சாட்டுவது தவறாகும். ஆகஸ்டு 8ஆம் தேதி இரவு வரையில் காங்கிரசின் நடவடிக்கைகள், தீர்மானங்களை நிறைவேற்றுவதோடு நின்றிருந்தன. 9ஆம் தேதி உதயமானபோது காங்கிரசே சிறைப்பட்டுவிட்டது. பின்னர் நிகழ்ந்தவையெல்லாம் அரசாங்க நடவடிக்கைகளின் நேரடியான பலனேயாகும்.

49. தங்களின் நியாயமான, கௌரவமான ஆர்வத்தைக் குறித்து அரசாங்கத்திற்கு ஏன் இவ்வளவு ஆத்திரம் ஏற்பட வேண்டும்? யுத்தத்திற்குப் பிறகு ஜனநாயகத்தைப் பாதுகாப்பதாகவும், சுதந்திரம் அளிப்பதாகவும் அரசாங்கம் கூறுவதில் மக்களுக்குள்ள சந்தேகத்தை அதன் நடவடிக்கைகள் உறுதிப்

படுத்தியிருக்கின்றன. அரசாங்கம் அந்தரங்க சுத்தியுடன் இருந்தால், காங்கிரஸ் அளிப்பதாகக் கூறிய உதவியை அது வரவேற்றிருக்கும். சென்ற அரை நூற்றாண்டுக்கு மேலாக இந்தியாவின் விடுதலைக்காகப் போராடிவரும் காங்கிரஸ்வாதிகளும், புதிதாகப் பெற்ற இந்தியாவின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காக நேச தேசங்களுடைய கொடியின் கீழ் ஒன்று சேர்ந்திருப்பார்கள். ஆனால், காங்கிரசை சமத்துவமான பங்காளியாகவும், கூட்டாளியாகவும் நடத்த அரசாங்கம் விரும்பவில்லை. அந்தக் கோரிக்கையைக் கொண்டுவந்தவர்களை அரசாங்கம் செயலற்றிருக்கும்படி செய்து விட்டது. காங்கிரஸ்வாதிகளில் சிலர் அபாயகரமான குற்றவாளிகளைப்போல் வேட்டையாடப்பட்டு வருகிறார்கள். ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயணனையும் அவரைப் போன்ற மற்றவர்களையும் மனத்திற்கொண்டே நான் இவ்விதம் கூறுகிறேன். ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயண் மறைந்திருக்கும் இடத்தைக் காட்டுவோருக்கு ரூ. 5000 வெகுமதி தருவதாக சர்க்கார் வாக்குறுதி அளித்திருக்கிறார்கள். இப்போது அந்த வெகுமதித் தொகை இரட்டிப்பாக்கப்பட்டிருக்கிறது!

50. நான் வேண்டுமென்றே ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயணனை உதாரணமாகக் கொடுத்திருக்கிறேன். ஏனெனில், பல மூலாதாரமானப் பிரச்னைகளையொட்டியும் அவர் என்னுடன் கருத்து வேற்றுமை கொண்டவராக இருப்பதாக அவர் கூறுவது முற்றிலும் சரியே. எங்களிடையே மிகவும் அதிகமான கருத்து வேற்றுமைகள் இருப்பினும், யாராலும் குலைக்க முடியாத அவரது தைரியத்தையும், தியாகத்தையும் குறித்து நான் கண்களை மூடிக் கொண்டிருப்பதற்கில்லை. வாழ்க்கையில் இன்றியமையாதவை என்று மனிதன் கருதும் அருமை பெருமைகளையெல்லாம், தேசத்தின்மீதுள்ள பக்தி காரணமாக, அவர் தியாகம் செய்துள்ளார். அவரது அறிக்கையை நான் வாசித்தேன். அது அரசாங்கக் குற்றச்சாட்டின் இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் காணப்படும் அவரது அபிப்பிராயங்கள் சிலவற்றை நான் ஆதரிக்க முடியாது என்றாலும், அந்த அறிக்கை கனல் கக்கும் அவரது தேசபக்தியையும், அந்நியர் ஆதிக்கத்தின் விஷயத்தில் அவரது பொறுமையின்மையையும் வெளியிடுகின்றது. அது, உலகிலுள்ள எந்த நாடும் பெருமைப்படவேண்டிய ஒரு சிறந்த குணமாகும்.

51. காங்கிரஸ் நிர்மாண இலாக்காவைச் சேர்ந்த மிகத் திறமைசாலிகளையும் அரசாங்கம் சிறைப்படுத்திவிட்டது. அதனால் யுத்த காலத்துக்கு இன்றியமையாத கைத்தொழில்களின் முன்னேற்றம் ஏற்படுவதற்கு வழியிராமற் போய்விட்டது. அகில இந்திய நூற்போர் சங்கம் யாதொரு ஆடம்பரமுமின்றி, ஏழைக் கிராமவாசிகளுக்குச் சம்பளமாக மூன்று கோடி ரூபாய்க்கு மேல் விநியோகம் செய்திருக்கிறது. ஆனால், இப்போது அவர்களை



1942-இல் நிகழ்ந்த கலவரங்களில் போலீசாரின் துப்பாக்கிப் பிரயோகத்திற்குப் பலியான ஏராளமானவர்களில் ஒருவர்.



1942-இல் மக்கள் கூட்டத்தில் போலீசார் கண்ணீர்ப் புகையை உபயோகிக்கின்றனர்.

யாரும் அணுகவில்லை. அவர்களுடைய உழைப்பெல்லாம் உபயோகப்படுத்தப்படாமல் வீணாகிவருகிறது. அரசாங்கத்தின் அடக்குமுறை அவர்களையும் விடவில்லை. அச்சங்கத்தின் தலைவரான ஸ்ரீ ஜாஜூஜியும் அவரது சக ஊழியர்களில் பலரும் விசாரணையின்றி, யாதொரு காரணமுமின்றி சிறைப்படுத்தப்பட்டிருக்கிறார்கள். தரும சொத்துக்களான கதர் ஸ்தாபனங்கள் அரசாங்கத்தினால் பறிமுதல் செய்யப்பட்டுள்ளன. எந்தச் சட்டத்தின்கீழ் அந்த சொத்துக்களைப் பறிமுதல் செய்தார்கள் என்பது தெரியவில்லை. இதில் துக்ககரமான விஷயம் என்னவெனில், துணிகளை உற்பத்தி செய்து விநியோகிக்கும் அந்த ஸ்தாபனங்களின் சொத்துக்களைப் பறிமுதல் செய்தவர்களாலும் அவற்றை நடத்த முடியவில்லை. கதர்த் துணிகளையும், ராட்டினங்களையும் அதிகாரிகள் எரித்துவிட்டதாகவும் கூறப்படுகிறது. குமரப்பா சகோதரர்களால் நடத்தப்படும் அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கமும், அதே கதிக்கு இலக்காகியிருக்கிறது. ஸ்ரீ வினோபா பாவே ஒரு ஸ்தாபனத்தைப் போன்றவர். அவருடைய மேற்பார்வையில் பல ஊழியர்கள் இடைவிடாமல் ஆக்கவேலைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆக்கவேலைகளைச் செய்துவரும் ஸ்தாபனங்களில் உள்ள பெரும்பாலான ஆடவர்களும் பெண்களும் அரசியல் ஊழியர்கள் அல்ல. மிக மிகச் சிறப்பு வாய்ந்த ஆக்க வேலைகளில் அவர்கள் மனப்பூர்வமாக ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களில் சிலர் அரசியல் துறையில் ஈடுபட வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்குமாயின், அதற்குக் காரணம் என்ன என்பதை அரசாங்கம் ஆலோசித்துப் பார்க்க வேண்டும். அத்தகைய ஸ்தாபனங்களையும், அவைகளின் மேற்பார்வையாளர்களையும் சிறைப்படுத்துவது, யுத்த முயற்சிகளில் தலையிடும் மன்னிக்க முடியாத செய்கை என்பதே எனது அபிப்பிராயமாகும். இந்திய மக்கள் உணவு, உடை முதல் வாழ்க்கைக்கு இன்றியமையாத பல சாதனங்களும் போதிய அளவு கிடைக்காமல் கஷ்டப்பட்டு வருகையில், துரதிர்ஷ்டம் வாய்ந்த இந்த நாட்டிலிருந்து எல்லையற்ற மனித பலமும், சாதன பலமும் கிடைத்துவருவதாக உயர்தர அதிகாரிகள் மகிழ்ச்சியுடன் பிரகடனம் செய்வது விந்தையாக இருக்கிறது. இந்தியா முழுவதும் காங்கிரஸ்வாதிகளைச் சிறைப்படுத்தாமல் அவர்களுடைய தொண்டை அரசாங்கம் உபயோகப்படுத்திக் கொண்டிருக்குமாயின், அந்தச் சாதனங்களின் பற்றுக்குறையை அடியோடு ஒழிக்க முடியாவிட்டாலும் பெரிதும் தணித்திருக்கலாமென நான் தைரியமாகக் கூறுவேன். காங்கிரஸ் ஸ்தாபனங்கள் திறம்பட வேலை செய்ததற்கு, குறிப்பிடத்தக்க இரண்டு உதாரணங்களை அரசாங்கம் அறியும். டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் தலைமையில் காங்கிரஸ்வாதிகள் பயங்கரமான பீகார் பூகம்பத்தைச் சமாளித்ததையும், சர்தார் வல்லபாய் பட்டேல் தலைமையில், அதைப் போலவே பயங்கரமான குஜராத் வெள்ளக் கொடுமையைச் சமாளித்ததையுமே குறிப்பிடுகிறேன்.

52. குற்றச் சாட்டுகளுக்கு நான் அளிக்கும் பதிலின் இறுதிக் கட்டத்துக்கு இப்போது வருகிறேன். நான் விரும்பியதைக் காட்டிலும் அதிகமாக இந்தக் கடிதம் நீண்டுவிட்டது. இதைத் தயாரிக்கும் விஷயமாக எனது உழைப்புக்கும் எனது சக ஊழியர்களின் உழைப்புக்கும் எல்லையே இல்லை. எனக்கும், நான் பிரதிநிதியாக இருக்கும் லட்சியத்திற்கும் நீதி வழங்குவதாயின், இந்தக் கடிதத்தைப் பிரசுரிக்கும்படி அரசாங்கத்தை நான் கேட்க வேண்டும். எனினும் இக்கடிதத்தின் முக்கிய நோக்கம் என்னவெனில், காங்கிரசுக்கும் எனக்கும் எதிராக் அரசாங்கம் தயாரித்துள்ள குற்றச் சாட்டுகளுக்கு ஆதாரம் இல்லை என்பதை அரசாங்கம் உறுதியாக அறிந்து கொள்ளவேண்டும் என்பதுதான். அரசாங்கத்தின் குற்றச் சாட்டுகளை இந்தியப் பொதுமக்கள் நம்பவில்லை என்பதையும், வெளிநாடுகளில் பிரசாரம் செய்வதற்காகவே அதை அரசாங்கம் தயாரித்திருப்பதாகப் பொது மக்கள் கருதுகிறார்கள் என்பதையும் அரசாங்கம் அறியும். சர் தேஜ் பகதூர் சாப்ரூ, ஸ்ரீ எம். ஆர். ஜெயக்கர் போன்றவர்கள், அரசாங்க அறிக்கையில் காணப்படும் குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரமாகக் கூறப்பட்டுள்ள சாட்சியங்கள் நீதி மன்றங்களில் செல்லுபடியாகா என்று தங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். எனவே அரசாங்கம் தங்களுடைய குற்றச் சாட்டுகள் அடங்கிய அறிக்கையை வாபஸ் செய்து கொள்ள வேண்டும். காவலில் வைக்கப்பட்டுள்ள கைதிகளுக்கு எதிராகத் தங்கள் வசமுள்ள "சாட்சியங்கள் மதிப்புவாய்ந்தவை" என்று அரசாங்கம் கூறுகிறது. அரசாங்கத்திற்கு அந்த சாட்சியங்களை வெளியிட முடியாவிடில், அவர்கள் காவற் கைதிகளை விடுதலை செய்துவிட்டு, பின்னர் அக்கைதிகள் குற்றம் செய்யும் சமயத்தில் அவர்களைக் கைது செய்து வழக்குத் தொடர வேண்டும். அரசாங்கத்திற்கு எல்லையற்ற அதிகாரம் இருக்கிறது. எனவே அவர்கள் ருஜுப்பிக்க முடியாத குற்றச் சாட்டுகளைத் தயாரிக்க வேண்டிய தேவையில்லை.

53. குற்றச் சாட்டுகள் அடங்கிய அந்த அறிக்கை அரசாங்கத்தின் வெளியீடாயினும், யாருக்கும் தெரியாத அதன் கர்த்தாவை நான் கண்டித்திருக்கிறேன். எந்த தஸ்தாவேஜுகளை அடிப்படையாகக் கொண்டு அந்த அறிக்கை தயாரிக்கப்பட்டதோ அவற்றைத் தனி நபர்களான அரசாங்க மந்திரிகள் வாசித்திருக்கமாட்டார்கள் என்பதே எனது நம்பிக்கையாகும். அந்த தஸ்தாவேஜுகளை வாசித்தவர்கள், அறிக்கையில் மலிந்து கிடக்கும் ஊகங்களையும், மறைமுகமான தாக்குதல்களையும் ஆதரிக்கமாட்டார்கள் என்பதே எனது அபிப்பிராயமாகும்.

54. கடைசியாக நான் ஒன்று கூறவிரும்புகிறேன். அரசாங்கத்தின் குற்றச் சாட்டைப் பரிசீலனை செய்வதில் நான் எங்கேயாவது தவறு செய்திருப்பேனாயின், அந்தத் தவறை என்னிடம்

சுட்டிக் காட்டினால் நான் அதை மகிழ்ச்சியுடன் திருத்திக் கொள்வேன். என் மனத்திற்குத் தோன்றியதையே நான் எழுதியிருக்கிறேன்.*

தங்கள்,
மோ. க. காந்தி

## 77

சிறைமுகாம்,
10-9-1943

காரியதரிசி,
உள்துறை இலாகா, இந்திய அரசாங்கம்,
புதுடில்லி,

ஐயா,

"1942-43 கலவரங்களுக்கு காங்கிரஸ் பொறுப்பு" என்ற தலைப்புடன் இந்திய அரசாங்கம் வெளியிட்ட அறிக்கைக்கு நான் எழுதிய பதிலை உங்களுக்கு அனுப்புவதற்காக சிறைமுகாம் சூபரின்டெண்டிடம் 15-7-1943-இல் கொடுத்தேன். அதற்குப் பதில் அனுப்புவது இருக்கட்டும். அந்தக் கடிதம் வந்து சேர்ந்ததாகக்கூட இதுவரை எனக்கு எவ்விதத் தகவலும் இல்லை. அந்த வெளியீட்டில் குறிப்பிட்டிருந்த குற்றச்சாட்டுகளை நான் ஆதாரங்களுடன் முற்றிலும் மறுத்திருந்தேன்.

தங்கள்,
மோ. க. காந்தி

## 78

இந்திய அரசாங்கம்,
உள்துறை இலாகா, புது டில்லி,
20-9-1943

சர் ரிச்சர்டு டாட்டென்ஹாம்,
சி. எஸ். ஐ., ஸி. ஐ. ஈ., ஐ. ஸி. எஸ்., இடமிருந்து,
இந்திய அரசாங்கக் காரியதரிசி.

மோ. க. காந்தி அவர்களுக்கு,

ஐயா,

உங்களுடைய 10-9-1943 தேதியிட்ட கடிதத்துக்கு வருமாறு பதில் எழுதும்படி எனக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது. உங்க

* 77 பாராக்கள் உள்ள மேற்கண்ட கடிதம் இந்தத் தொகுப்பில் 54 பாராக்களாகச் சுருக்கிக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

ளுடைய 15-7-1943 கடிதம் கிடைத்தது. அது இன்னும் ஆலோசனையில் இருந்து வருகிறது.

தங்கள்,
ஆர். டாட்டென்ஹாம்,
இந்திய அரசாங்கக் காரியதரிசி.

# 'வியாக்கியானத்தை விரும்பவில்லை'

## 79

இந்திய அரசாங்கம்,
உள்துறை இலாகா, புது டில்லி,
14-10-1943

இந்திய அரசாங்கம் உள்துறை இலாகா
காரியதரிசியிடமிருந்து,

மோ. க. காந்தி அவர்களுக்கு,

ஐயா,

உங்களுடைய 15-7-1943 கடிதத்துக்குப் பதில் எழுதும்படி எனக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது. "1942-43 கலவரங்களுக்கு காங்கிரஸ் பொறுப்பு" என்ற அரசாங்க வெளியீட்டில் காணப்படும் சில பகுதிகளை நீங்கள் அக்கடிதத்தில் மறுக்க முயற்சித்திருக்கிறீர்கள். ஆரம்பத்திலேயே உங்களுக்கு நான் ஒரு விஷயத்தை நினைவுபடுத்துகிறேன். அந்த அறிக்கை, பொது மக்கள் அறிந்துகொள்ளுவதற்காக வெளியிடப்பட்டதே யன்றி உங்களைச் சமாதானப்படுத்துவதற்காகவோ அல்லது நீங்கள் உங்களுடைய எதிர்க்கட்சி வாதத்தை எடுத்துக் கூறுவதற்காகவோ வெளியிடப்பட்டதல்ல. உங்களுடைய வேண்டுகோளின் மீதே அது உங்களுக்கு அனுப்பப்பட்டது. அதை உங்களுக்கு அனுப்பிய அரசாங்கம், அதுபற்றி உங்களுடைய வியாக்கியானத்தைக் கோரவில்லை, விரும்பவுமில்லை. இருந்தாலும், அவ்விஷயமாக அரசாங்கத்திற்கு எழுதுவதுதான் சரி என்று நீங்கள் கருதியதால், உங்களுடைய கடிதத்தை அரசாங்கம் நன்கு ஆலோசித்தது என்பதை உங்களுக்குத் தெரிவிக்க வேண்டியவனாக இருக்கிறேன்.

உங்களுடைய கடிதத்தில் உங்களுடைய பிரசங்கங்களிலிருந்தும், கட்டுரைகளிலிருந்தும் நீண்ட மேற்கோள்கள் எடுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன என்றாலும், முக்கியமான பிரச்னைகளையொட்டி உங்களுடைய நிலைமையை விளக்கும் புதிய, திட்டவட்டமான குறிப்புகள் எதுவும் இல்லை என்பதைக் காண அரசாங்கம் வருந்துகிறது. நீங்களும் காங்கிரசும் மேற்கொண்டுள்ள நாசகரமான கொள்கையைத் தெளிவாக மறுத்தும் அதில் எதுவும்

காணப்படவில்லை. அரசாங்க அறிக்கையில் உங்களைப் பற்றித் தவறான புகார்கள் கூறப்பட்டிருக்கின்றன என்பதை வற்புறுத்து வதே உங்களுடைய கடிதத்தின் நோக்கம் என்று தோன்றுகிறது. ஆனால், அத்தகைய புகார்கள் எவை என்பது தெளிவாக்கப் படவில்லை. நீங்கள் ஜப்பானிடம் அனுதாபம் உடையவர் என்று குற்றம் சாட்ட அறிக்கையில் யாதொரு முயற்சியும் செய்யப்பட வில்லை. ஆனால் நீங்கள் ஆட்சேபித்துள்ள வாக்கியம் பண்டித ஜவாஹர்லால் நேருவின் சொந்த வார்த்தைகள் அடங்கிய ஒரு மேற்கோளேயாகும். அந்த வார்த்தைகளை அவர் மறுத்திருப்ப தாக நீங்கள் தவறாகக் கூறுகிறீர்கள். அவர் அவ்வார்த்தைகளை மறுக்கவேயில்லை. உங்களுடைய நடவடிக்கைகளுக்குக் காரணம் என்ன என்பதை விளக்குவதே அறிக்கையின் நோக்க மாகும். நேச தேசப்படைகள் உற்ற காலத்தில் வாபசானா லொழிய, இந்தியா ஒரு போர்க்களமாகிவிடும் என்பதும், அந்தப் போரில் ஜப்பானியர்களே வெற்றி பெறுவார்கள் என்பதுமே உங்களுடைய பீதியாகும். இந்த பீதி உங்களுக்கு உண்டு என்று பண்டித ஜவாஹர்லால் நேருவே கூறியிருக்கிறார். உங்களுடைய அலகாபாத் தீர்மானத்தின் நகலும் இதைத் தெளி வாகக் கூறுகிறது. ஜப்பானுடன் விருப்பப்படி சமரசம் செய்து கொள்ள உங்களுக்கும் காங்கிரசுக்கும் சுதந்திரம் இருக்க வேண்டும் என்பதே, "இந்தியாவிலிருந்து வெளியேறுக" இயக்கம், காங்கிரஸ் தீர்மானம் ஆகியவற்றின் நோக்கமாகும். இந்தக் குற்றச்சாட்டிற்குப் பதில் கூற உங்களுடைய கடிதத்தில் நீங்கள் முயற்சிக்கவில்லை என்பதை இந்திய அரசாங்கம் கவனித் திருப்பதால், அந்த நோக்கம் உண்மையானது என்றே அது கருதுகிறது. இந்த விளக்கம்தான் நீங்கள் ஏற்கனவே கூறிய தற்கும் முரணின்றி இருக்கிறது. "இந்தியாவில் பிரிட்டிஷார் இருப்பது, இந்தியாமீது படையெடுக்கும்படி ஜப்பானை அழைப் பதாகும். பிரிட்டிஷார் வெளியேறிவிட்டால், ஜப்பானுக்கு அந்த ஆசை ஏற்படுவதற்கில்லை" என்று நீங்கள் கூறினீர்கள். ஆனால் பின்னர் நீங்கள், இந்தியாவில் நேச தேசத் துருப்புகள் இருப் பதை அனுமதிக்க விரும்புவதாகக் குறிப்பிட்டீர்கள். இந்த இரண்டு கூற்றுகளுக்கும் உள்ள முரண்பாட்டையே அறிக்கை விளக்கியிருக்கிறது. இந்த முரண்பாட்டிற்கு வேறு எந்த வித மான விளக்கமும் கொடுக்க முடியவில்லை.

நீங்கள் எழுப்பியுள்ள மற்றும் பல விஷயங்களைக் குறித்தும் சமாதானம் கூறிக்கொண்டிருக்க இந்திய அரசாங்கம் விரும்ப வில்லை. நீங்கள் கூறியவற்றிற்கே, அந்தந்த நேரத்திற்குத் தகுந்த வாறு புதிய விளக்கம் கொடுப்பது உங்களுடைய வழக்கமாகி யிருக்கிறது. எனவே, முன்னுக்குப்பின் முரணான உங்களுடைய பிரசங்கங்களிலிருந்தும், நீங்கள் எழுதியவற்றிலிருந்தும் எத்த கைய அபிப்பிராயத்திற்கும் ஆதரவாக மேற்கோள்கள் காட் டுவது எளிது என்பதை அரசாங்கம் மறுக்கவில்லை. எனினும், நீங்கள் எழுதிய கடிதங்களில் முக்கியமான விஷயங்கள் விட்டுப்

போய்விட்டதாக நீங்களே ஒப்புக்கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் கூறியவற்றிற்கு அடிக்கடி நீங்களே விளக்க உரை கொடுக்கும்படியான அவசியமும் ஏற்பட்டிருக்கிறது. இவையெல்லாம், நெருக்கடியான சமயத்தில், இந்தியாவின் தற்காப்பு, உள்நாட்டு அமைதி முதலிய மிகவும் மூலாதாரமான விஷயங்களையொட்டி நீங்கள் எவ்வளவு சிந்தனையின்றிப் பேசுகிறீர்கள் என்பதற்கு உதாரணங்கள் ஆகும். உங்களுடைய அறிக்கைகளை அரசாங்கம் அவற்றிலுள்ள வார்த்தைகளின் தெளிவான அர்த்தத்தைக் கொண்டுதான் புரிந்துகொள்ள முடியும். நேர்மையான, விருப்பு வெறுப்பு இல்லாத ஒரு வாசகருக்கு என்ன அர்த்தம் தோன்றுமோ அதே அர்த்தம்தான் அரசாங்கத்திற்கும் தோன்றும். எனவே ''காங்கிரஸ் பொறுப்பு'' என்ற தலைப்பில் வெளியாகியுள்ள அறிக்கையில், உங்களுடைய பேச்சுகளையொட்டி முக்கிய விஷயங்களில் தவறான விளக்கம் எதுவும் கொடுக்கப்படவில்லை என்பதைக் குறித்து அரசாங்கம் திருப்தி அடைகின்றது.

1942 ஜூலை 14ஆம் தேதி வார்தாவில் நடந்த பத்திரிகைப் பிரதிநிதிகளின் மகாநாடு ஒன்றில், ''இன்னும் ஒரு சந்தர்ப்பம் அளிப்பதென்ற பேச்சிற்கே இடமில்லை; இதுதான் பகிரங்கமான புரட்சி ஆயிற்றே'' என்று நீங்கள் குறிப்பிட்டதாக அசோசியேடெட் பிரஸ் செய்தியொன்று கூறியது அவ்விதம் நீங்கள் கூறவில்லை என்று ஸ்தாபிப்பதற்காக உங்களுடைய கடிதத்தில் பெரும் பகுதியைச் செலவழித்திருக்கிறீர்கள். அப்போது அச்செய்தி இந்தியா முழுவதுமுள்ள பத்திரிகைகளில் வெளியாகியது. ஆனால் அதைப்பற்றி 1943 ஜூன் 26ஆம் தேதிதான் நீங்கள் முதன் முதலாகத் தெரிந்து கொண்டதாகக் கூறுகிறீர்கள். இந்தக் கூற்றை இந்திய அரசாங்கம் நம்பவேண்டும் என்றும் இப்போது நீங்கள் விரும்புகிறீர்கள். நீங்கள் அப்போது என்ன கூறினீர்களோ அது சரியாகப் பிரசுரிக்கப்படவில்லையெனில், அதை உங்களுடைய சகாக்கள் உங்கள் பார்வைக்கு கொண்டுவராமல் இருந்திருப்பார்களா? நீங்கள் அப்போது சில வாரங்கள் வரையில் சிறைக்கு வெளியில்தான் இருந்தீர்கள். எனவே, அதை நீங்கள் மறுக்காமல் விட்டிருப்பீர்களா? ஆகையால் அக்கூற்று நம்பமுடியாதது என்று அரசாங்கம் கருதுகிறது.

கலவரங்களுக்கு அரசாங்கம்தான் பொறுப்பாளி என்று இன்னும்கூட நீங்கள் கூறிவருவதை அவர்கள் கவனித்துள்ளனர். அதற்கு நீங்கள் கூறியுள்ள காரணங்கள் அற்பமானவை என்றும் அவர்கள் கருதுகின்றனர். வைஸ்ராய்க்கும் உங்களுக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தில் அவற்றிற்கு விடையளிக்கப்பட்டிருக்கின்றது. அரசாங்க அறிக்கையில் ஒரு விஷயம் தெளிவாக்கப்பட்டிருக்கிறது. அதாவது அக்கலவரங்களுக்கு ''பகிரங்கப் புரட்சி'' என்ற உங்களுடைய பிரகடனமும், அதற்கு முன் நிகழ்ந்த பிரசாரமுமே இயற்கையான காரணங்களாகும். அத்தகைய கலவரங்கள் ஏற்படும் என்பது முன்னதாகவே தெரிந்த விஷயம்தான். அந்த விளைவுகளை நீங்களும் எதிர்பார்த்திருக்க

வேண்டும் என்பது 1922-ஆம் ஆண்டில் கோர்ட்டில் நீங்கள் கொடுத்த வாக்குமூலத்திலிருந்து தெளிவாகத் தெரிகிறது. சௌரி சௌராவில் நடந்த அரக்கத்தனமான குற்றங்களுக்கும், பம்பாயில் நிகழ்ந்த வெறிபிடித்த அட்டூழியங்களுக்கும் நீங்கள் பொறுப்பாளி அல்ல என்று கூறுவது முடியாத காரியம் என்பதை அப்போது நீங்கள் ஒப்புக்கொண்டீர்கள். நீங்கள் தீயுடன் விளையாடிக் கொண்டிருப்பது உங்களுக்குத் தெரியும் என்றும், இருந்தாலும் நீங்கள் அந்த அபாயத்தை ஏற்றுக் கொண்டிருப்பதாயும், மீண்டும் அவ்விதமே ஏற்றுக் கொள்ளத் தயங்கப்போவதில்லை என்றும் அப்போது நீங்கள் குறிப்பிட்டீர்கள். அத்தகைய விளைவுகள் ஏற்படுமென நீங்கள் உத்தேசிக்கவில்லை என்றும், அவற்றை எதிர்பார்க்கவில்லை என்றும் இப்போது நீங்கள் கூறினால், உங்களைப் பின்பற்றுவோர் எப்படி நடந்து கொள்வார்கள் என்பதை நிர்ணயிக்கும் சக்தி உங்களுக்கு இல்லை என்பதை நீங்களே ஒப்புக் கொள்வதாகும். உங்கள் பெயராலும் காங்கிரசின் பெயராலும் செய்யப்பட்ட காட்டுமிராண்டித்தனமான செயல்களை நீங்கள் இப்போது ஆதரித்துப் பேசாவிட்டாலும், மன்னித்துவிட முற்படுகிறீர்கள். அவற்றை நீங்கள் கண்டிக்கவில்லை. இதிலிருந்து உங்களுடைய அனுதாபம் யார் பக்கத்தில் இருக்கிறது என்பது தெளிவாகத் தெரிகிறது. "செய் அல்லது உயிரைவிடு" என்ற உங்களுடைய செய்திக்கு விளக்கமாக உங்களுடைய கடிதத்தில் ஒரு வார்த்தை கூட இல்லை. அச் செய்தியை நீங்கள் மறுக்க முடியாததே, கலவரங்கள் ஏற்பட்டபோது நீங்கள் எத்தகைய இயக்கத்தையும் ஆரம்பிக்கவில்லை என்ற கூற்றை மறுப்பதற்குப் போதுமானது.

இறுதியாக, உங்களுடைய கடிதத்தை வெளியிடவேண்டும் என்ற வேண்டுகோளைப்பற்றி நான் குறிப்பிட வேண்டியவனாக இருக்கிறேன். முதலாவதாக, உங்களுடைய சொந்த நிலையை நான் நினைவூட்டுகிறேன். இது முன்பே உங்களுக்கு விளக்கப்பட்டிருக்கிறது. அதாவது, நீங்கள் காவலில் வைக்கப்பட்டிருப்பதற்கு ஆதாரமான காரணங்கள் யாதொரு மாறுதலுமின்றி அப்படியே இருந்துவரும்வரையில், பொது மக்களுடன் தொடர்பு வைத்துக் கொள்வதற்கான வசதிகளை உங்களுக்கு அளிக்க அரசாங்கம் தயாராக இல்லை; உங்களுடைய பிரசாரத்திற்கு ஏஜண்டுகளாக இருந்து கொண்டு அலுவல்கள் புரியவும் அவர்கள் தயாராக இல்லை. இரண்டாவதாக, 1942 ஆகஸ்டு 8ஆம் தேதி காங்கிரஸ் தீர்மானம் நிறைவேறுவதற்கு முன்பும், நீங்கள் கைது செய்யப்படுவதற்கு முன்பும் பல மாதங்கள் வரையில் சந்தேகத்துக்கு இடமின்றி நீங்கள் கூறும் அர்த்தத்தைத் தெளிவுபடுத்துவதற்கு ஏராளமான சந்தர்ப்பங்கள் உங்களுக்கு இருந்தன. உங்களுடைய நோக்கத்திற்கு, அரசாங்கத்தைப் போலவேதான் உங்களைப் பின்பற்றுவோரும் விளக்கம் கொடுத்திருக்கின்றனர். இந்த உண்மை, மேற்கொண்டு விளக்கம் கொடுப்பதற்கு இடம் அளிப்பதாக இல்லை. உங்களுடைய

கடிதத்தை வெளியிடுவது உசிதம் என்று அரசாங்கம் நினைத்தா லொழிய, நினைக்கும் வரையில், அவர்கள் அதை வெளியிட உத்தே சிக்கவில்லை என்பதை உங்களுக்குத் தெரிவிக்க வேண்டியவனாக இருக்கிறேன். இருந்தாலும் அரசாங்கம் அந்தத் தீர்மானத்தை எந்தச் சமயத்திலும் மாற்றிக்கொள்ளலாம். அவர்களுக்கு நீங்க ளாக முன்வந்து எழுதியுள்ள கடிதத்தில் நீங்கள் ஒப்புக் கொண் டுள்ள பல்வேறு விஷயங்களையும் எந்தச் சமயத்திலும், எந்த விதத்திலும் உபயோகித்துக் கொள்ள அரசாங்கத்திற்கு உரிமை யுண்டு. காங்கிரஸ் கலவரங்களுக்கும், அதற்குப் பின் நிகழ்ந்த சம்பவங்களுக்கும் நீங்கள் பொறுப்பாளி என்பதைத் தட்டிக் கழிப்பதே உங்கள் கடிதத்தின் நோக்கமாக இருக்கலாம். எனினும், அவற்றிற்கு நீங்கள் பொறுப்பாளி அல்ல என்பதை அரசாங்கம் ஒப்புக் கொள்ள முடியாது என்பதையும், நீங்கள் செய்தது நியாயம் என்பதை நிரூபிக்கக்கூட நீங்கள் தீவிரமான முயற்சி எதையும் எடுத்துக்கொள்ளவில்லை என்பதையும் அர சாங்கம் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறது. 1942 ஆகஸ்டு 8உ காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்துடன் உங்களுடைய தொடர்பைக் கத்தரித்துக்கொள்ளவோ, அந்தத் தீர்மானம் நிறை வேறிய பின் உங்கள் பெயரால் நிகழ்ந்த பலாத்கார நிகழ்ச்சி களைத் திட்டவட்டமாகக் கண்டித்தோ, அச்சு நாடுகளுக்கும், குறிப்பாக ஜப்பானுக்கும் எதிராக, வெற்றி பெறும்வரையில் யுத்தத்தை நடத்த இந்தியாவிலுள்ள சாதனங்களையெல்லாம் உபயோகிப்பதை ஆதரித்தோ, எதிர்காலத்தில் நன்னடத்தைக் கான திருப்திகரமான உறுதிமொழிகள் அளித்தோ நீங்கள் உங்களுடைய கடிதத்தில் யாதொரு முறைகளையும் மேற்கொள்ள வில்லை. உங்களுக்கு யாதொரு மனமாற்றமும் ஏற்படவில்லை எந்தக் கொள்கைக்காக உங்களுக்கும் காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கும் தடை விதிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டதோ, அந்தக் கொள்கையை நீங்கள் கைவிடவுமில்லை. எனவே இந்நிலை யில், உங்களுடைய தற்போதைய கடிதத்தின்மீது அரசாங்கம் மேற்கொண்டு யாதொரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள இயலாதவர்களாக இருக்கிறார்கள்.

இப்படிக்கு,
ஆர். டாட்டென்ஹாம்.
காரியதரிசி, இந்திய அரசாங்கம்.

## 80

சிறைமுகாம்,
26-10-1943

ஐயா,

நீங்கள் 14உ எழுதிய கடிதம் எனக்கு 18உ கிடைத்தது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். “1942-43 கலவரங்களுக்கு காங்கிரஸ் பொறுப்பு” என்ற அரசாங்கத்தின்

வெளியீட்டில் என்மீது கொண்டுவரப்பட்டுள்ள குற்றச்சாட்டு களுக்கு நான் அளித்த பதிலின் நோக்கம் வெற்றி பெறவில்லை. அதாவது அது, அந்தக் குற்றச்சாட்டுகள் சம்பந்தப்பட்ட வரையில் நான் நிரபராதி என்று அரசாங்கத்திற்குத் திருப்தி ஏற்படும்படி செய்யத் தவறிவிட்டது. என்னுடைய நல்லெண்ணம் கூட மறுக்கப்பட்டிருக்கிறது.

குற்றச்சாட்டுகளின் மீது வியாக்கியானம் எதையும் அர சாங்கம் விரும்பவில்லை. ஆனால் அத்தகைய விஷயங்களையொட்டி அரசாங்கம் ஏற்கனவே விடுத்த அறிக்கைகள் என்னை வேறு விதமாக நினைக்கும்படி செய்தன. அது எப்படியாயினும், நீங்கள் இப்போது எழுதியுள்ள கடிதத்திற்கு பதில் எழுதவேண்டியது அவசியமாகியிருக்கிறது.

நான் ஜூலை 15ஆ எழுதிய கடிதத்தில் அரசாங்கத்தின் எல்லாக் குற்றச்சாட்டுகளுக்கும் திட்டவட்டமாக பதில் அளித் திருக்கிறேன் என்பதே எனது அபிப்பிராயமாகும். இந்தி யாவின் விடுதலைப் போராட்டத்தில் நான் செய்துள்ள அல்லது கூறியுள்ள எதையும் குறித்து நான் வருந்தவில்லை.

1942 ஆகஸ்டு 8ஆ நிறைவேறிய காங்கிரஸ் தீர்மானத்தைப் பொறுத்தமட்டில், அது அபாயத்தை விளைவிப்பதல்ல, எல்லோ ருக்கும் நன்மை பயக்கக்கூடியது என்பதுதான் எனது நம்பிக்கை. அது ஒரு புறமிருக்க, அத் தீர்மானத்தை மாற்றக் கூடிய சட்ட பூர்வமான அதிகாரம் எதுவும் எனக்கு இல்லை. எந்த ஸ்தாபனம் அதை நிறைவேற்றியதோ அதனால்தான், அதாவது அ. இ. கா. கமிட்டியினால்தான் அதை மாற்ற முடியும். காரியக் கமிட்டி அங்கத்தினர்களை நான் சந்திக்கத் தயாராக இருப்பதாகக் கூறியிருந்தேன். நிலைமையைப் பற்றி விவாதிக் கவும், அவர்களுடைய மனத்தை அறிந்துகொள்ளவும் வேண்டும் என்பதே எனது உத்தேசமாகும். ஆனால், நான் கூறியதை அரசாங்கம் நிராகரித்துவிட்டது. அரசாங்கத்தின் நிலையிலிருந்து பார்க்கும்போது, அவ்விதம் பேசுவதால் ஏதோ பலன் ஏற்படும் என்று நினைத்தேன், இன்னும் நினைக்கிறேன். எனவே, மீண்டும் அதே யோசனையையே கூறுகிறேன். எனினும், என்னுடைய அந்தரங்க சுத்தியில் அரசாங்கத்திற்கு சந்தேகம் இருந்துவரும் வரையில், அதனால் பலன் ஏற்படாது. ஒரு சத்தியாக்கிரகி என்ற முறையில், எவ்வளவு இடையூறு ஏற்பட்டாலும், யுத்த முயற்சியில் உடனடியாக நன்மை உண்டாகும் என்று நான் உறுதியாக எண்ணும் ஒரு விஷயத்தை நான் மீண்டும் வற்பு றுத்திக் கூறத்தான் வேண்டும். எனது தற்போதைய கருத் துக்கள் நீடித்து வரும்வரையில், எனது யோசனை அங்கீகரிக்கப் படுவதற்கான வாய்ப்பு இல்லை என்றால், எனது தீய செல்வாக்கு மக்களைத் தவறான வழியில் செலுத்தி வருகிறதென்று அரசாங்கம் நினைத்தால், காரியக் கமிட்டி அங்கத்தினர்களும், மற்ற காவற் கைதிகளும் விடுதலை செய்யப்பட வேண்டும் என்று நான் அரசாங்

கத்திற்கு விண்ணப்பம் செய்து கொள்ளுகிறேன். தடுத்து நிறுத்தக்கூடிய பசிப்பிணியால் இந்தியாவிலுள்ள கொடிக்கணக் கான மக்கள் துன்பப்பட்டு வருகையில், ஆயிரக்கணக்கான வர்கள் பசிப்பிணியால் இறந்து வருகையில், வெறும் சந்தேகத் தின்மீது ஆயிரக்கணக்கான ஆடவர்களையும் பெண்களையும் அரசாங்கம் காவலில் வைத்திருப்பது நினைக்கவும் முடியாததாக இருக்கிறது. அவ்விதம் காவலில் வைக்கப்பட்டிருப்பவர்களின் சக்தியையும், அவர்களைக் காவலில் வைத்திருப்பதற்கு ஆகும் செலவையும், இந்த நெருக்கடியான சமயத்தில் மக்களின் துன்பத்தைத் தீர்ப்பதற்கான வழிகளில் உபயோகிக்கலாம். ஜூலை 15–இல் நான் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருப்பதைப் போல, குஜராத்தின் பயங்கரமான வெள்ளம் ஏற்பட்டபோதும், அதேபோல் பீகாரில் பயங்கரமான பூகம்பம் ஏற்பட்ட போதும் நிர்வாகத்திலும், ஆக்க வேலைகளிலும், ஜீவகாருண்ய முறைகளி லும் காங்கிரஸ்வாதிகள் தங்களுக்குள்ள திறமையைச் சிறப்பாக ருசுப்பித்தனர். பிரம்மாண்டமான இடத்தில் என்னைச் சிறை வைத்திருக்கிறார்கள். என்னைச் சுற்றி பெரிய காவலும் இருக் கிறது. இதெல்லாம் பொதுமக்களின் பணத்தை வீணுகச் செலவு செய்வதேயாகும். எந்தச் சிறையிலும் எனது நாட்களைத் தள்ள எனக்கு முற்றிலும் திருப்திதான். என்னுடைய "நன் னடத்தையை"க் குறித்து "திருப்திகரமான உறுதிமொழிகள்" அளிக்க வேண்டும் என்று கூறியிருக்கிறீர்கள். எனக்குத் தெரிந்த வரையில், நான் எந்தச் சமயத்திலும், எவ்விதத் தகாத நடத்தையிலும் ஈடுபட்டதாக எனக்குத் தெரியவில்லை என்று மாத்திரமே நான் கூறமுடியும். "1942-43 கலவரங்களுக்கு காங் கிரஸ் பொறுப்பு" என்ற தலைப்பில் அரசாங்கம் வெளியிட்டுள்ள குற்றச்சாட்டை முக்கியமாகக்கொண்டே எனது நடத்தையைக் குறித்து அவ்விதம் கூறியிருக்கிறீர்கள் என்று நான் ஊகிக்கிறேன். அந்த குற்றச்சாட்டுகளை நான் அடியோடு மறுத்திருக்கிறேன். அது மாத்திரமல்ல, அரசாங்கத்தின்மீது எதிர்க் குற்றச்சாட்டு களையும் கொண்டுவரத் துணிந்திருக்கிறேன். இருவிதமான குற்றச்சாட்டுகளையும் பாரபட்சமற்ற ஒரு நீதிச் சபையின் விசா ரணைக்கு விட அரசாங்கம் ஒப்புக்கொள்ள வேண்டும் என்று நான் நினைக்கிறேன். அரசாங்கத்தின் குற்றச்சாட்டுகளில் சாதாரண ஒரு நபர் சம்பந்தப்பட்டிருக்கவில்லை; ஒரு பெரிய அரசியல் ஸ்தாபனமே சம்பந்தப்பட்டிருக்கிறது. எனவே, பரஸ்பரம் விவாதிப்பதும், பரஸ்பர முயற்சியும் விரும்பத்தக்கதல்ல என்றோ அல்லது பலன் தரத்தக்கதல்ல என்றோ அரசாங்கம் கருதினால், இந்த விஷயத்தை ஒரு நீதிச் சபையின் தீர்ப்புக்கு விடுவது, யுத்த முயற்சியின் மூலாதாரமான ஓர் அம்சம் என்று நான் கருது கிறேன்.

'எனக்கு நியாயம் வழங்குவதாயின், சென்ற ஜூலை-15இல் நான் எழுதிய கடிதத்தை வெளியிட வேண்டும்' என்ற எனது வேண்டுகோளை நீங்கள் உங்களுடைய கடிதத்தில் நிராகரித்திருக்

கிறீர்கள். அது மாத்திரமல்ல, எந்தச் சமயத்திலும் எந்த விதமாகவும் "நானுகை வலுவில் எழுதியுள்ள கடிதத்தில் ஒப்புக் கொண்டிருப்பவைகளே" தன் விருப்பப்படி உபயோகித்துக் கொள்ள அரசாங்கத்திற்கு உரிமை உண்டு என்றும் எனக்கு நீங்கள் அறிவித்திருக்கிறீர்கள். "1942—43 கலவரங்களுக்கு காங்கிரஸ் பொறுப்பு" என்ற பிரசுரத்தைப்போல் அங்கு ஒன்றும் இங்கு ஒன்றுமாக வாக்கியங்களைப் பிரித்து எடுத்துக் கொடுக்க மாட்டீர்கள் என்று நான் நம்புவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? எனது கடிதத்தைப் பகிரங்கமாக வெளியிட வேண்டும் என்று அரசாங்கம் விரும்பினால், விரும்பும்போது அதை அரைகுறையாகப் பிரசுரிக்காமல் முழுவதும் பிரசுரிக்க வேண்டும் என்பதுதான் எனது வேண்டுகோள்.

தங்கள்,
மோ. க. காந்தி

## 81

புது டில்லி,
3-11-1943

காரியதரிசியிடமிருந்து,
இந்திய அரசாங்க உள்துறை இலாகா,
புது டில்லி.

மோ. க. காந்தியவர்களுக்கு,

ஐயா,

உங்களுடைய அக்டோபர் 26வ கடிதம் கிடைத்தது. அது ஆலோசனையில் இருந்து வருகிறது.

தங்கள்,
ஆர். டாட்டென்ஹாம்
இந்திய அரசாங்கக் காரியதரிசி

## 82

இந்திய அரசாங்கம்,
உள்துறை, புது டில்லி,
18-11-1943

ஐயா,

உங்களுடைய 26வ கடிதத்திற்குப் பின்வருமாறு பதில் அளிக்கும்படி எனக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது: 1942 ஆகஸ்டு 8வ நிறைவேறிய காங்கிரஸ் தீர்மானத்தையொட்டி

உங்களுடைய நிலையில் யாதொரு மாறுதலும் இல்லை. காரியக் கமிட்டி அங்கத்தினர்களிலும் யாரும் உங்களுடைய கருத்துக்கு மாறுபட்டவர்களாக இருக்கிறார்கள் என்பதற்கான அறிகுறியையும் அரசாங்கம் காணவில்லை. எனவே, நீங்களும் காரியக் கமிட்டியினரும் கலந்து பேசுவதால் யாதொரு பலனும் ஏற்படுமென்று தோன்றவில்லை. அத்தகைய ஒரு யோசனைக்கு அரசாங்கம் இணங்குவதற்கான நிபந்தனைகளை அவர்களும் நீங்களும் நன்கு அறிவீர்கள்.

இத்துடன் உங்களுடைய கடிதத்திலுள்ள மற்ற விஷயங்கள் கவனத்தில் வைத்துக்கொள்ளப்பட்டுள்ளன என்பதையும் கூற வேண்டியவனாக இருக்கிறேன்.

தங்கள்,
ஆர். டாட்டென்ஹாம்,
இந்திய அரசாங்கக் காரியதரிசி.

பகுதி ஆறு

# அன்னையின் மறைவு

## 83

## டாக்டர்களின் வேண்டுகோள்

*சிறை முகாம்,*
*12-3-1943*

*அன்புள்ள கர்னல் பண்டாரி,*

*இன்று காலை நடந்த பேச்சுவார்த்தைகளைத் தொடர்ந்து பின் கண்ட உண்மைகளை உங்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர நாங்கள் விரும்புகிறோம்.*

*ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி கப நோயால் கஷ்டப்பட்டு வருகிறார். சிறிது காலமாக அவரது தொண்டையிலும், இருதயப் பிரதேசத்திலும் வலி இருந்துவருகிறது. அவரது இருதயம் ஒரு நிமிடத்திற்கு 180 தடவை வீதம் அடித்துக் கொள்கிறது. குறிப்பாக, காலை நேரங்களில் அவரது முகத்திலும், கண் இமைகளிலும் வீக்கம் ஏற்படுகிறது. இதை நீங்களும் கவனித்திருக்கலாம். காந்திஜி அவருடன் கூட இருப்பதால், அவரது நிலை கடுமையாகிவிடாமல் இருக்கிறது. என்றாலும், அவரது உடல் நிலையில் உள்ள கோளாறுகள் அவரது மன நிலையையும் பாதித்து வருகின்றன. இதையெல்லாம் கவனிக்கும்போது ஸ்ரீமதி காந்தியுடன் முழுநேரமும் பணிவிடை செய்யும் ஒரு நர்ஸ் இருக்க வேண்டும் என்று நாங்கள் கருதுகிறோம். அவரது பாஷை பேசும் ஒருவரும், அவருக்கு நன்றாகத் தெரிந்து ஒருவருமே அவ்விஷயத்தில் வெற்றி பெறக் கூடும்.*

*காந்திஜியைப் பொறுத்தமட்டில், சற்றேறக்குறைய இன்னும் ஒரு மாதகாலம் வரையில் அவரை மிகுந்த ஜாக்கிரதையாக கவனித்து வர வேண்டும் என்பதும் எங்களுடைய அபிப்பிராயமாகும். அது வரையில் கனு காந்தி அவருடன் கூட இருப்பதே மிகச் சிறந்தது. அவர் காந்திஜியிடம் மிகுந்த பக்தி உள்ளவர்; அவரது தேவைகளை முன் கூட்டியே அறிந்துகொள்ள அவர் பயிற்சி பெற்றிருக்கிறார். அரசாங்கத்திற்கு ஆட்சேபணை இல்லை எனில், அவரது ஊழியம் எவ்வளவு காலத்திற்குத் தேவைப்படு*

கிறதோ அதுவரையில் அவர் காந்திஜியுடன் தங்கியிருக்கத் தயாராக இருக்கிறார்.

தங்கள் உண்மையுள்ள,
எம். டி. டி. கில்டர்,
எஸ். நய்யார்

## 84

[1943 நவம்பர் 18-இல் பம்பாய் அரசாங்கக் காரிய தரிசிக்கு காந்திஜி எழுதிய கடிதத்திலிருந்து எடுக்கப்பட்ட சில பகுதிகள்: ]

"......என்னுடன் கூட சிறை வைக்கப்பட்டிருப்பவர்கள், அவர்கள் என்னுடன் இருப்பதற்காக அதிகமான கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள் என்று தோன்று கிறது. டாக்டர் நய்யார் மாத்திர மல்ல, மற்றவர்களும் அவ்விதமே துன்பங்களுக்கு இலக்காகிவருகிறார்கள். உதாரணமாக டாக்டர் கில்டர், யாரையும், நோய்வாய்ப்பட்டுள்ள அவரது மனைவி யையும் மகனையும் கூடப் பார்த்துப் பேசக்கூடாது என்று தடை விதிக்கப்பட்டிருக்கிறார். குழந்தை மனு காந்தி அவரது தந்தை யையோ அல்லது அவரது சகோதரிகளையோ பார்த்துப் பேசக் கூடாதாம். என்னுடைய மனைவியும் அவளுடைய குமாரர் களையோ, பேரப் பிள்ளைகளையோ பார்க்கக்கூடாது என்று தடை விதிக்கப்பட்டிருக்கிறார். விதிக்கப்பட்டுள்ள தடைகள் கஸ்தூரி பாய்க்குக் கோபத்தைக் கொடுத்திருக்குமாயின், அவள் வெளியே போயிருப்பாள் என்று கூறுவது சரியல்ல. கஸ்தூரிபாய் மிகவும் நோயுற்றிருந்தபோது என் மகன் ராமதாஸ் அவளைப் பார்க்க அனுமதிக்கப்படவில்லை என்பதை நான் அறிவேன். கைதிகளின் சாதாரண உரிமைகள் கூட இவ்விதம் ஏன் மறுக்கப்படுகின்றன என்பது எனக்குத் தெரியவில்லை. எனக்கு விதிக்கப்பட்டுள்ள தடைகளை என்னால் அறிந்துகொள்ள முடியும். அரசாங்கத்திற்கு என்மீதுள்ள விசேஷ அதிருப்தியே அதற்குக் காரணம். ஆனால், மற்றவர்கள் விஷயத்தில் ஏன் தடை விதிக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்வது கஷ்டமாக இருக்கிறது. எங்களுடன் கூட இருப்பவர்களை அரசாங்கம் நம்பவில்லை என்று நினைக்க வேண்டி யிருக்கிறது. இல்லாவிடில், நான் ஏற்கனவே குறிப்பிட்ட தந்தி களை* சிறை சூபரின்டெண்டோ, இன்ஸ்பெக்டர் ஜெனரலோ குறிப்பிட்ட இடத்திற்கு ஏன் அனுப்பாமல் இருக்கவேண்டும்? சக கைதிகளைப் பார்க்க வருவோரை அனுமதிக்க ஏன் மறுக்க வேண்டும்?

---

* டாக்டர் சுசீலா நய்யாரின் நெருங்கிய உறவினரின் மரணத்தைக் குறித்து வந்த தந்தி ஒரு மாதத்திற்குப் பிறகே அவரிடம் (சுசீலா நய்யாரிடம்) கொடுக்கப் பட்டது. இந்தச் சம்பவத்தையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

"இவ்விஷயமாக சீக்கிரத்தில் பரிகாரம் அளிக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்."

மோ. க. காந்தி

## 85

*சிறை முகாம்,*
*27 – 1 – 1944*

*இந்திய அரசாங்க உள்துறைக்*
*காரியதரிசிக்கு,*
*புது டில்லி.*

*ஐயா,*

*தனக்கு சிகிச்சை அளிப்பதற்கு உதவியாக புனாவிலுள்ள டாக்டர் டின்ஷா மேத்தாவைத் தருவிக்கும்படி, ஸ்ரீ. கஸ்தூரிபாய் காந்தி சிறை இன்ஸ்பெக்டர் ஜெனரலிடமும் கர்னல் ஷாவிடமும் சில நாட்களுக்கு முன் கூறினார். அவரது வேண்டுகோளின் பலனாக எதுவும் நிகழ்ந்ததாகத் தெரியவில்லை. அவள் அவ்விஷய மாக இப்போது மிகவும் வற்புறுத்தி வருகிறாள். அதன் சம்பந்த மாக அரசாங்கத்திற்கு நான் எழுதியிருக்கிறேனா என்றும் கேட் கிறாள். எனவே, டாக்டர் மேத்தாவைக் கொண்டுவர நான் உடனடியாக அனுமதி கோருகிறேன். தமது உடல் நிலையை யாராவது ஆயுர் வேத வைத்தியர் பரிசோதனை செய்ய வேண்டும் என்று தான் விரும்புவதாக அவள் என்னிடமும் எனது புதல்வ னிடமும் கூறினாள். எனவே, வேண்டும்போது அத்தகைய உதவிக்கு அனுமதி அளிக்கும்படி இன்ஸ்பெக்டர் ஜெனரலுக்கு அதிகாரம் அளிக்கவேண்டுமென்று நான் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*நோயாளியை ஒன்று விட்டு ஒரு நாள் வந்து பார்க்க ஸ்ரீ கனு காந்தி அனுமதிக்கப்பட்டிருக்கிறார். ஆனால், அவர் முழு நேர நர்ஸாக முகாமிலேயே இருக்க அனுமதிக்க வேண்டுமென்ற எனது வேண்டுகோளுக்கு இன்னும் பதில் கிடைக்கவில்லை. நோயாளி குணமடைவதற்கான அறிகுறியே தென்படவில்லை. இரவில் பணிவிடை செய்வது நாளுக்கு நாள் அதிகக் கடினமாகி வருகிறது. அவருக்கு கனு காந்தி ஏற்கனவே நர்ஸாக இருந் திருப்பதால் அவர்தான் குற்றம் குறையற்ற சிறந்த நர்ஸாக இருக்க முடியும். மேலும், அவர் கஸ்தூரி பாய்க்கு சங்கீத வாத்தியம் வாசித்தும், பஜனைப் பாட்டுகள் பாடியும் மனத்திற்கு சாந்தி அளிக்க முடியும். விரைவில் இந்தப் பரிகார முறைகளை மேற்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இதை மிகவும் அவசர விஷயமாக நினைத்துப் பரிகார முறைகளைக் கைக் கொள்ளலாம்.*

வெளியிலிருந்து கைதியைப் பார்ப்பதற்காக யாராவது வரும்போது அங்கே ஒரு நர்ஸ்தான் இருக்கலாமென முகாம் சூபரிண்டெண்ட் எனக்கு அறிவித்துள்ளார். இதற்கு முன் அவசியமானபோது ஒரு நர்ஸுக்குமேல் இருந்திருக்கிறார்கள். எப்போது அவசியம் என்பதை சூபரிண்டெண்டே அவரது உசிதம் போல் நிர்ணயிப்பது வழக்கம். ஆனால் அவ்விஷயமாக தகராறு ஏற்பட்டபோது, நான் அதை இன்ஸ்பெக்டர் ஜெனரலுக்கு அறிவித்தேன். அதன் பலன் என்னவெனில், ஒரு டாக்டரும் கூட இருக்கலாம் என்று ஓர் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அறியாமையோ அல்லது நோயாளியின் உடல் நிலையைப் பற்றிய அலட்சிய புத்தியோதான் அத்தகைய உத்தரவுக்குக் காரணம் என்பது எனது அபிப்பிராயம். அவளுக்கு அடிக்கடி ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் உதவி செய்ய வேண்டியிருக்கிறது. எனவே அவளுக்கு சிசுருஷை செய்பவர்களின் தொகையைக் கட்டுப் படுத்த வேண்டாமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

உண்மையான ஒரு விஷயத்தை நான் மறைக்க முற்படுவது தவறாகும். அதாவது நோயாளிக்கு அனுமதிக்கப்படும் வசதிகள், சிறிதும் பெருந்தன்மையோ, கண்ணியமோ அற்ற முறையில் இருக்கின்றன. நோயாளிக்கு உதவிக்காக இருப்பவர்களைப்பற்றி விடுக்கப்பட்ட உத்தரவு, சில்லறைத் தொல்லைக்கு ஓர் உதாரணமாகும். உறவினர்கள் பார்க்க வரும்போது பணிவிடை செய்ய சிலரை அனுமதிக்கும் நோக்கமே அத்தகைய உத்தரவினால் வீணாகிவிடுகிறது. மேலும், என்னுடைய மூன்று குமாரர்களும் புனாவில் இருக்கிறார்கள். எல்லோருக்கும் மூத்தவனான ஹரிலாலை நாங்கள் அநேகமாக இழந்துவிட்டதாகவே வைத்துக்கொள்ள வேண்டும். நேற்று அவன் இங்கு வந்து பார்க்க அனுமதிக்கப் படவில்லை. அதற்குக் காரணம் என்னவெனில், அவன் மீண்டும் வருவதை அனுமதிப்பதற்கு இன்ஸ்பெக்டர் ஜெனரலுக்கு உத்தரவு கிடைக்கவில்லை என்பதுதான். இருந்தாலும், நோயாளி அவனைக் காண இயல்பாகவே மிகவும் ஆர்வமுடையவளாக இருந்தாள். மற்றொரு சில்லறைத் தொல்லையையும் குறிப்பிடு கிறேன். அரசாங்கத்தினால் அனுமதிக்கப்பட்ட ஜாபிதாவில் உள்ளவர்கள் இங்கே வரும் ஒவ்வொரு சமயத்திலும், அவர்கள் அனுமதி கோரி பம்பாய் அரசாங்கக் காரியாலயத்திற்கு விண்ணப்பம் செய்துகொள்ள வேண்டியிருக்கிறது. அதன் விளைவு என்னவெனில், அதனால் அனாவசியமான தாமதமும், மனக் கொதிப்பும் ஏற்படுகின்றன. எனது வேண்டுகோள்களை பம்பாய் அரசாங்கத்திற்கு அனுப்பிவைப்பதைத் தவிர, சூபரிண்டெண்டுக்கோ அல்லது இன்ஸ்பெக்டர் ஜெனரலுக்கோ வேறு கடமை இல்லை என்பதனாலேயே அத்தகைய சங்கடம் ஏற்படுகிறது என்று கருதுகிறேன்.

ஸ்ரீ கஸ்தூரிபாய், அரசாங்க நோயாளி என்பதையும், அவளது கணவனான நான்கூட அவள் விஷயமாக எதுவும் கூறு வதற்கில்லை என்பதையும் நான் அறிந்திருக்கிறேன். அவளை

விடுதலை செய்வதற்குப் பதிலாக அவளுடைய நலனை உத்தே சித்தே அவள் என்னுடன் வைக்கப்பட்டிருக்கிறாள் என்று அரசாங்கம் கூற மகிழ்ச்சியடைகின்றது. அவளது விருப்பங் களையும் உணர்ச்சிகளையும் விளக்குவதன்மூலம், அரசாங்கம் விரும்பும், பாராட்டும் காரியத்தையே நான் செய்துகொண்டிருக் கிறேன் என்று நினைக்கிறேன். அவள் குணமடைவதும், அவள் நோயினால் கஷ்டப்படும்போது மன அமைதியுடன் இருப் பதுமே அரசாங்கத்திற்கும் எனக்கும் உள்ள பொதுவான லட்சி யமாகும். அதிருப்திகரமான எதுவும் அவளுக்கு வேதனையை உண்டாக்குகிறது.

தங்கள்,
**மோ. க. காந்தி**

## 86

சிறைமுகாம்,
27-1-1944

பம்பாய் அரசாங்க உள்துறைக் காரியதரிசி,
பம்பாய்.

ஐயா,

இந்திய அரசாங்கத்துக்கு அனுப்புவதற்காக இத்துடன் ஒரு கடிதத்தை இணைத்துள்ளேன். அதில் குறிப்பிட்டுள்ள விஷ யங்களை பம்பாய் அரசாங்கமே கவனித்து ஆவன செய்ய முடியு மாயின், அதை இந்திய அரசாங்கத்துக்கு அனுப்ப வேண்டிய அவசியமில்லை. எவ்வளவு சீக்கிரத்தில் சாத்தியமோ அவ்வளவு சீக்கிரத்தில் பரிகாரம் கிடைக்க வேண்டும் என்பதே அக் கடிதத்தின் நோக்கமாகும். எனவே, அவ்விஷயங்களையொட்டி இந்திய அரசாங்கத்தின் உத்தரவு என்ன என்பதை டெலிபோன் மூலம் நீங்கள் தெரிந்து கொள்ளலாம்.

தங்கள்,
**மோ. க. காந்தி**

## 87

சிறைமுகாம்,
31-1-1944

பம்பாய் அரசாங்க உள்துறைக் காரியதரிசி,
பம்பாய்.

ஐயா,

சென்ற 27உ இந்திய அரசாங்கத்துக்கு மிகவும் அவசர மான கடிதம் ஒன்றை அனுப்பினேன். அதற்குப் பதில்

இன்னும் எனக்குக் கிடைக்கவில்லை. நோயாளியின் நிலைமையில் அபிவிருத்தி ஏற்படவில்லை. பணிவிடை செய்வோர் சோர்ந்து விழும் நிலையில் இருக்கிறார்கள். பகல் முழுவதும் நான்கு பேரும் உதவி செய்ய வேண்டியவர்களாக இருக்கிறார்கள். ஒன்றுவிட்டு ஒரு நாள் இரவில் இரண்டு பேரே உதவியாக இருக்க முடிகிறது. நோயாளியும் அமைதியின்றி கஷ்டப்பட்டுவருகிறாள்; "டாக்டர் டின்ஷா எப்போது வருவார்" என்று கேட்ட வண்ணம் இருக்கிறாள்.

கூடிய சீக்கிரத்தில், சாத்தியமாயின் நாளையே, கீழ்க்கண்டவற்றிற்குப் பதில் என்ன என்பதை நான் அறிந்துகொள்ளலாமா?

1. ஸ்ரீ கனுகாந்தி முழு நேர நர்ஸாக வர முடியுமா?

2. தற்காலிகமாக டாக்டர் டின்ஷா வந்து சிகிச்சை செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்ய முடியுமா?

3. நோயாளியை யாராவது பார்க்கவரும் சமயத்தில் பணிவிடை செய்வோரின் தொகை சம்பந்தமாக இருக்கும் கட்டுப்பாட்டை அகற்ற முடியுமா?

உதவி மிகவும் காலம் கடந்து வந்தது என்ற பேச்சுக்கு இடமில்லாமல் இருக்குமென நம்புகிறேன்.

தங்கள்,
மோ. க. காந்தி

## 88

(31-1-1944 மாலை 4 மணிக்கு அரசாங்கத்தினிடமிருந்து வந்த தகவலை சிறை முகாம் தலைமை அதிகாரி காந்திஜிக்கு அறிவித்தார். அத்தகவல் பின்வருமாறு :)

சிகிச்சை செய்ய டாக்டர் டின்ஷா மேத்தாவும், ஆயுர்வேத வைத்தியரும் வரவேண்டும் என்ற வேண்டுகோள் சம்பந்தமாக அரசாங்கம் பின்வருமாறு அறிவிக்க விரும்புகிறது:

குறிப்பாக எந்த வைத்தியராவது சிகிச்சை செய்ய வேண்டுமென்று ஸ்ரீமதி காந்தி விரும்புகிறாரா? டாக்டர் டின்ஷா மேத்தாவைத் தவிர வேறு ஒருவரும் சிகிச்சை செய்ய வேண்டும் என்பது அவரது விருப்பமா?

## 89

(அன்று திங்கட்கிழமை காந்திஜியின் மௌன தினமாதலால், உடனே காந்திஜி அவசரமாகப் பின்வருமாறு பதில் எழுதி சிறை முகாம் தலைமை அதிகாரியிடம் கொடுத்தார் :)

"கஸ்தூரிபாய் குறிப்பிட்ட எந்த ஆயுர்வேத வைத்தியரையும் மனத்தில் வைத்துக்கொண்டு அவ்விதம் கூறவில்லை.

ஆனல் என் குமாரன் தேவதாஸ் லாகூரில் உள்ள வைத்தியராஜ் சர்மாவின் பெயரைக் கூறினன். எந்த வைத்தியர் வருவ தாயினும், டாக்டர் டின்ஷாவும் வரவேண்டும். அதுவும், டாக்டர் டின்ஷாவின் சிகிச்சையினல் நோயாளியின் நிலையில் குணம் ஏற்படாவிட்டால்தான், வேறு வைத்தி யரை நாடவேண்டும். தன்னை ஒரு ஆயுர்வேத வைத்தியர் பரிசோதனை செய்ய வேண்டும் என்ற விருப்பத்தை அவள் பல தடவைகளிலும் வெளியிட்டிருக்கிருள். அதற்கு அனுமதி கொடுக் கப்படுமாயின், அது யாரையும் குறிப்பிடாமல் பொதுவானதாக இருக்க வேண்டும். அவள் மன உறுதியை இழந்து வருகிருள். இந்தக் கட்டத்தில் அவள் மனம் அமைதியாக இருக்கும்படி பார்த்துக்கொள்வதொன்றுதான் சாத்தியமானது. அவ்விதம் பார்த்துக்கொள்ளும் பொறுப்பை வகிக்க நான் அனுமதிக்கப் படும்வரையில், அவ்விஷயமாகக் கூறப்படும் ஏராளமான யோசனைகளில் எது ஏற்றது என்பதை நானே முடிவு செய்ய வேண்டியவனுக இருக்கிறேன்."

# 90

சிறை முகாம்,
*31-1-1944*

அன்புள்ள கர்னல் பண்டாரி,

ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தியின் நிலை நாளுக்கு நாள் மோசமாகி வருகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். நேற்றிரவு அவர் தூங்கவேயில்லை. இன்று காலை அவரது நிலை மோசமாகிவிட்டது. அவரால் மூச்சுவிட முடியவில்லை. நாடியும் மிகவும் பலவீனம் அடைந்து, ஒரு நிமிடத்திற்கு 100-ஆக இருக்கிறது. அவரது நிறம் சாம்பலைப் போல் வெண்மையாக இருக்கிறது. இருபது நிமிட நேரம் சிகிச்சை செய்தபின் அவருக்கு பிரக்ஞை வந்தது. இப்போது, மத்தியானம் 12 மணிக்கு, அவர் அமைதியற்றிருக்கிருர். இடது மார்பிலும், முது கிலும் வலி இருப்பதாகக் கூறுகிருர். நாடி 108-ஆகவும், ரத்த அமுக்கம் 90/50-ஆகவும் இருக்கிறது. இந்நிலையில் டாக்டர் ஜீவராஜ்மேத்தா (எராவ்டா மத்திய சிறை), டாக்டர் பி. ஸி. ராய் (கல்கத்தா) ஆகிய இருவரையும் கலந்து ஆலோசிக்க நாங்கள் விரும்புகிறோம். முன்பு அவர் நோயுற்றிருந்தபோது, அவர்கள் ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்திக்குச் சிகிச்சை செய்திருக்கிருர்கள். அவருக்கு அவர்களிடம் நம்பிக்கையும் உண்டு. அவரது உடல் நிலைமோசமாக இருப்பதால், அந்த டாக்டர்களின் உதவி ஏதாவது உபயோகமாக இருக்க வேண்டுமாயின், அவர்கள் வருவதில் தாமதம் ஏற்படக்கூடாது.

ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தியை இரவும் பகலும் இடைவிடாது கவனிக்க வேண்டியிருப்பதால், அவருக்குப் பணிவிடை செய்வது கஷ்டமாகியிருக்கிறது. கனு காந்தியும், டாக்டர் டின்ஷா மேத்தாவும் ஏன் வரவில்லை என்று அவர் அடிக்கடி கேட்டுக் கொண்டிருக்கிறார்.

தங்கள் உண்மையுள்ள,
எஸ். நய்யார்,
எம். டி. டி. கில்டர்

பின் குறிப்பு: இன்று காலை காந்திஜியின் ரத்த அமுக்கம் 206/110- ஆக இருந்தது.

## 91

சிறை முகாம்,
3—2—1944

பம்பாய் அரசாங்கக் காரியதரிசி,
பம்பாய்.

ஐயா,

டாக்டர் டின்ஷா எப்போது வருகிறார் என்றும், வைத்தியா (ஆயுர்வேத வைத்தியர்) தன்னைப் பரிசோதனை செய்து தமக்கு ஏதாவது மருந்துகள் கொடுக்க முடியுமா என்றும் நேற்று ஸ்ரீ கஸ்தூரி பாய் என்னைக் கேட்டாள். அவ்விருவரையும் தருவிக்க நான் முயற்சி செய்து வருவதாயும், ஆனால், நாம் கைதிகளாதலின், நமது விருப்பப்படி எல்லாம் நடைபெறாது என்றும் அவளிடம் கூறினேன். நான் சீக்கிரமாக ஏதாவது செய்ய முடியாதா என்று அவள் அடிக்கடி என்னைக் கேட்டு வருகிறாள். அவள் மீண்டும் நேற்றிரவு அமைதியற்றிருந்தாள். எனினும் தற்போது அவளுக்கு இத்தகைய நிலைமை புதிதல்ல. டாக்டர் டின்ஷா, லாகூர் வைத்தியராஜ சர்மா ஆகிய இருவர் சம்பந்தமாகவும் உடனடியாக உத்தரவு பிறப்பிக்கும்படி நான் கேட்டுக் கொள்கிறேன். லாகூர் வைத்தியராஜ சர்மா பின்னர் வருவார். ஆனால், இங்கே வர அதிகாரம் அளிக்கும் பட்சத்தில், டாக்டர் டின்ஷா இன்றே கூட வரமுடியும்.

ஒரு நோயாளியின் உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கும்போது, உற்ற சமயத்தில் உதவி அளித்தால் அவள் உயிர் பிழைக்கலாம். அப்படியிருக்கும்போது அதிகாரிகள் இவ்விதம் தாமதம் செய்வதை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை என்பதை நான் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஒரு நோயாளிக்கு மிகப்

பெரிய அரசாங்க விஷயத்தைப்போல் தன் வேதனையைக் குறைப்பதும் அவ்வளவு முக்கியமானதாக இருக்கிறது.

தங்கள்,
மோ. க. காந்தி

## 92

உள்துறை இலாகா (அரசியல்),
பம்பாய், 3—2—1944

பம்பாய் அரசாங்கம் உள்துறைக் காரியதரிசியிடமிருந்து,

மோ. க. காந்தி அவர்களுக்கு

ஐயா,

உங்களுடைய ஜனவரி 31உ கடிதத்தில் குறிப்பிடப் பட்டுள்ள 3 விஷயங்களுக்கும் பின்வருமாறு பதில் அளிக்கும் படி எனக்கு உத்தரவாகியிருக்கிறது.

1. ஸ்ரீமதி காந்திக்குப் பணிவிடை செய்யவும், உதவியாக இருக்கவும் அவருடன் கனு காந்தி தங்கியிருக்க அரசாங்கம் இசைந்துள்ளது. ஆனால் ஒரு நிபந்தனைக்கு கனு காந்தி இணங்கவேண்டும். சிறை முகாமில் உள்ள மற்ற பாதுகாப்புக் கைதிகளைப் போல் அவரும் அதே நிபந்தனைக்குக் கட்டுப்பட இசைய வேண்டும். ஸ்ரீமதி காந்தியுடன் கனு காந்தி தங்கியிருந்தால், பணிவிடைக்கு அளிக்கப்பட வேண்டிய உதவி போதுமானது என்று அரசாங்கம் கருதுகிறது. எனவே, மேற்கொண்டு உதவி அளிக்க வேண்டும் என்ற எந்தக் கோரிக்கைகளுக்கும் அரசாங்கம் இணங்க முடியாது.

2. வைத்திய காரணங்களை முன்னிட்டு மிகவும் அத்தியாவசியம் என்று அரசாங்க வைத்திய அதிகாரி கருதினாலொழிய, வெளியிலிருந்து எந்த டாக்டர்களையும் அனுமதிக்க முடியாதென்று அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது. எனவே, டாக்டர் டின்ஷா மேத்தாவைத் தருவிக்க வேண்டியது அவசியமா என்பதை அரசாங்க வைத்திய அதிகாரிதான் தீர்மானிக்க வேண்டும்.

3. நெருங்கிய உறவினர்கள் வந்து பார்த்துப் பேசுவதற்கு ஸ்ரீமதி காந்திக்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறது. உறவினர்கள் வந்து பேட்டி காணும்போது நீங்களும் கூட இருப்பதைக் குறித்து அரசாங்கத்திற்கு ஆட்சேபணையில்லை. ஆனால், சிறை முகாமில் உள்ள மற்றவர்கள் கூட இருக்கக்கூடாது என்று அரசாங்கம் கருதுகிறது. எனினும், ஸ்ரீமதி காந்தியின் உடல் நிலையையொட்டி அவசியமாக இருக்கும் போது மாத்திரம் மற்றவர்களும் கூட இருக்கலாம். பேட்டி நேரம் முழுவதும்

உதவிக்காக ஒருவர் கூட இருக்கலாம். அவசியமாயின், ஒரு டாக்டரையும் தருவித்துக் கொள்ளலாம் என்பதற்கு சிறை இன்ஸ்பெக்டர் ஜெனரல் இசைந்துள்ளார் என்று தெரிகிறது. சாதாரணமான நிலைமையில் இது போதுமானது என்றே அரசாங்கம் கருதுகிறது. இருந்தாலும் இவ்விஷயம், முற்றிலும் வைத்திய காரணங்களை முக்கியமாகக் கொண்டு இன்ஸ்பெக்டர் ஜெனரலால் தீர்மானிக்கப்பட வேண்டும்.

தங்கள் பணிவுள்ள ஊழியன்,

எச். ஐயங்கார்.

பம்பாய் அரசாங்க உள்துறை இலாகா காரியதரிசி.

## 93

(ஸ்ரீமதி கஸ்தூரி பாய் காந்திக்கு ஒரு ஆயுர்வேத வைத்தியர் சிகிச்சை செய்ய வேண்டும் என்ற கோரிக்கையைத் தொடர்ந்து காந்திஜி 11—2—44 காலையில் சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜெனரலுடன் பேசினர். பிறகு அவர், தாம் சிறை அதிகாரிகளிடம் கூறியதை உறுதி செய்து, பின் வருமாறு எழுதினர்:)

*சிறை முகாம்,*
*11—2—1944*

ஆயுர்வேத வைத்தியர் ஒருவரை இங்கே அழைத்து வருவதன் சம்பந்தமான முழுப் பொறுப்பும் என்னுடையதேயாகும். அத்தகைய சிகிச்சையைத் தொடர்ந்து விபரீதமான பலன் ஏதாவது ஏற்பட்டால், அதற்கு அரசாங்கம் பொறுப்பாளி அல்ல. அத்தகைய வைத்தியர்களோ அல்லது ஹக்கீம்களோ கூறும் யோசனையை நான் ஒப்புக்கொள்வேன என்பதை என்னல் நிச்சயமாகக் கூற முடியாது. அப்படி நான் ஒப்புக் கொண்டு, அவர்களுடைய சிகிச்சையினல் யாதொரு பலனும் ஏற்படாவிடில், மீண்டும் தற்போதைய கிகிச்சை முறையைத் தொடர்ந்து அனுசரிக்க எனக்கு உரிமை உண்டு.

மோ. க. காந்தி

## 94

அவசரம்

*சிறை முகாம்,*
*14—2—1944*

*சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜெனரல்,*

*புனா.*

*ஐயா,*

இரவு ஸ்ரீ கஸ்தூரி பாயின் நிலை மிகவும் மோசமாக இருந்ததென்றும், டாக்டர் நய்யார் பயந்து போய் டாக்டர் கில்டரைத் தூக்கத்திலிருந்து எழுப்பினர் என்றும் நேற்று உங்களிடம் கூறி

னேன். அவளது உயிர் போய்க்கொண்டிருக்கிறது என்றே நினைத்தேன். டாக்டர்களால் எதுவும் செய்ய முடியவில்லை. எனவே டாக்டர் நய்யார் சூபரின்டென்டை எழுப்பினர். அவரும் அன்புடன் வைத்தியராஜுக்கு டெலிபோன் செய்தார். அப்போது சுமார் ஒரு மணி இருக்கும். வைத்தியராஜ் இங்கேயே இருந்திருந்தால், அவர் நிச்சயமாக ஏதாவது பரிகாரம் அளித்திருக்க முடியும். அதனல்தான் இரவு நேரத்தில் அவர் முகாமிலேயே தங்கியிருக்க அனுமதிக்க வேண்டும் என்று உங்களை நான் கேட்டுக் கொண்டேன். ஆனல் அவர் இரவில் தங்கியிருக்கும் விஷயமாக அரசாங்கத்தின் உத்தரவில் எதுவும் இல்லை என்று நீங்கள் அறிவித்தீர்கள். எனினும், இரவு நேரத்தில் அவரைக் கூப்பிட்டுக் கொள்ளலாம் என்று கூறினீர்கள். தாமதம் செய்வதில் உள்ள அபாயத்தை நான் சுட்டிக் காட்டினேன். எனினும் அதற்கு மேல் நீங்கள் செல்ல அரசாங்க உத்தரவுகள் இடம் கொடுக்காததற்கு வருந்துவதாக நீங்கள் கூறினீர்கள். வைத்தியராஜின் சிகிச்சை காரணமாக ஏதாவது விபரீதம் நேர்ந்தால், அதற்கு அரசாங்கம் பொறுப்பாளி அல்ல என்ற நிபந்தனையின் மீது அவர் சிகிச்சை செய்வதற்கு அரசாங்கம் அனுமதி அளித்திருப்பதால், நோயாளியின் நலனை உத்தேசித்து அவர் முகாமில் தங்கியிருப்பதைக் குறித்து அரசாங்கம் கட்டுப்பாடு எதுவும் செய்ய வேண்டிய அவசியம் இல்லை என்றும் நான் வாதித்தேன். எனது வேண்டுகோளை நீங்கள் நிராகரித்துவிட்டதால், முகாமின் வாயிலில் மோட்டாரிலேயே படுத்துக் கொள்ளும்படி வைத்திய ராஜுக்கு நான் சிரமம் கொடுக்க வேண்டியதாயிற்று. அவ்விதமாயின், அவசியமானபோது கூப்பிடலாம் அல்லவா? அவரும் மிக்க கருணையுடன் அதற்கு இசைந்தார். அன்று அவரைக் கூப்பிடவேண்டியிருந்தது. அவரும் வந்து தேவையான பரிகாரம் அளிக்க முடிந்தது. எனினும், நெருக்கடி இன்னும் தீர்ந்துவிடவில்லை. எனவே, உடனடியாக உதவியளிக்க வேண்டும் என்று நான் மீண்டும் கேட்டுக் கொள்கிறேன். சாத்தியமாயின் நேற்றிரவு நேர்ந்த அனுபவம் இனியும் நேராமல் தவிர்க்கவே நான் விரும்புகிறேன். நோயாளியின் சிகிச்சை சம்பந்தமாக, எனது வேண்டுகோளை அங்கீகரிக்கும் விஷயமாக ஏற்படும் தாமதத்தினல் உண்டாகும் தொந்தரவுகளுக்கு ஒரு முடிவு ஏற்பட வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். நீண்ட காலதாமதத்திற்குப் பின்னரே டாக்டர் மேத்தாவையும், வைத்தியராஜையும் இங்கே வர அனுமதித்தார்கள். அருமையான காலம் கடந்துவிட்டதால் நோயாளி குணம் அடைவது நிச்சயமற்றதாகியிருக்கிறது. தேவைப்படுமாயின், வைத்தியராஜ் இரவு நேரத்திலும் இங்கே தங்குவதை அனுமதிப்பதற்கான அவசியமான அதிகாரத்தை தாங்கள் பெறுவீர்கள் என்று நம்புகிறேன். நோயாளியை இடைவிடாமல் கவனிக்க வேண்டியது அவசியமாகியிருக்கிறது.

தங்கள்,

**மோ. க. காந்தி**

## 95

*சிறை முகாம்,*
*16—2—1944*

*சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜெனரல்,*
*புனா.*

*ஐயா,*

சென்ற 14வ நான் எழுதிய கடிதத்தைத் தொடர்ந்து இதை நான் எழுதுகிறேன். ஸ்ரீமதி கஸ்தூரிபாய்க்கு வைத்தியராஜ் சிகிச்சை செய்ய வேண்டும் என்று நான் கேட்ட போது, அவ் விதம் வைத்தியரை மாற்றும் பொறுப்பை நானே ஏற்றுக் கொண் டேன்; எல்லாப் பொறுப்புகளிலிருந்தும் அரசாங்க டாக்டருக்கு விடுதலையும் அளித்தேன். அதன் பலனாக, தமது விருப்பப்படி சிகிச்சை செய்ய வைத்தியராஜுக்கு எல்லா வசதிகளும் அளிக் கப்படும் என்றும் நான் இயல்பாகவே நினைத்தேன். பகலைக் காட் டிலும் இரவு நேரங்களில் நோயாளி அதிகமாக கஷ்டப்படுகிறாள். முக்கியமாக இரவில்தான் அவளுக்கு இடைவிடாமல் பணிவிடை செய்ய வேண்டியது அவசியமாகியிருக்கிறது. தற்போதைய ஏற் பாடுகள், தமது விருப்பப்படி சிகிச்சை செய்வதற்கு இடையூறாக இருக்கின்றன என்று வைத்தியராஜ் கருதுகிறார்.

கூப்பிட்டவுடன் வருவதற்கு வசதியாக இருப்பதற்காக அவர் சென்ற மூன்று நாட்களாக இரவில் முகாமுக்கு வெளியே அன்பு கூர்ந்து அவரது மோட்டாரில் படுத்துக்கொண்டு வருகிறார். ஒவ் வொரு நாளும் இரவில் அவரை ஒரு தடவையாவது சிகிச்சைக் காகக் கூப்பிடவேண்டியிருந்தது. இது இயற்கைக்கு விரோத மான ஒரு நிலையாகும். நோயாளிக்காக எத்தகைய வசதிக் குறை வையும் சகித்துக் கொள்ளும் எல்லையற்ற திறமை அவருக்கு இருப்பதாகத் தோன்றினாலும், அவருடைய பெருந்தன்மையான சுபாவத்தை எல்லை மீறி நான் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது. இதைத் தவிர, வைத்தியராஜை ஒரு தடவையோ, அதற்கு அதிக மாகவோ இரவில் கூபபிடுவதால் சூபரிண்டெண்டையும் அவரது சிப்பந்திகளையும் (உண்மையில் காவல் முகாம் முழுவதையுமே) தொல்லைப்படுத்த வேண்டியிருக்கிறது. உதாரணமாக, நேற்றிரவு அவளுக்கு திடீரென்று கடுமையான ஜுரம் அடிக்க ஆரம்பித்து விட்டது. இரவு 10-30 மணிக்கு வந்து சிகிச்சை செய்துவிட்டுச் சென்ற வைத்தியராஜை, நடுநிசி 12 மணிக்கு மீண்டும் கூப்பிட வேண்டியிருந்தது. வைத்தியராஜ் இன்னும் சிறிது நேரம் உள்ளே தங்கியிருக்க விருப்பம் உடையவராக இருந்திருக்கலாம். எனினும், சிகிச்சை முடிந்ததும் வெளியே சென்று விடும் படி நான் அவரைக் கேட்டுக் கொள்ள வேண்டியிருந்தது. ஏனெனில் அவர் உள்ளே தங்கியிருக்கும் வரையில் சூபரிண் டெண்டும் அவரது சிப்பந்திகளும் விழித்திருக்கும்படி நேருகிறது. வைத்தியராஜ் உள்ளே இருந்தால், அவர்கள் இரவு முழுவதுமே

விழித்துக் கொண்டிருக்க நேரும். குறிப்பாக, வேறு ஒரு வழி இருக்கும்போது, ஆயுள் முழுவதும் என் சுக துக்கங்களில் பங்கு கொண்ட கூட்டாளியைக் காப்பாற்றுவதற்காகக் கூட நான் அவர்களுக்கு அவ்விதம் தொந்தரவு கொடுக்கமாட்டேன்.

நான் ஏற்கனவே கூறியிருப்பதுபோல், நோயாளியின் நிலையை இடைவிடாமல் கவனித்துவர வேண்டும் என்று வைத்தியராஜ் கருதுகிறார். நோயாளியின் நிலைமைக்குத் தகுந்தவாறு அவர் நிமிடத்திற்கு நிமிடம் மருந்துகளை மாற்றுகிறார். டாக்டர் கில்டரும் டாக்டர் நய்யாரும் எப்போதும் கூடவே இருந்துவருகிறார்கள். அவர்கள் நண்பர்களைக் காட்டிலும் அதிகமானவர்கள். நோயாளிக்காக அவர்கள் தங்களால் இயன்ற எதையும் செய்வார்கள். ஆனால் நான் முன்பு எழுதிய கடிதத்தில் கூறியதுபோல், அவர்கள் அறிந்த சிகிச்சை முறையிலிருந்து வேறான சிகிச்சை அளிக்கப்படும்போது அவர்களால் உதவி செய்ய முடிவதில்லை. அவர்கள் உதவி செய்வது நடைமுறையில் சாத்தியமல்ல என்பதுடன், அது அவர்களுக்கும், நோயாளிக்கும், வைத்தியராஜுக்கும் அநீதி செய்வதாகும்,

எனவே நான் பின்வரும் மூன்று மாற்று யோசனைகளைக் கூறுகிறேன் :

1. நோயாளியின் நலனை உத்தேசித்து எவ்வளவு காலம் தாம் முகாமில் இருக்க வேண்டியது அவசியம் என்று வைத்தியராஜ் கருதுகிறாரோ, அவ்வளவு காலம் வரையில் இரவும் பகலும் முகாமிலேயே இருக்க அவர் அனுமதிக்கப்பட வேண்டும்.

2. இதற்கு அரசாங்கம் இசைய முடியாதெனில், நோயாளி வைத்தியரின் சிகிச்சையினால் ஏற்படக்கூடிய முழுப் பலனையும் அடைவதற்காக அவரைத் தற்காலிகமாக விடுதலை செய்யலாம்.

3. மேற்கண்ட இரண்டு யோசனைகளும் அரசாங்கம் ஒப்புக்கொள்ளக்கூடியவையாக இராவிடில், நோயாளியைக் கவனிக்க வேண்டிய பொறுப்பிலிருந்து என்னை விடுதலை செய்யக் கேட்டுக்கொள்கிறேன். அவளுடைய கணவன் என்ற முறையில், அவள் விரும்பும் அல்லது அவசியம் என்று நான் கருதும் உதவி அவளுக்குக் கிடைக்கும்படி என்னால் செய்ய முடியாவிடில், அரசாங்கம் தேர்ந்தெடுக்கும் வேறு எந்தச் சிறை முகாமிற்காவது என்னை அனுப்பிவிடும்படி நான் கேட்டுக்கொள்கிறேன். நோயாளி வேதனையினால் தவிப்பதை, யாதொரு உதவியும் செய்ய முடியாமல் பார்த்துக் கொண்டிருக்கும் மனக் கஷ்டத்திற்கு என்னை உட்படுத்த வேண்டாம்.

ஸ்ரீ கஸ்தூரிபாய் திரும்பத் திரும்ப கேட்டுக் கொண்டதன் மீது டாக்டர் மேத்தா நோயாளியை வந்து பார்க்க அரசாங்கம் அன்பு கூர்ந்து அனுமதித்தது. அவரது உதவி மிகவும் உபயோகமாக இருக்கிறது. ஆனால், அவர் மருந்துகள் கொடுப்பதில்லை.

எனினும் அவரது ஸ்தூல சிகிச்சை முறை நோயாளிக்கு மிகுந்த அமைதியையும் ஆறுதலேயும் கொடுக்கிறது. சாதாரண டாக்டர் களோ அல்லது ஆயுர்வேத டாக்டர்களோ தான் மருந்துகொடுக்க முடியும். டாக்டரின் சிகிச்சை ஏற்கனவேயே நிறுத்தப்பட்டுளது. இன்று மாலேக்குள் இந்தக் கடிதத்திற்குத் திருப்திகரமான பதில் வராவிடில், வைத்தியராஜ் செய்துவரும் சிகிச்சையையும் நிறுத்தி விடும்படியான நிர்ப்பந்தம் எனக்கு ஏற்படும். அவளுக்கு நிறைய மருந்துச் சரக்குகளின் மூலம் சிகிச்சை அளிக்கப்பட வேண்டும். அந்த சிகிச்சை அவளுக்குக் கிடைக்காவிடில், வேறு சிகிச்சை எதுவுமே செய்ய வேண்டாம் என்பதே எனது அபிப்பிராய மாகும்.

இரவு 2 மணிக்கு நான் நோயாளியின் படுக்கைக்கு அருகில் இருந்துகொண்டு இந்தக் கடிதத்தை எழுதிக் கொண்டிருக் கிறேன். அவள் உயிருக்கும் மரணத்துக்கும் இடையே ஊச லாடிக் கொண்டிருக்கிருள். நான் இக்கடிதம் எழுதுவதுபற்றி அவளுக்கு எதுவுமே தெரியாது என்பதை நான் சொல்ல வேண்டிய அவசியம் இல்லே. இப்போது அவளுக்கு எதையும் சிந்தித்து முடிவு செய்யும் சக்தியே இல்லே.

தங்கள்,
மோ. க. காந்தி.

## 96

*சிறை முகாம்,*
*18—2—1944*

*சிறைச்சாலே இன்ஸ்பெக்டர் ஜெனரல்,*

*புனு.*

*ஐயா,*

ஸ்ரீமதி கஸ்தூரிபாயின் உடல் நிலேயில் அபிவிருத்தி ஏற்படும் படி செய்ய வைத்தியராஜ் ஸ்ரீ சிவசர்மா தமக்குத்தெரிந்த சிகிச்சை முறைகளேயெல்லாம் மேற்கொண்டு பார்த்தார். ஆனல், இறுதி யாக அவள் தேறுவாள் என்ற நம்பிக்கையை அளிப்பதற்கான ஒரு நிலேமையை உண்டாக்க அவரால் முடியவில்லே. ஆயுர்வேத சிகிச்சையினல் ஏதாவது பலன் ஏற்படுமா என்ற சோதனேயே அவரது முயற்சியாகும். எனவே அதற்காக நிறுத்தி வைக்கப் பட்டிருந்த சிகிச்சையை மீண்டும் ஆரம்பிக்கும்படி டாக்டர் கில்டரையும் டாக்டர் நய்யாரையும் இப்போது நான் கேட்டிருக் கிறேன். டாக்டர் மேத்தாவின் உதவி நிறுத்தப்படாமல் எப்போ துமே இருந்துவந்திருக்கிறது. அது இனியும் தொடர்ந்து வரும்.

மிகவும் சிக்கலான இந்த நோய்க்கு, வைத்தியராஜ் சலியா மலும், மிகுந்த அக்கறையுடனும் சிகிச்சை செய்து வந்தார் என்பதை நான் கூறவிரும்புகிறேன். அவர் விரும்பியிருந்தால்,



சிறையில் நோய்வாய்ப்பட்ட அன்னையின் ஆவி பிரிகின்றது.



அன்னை கஸ்தூரிபாயின் உடலை காந்திஜி சோகம் ததும்ப இரவு முழுவதும் காவல் புரிகிறார்.

அவர் செய்துவந்த சிகிச்சையைத் தொடர்ந்து வர நான் ஆர்வத்துடன் அனுமதித்திருப்பேன். ஆனால், கடைசியாக அவர் செய்த சிகிச்சையின் மூலம் அவர் எதிர்பார்த்த பலன் கிடைக்காததால், அவர் சிகிச்சையைத் தொடர்ந்து செய்ய விரும்பவில்லை. சிற்சில சிகிச்சை முறைகளுக்கு வைத்தியராஜின் உதவியைத் தாங்கள் விரும்புவதாக டாக்டர் கில்டரும் டாக்டர் நய்யாரும் கூறுகின்றனர். டாக்டர்களுக்கும், நோயாளிக்கும் திருப்தி அளிக்கக் கூடிய விதத்தில் அந்த முறைகளால் நல்ல பலன் ஏற்பட்டிருக்கிறது. எனவே அவ்விஷயமாக வைத்தியராஜும் தொடர்ந்து வந்து கொண்டிருப்பதை அரசாங்கம் ஆட்சேபிக்காது என்றே நம்புகிறேன். இப்போது நிலைமை மாறியிருப்பதால், அவர் இரவில் தங்கும்படியான அவசியம் இராது. வைத்தியராஜையும் டாக்டர் மேத்தாவையும் சிகிச்சை செய்ய அனுமதிக்க வேண்டும் என்ற எனது வேண்டுகோளுக்கு வீண் காலதாமதம் செய்யாமல் இணங்கியிருந்தால், நோயாளியின் நிலைமை இன்று இருப்பதுபோல் அவ்வளவு அபாயமான கட்டத்தை அடைந்திராது என்பதை நான் வருத்தத்துடன் கூறுமல் இருக்க முடியவில்லை. கடவுள் சித்தத்திற்குப் புறம்பாக எதுவும் நடைபெறுவதில்லை என்பதை நான் நன்கு அறிவேன். இருந்தாலும், மனிதன் தான் கண்ணால் காணும் பலன்களைக்கொண்டு மாத்திரம் தான் கடவுளின் சித்தத்திற்கு விளக்கம்கூற முடியும்.

தங்கள்,

**மோ. க. காந்தி**

# 97

# அன்னை கஸ்தூரிபாயின் அந்திமக் கிரியைகள்

(22-2-1944 இரவு 8-7 மணிக்கு காந்திஜி வாயினல் கூறியதை சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜெனரல் எழுதிக் கொண்டார். அன்னை கஸ்தூரி பாயின் அந்திமக் கிரியைகள் விஷயமாக காந்திஜியின் விருப்பம் என்ன என்று அரசாங்கத்தின் சார்பில் இன்ஸ்பெக்டர் ஜெனரல் கேட்டதற்கு காந்திஜி அளித்த கீழ்க்கண்ட பதிலையே அவர் அவ்விதம் எழுதிக் கொண்டார் :)

1. ஸ்ரீ கஸ்தூரிபாயின் சடலத்தை என் புதல்வர்களிடமும் உறவினர்களிடமும் ஒப்புவிக்கவேண்டும். அதாவது அரசாங்கத்தின் தலையீடு இல்லாமல் பகிரங்கமாக தகனக்கிரியைகள் நடைபெற வேண்டும்.

2. இது சாத்தியமில்லையாயின், மகாதேவ தேசாய்க்கு நடந்ததுபோல் இங்கே உத்தரக்கிரியை நடைபெறவேண்டும். உத்தரக்கிரியை நடைபெறும்போது, எனக்கு உறவினர்களைப்

போல் அவ்வளவு நெருங்கியவர்களான எல்லா நண்பர்களேயும் அனுமதித்தாலன்றி, உறவினர்களை மாத்திரம் அரசாங்கம் அனுமதிக்க முற்படுமாயின், நான் அந்த உரிமையை ஏற்றுக் கொள்ள முடியாது.

3. இதுவும் அரசாங்கம் ஒப்புக் கொள்ளக்கூடியதாக இராவிடில், பின்னர் அவளை வந்து பார்க்க யார் அனுமதிக்கப்படுகிறார்களோ அவர்களை நான் திருப்பி அனுப்பிவிடுவேன். சிறை முகாமில் இருப்பவர்கள் மாத்திரமே, தகனக் கிரியை நடைபெறும்போது கூட இருப்பார்கள்.

எனது வாழ்க்கைத் துணைவியை மிகவும் துன்பத்திற்கு உள்ளாக்கிய இந்த நோயை, அரசியல் காரணத்திற்காக உபயோகப்படுத்திக் கொள்ளக்கூடாது என்பதே எனது கவலையாகும். இதை நீங்களும் கவனித்திருப்பீர்கள். அவ்விஷயமாக அரசாங்கம் என்ன செய்தாலும் அதை கண்ணியமாகவும் பெருந்தன்மையுடனும் செய்ய வேண்டும் என்பதே எப்போதும் எனது விருப்பமாகும். ஆனால் அரசாங்கம் செய்யும் காரியங்களில் கண்ணியமோ, பெருந்தன்மையோ இல்லை. இப்போது நோயாளி போய்விட்டாள். இனி மேலாவது, உத்தரக்கிரியைகள் சம்பந்தமாக அரசாங்கம் கண்ணியத்துடன் தீர்மானம் செய்ய வேண்டும் என்று நான் எதிர்பார்ப்பது அதிகமாகாது.

## 98

காவல் முகாம்,
*4—3—1944*

இந்திய அரசாங்கக் காரியதரிசிக்கு,
உள்துறை இலாகா, புது டில்லி.

ஐயா,

காலஞ்சென்ற எனது மனைவியைப்பற்றி தயக்கமோ, வருத்தமோ இல்லாமல் நான் இந்தக் கடிதத்தை எழுதவில்லை. ஆனால், உண்மையாக நடந்து கொள்வதாயின், நான் இக்கடிதம் எழுதியாகவேண்டும். *2-3-1944*-இல் ஸ்ரீ பட்லர்* பிரிட்டிஷ் பார்லிமெண்டில் பின்வருமாறு கூறியதாகப் பத்திரிகைகளிலிருந்து தெரிகிறது: "வழக்கமாக அவருக்கு (ஸ்ரீமதி கஸ்தூரிபாய்க்கு) சிகிச்சை அளித்துவருவோரிடமிருந்து மாத்திரமல்ல, அவரது குடும்பத்தினர் விரும்பிய டாக்டர்களிடமிருந்தும் அவர் சாத்தியமான எல்லா வைத்திய உதவியும், கவனமான சிகிச்சையும் பெற்றுக் கொண்டிருந்தார்."

* ரிச்சர்ட் ஆஸ்டின் பட்லர் பிரிட்டிஷ் மந்திரி சபையில் பல ஆண்டுகள் வரையில் மந்திரி பதவி வகித்தவர்.

வழக்கமாக அவருக்குச் சிகிச்சை செய்து வந்தவர்கள் தங்களால் இயன்றதையெல்லாம் செய்தார்கள். அதற்காக நான் நன்றியுள்ளவனாக இருக்கிறேன். காலஞ்சென்ற கஸ்தூரிபாயோ அல்லது அவள் சார்பில் நானோ கோரிய உதவி, நீண்ட காலம் காத்திருந்த பின்னரே கிடைத்தது. அவள் விரும்பிய அல்லது நான் அவசியம் என்று கருதிய உதவி நோயாளிக்குக் கிடைக்காவிடில், அவளிடமிருந்து என்னைப் பிரித்து வேறு இடத்தில் வைக்க வேண்டும் என்றும், என்னால் எதுவும் செய்ய முடியாமல் அவள் படும் வேதனையை நான் பார்த்துக்கொண்டிருக்கும்படி செய்ய வேண்டாம் என்றும் சிறை அதிகாரிகளிடம் நான் கூறிய பிறகுதான் ஆயுர்வேத வைத்தியர் சிகிச்சை செய்ய அனுமதிக்கப் பட்டார். அப்போதுகூட, இன்ஸ்பெக்டர் ஜெனரலுக்கு நான் ஒரு கடிதம் எழுதிய பிறகுதான், வைத்தியராஜின் சிகிச்சையை என்னால் பூரணமாக உபயோகித்துக்கொள்ள முடிந்தது. டாக்டர் டின்ஷாவின் உதவியைக் கோரி நான் 27-1-1944-இல் எழுத்துமூலம் விண்ணப்பம் செய்துகொண்டேன். அதற்கு முன் ஒரு மாத காலமாகவே டாக்டர் டின்ஷா மேத்தாவின் உதவி வேண்டுமென நோயாளியே இன்ஸ்பெக்டர் ஜெனரலை அடிக்கடி கேட்டுக்கொண்டிருந்தாள். ஆனால் 5-2-44-லிருந்துதான் அவர் வர அனுமதிக்கப்பட்டார். மீண்டும், வழக்கமாக சிகிச்சை செய்துவந்த டாக்டர் நய்யாரும் டாக்டர் கில்டரும், டாக்டர் பி. ஸி. ராயை (கல்கத்தா) கலந்து ஆலோசிக்க வேண்டும் என்று 31-1-44-இல் எழுத்துமூலம் விண்ணப்பம் செய்துகொண்டார்கள். அதையும், பின்னர் அவர்கள் அடிக்கடி அதைப்பற்றி நினைவூட்டியதையும் அரசாங்கம் கவனிக்கவேயில்லை.

ஸ்ரீ பட்லர் மேலும் பின்வருமாறு கூறியுள்ளார்: "அவரை (ஸ்ரீமதி கஸ்தூரிபாயை) விடுதலை செய்ய வேண்டும் என்று யாரும் கேட்டுக்கொள்ளவில்லை. அவரை ஆகாகான் மாளிகையிலிருந்து அப்புறப்படுத்துவது, அவரிடமோ அல்லது அவரது குடும்பத்தினரிடமோ அன்புடன் நடந்து கொள்வதாகாது என்பதே இந்திய அரசாங்கத்தின் நம்பிக்கையாகும்."

அவளை விடுதலை செய்ய வேண்டுமென்று அவளோ அல்லது நானோ கேட்டுக் கொள்ளவில்லை என்பது உண்மையே. (தங்களை விடுதலை செய்யும்படி கேட்டுக்கொள்வது சத்தியாக்கிரகிகளான கைதிகளுக்குத் தகுதியல்ல.) எனினும், அவளை விடுதலை செய்யத் தாங்கள் விரும்புவதாக அவளிடமோ, என்னிடமோ, அல்லது எனது புதல்வர்களிடமோ அரசாங்கம் கூறியிருந்தால், அது மேன்மையாக இருந்திராதா? விடுதலை செய்வதாக வாயளவில் கூறியிருந்தால்கூட, அவளுடைய மனத்திற்கு அது ஒருவிதமான ஆறுதலை அளித்திருக்கும். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவ்விதம் அரசாங்கம் கூறவில்லை.

தகனக்கிரியைகள் சம்பந்தமாக ஸ்ரீ பட்லர் பின்வருமாறு கூறியதாகப் பத்திரிகைகளிலிருந்து தெரிகிறது: "ஸ்ரீ காந்தியின்

வேண்டுகோளுக்கிணங்க, புனவில் உள்ள ஆகாகான் மாளிகையின் திடலிலேயே தகனக்கிரியைகள் நடந்ததாகவும், அப்போது நண்பர்களும் உறவினர்களும் வந்திருந்ததாகவும் எனக்குத் தகவல் கிடைத்திருக்கிறது.''

ஆனல் 22-2-44 இரவு 8-7 மணிக்கு தகனக் கிரியைகள் சம்பந்தமாக எனது கோரிக்கை என்ன என்பதுபற்றி நான் கூறியதை இன்ஸ்பெக்டர் ஜெனரல் எழுதிக்கொண்டார்.*

எனது மனைவி நீண்ட காலமாக நோய்வாய்ப்பட்டிருந்தாள். அதன் சம்பந்தமாக அரசாங்கத்தினிடமிருந்து நான் பல கஷ்டங்களையும் தொல்லைகளையும் அனுபவிக்க நேர்ந்தது. இருந்தாலும், அவற்றை அரசியல் காரணங்களுக்காக உபயோகப்படுத்திக் கொள்வதை நான் மிகவும் ஜாக்கிரதையாகத் தவிர்த்து வந்திருக்கிறேன் என்பதை அரசாங்கம் ஒருவேளை ஒப்புக்கொள்ளலாம். இப்போதும் அவற்றை அரசியல் காரணங்களுக்காக உபயோகப் படுத்திக்கொள்ள நான் விரும்பவில்லை. அவ்விஷயமாகத் தங்களால் இயன்ற பரிகார முறைகளைக் கைக்கொள்ளும்படி அரசாங்கத்தை நான் கேட்டுக்கொள்கிறேன். அப்போதுதான் அவர்கள், காலஞ்சென்ற ஸ்ரீ கஸ்தூரிபாய்க்கும் எனக்கும் நீதி வழங்கியவர்களாவார்கள். அவ்விதம் செய்வதுதான் சத்தியத்திற்கும் உடன்பாடானதாக இருக்கும். முக்கியமான அம்சங்களில் பத்திரிகைச் செய்திகள் தவருக இருக்குமாயின், அல்லது அந்த துக்ககரமான அத்தியாயத்திற்கு அரசாங்கம் வேறுவிதமான விளக்கம் கூறுவார்களாயின், சரியான விவரங்களையும், அவ்விஷயமாக அரசாங்கத்தின் விளக்கத்தையும் எனக்கு அனுப்பிவைக்க வேண்டும். என்னுடைய புகார் நியாயமானதாக இருக்குமாயின், அமெரிக்காவில் உள்ள இந்திய அரசாங்க ஏஜண்டு விடுத்துள்ள திகைக்கவைக்கும் அறிக்கையில் காணப்படும் தவறுகளுக்குத் திருத்தம் வெளியிடுவார்கள் என்று நம்புகிறேன்.

தங்கள்,
மோ. க. காந்தி

---

* அன்னை கஸ்தூரிபாயின் தகனக் கிரியைகள் சம்பந்தமாக காந்திஜி கூறிய விவரங்கள் 245-246-ஆம் பக்கங்களில் வெளியாகியுள்ளன.

## 99

*இந்திய அரசாங்க உள்துறை இலாகா,*
*புதுடில்லி, 21-3-1944*

*இந்திய அரசாங்கக் காரியதரிசியிடமிருந்து,*
*உள்துறை இலாகா,*
*புது டில்லி.*

*மோ. க. காந்தி அவர்களுக்கு,*

*ஐயா,*

*2-3-1944-இல் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு ஸ்ரீ பட்லர் அளித்துள்ள பதில் சம்பந்தமாக 4-3-44-இல் நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. இது அந்தக் கடிதத்திற்கு பதிலாகும். விசேஷ டாக்டர்களைத் தருவிக்கும் விஷயமாக இந்திய அரசாங்கம் நியாயமற்ற முறையில் நடந்துகொண்டதாகவோ அல்லது இடையூறாக இருந்ததாகவோ நீங்கள் கருதுவதைக் குறித்து இந்திய அரசாங்கம் வருந்துகிறது. அரசாங்க டாக்டர்கள் அவசியம் என்று கருதியபோது, சிகிச்சைக்காகவோ அல்லது ஆலோசனைக்காகவோ விசேஷ டாக்டர்களைத் தருவிப்பதை அனுமதிக்க இந்திய அரசாங்கம் எப்போதுமே தயாராக இருந்தது. வெளியிலிருந்து டாக்டர்களைத் தருவிப்பது அவசியம் என்று அரசாங்க டாக்டர்கள் தீர்மானித்தபோது, அவ்விதமே தருவிப்பதில் தாமதம் எதுவும் ஏற்பட்டதாக அரசாங்கம் நினைக்கவில்லை. டாக்டர் டின்ஷா மேத்தா தமக்கு சிகிச்சை செய்ய வேண்டும் என்று ஸ்ரீமதி காந்தி கேட்டதாக ஜனவரி 31-க்கு முன் யாரும் அரசாங்கத்திற்குக் கூறவில்லை. அவசியம் என்றோ அல்லது பலனளிக்கக்கூடியதென்றோ அரசாங்க டாக்டர்கள் கருதினால், விசேஷ வைத்திய உதவியையோ, ஆலோசனையையோ அனுமதிக்கலாம் என்று பிப்ரவரி 1-ஆம் தேதி பம்பாய் அரசாங்கத்திற்கு இந்திய சர்க்கார் திட்டவட்டமாக அறிவித்தனர். டாக்டர் டின்ஷா மேத்தாவை முதலிலேயே அழைக்காததற்குக் காரணம் என்னவெனில், அவரது சிகிச்சையினால் யாதொரு பலனும் ஏற்படுவதற்கில்லை என்று கர்னல் பண்டாரியும், டாக்டர் கில்டரும் கருதியதேயாகும். எனினும் அரசாங்க டாக்டர்கள் தங்களுடைய அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்ட உடனேயே டாக்டர் மேத்தா அழைக்கப்பட்டார். உங்களுடைய ஜனவரி 27உ கடிதம் பிப்ரவரி 1உ வரையில் அரசாங்கத்திற்குக் கிடைக்கவில்லை. ஓர் ஆயுர்வேத வைத்தியர் சிகிச்சை செய்ய வேண்டும் என்று உங்களுடைய மனைவி விரும்புவதாக அதில் குறிப்பிட்டிருந்தது, ஆனால், வைத்தியரின் பெயர் எதுவும் அதில் குறிப்பிடப்படவில்லை. வைத்தியராஜ் சர்மா சிகிச்சை செய்ய வேண்டும் என்ற திட்டவட்டமான*

கோரிக்கை பிப்ரவரி 9௳ வரையில் கிடைக்கவில்லை. 24 மணி நேரத்திற்குள் அந்தக் கோரிக்கை அனுமதிக்கப்பட்டுவிட்டது. ஆகாகான் மாளிகையிலேயே வைத்தியராஜ் சர்மா ஜாகையாக இராததன் காரணமாக ஏற்பட்ட அசௌகரியங்களை இந்திய அரசாங்கம் தெரிந்துகொண்ட உடனேயே, அவர் அங்கேயே தங்கியிருப்பதற்கான அவசியமான அனுமதி கொடுக்கப்பட்டு விட்டது. இந்த நிலையில், உங்களுடைய மனைவி நோய்வாய்ப் பட்டிருந்தபோது நீங்கள் விரும்பிய எல்லாவிதமான சிகிச்சையும் அவர் பெறுவதற்கு சாத்தியமானதை யெல்லாம் செய்ததாகவே இந்திய அரசாங்கம் கருதுகிறது.

விடுதலை செய்யும் பிரச்னை சம்பந்தப்பட்டவரையில், இந்திய அரசாங்கம் தான் கைக்கொண்ட முறையே சிறந்ததென்றும், மிக்க அன்புடன் கூடியதென்றும் கருதுகிறது. தற்காலிகமாக விடுதலை அடைவதை விரும்புகிறாரா என்று உங்களுடைய மகன் தேவதாஸ் காந்தி அவரது தாயாரைக் கேட்டதாயும், தம்முடைய கணவனின்றி தாம் மாத்திரம் மாளிகையைவிட்டு வெளியே செல்ல விரும்பவில்லை என்று அவர் பதில் அளித்துவிட்டதாகவும் ஜனவரி 25௳ அரசாங்கத்திற்கு அறிவிக்கப்பட்டது. அது அந்த ரங்கமான சம்பாஷணையாதலின், அரசாங்கம் அச்செய்தியை உபயோகப்படுத்திக் கொள்ளவில்லை. சர் கிரிஜா சங்கர் வாஜ் பேய் அமெரிக்காவில் ஏதோ கூறியதாகக் குறிப்பிடப்பட் டிருப்பது தவறாகும். அவ்விஷயமாக டில்லி சட்ட சபையில் கேட்ட கேள்விகளுக்கு அளிக்கப்பட்டுள்ள பதில்களை நீங்கள் நிச்சயமாகப் பார்த்திருக்கலாம். அதன் சம்பந்தமாக ஏற்பட்ட தப்பெண்ணத்தை அந்தப் பதில்கள் அகற்றியுள்ளன.

உங்களுடைய விருப்பப்படியே, தகனக் கிரியைகளுக்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அவ்விஷயமாக அரசாங்கம் விசாரித்ததில், அதன் சம்பந்தமாக நீங்கள் உங்கள் கடிதத்தில் குறிப்பிட்ட இரண்டு விதமான ஏற்பாடுகளில், எந்த ஒன்றையும் நீங்கள் குறிப்பாக வற்புறுத்தவில்லை என்று தகவல் கிடைத்தது.

இந்த நிலையில், பார்லிமென்டில் கேட்கப்பட்ட கேள்விக்கு ஸ்ரீ பட்லர் அளித்த பதிலில் தவறு எதுவும் இருப்பதாக இந்திய அரசாங்கம் கருதவில்லை.

உங்களுடைய மிகவும் பணிவுள்ள ஊழியன்,
ஆர். டாட்டென்ஹாம்
இந்திய அரசாங்கக் காரியதரிசி.

# 100

சிறை முகாம்.
1—4—1944

ஐயா,

21—3—44-இல் தாங்கள் எழுதிய கடிதம் 27உ என் கைக்குக் கிடைத்தது.

விசேஷ வைத்திய உதவி சம்பந்தமாக நான் ஒன்று கூற விரும்புகிறேன். டாக்டர் டின்ஷா மேத்தாவின் வைத்திய உதவியைத் தாம் விரும்புவதாக நோயாளியே கர்னல் அத்வானியிடம் சென்ற டிசம்பர் மாதம் முதன் முதலாக நேரில் கேட்டுக் கொண்டார். வாய் மூலம் பல தடவைகள் கேட்டுக் கொண்டும் பலன் இராமற்போகவே, 27-1-44-இல் நான் எழுத்து மூலம் அவ் விஷயமாக இந்திய அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ள வேண்டியிருந்தது. இந்த வேண்டுகோளைப் பற்றி 31-1-44-இல் நான் பம்பாய் அரசாங்கத்துக்கு மறுபடியும் நினைவூட்ட வேண்டியிருந்தது. அவ்விதமே கேட்டுக் கொண்டு டாக்டர் நய்யாரும், டாக்டர் கில்டரும் சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜெனரலுக்கு ஒரு கடிதம் எழுத வேண்டியிருந்தது. அவ்விஷயமாக மீண்டும் நான் 3-2-44-இல் பம்பாய் அரசாங்கத்துக்கு எழுதினேன். அவர்கள் அதற்குப் பதில் அனுப்பினர். அதன் பலனாக, 5-2-44-இல் அதாவது முதன் முதலாக விடுத்த வேண்டுகோளுக்குப் பிறகு ஆறு வாரங்கள் கழித்துத்தான் டாக்டர் டின்ஷா வந்து சேர்ந்தார். அவர் வருவதற்கு அனுமதி கொடுக்கப்பட்ட பிறகு கூட, அவர் எத்தனை தடவைகள் வரவேண்டும், சிகிச்சை செய்வதற்கு எவ்வளவு நேரம் எடுத்துக் கொள்ள வேண்டும் என்பது பற்றி கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. மிகவும் கஷ்டப்பட்டு முயற்சி செய்த பிறகு தான் அந்தக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டு, பின்னர் அகற்றப்பட்டன.

அரசாங்கம் அனுப்பியுள்ள கடிதத்தில் டாக்டர் கில்டரைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதை அவரிடம் காட்டினேன். அவ்விஷயமாக அவர் ஒரு கடிதம் எழுதி, அரசாங்கத்திற்கு அனுப்பும்படி என்னிடம் கூறினார். டாக்டர் கில்டர் கூறியதாக அரசாங்கத்தின் கடிதத்தில் குறிப்பிட்டுள்ள கருத்துக்களை அவர் ஒருபோதும் கூறியதில்லை என்று தெரிவித்திருக்கிறார். அது எப்படியாயினும், டாக்டர் டின்ஷாவின் உதவி கிடைக்க முடியாமல் ஆறு வாரங்களுக்கு மேல் சென்று விட்டன என்பது துக்ககரமான உண்மையாகும்.

ஆங்கில வைத்தியரல்லாத ஒருவரை சிகிச்சைக்கு அழைத்து வர வேண்டும் என்று, சென்ற டிசம்பர் மாத ஆரம்பத்தில் இந்த முகாமுக்கு என் மகன் வந்த பிறகு இன்ஸ்பெக்டர் ஜெனரலிடம் திட்டவட்டமாகக் கூறினேன். எனது மகனின் வேண்டுகோளை

கர்னல் பண்டாரி என்னிடம் தெரிவித்தார். அத்தகைய சிகிச்சை அளிக்க வேண்டுமென என் மகன் அபிப்பிராயப்பட்டால், அதற்கு அரசாங்கம் அனுமதி கொடுக்கவேண்டும் என்று நான் அவரிடம் கூறினேன். என் மகனின் வேண்டுகோளைக் குறித்து ஆலோசனை நடந்து கொண்டிருக்கையில், நோயாளியின் நிலைமை மோசமாகத் தொடங்கியது. தனக்கு ஓர் ஆயுர்வேத வைத்தியர் சிகிச்சை செய்ய வேண்டுமென அவளே வற்புறுத்தினாள். அவள், அவ்விஷயமாக இன்ஸ்பெக்டர் ஜெனரலுடனும், கர்னல் ஷாவுடனும் பல தடவை பேசினாள். ஆனால் யாதொரு பலனும் ஏற்படவில்லை. ஒன்றும் தோன்றாமல் சோர்வடைந்து நான் 27-1-44-இல் இந்திய அரசாங்கத்துக்கு எழுதினேன். குறிப்பிட்ட எந்த ஆயுர்வேத வைத்தியராவது சிகிச்சை செய்ய வேண்டுமென நோயாளி விரும்புகிறாரா என்று அரசாங்கத்தின் சார்பில் இந்த முகாம் சூபரிண்டெண்ட் 31-1-44-இல் என்னைக் கேட்டார். அது என்னுடைய மௌன தினமாதலால் நான் எழுத்துமூலம் பதில் அளித்தேன். அதற்குப் பிறகும் யாதொரு பலனும் ஏற்படவில்லை. நோயாளியின் நிலைமை, அதற்கு மேலும் தாமதிக்க இடம் கொடுக்கவில்லை. எனவே, 3-2-44-இல் நான் பம்பாய் அரசாங்கத்துக்கு ஓர் அவசரக் கடிதம் அனுப்பினேன். கடைசியாக, 12-2-44-இல் வைத்தியராஜ சர்மா அழைத்து வரப்பட்டார். அவ்விதமாக, ஆங்கில வைத்தியரல்லாத ஒருவர் சிகிச்சைக்கு வரவேண்டும் என்று முதன் முதலாகக் கேட்டுக் கொண்டதற்கும் அத்தகைய வைத்தியர் ஒருவர் வந்ததற்கும் இடையே எட்டு வாரங்களுக்கு மேல் சென்றுவிட்டன.

வைத்தியராஜ சர்மா வருவதற்கு முன், அவரது சிகிச்சையின் காரணமாக ஏற்படும் விளைவுக்கு அரசாங்கம் எவ்விதத்திலும் பொறுப்பாளியல்ல என்று எழுதித் தரும்படி அதிகாரிகள் என்னை கேட்டனர். நான் மகிழ்ச்சியுடன் அவ்விதமே எழுதிக் கொடுத்தேன். எனவே, வைத்தியராஜே தற்காலிகமாக சிகிச்சையின் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார். அவ்விதம் நோயாளியின் சிகிச்சைக்கான முழுப்பொறுப்பையும் ஏற்றுக் கொண்டுள்ள வைத்தியருக்கு அவசியமான சகல வசதிகளும் அளிக்கப்பட்டிருக்கும் என்றே எவரும் எண்ணியிருப்பார். ஆனால் அவருக்குத் தேவையான வசதிகளைச் செய்து கொடுக்க, எல்லையின்றி பல கஷ்டங்களுக்கு உள்ளாக வேண்டியிருந்தது.

அப்போது நோயாளி மிகுந்த வேதனையினால் துன்பப் பட்டுக் கொண்டிருந்தாள். அவளது நிலைமை நாளுக்கு நாள் மிக்க துரிதமாக மோசமாகிக் கொண்டிருந்தது. ஒவ்வொரு விதத்திலும் சிகிச்சை அளிப்பதில் ஏற்பட்ட தாமதம், உயிர் பிழைக்கலாம் என்ற நம்பிக்கைக்கு ஊறு விளைப்பதாக இருந்தது.

நோயாளியும் நானும் சமாளிக்க வேண்டியிருந்த தாமதங்களுக்கும் கஷ்டங்களுக்கும் அரசாங்கத்தின் இந்த இலகாவோ

அல்லது அந்த இலாகாவோ காரணமாக இருந்தாலும் சரி, அல்லது அரசாங்க டாக்டர்கள் காரணமாக இருந்தாலும் சரி, அதன் பொறுப்பு நிச்சயமாக இந்திய அரசாங்கத்தையே சார்ந்த தாகும்.

ஆலோசனைக்கு டாக்டர் பி. ஸி. ராயை அழைத்து வர வேண்டுமென்று டாக்டர் நய்யாரும் டாக்டர் கில்டரும் எழுத்து மூலமும் வாய் மூலமும் கேட்டுக் கொண்டதற்கு சர்க்கார் பூரண மௌனம் சாதித்து வந்தார்கள். அந்த வேண்டுகோளுக்கு இணங்காததற்குக் காரணங்கள் என்ன என்பதைக் கூட அவர் கள் கூற முன்வரவில்லை.

பயிற்சி பெற்ற நர்ஸுகள் பணிவிடை செய்து கொண்டிருந்த தாக, இந்தியா சட்டசபையில் உள்துறை மந்திரி கூறியது தவறு என்பதை 20-3-44-இல் நான் எழுதிய கடிதத்தில் சுட்டிக் காட்டி யிருந்தேன். இவ்விஷயமாகவும் அரசாங்கம் அனுப்பியுள்ள பதில் மௌனம் சாதிக்கின்றது. உண்மை என்னவெனில், பயிற்சி பெற்ற நர்ஸுகள் உதவிக்கு வரவேயில்லை. தனக்குப் பணி விடை செய்வதற்கு நோயாளி விரும்பியவர்களைக்கூட, குறிப்பாக ஸ்ரீ கனு காந்தியை மிகமிகத் தாமதித்தே அனுமதித்தார்கள். இக் கடிதத்தில் அப்பட்டமான உண்மைகளையே நான் கூறியிருக் கிறேன். இவற்றிற்கு ஆதாரமான கடிதப் போக்குவரத்தின் பிரதி களையும் இத்துடன் இணைத்திருக்கிறேன். எனவே, இதை அமைதியாகப் படித்தால், கஸ்தூரி பாய்க்கு நான் விரும்பிய சிகிச்சைகளெல்லாம் செய்யப்பட்டன என்று இந்திய அரசாங்கம் கூறுவது சரியல்ல என்பது ஒப்புக் கொள்ளப்படும் என்றே நம்பு கிறேன். அவ்விதமே ஸ்ரீ பட்லர் கூறியிருப்பதும் முற்றிலும் சரி யல்ல. உள்துறை மந்திரி அதற்கு மேலும் சென்றிருக்கிறார். "ஸ்ரீமதி கஸ்தூரி பாய் காந்திக்கு வழக்கமாக சிகிச்சை செய்யும் டாக்டர்களிடமிருந்து மாத்திரமல்ல, அவரது குடும்பத்தினர் விரும்பிய டாக்டர்களிடமிருந்தும் மிகுந்த அக்கறையுடனும் கவனத்துடனும் சாத்தியமான எல்லா வைத்திய உதவியும் கிடைத்துவந்தது" என்று உள்துறை மந்திரி கூறியிருக்கிறார். அவரது கூற்று, "வைத்திய காரணங்களை முன்னிட்டு முற்றிலும் அத்தியாவசியம் என்று அரசாங்க வைத்திய அதிகாரி கருதினாலன்றி வெளியிலிருந்து டாக்டர்கள் வருவதை அனுமதிப்பதில்லை" என்று பம்பாய் அரசாங்கம் கூறியதற்கு முரணாக இருக்கிறது அல்லவா?

ஸ்ரீமதி கஸ்தூரிபாயை விடுதலை செய்யும் விஷயமாக, எனது மகன் அவனுடைய தாயாருடன் அந்தரங்கமாகப் பேசியதைக் குறித்து இந்திய அரசாங்கம் குறிப்பிட்டிருக்கிறது. வெளியி லிருந்து வரும் எவருனுடம் ஒரு கைதிக்கு "அந்தரங்க" சம்பா ஷணை எதுவும் இருக்க முடியாது. ஆகையால், என்னைப் பொறுத்தமட்டில், அந்த சம்பாஷணை உண்மைதானா என்பது என் மகனால் உறுதி செய்யப்பட்ட பின், அரசாங்கத்துக்கு தன்

விருப்பப்படி அதை உபயோகப்படுத்திக் கொள்ள உரிமை உண்டு. அது எப்படியாயினும், அரசாங்கம் ஸ்ரீமதி கஸ்தூரி பாயை விடுதலை செய்வதாகக் கூறி, எது சிறந்தது, எது அவளிடம் மிகுந்த அன்பு காட்டுவதாகும் என்பதைத் தீர்மானிக்கும் பொறுப்பை என் மீது சுமத்தியிருந்தால், அவர்கள் தங்கள் மீது எள்ளளவும் குற்றம் கூற முடியாமல் நடந்து கொண்டவர்களாகி இருப்பார்கள்.

தகனக் கிரியைக்கான ஏற்பாடுகள் சம்பந்தப்பட்டவரையில், 4-3-44-இல் நான் அரசாங்கத்திற்கு வேண்டுகோள் விடுத்து எழுதிய கடிதம் மிகத் தெளிவாக இருக்கிறது. அந்தக் கடிதத்தில் உள்ள விவரங்களை நான் வாயால் சொல்ல, இன்ஸ்பெக்டர் ஜெனரல் குறித்துக் கொண்டார். அப்படியிருக்க, அரசாங்கம் விசாரித்ததன்மீது, எனது கடிதத்தில் குறிப்பிட்ட இரண்டு கோரிக்கைகளில் எந்த ஒரு கோரிக்கையையும் நான் விசேஷமாக வற்புறுத்தவில்லை என்று தங்களுக்குத் தகவல் கிடைத்ததாகக் கூறியிருப்பது எனக்கு மிகவும் வியப்பாக இருக்கிறது. அரசாங்கத்துக்குக் கிடைத்த அந்தத் தகவல் முற்றிலும் தவறாகும். அவ்விரண்டு முறைகளில் ஏதாவதொன்றை என் விருப்பத்திற்கு விட்டிருந்தால், எனக்கு மிகவும் அன்பார்ந்த ஒருவருடைய தகனக் கிரியையை வழக்கமாக உள்ள மயானத்தில் செய்யாமல் சிறைச் சுவர்களுக்கு உள்ளே (இந்த முகாம் இன்று சிறையாகவே இருக்கிறது) செய்ய நான் ஒரு காலத்திலும் உடன்பட்டிருக்க மாட்டேன்.

அத்தகைய சொந்த விஷயங்களையொட்டி நான் அரசாங்கத்துக்கு எழுதுவது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடியதல்ல, எளிதான விஷயமும் அல்ல. அறுபத்திரண்டு ஆண்டுகளுக்கு மேலாக என்னிடம் நம்பிக்கையுடனும் விசுவாசத்துடனும் வாழ்க்கைத் துணைவியாக இருந்துவந்துள்ள ஒருவரின் ஞாபகார்த்தமாகவே இதை நான் எழுதுகிறேன். ஸ்ரீமதி கஸ்தூரிபாயைப் போன்ற நிலையில் இல்லாத மற்றக் கைதிகளின் கதி என்னவாகும் என்பதை ஆலோசித்துப் பார்க்கும் பொறுப்பை அரசாங்கத்துக்கே விட்டுவிடுகிறேன்.*

தங்கள்,

**மோ. க. காந்தி**

---

* மேற்கண்ட கடிதத்திற்கு ஆதாரமாக காந்திஜி, ஏற்கனவே வெளியாகியுள்ள 87, 90, 91, 92, எண்கள் உள்ள கடிதங்களையும் இணைத்து அனுப்பியிருந்தார். அக்கடிதங்கள் இந்தத் தொகுப்பின் முந்திய பக்கங்களில் வெளியாகியிருக்கின்றன.

## 101

சிறை முகாம்,
2-4-1944

அன்புள்ள கர்னல் பண்டாரி,

31-3-1944-இல் இந்திய அரசாங்கம் எனக்கு எழுதியுள்ள கடிதத்தில், பின்வரும் இரண்டு பகுதிகள் காணப்படுகின்றன :

"டாக்டர் டின்ஷா மேத்தா தமக்கு சிகிச்சை செய்ய வேண்டுமென ஸ்ரீமதி காந்தி கேட்டுள்ளார் என்று, முதன் முதலாக 28-1-44-இல் அரசாங்கத்துக்குத் தகவல் கிடைத்தது. டாக்டர் டின்ஷா மேத்தா சீக்கிரமாகத் தருவிக்கப்படாததற்குக் காரணம் என்னவெனில், அவரது சிகிச்சையினால் யாதொரு பலனும் ஏற்படாது என்று கர்னல் பண்டாரியும், டாக்டர் கில்டரும் அபிப்பிராயப்பட்டதுதான். ஆனால், அரசாங்க டாக்டர்கள் தங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்ட உடனேயே டாக்டர் டின்ஷா மேத்தாவைத் தருவித்து விட்டார்கள்."

"தகனக் கிரியை சம்பந்தமான ஏற்பாடுகள் உங்கள் விருப்பத்திற்கு இணங்கவே செய்யப்பட்டன என்று இங்கே கருதுகிறார்கள். அவ்விஷயமாக அதிகாரிகள் விசாரித்தனர். உங்கள் கடிதத்தில் கண்ட இரண்டு முறைகளில் எந்த ஒன்றையும் நீங்கள் விசேஷமாக வற்புறுத்தவில்லை என்று அரசாங்கத்திற்குத் தகவல் கிடைத்தது."

மேற்கண்ட விதம் அபிப்பிராயம் கூறியதாக டாக்டர் கில்டருக்கு ஞாபகமில்லை. காலஞ் சென்றவரை வழக்கமான மயானத்தில் தகனம் செய்வதா அல்லது சிறை காம்பவுண்டுக்குள் தகனம் செய்வதா என்ற விஷயத்தில் நான் எவ்வித அபிப்பிராயமும் தெரிவிக்காமல் ஒருபோதும் அலட்சியமாக இருந்துவிடவில்லை. உங்கள் கடிதத்தில் உள்ள இந்தக் குறைகளை, முரண்பாடுகளை நீங்கள் விளக்குவீர்களா?

தங்கள்,
மோ. க. காந்தி

## 102

சிறை முகாம்,
2-4-1944

இந்திய அரசாங்கக் காரியதரிசிக்கு,
புதுடில்லி.

ஐயா,

இந்திய அரசாங்கத்துக்கு நேற்று நான் எழுதிய கடிதத்தைத் தொடர்ந்தே இதை எழுதுகிறேன். கடிதத்தை சிறை

சூபரிண்டெண்டிடம் கொடுத்தபின், நான் பத்திரிகைகளைப் பார்க்கத் தொடங்கினேன். அப்போது 30-3-44-இல் வெளியான 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' பத்திரிகையில் பிரசுரமாகியுள்ள கீழ்க் கண்ட செய்தியைக் கண்டு திடுக்கிட்டேன் :

"புதுடில்லி, புதன்கிழமை—இன்று ராஜாங்க சபையில் லாலா ராமசரண தாஸ் பின்வருமாறு கேட்டார்: ஸ்ரீமதி காந்திக்கு சிகிச்சை செய்யும் பொறுப்பை ஏற்றுக்கொள்ள பிரபல ஆயுர்வேத வைத்தியரான பண்டித சிவசர்மாவை அனுமதிக்கும்படி மகாத்மா காந்தி அரசாங்கத்தைக் கேட்டாரா? எப்போது கேட்டார்?

"அதற்கு உள்துறை இலாகா காரியதரிசி ஸ்ரீ கான்ரான் ஸ்மித் பதிலளிக்கையில் கூறியதாவது: பண்டித சர்மா சிகிச்சை செய்ய வர வேண்டுமென அரசாங்கத்துக்கு திட்டவட்டமான முதல் வேண்டுகோள் பிப்ரவரி 9உ விடுக்கப்பட்டது. பிப்ரவரி 10-இல் அவ்விதமே அனுமதிக்கப்பட்டது. ஒன்றிரண்டு நாட்களுக்குப் பிறகு பண்டித சர்மா முகாமுக்கு செல்லத் தொடங்கியதாகத் தெரிகிறது. அசோசியேடெட் பிரஸ் செய்தி."

உண்மை என்னவெனில், வைத்தியராஜ சிவ சர்மாவின் பெயர் முதன் முதலாக 31-1-44-இல் அரசாங்கத்தினிடம் விண்ணப்பித்துக் கொள்ளப்பட்டது. பிப்ரவரி 9உ அல்ல. எனினும், ஆங்கில வைத்தியரல்லாத ஒருவர் சிகிச்சை செய்ய வேண்டுமென்ற கோரிக்கை, 1943 டிசம்பர் மாதமே அரசாங்கத்துக்கு முதன் முதலாக அறிவிக்கப்பட்டது என்பதை நேற்று நான் எழுதியுள்ள கடிதத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். எனவே மேற்கண்ட செய்திக்கு ஒரு திருத்தத்தை நான் எதிர்பார்க்கலாமா ?

தங்கள்,
மோ. க. காந்தி

# 103

சிறை முகாம்,
20-5-1944

ஐயா,

காலஞ்சென்ற எனது மனைவிக்கு வைத்திய வசதிகளும் பிற வசதிகளும் அளித்ததன் சம்பந்தமாக இந்தியா சட்டசபையில் அரசாங்கத்தின் சார்பில் அளித்துள்ள பதிலை, நான் அக்கறையுடனும் மனவேதனையுடனும் வாசித்தேன். 4-3-44-இல் நான் எழுதிய கடிதம் மேற்கண்ட பதில் அளிக்கப்பட்டபோது அரசாங்கத்தின் கைக்குக் கிடைத்திருக்கலாம். எனவே, அக்கடிதத்திற்குப் பலன் ஏதாவது ஏற்படுமென நான் நம்பிக் கொண்டிருந்தேன். நோயாளியை விடுதலை செய்வதாக ஒரு போதும் தாங்கள் கூறியதில்லை என்று அரசாங்கம் ஒப்புக் கொண்டிருப்பதைத்

தவிர, அந்தக் கடிதத்தில் சுட்டிக் காட்டப்பட்ட தவறுகளுக்கு யாதொரு பரிகார முறைகளையும் எடுத்துக்கொள்ளவில்லை. அதற்கு மாறாக அரசாங்கம் மேற்கொண்டும் ஒரு தவறு செய்திருக்கிறது; அதாவது "பயிற்சி பெற்ற நர்ஸுகள் நியமிக்கப்பட்டதாக"க் கூறியிருக்கிறது. பயிற்சிபெற்ற நர்ஸ் தேவை என்று யாரும் கேட்கவில்லை. அத்தகைய நர்ஸ் நியமிக்கப்படவும் இல்லை. தமக்குப் பணிவிடை செய்ய ஸ்ரீ பிரபாவதி தேவியையும், ஸ்ரீ கனு காந்தியையும் தாம் விரும்புவதாக எனது மனைவி கூறினாள். ஆனால் அவர்களுக்குப் பதிலாக ஓர் 'ஆயா' அனுப்பப்பட்டாள். அந்த 'ஆயா'வும் வந்த ஒரு வார காலத்திற்குள் வேலையை விட்டுச் சென்றுவிட்டாள். ஏனெனில் தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட வேலைக்கு தான் தகுதியற்றவள் என்பதை அவள் உணர்ந்ததே அவள் வேலையை விட்டுச் சென்றதற்குக் காரணம். அதன் பிறகுதான், அடிக்கடி கேட்டுக் கொண்டதன் மீது மேற்கொண்டும் சில நாட்கள் தாமதித்து ஸ்ரீ கனு காந்தியும் ஸ்ரீ பிரபாவதி தேவியும் அனுமதிக்கப்பட்டார்கள். நோயாளி கோரிய வசதிகளை அரசாங்கம் உடனுக்குடனே அளித்துவிட்டது போல் தோன்றும்படி பதில் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் உண்மை என்னவெனில், பெரும்பாலான வசதிகளும் மறுக்கப்படவில்லையாயின், தயக்கத்துடனும், மிகக் காலம் கடந்துமே அளிக்கப்பட்டன, வசதிகள் காலம் கடந்தே அளிக்கப்பட்டன என்ற புகார் நியாயமானதே என்றாலும், அவ்விதம் புகார் கூற வேண்டும் என்பது இந்தக் கடிதத்தின் நோக்கமல்ல. எனது புகார் என்னவெனில். 4-ஆம் தேதி நான் விவரமாக விண்ணப்பம் செய்து கொண்டு கூட அரசாங்கம் அப்பட்டமான உண்மையைக் கூறாமல், கலப்படமான விவரங்களை வெளியிட்டிருக்கிறது என்பதுதான்.

தங்கள்,
மோ. க. காந்தி

## 104

இந்திய அரசாங்கக் காரியதரிசியிடமிருந்து,
உள்துறை இலாகா, புது டில்லி.

ஐயா,

மார்ச் 20-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதத்திற்கு, பின்வருமாறு பதிலளிக்கும்படி எனக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது: கனு காந்தி, ஸ்ரீ ஜெயப்பிரகாஷின் மனைவி இருவருடைய சேவையையும் கோருவதாக டிசம்பர் 22-ஆம் தேதி இந்திய அரசாங்கத்திற்கு அறிவிக்கப்பட்டது. அப்போது ஸ்ரீமதி ஜெயப்பிரகாஷ் பீகார் சிறையில் இருந்தார். அவரை புனா சிறை முகாமுக்கு மாற்றுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யும்படி கேட்டுக் கொண்டு

அன்றே பீகார் அரசாங்கத்துக்கு ஒரு தந்தி அனுப்பப்பட்டது. இதன் மத்தியில், விசேஷ நர்ஸுகள் அவசியமாயின் அதற்கு அந்தத் தொழிலில் ஈடுபட்டவர்களை நியமிப்பதுதான் சரியான முறை என்று டிசம்பர் 23-ஆம் தேதி பம்பாய் அரசாங்கத்துக்கு அறிவித்தனர். ஸ்ரீமதி ஜெயப்பிரகாஷ் நாராயணனை பீகாரிலிருந்து மாற்றுவதில் தங்களுக்கு ஆட்சேபணை இல்லை என்று பீகார் அரசாங்கம் டிசம்பர் 24-ஆம் தேதி இந்திய அரசாங்கத்துக்கு அறிவித்தது. ஏற்கனவே அறிவித்ததுபோல், வழக்கமாக நர்ஸ் தொழிலில் ஈடுபட்டவர்களைத் தருவிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய முடியாவிடில், ஸ்ரீமதி ஜெயப்பிரகாஷ் நாராயணனைத் தருவிக்கும் விஷயமாக பீகார் அரசாங்கத்துடன் தொடர்பு கொள்ளும்படி அன்றே பம்பாய் அரசாங்கத்திற்கு அறிவிக்கப்பட்டது. ஸ்ரீமதி காந்திக்காக நியமிக்கப்பட்ட விசேஷ நர்ஸுகள் வேலையை விட்டுப் போய்விட்டதாகவும், எனவே ஸ்ரீமதி ஜெயப்பிரகாஷ் நாராயணனைப் புனாவுக்கு மாற்றுவதற்கான ஏற்பாடுகளைச் செய்துவருவதாகவும் ஜனவரி 3-ஆம் தேதி இந்திய அரசாங்கத்துக்கு அறிவித்தனர். பின்னர் கனு காந்தி ஆகாகான் மாளிகைக்கு அடிக்கடி வந்து கொண்டிருப்பதாகத் தகவல் வந்தது. உங்களுடைய மனைவிக்குப் பணிவிடை செய்ய அவரை ஆகாகான் மாளிகையிலேயே இருக்க அனுமதிக்க வேண்டும் என்று ஜனவரி 27-ஆம் தேதி இந்திய அரசாங்கத்திற்கு மீண்டும் வேண்டுகோள் வந்தது. ஜனவரி 29-ஆம் தேதி அந்த வேண்டுகோள் அனுமதிக்கப்பட்டது. அந்தக் கடிதம் வருவதற்கு முன்பே கனு காந்தி ஆகாகான் மாளிகையிலேயே தங்கியிருப்பதற்கு பம்பாய் அரசாங்கம் இசைந்துவிட்டது என்று தெரிகிறது.

இந் நிலையில், இந்தியா சட்டசபையில் அவ்விஷயமாக அளிக்கப்பட்ட பதில் பெரும்பாலும் சரியே என்று இந்திய அரசாங்கம் கருதுகிறது. பயிற்சி பெற்ற நர்ஸைக் காட்டிலும் ஒரு 'ஆயா'வையே தாம் விரும்புவதாக தங்கள் மனைவி கூறியதன் மீதே, அவரது விருப்பத்திற்கிணங்க ஓர் 'ஆயா' நியமிக்கப்பட்டாள். இந்த உண்மையை பம்பாய் அரசாங்கம் இந்திய அரசாங்கத்திற்கு இப்போது அறிவித்திருக்கிறது. பம்பாய் அரசாங்கத்தின் கடிதத்திலிருந்தோ அல்லது உங்களுடைய கடிதத்திலிருந்தோ இதைப் பற்றி இந்திய அரசாங்கத்துக்கு முன்பு எதுவும் தெரியாது. இந்த உண்மையை வெளியிட வேண்டியது அவசியமென அவர்கள் கருதவில்லை.

தங்களுடைய மிகப் பணிவுள்ள ஊழியன்,

ஆர். டாட்டென்ஹாம்,

இந்திய அரசாங்கக் காரியதரிசி.

## 105

சிறைமுகாம்,
13—4—1944.

இந்திய அரசாங்கக் காரியதரிசி,
புது டில்லி.

ஐயா,

நீங்கள் மார்ச் 30-ஆம் தேதி எழுதிய கடிதம் ஏப்ரல் 6-ஆம் தேதி எனக்குக் கிடைத்தது. முழு நிலைமையையும் பற்றி இந்திய அரசாங்கத்துக்கு எவ்வளவு தவறான தகவல்கள் கிடைத்திருக்கின்றன என்பதற்கு அது ஒரு நல்ல ருசுவாகும்.

பயிற்சி பெற்ற நர்ஸுகள் சம்பந்தமாக இந்திய அரசாங்கத்தின் சார்பில் கூறப்பட்டதை நீங்கள் கவனிக்க வேண்டும். பயிற்சியளிக்கப்பட்ட நர்ஸுகள் சிறிது காலத்திற்கு நியமிக்கப்பட்டனர் என்று இந்திய அரசாங்கத்தின் சார்பில் கூறப்பட்டிருக்கிறது. பயிற்சியளிக்கப்பட்ட நர்ஸுகள் நியமிக்கப்பட்டார்களா என்பதுதான் கேள்வியேயொழிய, அத்தகைய நர்ஸுகளை காட்டிலும் 'ஆயா'வையே என் மனைவி விரும்பினாள் என்பது பொருத்தமற்ற கூற்றாகும். எனவே, இதன் சம்பந்தமாக பகிரங்கமான ஒரு திருத்தம் அவசியம் என்று எனக்குத் தோன்றுகிறது.

நான் 1-4-44-இல் எழுதிய கடிதத்தில் அடங்கியுள்ள மற்ற விஷயங்களையொட்டி திருப்திகரமான பதில் கிடைக்குமென நம்புகிறேன்.

தங்கள்,
மோ. க. காந்தி

## 106

உள்துறை இலாகா,
புது டில்லி,
29- 4- 1944

சர் ரிச்சர்டு டாட்டென்ஹாமிடமிருந்து,
ஸி. எஸ். ஐ., ஸி. ஐ. ஈ., ஐ. ஸி. எஸ்.,
இந்திய அரசாங்கக் காரியதரிசி.

ஐயா,

ஏப்ரல் 1, 2, 13-ஆம் தேதிகளில் நீங்கள் எழுதிய கடிதங்களை இந்திய சர்க்கார் வருத்தத்துடன் வாசித்தார்கள். அவர்களுக்கு எதிராக நீங்கள் கூறியுள்ள புகார்களைப் பாரபட்சமற்றவர்கள்

ஆதரிக்கமாட்டார்கள் என்பதே அவர்களுடைய நம்பிக்கை யாகும். அதே சமயத்தில், உங்களுக்கு நேர்ந்துள்ள துக்க நிலையில் அரசாங்கம் செய்த முயற்சிகளை யெல்லாம் நீங்கள் நியாயமான முறையில் ஒப்புக் கொள்வீர்களென்ன எதிர்பார்ப்பது முடியாத காரியம். தங்களுக்குக் கிடைத்த வேண்டுகோள்களை நிறைவேற்ற அரசாங்கம் நியாயமான அளவுக்கு சாத்தியமானதை யெல்லாம் செய்தது. எனவே, இந்தக் கடிதப் போக்குவரத்தைத் தொடருவதால் யாதொரு பலனும் ஏற்படாது.

உங்களுடைய மிகப்பணிவுள்ள ஊழியன்,
ஆர். டாட்டென்ஹாம்,
இந்திய அரசாங்கக் காரியதரிசி.

# 107

## அரசாங்கத்துக்கு மீராபென் எழுதிய கடிதம்

சிறை முகாம்,
ஆகாகான் மாளிகை, புனா,
கிறிஸ்துமஸ் பண்டிகை—1942

அன்புள்ள லார்டு லின்லித்கோ,

ஆங்கிலேயர்களான பெற்றோர்களுக்கு நான் பிறந்தேன் என்ற முறையில் ஒரு விஷயத்தைக் குறித்து எனக்கு ஆழ்ந்த வேதனை ஏற்பட்டிருக்கிறது. இந்தக் கடிதத்தை நான் தங்களுக்கு எழுதுவதற்கான ஒரே காரணம் அதுதான். அதாவது காந்திஜி யையும் இந்திய தேசீய காங்கிரசையும் பற்றிய பொய்க் கூற்று களையே குறிப்பிடுகிறேன். அக் கூற்றுகள், சில ஆங்கிலப் பத்திரி கைகளில் வெளியாகியிருக்கின்றன என்று தெரிகிறது. ஆனால், உத்தியோக தோரணையில் அவை மறுக்கப்படவில்லை.

இங்கே எனக்குக் கிடைக்கும் பத்திரிகைகளின் எல்லைக்கு உட்பட்டு, பிரிட்டிஷ் பத்திரிகைகளில் காங்கிரசுக்கு விரோத மான பிரசாரம் நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டிருப்பதை நான் கவனித்து வருகிறேன். பல்வேறு பொய்க்கூற்றுகள் பிரசாரம் செய்யப்பட்டு வருகின்றன. அவற்றில் ஒரே ஒரு கூற்றைப் பற்றி மாத்திரம் இந்தக் கடிதத்தில் குறிப்பிட நான் விரும்புகிறேன். அதாவது, காந்திஜியும் காங்கிரசும் ஜப்பானி யரின் ஆதரவாளர்கள் என்பதே அந்தக் கூற்றாகும். நான் பார்த்த வரையில், அத்தகைய பிரசாரத்திற்கு உதாரணங்களாக 'பம்பாய் கிராணிகிள்' 29-11-1942 இதழையும், 'ஹிந்து' 19-12-1942

இதனையும் கூறலாம். அவற்றை நீங்கள் பார்க்கும்படி கோரு கிறேன்.

'பம்பாய் கிரானிகிள் வீக்லி' பத்திரிகையில் கொடுக்கப் பட்டுள்ள மேற்கோள்கள், புகைப்படங்கள் இவற்றுள் 5-8-1942 'லண்டன் டெயிலி ஸ்கெச்' பத்திரிகை முதல் பக்கத்தில் வெளி யான புகைப்படம் ஒன்றும் இருக்கிறது. அதில், 'காந்தியின் இந் தியா-ஜப்பான் சமாதான திட்டம் அம்பலப்படுத்தப்பட்டது' என்ற முழுப் பக்கத் தலைப்பு கொடுக்கப்பட்டுளது. அதே பக்கத்தில் கீழே என்னுடைய புகைப்படமும், 'ஆங்கில மாது காந்தியின் ஜப்பான் சமாதான தூதர்' என்ற தலைப்பும் கொடுக் கப்பட்டிருக்கின்றன. 'பஞ்ச்' பத்திரிகையில் வெளியாகிய கேலிச் சித்திரங்களின் புகைப்படங்களும் அதில் வெளியாகியுள்ளன. அவை வெட்கப்படத்தக்க விதத்தில் மேலும் படுமோசமானவை யாக இருக்கின்றன. 'ஹிந்து'வில், இவற்றைக் குறித்து ஸ்ரீ கே. எம். முன்ஷியின் கண்டனம் வெளியாகியிருக்கிறது. அதிலிருந்து, அவதூறான இந்தப் பிரசாரம், 'லண்டன் டெயிலி ஹெரால்டு' பத்திரிகைக்கும் பரவியிருக்கிறது என்று தெரிகிறது.

இவ்விஷயத்தை இப்போது உங்களுடைய கவனத்திற்கு நான் கொண்டுவருவதன் காரணம் இதுதான். நான் ஒரிஸ்ஸாவில் இருந்தபோது காந்திஜிக்கும் எனக்கும் நடந்த கடிதப் போக்கு வரத்து விவரம் என்னிடம் இருக்கிறது. அலகாபாத்தில் சென்ற ஏப்ரல் மாதம் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் முடிந்த பிறகே, அந்தக் கடிதப் போக்குவரத்து நடந்தது. அந்தக் கடிதப் போக்குவரத்திலிருந்து, காந்திஜி 100 சத விகிதம் ஜப்பா னியரை எதிர்ப்பவர் என்பது சந்தேகத்துக்கு இடமின்றி ருஜு வாகிறது.

அக் கடிதப் போக்குவரத்தின் பிரதிகளை இத்துடன் இணைத்து அனுப்பியிருக்கிறேன். அவற்றில் ஓர் அந்தரங்கமான அறிக்கையும் அடங்கியிருக்கிறது. அப்போது எதிர்பார்க்கப்பட்ட ஜப்பானியப் படையெடுப்பு சம்பந்தமாக நான் சில கேள்விகள் கேட்டு, ஒரிஸ்ஸாவிலிருந்து ஒரு விசேஷ தூதரின்மூலம் காந்தி ஜிக்கு அனுப்பியிருந்தேன். பொதுவாக அங்கே காங்கிரஸ் ஊழி யர்களுக்கு உதவியாக காந்திஜி என்னை அனுப்பியிருந்தார். குறிப்பாக, கிழக்குக் கடற்கரைப் பிரதேசத்தில் எந்தச் சமயத் திலும் ஜப்பானியர் தாக்கலாம் என்று எதிர்பார்க்கப்பட்டதே அதற்குக் காரணமாகும்.

என்னிடம் இருக்கும் அறிக்கை என் கையினால் எழுதப்பட்ட அசலாகும். அதில் தேதி குறிப்பிடப்படவில்லை, கையெழுத்தும் இல்லை. டைப் அடித்த பிரதிகளிலேயே நான் கையெழுத்திட்டு, தேதியையும் குறிப்பிட்டிருக்கிறேன். அது, 31-5-42-இல் காந்திஜி பதில் அனுப்பியதற்கு 3, 4, நாட்களுக்கு முன் இருக்கலாம். அதை காந்திஜி வாயால் கூற, காலஞ்சென்ற ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதினார். திரும்பி வந்த தூதரிடமே காந்திஜி தமது பதில்

கடிதத்தைக் கொடுத்து அனுப்பினர். ஸ்ரீ மகாதேவ தேசாயின் கையெழுத்தில் அந்த அசலும் என்னிடம் இருக்கிறது. இதில் காந்திஜி "பாபு" என்று கையெழுத்துப் போட்டிருக்கிறார். முதல் பாராவில் குறிப்பிடப்பட்டுள்ள பேட்டி, 25-5-42-இல் அப்போது ஒரிஸ்ஸா அரசாங்கத்தின் பிரதம காரியதரிசியாக இருந்த ஸ்ரீ உட்டைக் கண்டு நான் பேசியதேயாகும். அந்தப் பேட்டியின் போது ஸ்ரீ மான்ஸ்பீல்டும் கூட இருந்தார்.

தமது இனத்தைச் சேர்ந்த மக்கள், பிறருக்கு விரோதமாக மேற்கண்ட விதம் அவதூறாகப் பிரசாரம் செய்வதை, அது பொய் என்று ஆட்சேபிக்க முடியாத விதத்தில் ருசு கிடைத்த பிறகும் கூட, கடவுளிடம் பயமுள்ள எந்த அரசாங்கத் தலைவரும் மனச் சாந்தியுடன் தொடர்ந்து அனுமதித்துக் கொண்டிருக்க முடியாது. அதிலும், அத்தகைய பிரசாரத்திற்கு இலக்கானவர்களை, அதற்குப் பதில் அளிக்க முடியாத நிலையில் அவர் வைத்திருக்கிறார். எனவே, இந்தக் கடிதத்தையும் இதனுடன் இணைக்கப் பட்டுள்ள கடிதப் போக்குவரத்தையும் நீங்கள் பிரசுரித்து, இந்த பிரிட்டிஷ் பத்திரிகைகளின் கூற்றுகளை மறுப்பீர்கள் என்றும் நம்புகிறேன்.

மேலும் நான் ஒன்று கூறலாம். காரியக் கமிட்டி அங்கத்தினர்களை நான் நேரில் அறிவேன். இவ் விஷயங்களைப் பற்றி அவர்களுடன் மனம்விட்டு விவாதித்தேன். அவர்களுடைய உணர்ச்சிகள் முற்றிலும் ஜப்பானியருக்கும் பாசிஸ்டு கொள்கை யுடையவர்களுக்கும் விரோதமாகவே இருக்கின்றன என்பதை நான் நம்பிக்கையுடன் கூற முடியும்.

என்னை நம்புங்கள்,

தங்கள் உண்மையுள்ள,
மீராபென்

(மேற்கண்ட கடிதத்துடன் 108, 109 எண்கள் உள்ள கடிதங்கள் இணைக் கப்பட்டிருந்தன.)

# 108

# ஜப்பானியரின் படையெடுப்பு, ஆக்கிரமிப்புப் பிரச்னை

ஒரிஸ்ஸா கடற்கரையைச் சேர்ந்த எங்கேயாவது ஜப்பானியப் படைகள் வந்து இறங்கலாம் என்று நாம் வைத்துக் கொள்வோம். ஒருவேளை அவர்கள் வந்து இறங்கும்போது, வெடிகுண்டு வீச்சோ அல்லது துப்பாக்கிப் பிரயோகமோ இராது. ஏனெனில், அந்தக் கடற்கரைப் பிரதேசத்தில் தற்காப்பு முறைகள் எதுவும்

இராததே அதற்குக் காரணம். கடற்கரையிலிருந்து அவர்கள் சமவெளிப் பிரதேசமான காய்ந்த நெல் வயல்களைக் கடந்து வேகமாக முன்னேறி வருவார்கள். அவர்களின் முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கக் கூடியவை, நதிகளும் கால்வாய்களுமே யாகும். இப்போது அவைகளில் பெரும்பாலும் தண்ணீர் வற்றிப் போயிருக்கும். எனவே, அவற்றை எளிதில் கடந்து வந்துவிடலாம். ஒரிஸ்ஸாவிலுள்ள மலைப் பிரதேசங்களுக்கும் காட்டுப் பிரதேசங்களுக்கும் அவர்கள் வரும்வரையில், நமக்குத் தெரிந்த வரையில், அவர்களை எதிர்த்து நிற்பதற்கான தீவிர முயற்சி எதுவும் இராது. தற்காப்புப் படைகள் இப் பிரதேசங்களிலுள்ள காட்டில் ஒளிந்து கொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது. ஜாம்ஷெட்பூர் சாலையைப் பாதுகாக்க அவர்கள் கடுமையாக முயற்சிக்கலாம். எனினும், அவர்கள் வெற்றி பெறுவதற்கான சந்தர்ப்பங்கள் மிகவும் அற்பமானவையாகவே இருக்கின்றன. எனவே, ஒரிஸ்ஸாவின் வடமேற்குப் பிரதேசத்தில் ஒரு யுத்தத்தை நாம் எதிர்பார்க்கலாம். அதன் பிறகு, ஜப்பானியப் படைகள் பீகாருக்குள் பிரவேசிக்கும். அப்போது ஜப்பானியர் தேசம் முழுவதும் பரந்தமுறையில் வந்திருக்கமாட்டார்கள். முன்னேறிவரும் படைகளுக்கும் கடலுக்கும் இடையில் சாதனங்களின் போக்குவரத்து இடையூறு இராமலிருப்பதற்காக, அவர்கள் தங்கள் முழு கவனத்தையும் செலுத்துவர்கள். அதற்கு முன்பே அந்த இடத்திலிருந்து பிரிட்டிஷ் நிர்வாகம் மறைந்துவிடும்.

மேலே குறிப்பிட்டுள்ள சம்பவங்கள் நேர்ந்தால், நாம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்வது என்பதே நம் முன்பு உள்ள பிரச்னையாகும்.

ஜப்பானியப் படைகள் வயல்களையும் கிராமங்களையும் தாண்டி அதிக வேகமாக முன்னேறிவருவார்கள். இந்திய மக்களின் விரோதியாக அவர்கள் வரமாட்டார்கள். பிரிட்டிஷ், அமெரிக்கர்களை விரட்டி அவர்களுடைய யுத்த முயற்சியை அழிப்பவர்களாகவே வருவார்கள். மக்களின் உணர்ச்சிகளோவெனில், திட்டவட்டமாக உருப்பெறவில்லை. அவர்களுடைய பலமான உணர்ச்சி பிரிட்டிஷாரிடத்தில் பயமும், அவநம்பிக்கையுமே ஆகும். இவை நாளுக்கு நாள் அதிகமாகிவருகின்றன. பிரிட்டிஷ் சம்பந்தமில்லாத எதையும் மக்கள் வரவேற்கத் தயாராக இருக்கிறார்கள். இங்கே வேடிக்கையான ஓர் உதாரணம் கூறுகிறேன். சில இடங்களிலுள்ள கிராமவாசிகள் இவ்விதம் கூறுகிறார்கள்: "மிகுந்த சத்தத்தைக் கொடுக்கும் விமானங்கள்தான் பிரிட்டிஷாருடையவை. ஆனால், சத்தமற்ற மௌனமான விமானங்களும் இருக்கின்றன. அவைதான் மகாத்மாவின் விமானங்கள் ஆகும்!"

கள்ளம் கபடமற்ற இந்த ஜனங்கள் கற்றுக் கொள்ளக் கூடியது, நடு நிலைமை ஒன்றுதான் என நான் நினைக்கிறேன். உண்மையில், அந்த நிலை ஒன்றுதான் சரி என்று அவர்களுக்கு மனச் சமாதானம் ஏற்படும்படி நாம் செய்ய முடியும். அந்த மக்களின் விதி விட்ட வழி விடட்டும் என்று பிரிட்டிஷார் போய்

விடுகிறார்கள். வெடிகுண்டு வீச்சு போன்ற கொடுமைகளுக்கு இலக்காகாமல் இருப்பதற்கான தற்காப்பு முறைகளைக்கூட அவர்கள் மக்களுக்குப் போதிப்பதில்லை. யுத்தம் வருவதற்கு முன்பே அவர்களைக் கொன்றுவிடக் கூடிய விதத்தில் பிரிட்டிஷார் உத்தரவு பிறப்பிக்கிறார்கள். இந்நிலையில், வெறுக்கத்தக்க இந்த ஆட்சியை விரட்டிவரும் ஜப்பானியர்களை மக்கள் உற்சாகத்துடன் தடுப்பதற்கு எவ்விதம் தயாராக இருக்க முடியும்? "நாங்கள் உங்களை எதிர்த்துப் போராடுவதற்காக வரவில்லை" என்றும் ஜப்பானியர் கூறிவருகிறார்கள். ஆனால், நடுநிலைமையை மேற்கொள்ள கிராமவாசிகள் தயாராக இருப்பதை நான் நேரில் பார்த்திருக்கிறேன். அதாவது மக்கள் தங்களுடைய வயல்களை கடந்து செல்லும் ஜப்பானியர்களை எதிர்க்காமல் விட்டுவிடுவார்கள்; ஜப்பானியர்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளாமலிருக்க சாத்தியமான வரையில் முயற்சிப்பார்கள். மக்கள் தங்களுடைய உணவுப் பொருட்களையும், பணத்தையும் மறைத்து வைப்பார்கள்; ஜப்பானியருக்கு எவ்விதத்திலும் ஊழியம் செய்ய மறுத்துவிடுவார்கள். சில இடங்களில் அத்தகைய எதிர்ப்பு ஏற்படும்படி செய்வது கூடக் கடினமாகும். ஏனெனில், பிரிட்டிஷார்மீது மக்களுக்குள்ள வெறுப்பு அவ்வளவு அதிகமாக இருப்பதால், பிரிட்டிஷாருக்கு விரோதமாக உள்ள யாரையும் அவர்கள் தங்குதடையின்றி வரவேற்பார்கள். சராசரி மக்கள் ஜப்பானியர்களை எவ்வளவுதூரம் எதிர்த்து நிற்பார்கள் என்பதை நாம் தெரிந்துகொண்டு, நமது நிலையை திட்டவட்டமாக நிர்ணயித்துக் கொள்ளவேண்டும். கடுமையான எதிர்ப்பு விரைவில் தகர்ந்து விடலாம். எனவே, நூறு சதவிகித எதிர்ப்பு இராவிட்டாலும், உறுதியான, நீண்டகால எதிர்ப்பு முறையைக் கைக் கொள்வது அதிகமான பலனை அளிக்கக்கூடியதாக இருக்கும்.

சராசரி மக்களிடமிருந்து நாம் கீழ்க்கண்ட நிலையை எதிர்பார்க்கலாம்.

1. எந்த நிலத்தையும், வீடுகளையும், ஜங்கம சொத்துக்களையும் ஜப்பானியர்கள் தங்கள் தேவைக்கு எடுத்துக் கொள்வதை உறுதியாகவும், பெரும்பாலும் சாத்துவிகமாகவும் எதிர்க்க வேண்டும்.

2. ஜப்பானியரின் நிர்ப்பந்தத்திற்கு உட்பட்டு அவர்களுக்கு யாதொரு ஊழியமும் செய்யக் கூடாது.

3. ஜப்பானியரின் கீழ் நிர்வாக சம்பந்தமான எத்தகைய வேலையும் செய்யக்கூடாது.

(நகரத்திலுள்ள சில ரகத்தினர், சர்க்கார் சமயசஞ்சீவிகள், வெளிநாடுகளிலிருந்து கொண்டுவரப்பட்ட இந்தியர்கள் ஆகியோரை மேற்கண்ட கட்டுப்பாட்டுக்கு இணங்கும்படி செய்ய முடியாமலிருக்கலாம்.)

4. ஜப்பானியர்களிடமிருந்து எதுவும் விலைக்கு வாங்கக் கூடாது.

5. அவர்களுடைய கரன்ஸி நோட்டுகளை மறுத்துவிட வேண்டும். அவர்கள் தங்களுடைய ஆட்சி அதிகாரத்தை ஸ்தாபிக்க முயற்சிப்பதற்கும் இடம் கொடுக்கக் கூடாது.

(போதிய தொண்டர்களும், போதிய நேரமும் இராததால் அந்த முறைகளையெல்லாம் அமலுக்குக் கொண்டுவருவது கடின மாயினும், அந்தப் பிரவாகத்தைத் தடுக்க நாம் பெருமுயற்சி செய்ய வேண்டும்.)

இதன் சம்பந்தமாக எழும் சில கஷ்டங்களையும், கேள்வி களையும் இப்போது கவனிக்கலாம்:

1. தொழிலாளர்களுக்கும், உணவுக்கும், மற்ற சாதனங் களுக்கும் ஜப்பானியர் பிரிட்டிஷ் கரன்ஸி நோட்டுகளையே கொடுக்க முற்படலாம். அப்போது நல்ல விலைக்கு சாதனங்களை விற்கவும், நல்ல சம்பளத்திற்கு தொழிலாளர்கள் வேலை செய்யவும் மறுத்துவிட வேண்டுமா? பல மாதங்கள் வரையில் தொடர்ந்து அவ்விதம் தடுப்பது கடினமாக இருக்கலாம். சாத னங்களை வாங்கவும், சம்பளத்திற்கு வேலை செய்யவும் மக்கள் மறுத்துவரும் வரையில், மக்களை ஜப்பானியர் சுரண்டுவார்கள் என்ற அபாயத்திற்கு இடமிராது.

2. பிரிட்டிஷார் தகர்த்துவிட்டுச் செல்லும் பாலங்கள், கால் வாய்கள் முதலியவற்றை மீண்டும் நிர்மாணிக்கும் விஷயமாக என்ன செய்ய வேண்டும்? அவையெல்லாம் நமக்குத் தேவை யாக இருக்கும். தகர்ந்த பாலங்களை மீண்டும் நிர்மாணிப்பதா யின், ஜப்பானியருடன் தோளோடு தோள் நின்று வேலை செய்ய வேண்டும். அவ்விதம் செய்யலாமா? அல்லது பாலங்களை நிர்மாணிக்க ஜப்பானியர் வந்ததும், நாம் ஒதுங்கிச் சென்றுவிட வேண்டுமா?

3. சிங்கப்பூரிலும் பர்மாவிலும் கைதுசெய்யப்பட்ட இந்திய சிப்பாய்கள், படையெடுத்துவரும் ஜப்பானியப் படைகளுடன் வந்து இறங்குவார்களாயின், அவர்களிடம் நாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? ஜப்பானியரிடமிருந்து நாம் ஒதுங்கி இருப்பதுபோல் அவர்களிடமிருந்தும் ஒதுங்கி நிற்க வேண்டுமா? நமது நிலையை ஆதரிக்கும்படி அவர்களுடைய மனத்தை மாற்று வதற்கு முயற்சி செய்யவேண்டாமா?

4. ஜப்பானியர் வருவதைக் கண்டு பிரிட்டிஷ் ஆட்சி யாளர்கள் வெளியேறிய பின், கரன்ஸி சம்பந்தமாக நாம் என்ன செய்வது?

5. யுத்தம் நடந்து ஜப்பானியப் படைகள் முன்னேறிய பின், போர்க்களத்தில் மாண்டவர்களும் காயமடைந்தவர்களும்

சிதறிக் கிடப்பார்கள். எனவே, மாண்டவர்களை எரிப்பதிலும், புதைப்பதிலும், காயமடைந்தவர்களைத் தூக்கிச்சென்று சிகிச்சை செய்வதிலும் நாம் சிறிதும் தயக்கமின்றி ஜப்பானியருடன் சேர்ந்து வேலை செய்ய வேண்டும் என்று நான் நினைக்கிறேன். சிறிது காயமடைந்த தங்கள் சிப்பாய்களை ஜப்பானியர் எடுத்துச் சென்று சிகிச்சை செய்வார்கள்; சிறிது காயமடைந்த தங்கள் பகைவர்களைக் கைது செய்வார்கள். ஆனால் மற்றவர்களை அவர்கள் போர்க்களத்திலேயே விட்டுவிட்டுச் சென்றுவிடுவார்கள். எனவே, அத்தகையோரைக் கவனித்து ஆவன செய்ய வேண்டியது நமது புனிதமான கடமையாகும். அதற்காக இப்போது முதற்கொண்டே நாங்கள், இங்குள்ள டாக்டர்களின் மேற்பார்வையில் தொண்டர்களுக்குப் பயிற்சியளிக்கத் திட்டமிட்டு வருகிறோம். உள்நாட்டுக் கலவரங்கள், கொள்ளை நோய்கள் முதலியவற்றைச் சமாளிக்க அவர்களுடைய சேவையை நாம் உபயோகப்படுத்திக் கொள்ள முடியும்.

6. போர்க்களத்தில் மாண்டவர்களையும் காயமடைந்தவர்களையும் தவிர, ஓரளவு துப்பாக்கிகள், கைத்துப்பாக்கிகள் முதலிய மற்றும் பல சிறிய ஆயுத வகைகள் சிதறிக் கிடக்கலாம். அவற்றை ஜப்பானியர் எடுத்துக் கொண்டு செல்லாமல் விட்டிருக்கலாம். அவற்றையெல்லாம் சேகரித்துக் கொண்டுவருவதில் நாம் அக்கறை எடுத்துக்கொள்ளாவிடில், அவை கொள்ளைக்காரர்கள், திருடர்கள் முதலிய மற்றுமுள்ள துஷ்டர்களிடம் சிக்கிவிடும். போர்க்களத்தில் கொள்ளையிட அவர்கள் கழுகுகளைப் போல் வந்துவிடுவார்கள். இந்தியாவைப் போன்ற நிராயுதபாணிகள் அடங்கிய ஒரு நாட்டில், அத்தகைய நிலைமை மிகுந்த சங்கடத்தை உண்டாக்கிவிடும். அத்தகைய ஆயுதங்களை நாம் சேகரித்தால், அவற்றை நாம் என்ன செய்யவேண்டும்? அவற்றை எடுத்துச் சென்று வெகு தூரத்தில் சமுத்திரத்தில் போட்டுவிட வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது? இவ் விஷயமாக உங்களுடைய ஆலோசனையைத் தயவு செய்து சொல்லுங்கள்.

(மேற்கண்ட கடிதம் ஸ்ரீமதி மீராபாய் காந்திஜிக்கு எழுதியதாகும்.)

## 109

சேவா கிராமம்,
மத்திய மாகாணம்.
31-5-1942

சி. மீரா (மீராவுக்கு கடவுள் அருள் புரிவாராக),

எல்லா விவரங்களும் அடங்கிய உங்களுடைய மிகத் தெளிவான கடிதம் கிடைத்தது. பேட்டியைப் பற்றிய அறிக்கை சிறிதும் குற்றம் குறையற்றதாக இருக்கிறது. உங்களுடைய

பதில்கள் நேரடியானவை, சந்தேகத்துக்கு இடமில்லாதவை, துணிச்சலானவை. அதில் நான் எதுவும் குறை கூறுவதற்கில்லை. 'நீங்கள் இப்போது செய்வது போல் செய்து வாருங்கள்' என்று மாத்திரமே நான் கூற முடியும். சரியான சமயத்தில் சரியான இடத்திற்கு நீங்கள் சென்றிருக்கிறீர்கள் என்பதை நான் தெளிவாகக் காண்கிறேன். உங்களுடைய கேள்விகள் சிறந்தவையாகவும் சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமானவையாகவும் இருக்கின்றன. எனவே, நேரடியாக அவற்றிற்கு வருவதைத் தவிர வேறு எதுவும் செய்யத் தேவையில்லை.

**கேள்வி :** *1.* மக்களிடம், அவர்கள் என்ன செய்யவேண்டும் என்பதை நாம் கூறவேண்டும் என்று நான் நினைக்கிறேன். அவர்கள் தங்களுடைய திறமைக்கிணங்க நடந்துகொள்வார்கள். அவர்களுடைய திறமையைக் குறித்து நாம் ஒரு முடிவுசெய்து, அதற்கிணங்க அவர்களுக்கு நாம் கட்டளைகள் விடுப்போமாயின், அவை தயக்கத்துடனும் கௌரவத்திற்குக் கேடு விளைவிப்பனவாகவுமே இருக்கும். எனவே ஒருபோதும் நாம் அவ்விதம் செய்யக் கூடாது. ஆகையால், இதை அடிப்படையாகக் கொண்டே எனது போதனைகளை நீங்கள் வாசிக்க வேண்டும். ஜப்பானியப் படைகளுடன் முற்றிலும் ஒத்துழையாமையைக் கைக்கொள்ளுவதே நமது கொள்கை என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அவர்களுக்கு நாம் எவ்விதத்திலும் உதவி செய்யக் கூடாது. அவர்களிடமிருந்து நாம் எவ்வித லாபமும் அடையக் கூடாது. ஆகையால், அவர்களுக்கு நாம் எதையும் விற்கக் கூடாது. மக்கள் ஜப்பானியப் படைகளை எதிர்த்து நிற்க முடியாவிடில், அந்நிலையில் ஆயுதந் தாங்கிய சிப்பாய்களைப் போல் அவர்கள் நடந்துகொள்ள வேண்டும். அதாவது பின்வாங்கிவிட வேண்டும். அவர்கள் அவ்விதம் செய்தால், ஜப்பானியர்களுடன் எத்தகைய தொடர்பும் வைத்துக்கொள்ள வேண்டிய பிரச்னை எழாது. மரணத்தை வரவேற்று ஜப்பானியரை எதிர்த்து நிற்கும் தைரியம் மக்களுக்கு இராவிடில், அவர்கள் ஆக்கிரமித்துக் கொண்ட பகுதியிலிருந்து வெளியேறுவதற்கான தைரியமும் திறமையும் இல்லாவிடில், அவர்களுடைய கட்டளைகளுக்கு உட்பட்டு தங்களால் என்ன செய்ய முடியுமோ அதை மக்கள் செய்யலாம். அவர்கள் ஒன்று மாத்திரம் ஒருபோதும் செய்யக் கூடாது; அதாவது ஜப்பானியரிடம் விருப்பத்துடன் பணிந்துவிடக் கூடாது. அவ்விதம் பணிவது, கோழைத்தனமான செயலாகும், சுதந்திரத்தை விரும்பும் மக்கள் செய்யத் தகுதியற்ற காரியமாகும். அவர்கள் ஒரு தீயிலிருந்து தப்பி, இன்னும் அதிக பயங்கரமான மற்றொரு தீயில் விழுந்துவிடக் கூடாது. அவர்களுடைய நிலை எப்போதும் ஜப்பானியர்களை எதிர்ப்பதாகவே இருக்க வேண்டும். எனவே, பிரிட்டிஷ் கரன்ஸி நோட்டுகளையோ அல்லது ஜப்பானிய நாணயங்-

களையோ அங்கீகரிப்பதென்ற கேள்வியே எழுவதற்கில்லை. ஜப்பானியர்களின் கையிலிருந்து அவர்கள் எதையும் தொடக்கூடாது. நம்முடைய சொந்த மக்களுடன் நாம் பண்ட மாற்று முறையை மேற்கொள்ள வேண்டும் அல்லது அவர்களிடமுள்ள பிரிட்டிஷ் கரன்ஸியை உபயோகப் படுத்திக் கொள்ள வேண்டும். பின்னர் பிரிட்டிஷ் அரசாங் கத்தின் ஸ்தானத்தில் ஏற்படும் தேசீய அரசாங்கம், அதன் சக்திக்கு இணங்க மக்களிடமிருந்து எல்லா கரன்ஸிகளையும் எடுத்துக்கொள்ளும்.

கே: 2. பாலங்களை நிர்மாணிப்பதன் சம்பந்தமான கேள் விக்குப் பதிலும் மேற்கண்ட பதிலில் அடங்கியிருக்கிறது. இவ்விஷயத்திலும் ஒத்துழைப்பதென்ற பேச்சிற்கே இட மில்லை.

கே: 3. ஜப்பானியர்களுடன் வந்த இந்திய சிப்பாய்கள் நமது மக்களுடன் தொடர்பு கொள்ளுவார்களாயின், அவர்களுக்கு நம்மிடம் நல்லெண்ணம் இருக்குமாயின், நாம் அவர்களுடன் நட்பு உறவுகொண்டு நம் நாட்டு மக்களுடன் சேர்ந்து கொள் ளும்படி அவர்களை நாம் அழைக்க வேண்டும். அந்நியர் ஆதிக்கத்திலிருந்து தேசத்தை விடுதலை செய்ய வேண்டும் என்ற உறுதிமொழி கூறி அவர்கள் கொண்டுவரப் பட்டிருக் கலாம். ஆனல் அந்நியர் ஆதிக்கம் எதுவும் இங்கே இராது. அந்த சிப்பாய்கள் மக்களுடன் நட்புக்கொண்டு, ஒரு வேளை பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஸ்தானத்தில் அமைக்கப்படும் தேசீய அரசாங்கத்திற்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்றே எதிர்பார்க்கப்படுவார்கள். எல்லாவற்றையும் இந்தி யர்களின் கையில் ஒப்புவித்துவிட்டு பிரிட்டிஷார் ஒழுங்கான முறையில் வெளியேறினல், எல்லாம் அற்புதமாக நடை பெறும். அப்போது ஜப்பானியர்கூட இந்தியாவில் தங்களை ஸ்தாபித்துக்கொள்வதோ அல்லது இந்தியாவில் எந்த இடத் திலும் அமைதியாக இருப்பதோ கஷ்டமாகிவிடும். ஏனெனில், தங்களை விரோதிகளாகக் கருதி மௌனமாக எதிர்க்கும் மக்களைச் சமாளிக்கும்படியான நிலை ஜப்பானியர் களுக்கு ஏற்பட்டுவிடும். அப்போது என்ன நேரும் என்று கூறுவதே கடினமாகும். இந்தியாவில் ஜப்பானே அல்லது பிரிட்டனே எந்த வல்லரசு ஆதிக்கம் செலுத்தினலும், மக்கள் எதிர்க்கும் சக்தியை அபிவிருத்தி செய்து கொள் வதற்குப் பயிற்சி அளிக்கப்பட்டால் அதுவே போதுமானது.

கே: 4. இந்தக் கேள்விக்குப் பதிலும் மேலே அடங்கியிருக் கிறது.

கே: 5. அத்தகைய சந்தர்ப்பம் ஏற்படாது. ஒருவேளை ஏற்ப டுமாயின், ஜப்பானியருடன் மக்கள் ஒத்துழைப்பதை அனு மதிக்கலாம்; அவ்விதம் ஒத்துழைப்பது அவசியமாகக்கூட இருக்கும்.

கே: 6. போர்க்களத்தில் சிதறிக் கிடக்கும் ஆயுத வகைகள் சம்பந்தமாக நீங்கள் அளித்துள்ள பதில் முற்றிலும் நியாயமாகும். அவ்விஷயமாக நீங்கள் கூறியுள்ள யோசனையையே பின்பற்றலாம். எனினும் சாத்தியமாயின், கண்ணியம் வாய்ந்த நபர்கள் அந்த ஆயுதங்களைக் கண்டெடுத்து, அவற்றை ஒரு பத்திரமான இடத்தில் சேகரித்து வைக்கலாம். அதைச் சேகரித்து வைப்பதோ, விஷமிகளின் கைக்குக் கிடைத்துவிடாமல் அவற்றைப் பத்திரமான ஓர் இடத்தில் வைப்பதோ சாத்தியமில்லையாயின், உங்களுடைய திட்டமே சிறந்ததாகும்.

அன்புடன்,
பாபு

## 110

*சிறைமுகாம்,*
*26—2—1944*

*இந்திய அரசாங்கக் காரியதரிசி,*
*புது டில்லி.*

*ஐயா,*

ஸ்ரீமதி சரோஜினி தேவிக்குத் தடை விதித்ததன் சம்பந்தமாக எழுந்த விவாதத்தின் போது இந்தியா சட்ட சபையில் உள் துறை மந்திரி செய்த பிரசங்கத்தை நான் வாசித்தேன். அவர் தமது பிரசங்கத்தில் பல விஷயங்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். ஸ்ரீமதி மீரா பாய்க்கும் எனக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தைப் பற்றியும், அதை வெளியிட அரசாங்கம் மறுத்துவிட்டதையும் உள்துறை மந்திரி குறிப்பிட்டிருக்கிறார். அந்தப் பிரசங்கத்தின் முக்கியமான பகுதி இதுதான் :

"ஸ்ரீமதி ஸ்லேடு ஸ்ரீ காந்திக்கு எழுதிய கடிதத்தையும், அதற்கு ஸ்ரீ காந்தி எழுதிய பதிலையும் பற்றி ஸ்ரீமதி சரோஜினி தேவி குறிப்பிட்ட விஷயம் இந்த விவாதத்தின்போது எழுந்தது. அந்தக் கடிதத்தை ஏன் பிரசுரிக்கவில்லை என்று என்னைக் கேட்டிருக்கிறார்கள். காங்கிரஸ் தலைவர்கள் சிறைப்படுவதற்கு வெகு காலத்திற்கு முன்பே அக்கடிதம் எழுதப்பட்டு, அதற்கு ஸ்ரீ காந்தி பதிலும் அளித்தார். அந்தக் கடிதத்தை பகிரங்கப்படுத்தவேண்டுமென ஸ்ரீ காந்தி விரும்பியிருந்தால், யாதொரு தடையுமின்றி அவரே அதைப் பிரசுரித்திருக்கலாம். அது அவருக்கு அனுப்பப்பட்ட ஓர் அந்தரங்கக் கடிதமாகும். அத்தகைய ஒரு கடிதத்தை அரசாங்கம் ஏன் பகிரங்கப்படுத்த வேண்டும் என்பது எனக்குத் தெரியவில்லை. அதை பகிரங்கப்படுத்தியிருந்தால், அதனால் காங்கிரசுக்கு எவ்வித நன்மையும் ஏற்பட்டிராது.

"காங்கிரஸ் ஜப்பானியர்களுக்கு ஆதரவாக இல்லை என்பதைக் காட்டவே ஸ்ரீமதி நாயுடு விரும்பினர் என்று கூறப்படுகிறது. காங்கிரஸ், ஜப்பானியர்களுக்கு ஆதரவாக இருந்து வருகிறது என்று இங்கேயோ அல்லது பிரிட்டனிலோ அரசாங்கம் ஒருபோதும் குற்றம் சாட்டியதில்லை. 'காங்கிரஸ் பொறுப்பு' என்ற துண்டுப் பிரசுரத்தில் காணப்படும் அதைப்பற்றிய குறிப்பு, பண்டித ஜவாஹர்லால் நேரு கூறியதிலிருந்து கொடுக்கப்பட்ட மேற்கோளேயாகும். அந்த மேற்கோளை விவரமாக எடுத்துக் கூற எனக்கு நேரமில்லை. 'காங்கிரஸ் பொறுப்பு' என்ற துண்டுப் பிரசுரத்திலிருந்து கனம் அங்கத்தினர்கள் அதை எளிதில் பார்த்துக் கொள்ளலாம்."

மேற்கண்ட செய்தி சரியென்றே வைத்துக் கொண்டாலும், அது வாசிப்பதற்கு விசித்திரமாகவே இருக்கிறது.

முதலாவதாக, ஸ்ரீமதி மீராபாய்க்கும் எனக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தை நான் வெளியிடவில்லை. அதற்குக் காரணம் என்னவெனில், காங்கிரசும் நானும் ஜப்பானியரை ஆதரிப்பவர்கள் என்ற குற்றச்சாட்டு வெளிநாடுகளில் பரவும் வரையில் அதை வெளியிட வேண்டிய அவசியமே ஏற்படவில்லை.

இரண்டாவதாக, கடிதமும் பதிலும் எழுதிய இருவரும் அதை வெளியிட வேண்டும் என்று கூறும் போது, அதை வெளியிடுவதற்கு அரசாங்கம் ஏன் தயங்கவும் தவிக்கவும் வேண்டும்?

மூன்றுவதாக, அக் கடிதப் போக்குவரத்தை வெளியிடுவதால் காங்கிரசுக்கு எவ்வித நன்மையும் ஏற்படாது என்று உள்துறை மந்திரியே கூறும்போது, அதை வெளியிட அரசாங்கம் விரும்பாதது ஏன் என்பதை என்னுல் அறிந்து கொள்ள முடியவில்லை.

நான்காவதாக, நான் ஜப்பானியர்களுக்கு ஆதரவாக இருப்பதாக லண்டன் பத்திரிகைகளில் அப்போது அவதூறுன பிரசாரம் நடந்து கொண்டிருந்தது. அவ்விஷயமாக லார்டு லின்லித்கோவின் கவனத்தை ஈர்த்து ஸ்ரீமதி மீராபாய் அவருக்குக் கடிதம் எழுதியிருந்தார். அந்தக் குற்றச் சாட்டுகளை மறுக்கும்படியும் அவர் வைஸ்ராயைக் கேட்டிருந்தார். மிகவும் முக்கியமான இந்த உண்மையை சர்க்கார் வேண்டுமென்றே அல்லது அறியாமலோ மறைத்துவிட்டார்கள் என்று தோன்றுகிறது. லார்டு லின்லித்கோவுக்கு அவர் எழுதிய கடிதத்துடன், அவர் எனக்கு எழுதிய கடிதத்தையும் அதற்கு நான் அளித்த பதிலையும் இணைத்திருந்தார். அவற்றைப் பிரசுரிக்க வேண்டுமென்றும் அவர் கேட்டிருந்தார். அக் கடிதம் 1942 டிசம்பர் 2-ஆம் தேதி எழுதப்பட்டது. அதாவது 'காங்கிரஸ் பொறுப்பு' என்று அரசாங்கப் பிரசுரம் வெளியாவதற்குப் பல நாட்களுக்கு முன் எழுதப்பட்டது. அந்தப் பிரசுரத்தில் 13-2-1943 என்று தேதி போடப்பட்டிருக்கிறது.

ஐந்தாவதாக, காரியக்கமிட்டியில் பண்டித ஜவாஹர்லால் நேரு கூறியதாகக் குறிப்பிடப்பட்டிருப்பது முற்றிலும் தவறு என்பதை, அரசாங்கத்தின் துண்டுப் பிரசுரத்திற்கு அனுப்பிய பதிலில் நான் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறேன். அலகா

பாத்தில் நடந்த காரியக் கமிட்டிக் கூட்டத்தின் விவாதங்கள் அடங்கிய ஆதாரமற்ற குறிப்புகளைக் கொண்டே பண்டித நேரு அவ்விதம் கூறியதாக துண்டுப் பிரசுரத்தில் குறிப்பிடப்பட்டிருக் கிறது. பத்திரிகைகளில் வெளியான அவ்விவரங்களைப் பண்டித நேரு ஆணித்தரமாக மறுத்த பின்னரும், அரசாங்கத் துண்டுப் பிரசுரத்தில் அவ்விதமே குறிப்பிட்டிருப்பது முற்றிலும் தவருகும்.

காங்கிரஸ்காரர்களை சர்க்கார் சிறையில் அடைத்து, குற்றச் சாட்டுகளுக்குப் பதில் அளிக்க முடியாதவாறு தடுத்திருக்கிருர் கள். இங்கிலேயில் அவர்களுக்கு விரோதமாக குற்றச்சாட்டுகளை யும், மறைமுகமான கண்டனங்களையும் அடுக்குவதில் அரசாங்கம் காட்டும் பிடிவாதத்தையும், உள்துறை மந்திரியின் பேச்சையும் அறிந்து கொள்வது எனக்கு கடினமாக இருக்கிறது. எனவே, டிசம்பர் 24-ஆம் தேதி ஸ்ரீமதி மீராபாய் லார்டு லின்லித்கோவுக்கு எழுதிய கடிதத்தையும், அத்துடன் இணைக்கப்பட்டிருந்த கடிதங் களையுமாவது அரசாங்கம் இப்போது பிரசுரிக்குமென நம்பு கிறேன்.

தங்கள்,
மோ. க. காந்தி.

## 111

இந்திய அரசாங்க உள்துறை இலாகா,
புது டில்லி,
11-3-1944

இந்திய அரசாங்கக் காரியதரிசியிடமிருந்து,

ஐயா,

உங்களுடைய பிப்ரவரி 26-ஆம் தேதி கடிதத்திற்குப் பின் வருமாறு பதில் எழுதும்படி எனக்கு உத்தரவிடப்பட்டிருக் கிறது:

நீங்கள் குறிப்பிட்டுள்ள கடிதப் போக்குவரத்தைப் பிரசுரிப் பதால் எத்தகைய பலனும் ஏற்படுமென அரசாங்கம் நினைக்க வில்லை. அரசாங்கத்தைப் பொறுத்தமட்டில், உள்துறை மந்திரி பின்வருமாறு கூறியுள்ளார்: ''காங்கிரஸ் ஜப்பானியர்களை ஆதரிப் பதாக அரசாங்கம் இங்கேயோ அல்லது பிரிட்டனிலோ எந்தச் சமயத்திலும் கூறியதேயில்லை.'' பண்டித ஜவாஹர்லால் நேரு சம்பந்தப்பட்டவரையில் 14-10-1943-இல் நான் எழுதிய கடிதத் தைப் பார்க்கும்படி மீண்டும் உங்களுக்குக் கூறுகிறேன். 'காங் கிரஸ் பொறுப்பு' என்ற துண்டுப் பிரசுரத்தில் பண்டித நேரு கூறியதாகக் குறிப்பிடப்பட்டுள்ள வார்த்தைகளையே நீங்கள் ஆட்

சேபித்திருக்கிறீர்கள். ஆனால் அவர் விடுத்துள்ள அறிக்கையில், துண்டுப் பிரசுரத்தில் உள்ள வார்த்தைகளை அவர் மறுக்கவில்லை. இதை நான் மேலே குறிப்பிட்டுள்ள எனது கடிதத்தில் தெளிவாகக் கூறியிருக்கிறேன். எனவே, 'அவர் மறுத்த பிறகும் அந்த வார்த்தைகளை அரசாங்கம் உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறது' என்ற பேச்சிற்கே இடமிருக்க முடியாது.

உங்கள் பணிவுள்ள ஊழியன்,
ஆர். டாட்டென்ஹாம்
இந்திய அரசாங்கக் காரியதரிசி.

# 112

## வைஸ்ராய் வேவலுக்குக் கடிதம்

*சிறை முகாம்,*
*17-2-1944*

*அன்புள்ள நண்பருக்கு,*

உங்களைச் சந்திக்கும் மகிழ்ச்சி எனக்கு ஏற்படவில்லை என்றாலும், நான் வேண்டுமென்றே 'அன்புள்ள நண்பர்' என அழைத்து உங்களுக்குக் கடிதம் எழுதுகிறேன். பிரிட்டிஷ் அரசாங்கப் பிரதிநிதிகள் என்னை, பிரிட்டிஷாரின் மிகப் பெரிய விரோதியாகக் கருதாவிடினும், ஒரு பெரிய விரோதியாகவே கருதுகிறார்கள். ஆனால் நான் என்னை, பிரிட்டிஷாரின் ஒரு நண்பனாகவும், பிரிட்டிஷார் உள்பட மானிட வர்க்கத்தின் ஊழியனாகவுமே கருதுகிறேன். என்னுடைய நல்ல எண்ணத்திற்கு அறிகுறியாகவே, இந்தியாவில் பிரிட்டிஷாரின் முதன்மையான பிரதிநிதியாக விளங்கும் உங்களை என்னுடைய 'நண்பர்' என்று கூறுகிறேன்.

மற்றும் சிலரைப் போலவே எனக்கும் அரசாங்கத்தினிடமிருந்து ஒரு 'நோட்டீஸ்' வந்தது. நான் ஏன் சிறைபட்டிருக்கிறேன் என்பதை அதில் முதன் முதலாக எனக்கு அறிவித்திருக்கிறார்கள். சிறைபட்டிருப்பதை எதிர்த்து விண்ணப்பம் செய்து கொள்ளும் உரிமையையும் அதன்மூலம் எனக்கு அளித்திருக்கிறார்கள். அதற்கு நான் எனது பதிலை அனுப்பியிருக்கிறேன். ஆனால், அரசாங்கத்தினிடமிருந்து எனக்கு இன்னும் யாதொரு தகவலும் கிடைக்கவில்லை. பதின்மூன்று நாட்கள் காத்திருந்த பிறகு, அந்தப் பதிலை நினைவூட்டி மீண்டும் ஒரு கடிதம் எழுதியிருக்கிறேன்.

ஒரு சிலருக்கு மாத்திரமே அத்தகைய 'நோட்டீஸ்'கள் கிடைத்தன என்று நான் கூறினேன் அல்லவா? ஏனென்றால்,

இந்த முகாமில் உள்ள ஆறு பேரில் மூவருக்கு மாத்திரமே அந்த 'நோட்டீஸ்'கள் கிடைத்தன. நாளடைவில் எல்லோருக்குமே அவ்விதம் 'நோட்டீஸ்'கள் வருமென எண்ணுகிறேன். எனினும், சம்பிரதாயத்திற்காக மாத்திரமே அவற்றை அனுப்பியிருக்கிறார்களேயன்றி, நீதி வழங்கவேண்டும் என்ற உத்தேசத்துடன் அல்ல என்ற ஆழ்ந்த சந்தேகம் என் மனத்தில் ஏற்பட்டிருக்கிறது. இந்தக் கடிதத்தை வாதத்தினால் நிரப்ப நான் விரும்பவில்லை. காங்கிரஸ்மீதும் என்மீதும் கொண்டு வரப்பட்ட குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரமில்லை என்றும், நாங்கள் முற்றிலும் நிரபராதிகள் என்றும் உங்களுக்குமுன் வைஸ்ராய் பதவியில் இருந்தவருக்கு நான் எழுதிய கடிதத்தில் கூறினேன். அதையே தான் திரும்பவும் நான் உங்களுக்கும் கூறுகிறேன். அரசாங்கம் கொண்டுவந்த குற்றச்சாட்டுகளையும், அரசாங்கத்திற்கு எதிராக காங்கிரசின் குற்றச்சாட்டுகளையும் பாரபட்சமற்ற ஒரு நீதிச் சபை விசாரித்தால் மாத்திரமே உண்மை வெளியாக முடியும். காங்கிரஸ்காரர்களை விடுதலை செய்யவேண்டும் என்ற தீர்மானத்தைப் பற்றியும், ஸ்ரீமதி சரோஜினி தேவிக்குப் பிறப்பித்த வாய்ப்பூட்டு உத்தரவைப்பற்றியும் இந்தியா சட்டசபையில் அரசாங்கத்தின் சார்பில் சமீபத்தில் நிகழ்த்தப்பட்ட பிரசங்கங்கள், தீயுடன் விளையாடுவதாக இருக்கின்றன என்பதே எனது கருத்தாகும். ஜப்பானியரின் தோல்விக்கும் நேச தேசங்களின் வெற்றிக்கும் இடையேயுள்ள வேற்றுமையை நான் காண்கிறேன். வெற்றி பெறும் நேச தேசங்கள், அந்நியரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்ற இந்தியாவையும் தங்களுடன் சேர்த்துக் கொண்டு செல்ல வேண்டும். எல்லாவிதமான அந்நியர் ஆதிக்கத்திலிருந்தும் பூரண விடுதலையையே இந்தியா கோருகிறது. எனவே, ஜப்பானியரின் ஆதிக்கத்தையோ, பிரிட்டிஷ் ஆதிக்கத்தையோ அல்லது மற்றெந்த அந்நிய நாட்டின் ஆதிக்கத்தையோ இந்தியா எதிர்க்கும். அந்நியர் ஆதிக்கத்திலிருந்து பூரண விடுதலையைக் கோரும் இந்தியாவுக்கே காங்கிரஸ் பிரதிநிதி ஸ்தாபனமாக விளங்குகிறது. அது ஒரு மகத்தான ஸ்தாபனமாக வளர்ந்திருக்கிறது. அதன் வேர்கள் இந்திய பூமிக்குள் வெகு தூரம் ஆழ்ந்து சென்றுள்ளன. எனவே தற்போது நிகழ்ந்து வரும் காரியங்கள் அரசாங்கத்துக்குத் திருப்தியைக் கொடுத்திருக்கின்றன என்பதை நான் வாசித்தபோது, என் தலை சுற்றியது. இந்திய மக்களிடமிருந்து அவர்கள் விரும்பும் பணமும், ஆட்களும் கிடைக்கின்றன அல்லவா? அரசாங்க யந்திரம் சுகமாக இயங்கி வருகிறது அல்லவா? அரசாங்கத்துக்கு ஏற்பட்டுள்ள இந்த சுய திருப்தி, பிரிட்டனுக்கும், இந்தியாவுக்கும் உலகத்திற்கும் ஏற்படப்போகும் பொல்லாத காலத்திற்கு ஒரு முன்னறிவிப்பாக அமைந்திருக்கிறது. பிரிட்டிஷ் மேலிடத்தார் விரைவில் தங்களுடைய உள்ளங்களைத் துருவிப்பார்த்துக் கொள்ள முற்படவில்லையாயின், அத்தகைய விபரீதம் ஏற்பட்டே தீரும்.

உலகப் போர் ஏற்பட்டுள்ள இச்சமயத்தில், எதிர்காலத்தைப்பற்றிய உறுதிமொழிகள் கவைக்கு உதவாதவை. எல்லா

தேசங்களின் அதிர்ஷ்டமும், எனவே மானிட வர்க்கத்தின் எதிர் காலமும் இந்தப் போரில் சம்பந்தப்பட்டிருக்கின்றன. இந்த யுத்தமானது உலக அமைதியில் வந்து முடியவேண்டுமாயின், இன்னும் அதிக ரத்தப் பிரவாகம் ஓடும் ஒரு யுத்தம் இருக்க முடியுமெனில், அத்தகைய யுத்தத்திற்கு இது ஒரு பூர்வாங்க ஏற்பாடாக இராமலிருக்க வேண்டுமாயின், இந்தியாவின் விடுதலே உடனடியாக செயலில் காட்டப்பட வேண்டியது அத்தியாவசியமாகும். ஆகையால், உண்மையான யுத்த முயற்சி என்பதற்கு, இந்தியாவின் கோரிக்கையை நிச்சயமாக நிறை வேற்றுவது என்பதே பொருளாகும். "இந்தியாவை விட்டு வெளி யேறுக" என்ற தீர்மானம், அந்தக் கோரிக்கையை ஐயம் திரிபுக்கு இடமின்றி விளக்குவதாக இருக்கிறது. அதற்கு, அரசாங்கம் ஆதாரமின்றிக் கூறும் கொடிய, விஷத் தன்மை வாய்ந்த அர்த்தம் எதுவும் கூறுவதற்கில்லே. மானிட வர்க்கம் முழுவதையுமே அடிப்படையாகக் கொண்டு பிரிட்டனிடம் மிகுந்த நட்பு உணர்ச்சியைக் காட்டுவதே அந்தக் கொள்கையின் தத்துவமாகும்.

நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். நான் பிரிட்டிஷாரின் நண்பன் என்று கூறிக் கொள்வதால், என் னுடைய உள்ளத்திலுள்ள ஆழ்ந்த எண்ணங்களே உங்களுடன் பகிர்ந்து கொள்வதிலிருந்து என்னே எதுவும் தடுக்க முடியாது என்று நினேத்தேன். இந்த முகாமில் இருப்பது எனக்கு மகிழ்ச்சியை அளிக்கும் ஒரு விஷயமல்ல. இங்கு, என்னுடைய முயற்சி எதுவுமின்றி எனக்குத் தேவையான ஸ்தூல வசதிகள் யாவும் அளிக்கப்படுகின்றன. ஆனல் அதே சமயத்தில், வெளியி லுள்ள கோடிக்கணக்கான மக்கள் உணவின்றி பட்டினி கிடந்து வருகிறூர்கள் என்பதை நான் அறிவேன். எனினும் நான் வெளியில் சென்ருல், எனக்குத் தேவையான உணவு, அதாவது என்னே வாழத் தகுதியுள்ளவனுகச் செய்யும் உணவு எனக்குக் கிடைக்கவில்லேயெனில், என்னே நான் முற்றிலும் திக்கற்றவ னுகவே கருதுவேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி.

## 113

வைஸ்ராய் முகாம்,
இந்தியா (நாகபுரி),
*25-2-1944*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

பிப்ரவரி 17-ஆம் தேதி நீங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி.

நீங்கள் காவலில் வைக்கப்பட்டிருப்பதைக் குறித்து நீங்கள் அனுப்பிய விண்ணப்பத்திற்கு இதற்குள் பதில் கிடைத்திருக்கும்.

ஆகாகான் மாளிகையில் உள்ள உங்களில் மூவருக்கு 'நோட் டீஸ்'கள் கிடைக்கவில்லை என்பதைக் கேட்க நான் வருந்து கிறேன். இவ்விஷயம் உடனே கவனிக்கப்படும்.

நீங்கள் அந்தக் கடிதத்தை எழுதிய அதே தினத்தில் நான் சட்ட சபையில் செய்த பிரசங்கத்தை பத்திரிகைகளில் நீங்கள் பார்த்திருப்பீர்கள் என்று எதிர்பார்க்கிறேன். அதில் எனது கருத்தைக் குறிப்பிட்டிருக்கிறேன். அங்கே கூறியதை இக்கடி தத்தில் நான் திரும்பவும் கூற வேண்டிய அவசியமில்லை. அதை நீங்கள் வாசிக்க விரும்புவீர்களாயின், உங்களுடைய வசதிக்காக நான் இத்துடன் அப்பிரசங்கத்தின் பிரதியொன்றை அனுப்பி யிருக்கிறேன்.

ஸ்ரீமதி காந்தியின் மரணத்தைக் குறித்து உங்களுக்கு எனது மனைவியும் நானும் இச்சந்தர்ப்பத்தில் எங்களுடைய ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். பல ஆண்டு களாக உங்களுக்குத் துணைவியாக இருந்த ஒருவரை நீங்கள் இழந்தது எவ்வளவு துக்ககரமானது என்பதை நாங்கள் அறிகிறோம்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

# 114

# காந்திஜியின் விளக்கம்

சிறைமுகாம்,
9-3-1944

அன்புள்ள நண்பருக்கு,

நான் பிப்ரவரி 17உ எழுதிய கடிதத்திற்கு நீங்கள் உடனே பதில் அளித்ததற்காக நான் உங்களுக்கு நன்றியுள்ளவனாக இருக் கிறேன். எனது மனைவியின் மரணத்தைக் குறித்து நீங்கள் அன்புடன் அனுதாபம் தெரிவித்திருப்பதற்காக லேடி வேவலுக்கும் தங்களுக்கும் முதலில் நன்றி செலுத்துகிறேன். அவளுக்காகவே அவளுடைய மரணத்தை நான் வரவேற்றேன். ஏனெனில், அது நிரந்தரமான வேதனையிலிருந்து அவளுக்கு விடுதலை அளித்தது அல்லவா? எனினும், அந்த நஷ்டத்தைக் குறித்து நான் எவ் வளவு வருந்த வேண்டுமோ அதைக் காட்டிலும் அதிகமாகவே வருந்துகிறேன். நாங்கள் சாதாரணமான உலகில் இருப்பதற்குப் புறம்பான ஒரு தம்பதிகள். பரஸ்பர சம்மதத்தின் மீதும், எங்களை யறியாமல் ஏற்பட்ட சோதனைகளுக்குப் பிறகும், 1906ஆம் ஆண் டில் நாங்கள் இச்சையடக்கத்தை வாழ்க்கையின் விதியாக உறுதி யுடன் மேற்கொண்டோம். இந்த விதி, அதற்கு முன் ஒருபோதும் இராதவாறு எங்களிடையே அதிக நெருங்கிய உறவை ஏற்படுத் தியது, எனக்குப் பேரானந்தத்தைக் கொடுத்தது. நாங்கள்

வெவ்வேறான இரண்டு நபர்கள் என்பதே மறைந்துவிட்டது. நான் விரும்பாமலேயே அவள் என்னிடம் ஐக்கியமாகி விட்டாள். இதன் பலன் என்னவெனில், அவள் உண்மையாகவே என்னுடைய சிறந்த மறுபாதியாக விளங்கினாள். அவள் எப்போதும் உறுதியான மனம் படைத்தவள். எங்களுடைய ஆரம்ப நாட்களில் நான் அந்த மன உறுதியை, பிடிவாதம் என்று தவறாக எண்ணிவந்தேன். ஆனால் அந்த மன உறுதி காரணமாக, அவள் தன்னையறியாமலேயே சாத்துவிக ஒத்துழையாமைக் கலையிலும், அதைப் பயிற்சி செய்வதிலும் எனது குருவாக இருப்பது சாத்தியமாயிற்று. அந்தப் பயிற்சி என் குடும்பத்திலிருந்து ஆரம்பமாயிற்று. அதை நான் 1906–இல் அரசியல் துறையில் அமலுக்குக் கொண்டுவந்த போது, புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட சத்தியாக்கிரகம் என்ற பெயருடன் அது பகிரங்கமாயிற்று. தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களின் சிறைபுகு படலம் ஆரம்பமானபோது, ஸ்ரீ கஸ்தூரிபாய் சட்ட மறுப்பாளரிடையே ஒருவராக இருந்தாள். உடலுக்குத் துன்பத்தைக் கொடுக்கும் அதிக சோதனைகளை என்னைக் காட்டிலும் அதிகமாக அவள் அனுபவித்திருக்கிறாள். அவள் பல தடவை சிறைபட்டிருந்தாலும், தற்போதைய சிறைவாசத்தை அவள் விரும்பவில்லை. இந்த சிறைவாசத்தின் போது ஸ்தூலமான எல்லா வசதிகளும் அவளுக்கு அளிக்கப்பட்டன. இந்தத் தடவை என்னையும் மற்றும் பலரையும் ஏக காலத்தில் கைது செய்தனர். எங்களைத் தொடர்ந்து உடனே அவளையும் கைது செய்தனர். அது அவளுக்கு பெரும் அதிர்ச்சியைக் கொடுத்ததுடன், அவளது மனத்தில் வெறுப்பையும் உண்டாக்கியது. என்னைக் கைது செய்வார்களென அவள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. என்னுடைய அகிம்சைக் கொள்கையை அரசாங்கம் நம்புகிறது என்றும், கைதியாவதை நானாக வரவேற்றாலன்றி அவர்கள் என்னைக் கைது செய்யமாட்டார்கள் என்றும் அவளுக்கு நான் உறுதியாகக் கூறியிருந்தேன். என்னை அரசாங்கம் கைது செய்தது அவளுக்குப் பெரும் அதிர்ச்சியைக் கொடுத்ததால், அவள் கைதியான உடனேயே அவளுக்குக் கடுமையான வயிற்றுப் போக்கு ஏற்பட்டது. அவளுடன் கைது செய்யப்பட்ட டாக்டர் சுசீலா நய்யார் இவளைக் கவனித்திராவிடில், என் மனைவி இந்தச் சிறை முகாமிற்கு வந்து சேருவதற்கு முன்பே இறந்திருப்பாள். இங்கே நான் இருந்தது, அவளுக்கு ஆறுதலை அளித்தது. எனவே, மேற்கொண்டு சிகிச்சை தேவையின்றியே வயிற்றுப் போக்கு நின்றது. எனினும் அவரது மனக் கசப்பு மாத்திரம் தீரவில்லை. அது அவளது உடலை வருத்திச் சிறிது சிறிதாகக் கரைத்துவிட்டது.

2. மேலே நான் கூறியிருப்பதிலிருந்து, அவ்விஷயமாக அரசாங்கத்தின் சார்பில் விடுக்கப்பட்ட அறிக்கையை பத்திரிகைகளில் வாசித்தபோது நான் அடைந்த மன வேதனையை நீங்கள் ஒருவேளை உணர்ந்து கொள்ளலாம். எனக்கு விலை மதிக்க முடியாத பொக்கிஷமாக இருந்த

அவளைப் பற்றி உண்மைக்கு மாறான விஷயங்களை அரசாங்கம் கூற முற்பட்டது துரதிர்ஷ்டமாகும். அதன் சம்பந்தமாக நான் அனுப்பிய புகாரைத் தாங்கள் தயவு செய்து தருவித்து வாசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதை நான் இந்திய அரசாங்க உள்துறைக் காரியதரிசிக்கு அனுப்பியிருக்கிறேன். யுத்தத்தில் உண்மையைத்தான் படுமோசமான முதல் பலியாகக் கொடுத்துவிடுகிறார்கள் என்று கூறப்படுகிறது. இந்த யுத்தத்தில் நேச தேசங்கள் அதற்கு மாறாக நடந்துகொள்ளக் கூடாதா என்றே நான் விரும்புகிறேன்.

3. நீங்கள் சட்ட சபையில் செய்த பிரசங்கத்திற்கு இப்போது நான் வருகிறேன். அந்தப் பிரசங்கத்தின் பிரதியொன்றையும் நீங்கள் எனக்கு அன்புடன் அனுப்பியிருக்கிறீர்கள். உங்களுடைய பிரசங்கம் அடங்கிய பத்திரிகைகள் எனக்குக் கிடைத்தபோது, காலஞ்சென்ற என் மனைவியின் படுக்கைக்குப் பக்கத்தில் நான் இருந்தேன். 'அசோசியேடெட் பிரஸ்' செய்தியை ஸ்ரீமதி மீராபாய் எனக்கு வாசித்துக் காட்டினாள். ஆனால் என் மனம் வேறு எங்கேயோ இருந்தது. எனவே, கைக்கு அடக்கமான முறையில் உங்களுடைய பிரசங்கம் அடங்கிய பிரதியொன்று கிடைத்தது மிகவும் வரவேற்கத் தக்கதே. அதற்குரிய முழு கவனத்துடன் இப்போது அதை நான் வாசித்துள்ளேன். அதை வாசித்ததன் பலனாக, சில கருத்துகளைக் கூற வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. தவிர, நீங்கள் கூறியுள்ள கருத்துகளை, இறுதியானவை என்று கருத வேண்டிய அவசியமில்லை என்றும் நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். இந்தக் கடிதத்தின் பலனாக, அந்தக் கருத்துகளில் சிலவற்றிற்குப் புதிய உருவம் கொடுக்கும்படியான நிலைமை ஏற்படுமாக.

4. இரண்டாம் பக்கத்தின் நடுவில் "இந்தியாவிலுள்ள பல்வேறு ஜனங்களின்" நலனைப் பற்றி நீங்கள் பிரஸ்தாபித்திருக்கிறீர்கள். இதற்கு முன் வைஸ்ராய் விடுத்த சில பிரகடனங்களில் இந்திய மக்கள் என்றே குறிப்பிட்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன். மேற்கண்ட இரண்டுவிதமான சொற்களும் ஒரே அர்த்தத்தைக் குறிப்பவைதானா?

5. 13-ஆவது பக்கத்தில் இந்தியா சுயாட்சி பெறுவதன் சம்பந்தமாக நீங்கள் பின்வருமாறு கூறியிருக்கிறீர்கள்: "மேற்கண்ட கொள்கை (இந்தியாவின் சுயாட்சி) பிரிட்டிஷ் மக்களின் உண்மையான ஆர்வம் மாத்திரமல்ல, அந்தக் கொள்கை விரைவில் அமலுக்கு வருவதைப் பார்க்க வேண்டும் என்பதும் அவர்களுடைய விருப்பமாகும். எனினும், அதற்குப் பூர்வாங்கமாக சில விஷயங்கள் நிறைவேற வேண்டும். அதாவது எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு விரைவில் ஜெர்மனியும் ஜப்பானும் தோல்வியடைவதற்கு இடையூறாக எதுவும் குறுக்கிடக்கூடாது என்பதில் பிரிட்டிஷ் மக்கள் தீவிர உறுதி கொண்டிருக்கிறார்கள். இந்தியாவின் அரசியல் பிரச்னை தீரும்போது, இந்த யுத்தத்திலும்

மற்ற எல்லா சந்தர்ப்பங்களிலும் விசுவாசத்துடன் எங்களை (பிரிட்டிஷாரை) ஆதரித்து வந்தவர்களின் நலன்களுக்குச் சிறிதும் தீங்கு ஏற்படாமல் பார்த்துக்கொள்ளவும் பிரிட்டிஷார் உறுதி கொண்டிருக்கிறார்கள். பொதுவான லட்சியத்திற்குத் தொண்டு புரிந்த சிப்பாய்கள், எங்களுடன் வேலை செய்த மக்கள், நாங்கள் உறுதிமொழி கொடுத்திருக்கும் சமஸ்தானங்கள், சமஸ்தான மன்னர்கள், தங்களுக்கு நீதி கிடைக்குமென்ற எண்ணத்துடன் எங்களிடம் நம்பிக்கை வைத்த சிறுபான்மையோர் ஆகியோரையே குறிப்பிடுகிறேன். எனினும், இந்தியாவிலுள்ள இரண்டு முக்கிய கட்சிகளாவது தங்களுக்குள் ஒரு சமரசத்திற்கு வந்தாலொழிய, முன்னேற்றம் ஏற்படுமென்ற உடனடியான நம்பிக்கைக்கு இடமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை."

மேலே நீங்கள் கூறியிருப்பதைக் குறித்து நான் வாதிக்க முற்படவில்லை. ஆனால் மேற்கண்ட உங்களுடைய பிரகடனத்திற்கு எனது விளக்கத்தை மாத்திரம் நான் கூறத் துணிகிறேன்: "இந்திய சிப்பாய்களைச் சிருஷ்டித்தவர்கள் நாங்கள்தான். இந்தியாவில் எங்களுடைய ஆட்சியையும் நிலைமையையும் பலப்படுத்துவதற்காகவே அவர்களுக்கு நாங்கள் ராணுவப் பயிற்சி அளித்தோம். மற்ற தேசங்களுக்கு எதிராக நாங்கள் தொடுக்கும் போர்களில் அவர்கள் (இந்திய சிப்பாய்கள்) பலன்தரத்தக்க விதத்தில் எங்களுக்கு உதவியாக இருப்பதை நாங்கள் அனுபவபூர்வமாகக் கண்டுள்ளோம். எனவே அவர்களுக்குப் பக்கபலமாக நாங்கள் இருப்போம். இந்திய சமஸ்தான மன்னர்களுக்குப் பக்கபலமாகவும் நாங்கள் இருந்துவருவோம். அவர்களில் பலரும் எங்களுடைய சிருஷ்டிகளேயாவர். அவர்கள் யாவரும் எங்களுடைய தயவினாலேயே இன்று மன்னர் பதவிகளில் இருக்கிறார்கள். அந்த மன்னர்கள் தங்கள் ஆட்சிக்கு உட்பட்ட மக்களின் சுதந்திர உணர்ச்சியைத் தடுக்கும்போதும், அல்லது நசுக்கும் போதும் கூட நாங்கள் அந்த மன்னர்களுக்குப் பக்கபலமாகவே இருப்போம். அது போலவே, நாங்கள் சிறுபான்மையோரையும் கைவிட்டுவிடமாட்டோம். ஏனெனில் எங்களுடைய ஆட்சியை எதிர்க்க முற்பட்ட மிகப் பெரும்பாலானவர்களை எதிர்க்க நாங்கள் சிறுபான்மையோரையே உபயோகித்து அவர்களுக்கு உற்சாகம் அளித்து வந்துள்ளோம். பிரிட்டிஷ் ஆட்சியின் ஸ்தானத்தில், இந்திய மக்களின் விருப்பத்திற்கு இணங்க ஓர் ஆட்சி முறையை ஸ்தாபிக்கவே பெரும்பான்மையோர் முயற்சித்தனர் என்பதைப் பற்றி எங்களுக்குக் கவலையில்லை. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் தங்களுக்குள் சமரசம் செய்துகொண்டு எங்களிடம் வந்தாலன்றி நாங்கள் ஒரு காலத்திலும் ஆட்சி அதிகாரத்தைப் பெரும்பான்மையோரிடம் ஒப்புவிக்கமாட்டோம்."

பிரிட்டிஷார் மேற்கொள்ளும் இந்த நிலைமை புதிதல்ல. ஆனால் அது சிறிதும் நம்பிக்கையை அளிப்பதாக இல்லை என்பதே எனது கருத்தாகும். இவ்விஷயத்தில் நான், தெருவில் செல்லும்

சாதாரண ஒரு மனிதரின் எண்ணத்தையே குறிப்பிடுகிறேன். நம்பிக்கையற்ற இந்த நிலைமையைப் பற்றிய சிந்தனையிலிருந்தே 'இந்தியாவிலிருந்து வெளியேறு' என்ற வேதனைக் குரல் பிறந்தது. தீர்க்காலோசனையுடன் நான் எழுதியவற்றில் விவரிக்கப்பட்டுள்ள 'இந்தியாவிலிருந்து வெளியேறு' என்ற திட்டம், முற்றிலும் நியாய மானது என்பதை இந்த நாட்டில் நாள்தோறும் நான் பார்த்து வரும் சம்பவங்கள் ருசுப்பிக்கின்றன.

6. 'இந்தியாவைவிட்டு வெளியேறு' என்ற திட்டத்தைக் கொண்டு வந்தவர்கள், சமூகத்திலிருந்து பிரஷ்டம் செய்யப்பட வேண்டியவர்கள் என்று நீங்கள் கருதவில்லை என்பதை உங்க ளுடைய பிரசங்கத்திலிருந்து நான் அறிகிறேன். அவர்கள் உயர்ந்த மனம் படைத்தவர்கள் என்றே நீங்கள் நம்புகிறீர்கள். பின்னர் அவ்விதமே நீங்கள் அவர்களை நடத்தி, அவர்களுடைய சொந்த திட்டத்தையொட்டி அவர்கள் கூறும் விளக்கத்தில் நம்பிக்கை வைப்பீர்களாயின், நீங்கள் தவறு செய்ய முடியாது.

7. கிரிப்ஸ் திட்டத்தை விவரித்தபின், 16-ஆவது பக்கத்தில் நீங்கள் பின்வருமாறு கூறியிருக்கிறீர்கள்: "ஒத்துழைப்பதில் தலை வர்களுக்கு விருப்பம் இருக்கிறது என்பதற்கான அறிகுறி ஏதா வது தென்படும் வரையில், காவலில் உள்ள இந்தத் தலைவர்களை விடுதலை செய்ய வேண்டும் என்ற கோரிக்கை முற்றிலும் அர்த்த மற்றதாகும். 'இந்தியாவிலிருந்து வெளியேறு' என்ற தீர்மானத் தின் விளைவாக கோரமான சம்பவங்கள் நிகழ்ந்துவிட்டன. எனவே அந்தத் தீர்மானத்திலிருந்தும், அக் கொள்கையிலிருந் தும் பின்வாங்குவதா, எதிர்காலத்தில் செய்யவேண்டிய மகத் தான கடமைகளில் ஒத்துழைப்பதா என்பதைத் தீர்மானிக்கும் விஷயமாக, காவலில் இருக்கும் தலைவர்கள் தங்கள் மனச்சாட் சியைத் தவிர வேறு யாருடனும், எதனுடனும் கலந்து ஆலோ சிக்க வேண்டிய அவசியம் இல்லை."

பிறகு அதே விஷயமாக 19, 20-ஆவது பக்கங்களில் நீங்கள் கீழ்வருமாறு கூறியிருக்கிறீர்கள்:

"ஒரு முக்கிய பிரிவினர் தனித்து நிற்கிறார்கள். அந்தப் பிரிவி னரில் மிகுந்த திறமையும் உயர்ந்த உள்ளமும் படைத்தவர்கள் இருக்கிறார்கள் என்பதை நான் உணருகிறேன். எனினும் அவர் களுடைய தற்போதைய கொள்கையையும் முறைகளையும் குறித்து நான் வருந்துகிறேன். அவை யாதொரு பலனுமற்றவை, நடை முறையில் கொண்டு வர முடியாதவை. இந்தியாவின் இன்றைய பிரச்னைகளையும், எதிர்காலப் பிரச்னைகளையும் தீர்ப்பதில் மேற் கண்ட பிரிவினரின் ஒத்துழைப்பை நான் விரும்புகிறேன். தற் போதைய இந்திய அரசாங்கத்தில் பங்கு எடுத்துக்கொள்ள தாங் கள் இணங்க முடியாது என்று அந்தத் தலைவர்கள் கருதுவார் களாயின், எதிர்காலப் பிரச்னைகளைப் பற்றி ஆலோசிக்கவாவது அவர்கள் உதவி புரியலாம். எனினும் 1942 ஆகஸ்டு 8 ஆம் தேதி பிரகடனத்திற்குப் பொறுப்பானவர்களை விடுதலை செய்வதற்

கான காரணம் எதுவும் எனக்குத் தென்படவில்லை. ஒத்துழை யாமைக் கொள்கையையும் முட்டுக்கட்டைக் கொள்கையையும் கூட அவர்கள் வாபஸ் செய்து கொண்டார்கள் என்ற திருப்தி எனக்கு ஏற்பட்டாலன்றி, அவர்களை விடுதலை செய்வதற்குக் காரணமில்லை. அக் கொள்கைகளை அவர்கள் வாபஸ் செய்து கொண்டு, யாருக்கும் உதவியற்ற துறவு கோலம் பூண்டுவிடக் கூடாது; தங்களுடைய கொள்கை தவறானது, எவ்வித லாபமு மற்றது என்பதை உணர்ந்து அதைக் கைவிட வேண்டும்."

8. பிரபல வீரசிப்பாயும் அனுபவம் வாய்ந்தவருமான தாங் கள் அத்தகைய அபிப்பிராயம் கொண்டிருப்பதைக் குறித்து நான் ஆச்சரியமடைகிறேன். நூற்றுக்கணக்கான ஆடவர்களும் பெண் களும் சேர்ந்து விவாதித்தும், தீர ஆலோசித்தும் செய்த ஒரு தீர் மானத்தை வாபஸ் செய்து கொள்வது, எப்படி தனி நபரின் மனச்சாட்சியைப் பொறுத்த விஷயமாக இருக்க முடியும்? எல் லோரும் சேர்ந்து ஆலோசித்து விவாதித்தபின் வாபஸ் செய்து கொள்வதுதான் கௌரவமானதாகவும், மனச்சாட்சிக்கு உடன் பாடானதாகவும், ஒழுங்கானதாகவும் இருக்க முடியும். இந்த அவசியமான முறையை மேற்கொண்ட பிறகுதான்,—அதற்கு முன்பு அல்ல,-தனி நபரின் மனச்சாட்சி செயல் புரிவதற்கு இடம் உண்டு. தன் மனச்சாட்சியின்படி நடக்க ஒரு கைதிக்கு எப்போ தாவது சுதந்திரம் உண்டா? அவர் அவ்விதம் நடந்துகொள்ள வேண்டும் என்று எதிர்பார்ப்பது நியாயமும் ஒழுங்கும் ஆகுமா?

9. காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பிரதிநிதிகள் மிகத் திறமை யும், உயர்ந்த உள்ளமும் படைத்தவர்கள் என்பதை நீங்கள் உணர்ந்திருக்கிறீர்கள். ஆனால், அவர்களுடைய கொள்கையும் முறைகளும் பலனற்றவை, நடை முறைக்கு ஒவ்வாதவை என்று வருந்துகிறீர்கள். இரண்டாவதாக நீங்கள் கூறியிருப்பது, முதலில் கூறியதை ரத்து செய்துவிடுவதாக இல்லையா? திறமையும் உயர்ந்த உள்ளமும் படைத்தவர்கள், தவறான தீர்மானங்களைச் செய்யும்படி நேரலாம். ஆனால் அத்த கையோரின் கொள்கையும் முறைகளும் "பலனற்றவை என்றும், நடைமுறைக்கு ஒவ்வாதவை" என்றும் வர்ணிக்கப்படுவதை இதற்கு முன் நான் கேள்விப்பட்டதேயில்லை. குறிப்பாக, தலைவர் கள் கோடிக்கணக்கான இந்திய மக்களின் பிரதிநிதிகளாக இருக் கிறார்கள் என்பது ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. அவர்களைப் பற்றி நீங்கள் தீர்ப்புக் கூறுமுன், அவர்களுடைய கொள்கையின் சாதக பாதகங்களைப் பற்றி அவர்களுடன் விவாதிக்க வேண்டி யது உங்கள் கடமை அல்லவா? நிராயுதபாணிகளான அவர் களுக்கு, அவர்களைப் போலவே நிராயுதபாணிகளான, அகிம்சைப் பிரதிக்ஞை செய்துகொண்டவர்களான மக்களின் ஆதரவைத் தவிர வேறு எதுவுமில்லை. அப்படிப் பட்டவர்களை விடுதலை செய் வதால் ஏற்படக்கூடிய விளைவுகளைப்பற்றி எல்லாம் வல்ல அர சாங்கம் பீதியடைவது கௌரவமாகுமா? தவிர, காரியக்கமிட்டி அங்கத்தினர்களின் மனத்தையும் கருத்துகளையும் நான் அறிந்து

கொள்வதற்கு வசதியாக அவர்களுடன் எனக்குத் தொடர்பு ஏற் படும்படி செய்ய நீங்கள் ஏன் தயங்கவேண்டும்?

*10.* பிறகு, 'இந்தியாவிலிருந்து வெளியேறு' என்ற தீர்மா னத்தின் "கோரமான விளைவுகளைப்" பற்றி நீங்கள் பேசியிருக் கிறீர்கள். "காங்கிரஸின் பொறுப்பு" என்ற அரசாங்கத் துண்டுப் பிரசுரத்துக்கு நான் பதில் அளித்தபோது அதன் சம்பந்தமாகப் போதிய அளவு கூறியிருக்கிறேன்; அந்த விளைவுகளுக்கு காங் கிரஸ் பொறுப்பு என்ற குற்றச்சாட்டை மறுத்திருக்கிறேன். அந்தத் துண்டுப் பிரசுரத்தையும், அதற்கு எனது பதிலையும் தாங்கள் ஏற்கனவே பார்த்திராவிடில், அவற்றைப் பார்க்கும்படி உங்களை நான் கேட்டுக்கொள்கிறேன். நான் ஏற்கனவே குறிப் பிட்டிருப்பதையே இங்கே வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். என்னுடைய பிரசங்கங்களையும், காரியக் கமிட்டி அங்கத்தினர் களின் பிரசங்கங்களையும் ஆராய்ச்சி செய்யும் வரையில் அரசாங்கம் நடவடிக்கை எதுவும் எடுத்துக்கொள்ளாமல் இருந் திருந்தால், சரித்திரம் வேறுவிதமாக எழுதப்பட்டிருக்கும்.

*11.* உங்களுடைய நிர்வாக சபையில் பலரும் இந்தியர்க ளாக இருப்பதைக் குறித்து நீங்கள் பிரமாதப்படுத்தியிருக் கிறீர்கள். நிச்சயமாக, அவர்கள் இந்தியர்களாக இருப்பது, அவர்களை இந்தியரல்லாதாரைக் காட்டிலும் இந்தியாவின் சிறந்த பிரதிநிதிகளாகச் செய்துவிடுவதற்கில்லை. அதற்கு மாறாக, ஓர் இந்தியரல்லாதார் இந்தியர்களின் உண்மையான பிரதிநிதியாக இருக்கலாம். ஆனால் அவர் இந்திய மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவராக இருக்க வேண்டும். இந்திய அரசாங்கத்தின் தலைவர் பதவிக்கு வரும் இந்தியப் பிரமுகர்கூட மக்கள் சுதந்திரமாக அளிக்கும் வோட்டினால் தேர்ந்தெடுக்கப்பட்டவராக இருந்தா லன்றி, அது திருப்தியை அளிக்காது.

*12.* இந்திய சிப்பாய்களை, தாங்களாக வலுவில் வந்து ராணுவத்தில் சேர்ந்தவர்கள் என்று வர்ணிக்கும் பொதுவான தவறை நீங்கள்கூடச் செய்திருப்பதைக் குறித்து நான் வருந்து கிறேன். ஒரு தொழில் என்ற முறையில் ராணுவத்தில் சேரும் ஒரு நபர், தாம் கோரும் சம்பளம் எங்கே கிடைப்பதாக இருந் தாலும், அங்கே சேர்ந்து கொள்வார். தானாக வலுவில் ராணு வத்தில் சேருவதற்கு, இந்திய சிப்பாய் ராணுவத்தில் சேருவதைக் காட்டிலும் மிகவும் உயர்ந்த அர்த்தம் உண்டு. ஜாலியன்வாலா பாக் படுகொலையின் போது தங்களுடைய எஜமானர்களின் உத்தரவுகளை நிறைவேற்றியவர்கள் ராணுவத்தில் மனப்பூர்வ மாகச் சேர்ந்த தொண்டர்களா? இந்தியாவிலிருந்து வெளி நாடு களுக்குச் சென்று ஈடு இணையற்ற பராக்கிரமத்தைக் காட்டி வரும் இந்திய சிப்பாய்கள், தங்களுடைய எஜமானர்களான பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கட்டளைகளுக்கு இணங்க, தங்கள் சொந்த தேச மக்கள்மீது குறி தவறாமல் துப்பாக்கியைத் திருப்பத் தயாராக இருப்பார்கள். மனப்பூர்வமாக ராணுவத்தில்

சேர்ந்த தொண்டர்கள் என்ற கௌரவமான பெயருக்கு அவர்கள் தகுதிவாய்ந்தவர்களா?

13. நீங்கள் இந்தியா முழுவதும் விமானத்தில் பறந்து கொண்டிருக்கிறீர்கள். வங்காளத்தில் எலும்புக் கூடுகளாக இருக்கும் மனிதர்களிடையே செல்லவும் நீங்கள் தயங்கவில்லை. நிர்ணயிக்கப்பட்டுள்ள உங்களுடைய பறக்கும் யாத்திரைகளில் நான் குறுக்கிட்டு ஒரு யோசனை கூறலாமா? அதாவது உங்களுடைய கைதிகளின் உள்ளங்களை ஊடுருவிப் பார்ப்பதற்காக நீங்கள் அகமத்நகருக்கும், ஆகாகான் மாளிகைக்கும் வந்து இறங்க வேண்டும் என்பதே அந்த யோசனையாகும். பிரிட்டிஷ் அரசாங்கத்தையும், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி முறையையும் நாங்கள் எவ்வளவு தூரம் குறை கூறினாலும், நாங்கள் எல்லோரும் பிரிட்டிஷாரின் நண்பர்களே. நீங்கள் மாத்திரம் எங்களை நம்பினால், நாஜிஸம், பாசிஸம், ஜப்பானிஸம் போன்றவைகளை எதிர்த்துப் போரிடுவதில் நாங்கள் மிகச் சிறந்த உதவியாளர்களாக இருப்போம் என்பதை நீங்கள் காண்பீர்கள்.

14. இப்போது நான் உங்களுடைய பிப்ரவரி 25வ கடிதத்திற்கு வருகிறேன். ஸ்ரீமதி மீராபாய்க்கும் எனக்கும் எங்களுடைய விண்ணப்பங்களுக்குப் பதில்கள் கிடைத்துள்ளன. இங்கே கைதிகளாக இருக்கும் மற்றவர்களுக்கும் நோட்டீஸ்கள் கிடைத்திருக்கின்றன. எனக்கு வந்துள்ள பதிலை ஒரு கேலிக் கூத்தாகவே நான் கருதுகிறேன். ஸ்ரீமதி மீராபாய்க்குக் கிடைத்துள்ள பதிலோவெனில், ஓர் அவமதிப்பாகும். இந்திய சட்ட சபையில் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு உள்துறை மந்திரி அளித்துள்ள பதிலிலிருந்து, எங்களுக்கு அரசாங்கத்தினிடமிருந்து வந்த பதில்கள், பதில்கள் அல்ல என்றே தோன்றுகிறது. "வழக்குகளைப் புனராலோசனை செய்யும் கட்டம் இன்னும் வரவில்லை. தற்போது அரசாங்கத்துக்குக் கைதிகளிடமிருந்து விண்ணப்பங்கள் வந்துகொண்டிருக்கின்றன" என்று அவர் கூறியதாகத் தெரிகிறது. அரசாங்கம் அனுப்பிய 'நோட்டீஸ்'களுக்கே அவர்கள் பதில் அனுப்பியிருக்கிறார்கள். அந்தக் கைதிகள் நிர்வாக அதிகாரிகளால் விசாரணையின்றி சிறைபட்டவர்கள். அவர்களுடைய பதில்களைப் பரிசீலனை செய்து வருவதாக மாத்திரமே அரசாங்கம் கூறுவதாயின், அது வெறும் போலி நாடகமும் கண் துடைப்பு வேலையுமேயாகும். ஒருவேளை தமது பதிலை வாசிக்கும் அந்நிய நாட்டினருக்காக உள்துறை மந்திரி அவ்விதம் கூறியிருக்கலாம். அவரது கூற்று நீதி வழங்க வேண்டும் என்ற ஆர்வத்தைக் குறிப்பதாக இல்லை. எனது கருத்துகள் அரசாங்கத்துக்குத் தெரிந்தவையே. என்னை, சமாளிக்க முடியாத ஒருவன் என்று அரசாங்கம் கருதலாம். எனினும், அவ்விதம் கருதுவது தவறு என்றே நான் கண்டிப்பேன். ஆனால் ஸ்ரீமதி மீராபாயைப் பற்றி என்ன சொல்லுவது? அவர், ஒரு கடற்படை தளபதியின், இப் பிரதேசத்தில் முன்பு பிரதம தளபதியாக இருந்தவரின் மகள் என்பது உங்களுக்குத் தெரியும்.

அவர் சொகுசான ஆடம்பர வாழ்க்கையைக் கைவிட்டுவிட்டு என்னுடன் சேர்ந்து துன்ப வாழ்க்கையை மேற்கொண்டார். என்னுடன் கடினமான வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்ற அவருடைய தீவிர ஆர்வத்தை உணர்ந்த அவரது பெற்றோர்கள், அவருக்கு மனப்பூர்வமாக ஆசிகள் கூறினர். பொது மக்களுக்குத் தொண்டு செய்வதிலேயே அவர் தமது காலத்தைச் செலவு செய்கிறார். ஒரிஸ்ஸா மக்களின் கஷ்டமான நிலைமையை அறிந்துகொள்வதற்காக எனது வேண்டுகோளின்மீது அவர் ஒரிஸ்ஸாவுக்குச் சென்றார். எந்த நேரத்திலும் ஜப்பானியர் படையெடுக்கலாம் என்று அரசாங்கம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. எனவே, தஸ்தாவேஜுகளை யெல்லாம் அதிகாரிகள் அப்புறப்படுத்தவோ அல்லது எரிக்கவோ வேண்டியிருந்தது. கடற்கரையிலிருந்து 'சிவில்' அதிகாரிகளை வெளியேற்றுவது பற்றியும் யோசித்துக் கொண்டிருந்தார்கள். ஸ்ரீமதி மீராபாய் சௌத்வார் (கட்டாக்) விமான தளத்தைத் தமது தலைமைக் காரியாலயமாகச் செய்துகொண்டிருந்தார். அவரால் அளிக்க முடிந்த உதவியைக் குறித்து, அங்குள்ள ராணுவ தளபதி மகிழ்ச்சியடைந்தார். பின்னர் ஸ்ரீமதி மீராபாய் புதுடில்லிக்குச் சென்று, ஜெனரல் சர் ஆலன் ஹார்ட்லியையும், ஜெனரல் மோல்ஸ்வொர்த்தையும் கண்டு பேசினர். அவ் விருவரும் ஸ்ரீமதி மீராபாயை மிகவும் பாராட்டி அவர் தங்களுடைய சொந்த இனத்தைச் சேர்ந்தவர் என்று அவருக்கு உபசாரம் செய்தனர். ஆகையால், அவர் ஏன் சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார் என்பதை என்னால் அறிந்து கொள்ளவே முடியவில்லை. எனக்குத் தெரிந்தவரையில், அவர் உயிருடன் புதையுண்டிருப்பதற்கான ஒரே காரணம், அவர் என்னுடன் சேர்ந்துகொண்டுள்ள குற்றம்தான். எனவே, அவரை உடனே விடுதலை செய்ய வேண்டுமென உங்களுக்கு நான் யோசனை கூறுகிறேன்; அல்லது அவரைப் பார்த்துப் பேசி அதன் பிறகு தீர்மானிக்கும்படியும் கூறுகிறேன். அவருக்கு ஏற்பட்ட உடல் வேதனையிலிருந்து அவர் இன்னும் விடுதலை பெறவில்லை. அந்த வேதனையைக் குறைக்க வேண்டும் என்பதற்காகவே எனது வேண்டுகோளின்மீது அரசாங்கம் காப்டன் ஸிம்காக்ஸை அனுப்பியது. சிறையில் இருக்கும்போது நிரந்தரமாகவே அவரது உடலில் ஊனம் ஏற்பட்டுவிட்டால், அது மிகவும் துக்ககரமான ஒரு சம்பவமாகிவிடும். அரசாங்கம் இழைத்து வரும் அநீதிக்கு ஒரு சரியான உதாரணம் என்பதற்காகவே ஸ்ரீமதி மீராபாயின் நிலையை நான் குறிப்பிட்டிருக்கிறேன்.

15. நான், எனக்கு விதித்துக்கொண்டிருக்கும் எல்லையைக் கடந்துவிட்ட இந்த நீண்ட கடிதத்திற்காக உங்களிடம் மன்னிப்புக் கோருகிறேன். இது சொந்த விஷயங்களைப் பற்றிய, சம்பிரதாயத்திற்குப் புறம்பான ஒரு கடிதமாகிவிட்டது. எனினும், அதுதான் நண்பர்களிடம் எனக்குள்ள விசுவாசத்தின் அடையாளமாகும். ஒளிவு மறைவின்றி நான் எழுதியிருக்கிறேன். உங்களுடைய கடிதமும், உங்களுடைய பிரசங்கமும் என்னை

அவ்விதம் எழுதும்படி தூண்டியுள்ளன. இந்தியாவுக்காகவும், இங்கிலாந்துக்காகவும், மானிடவர்க்கத்துக்காகவும் இந்தக் கடிதத்தைத் தாங்கள் உங்களுடைய பிரசங்கத்திற்கு ஒரு யோக்கியமான, பட்டவர்த்தனமான, நட்பு முறையிலுள்ள ஒரு பதிலாகக் கருதுவீர்களென நான் நம்புகிறேன்.

*16.* பல ஆண்டுகளுக்கு முன், தென்னுப்பிரிக்காவில் உள்ள டால்ஸ்டாய் பண்ணையில் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் நான் பாடம் கற்பித்துக் கொண்டிருந்தபோது வார்ட்ஸ்ஒர்த்* எழுதிய 'ஆனந்த வீரனின் குணதிசயம்' என்ற கவிதையை அவர்களுக்கு வாசித்துக் காட்ட நேர்ந்தது. நான் உங்களுக்கு இந்தக்கடிதத்தை எழுதிக் கொண்டிருக்கும்போது, அது என் நினைவிற்கு வருகிறது. வார்ட்ஸ்ஒர்த் வர்ணித்துள்ள வீரனை உங்களிடம் நான் கண்டால் என் உள்ளத்தில் ஆனந்தம் ஏற்படும். இந்த யுத்தம் வெறும் காட்டுமிராண்டித்தனமான பலத்திற்கு ஒரு சோதனையாகிவிடுமாயின், பின்னர் அச்சு நாடுகளும் நேசதேசங்களும் பின்பற்றும் வழிகளுக்கும் முறைகளுக்கும் இடையே யாதொரு வேற்றுமையும் இராது.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 115

# மீண்டும் வேவல்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி,
*28-3-1944*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உங்களுடைய மார்ச்சு 9உ கடிதம் கிடைத்தது. பார்லிமெண்டில் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு ஸ்ரீ பட்லர் அளித்துள்ள பதிலைப்பற்றி நீங்கள் கூறியுள்ள புகாருக்கு உள்துறை மந்திரியிடமிருந்து உங்களுக்குத் தனியாக பதில் வரும். ஸ்ரீமதி காந்தியின் நோய்க்குச் சிகிச்சை அளிப்பதன் சம்பந்தமாக இந்திய அரசாங்கம் அனுதாபத்துடன் நடந்து கொள்ளவில்லை என்ற எண்ணம் உங்களுக்கு இருந்துவருமாயின், அது எனக்கு ஆழ்ந்த வருத்தத்தைக் கொடுக்கும் என்று மாத்திரமே நான் கூற முடியும். ஸ்ரீமதி ஸ்லேடைப்பற்றி நீங்கள் குறிப்பிட்டிருக்கும் விவரங்கள் பரிசீலனை செய்யப்படும்.

---

* வில்லியம் வார்ட்ஸ்ஒர்த் (1770–1850) தலைசிறந்த ஆங்கிலக் கவிகளில் ஒருவர். எளிய வாழ்க்கையும் உயர்ந்த சிந்தனையுமே அவரது வாழ்க்கையின் லட்சியமாகும். உயர்ந்த சிந்தனைகள் அடங்கிய தூய்மையான கவிதைகளைச் சிருஷ்டித்த பெருமை அவருக்கு உண்டு. குறிப்பாக, இயற்கையின் அற்புதங்களை விளக்குவதில் அவர் ஈடு இணையற்றவர். 1843-லிருந்து அவர் பிரிட்டிஷ் கவியாக இருந்தார். அவரது கவிதைகளில் ஒன்றின் பெயரையே மேலே காந்திஜி குறிப்பிட்டிருக்கிருர்.

இப்போது நாம் நீண்ட விவாதத்தில் ஈடுபடுவதால் யாதொரு லாபமும் ஏற்படாதென்றே நினைக்கிறேன். எனவே, உங்கள் கடிதத்தில் நீங்கள் எழுப்பியுள்ள விஷயங்களைப்பற்றி விவரமாக பதில் அளிக்க நான் உத்தேசிக்கவில்லை. ஆனால், இந்தியாவின் எதிர்கால அபிவிருத்தியையும், நீங்கள் தற்போது சிறைபட்டிருப்பதற்கான காரணங்களையும் பற்றி எனது கருத்துகள் அடங்கிய தெளிவான பதிலை உங்களுக்கு அனுப்புவதே சிறந்ததென நான் எண்ணுகிறேன்.

பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நகல் பிரகடனத்தை சர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் இந்தியாவுக்குக் கொண்டுவந்தார். இந்தியப் பிரதிநிதிகளே தயாரித்த, முக்கியமான எல்லாக் கட்சிகளுக்கும் சம்மதமான ஓர் அரசியல் திட்டத்தின் கீழ் இந்தியாவுக்கு சுயாட்சி அளிப்பதே பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நோக்கமென்று அந்தப் பிரகடனத்தில் சந்தேகத்துக்கு இடமின்றிக் குறிப்பிடப் பட்டிருந்தது. அந்த நோக்கத்தை நான் பூரணமாக ஆதரிக்கிறேன் என்பதை சொல்லத் தேவையில்லை. இந்தியா குழப்பத்திற்கும் கலகத்திற்கும் இரையாகிவிடாமல் அந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்கான சிறந்த முறைகள் என்ன என்பதையே நான் நாடுகிறேன். சரியான முடிவுக்கு வரவேண்டுமாயின், மிகுந்த விவேகமும், நல்லெண்ணமும், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும் வேண்டும். அவ்விதம் செய்ய சிறந்த தலைவர்கள் முன்வருவார்களாயின், சரியான முடிவைக் காணலாம் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும்.

இதன் மத்தியில் செய்யவேண்டிய அலுவல்கள், குறிப்பாக பொருளாதாரத் துறையில் ஏராளமாக இருக்கின்றன. நவீன உலகத்தில் இந்தியா அதற்கு உகந்த ஒரு சிறந்த ஸ்தானத்தை அடையும்படி செய்வதற்கான அலுவல்கள் ஏராளமாக இருக்கின்றன. இதுவரை பழக்கமில்லாத பல துறைகளையும், மாறுதலையும், முன்னேற்றத்தையும் வரவேற்க இந்தியா தயாராக இருக்கவேண்டும்; மக்களின் வாழ்க்கை அந்தஸ்தை உயர்த்தவும் அது தயாராக இருக்கவேண்டும். அத்தகைய அலுவல்கள் முக்கியமாக அரசியல் சம்பந்தமில்லாதவை. அதன் பலனாக, அரசியல் சமரசமும் துரிதமாக ஏற்படலாம். எனினும் அரசியல் சமரசம் ஏற்படும் வரையில் அந்தப் பிரச்னைகள் காத்திருக்க முடியாது. அதன் பலனாக, முழுகவனத்தையும் கவரும் பல புதிய பிரச்னைகள் ஏற்படலாம். இந்தியாவிலுள்ள மிகச் சிறந்த திறமைசாலிகள் அந்தப் பிரச்னைகளைச் சமாளிக்கவேண்டியிருக்கும். உலகத்தின் மற்றப் பகுதிகளிலிருந்து தனித்து நின்றோ, பிரிட்டன் அளிக்கக்கூடிய உதவி இல்லாமலோ, அனுபவம் வாய்ந்த நிர்வாகிகளின் ஊழியம் இன்றியோ அந்தப் பிரச்னைகளை இந்தியா சமாளிக்குமென எதிர்பார்க்க முடியாது. ஆனால் அது, இந்தியா சுதந்திர லட்சியத்தை நோக்கிச் செல்ல தாங்கள் உதவி புரிகிறோம் என்ற நிச்சயமான எண்ணத்துடன்

எல்லாக் கட்சிகளின் தலைவர்களும் ஒத்துழைக்க வேண்டிய வேலையாகும்.

எனினும், காங்கிரஸ் கட்சியின் தற்போதைய கொள்கையைக் குறித்து நான் வருந்துகிறேன். இந்தியாவின் அபிவிருத்தியையும், சுயாட்சியை நோக்கி இந்தியாவின் முன்னேற்றத்தையும் அந்தக் கொள்கை தடுப்பதாக இருக்கிறதேயன்றி, அவற்றிற்கு உதவி அளிப்பதாக இல்லை. இந்த யுத்தத்தில் அச்சு நாடுகளை எதிர்த்து ஐக்கியநாடுகள் வெற்றி பெறவேண்டியது இந்தியாவுக்கும் உலகத்துக்கும் உயிர்நாடி போன்றதாகும். இதை நீங்களும் உணர்ந்திருக்கிறீர்கள். ஆனால் காங்கிரஸ் காரியக் கமிட்டியோவெனில், யுத்தத்தில் ஒத்துழைக்க மறுத்துவிட்டது; ராஜிநாமா செய்யும்படி காங்கிரஸ் மந்திரிசபைகளுக்கு உத்தரவிட்டுவிட்டது; தேசத்தின் நிர்வாகத்தில் பங்கு எடுத்துக் கொள்வதில்லை என்று தீர்மானித்துவிட்டது; ஐக்கிய நாடுகளுக்கு உதவியாக இந்தியா கைக்கொண்டு வரும் யுத்த முயற்சியிலும் பங்கு எடுத்துக் கொள்ள மறுத்துவிட்டது. இந்தியாவுக்கே மகத்தான நெருக்கடி ஏற்பட்டிருக்கும் இச்சமயத்தில், ஜப்பானியர் படையெடுக்கலாம் என்ற நிலைமை ஏற்பட்டிருக்கும் இச்சமயத்தில், பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேற வேண்டும் என்று கோரி ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற காங்கிரஸ்கட்சி முடிவு செய்தது. இந்த முடிவு, ஜப்பானியர்களை எதிர்த்து இந்தியாவின் எல்லைகளைப் பாதுகாப்பதில் நமக்குள்ள சக்தியைச் சீர்குலைப்பதாகவே இருக்கிறது. உடனடியாக பிரிட்டிஷார் அடியோடு இந்தியாவைவிட்டு வெளியேறுவதால், இந்தியாவின் பிரச்னைகள் தீர்ந்துவிடா என்பதை நான் தெளிவாக அறிகிறேன்.

வேண்டுமென்றே ஜப்பானியருக்கு உதவிபுரிய வேண்டும் என்பது உங்களுடைய விருப்பம் என்றோ அல்லது காங்கிரஸ் கட்சியின் விருப்பம் என்றோ நான் குற்றம் சாட்டவில்லை. காந்தி அவர்களே, நீங்கள் மிகுந்த அறிவாளி. எனவே, யுத்தத்தை நடத்துவதற்கு உங்களுடைய தீர்மானம் முட்டுக் கட்டையாக இருக்கும் என்பதை நீங்கள் உணராமலிருக்க முடியாது. இந்தியாவைப் பாதுகாக்க எங்களுக்குள்ள திறமையில் நீங்கள் நம்பிக்கை இழந்துவிட்டீர்கள் என்பதும் எனக்கு தெளிவாகத் தெரிகிறது. எங்களுக்கு நேர்ந்திருப்பதாகக் கூறப்படும் ராணுவ நிர்ப்பந்தங்களைச் சாதகமாகக் கொண்டு அரசியல் நலன்களைப் பெற நீங்கள் தயாராக இருக்கிறீர்கள் என்பதும் தெளிவாகத் தெரிகிறது. இந்நிலையில், இந்தியாவின் பாதுகாப்பிற்கு பொறுப்பாளிகளாக இருப்பவர்கள், அவர்கள் இப்போது செய்திருப்பதைத் தவிர வேறு எவ்விதம் நடந்துகொண்டிருக்க முடியும், அந்தத் தீர்மானத்திற்குக் காரணமானவர்களை எப்படிக் கைது செய்யாமல் இருந்திருக்க முடியும் என்பது எனக்குத் தெரியவில்லை. பின்னர் நிகழ்ந்த கலவரங்களுக்கு பொதுவாக காங்கிரசே பொறுப்பாளி என்பதையொட்டி நான் கூறுவது இது

தான் : அப்போது நான் இந்தியாவின் பிரதம தளபதியாக இருந்ததை நீங்கள் அறிவீர்கள். பர்மா எல்லைக்கு உயிர்நாடியான தந்திக் கம்பிகள் காங்கிரஸ் ஆதரவாளர்களால், காங்கிரசின் பெயரால் அறுக்கப்பட்டன ; அவர்கள் பல சமயங்களிலும் காங்கிரஸ் கொடியையே உபயோகித்தார்கள். எனவே, நடந்த சம்பவங்களுக்கு காங்கிரஸ் பொறுப்பாளி அல்ல என்று கூற முடியாது. மிகுந்த புத்திக் கூர்மையும் அனுபவமும் வாய்ந்த நீங்கள், உங்களுடைய கொள்கையின் விளைவாக என்ன நிகழக் கூடும் என்பதை அறிந்திருக்க முடியாது என்பதை நான் நம்புவதற்கில்லை. இவ்விஷயத்தில் காங்கிரஸ் கட்சியின் நடவடிக்கை, இந்தியாவின் உண்மையான உணர்ச்சியைப் பிரதிபலிக்கிறது என்பதை நான் நம்பவில்லை. அது போலவே, காங்கிரஸ் மேற்கொண்டுள்ள ஒத்துழையாமைக் கொள்கையும் இந்தியாவிலுள்ள பெரும்பாலோரின் கருத்தைப் பிரதிபலிப்பதாக இல்லை.

பொதுவான ஒத்துழைப்பு ஏற்படுமாயின், உடனடியாகவே நாம் இந்தியாவின் பொருளாதாரப் பிரச்னைகளை தீர்ப்பதற்கான பல காரியங்களைச் செய்ய முடியும் என்றும், இந்தியாவின் சுயாட்சி லட்சியத்தை நோக்கி உறுதியான முன்னேற்றத்தைக் காணலாம் என்றும் நம்புகிறேன்.

ஒத்துழையாமைக் கொள்கையை காங்கிரஸ் கட்சி விட்டுவிட வேண்டும்; இந்தியா பொருளாதார, அரசியல் துறைகளில் முன்னேற்றம் அடைவதற்கு இந்தியாவிலுள்ள மற்றக் கட்சிகளுடனும் பிரிட்டனுடனும் மனப்பூர்வமாக ஒத்துழைக்க வேண்டும். அத்துறைகளில் இந்தியாவின் முன்னேற்றம் திடீரென்று ஏற்பட்டு விடாது; கடினமான, உறுதியான உழைப்பின்மூலமே அந்த முன்னேற்றம் ஏற்பட வேண்டும். இதுதான் காங்கிரஸ் செய்யக்கூடிய மகத்தான உதவியாக இருக்கும் என நான் நம்புகிறேன். சந்தேகத்திற்கு இடமில்லாத அத்தகைய ஒத்துழைப்பை நல்கும்படி நீங்கள் காங்கிரசுக்குப் புத்திமதி கூறுவீர்களாயின், அதுதான் இந்தியாவுக்கு நீங்கள் செய்யக்கூடிய மகத்தான தொண்டாக இருக்குமென நான் நினைக்கிறேன்.

இதன் மத்தியில் இந்தியாவின் நலன்களை உன்னி, இந்த யுத்தத்தை வெற்றிகரமான ஒரு முடிவுக்குக் கொண்டு வர எல்லா முயற்சிகளும் செய்வதே எனது கடமையென்று கருதுகிறேன். நான் இந்தியாவின் உண்மையான நண்பன். யுத்தத்திற்குப் பிறகு இந்தியாவின் முன்னேற்றத்திற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியதும் எனது கடமை என்று கருதுகிறேன். இந்தக் கடமையை நிறைவேற்றுவதில், இந்தியாவிலுள்ள பெரும்பாலோரின் பெரும் அளவு ஒத்துழைப்பை நான் பெறமுடியுமென்றே கருதுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

# 116

சிறைமுகாம்,
9-4-1944

மேன்மை தங்கிய வைஸ்ராய்,
வைஸ்ராய் முகாம்.

அன்புள்ள நண்பருக்கு,

மார்ச்சு 28உ நீங்கள் எழுதிய கடிதம் இம்மாதம் 3உ எனக்குக் கிடைத்தது. அதற்காக தயவு செய்து எனது நன்றியை ஏற்றுக்கொள்ளுங்கள்.

பொதுவான விஷயத்தை நான் முதலில் எடுத்துக்கொள்கிறேன். நீங்கள் மனம்விட்டு எனக்குப் பதில் அளித்திருக்கிறீர்கள். நீங்கள் அளித்த மரியாதைக்குப் பிரதியாக நானும் முற்றிலும் மனம்விட்டு பதில் அளிப்பதன்மூலம் மரியாதையுடன் நடந்துகொள்ள உத்தேசித்திருக்கிறேன். மனம்விட்டுக் கூறுவது சில சமயங்களில் அதிருப்தியாக இருப்பினும், உண்மையான நட்புக்கு மனம்விட்டுப் பேசுவதே சிறந்தது. நான் கூறுவதில் ஏதாவது உங்களுக்கு மனக் கஷ்டத்தைக் கொடுக்குமாயின், தயவு செய்து முன்னதாகவே நான் கோரும் மன்னிப்பை ஏற்றுக்கொள்ளுங்கள்.

என் கடிதத்தில் நான் கூறியிருந்த முக்கிய விஷயங்களைப் பற்றி நீங்கள் எதுவும் சொல்ல மறுத்திருப்பது பரிதாபகரமானது.

தற்போதைய அரசாங்க நிர்வாகத்துடன் காங்கிரஸ் ஒத்துழைக்க வேண்டுமென நீங்கள் உங்களுடைய கடிதத்தில் கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள். அவ்விதம் செய்தத் தவறினால், எதிர்காலத் திட்டத்தை யொட்டியாவது ஒத்துழைக்க வேண்டும் என்று கோரியிருக்கிறீர்கள். இதற்கு, பரஸ்பரம் சம அந்தஸ்தும், பரஸ்பர நம்பிக்கையும் இருக்க வேண்டும் என்பதே எனது அபிப்பிராயமாகும். ஆனால் அரசாங்கத்துக்கும் காங்கிரசுக்கும் சம அந்தஸ்து இல்லை. எங்கே திரும்பினாலும், அரசாங்கத்துக்கு காங்கிரசின் மீதுள்ள அவநம்பிக்கையைக் காணலாம். அதன் பலன் என்னவெனில், எங்கே பார்த்தாலும் அரசாங்கத்தின்மீது சந்தேகமே நிலவி வருகின்றது. போதாக் குறைக்கு, எதிர்காலத்தில் இந்தியாவுக்கு நன்மை ஏற்படக்கூடிய விதத்தில் நடந்து கொள்ள அரசாங்கத்திற்குத் திறமை உண்டு என்பதில் காங்கிரஸ்காரர்களுக்கு நம்பிக்கை இல்லை என்பதும் உண்மையாகும். இந்த நம்பிக்கையின்மை, மனக் கசப்பான அனுபவத்தை அடிப்படையாகக்கொண்டது. இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் நிர்வாகத்தின் சென்ற காலத்திய போக்கும் தற்போதைய

போக்கும் அத்தகைய அனுபவத்திற்குக் காரணமாகும். எனவே, இந்திய மக்களிடமிருந்து நீங்கள் ஒத்துழைப்பை எதிர்பார்ப்ப தற்குப் பதிலாக, அவர்களுடைய தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதி நிதிகளின்மூலம் நீங்கள் இந்திய மக்களுடன் ஒத்துழைக்க வேண்டிய காலம் வந்துவிட வில்லையா ?

இவையெல்லாம் ஆகஸ்டு தீர்மானத்தில் அடங்கியிருக் கின்றன. அந்தத் தீர்மானம் பலாத்கார நடவடிக்கைகளை அல்ல, ஆனால் தானே துன்பத்திற்கு உள்ளாவதை அடிப்படையாகக் கொண்டது. காங்கிரஸ்காரராயினும் சரி, வேறு யாராயினும் சரி, இந்த விதிக்கு விரோதமாக நடக்கும் எவருக்கும் தமது நடவடிக்கைக்கு காங்கிரசின் பெயரை உபயோகித்துக்கொள்ள அதிகாரம் இல்லை. ஆனால் லார்டு லின்லித்கோவைப் போல் உங்களுக்கும் இந்தத் தீர்மானம் வெறுப்பை உண்டாக்கியிருக் கிறது என்பதைக் காண்கிறேன். அத்தகைய வெறுப் புக்கு ஆதாரம் இல்லை என்பதே அப்போதும் இப்போதும் எனது கருத்தாகும். என்னுடைய 'அறிவை'யும், 'அனுபவத்தை'யும் 'புத்திக்கூர்மை'யையும் நீங்கள் பராட்டியிருக்கிறீர்கள். வரப் பிரசாதமான இந்த குணதிசயங்களெல்லாம், யுத்தத்தை நிறை வேற்றுவதற்கு இடையூறாக இருப்பதே காங்கிரஸ் தீர்மானத்தின் பலன் என்று எனக்கு உணர்த்தவில்லை. காங்கிரஸ்காரர்களை அவசரப்பட்டுக் கைது செய்ததைத் தொடர்ந்து நிகழ்ந்த சம்ப வங்களுக்கு அரசாங்கமே முற்றிலும் பொறுப்பாளி. நெருக் கடியை வரவேற்றவர்கள் அவர்களே யன்றி, காங்கிரஸ் தீர்மா னத்தின் கர்த்தாக்கள் அல்ல.

அச் சமயத்தில் நீங்கள் பிரதம தளபதியாக இருந்ததாக எனக்கு நினைவூட்டுகிறீர்கள். கலகம் மூண்டுவிடுமோ என்ற பயம் உங்களுடைய நடவடிக்கைகளுக்குக் காரணமாக இராமல், அளவிட முடியாத உங்களுடைய ஆயுத பலத்தில் உள்ள நம் பிக்கை உங்களுடைய நடவடிக்கைக்குக் காரணமாக இருந்திருக் குமாயின், சம்பந்தப்பட்ட எல்லோருக்கும் எவ்வளவு நன்மை யாக இருந்திருக்கும்! அரசாங்கம் அப்போது தன் கைவரிசை யைக் காட்ட முற்படாமல் இருந்திருக்குமாயின், அக்காலத்தில் நிகழ்ந்த ரத்தக்களரியை யெல்லாம் தவிர்த்திருக்கலாம். ஜப்பா னியரால் ஏற்படக்கூடிய அபாயமும் பழங் கதையாகியிருக்கும். ஆனால், துரதிர்ஷ்டவசமாக அவ்விதம் நடைபெறவில்லை. எனவே, ஜப்பானியரால் அபாயம் ஏற்படலாம் என்ற நிலை இன்னும் இருந்து வருகிறது. இன்னும் மோசமான நிலைமை என்னவெனில், அரசாங்கம் சுதந்திரத்தையும், சத்தியத்தையும் நசுக்கும் கொள் கையைத் தொடர்ந்து வருகிறது. காவற்கைதிகள் சம்பந்தமாக இப்போது கொண்டுவந்திருக்கும் அவசரச் சட்டத்தை நான் பரிசீலனை செய்தேன். அது, 1919—இல் கொண்டுவரப்பட்ட ரௌலட் சட்டத்தையே நினைவூட்டுகிறது. கொடிய சட்டம் என்றே அதை எல்லோரும் வர்ணித்தார்கள். அதற்கு முன் ஒரு போதும் இராதவாறு அது பெரும் கிளர்ச்சியை உண்டாக்கியது

உங்களுக்குத் தெரியும், ஆனால் வைஸ்ராயின் சிம்மாசனத்திலிருந்து தாரை தாரையாகக் கொட்டும் அவசரச் சட்டங்களின் தொடருக்கு முன்னிலையில், ரௌலட் சட்டம் மிகவும் அற்பமேயாகும். 1919-இல் ராணுவச் சட்டம் ஒரே ஒரு மாகாணத்தில் தான் அமலில் இருந்தது; ஆனால் இன்றோ இந்தியா முழுவதும் ராணுவச் சட்டம் அமலில் இருந்து வருகிறது. நிலைமை நாளுக்கு நாள் அதிக மோசமாகியும் வருகிறது.

நீங்கள் இவ்வாறு கூறுகிறீர்கள்: "இந்தியாவைப் பாதுகாக்க எங்களுக்குள்ள திறமையில் நீங்கள் நம்பிக்கையிழந்து விட்டீர்கள் என்பதும், எங்களுக்கு நேர்ந்திருப்பதாகக் கூறப்படும் ராணுவ சம்பந்தமான கஷ்டங்களை உங்களுடைய அரசியல் நலன்களுக்காகப் பயன்படுத்திக் கொள்ள நீங்கள் தயாராக இருக்கிறீர்கள் என்பதும் எனக்குத் தெளிவாகத் தெரிகிறது."

இந்த இரண்டு குற்றச் சாட்டுகளையும் நான் மறுக்கத்தான் வேண்டும். பொன்போன்ற விதியை நீங்கள் பின்பற்ற வேண்டுமென நான் உங்களுக்கு யோசனை கூறத் துணிகிறேன். அதாவது நீங்கள் அவ்விதம் கூறியதை வாபஸ் செய்து கொள்ளவேண்டும்; பாரபட்சமற்ற ஒரு நீதிச் சபையின் முன்னிலையில் உங்களிடமுள்ள சாட்சியங்களைச் சமர்ப்பித்து அச்சபையின் தீர்ப்பைப் பெறும்வரையில் உங்களுடைய முடிவை நிறுத்தி வைக்க வேண்டும். மிகுந்த நம்பிக்கையுடன் நான் இந்த வேண்டுகோளை விடுவிக்கவில்லை என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஏனெனில், காங்கிரஸ்காரர்களிடமும் மற்றவர்களிடமும் நடந்து கொள்ளும் விஷயத்தில் சர்க்காரே பிராசிகியூட்டராகவும், நீதிபதியாகவும், சிறை அதிகாரியாகவும் இருந்துவந்திருக்கிறார்கள்; அவ்விதமாக, எதிரிகள் ஒழுங்கான முறையில் வழக்காடுவது அசாத்தியமாகும்படி செய்திருக்கிறார்கள். நீதிமன்றங்கள் அளித்த தீர்ப்புகள் கூட, புதிய அவசரச் சட்டங்களின் மூலம் பலனற்றுப் போகும்படி செய்யப்பட்டிருக்கின்றன. இந்த அசாதாரண நிலைமையில் எந்த மனிதனின் சுதந்திரமும் பத்திரமாக இருப்பதாகக் கூறமுடியாது. இவையெல்லாம் யுத்தகால அவசர நிலைமை என்று நீங்கள் திருப்பிக் கூறலாம். எனினும் இவையெல்லாம் எனக்கு ஆச்சரியமாகத் தான் இருக்கின்றன!

இன்று நான் காணும் இந்தியா, நாற்பது கோடி ஆன்மாக்கள் அடங்கிய ஒரு பரந்த சிறையாகவே இருக்கிறது. அதன் ஒரே காவலராக நீங்கள் விளங்குகிறீர்கள். அரசாங்க சிறைகள், இந்த மாபெரும் சிறைக்குள் இருக்கும் சிறைகளாகும். என் கடிதத்திற்கு நீங்கள் அனுப்பியுள்ள பதிலில் அடங்கியிருக்கும் கருத்துக்கள் உங்களுக்கு இருந்து வரும்வரையில், என் போன்றவர் இருக்க வேண்டிய இடம் ஓர் அரசாங்க சிறையே ஆகும். அரசாங்கத்தின் மனத்திலும், கருத்திலும், கொள்கையிலும் ஒரு மாற்றம் ஏற்பட்டாலொழிய, உங்களுடைய கைதியாகவே இருந்துவருவதில் நான்

திருப்தியடைகிறேன். சம்பிரதாயத்திற்கு இணங்க ஒழுங்கான முறையில் நான் விடுத்த ஒரு வேண்டுகோளுக்கு மாத்திரம் நீங்கள் செவி சாய்ப்பீர்கள் என்று நான் நம்புகிறேன். அதாவது, இன்று எங்களுக்கு ஆகும் செலவில் பத்தில் ஒன்று கூட செலவாக வேண்டிய அவசியமில்லாத வேறு எந்த சிறைக்காவது என்னையும், என் சக கைதிகளையும் மாற்றவேண்டும் என்பதேயாகும்.

ஸ்ரீ பட்லரின் அறிக்கையையும், உள்துறை மந்திரியின் அறிக்கையையும் பொறுத்த மட்டில், எனக்குப் பதில் அளித்து உள்துறை மந்திரியிடமிருந்து இரண்டு கடிதங்கள் கிடைத்திருக்கின்றன. அவை மிகவும் அதிருப்திகரமாக இருக்கின்றன என்று கூற நான் வருந்துகிறேன். அவற்றை எழுதியவர்கள் வெளிப்படையான உண்மைகளைக் கவனிக்கவில்லை. சிறிதும் அரசியல் அல்லாத பிரச்னைகளையொட்டிக் கூட அவர்கள் உண்மையை ஒப்புக்கொள்ள பிடிவாதமாக மறுக்கிறார்கள். உள்துறை இலாகாவுடன் எனது கடிதப்போக்குவரத்து தொடர்ந்து நடைபெற்றுவருகிறது. உங்களுக்கு நேரம் இருந்து, அவ்விஷயத்தில் அக்கறையும் இருக்குமாயின், நீங்கள் அதைக் கவனிக்கும்படி கோருகிறேன்.

ஸ்ரீமதி மீராபாயைப்பற்றி (மிஸ் ஸ்லேட்) என் கடிதத்தில் குறிப்பிட்டிருந்ததை ஆதாரமாகக் கொண்டு அவரது புகார்கள் பரிசீலனை செய்யப்பட்டு வருவதைக் குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன், நன்றியுள்ளவனாகவும் இருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 117

# உப்பு விதியைப் பற்றிய கடிதங்கள்

சிறை முகாம்,
*16-2-1944*

அவசரத் தந்தி

கனம் நிதி மந்திரிக்கு,
புது டில்லி.

காந்தி-இர்வின் ஒப்பந்தத்தில் உள்ள உப்பு விதியைப் பற்றி உங்களுடைய அறிக்கையை வாசித்துள்ள நான், அந்த விதியின் பொருள்களை விளக்கி சர் ஜார்ஜ் ஷுஸ்டர் வெளியிட்டுள்ள அறிக்கையைக் கவனிக்கும்படி உங்களை வேண்டிக் கொள்கிறேன். அதில் எத்தகைய திருத்தம்

செய்வதாயினும், அது அந்த அறிக்கையின் ஷரத்துகளுக்கு இணங்கவே இருக்கவேண்டும்.

காந்தி

## 118

உள்துறை இலாகா,
பம்பாய், 25-2-1944

பம்பாய் அரசாங்கக் காரியதரிசியிடமிருந்து,
உள்துறை இலாகா.

மோ. க. காந்தி அவர்களுக்கு,

ஐயா,

*16-2-1944*-இல் பின்கண்ட தந்திச் செய்தியை இந்திய அரசாங்க நிதிமந்திரிக்கு அனுப்பும்படி நீங்கள் கேட்டுக் கொண்டிருந்தீர்கள்:

"காந்தி-இர்வின் ஒப்பந்தத்தில் உள்ள உப்பு விதியைப் பற்றி உங்களுடைய அறிக்கையை வாசித்துள்ள நான், அந்த விதியின் பொருள்களை விளக்கி சர் ஜார்ஜ் ஷுஸ்டர் வெளியிட்டுள்ள அறிக்கையைக் கவனிக்கும்படி உங்களை வேண்டிக் கொள்கிறேன். அதில் எத்தகைய திருத்தம் செய்வதாயினும், அந்த அறிக்கையின் ஷரத்துகளுக்கு இணங்கவே இருக்க வேண்டும்."

இந்தச் செய்தியை சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜெனரல் அன்றே இந்த அரசாங்கத்திற்கு அனுப்பிவைத்தார். இந்த அரசாங்கம் அதை உடனே இந்திய அரசாங்கத்துக்கு அறிவித்துவிட்டது. அதற்கு கீழ்க்கண்ட பதிலை உங்களுக்கு அறிவிக்கும்படி நிதி மந்திரி இப்போது கேட்டுக் கொண்டுள்ளார்:

" சட்ட சபையில் விவாதம் நடந்தபின், 1931-இல் வெளியிட்ட அறிக்கைக்கு இணங்க இது வரையில் நடந்து வந்திருப்பதுபோலவே இனியும் நடந்து வர விடுவதே சிறந்தவழி என்று கருதப்பட்டது. அந்த அறிக்கையின் ஷரத்துகளுக்குச் சிறிதும் வழுவின்றி அரசாங்கம் நடந்து கொண்டு வந்திருக்கிறது. எனவே, அதில் எத்தகைய திருத்தமும் செய்யப்படவில்லை."

தங்கள் மிகப் பணிவுள்ள ஊழியன்,
எச். ஐயங்கார்,
பம்பாய் அரசாங்க உள்துறைக் காரியதரிசி.

# 119

# சிறை மாற்றத்தைப் பற்றி

சிறை முகாம்,
4-3-1944

இந்திய அரசாங்கக் காரியதரிசிக்கு,
உள்துறை இலாகா,
புது டில்லி.

ஐயா,

சட்ட சபையில் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் உள்துறை மந்திரி பின்வருமாறு குறிப்பிட்டதாகப் பத்திரிகைச் செய்தி கூறுகிறது: "ஆகாகான் மாளிகையில் வைக்கப்பட்டுள்ள ஸ்ரீ காந்திக்கும் அவருடன் வைக்கப்பட்டிருக்கும் மற்றவர்களுக்கும் மாதந்தோறும் ரூ. 550 செலவாகிறதென்று கணக்கிடப்பட்டிருக்கிறது."

சென்ற அக்டோபர் 26வ நான் தங்களுக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தேன்:

"என்னைச் சுற்றி பிரமாதமான காவலுடன் நான் சிறை வைக்கப்பட்டுள்ள பிரம்மாண்டமான இடத்துக்கு ஆகும் செலவு, பொதுமக்களின் பணத்தை வீண் செலவு செய்வதாகும் என்றே நான் கருதுகிறேன். எந்தச் சிறையிலும் எனது நாட்களை மகிழ்ச்சியுடன் கழிக்க நான் தயாராக இருக்கிறேன்."

நான் மேலே கூறியிருப்பதைத் தொடர்ந்து நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்க வேண்டும் என்பதையே, உள்துறை மந்திரியின் மேற்கண்ட பதில் வற்புறுத்துவதாக இருக்கிறது. எனினும், திருத்திக்கொள்ளும் விஷயத்தில் ஒருபோதும் காலம் கடந்துவிடுவதில்லை. எனவே, அப்பிரச்னையை இப்போது எடுத்துக்கொள்கிறேன்.

என் சகாக்களுக்கும் எனக்கும் ஆகும் மாதச் செலவு ரூ. 550 மாத்திரமல்ல. இந்த பிரம்மாண்டமான இடத்தின் வாடகை (இதில் ஒரு பகுதிதான் எங்களுக்குத் திறக்கப்பட்டிருக்கிறது), வெளியிலுள்ள ஏராளமான காவலர்களுக்கு ஆகும் செலவு, சூபரிண்டெண்ட், ஜமேதார், சிப்பாய்கள் முதலிய பலரும் அடங்கிய உள் பாதுகாப்புக் குழுவின் செலவு ஆகியவற்றையும் அந்தத் தொகையுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும். இங்குள்ளவர்களுக்குப் பணிவிடை செய்யவும், தோட்டத்தைப் பராமரிக்கவும் எராவ்டா சிறையிலிருந்து வந்துள்ள ஏராளமான கைதிகளுக்கு ஆகும் செலவையும் அத்துடன் சேர்த்துக் கொள்ள வேண்டும்

உண்மையில், இந்தச் செலவுகள் யாவும் முற்றிலும் அனாவசியமானவை என்பதே எனது கருத்தாகும். மக்கள் பட்டினியால் வருந்தி வருகையில், மேற்கண்ட செலவுகள் இந்தியாவின் மனித குலத்துக்கே விரோதமான ஒரு குற்றமாகும். ஆகையால், அரசாங்கம் தேர்ந்தெடுக்கும் வேறு எந்த சாதாரண சிறைக்காவது என் சகாக்களையும் என்னையும் மாற்ற வேண்டுமென நான் கேட்கிறேன். முடிவாக, ஒரு துக்ககரமான எண்ணத்தையும் நான் மறைத்து வைத்துக் கொள்ள முடியாது. அதாவது மேற்கண்ட செலவுகள் யாவும் இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான வாயில்லா மக்களிடமிருந்து வசூல் செய்யப்பட்ட வரித் தொகைகளிலிருந்தே வருகின்றன.

தங்கள்,
மோ. க. காந்தி.

## 120

சிறை முகாம்,
21-4-1944

இந்திய அரசாங்கக் காரியதரிசிக்கு,
உள்துறை இலாகா,
புது டில்லி.

ஐயா,

மார்ச் 4உ உங்களுக்கு நான் ஒரு கடிதம் எழுதினேன். இந்த முகாமில் உள்ள கைதிகள் அடங்கிய கோஷ்டியை, செலவு கணிசமான அளவுக்குக் குறையக் கூடிய வேறு ஒரு சிறைக்கு மாற்றும்படி அக்கடிதத்தில் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்தேன். இவ்விஷயமாக விரைவில் ஒரு முடிவு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள்,
மோ. க. காந்தி.

## 121

# நோயுற்றிருக்கும்போது பேட்டிகள்

*சிறைமுகாம்,*
*3-5-1944*

*பம்பாய் அரசாங்கக் காரியதரிசிக்கு,*
*உள்துறை இலாகா,*
*பம்பாய்.*

*ஐயா,*

*நேற்று ஸ்ரீ ஜம்னதாஸ் இங்கே வந்தார். நான் அவரைப் பார்க்க முடியுமா என்று என்னைக் கேட்டபோது, நான் அதற்கு இசைந்தேன். எதிர்காலத்தில் அவ்விஷயமாக சாத்தியமான வரையில் அதிக ஏமாற்றம் எதுவும் ஏற்படக் கூடாது என்பதே எனது நோக்கமாகும். எனது நிலைமை இதுதான் : அரசாங்க அனுமதி பெற்று வரும் எனது உறவினர்கள் யாரையும் பார்க்க நான் மகிழ்ச்சியடைவேன். எனினும், எனக்கு நானே வகுத்துக் கொண்டுள்ள விதியை நான் மீறக்கூடாது. உறவினர்கள் மாத் திரமே என்னைப் பார்ப்பதற்கு அரசாங்கம் அனுமதித்துவரும் வரையில், ஆசிரம அங்கத்தினர்களுக்கோ அல்லது அதே அந்தஸ்தில் உள்ள மற்றவர்களுக்கோ என்னைப் பார்க்க அரசாங்கம் அனுமதி அளிக்காதவரையில், நான் அந்த உரிமையை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட வேண்டும் என்பதே அந்த விதி யாகும். அவர்களை நான் எனது உறவினர்களுக்குச் சமமாகவே கருதுகிறேன். சென்ற ஆண்டில் நான் உண்ணாவிரதம் இருந்த போது, அரசாங்கம் அன்பு கூர்ந்து எனக்கு அவ்விதம் அனுமதி அளித்தது. அதனால், எனக்குத் தெரிந்தவரையில் யாதொரு விபரீதமும் ஏற்பட்டுவிட வில்லை. இப்போது நான் குணம் அடைந்துவரும் சமயத்திலும் அரசாங்கம் அவ்விதம் செய்ய இயலுமா? நான் குணமடைவதற்கு அதிக காலம் ஆகலாம் என்று தோன்றுகிறது.*

தங்கள்,
மோ. க. காந்தி.

## 122

# சமாதி இடத்தை ஆர்ஜிதம் செய்துகொள்ளக் கோரிக்கை

சிறை முகாம்,
6-5-1944 காலை, 7-45 மணி

பம்பாய் அரசாங்கக் காரியதரிசிக்கு,
உள்துறை இலாகா,
பம்பாய்.

ஐயா,

இந்த முகாமில் உள்ள காவற் கைதிகளை இன்று காலை 8 மணிக்கு விடுதலை செய்யப் போவதாக சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜெனரல் என்னிடம் கூறினர். இச் சந்தர்ப்பத்தில் எழுத்துமூலம் இந்த உண்மையைக் கூற நான் விரும்புகிறேன். அதாவது ஸ்ரீ மகாதேவ தேசாயின் உடலும், பின்னர் எனது மனைவியின் உடலும் தகனமான இடத்தை வேலி கட்டித் தடுத்திருக்கிறார்கள். அது இப்போது ஒரு புனிதமான பிரதேசமாகியிருக்கிறது. கைதிகள் கோஷ்டியினர் தினந்தோறும் அந்த இடத்திற்கு இரண்டு தடவை சென்று, காலஞ் சென்றவர்களுக்கு புஷ்பாஞ்சலி சமர்ப்பித்து பிரார்த்தனையும் செய்து வந்தார்கள். அந்த இடத்தை அரசாங்கம் ஆர்ஜிதம் செய்து, ஆகாகான் மாளிகைத் தோட்டத்தின் வழியாகச் செல்வதற்கும் உரிமையளிக்கும் என்று நம்புகிறேன். அப்படிச் செய்தால், அந்த இடத்திற்கு உறவினர்களும், நண்பர்களும் தங்கள் விருப்பப்படி எப்போது வேண்டுமாயினும் செல்லுவதற்கு வசதியாக இருக்கும். அரசாங்கத்தின் அனுமதி கிடைத்தால், அந்தப் புனிதப் பிரதேசத்தைத் தகுந்த முறையில் பராமரித்து வரவும், தினசரி பிரார்த்தனைகள் நடத்தவும் நான் ஏற்பாடு செய்ய விரும்புகிறேன். எனது வேண்டுகோளுக்கு இணங்க, அரசாங்கம் அவசியமான முறைகளை எடுத்துக் கொள்ளுமென நம்புகிறேன். சேவாகிராமம், வார்தா வழி, மத்திய மாகாணம் என்பதே எனது விலாசமாகும்.

தங்கள்,
மோ. க. காந்தி



ஆகா கான் மாளிகைத் தோட்டத்தில் அன்னை கஸ்தூரி பாயின் சமாதியும்,
மகாதேவ தேசாயின் சமாதியும்.

CONNEMARA PUBLIC LIB
31 JAN 2002



1944 பிப்ரவரி 22-ஆம் தேதி சிறையில் இறைவனடி சேர்ந்த
அன்னை கஸ்தூரிபாய்க்கு புஷ்பாஞ்சலி.

CONNEMARA PUBLIC LIBRARY
31 JAN 2002

## 123

உள் துறை இலாகா (அரசியல்)
புனா,
7-7-1944

பம்பாய் அரசாங்கக் காரியதரிசியிடமிருந்து,
உள் துறை இலாகா.

ஐயா,

உங்களுடைய 6-5-1944 கடிதத்திற்குப் பதிலளிக்கும்படி எனக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது. ஸ்ரீமதி காந்தியின் உடலும், ஸ்ரீ மகாதேவ தேசாயின் உடலும் தகனமான பிரதேசத்தை அரசாங்கம் ஆர்ஜிதம் செய்து கொள்ளவேண்டும் என்றும், உறவினர்களும், நண்பர்களும் தங்கள் விருப்பப்படி எப்போது வேண்டுமாயினும் ஆகாகான் மாளிகைத் தோட்டத்தின் வழியாக அந்த இடத்திற்குச் செல்ல உரிமை இருக்க வேண்டுமென்றும் கேட்டிருக்கிறீர்கள். நில ஆர்ஜித சட்டப்படி, அதை அரசாங்கம் நிர்ப்பந்தப்படுத்தி ஆர்ஜிதம் செய்து கொள்வது சட்ட பூர்வமாக முடியாத காரியமாகும். இவ்விஷயம், உங்களுக்கும் ஆகா கானுக்கும் இடையே சமரசமாக முடிவு செய்து கொள்ளவேண்டியதாகும் என்று அரசாங்கம் கருதுகிறது. இருந்தாலும், உங்களுடைய வேண்டுகோள் ஆகா கானுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது. இப்போது அது அவரது ஆலோசனையில் இருந்துவருகிறதென்று தெரிகிறது. எனினும் இதன் மத்தியில், ஸ்ரீமதி காந்தி, ஸ்ரீ மகாதேவ தேசாயின் உறவினர்களும், நீங்கள் குறிப்பிடும் மற்றவர்களும் அரண்மனைத் தோட்டத்தின் வழியாக தகனம் நடந்த இடத்திற்குச் செல்ல ஆகா கானுக்கு ஆட்சேபணை இல்லை என்று அரசாங்கம் அறிகின்றது. ஆனால் இது ஆகா கானின் அனுமதியும் உத்தரவும் பெற்று நடப்பதாகவே கருதப்பட வேண்டும்.

உங்கள் பணிவுள்ள ஊழியன்,
எச். ஐயங்கார்,
பம்பாய் அரசாங்கக் காரியதரிசி, உள் துறை இலாகா.

## 124

"தில்குஷா" பஞ்சகனி
9-7-1944

பம்பாய் அரசாங்கக் காரியதரிசி,
உள் துறை இலாகா.
புனா.

ஐயா,

ஸ்ரீ மகாதேவ தேசாய், ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி ஆகியோரின் உடல்கள் தகனம் செய்யப்பட்ட இடமான ஆகா கான்

மாளிகையின் தோட்ட சம்பந்தமாக நீங்கள் 7ஆம் தேதி எழுதிய கடிதம் எனக்குக் கிடைத்தது. தற்போதைய ஏற்பாட்டின்மூலம் எனது நோக்கம் நிறைவேறியிருக்கிறது. இதற்காக அரசாங்கத்திற்கு நான் நன்றி செலுத்துகிறேன்.

தங்கள்,
மோ. க. காந்தி

## 125

"மொரார்ஜி காஸில்"
மஹாபலேசுவர்,
*27—5—1945*

பம்பாய் அரசாங்கக் காரியதரிசி,
உள்துறை இலாகா,
பம்பாய்.

அன்புள்ள ஐயா,

சிறை முகாமிலிருந்து 6–5–1944-இல் நான் எழுதிய கடிதத்தைப்பற்றி உங்களுக்கு நினைவூட்டுகிறேன்.

காலஞ்சென்ற எனது மனைவி, ஸ்ரீ மகாதேவ தேசாயின் சமாதிகளுக்கு நண்பர்களும் உறவினர்களும் போவதன் சம்பந்தமாக சமீப காலம்வரையிலும் யாதொரு சிக்கலும் ஏற்படவில்லை. ஆனால் சமீபத்தில் ஒரு சிக்கல் ஏற்பட்டது. சாமர்த்தியமாக நடந்து கொண்டதால், முன்பு நிர்ணயம் செய்யப்பட்ட நேரங்களில் பிரார்த்தனை செய்வது சாத்தியமாக இருந்தது. ஆகா கான் மாளிகையை ராணுவத்தினர் ஆக்கிரமித்துக் கொள்ளப்போவதாக இப்போது ஒரு வதந்தி நிலவி வருகிறது. அப்படியாயின், சமாதிகள் இருக்குமிடத்தில் பிரார்த்தனை அனுமதிக்கப்படாமற் போகலாம். இந்த பயத்திற்கு முற்றிலும் ஆதாரமில்லை என்று மாத்திரமே நான் நம்ப முடியும்.

6–5–1944-இல் நான் அரசாங்கத்திற்கு எழுதிய கடிதத்தில், எனது வாதத்தை எழுத்துமூலம் அறிவித்திருந்தேன். நான் கூறியிருந்தது இதுதான்: "ஸ்ரீ மகாதேவ தேசாயின் உடலும், பின்னர் எனது மனைவியின் உடலும் தகனமான இடத்தை வேலி கட்டித் தடுத்திருக்கிறார்கள். அது இப்போது ஒரு புனிதமான பிரதேசமாகியிருக்கிறது. கைதிகள் கோஷ்டியினர், தினந்தோறும் அந்த இடத்திற்கு இரண்டு தடவை சென்று, காலஞ்சென்றவர்களுக்கு புஷ்பாஞ்சலி சமர்ப்பித்து பிரார்த்தனையும் செய்துவந்தார்கள். அந்த இடத்தை அரசாங்கம் ஆர்ஜிதம் செய்து, ஆகா கான் மாளிகைத் தோட்டத்தின் வழியாகச் செல்லுவதற்கு உரிமையளிக்கும் என்று நம்புகிறேன். அப்படிச் செய்

தால், அந்த இடத்திற்கு உறவினர்களும் நண்பர்களும் தங்கள் விருப்பப்படி எப்போது வேண்டுமாயினும் செல்லுவதற்கு வசதியாக இருக்கும்."

மேற்கண்ட எனது கோரிக்கைக்குப் பின் வருமாறு பதில் கிடைத்தது :

"நில ஆர்ஜித சட்டப்படி அதை அரசாங்கம் நிர்ப்பந்தப்படுத்தி ஆர்ஜிதம் செய்து கொள்வது சட்டபூர்வமாக முடியாத காரியமாகும். இவ்விஷயம், உங்களுக்கும் ஆகா கானுக்கும் இடையே சமரசமாக முடிவு செய்து கொள்ள வேண்டியதாகும் என்று அரசாங்கம் கருதுகிறது. இருந்தாலும் உங்களுடைய வேண்டுகோள் ஆகா கானுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது. இப்போது அது அவரது ஆலோசனையில் இருந்து வருகிறதென்று தெரிகிறது. எனினும் இதன் மத்தியில், ஸ்ரீமதி காந்தி, ஸ்ரீ மாகதேவ தேசாயின் உறவினர்களும் நீங்கள் குறிப்பிடும் மற்றவர்களும் அரண்மனைத் தோட்டத்தின் வழியாக தகனம் நடந்த இடத்திற்குச் செல்ல ஆகா கானுக்கு ஆட்சேபணை இல்லை என்று அரசாங்கம் அறிகின்றது. ஆனால் இது ஆகா கானின் அனுமதியும் உத்தரவும் பெற்று நடப்பதாகவே கருதப் படவேண்டும்."

அந்த அரண்மனையை யார் ஆக்கிரமித்துக் கொண்டாலும் அது யாருடைய வசமிருந்தாலும், இரண்டு சமாதிகளும் உள்ள புனிதமான இடம் பாதுகாக்கப்பட்டுவரும் என்றும், அந்தக் குடும்பங்களின் நண்பர்களும் உறவினர்களும் வந்து பிரார்த்தனை செய்வதற்கு ஒதுக்கி வைக்கப்படும் என்றும் நம்புகிறேன்.

தங்கள்,
மோ. க. காந்தி

## 126

உள்துறை இலாகா (அரசியல்),
சட்டசபை மண்டபம், புனா, 23-7-45

பம்பாய் அரசாங்கக் காரியதரிசியிடமிருந்து,
உள்துறை இலாகா.

ஐயா,

27-5-1945-இல் நீங்கள் எழுதிய கடிதத்திற்கு பதில் அனுப்பும்படி எனக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது. ஆகா கான் மாளிகையில் ஸ்ரீ மகாதேவ தேசாயும் ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தியும் தகனம் செய்யப்பட்ட இடத்தில் உள்ள சமாதிகளைப் பாதுகாக்கும் விஷயமாகவும், பிரார்த்தனைக்கு அந்தப் பிரதேசத்தை ஒதுக்கிவைப்பதன் சம்பந்தமாகவும் நீங்கள் அக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தீர்கள். அதன் சம்பந்தமாக, ராணுவ அதிகாரிகள் அரண்மனையை ஆக்கிரமித்துக் கொள்வதற்கு முன் பல மாதங்

களாக அமலில் இருந்துவரும் ஏற்பாட்டைத் தொடர்ந்து வர ராணுவ அதிகாரிகள் இசைந்திருக்கிறார்கள். அதாவது, சமாதிகள் இருக்கும் பிரதேசத்திற்கு ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் உறவினர்களும் நண்பர்களும் சென்று பிரார்த்தனை செய்யலாம் என்பதே அந்த ஏற்பாடாகும்.

ஞாயிற்றுக் கிழமையைத் தவிர மற்ற நாட்களில் யாராவது அப்பிரதேசத்திற்குச் செல்ல விரும்பினால் அவர்கள், ஜெனரல் பெண்டிங், கமாண்டர், 36 டிவிஷன் என்ற விலாசத்திற்கு விண்ணப்பம் செய்து கொள்ளவேண்டும். ஜெனரல் பெண்டிங் ஆகா கான் மாளிகையிலேயே வசிக்கிறார்.

உங்கள் பணிவுள்ள ஊழியன்,
ஜி. ஜி. ட்ரு
பம்பாய் அரசாங்கக் காரியதரிசி,
உள்துறை இலாகா.

# அரசாங்கத்துக்கு காந்திஜியின் கடிதங்கள்

## (1944-47)

## இரண்டாம் பாகம்

தமிழாக்கம் :
ஜெயமணி சுப்பிரமணியம்

# முன்னுரை

1944 மே மாதம் சிறை முகாமிலிருந்து நாங்கள் விடுதலை அடைந்ததும், காந்திஜிக்கும் அரசாங்கத்திற்கும் நடந்த கடிதப் போக்குவரத்து அடங்கிய ஒரு நூலை வெளியிட நான் ஏற்பாடுகள் செய்தேன். காந்திஜியின் கட்டளைக்கு இணங்கவே அம்முயற்சியில் நான் ஈடுபட்டேன். காந்திஜி அப்போது 21 மாதங்கள் வரையில் சிறையில் இருந்தார். அக்காலத்தில் நடந்த கடிதப் போக்குவரத்தே அதில் அடங்கியிருந்தது. "அரசாங்கத்துடன் காந்திஜியின் கடிதப் போக்குவரத்து 1942-44" என்ற தலைப்பின் கீழ் அது வெளியிடப்பட்டது. சமீபத்தில் வெளியான "மகாத்மா காந்தி-இறுதிக் கட்டம்" என்ற புத்தகத்தை நான் எழுதிக் கொண்டிருந்தபோது, "இறுதிக் கட்டம்" குறிப்பிடும் காலத்தில் நடந்த கடிதப் போக்குவரத்தையும் வெளியிட வேண்டும் என்று நான் கருதினேன். அதன் பலனாகவே இந்த நூல் வெளியாகிறது.

முந்திய பாகத்தில் எங்கே விடப்பட்டதோ அதிலிருந்து அதாவது 1943 மே மாதம் காந்திஜி விடுதலை அடைந்ததிலிருந்து இது தொடருகின்றது. 1947 ஆகஸ்டு 15-ஆம் தேதி சுதந்திரம் உதயமான வரையில் நடந்த கடிதப் போக்குவரத்து இந்த நூலில் அடங்கியிருக்கிறது. அந்தத் தேதிக்குப் பிறகும் சில பிரிட்டிஷ் பிரமுகர்களும் காந்திஜியும் பரஸ்பரம் எழுதிய ஒரு சில கடிதங்களும் இதில் இடம் பெற்றிருக்கின்றன. அந்தப் பிரமுகர்கள், இந்தியாவினிடம் நிர்வாக அதிகாரத்தை மாற்றுவதன் சம்பந்தமாக நடந்த நாடகத்தில் முக்கிய பாத்திரங்களாக விளங்கியவர்கள் ஆவர்.

காந்திஜி பல்வேறு அலுவல்களில் ஈடுபட்ட பெரியாராகத் திகழ்ந்தார். அவர் ஒரு துறையில் அல்ல, ஏக காலத்தில் பற்பல துறைகளிலும் ஈடுபட்டுத் தமது கடமைகளைச் செய்தார். உதாரணமாக, அவர் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பிரதிநிதிகளுடன் சமரசப் பேச்சு நடத்தி வந்த அதே சமயத்தில், உத்தியோக சம்பந்தமற்ற, வெவ்வேறு அலுவல்களிலும் ஈடுபட்டிருந்த பலருடனும் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டிருந்தார்; மற்றும் பொதுக் கூட்டங்களில் பேசியும், பத்திரிகைகளில் எழுதியும் தற்போதைய இந்திய சரித்திரத்தை உருவாக்கி வந்தார். "இறுதிக் கட்டம்" என்ற நூலின் இரண்டு பாகங்களும் குறிப்பிடும் காலத்தில் காந்திஜி மேற்கொண்ட அரசியல் அலுவல்களையெல்லாம் விவரிப்பதாயின் அதற்கு ஒரு பாகம் போதாது, பல பாகங்கள் தேவையாக இருக்கும்.

பிரிட்டிஷ் அரசாங்கப் பிரதிநிதிகளுடன் காந்திஜி நடத்திய கடிதப் போக்குவரத்து மாத்திரமே இந்தத் தொகுப்பில் கொடுக்

கப்பட்டிருக்கிறது. இந்திய அரசாங்கத்திலும் மாகாண அரசாங்கங்களிலும் உள்ள பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மந்திரிகளுடன் காந்திஜி நடத்திய கடிதப் போக்குவரத்து இந்த நூலில் இடம் பெறுவதற்கில்லை. மிகவும் சுவையான, மதிப்புமிக்க அக் கடிதங்கள் வேறு ஒரு தனி நூலாகத்தான் வெளியாக வேண்டும். காங்கிரசிலும் எதிர்க் கட்சிகளிலும் இருந்த தேசீயத் தலைவர்கள், சகாக்கள், சக ஊழியர்கள், பல்வேறு துறைகளிலும் உள்ள நண்பர்கள் முதலியோருக்கும் காந்திஜிக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தும் அந்த நூலில் சேர்க்கப்பட வேண்டும். சந்தர்ப்பம் கிடைக்குமாயின், நான் திரும்பவும் அந்தக் கடமையை மேற்கொள்ளலாம்.

காந்திஜியின் வாழ்க்கையிலேயே அதுதான், மகத்தான சூறாவளிகள் நிறைந்த ஒரு காலமாகும். இந்தியாவின் சரித்திரத்திலும் அது கடுமையான ஒரு சோதனைக் காலமாக அமைந்தது. இந்தக் காலத்தில் காந்திஜி நடத்திய கடிதப் போக்குவரத்திலிருந்து, இந்தியாவின் சுதந்திரத்திற்குக் காரணமாக இருந்த சிக்கலான சமரசப் பேச்சுக்களைத் தெரிந்து கொள்ளலாம். அக்கடிதங்களில் பெரும்பாலானவையும் இதுவரையில் பிரசுரிக்கப்படாதவை. எனவே, அவற்றிற்குத் தனி முக்கியத்துவம் உண்டு. காந்திஜியின் மனமும், சமரசப் பேச்சுவார்த்தைகளில் ஈடுபட்டிருந்த பிரிட்டிஷ் ராஜதந்திரிகளின் மனமும் எந்த ரீதியில் வேலை செய்து வந்தன என்பதை இதில் அடங்கியுள்ள கடிதங்கள் எடுத்துக் காட்டுகின்றன. ஆதலால் காந்திஜியின் வாழ்க்கையையும், இந்தியாவின் இக்காலத்திய சரித்திரத்தையும் ஆராய்ச்சி செய்வோருக்கு, இந்த நூல் மிக மிக முக்கியமானது என்பதில் ஐயமில்லை. இதில் அடங்கியுள்ள சில கடிதங்களைப் பெருமுயற்சி செய்தே சேகரிப்பது சாத்தியமாயிற்று.

லார்டு பெதிக் லாரென்ஸ், லார்டு மவுண்ட்பாட்டன், ஸ்ரீ ஆர். ஜி. கேஸி, சர் பிரடரிக் பர்ரோஸ், சர் ஹியூ டோ ஆகியோரின் கடிதங்களை இதில் சேர்க்க அவர்கள் அனுமதி கொடுத்ததற்காக அவர்களுக்கு நன்றி செலுத்துகிறேன். காலஞ் சென்ற சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ், லார்டு வேவல் இவ்விருவரின் கடிதங்களையும் இதில் சேர்க்க முறையே கிரிப்ஸ் சீமாட்டியும், லார்டு வேவலின் புதல்வரும் அனுமதி அளித்ததற்காக அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும். இந்த நூலைத் தொகுக்க வசதிகள் அளித்ததற்காக நவஜீவன் டிரஸ்ட் ஸ்தாபனத்திற்கும் நான் நன்றியுள்ளவனாக இருக்கிறேன்.

புது டில்லி,
புது வருட ஆரம்பம், 1959 — பியாரிலால்.

# முகவுரை

காந்திஜியின் உடல் நலம் குன்றியதன் காரணமாக, 1944 மே 6-ஆம் தேதி காந்திஜி திடீரென்று சிறையிலிருந்து விடுதலை யானார். அரசாங்கத்தின் அடக்கு முறை அப்போது உச்ச நிலையை அடைந்திருந்தது. "இந்தியாவை விட்டு வெளியேறுக" என்ற போராட்டத்தின் ஆரம்பத்தில் இருந்த விறுவிறுப்பு அப்போது பெரிதும் குன்றியிருந்தது. சிறைகளெல்லாம் சட்ட மறுப்பாளர் களால் நிறைந்திருந்தன. அநேகமாக முக்கியமான காங்கிரஸ் தலைவர்கள் யாவரும் சிறையில் இருந்தனர். தலைமறைவாக இருந்த ஒரு சில ஊழியர்களே இயக்கத்தை நடத்திவந்தார்கள்.

1942 ஆகஸ்டு 8-இல் நிறைவேறிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானம் அந்தப் போராட்டத்தை ஆரம்பிக்கும்படி கூறவில்லை. கௌரவமான சமரசத்திற்கான முயற்சிகள் யாவும் தோல்வி அடையுமாயின், ஒரு போராட்டத்தை ஆரம்பிக்கும்படி அத்தீர்மானம் காந்திஜிக்கு அதிகாரம் அளித்தது; அவ்வளவு தான். அந்த நோக்கத்துடன், அதாவது கௌரவமான சமரசம் செய்து கொள்ளும் நோக்கத்துடன் வைஸ்ராய் லார்டு லின்லித் கோவைத் தாமதமின்றி பேட்டி காண முயற்சிப்பதாக காந்திஜி அறிவித்திருந்தார். ஆனால், ஆகஸ்டு 9 விடியற்காலையில் காந் திஜியையும் மற்ற காங்கிரஸ் தலைவர்களையும் அதிகாரிகள் கைது செய்துவிட்டார்கள். இயக்கத்தின் தலைவர் கைது செய்யப்பட் டால் அவரது ஸ்தானத்திற்கு வேறொருவரை நியமிப்பது பற்றி அ. இ. கா. கமிட்டித் தீர்மானம் எதுவும் குறிப்பிடவில்லை. ஒவ் வொருவரும் தமக்குத் தாமே தலைவராக இருந்து கொண்டு, சத்தியத்திற்கும் அகிம்சைக்கும் முரணின்றி அவரவருக்கு எது சிறந்ததென்று தோன்றுகிறதோ அவ்விதம் செயல்பட வேண்டும் என்றே அந்தத் தீர்மானம் கூறியது. எனவே, "இந் தியாவிலிருந்து வெளியேறுக" என்ற தீர்மானத்திற்கு இணங்க போராட்டம் ஒழுங்கான முறையில் ஆரம்பிக்கப்படவேயில்லை. எனினும், தலைவர்கள் கைது செய்யப்பட்டதைத் தொடர்ந்து தலைவர்கள் இல்லாத பாமர மக்கள், அரசாங்கத்தின் காட்டு மிராண்டித் தனமான அடக்கு முறைகளால் தூண்டப்பட்டு தாங் களாக வெறிகொண்டு எழுந்தனர் என்பதே காந்திஜியின் அபிப் பிராயமாகும்.

காந்திஜி விடுதலை அடைந்ததும், மிகவும் சங்கடமான, குழப் படியான ஒரு நிலையில் தாம் இருப்பதைக் கண்டார். காங்கிரஸ் ஸ்தாபனத்தில் அவருக்கு உத்தியோக தோரணையில் அந்தஸ்து எதுவும் இல்லை. 1934-லிருந்து அவர் காங்கிரசில் சாதாரண ஓர் அங்கத்தினராகக் கூட இல்லை! சில நிபந்தனைகளின் கீழ் போராட் டத்தை ஆரம்பிக்க ஆகஸ்டு 8-ஆம் தேதி நிறைவேறிய அ. இ. கா.

கமிட்டித் தீர்மானம் அவருக்கு அதிகாரம் அளித்தது. அவர் சிறைப்பட்டுவிட்டதால், அந்த அதிகாரம் காலாவதியாகிவிட்டது. (ஒரு சத்தியாக்கிரகி சிறை சென்றால், சத்தியாக்கிரக விதிகளின்படி அவர் எல்லா உரிமைகளையும் இழந்தவராகிவிடுகிறார்.) எனவே, காந்திஜியும் தாம் விடுதலை அடைந்ததும், ஏற்கனவே அ. இ. கா. கமிட்டி அளித்த அதிகாரத்தைத் தாம் மேற்கொள்ள உரிமையில்லை என்று கருதினார். அவர் சில பிரபல சட்ட நிபுணர்களைக் கலந்து ஆலோசித்தபோது, அவர்களும் காந்திஜியின் அபிப்பிராயத்தை உறுதி செய்தனர்.

ஒரு குறிப்பிட்ட கட்டளையை நிறைவேற்றுவதற்காகவே காந்திஜி தளபதியாக நியமிக்கப்பட்டார். பின்னர் நிகழ்ந்த சம்பவங்கள் காரணமாக அந்தக் கட்டளையை அமலுக்குக் கொண்டு வர முடியாமற்போய்விட்டது. அதன் சம்பந்தமான விதிகளை மாற்ற அவருக்கு அதிகாரம் இல்லை. காங்கிரஸ் காரியக் கமிட்டியினால் மாத்திரமே அவருக்கு மறுபடியும் புதிதாக அதிகாரம் அளிக்க முடியும். ஆனால், காரியக் கமிட்டி அங்கத்தினர்களோவெனில், அப்போது சிறையில் இருந்தனர். அவர்களைக் கண்டு பேசவும் காந்திஜி அனுமதிக்கப்படவில்லை.

இந்தச் சூழ் நிலையில்தான் வைஸ்ராய் லார்டு வேவலுக்கு காந்திஜி முதன் முதலாகக் கடிதம் எழுதினார். அப்போது லார்டு லின்லித்கோ ஸ்தானத்தில் லார்டு வேவல் வைஸ்ராயாக நியமிக்கப்பட்டிருந்தார். ஏற்கனவே ஒரு கைதி என்ற முறையில் காந்திஜி காரியக் கமிட்டி அங்கத்தினர்களைக் கண்டு பேச அனுமதிக்கப்படவில்லை. விடுதலையான பின் ஒரு சுதந்திர மனிதன் என்ற முறையில் காரியக் கமிட்டி அங்கத்தினர்களைப் பார்க்க அனுமதிக்க வேண்டும் என்று, லார்டு வேவலுக்கு எழுதிய முதல் கடிதத்தில் காந்திஜி மீண்டும் கேட்டுக் கொண்டிருந்தார். அவர்களுடைய மன நிலையை அறிந்துகொள்ளாமல் அரசியல் நெருக்கடியைத் தீர்க்கும் விஷயமாக காந்திஜி எதுவும் செய்ய முடியாது அல்லவா?

ஆனால், காந்திஜி கோரிய அனுமதி அவருக்கு அளிக்கப்படவில்லை. எனவே அரசியல் முட்டுக்கட்டை நீடிக்கலாயிற்று.

இந்தக் கட்டத்தில், "நியூஸ் கிரானிகிளை"ச் சேர்ந்த ஸ்டுவர்ட் கெல்டர் மேடையில் பிரவேசித்தார். அவர் காந்திஜியைப் பேட்டி கண்டு பின்வருமாறு கேட்டார்: "தாங்கள் கோருகிறபடி வைஸ்ராய் தங்களுக்கு அனுமதி அளித்தால், சட்ட மறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்க தாங்கள் காரியக் கமிட்டியிடமிருந்து மீண்டும் அதிகாரம் பெறுவதற்காக அந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்துக்கொள்ளலாம். எனவே, வைஸ்ராய் தங்கள் கோரிக்கையை அனுமதிக்க மறுப்பது நியாயம்தான் அல்லவா?"

ஸ்டுவர்ட் கெல்டருக்குப் பதில் அளிக்கையில் காந்திஜி கூறியதாவது: "மறுபடியும் சட்ட மறுப்பு செய்வதற்கான அதிகாரத்தைப் பெறவேண்டும் என்ற உத்தேசம் எனக்கு

இல்லை. 1944-ஆம் ஆண்டு 1942 அல்ல. எனவே, திரும்பவும் நாட்டை 1942-ஆம் ஆண்டுக்கு இட்டுச் செல்ல முடியாது என்பதை நான் உணர்ந்திருக்கிறேன். அரசாங்கத்தை தர்ம சங்கடமான நிலைமைக்கு உள்ளாக்க வேண்டும் என்பதற்காக, நான் ஒரு சத்தியாக்கிரகி என்ற முறையில், மீண்டும் சட்ட மறுப்பை ஆரம்பிக்க விரும்புவது முடியாத காரியம்."

ஆனால், யுத்தம் நடந்துகொண்டிருக்கும் போது, இந்தியாவில் தங்களுக்குள்ள பிடியைத் தளர்த்தக்கூடாது என்பதில் அதிகாரிகள் உறுதியுடன் இருந்தனர்.

அந்தக் கொள்கையின் மூலகர்த்தா, பிரிட்டிஷ் பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சிலே என்பதை எல்லோரும் நன்கு அறிந்திருந்தனர். சாத்தியமாயின், அவரது இதயத்தைத் தொடுவதற்காக காந்திஜி தமக்கே உரித்தான முறையில் அவருக்கு (வின்ஸ்டன் சர்ச்சிலுக்கு) சொந்த முறையில் ஒரு கடிதம் எழுதியிருந்தார். தம்மீதுள்ள அவநம்பிக்கையை விட்டுவிடும் படியும், "உங்களுடைய நாட்டின் நன்மைக்காகவும் எனது நாட்டின் நன்மைக்காகவும் இந்த 'அரை நிர்வாணப் பக்கிரியை' உபயோகித்துக் கொள்ளுங்கள்" என்றும் காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

அதற்கு சர்ச்சில் அளித்திருந்த பதிலில், காந்திஜியின் கடிதம் தமக்குக் கிடைத்தது என்று மரியாதையுடன் அறிவித்திருந்ததைத் தவிர வேறு எதுவும் இல்லை. ஓர் ஆங்கில நண்பரான அகாதா ஹாரிசனுக்கு காந்தி எழுதிய கடிதத்தில் வருத்தத்துடன் இவ்விதம் குறிப்பிட்டிருந்தார்: "நான் எதைத் தொட்டாலும் அது மண்ணாகிவிடுகிறது. எனினும், எனக்கு நம்பிக்கை இருக்கிறது."

யுத்தத்தின் போக்கு நேச தேசங்களுக்குச் சாதகமாகத் திரும்பவே, பிரிட்டிஷாரின் மனத்தில் வேறுவிதமான ஆலோசனைகள் இடம் பெறலாயின. ஐரோப்பாவில் ஜெர்மனி தோல்வி அடைந்த பிறகுகூட, ஜப்பானை அடியோடு முறியடிக்க குறைந்த பட்சம் மேற்கொண்டு இரண்டு வருடங்களாவது செல்லும் என்பதை அவர்கள் உணர்ந்தனர். அதனால் இந்தியாவின் பளு மேற்கொண்டு அதிகமாகியே தீரும் என்பதை, இங்கே நேரில் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்த லார்டு வேவல் உணர்ந்தார். எனவே, கீழ்த் திசைகளில் நேச நாடுகளின் போர் நடவடிக்கைகளுக்கு இந்தியாவே முக்கிய தளமாக இருக்கும் என்பதையும், ஆகையால் முன்னரைக் காட்டிலும் அதிகமாக இந்தியாவில் உள்ள பல்வேறு அரசியல் கட்சிகளின் மனப்பூர்வமான ஒத்துழைப்பைப் பெறவேண்டியது அவசியம் என்பதையும் அவர் அறிந்தார். மற்றொரு பஞ்சம் தேசத்தை ஆட்கொள்ளலாம் என்ற நிலைமையும் அப்போது இருந்தது. யுத்தத்திற்குப் பிறகு ஏற்படும் பயங்கரமான பல பிரச்னைகளும் உருவாகத் தொடங்கின. இதைத் தவிர, யுத்தம் முடிவடைந்ததும் இந்தியாவை

அவசரச் சட்டத்தின்கீழ் என்றென்றும் ஆட்சி புரிவதும் முடியாத காரியமாகிவிடும். எனவே புத்திசாலித்தனமான ஒரே வழி என்னவெனில், எதிர்கால சம்பவங்களை ஊகித்து மத்திய அரசாங்கத்தில் பொதுஜனப் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு கூட்டு அரசாங்கத்தை அமைப்பதேயாகும் என்பதையும் லார்டு வேவல் உணர்ந்தார்.

அதற்கிணங்க, 1944-ஆம் ஆண்டின் இறுதியில் இந்தியா அசெம்பிளியில் காங்கிரஸ் கட்சியின் தலைவராக இருந்த புலாபாய் தேசாயை லார்டு வேவல் சந்தித்தார்; காங்கிரஸ், முஸ்லிம் லீக் பார்லிமெண்டரி கட்சிகள் சேர்ந்து இந்திய தேசீய அரசாங்கத்தை அமைக்குமாயின் அதைத் தாம் வரவேற்பதாகவும் கூறினர். அதன்மீது புலாபாய், இந்தியா அசெம்பிளியில் முஸ்லிம் லீக் கட்சியின் உபதலைவரான லியாகத் அலிகானைச் சந்தித்துப் பேசினர். அதன் பயனாக புலாபாய்-லியாகத் அலி உடன்படிக்கையும் ஏற்பட்டது. எனினும், இறுதியில் அம்முயற்சி வெற்றிபெறவில்லை. ஆனால் அந்த ஒப்பந்தம், அரசியல் முட்டுக்கட்டையைத் தீர்க்க வைஸ்ராய் மற்றொரு தடவை முயற்சி செய்வதற்கான அஸ்திவாரமாக அமைந்தது.

இதன் மத்தியில் லார்டு வேவல் பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடம் தமது அபிப்பிராயத்தை இடைவிடாது வற்புறுத்தி வந்தார். 1945 ஜூன் மாதம் அவர் லண்டனுக்குச் சென்று பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் கலந்து ஆலோசித்துவிட்டு வந்தார். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சம்மதத்தின் மீது அவர் தமது விருப்பப்படி பல்வேறு கட்சிகளையும் சேர்ந்த பிரதிநிதிகள் அடங்கிய ஒரு மகாநாட்டைக் கூட்டினர். இந்தியாவில் பல்வேறு கட்சிகளையும் சேர்ந்த பிரதிநிதிகள் அடங்கிய இந்திய அரசாங்கத்தை அமைக்க வேண்டும் என்பதே அவரது நோக்கமாகும். அதே சமயத்தில், காரியக் கமிட்டி அங்கத்தினர்களை விடுதலை செய்யும்படியும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. "இரண்டு முக்கிய அரசியல் கட்சிகளின் தலைவர்கள் என்று அங்கீகரிக்கப்பட்ட" காந்திஜியும் ஜின்னவும் மகாநாட்டுக்கு அழைக்கப்பட்டிருந்தனர்.

ஆனல், காங்கிரஸ் அக்கிராசனரை மகாநாட்டிற்கு அழைக்கவில்லை. அவ்விதம் அழைக்காததை காந்திஜி கடுமையாக ஆட்சேபித்தார். காங்கிரஸ் அங்கிராசனரைத் தவிர வேறு யாரும் காங்கிரசின் பிரதிநிதியாக இருக்க முடியாது என்றும், தாம் சொந்த முறையில்தான் மகாநாட்டில் கலந்துகொள்ள முடியும் என்றும் காந்திஜி வைஸ்ராய்க்கு எழுதினர். பின்னர் காங்கிரஸ் அக்கிராசனரை அழைக்க வைஸ்ராய் இசைந்தார். வைஸ்ராயின் வேண்டுகோளுக்கு இணங்க, உத்தியோகப் பற்றற்ற ஓர் ஆலோசனையாளராக மகாநாட்டிற்கு வர காந்திஜியும் சம்மதித்தார்.

மகாநாட்டைப் பற்றி வைஸ்ராய் வானொலிமூலம் பேசிய போது, அமைக்க உத்தேசிக்கப்பட்டிருக்கும் தேசீய அரசாங்கத்தில் சாதி ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் சமமான ஸ்தானங்கள் அளிக்கப்படும் என்று குறிப்பிட்டார். ஹிந்து சமூகத்திலிருந்து தாழ்த்தப்பட்ட வகுப்பினரைத் தனியாகப் பிரித்து 1932-இல் பிரிட்டிஷ் பிரதம மந்திரி ராம்சே மெக்டொனல்டு செய்த தீர்மானத்தை எதிர்த்தே, அப்போது சிறையில் இருந்த காந்திஜி இறக்கும்வரை உண்ணவிரதம் இருப்பதென்று முடிவு செய்தார். அதன் பலனாகவே, அந்தத் தீர்மானம் ரத்தாகியது. ஆனால் இந்தியா சுதந்திரம் பெறும் தறுவாயில், அதே கொள்கை "சாதி ஹிந்து-முஸ்லிம் சம அந்தஸ்து" என்ற உருவெடுத்திருப்பதை காந்திஜி உணர்ந்தார்; அது தேசத்தைப் பிளப்பதற்கான அடிப்படையாக அமையும் என்பதையும் கண்டார்.

எனவே, அம்மகாநாட்டில் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ள காந்திஜி மறுத்துவிட்டார். அவ்விதமே காங்கிரசும் மகாநாட்டில் கலந்துகொள்ள மறுத்துவிட வேண்டும் என்று ஆலோசனை கூறினார்; மகாநாட்டில் காங்கிரஸ் கலந்துகொண்டால், சாதி ஹிந்துக்கள் வேறு, முஸ்லிம்கள் வேறு என்ற கொள்கையை அங்கீகரித்ததாகிவிடும் என்றும் குறிப்பிட்டார். எனினும், மகாநாட்டில் கலந்துகொள்ள இசைவது, எந்தக் கொள்கையையும் அங்கீகரித்ததாகாது என்றும், வைஸ்ராயின் ஆலோசனைகளில் எதையும் அங்கீகரிக்கவோ அல்லது நிராகரிக்கவோ காங்கிரசுக்கு சுதந்திரம் உண்டு என்றும் வைஸ்ராய் விளக்கினார்.

ஆனால், சிம்லாவில் மகாநாடு கூடியபோது, சம அந்தஸ்துக் கொள்கைக்குத் தாங்கள் கட்டுப்பட்டிருப்பதாக காங்கிரஸ் தலைவர்கள் கூறியது காந்திஜிக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. இருந்தாலும், ஹிந்துக்கள் தங்களுக்கு சம அந்தஸ்து கோராமல் சிறுபான்மை வகுப்புகளைச் சேர்ந்த பெரும்பாலோரை தங்கள் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுப்பதன்மூலம் வைஸ்ராயின் திட்டத்தை பலனற்றதாகச் செய்துவிடலாம் என்றும், அதன் மூலம் தான் உண்மையான தேசீய ஸ்தாபனம் என்பதையும், ஜின்னா கூறுவதுபோல் காங்கிரஸ் ஹிந்து ஸ்தாபனமோ அல்லது சாதி ஹிந்து ஸ்தாபனமோ அல்ல என்பதையும் உறுதி செய்யலாம் என்றும் காந்திஜி கூறினார். ஆனால், அரசியல் லாபத்தையே முக்கியமாகக் கருதிய காங்கிரஸ் தலைவர்கள் காந்திஜியின் ஆலோசனைக்கு செவி சாய்க்கவில்லை. அதன் விளைவாக முஸ்லிம்களின் சம அந்தஸ்துக் கொள்கை நிலைத்துவிட்டது. பின்னர் அந்த விபரீதம் காங்கிரசுக்கு இடைவிடாத முட்டுக் கட்டையாக அமைந்ததுடன், இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு வேறு வழியின்றி இந்தியாவின் பிரிவினையிலும் வந்து முடிந்தது.

முஸ்லிம் லீக் சமர்ப்பிக்கும் பெயர்களிலிருந்தே தேசீய சர்க்காரில் இடம்பெறும் முஸ்லிம்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும்

என்று ஜின்னு வற்புறுத்தியதால் சிம்லா மகாநாடு முறிந்தது. எனவே மகாநாட்டின் லட்சியம் நிறைவேறவில்லை என்று கூறி வைஸ்ராய் அதைக் கலைத்துவிட்டார். "எந்த ஒரு கட்சியின் பிடிவாதமும் மகாநாட்டிற்கு முட்டுக்கட்டையாக இருக்க அனுமதிக்கமாட்டோம்" என்று ஆரம்பத்தில் கூறிய வைஸ்ராய் அதை மறுத்து, மகாநாடு தோல்வியுற்றதற்குத் தாமே பொறுப்பாளி என்று கூறிக் குற்றத்தைத் தம் தலையில் சுமத்திக்கொண்டார். "திருப்தியும் நம்பிக்கையும் அளிக்கக்கூடிய விதத்தில் ஆரம்பமான மகாநாடு, தோல்வியில் முடிந்ததை நினைக்க நான் மிகவும் வருந்துகிறேன். குற்றத்தை உங்கள்மீது சுமத்திக் கொண்டிருக்கிறீர்கள் என்றாலும், உலகம் வேறுவிதமாகவே நினைக்கும்; இந்தியா நிச்சயமாக வேறுவிதமாகவே நினைக்கிறது" என்று காந்திஜி லார்டு வேவலுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் குறிப்பிட்டிருந்தார்.

அதிகார வர்க்கத்தின் போக்கில் ஏற்பட்ட மாறுதல் காரணமாக நிலவிய புதிய சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொள்ள காந்திஜி முயற்சித்து வந்தார்; அரசாங்கத்தின் அடக்கு முறைகளால் ஏற்பட்ட மனக் கசப்பை அரசாங்கத்தின் ஒத்துழைப்புடன் தீர்க்க முற்பட்டார். "இந்தியாவை விட்டு வெளியேறுக" என்று பிரிட்டிஷாருக்கு இறுதி எச்சரிக்கை விடுத்து ஆரம்பமான போராட்டத்தில் சம்பந்தப்பட்ட பலரையும் சிறையிலிருந்து விடுதலை செய்வது உள்பட பல பிரச்னைகளையும் வைஸ்ராயுடன் விவாதிக்கத் தொடங்கினர். அவர் எடுத்துக் கொண்ட பிரச்னைகளில் அடங்கியுள்ள ஜீவகாருண்ய அம்சம் ஒருபுறம் இருக்க, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அந்தரங்க சுத்தியையும் அவர் சோதனை செய்ய விரும்பினர்.

அந்தப் போராட்டத்தின் போது அரசாங்க அடக்கு முறையின் உக்ரத்தை வங்காளத்தைச் சேர்ந்த மிதுனபுரி சகித்துக்கொள்ள வேண்டியிருந்தது. போதாக் குறைக்கு அது பயங்கரமான சூறாவளிக் காற்றினாலும் சீரழிய நேர்ந்தது. வங்காளத்தில் ஏராளமானவர்கள் பாதுகாப்புக் கைதிகளாகவும் சிறைகளில் அடைக்கப்பட்டிருந்தனர். பயங்கர நடிவடிக்கைகளை அடக்குவதற்கென்று பிரகடனம் செய்யப்பட்டிருந்த பல்வேறு அவசரச் சட்டங்களின் கீழ் பல ஆண்டுகளாக அவர்கள் விசாரணையின்றி சிறைகளில் வைக்கப்பட்டிருந்தனர். எனவே, காந்திஜி வங்காளத்திற்குச் செல்ல வெகு காலமாக ஆர்வம் கொண்டிருந்தார். எனினும், வங்காள அரசாங்கம் ஒத்துழைக்க விரும்பாத வரையில் தாம் அங்கு செல்லுவதால் யாதொரு பலனும் ஏற்படுவதற்கில்லை என்று அவர் கருதினர்.

சிம்லாவில் லார்டு வேவல் கூட்டிய மகாநாட்டிலிருந்து காந்திஜி திரும்பி வந்துகொண்டிருந்த போது, அவருக்கு வங்காளத்திலிருந்து ஒரு தகவல் கிடைத்தது. அரசியல் வான நிலையில் மாறுதல் ஏற்பட்டிருப்பதால், வங்காளத்தில் யுத்த கால கவர்ன

ராக இருந்த ஆர். ஜி. கேஸி வங்காளத்திற்கு காந்திஜியை வர வேற்கத் தயாராக இருப்பதாயும், அதன் பலனை கவர்னரைச் சந்தித்துப் பேசவும் அவருக்குச் சந்தர்ப்பம் ஏற்படும் என்றும் அவருக்குத் தகவல் வந்தது. அதற்கிணங்க 1945-46-இல் காந்திஜி வங்காளத்திற்குச் சென்று தொடர்ந்து பல தடவை பல்வேறு விஷயங்களையும் பற்றி கவர்னர் கேஸியைச் சந்தித்துப் பேசினர். சிட்டகாங்கில் ராணுவத்தினர் செய்த அத்துமீறிய காரியங்கள், தேர்தல்களில் அதிகாரிகள் குறிப்பிட்டவர்களுக்குக் காட்டிய சலுகைகள் முதலியவற்றைப் பற்றியும் கவர்னருடன் காந்திஜி விவாதித்தார். பாதுகாப்புக் கைதிகளைக் காலவரையறையின்றி காவலில் வைத்திருப்பது பற்றியும், ஏழைகளை நசுக்கும் மோசமான உப்புவரி பற்றியும்கூட அவர்களுக்குள் சம்பாஷணை நடந்தது.

1945 மே மாதம் முதல் வாரத்தில் லார்டு வேவல் லண்டனில் இருந்தபோது ஜெர்மனி தோல்வியுற்றதால், ஐரோப்பாவில் யுத்தம் முடிவடைந்தது. ஆனல், ஜப்பான் யுத்தம் முடிவுறும் வரையில் கன்சர்வேடிவ் கட்சியினருடன் கூட்டு மந்திரி சபையில் தொடர்ந்து இருக்க தொழிற்கட்சியினர் விரும்பவில்லை. எனவே, பிரிட்டனில் யுத்த காலத்தில் அமைக்கப்பட்ட கூட்டு மந்திரி சபையைக் கலைத்துவிட்டு, ஜூலை 5-இல் பொதுத் தேர்தலை நடத்துவதென்று நிச்சயித்தனர்.

பின்னர் நடந்த பொதுத் தேர்தலில் கன்சர்வேடிவ் கட்சியினர் பெரும்பான்மையான ஸ்தானங்களைப் பெருததால், ஸ்ரீ அட்லியின் தலைமையில் தொழில் கட்சியினர் மந்திரி சபையை அமைத்தனர். யுத்தம் காரணமாக ஒத்திவைக்கப்பட்டுவந்த இந்திய, மாகாண சட்டசபைகளின் தேர்தல்களை நடத்தப் போவதாக 1945 ஆகஸ்டு மாதம் இந்திய அரசாங்கம் அறிவித்தது. வைஸ்ராய் மீண்டும் ஒரு முறை லண்டனுக்குச் சென்று திரும்பிவந்தபின் பின்வருமாறு அறிவித்தார்:

1. இந்தியா சட்டசபைக்கும், மாகாண சட்டசபைகளுக்கும் தேர்தல்கள் நடந்தபின், மாகாணங்களில் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களை மந்திரி சபை அமைக்குமாறு மீண்டும் அழைக்க வேண்டும் என்பதே பிரிட்டிஷ் அரசாங்கத்தின், வைஸ்ராயின் நோக்கமாகும்.

2. கூடிய விரைவில் அரசியல் திட்டத்தை உருவாக்கும் ஒரு சபையைக் கூட்ட வேண்டும்.

3. இந்தியாவில் உள்ள முக்கிய கட்சிகளின் ஆதரவுடன் வைஸ்ராய் நிர்வாக சபையை அமைக்க வேண்டும்.

பிரிட்டிஷாரின் மேற்கண்ட உறுதி மொழியில் இந்தியர்களுக்கு நம்பிக்கை ஏற்படும்படி செய்வதற்காக, 1945 டிசம்பரில் பிரிட்டனிலிருந்து பார்லிமெண்டரி கோஷ்டியொன்று இந்தியா

வுக்கு அனுப்பப்பட்டது. அந்த கோஷ்டியினர் இந்தியா முழுவதும் யாத்திரை செய்துவிட்டு, 1946 ஜனவரி மாதம் சென்னையில் காந்திஜியைச் சந்தித்தனர்.

1945-ஆம் வருட இறுதியில், போதிய விளைச்சல் இல்லாததால் தென்னிந்தியாவில் மற்றொரு பஞ்சம் ஏற்படக்கூடிய நிலைமை இருந்துவந்தது. பல்வேறு கட்சிகளும் ஒத்துழைத்தால் தான் அரசாங்கத்தினால் அதைத் திருப்திகரமாகச் சமாளிக்க முடியும் என்று தோன்றியது. எனவே எவ்விதம் எல்லாக் கட்சிகளும் ஒத்துழைக்கும்படி செய்யலாம் என்பதை விவாதிப்பதற்காக லார்டு வேவல் காந்திஜியை அழைத்திருந்தார். அப்போது காந்திஜியின் உடல்நிலை திருப்திகரமாக இராததால், அவர் டில்லிக்குப் பிரயாணம் செய்யக்கூடிய நிலையில் இல்லை எனவே, காந்திஜி கூறிய யோசனைக்கு இணங்க சேவா கிராமத்தில் காந்திஜியைச் சந்திப்பதற்காக வைஸ்ராய் தமது அந்தரங்கக் காரியதரிசியான ஸ்ரீ அபெல்லை அங்கே அனுப்பிவைத்தார்.

காந்திஜியும் ஸ்ரீ அபெல்லும் சந்தித்துப் பேசியபோது,மத்திய சட்டசபையில் உள்ள பல்வேறு கட்சிகளையும் சேர்ந்த அங்கத்தினர்கள் அடங்கிய பொறுப்புள்ள மந்திரி சபையை அமைத்தாலொழிய நிலைமை சீர்படாது என்று காந்திஜி கூறினர். அப்போது அதிகாரத்திலிருந்த பொறுப்பற்ற மந்திரி சபையை நீக்கிவிட்டு, அந்த ஸ்தானத்தில் கூடிய விரைவில் பொறுப்புள்ள மந்திரி சபையை நியமிக்க வேண்டும் என்று கூறினர். அவரது யோசனை ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இருந்தாலும், காந்திஜி தமது சொந்த முறையில் தொடர்ந்து அதிகாரிகளுக்கு யோசனை கூறிவந்ததுடன், அவர்களுடன் ஒத்துழைத்தும் வந்தார்.

1946 மார்ச்சு மாதம் ஸ்ரீ அபெல் பம்பாயில் காந்திஜியை மறுபடியும் சந்தித்துப் பேசினர். அவர் மூலம் வைஸ்ராய் காந்திஜிக்கு ஒரு யோசனை கூறியிருந்தார். வைஸ்ராயின் தலைமையில் காந்திஜி, ஜின்னா, சுதேச மன்னர்கள் சங்கத் தலைவரான போபால் நவாப் ஆகியோர் அடங்கிய ஓர் ஆலோசனைக் குழுவை அமைக்க வேண்டும் என்பதும், உணவுப் பிரச்னையைச் சமாளிக்க அந்தக் குழு தமக்கு உதவி புரிய வேண்டும் என்பதுமே வைஸ்ராயின் யோசனையாகும். அவ்விஷயமாக காந்திஜி தமது சங்கடமான நிலைமையை விளக்கிக் கூறினர். அதாவது ஜின்னா முஸ்லிம் லீகின் பிரதிநிதி என்றும், காங்கிரசில் தமக்கு உத்தியோகமுறையில் எவ்வித அந்தஸ்தும் இல்லை என்றும், சாதாரண காங்கிரஸ் ஊழியன் என்ற முறையில் காங்கிரஸ் அக்கிராசனருக்குப் புறம்பாக தாம் எதுவும் செய்வதற்கில்லை என்றும் காந்திஜி கூறினர். காங்கிரஸ் அக்கிராசனருக்கு அழைப்பு அனுப்பினாலும், அவருக்கு உதவியாக காந்திஜியும் கூட வருவது சாத்தியமா என்று ஸ்ரீ அபெல் காந்திஜியைக் கேட்டார், அவ்விதமே தாமும் வருவதாக காந்திஜி பதில் அளித்தார். எனினும், தமக்கும் ஸ்ரீ அபெல்லுக்கும் நடந்த பேச்சு வார்த்தை

களின் சாரத்தை எழுத்துமூலம் குறிப்பிட்டு, அதை ஸ்ரீ அபெல்லும் உறுதி செய்வதற்காக அவரிடம் அனுப்பினர். அபெல்லின் நிலைமை தர்ம சங்கடமாகியது. தாம் வைஸ்ராயின் பிரதிநிதி என்ற முறையில் சமரசப் பேச்சு நடத்துவதற்காக காந்திஜியிடம் வரவில்லை என்றும், வைஸ்ராயின் தூதராகவே வந்ததாயும் ஸ்ரீ அபெல் காந்திஜிக்கு விளக்கினர். எனவே ஸ்ரீ அபெல்லின் வேண்டுகோளுக்கு இணங்க, காந்திஜி, தங்களுக்குள் நடந்த பேச்சுவார்த்தைகளை எழுத்துமூலம் உறுதி செய்ய வேண்டும் என்ற யோசனையைக் கைவிட்டார். தங்களுக்குள் நடந்த சம்பாஷணையை அப்படியே வைஸ்ராயிடம் கூறுவதாக ஸ்ரீ அபெல் உறுதி கூறினர். அம்முயற்சியின் மூலம் யாதொரு பலனும் ஏற்படவில்லை. ஒரு வேளை காந்திஜியின் யோசனை வைஸ்ராயின் திட்டத்திற்கு உகந்ததாக இராமல் இருந்திருக்கலாம்.

மூன்று பிரிட்டிஷ் மந்திரிகள் அடங்கிய ஒரு கோஷ்டியினர் இந்தியாவுக்கு வருவதாகவும், 1945 செப்டம்பரில் வைஸ்ராய் வெளியிட்ட திட்டத்தை அமலுக்குக் கொண்டுவரும் நோக்கத்துடனேயே அவர்கள் அனுப்பப்படுவதாகவும் 1946 பிப்ரவரி 19-ஆம் தேதி பிரிட்டிஷ் அரசாங்கம் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அறிவித்தது. அதைத் தொடர்ந்து பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஸ்ரீ அட்லி பார்லிமெண்டில் பின்வருமாறு கூறினர்: "இந்தியாவின் எதிர்கால அரசியல் திட்டம் என்ன என்பதை இந்தியா தான் முடிவு செய்ய வேண்டும். இந்தியா சுயேச்சையை விரும்புமாயின், அவ்விதம் சுயேச்சை பெற அதற்கு உரிமை உண்டு என்பதே எங்களுடைய அபிப்பிராயம்...சிறுபான்மையோரின் உரிமைகளில் நாங்கள் மிகுந்த அக்கறை கொண்டுள்ளோம். இருந்தாலும், பெரும்பான்மையோரின் முன்னேற்றத்திற்கு சிறுபான்மையோர் முட்டுக்கட்டை போடுவதை நாங்கள் அனுமதிக்க முடியாது. இந்திய சமஸ்தானங்களின் பிரச்னை வேறு இருக்கிறது. இந்தியா முன்னேற்றப் பாதையில் செல்லுவதற்குத் தடையாக இருக்க இந்திய மன்னர்கள் விரும்பமாட்டார்கள் என்பதே எனது நம்பிக்கையாகும்."

ஸ்ரீ அட்லியின் அறிக்கை, இந்தியா-பிரிட்டன் உறவு சம்பந்தமான வரலாற்றில் ஒரு மைல் கல்லாக அமைந்தது. இந்தியா-பிரிட்டன் பிரச்னையில் இறுதியான தீர்வு காணமுடியும் என்ற நம்பிக்கையையும் அவ்வறிக்கை மீண்டும் உண்டாக்கியது. மந்திரி சபைக் குழு வருவதற்குப் பூர்வாங்கமாக காந்திஜி, உப்பு வரியை ரத்து செய்யும் விஷயமாக வைஸ்ராயுடன் கடிதப் போக்குவரத்து நடத்தத் தொடங்கினர். மந்திரி சபைக் கோஷ்டியினர் இந்தியாவுக்கு வந்த பிறகு கூட அவ்விருவருக்குமிடையே கடிதப்போக்கு வரத்து தொடர்ந்து நடந்துகொண்டிருந்தது. எனினும், காந்திஜியின் முயற்சி வெற்றி பெறவில்லை.

பிரிட்டிஷ் மந்திரி சபைக் கோஷ்டியில் லார்டு பெதிக் லாரென்ஸ், சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ், லார்டு அலெக்சாண்டர்

ஆகிய மூவரும் இருந்தனர். அவர்கள் 1946 மார்ச் 23-இல் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தனர். புனாவிலிருந்து 18 மைல்கள் தூரத்தில் உள்ள உருளி காஞ்சன் என்ற கிராமத்தில் அப்போது காந்திஜி இருந்தார். அவ்வமயம் அவர் தமக்கு மிகவும் விருப்பமான இயற்கை வைத்திய முறைகளை ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தார். விசேஷ தூதரான சுதீர் கோஷ் மூலம் மந்திரி சபைக் கோஷ்டியினர் அனுப்பியிருந்த அழைப்புக்கு இணங்க காந்திஜி அவ்வருஷம் ஏப்ரல் 1-ஆம் தேதி டில்லிக்கு வந்து சேர்ந்தார். அவர்கள் இந்தியாவில் இருந்தபோதும், லண்டனுக்குத் திரும்பிச் சென்ற பிறகும் சுதீர் கோஷ் காங்கிரசுக்கும் அவர்களுக்கும் இடையே தொடர்பு அதிகாரியாக இருந்துவந்தார். மந்திரி சபைக் கோஷ்டியினர் திரும்பிச் சென்ற பின் அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்க சுதீர் கோஷ், அவரது சீரிய அலுவல்களைத் தொடர்ந்து செய்வதற்காக லண்டனுக்கும் அனுப்பப்பட்டார். மந்திரி சபைக் கோஷ்டியினர் இந்தியாவுக்கு வருவதற்கு முன்பே பல ஆண்டுகளாக லார்டு பெதிக் லாரென்ஸ் தம்பதிகளுடனும், ஸ்டாபோர்ட் கிரிப்ஸுடனும் காந்திஜி நெருங்கிய நட்புக் கொண்டிருந்தார். 1945-இல் இங்கிலாந்தில் தொழிற்கட்சி அரசாங்கம் ஏற்பட்டதிலிருந்து அவர்களுடன் காந்திஜி கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொண்டிருந்தார். லார்டு பெதிக் லாரென்ஸ் இந்தியா மந்திரியாக நியமிக்கப்பட்டபோது, அவருக்கு வாழ்த்துக் கூறி காந்திஜி எழுதிய கடிதத்தில் பின் வருமாறு குறிப்பிட்டிருந்தார்: "இந்தியா மந்திரி காரியாலயத்தை நாகரிகமான முறையில் புதைத்துவிட்டு, அதன் சாம்பலிலிருந்து ஒரு சிறந்த ஞாபகச் சின்னத்தை நிர்மாணிப்பதாயின், அந்த அலுவலைச் செய்து முடிக்க உங்களைக் காட்டிலும் தகுதி வாய்ந்தவர் வேறு யார் இருக்க முடியும்?"

சமரசப் பேச்சுகளின் ஆரம்பத்திலிருந்து கடைசி வரையில் காங்கிரஸ், மந்திரி சபைத் தூதுகோஷ்டி இரண்டிற்கும் காந்திஜி உத்தியோகப் பற்றற்ற ஆலோசகராக இருந்து வந்தார். 1945-இல் சிம்லா மகாநாடு நடந்தபோது காங்கிரசில் காந்திஜி யாதொரு பதவியும் வகிக்கவில்லை. எனவே, அப்போது காங்கிரஸ் அக்கிராசனராக இருந்த மௌலானா அபுல் கலாம் ஆஸாதும், காரியக் கமிட்டியினருமே காங்கிரசின் சார்பில் மந்திரி சபைத் தூது கோஷ்டியுடன் சமரசப்பேச்சு வார்த்தைகளை நடத்தினர்.

1946 ஏப்ரல் மாதம் 15-ஆம் தேதி வரையில் மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் எல்லாக் கட்சிகளையும், பிரிவுகளையும் சேர்ந்த பிரதிநிதிகளைப் பேட்டி கண்டனர். பெரும்பாலோரும் ஒப்புக்கொள்ளக் கூடிய ஓர் ஒப்பந்தத்தை உருவாக்கவேண்டும் என்பதே அவர்களுடைய நோக்கமாகும். பின்னர் அக்கோஷ்டியினர், இந்தியப் பிரதிநிதிகளின் கருத்துகளைப் பரிசீலனை செய்வதற்காகவும், ஓய்வு எடுத்துக் கொள்வதற்காகவும் காஷ்மீருக்குச் சென்றார்கள். அவர்கள் ஏப்ரல் 27-இல் டில்லிக்குத் திரும்பிவந்தபின், காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகிற்கும் இடையே

ஒரு சமரசம் ஏற்படும்படி செய்வதற்காக அவ்விரு ஸ்தாபனங்களின் அக்கிராசனர்களுக்கு அழைப்பு அனுப்பியிருந்தனர். கீழ்க்கண்ட முறைகளை அடிப்படையாகக் கொண்டே அம்மகாநாட்டைக் கூட்டுவதென்றும் அறிவித்திருந்தனர்: "வெளிநாட்டு விவகாரங்கள், தற்காப்பு, போக்கு வரத்து ஆகியவை யூனியன் அரசாங்கத்தின் நிர்வாகத்தில் இருக்கவேண்டும். மாகாணங்களை, ஹிந்துக்கள் பெரும்பான்மையோராக உள்ள மாகாணங்கள் என்றும், முஸ்லிம்கள் பெரும்பான்மையோராக உள்ள மாகாணங்கள் என்றும் இரு பிரிவுகளாகப் பிரிக்கவேண்டும். மேலே குறிப்பிட்டவற்றைத் தவிர மற்ற எல்லா இலாகாக்களும் மாகாணங்களின் நிர்வாகத்தில் இருக்க வேண்டும்."

மே 5-லிருந்து 12-ஆம் தேதி வரையில் சிம்லாவில் அம் மகாநாடு நடந்தது. அச்சமயம் பலுசிஸ்தான், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பஞ்சாப், சிந்து, வங்காளம் முதலிய ஐந்து மாகாணங்களில் முஸ்லிம்கள் பெரும்பான்மையோராக இருந்தனர். அம்மாகாணங்களின் ஜனத்தொகை சற்றேறக் குறைய 9 கோடியாக இருந்தது. மொத்தம் 19 கோடி ஜனத் தொகையுள்ள மற்ற 7 மாகாணங்களிலும் ஹிந்துக்கள் பெரும்பான்மையோராக இருந்தனர். அந்த ஜனத் தொகைக்குத் தகுந்தவாறு இந்தியா சட்ட சபையில் ஸ்தானங்கள் அளிப்பதென்றும், இந்திய அரசாங்க மந்திரி சபையை அமைப்பதிலும் அதே முறையையே பின்பற்றுவதென்றும் தூது கோஷ்டியின் சார்பில் கூறப்பட்டது. எனினும் இது, சமரசம் ஏற்படுவதற்குப் பெரும் முட்டுக் கட்டையாக அமைந்தது.

அதன் மீது, மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் சிம்லா மகாநாடு முறிந்துவிட்டதாக அறிவித்து. இந்தியப் பிரச்னை தீருவதற்குத் தங்களுடைய சொந்த யோசனைகளைக் கூறியிருந்தனர். எதிர் காலத்தில் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவது, அது வரையில் முக்கிய அரசியல் கட்சிகளின் ஆதரவுடன் இடைக்கால அரசாங்கத்தை அமைப்பது ஆகியவையே தூது கோஷ்டியின் முக்கியமான யோசனைகள் ஆகும். முஸ்லிம் லீகின் பாகிஸ்தான் கோரிக்கையை தூது கோஷ்டியினர் நிராகரித்தனர். தூது கோஷ்டியின் மற்ற யோசனைகளைப் பற்றி காந்திஜிக்கும் அவர்களுக்கும் இடையே அடிக்கடி கடிதப் போக்குவரத்து நடந்தது.

இதன் மத்தியில் இடைக்கால அரசாங்கத்தை அமைப்பதென்ற யோசனையில் எவ்வித முன்னேற்றமும் ஏற்படவில்லை. பாகிஸ்தான் பெறுவதற்கு இடையூறாக இருக்கும் எத்தகைய இடைக்கால அரசாங்கத்திலும் தாங்கள் பங்கு எடுத்துக்கொள்ள முடியாது என்று முஸ்லிம் லீகர்கள் கூறிவிட்டனர். காங்கிரஸ் தலைவர்களோவெனில், இந்தியாவைப் பிரிக்கக் கூடாது என்பதில் உறுதியாக இருந்ததுடன், இந்தியாவின் எதிர்கால அரசியலை உருவாக்கும் பொறுப்பை அரசியல் நிர்ணய சபையிடம்

விட்டுவிட வேண்டும் என்று கூறினர்; அரசியல் நிர்ணய சபை இந்தியாவின் எதிர்கால அரசியல் திட்டத்தை உருவாக்கும் வரையில் நிர்வாகப் பொறுப்பு இடைக்கால அரசாங்கத்தினிடம் இருந்துவரும் என்றும் கூறினர். முஸ்லிம் லீக், காங்கிரஸ் ஆகிய ஸ்தாபனங்களுள் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒன்றினிடம் அரசாங்கத்தை அமைக்கும் பொறுப்பை ஒப்படைக்க வேண்டும் என்றும், முரண்பாடான இரு கட்சிகளையும் திருப்தி செய்ய முயற்சிப்பதால் வீண் தாமதமும் நெருக்கடியுமே ஏற்படும் என்றும் காந்திஜி கூறிய கருத்தை தூது கோஷ்டியினர் ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே, இரு கட்சிப் பிரதிநிதிகளும் அடங்கிய இடைக்கால அரசாங்கத்தை உருவாக்கும் முயற்சி தொடர்ந்து நடந்துகொண்டிருந்தது. எனினும், காந்திஜி எச்சரிக்கை செய்தது போல் அம் முயற்சி இறுதியில் தோல்வியடைந்தது.

பல்வேறு மாறுதல்களுக்குப் பிறகு, இடைக்கால அரசாங்கத்தில் பங்கு எடுத்துக் கொள்வதென்று காங்கிரஸ் தீர்மானித்த போது, ஒரு புதிய பிரச்னை எழுந்தது. அதாவது காங்கிரசுக்குத் தெரியாமலேயே தமக்கு சில உறுதி மொழிகள் கொடுக்க வேண்டும் என்று ஜின்னா கேட்டிருக்கிறார், அவ்விதமே வைஸ்ராய் உறுதி மொழி அளித்திருக்கிறார் என்ற செய்தி காங்கிரஸ் தலைவர்களுக்கு எப்படியோ தெரிந்துவிட்டது. இடைக்கால அரசாங்கத்தில் காங்கிரசுக்கு அளிக்கப்பட்டுள்ள ஸ்தானங்களில் கூட முஸ்லிம் லீகின் சம்மதமின்றி ஒரு தேசீய முஸ்லிமுக்குக் கூட ஸ்தானம் கொடுக்கக் கூடாது என்பது ஜின்னா கேட்ட உறுதி மொழிகளில் ஒன்றாகும். இதனால் ஒரு புதிய நிலைமை ஏற்பட்டது. அதைப் பரிசீலனை செய்வதற்காக காங்கிரஸ் காரியக் கமிட்டி மீண்டும் கூட்டப்பட்டது. அதன் சம்பந்தமாக ஆலோசிப்பதற்கு நேருஜியும் டில்லியில் இருக்கவேண்டும் என்று மந்திரி சபைத் தூது கோஷ்டியினரும், காங்கிரஸ் தலைவர்களும் கருதினர். எனவே அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்க, நேருஜி காஷ்மீரிலிருந்து திரும்பிவந்தார். அவருக்கு காஷ்மீர் மகாராஜா தடையுத்தரவு பிறப்பித்திருந்தார். திரும்பிவந்து அந்தத் தடையுத்தரவை மீறப் போவதாக மகாராஜாவுக்கு அறிவித்துவிட்டு நேருஜி டில்லி வந்து சேர்ந்தார்.

ஜூன் 25-இல் காங்கிரஸ் காரியக் கமிட்டி கூடி இடைக்கால சர்க்கார் அமைப்பதென்ற யோசனையை நிராகரித்தும், அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவதென்ற யோசனையை ஏற்றுக் கொண்டும் ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. ஜின்னாவுக்கு வைஸ்ராய் உறுதிமொழி கொடுத்திருந்ததால், அதே சமயம் முஸ்லிம் லீக் கூடி இடைக்கால சர்க்கார் அமைப்பதென்ற யோசனையை அங்கீகரித்தது. அந்த யோசனையை காங்கிரஸ் நிராகரித்து விட்டதால், இடைக்கால சர்க்காரை அமைக்கும்படி வைஸ்ராய் தங்களையே கேட்டுக் கொள்வார் என்று முஸ்லிம் லீக் தலைவர்கள் எதிர்பார்த்தனர். இரண்டு பெரிய கட்சிகளில் ஒன்று இடைக்கால சர்க்

காரில் சேர மறுத்துவிட்டதால், கூட்டு சர்க்கார் அமைக்கும் யோசனை ரத்தாகிவிட்டதாக மந்திரி சபைத் தூதுகோஷ்டியினர் அறிவித்துவிட்டார்கள். இடைக்கால சர்க்காரை அமைக்கும்படி முஸ்லிம் லீகை மாத்திரம் தனியாக அழைப்பதில்லை என்ற மந்திரி சபைத தூது கோஷ்டியின் தீர்மானத்தைக் கேட்டு ஆத்திரம் அடைந்த ஜின்னு, அவ்விதம் தீர்மானம் செய்தது "நம்பிக்கைத் துரோகம்" என்றும், "மிகவும் விபரீதமான போக்கு" என்றும், "யோக்கியப் பொறுப்பற்ற செய்கை" என்றும் கண்டித்தார்.

ஜூன் 28-ஆம் தேதி காந்திஜி டில்லியிலிருந்து புனைவுக்குப் புறப்பட்டுச் சென்றார். மறுநாள் மந்திரி சபைத் தூது கோஷ்டியினரும் லண்டனுக்குப் புறப்பட்டனர். இடைக்கால சர்க்கார் அமைக்கும் விஷயமாகத் தொடர்ந்து முயற்சி செய்யும்படி அவர்கள் லார்டு வேவலிடம் கூறிவிட்டுச் சென்றார்கள். ஜூலை மாதம் முதல் வாரத்தில் பம்பாயில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடியது. காந்திஜி உருக்கமாகக் கேட்டுக் கொண்டதன் மீது, மந்திரி சபைத் தூது கோஷ்டி மே மாதம் 16-ஆம் தேதி வெளியிட்ட திட்டத்தை அங்கீகரித்து ஒரு தீர்மானம் நிறைவேறியது.

முஸ்லிம் லீக் சபையும் ஜூலை 28-இல் கராச்சியில் கூடி, மந்திரி சபைத் தூது கோஷ்டியின் திட்டத்தை அங்கீகரித்து முதலில் தாங்கள் செய்த தீர்மானத்தை வாபஸ் செய்து கொண்டது. அதே சமயம், பாகிஸ்தானைப் பெற நேரடி நடவடிக்கையில் ஈடுபடுவதென்றும் அது தீர்மானித்து, ஆகஸ்டு 16-ஆம் தேதி இந்தியா முழுவதும் 'நேரடி நடவடிக்கை தினத்தை' அனுசரிப்பதென்றும் முடிவு செய்தது.

அதற்கிணங்க, ஆகஸ்டு 16-லிருந்து 18-ஆம் தேதிவரையில் கல்கத்தாவில் பெரும் கலகங்களும், பேய்த்தனமான நடவடிக்கைகளும் பீறிட்டெழுந்தன. கண்டன தினமாக அனுசரிக்கும்படி முஸ்லிம் லீக் நிறைவேற்றிய தீர்மானத்திற்குப் பணிந்து கடைகளை மூடும்படி முஸ்லிம் போக்கிரிகள் மக்களை வற்புறுத்தலாயினர். கலகத் தீ பரவி கல்கத்தா நாசமாகி வருகையில், பல விடங்களிலும் போலீசார் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். கல்கத்தாவில் நிகழ்ந்த கோர சம்பவங்களைப் பற்றி விசாரிப்பதற்காக வைஸ்ராய் நியமித்த கமிஷனின் முன் கொடுக்கப்பட்ட சாட்சியங்களிலிருந்து, கலகத்திற்கு முந்தியும், கலகம் நடந்தபோதும், கலகத்திற்குப் பின்னரும் முஸ்லிம் லீக் சர்க்கார் முதல் மந்திரி ஷஹீத் சுஹ்ரவர்த்தி எவ்வளவு படுமோசமாக நடந்து கொண்டார் என்பது வெளியாயிற்று. அக் கலகங்களின் விளைவாக குறைந்த பட்சம் 5000 பேர் கொல்லப்பட்டனர் என்றும், அதைப் போல் மூன்று மடங்குக்கு அதிகமானவர் காயம் அடைந்தனர் என்றும் கணக்கு எடுத்தனர்.

முஸ்லிம் லீக் "நேரடி நடவடிக்கைத்" தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு ஒரு வாரத்திற்கு முன் லார்டு வேவல், மந்திரி சபைத் தூதுகோஷ்டியினரின் அபிப்பிராயத்திற்கு இணங்க, காங்

கிரஸ் பிரதிநிதிகளும் முஸ்லிம் லீக் பிரதிநிதிகளும் அடங்கிய இடைக்கால அரசாங்கத்தை அமைப்பதற்கான முயற்சிகளைத் தொடர்ந்து செய்ய முற்பட்டார். இடைக்கால சர்க்காரில் சேருவதென்ற தீர்மானத்தை முஸ்லிம் லீக் வாபஸ் செய்து கொண்டுவிட்டதால், அத்தகைய சர்க்காரை அமைக்கும்படி காங்கிரஸ் தலைவர்களை அழைப்பதைத் தவிர வேறு வழி இராமற் போயிற்று. லண்டனிலிருந்து வந்த கட்டளைக்கு இணங்க வைஸ்ராய் ஆகஸ்டு 6-ஆம் தேதி இடைக்கால சர்க்கரை அமைக்கும்படி நேருஜிக்கு அழைப்பு அனுப்பினர். அப்போது நேருஜி, மௌலானா அபுல் கலாம் ஆசாதுக்குப் பிறகு காங்கிரஸ் அக்கிராசனாகப் பதவி ஏற்றுக் கொண்டிருந்தார். இடைக்கால சர்க்காரில் சேரும் படி நேருஜி அனுப்பியிருந்த அழைப்பை ஏற்றுக் கொள்ள ஸ்ரீ ஜின்னா மறுத்துவிட்டார்.

கல்கத்தா நிகழ்ச்சிகளுக்குப் பிறகும், இடைக்கால சர்க்கார் ஏற்படுவதற்கு முன்பும் கூட, இடைக்கால சர்க்காரில் முஸ்லிம் லீக் பிரதிநிதிகளைச் சேர்க்கவேண்டும் என்று வைஸ்ராய் மீண்டும் வற்புறுத்தலானார். இவ்விஷயமாக வைஸ்ராய்க்கும் காங்கிரஸ் தலைவர்களுக்கும் தகராறு ஏற்பட்டது. கடைசியில் பிரிட்டிஷ் மந்திரி சபை தலையிட்டதன் பயனாக நேருஜியின் தலைமையில் இடைக்கால சர்க்கார் ஏற்பட்டது.

இருந்தாலும், புதிதாக அமைக்கப்பட்ட இடைக்கால சர்க்காருக்கும், பழைய ஆட்சியின் பிரதிநிதிகளுக்கும் திருப்திகர மான உறவு நிலவவில்லை. இடைக்கால சர்க்காரில் முஸ்லிம் லீக் பிரதிநிதிகளைச் சேர்த்துக் கொள்ளும்படி லார்டு வேவல் தொடர்ந்து வற்புறுத்தி வந்தார். கடைசியாக, காங்கிரசுடன் யாதொரு ஒப்பந்தமும் செய்து கொள்ளாமலேயே அவர் தம் முடைய சொந்தப் பொறுப்பில் முஸ்லிம் லீக் பிரதிநிதிகளை மந்திரி சபைக்குள் கொண்டுவந்துவிட்டார். முஸ்லிம் லீகினிட மிருந்து அவர் யாதொரு உறுதியும் வாங்கிக் கொள்ளவில்லை. "நேரடி நடவடிக்கை"த் தீர்மானத்தை முஸ்லிம் லீக் ரத்து செய்யும்படியும் அவர் வற்புறுத்தவில்லை. அதன் விளைவு பெரும் விபரீதத்தில் வந்து முடிந்தது. இடைக்கால சர்க்கார் மந்திரி களிடையே பரஸ்பரம் நல்லுறவும் ஒத்துழைப்பும் நிலவுவதற்குப் பதிலாக, அந்தச் சபை ஒன்றுக் கொன்று நேர்மாறான இரு பிரிவு களாகப் பிரிந்தது. முஸ்லிம் லீக் பிரதிநிதிகள் மந்திரி சபைக்கு உள்ளே இருந்து கொண்டே பாகிஸ்தானை அடைவதற்கான போராட்டத்தை நடத்தப் போவதாகப் பிரகடனம் செய்தனர்.

கல்கத்தாவில் முதன் முதலாக ஏற்பட்ட கலகத்தில் முஸ்லிம் களின் கை ஓங்கி நின்றது. பின்னர் ஹிந்துக்கள் கட்டுக் கோப் பாக ஒன்று சேர்ந்து பேராத்திரத்துடன் முஸ்லிம்களைத் திருப்பி அடிக்க முற்பட்டார்கள். ஹிந்துக்கள் பதிலடி கொடுத்ததைக் கண்டு ஆத்திரம் கொண்ட முஸ்லிம்கள், கல்கத்தா நிகழ்ச்சி களுக்காக ஹிந்துக்கள் மீது பழிவாங்க வேண்டும் என்று கூக்குர

விடத் தொடங்கினர்கள் நோவாகாலியில் உள்ள ஜனத் தொகையில் 85 சத விகிதம் பேர் முஸ்லிம்களாதலால், ஹிந் துக்கள்மீது வஞ்சம் தீர்த்து அட்டூழியங்கள் புரிய 'விசேஷ வசதிகள்' கிடைத்தன. இடைக்கால சர்க்காரில் முஸ்லிம் லீக் பிரவேசித்த தினத்தன்றே நோவாகாலியில் ஏற்பட்ட பயங்கர மான வகுப்புக் கலகங்களைப்பற்றிய செய்திகள் வரத் தொடங் கின. கொலைகள், கொள்ளைகள், நரசோரங்கள், கற்பழித்தல், தீ வைத்தல், பலாத்கார மணங்கள், மத மாற்றங்கள் முதலிய கொடுமைகளில் முஸ்லிம்கள் தங்கு தடையின்றி ஈடுபட்டனர். பலவிடங்களில் சர்க்கார் ஆட்சி முறையே முறிந்துவிட்டது. மற்றும் பலவிடங்களில் கொடிய துஷ்டர்களுக்கு அதிகாரிகள் பக்கபலமாக நின்றனர். வீடு வாசல்களையும், சொத்து சுதந்திரங் களையும் இழந்த பதினையிரக்கணக்கான மக்கள் வங்காள ஜில் லாக்களிலும், பீகார் ஜில்லாக்களிலும் ஓடி வந்து அடைக்கலம் புகுந்தனர்: நோவாகாலியில் நடந்த சகிக்க முடியாத அட்டூழி யங்களைப்பற்றி அவர்கள் விவரித்தனர். அவர்கள் கூறிய சோகக் கதை இந்தியா முழுவதும் மக்களிடையே பேராத்திரத்தை உண் டாக்கியது. அவற்றைக் கேட்டு மிகவும் மனக் கொதிப்பு அடைந்த பீகார் ஹிந்துக்கள் நோவாகாலியில் நடந்த அட்டூழி யங்களுக்காக அதே ரீதியில் வஞ்சம் தீர்க்க முற்பட்டார்கள். பிறகு ஆத்திரத் தீ பீகாரிலிருந்து எல்லைப்புற மாகாணத்திற்குச் சென்றது. அங்கே குறிப்பாக ஹஸாரா ஜில்லாவில் சீக்கியர்களும், ஹிந்துக்களும் முஸ்லிம்களின் வெறிக்கு இலக்காயினர்.

நோவாகாலியிலிருந்து செய்திகள் கிடைத்தவுடன் காந்திஜி மற்ற எல்லா அலுவல்களுக்கும் முற்றுப்புள்ளி வைத்துவிட்டு நோவாகாலிக்குச் சென்று, அங்கே எவ்வளவு காலம் தங்க வேண் டியது அவசியமாக இருக்கிறதோ அவ்வளவு காலம் தங்குவ தென்று தீர்மானித்தார். நோவாகாலியில் துன்பத்திற்கு உள் ளான ஹிந்துக்களுக்கு தைரியம் ஏற்பட்ட பிறகுதான், முஸ்லிம் களும் தாங்கள் செய்த அட்டூழியங்களுக்காக உண்மையிலேயே பச்சாத்தாபப்பட்டு இரு சமூகங்களும் அமைதியாக வாழ்வதற் கான நிலைமை ஏற்பட்ட பிறகுதான், நோவாகாலியிலிருந்து திரும்புவது என்று காந்திஜி உறுதி செய்துகொண்டார். பின்னர் 1947 மார்ச்சு மாதம் அவர் நோவாகாலியிலிந்து புறப்பட்டு பீகா ருக்குச் சென்றார். நோவாகாலியில் துன்பத்திற்கு உள்ளான ஹிந்துக்களுக்காக அவர் அங்கே சென்றதுபோல், பீகாரில் துன்பத்திற்கு உள்ளான முஸ்லிம்களுக்காக காந்திஜி பீகாருக்குச் சென்றார்.

இடைக்கால சர்க்காரில் நாளுக்கு நாள் வளர்ந்துவரும் வேற் றுமையையும், தேசத்தில் பரவி வரும் குழப்பத்தையும் கண்டு கலக்கம் அடைந்த அட்லியின் அரசாங்கம், கடைசியாக 1947 பிப்ரவரி 20-ஆம் தேதி ஒரு பிரகடனம் விடுத்தது. 1948 ஜூன் மாதத்திற்கு மேற்படாமல் ஒரு தேதியில் பொறுப்புள்ள இந்தி யர்களிடம் அரசாங்க அதிகாரத்தை மாற்றுவதே பிரிட்டிஷ் அர

சாங்கத்தின் உத்தேசம் என்பதே அந்தப் பிரகடனமாகும். அரசியல் நிர்ணய சபை உருவாக்கும் அரசியலை அங்கீகரிக்கும்படி தாங்கள் பார்லிமெண்டுக்கு சிபாரிசு செய்யவும் அவர்கள் ஒப்புக் கொண்டனர். மந்திரி சபைத் தூது கோஷ்டியின் திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு அந்தத் தேதிக்குள் முற்றிலும் பிரதிநிதித்துவம் வாய்ந்த அரசியல் நிர்ணய சபை ஏற்படாவிடில், அந்தத் தேதியில் யாரிடம் அரசாங்கத்தின் நிர்வாகப் பொறுப்பை ஒப்புவிப்பது என்பது பற்றி பிரிட்டிஷ் அரசாங்கம் ஆலோசித்து ஒரு முடிவு செய்ய வேண்டியிருக்கும் என்றும் அட்லி அரசாங்கத்தின் பிரகடனம் கூறியது. அதே சமயத்தில் லார்டு வேவலும் திருப்பி அழைக்கப்பட்டு, அவரது ஸ்தானத்தில் லார்டு மவுண்ட்பாட்டன் வைஸ்ராயாக நியமிக்கப்பட்டார்.

அச்சமயம் வங்காளம், சிந்து ஆகிய இரண்டு மாகாணங்களில் மாத்திரமே முஸ்லிம் லீக் மந்திரி சபைகள் இருந்தன. பாகிஸ்தானுக்கு உட்பட்டிருக்க வேண்டும் என்று முஸ்லிம் லீக் விரும்பிய மாகாணங்களான எல்லைப் புற மாகாணம், பஞ்சாப், அஸ்ஸாம் ஆகிய மூன்றிலும் முஸ்லிம் லீக் அல்லாத மந்திரி சபைகள் இருந்தன. பஞ்சாபில் முஸ்லிம் லீக் அல்லாத முஸ்லிம் யூனியன்—காங்கிரஸ் கூட்டு மந்திரி சபை இருந்தது. சிந்துவிலும், முஸ்லிம்கள் பெரும்பான்மையோராக உள்ள வடமேற்கு எல்லைப் புற மாகாணத்திலும் காங்கிரஸ் மந்திரி சபைகளே இருந்தன.

இந்தியாவில் உள்ள சில மாகாணங்களில் மாகாண அரசாங்கங்களிடம் அதிகாரத்தை மாற்றுவதென்று அட்லியின் பிரகடனத்தில் கூறப்பட்டிருந்ததை, தங்களுக்குச் சாதகமாக உபயோகித்துக் கொள்ள முஸ்லிம் லீக் சூழ்ச்சி செய்ய முற்பட்டது; அதாவது மேலே குறிப்பிட்ட மூன்று மாகாணங்களில் சட்ட பூர்வமாக அமைக்கப்பட்டிருந்த மந்திரி சபைகளை வீழ்த்துவதற்கான முயற்சியில் ஈடுபட்டது. அந்த நோக்கத்துடன் அது "நேரடி நடவடிக்கைகளை" மேற்கொள்ள முற்பட்டது. "நேரடி நடவடிக்கை" என்பதற்கு, சட்ட விரோதமான காரியங்களில் ஈடுபடுவது, பயமுறுத்துவது, பலாத்காரத்தில் இறங்குவது என்பதே அர்த்தமாகும். எனவே, அவர்களுடைய நேரடி நடவடிக்கை உள்நாட்டு யுத்தமாக மாறியது. கொலைகளும், கொள்ளைகளும், தீ வைத்தலும் நடைபெறலாயின. பல கிராமங்களும் தீ வைக்கப்பட்டு அடியோடு நாசமாயின. ஹிந்து, சீக்கியர்களின் சொத்துக்கள் அழிக்கப்பட்டன. ஆடவர்களும் பெண்களும், குழந்தைகளும் தங்கள் வீடுவாசல்களையும், சொத்துக்களையும் விட்டுவிட்டு இடம் பெயர்ந்து திக்கற்ற அகதிகளாக அலைய நேர்ந்தது.

லார்டு மவுண்ட்பாட்டன் இந்தியாவிற்கு வந்ததும் செய்த முதல் காரியங்களில் ஒன்று, தம்மை டில்லியில் வந்து சந்திக்கும்படி காந்திஜிக்கு ஓர் அழைப்புக் கடிதம் அனுப்பியதேயாகும். மார்ச்சு 31-ஆம் தேதி காந்திஜி டில்லி வந்து சேர்ந்தார். அவ்விரு

வரும் தொடர்ந்து பல தடவை சந்தித்துப் பேசினர். மவுண்ட் பாட்டனை காந்திஜி இரண்டாவது தடவையாக சந்தித்தபோது தம்முடைய மகத்தான திட்டத்தை அவரிடம் (மவுண்ட்பாட்ட னிடம்) காந்திஜி சமர்ப்பித்தார். அத் திட்டத்தின் சாரம் இது தான்: "ஜின்னு விரும்பினுல், இந்திய அரசாங்க மந்திரி சபையை அமைக்கும் பொறுப்பை அவரிடம் விட்டுவிட வேண்டும். இந்தி யாவின் நலனுக்கான எல்லா முறைகளையொட்டியும் ஜின்னு மந்திரி சபையுடன் காங்கிரஸ் பூரணமாக ஒத்துழைக்கவேண்டும். காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகிற்கும் கருத்து வேற்றுமை ஏற்படும் போது, மவுண்ட்பாட்டனுக்கு, வைஸ்ராய் என்ற முறையில் அல்ல, மனிதன் என்ற முறையில் இந்தியாவின் நலனுக்கு உகந்தது எது என்பதை நிர்ணயிக்கும் பூரண உரிமை உண்டு. இவையெல்லாம் அமலுக்கு வந்தபின், அரசியல் நிர்ணய சபையின் முன்னிலையில் பாகிஸ்தான் கோரிக்கையைச் சமர்ப்பிக்க ஜின்னுவுக்கு சுதந்திரம் உண்டு. அரசாங்க அதிகாரத்தை மாற்றுவதற்கு முன்புகூட ஜின்னு அவ்விதம் சமர்ப்பிக்கலாம். ஆனுல் பலாத்கார முறைகளி னுலோ அல்லது மிரட்டல்களினுலோ அவர் தமது கோரிக்கைக்கு ஆதரவு தேடக்கூடாது. எந்த ஒரு மாகாணத்தையும், எந்த ஒரு மாகாணத்தின் பகுதியையும் அதன் விருப்பத்திற்கு விரோதமாக பாகிஸ்தானில் சேரும்படி வற்புறுத்தக் கூடாது."

மேற்கண்ட திட்டத்தில் பல கவர்ச்சியான அம்சங்கள் அடங்கியிருப்பதாயும், அவ்விஷயமாக லார்டு இஸ்மேயுடன் பேசி ஒரு முடிவு செய்யும்படியும் வைஸ்ராய் காந்திஜியிடம் கூறி னர். காந்திஜியின் திட்டம், ஓர் ஒப்பந்த நகலாக உருவாக்கப்பட வேண்டும் என்பதே வைஸ்ராயின் உத்தேசமாகும். தமது திட்டத்திற்கு லார்டு மவுண்ட்பாட்டனின் பூரண ஆதரவு இருப்ப தாக காந்திஜி எண்ணினர். நேருஜியும், காரியக் கமிட்டியும் தம்முடைய திட்டத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்வதில் அதிகக் கஷ்டம் இராது என்றும் நம்பினர். மௌலானு ஆஸாதும், காரி யக் கமிட்டி அங்கத்தினர்களில் மற்றும் சிலரும் காந்திஜியின் யோசனையை ஆதரித்தார்கள். ஆனுல், காந்திஜியுடன் எத்தகைய ஒப்பந்தமும் செய்துகொள்வதை வைஸ்ராயின் ஆலோசகர்கள் பலமாக எதிர்த்தார்கள். காந்திஜியின் திட்டத்தைக் குறித்து மற்றக் கட்சிகளின் நிலைமை என்ன என்பதைத் தெரிந்துகொள்ளு வதற்கு முன் தாம் அத்திட்டத்தை அங்கீகரிப்பது விவேகம் ஆகுமா என்றும் வைஸ்ராய் புனரலோசனை செய்யத் தொடங்கினர். அதையொட்டி இருவரும் தீவிரமான முயற்சிகளைக் கைக்கொள்ளு முன், அவ்விஷயத்தை நேருஜிக்கு அறிவிப்பதென்று எல்லோரும் தீர்மானித்தனர். அத்திட்டத்தை அங்கீகரிக்க வைஸ்ராய் தயங் குவதைப் பற்றி நேருஜிக்கு அறிவித்தனர். அத் திட்டத்தில் பல கவர்ச்சிகரமான அம்சங்கள் இருப்பதாக மவுண்ட்பாட்டன் கூறியதில் காந்திஜி அளவுக்கு மீறி நம்பிக்கை வைத்துவிட்ட தாகவும் அவர்கள் காந்திஜியிடம் கூறினர். அப்போதிருந்த நிலைமையில், லார்டு மவுண்ட்பாட்டன் இந்தியாவுக்கு வருவதற்கு

முன்பே இந்தியப் பிரச்னையைத் தீர்க்க இந்தியாவைப் பிரிப்பது ஒன்றுதான் வழி என்று, சர்தார் படேலின் மனமும் மாறியிருந்தது. எனவே, காந்திஜியின் திட்டத்தைப் பரிசீலனை செய்வதற்காகக் காரியக் கமிட்டி கூடியபோது, அப்துல் கபார் கானைத் தவிர வேறு யாரும் அத்திட்டத்தை ஆதரிக்கவில்லை. மௌலானா ஆஸாத் கூட அதை ஆதரிக்கவில்லை. காந்திஜி தங்களுடைய கருத்தை ஆதரிக்கும்படியும் அவர்களால் செய்ய முடியவில்லை. எனவே, மேற்கொண்டு நடைபெறும் பேச்சுகளில் தம்மை எதிர்பார்க்க வேண்டாம் என்று காந்திஜி வைஸ்ராய்க்கு மறுநாளே கடிதம் எழுதிவிட்டார். அதற்கு மறுநாள், அதாவது 1947 ஏப்ரல் 12-ஆம் தேதி காந்திஜி காங்கிரசைச் சேர்ந்த தமது சகாக்களிடம் விடை பெற்றுக்கொண்டு, பீகாருக்குத் திரும்பிச் சென்றார்.

எனினும், வைஸ்ராய்க்கும் காந்திஜிக்கும் நடந்த பேச்சு வார்த்தைகளின் பலனாக ஒரு நன்மை ஏற்பட்டது அதாவது வைஸ்ராயின் கோரிக்கைக்கு இணங்க, காந்திஜியும் ஜின்னாவும் கையெழுத்திட்டு ஒரு வேண்டுகோள் விடுத்தனர். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அமைதியாக இருக்க வேண்டும் என்பதே அந்த வேண்டுகோளாகும். அது மவுண்ட்பாட்டன் கூறிய யோசனையே. நேருஜிக்கு அடுத்தபடியாக அப்போது கிருபளானி காங்கிரஸ் அக்கிராசனர் பதவியை ஏற்றுக்கொண்டிருந்ததால், காங்கிரசின் சார்பில் அவர்தான் மேற்கண்ட வேண்டுகோளில் கையெழுத்திட வேண்டும் என்று காந்திஜி வற்புறுத்தினர். ஆனால் காந்திஜியையும் தம்மையும் தவிர வேறு யார் கையெழுத்திடுவதாக இருந்தாலும், தாம் அதில் கையெழுத்திட முடியாது என்று ஜின்னா மறுத்துவிட்டார். அரசியல் உரிமைகளைப் பெறுவதற்காக பலாத்காரத்தை உபயோகிப்பதில் தமக்கு நம்பிக்கை இல்லை என்று ஜின்னா தமக்கு உறுதிமொழி கொடுத்திருப்பதாயும், அதைச் சோதனை செய்து பார்க்கத் தாம் விரும்புவதாகவும் வைஸ்ராய் கூறியதன்பேரில், அவ்விஷயத்தை நேருஜியின் முடிவுக்குத் தாம் விட்டுவிடுவதாக காந்திஜி கூறினர். நேருஜியோவெனில், அதையொட்டி மவுண்ட்பாட்டனின் தீர்ப்பைத் தாம் ஒப்புக்கொள்வதாகக் கூறிவிட்டார். எனவே, ஆச்சாரிய கிருபளானியின் கையெழுத்து இல்லாமலேயே அந்த வேண்டுகோள் வெளியாயிற்று பின்னர், முஸ்லிம் லீக் பிரதிநிதிகள் அந்த ஏற்பாட்டிற்கு விரோதமாகவே நடந்துகொண்டனர். அதன் விளைவாக வைஸ்ராய்க்கும் ஜின்னாவுக்கும் அடிக்கடி தகராறு ஏற்பட்டது. பாகிஸ்தானை உருவாக்கும் விஷயமாக பிரிட்டிஷ் அரசாங்கம் தம்முடன் பேச்சு வார்த்தைகளைத் தொடர்ந்து நடத்திவந்ததால், தாம் எத்தகைய கண்டனத்தையும் பொருட்படுத்த வேண்டிய அவசியம் இல்லை என்று ஜின்னா எண்ணினர். முஸ்லிம்களின் பலாத்கார நடவடிக்கைகள் தொடர்ந்து வருவதைப் பற்றியும் அவர் கவலைப்படவில்லை.

பாகிஸ்தான் ஏற்படுவதற்குமுன் அமைதி நிலவ வேண்டியது அவசியம் என்பதை மவுண்ட்பாட்டன் வற்புறுத்திலைன்றி,

அவர் செய்துவரும் நல்ல காரியங்களெல்லாம் பழாகிவிடும் என்று காந்திஜி மவுண்ட்பாட்டனை எச்சரிக்கை செய்தார். பஞ்சாபில் சமூக ஒற்றுமை ஏற்படும்படி செய்வதற்காக அங்கு செல்ல விரும்புவதாகவும் காந்திஜி கூறினர். ஆனல் அந்தக் கட்டத்தில் பஞ்சாபுக்குச் செல்வதை வைஸ்ராயோ, பஞ்சாப் காங்கிரஸ் தலைவர்களோ, காங்கிரஸ் மேலிடத்தாரோ ஆதரிக்கவில்லை. முக்கிய அரசியல் பிரச்னையையொட்டி காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகிற்கும் விரைவில் ஒரு சமரசம் ஏற்படும்படி செய்வதுதான், பலாத்காரத்தைத் தடுப்பதற்குற்ற அருமருந்து என்று வைஸ்ராய் கருதினர். பஞ்சாப் காங்கிரஸ் தலைவர்களோவெனில், அந்தப் பிரச்னையைத் தங்களிடம் விட்டுவிட்டால் தாங்கள் முஸ்லிம் லீகுடன் கணக்கைத் தீர்த்துக்கொள்வதாகக் கூறினர். கடுமையான முறைகளை மேற்கொண்டு அந்த நிலைமைக்குப் பரிகாரம் காண வேண்டும் என்றும், எனவே அந்நிலையில் காந்திஜி பஞ்சாபுக்குச் செல்வதென்ற பிரச்னையே எழுவதற்கில்லை என்றும் காங்கிரஸ் தலைவர்கள் கருதினர். அதனல் காந்திஜியின் பஞ்சாப் பிரயாணம் நிறுத்தி வைக்கப்பட்டது. புகைந்துகொண்டிருந்த வகுப்பு வேற்றுமைத் தீ ஜ்வாலையைக் கக்கத் தொடங்கியது. அதன் விளைவாக, பிறக்கும் போதே சுதந்திரம் ஜீவனை இழந்தது.

*1947* மே மாதம் முதல் வாரத்தில், காங்கிரஸ் தலைவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, காந்திஜி பீகாரிலிருந்து மறுபடியும் டில்லிக்கு வந்தார். அப்போது மவுண்ட்பாட்டனும் ஒரு திட்டத்துடன் தயாராக இருந்தார். அவரது திட்டத்தின் முக்கியமான அம்சங்கள் இவைதான் :

1. இந்தியாவின் பிரிவினையை இந்தியாவில் உள்ள கட்சிகள் ஒப்புக்கொள்ளுமாயின், அவ்விதமே அதை அமலுக்குக் கொண்டு வரவேண்டும்.

2. பொதுவாக மாகாணங்களுக்கு, தங்கள் எதிர்காலத்தை நிர்ணயிக்க சுதந்திரம் இருக்க வேண்டும்.

3. தேர்தல்களில் வாக்கு அளிப்பதற்கு வசதியாக வங்காளத்தையும் பஞ்சாபையும் பிரிக்க வேண்டும்.

4. அஸ்ஸாமைச் சேர்ந்த சில்ஹெட் ஜில்லாவில் முஸ்லிம்களே பெரும்பான்மையோராக இருக்கின்றனர். எனவே சில்ஹெட் விரும்பினல், வங்காளத்தைப் பிரிப்பதால் ஏற்படும் முஸ்லிம் மாகாணத்தில் சேர உரிமை அளிக்க வேண்டும்

5. வடமேற்கு எல்லைப்புற மாகாணம் இந்தியாவின் எந்தப் பிரிவில் சேர விரும்புகிறது என்பதை பொதுத் தேர்தலின்மூலம் தீர்மானிக்க வேண்டும்.

இடைக்கால அரசாங்கத்தில் முஸ்லிம் லீக் இடைவிடாமல் காங்கிரசுக்கு முட்டுக் கட்டை போட்டு வந்தது. அதிகாரிகளி

டையே வகுப்பு வேற்றுமை அதிகமாகி அராஜகம் பரவத் தொடங்கியது. மந்திரி சபையில் முஸ்லிம் லீக் உறுதியாக நிலைத்துவிட்டதால், அதைக் கட்டுப்பாட்டிற்குள் வைக்க காங்கிரஸ் தலைவர்கள் சக்தியற்றவர்களாக இருந்தார்கள். அதிகார பீடத்திலிருந்து முஸ்லிம் லீகை அகற்ற அரசாங்கமும் விரும்பவில்லை. எனவே, நேருஜி கூறியது போல், தலைவலியைப் போக்குவதற்காக காங்கிரஸ் மேலிடத்தார் தலையை வெட்டிவிட இசைந்தார்கள்! மவுண்ட்பாட்டன் திட்டத்தில் அடங்கியிருந்த பிரிவினைக் கொள்கையை மே 1-ஆம் தேதி அவர்கள் அங்கீகரித்தனர்.

அதற்குப் பிறகு காந்திஜி, தாம் டில்லியில் இருக்க வேண்டிய அவசியம் ஏதுவும் இல்லை என்று கருதி, மே முதல் வாரக் கடைசியில் திரும்பவும் பீகாருக்குச் சென்றார். துரதிர்ஷ்டம் வாய்ந்த அந்த மாகாணத்தில் முறிந்து கிடந்த ஹிந்து-முஸ்லிம உறவை மீண்டும் நிலை நிறுத்தி, அவர்களிடையே ஒற்றுமை ஏற்படுத்துவதற்கான தமது தொண்டைத் தொடர்ந்து செய்யவே காந்திஜி அங்கே சென்றார். இந்தியாவைப் பிளப்பதை எப்போதும் போலவே காந்திஜி எதிர்த்துவந்தார். குறிப்பாக பஞ்சாபையும், வங்காளத்தையும் பிரிப்பதையும், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தின் எதிர்கால அரசியலை நிர்ணயிப்பதற்காக பொது ஜன வாக்கு எடுப்பதையும் காந்திஜி வன்மையாகக் கண்டித்தார். முஸ்லிம் லீகின் பிரிவினைத் திட்டத்தைத் தாங்கள் அங்கீகரிப்பதற்கு விலையாக வங்காளத்தையும் பஞ்சாபையும் பிரிக்க வேண்டும் என்று காங்கிரஸ் தலைவர்கள் வற்புறுத்தினர். மவுண்ட்பாட்டனின் பிரிவினைத் திட்டத்தை அமலுக்குக் கொண்டுவருவதில் முஸ்லிம் லீக் ஒத்துழைப்பதற்கு விலையாகவே, வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் பொதுஜன வாக்கு எடுப்பதென்று முடிவு செய்தனர். பொதுஜன வாக்கு எடுப்பது, அந்த மாகாணத்தை பாகிஸ்தானில் சேர்ப்பதற்கான ஒரு யுக்தியேயாகும். ஏனெனில், அப்போது அம்மாகாணத்தில் காங்கிரஸ் அரசாங்கமே இருந்து வந்தது. சட்டசபையில் காங்கிரஸ் அங்கத்தினர்களே பெரும்பான்மையோராக இருந்தனர். புதிதாகத் தேர்தல் நடத்தி அப்பிரச்னையை முடிவு செய்வதை அம்மாகாண காங்கிரஸ் தலைவர்கள் கடுமையாக எதிர்த்தனர். இடைக்கால அரசாங்கத்தில் முஸ்லிம் லீக் தொடர்ந்து முட்டுக்கட்டைப் போட்டுவருவதைக் குறித்து பிரிட்டிஷார் மேற்கொண்ட நிலை, காந்திஜிக்கு மிகவும் கலக்கத்தைக் கொடுத்தது. அரசாங்க அதிகாரிகளிடையே கூட ஒருதலைப்பட்சமான போக்கு தாண்டவமாடத் தொடங்கியது. அந்த விபரீதத்தில் பிரிட்டிஷ் அதிகாரிகளும் பங்கு எடுத்துக் கொண்டனர். இவற்றையும், இவை போன்ற மற்ற விஷயங்களையும் குறித்து காந்திஜி மவுண்ட்பாட்டனுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் குறிப்பிட்டிருந்தார்.

மவுண்ட்பாட்டன் சாமர்த்தியமாகச் செய்த ஓர் ஏற்பாட்டின் பலனாக, காந்திஜி டில்லியில் இருந்தபோது இரண்டு தடவை

ஜின்னைவை சந்தித்துப் பேசினர். அமைதியைப் பாதுகாக்க வேண்டும் என்று இருவரும் (காந்திஜியும் ஜின்னவும்) வேண்டு கோள் விடுத்திருப்பதால், பலாத்காரம் எதுவுமின்றி நியாயமான முறையிலேயே பாகிஸ்தானைப் பெறவேண்டிய பொறுப்பு ஜின்னவைச் சார்ந்திருக்கிறது என்பதை காந்திஜி வற்புறுத்தினர். ஜின்னவோவெனில், பாகிஸ்தான் பிரச்னை எத்தகைய விவாதத்திற்கும் உட்பட்ட ஒரு விஷயம் அல்ல என்று கூறிவிட்டார்.

தமது திட்டத்தை சம்பந்தப்பட்ட எல்லா அரசியல் கட்சிகளும் இறுதியாகப் பரிசீலனை செய்யும் தேதி 1947 மே 17 என்று மவுண்ட்பாட்டன் நிச்சயித்திருந்தார். இதன் மத்தியில், பிரிட்டிஷ் மந்திரி சபையின் அங்கீகாரத்திற்காக வைஸ்ராய் அனுப்பியிருந்த திட்ட நகலில் அவர்கள் சில முக்கியமான மாறுதல்களைச் செய்திருந்தனர். அந்த மாறுதல்களை நேருஜி மிகவும் கடுமையாகக் கண்டித்ததால், லார்டு மவுண்ட்பாட்டன் அந்தக் கூட்டத்தை ஜூன் 2-ஆம் தேதிக்கு ஒத்திவைக்கும்படி நேர்ந்தது. பின்னர் அரசியல் சீர்திருத்தக் கமிஷனரான வி. பி. மேனன் அத்திட்டத்தில் சில திருத்தங்களைச் செய்தார். அவ்விதம் திருத்தப்பட்ட திட்டத்தை எல்லாக் கட்சிகளும் ஒப்புக்கொண்டன. அதை அடிப்படையாகக் கொண்ட இந்திய சுதந்திர மசோதா பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அவசரம் அவசரமாக நிறைவேறியது. கடைசியாக அம்மசோதா சட்டமாகி, 1947 ஆகஸ்டு மாதம் 15-ஆம் தேதி அமலுக்கும் வந்தது. அதன் பலனாக சுதந்திர இந்தியாவும் பாகிஸ்தானும் ஜனனமாயின.

அந்தத் தேதிக்கு முன் நான்கு பிரச்னைகளையொட்டி காந்திஜி தீவிர கவனம் செலுத்தி வந்தார்:

1. முஸ்லிம் லீகின் கோரிக்கைகளுக்கு காங்கிரஸ் இணங்கினலன்றி, ஆகஸ்டு 15-ஆம் தேதிக்குப் பின்னரும் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி நீடிக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்படலாம் என்று சமரசப் பேச்சுகளின்போது பிரிட்டிஷ் அதிகாரிகள் குறிப்பிட்டதேயாகும். அதற்கு மேலும் பிரிட்டிஷ் ஆட்சி நீடிப்பதை ஓர் ஆபத்தாகவே காந்திஜி கருதினர்.

2. ஹிந்து-முஸ்லிம்களின் பிளவுக்குக் காரணமாக இருந்த பாகிஸ்தான் பிரச்னை தீர்ந்துபோய்விட்டதால், பிரிவினையின் காரணமாக எழும் எல்லாப் பிரச்னைகளையும் காங்கிரசும் முஸ்லிம் லீகும் நேரடியாக விவாதித்து முடிவு செய்துகொள்ள வேண்டும். முன்போல் ஒவ்வொரு விஷயத்தையொட்டியும் பிரிட்டிஷாரின் தலையீட்டை நாடக்கூடாது. எனவே, ஜின்னவின் விருப்பம் நிறைவேறிவிட்டதால், அவர் இனி காங்கிரசுடன் நேரடியாகக் கலந்து எல்லாப் பிரச்னைகளையும் தீர்த்துக் கொள்ளவேண்டும். வைஸ்ராயின் உதவியை நாடக் கூடாது.

3. மவுண்ட்பாட்டன் திட்டத்தை காங்கிரஸ் ஒப்புக் கொண்டுவிட்டதால், எல்லைப்புற மாகாணம் இந்தியாவைச் சேர்ந்த பகுதி என்ற பேச்சிற்கு இடமில்லாமல் போய்விட்டது.

அந்த மாகாணம் பாகிஸ்தானைச் சேர்ந்த பகுதியாகிவிட்டதால், எவ்வித தகராறும் குழப்பமுமின்றி அது காங்கிரஸ் இந்தியாவிலிருந்து பாகிஸ்தானுக்கு மாற வேண்டும் என்று காந்திஜி விரும்பினார். எனவே, கான் சகோதரர்களை ஜின்னா அழைத்து பாகிஸ்தானில் எல்லைப்புற மாகாணத்தின் அந்தஸ்து எவ்விதம் இருக்கும் என்பதை அவர்களுக்கு விளக்கி சமரசமாக முடிவு செய்து கொள்ள வேண்டும் என்றும், அப்படியாயின் பொதுஜன வாக்கு எடுக்க வேண்டிய அவசியம் இராமற்போகும் என்றும் ஜின்னாவுக்கு யோசனை கூறும்படி மவுண்ட்பாட்டனை காந்திஜி கேட்டுக் கொண்டார். மவுண்ட்பாட்டனும் அவ்விதம் ஜின்னாவுக்கு யோசனை கூறவே, வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திற்கும் காங்கிரசுக்கும் யாதொரு சம்பந்தமும் இருக்கக் கூடாது என்றும், அந்த மாகாணப் பிரச்னையை தமது விருப்பப்படி தீர்த்துக் கொள்ளுமாறு விட்டுவிட வேண்டும் என்றும் ஸ்ரீ ஜின்னா கூறிவிட்டார். அவ்விதம் விட்டுவிடுவது, காங்கிரசைப் பொறுத்த வரையில் தற்கொலைக்கு ஒப்பாகும் என்று காந்திஜி அபிப்பிராயப்பட்டார்.

எனவே, எல்லைப்புற மாகாணத்தில் பொதுஜன வாக்கு எடுப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அந்த மாகாணம் இந்தியாவுடன் சேருவதா அல்லது பாகிஸ்தானுடன் சேருவதா என்பதே வாக்கு எடுப்பதற்கான பிரச்னையாக இருந்தது. அது ஒரு போலி பிரச்னை என்று கான் சகோதரர்கள் கருதினர். பாகிஸ்தானைப் பற்றிய முழு விவரமும், பாகிஸ்தானில் எல்லைப்புற மாகாணத்தின் அந்தஸ்து என்ன என்பதும் தங்களுக்குத் தெரியும் வரையில், அம்மாகாணம் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் வெளியே உள்ள ஒரு தனி மாகாணமாக அதாவது பட்டாணியர்களின் மாகாணமாகத் திகழ வேண்டும் என்றும் அவர்கள் அபிப்பிராயப்பட்டனர்; அதன் பின் தாங்கள் எதனுடன் சேருவது என்பதை முடிவு செய்வதாகவும் கூறினர். பொதுஜன வாக்கு எடுப்பதால் அவர்களிடையே வேற்றுமை ஏற்பட்டு, மீண்டும் பண்டைய கெட்ட வழக்கமான ரத்தப் பகை உண்டாகி விடும் என்றும் அவர்கள் கூறினர். அத்தகைய விபரீதத்திலிருந்து பட்டாணியர்களைத் தடுக்கவே கான் சகோதரர்கள் ஆயுள் முழுவதும் பாடுபட்டு வந்தார்கள். கான் சகோதரர்கள் கூறியதை காந்திஜி ஒப்புக் கொண்டார். ஆனால், நேருஜியின் கருத்து அதற்கு நேர்மாறாக இருந்தது. பொதுஜன வாக்கு எடுப்பைத் தவிர்க்க முற்படுவது கோழைத்தனம் என்றும், ஜனநாயகத்திற்கு முரணானது என்றும் நேருஜி கூறினார். அதன் பின் நேருஜி கூறுவதற்கு இணங்கி நடந்து கொள்ளுமாறு கான் அப்துல் கபார் கானுக்கு காந்திஜி ஆலோசனை கூறினார். கான் சகோதரர்களை முதன் முதலாக காந்திஜியினிடம் அழைத்து வந்தவர் நேருஜிதானே.

எல்லைப்புற மாகாணத்தில் பொதுஜன வாக்கு எடுப்பு நடந்தது. கான் சகோதரர்களும், குதாய் கித்மத்கார் ஸ்தாபன

மும் அதில் கலந்து கொள்ளவில்லை. பொதுஜன வாக்கு எடுப்பு தங்களுக்குச் சாதகமாக இருக்கவேண்டும் என்பதற்காக, முஸ்லிம் லீக் மிரட்டல்களிலும், பலாத்காரத்திலும் ஈடுபடுவதாக கான் சகோதரர்கள் புகார் கூறினர். அம் மாகாண அதிகாரி களும் பகிரங்கமாக முஸ்லிம் லீகை ஆதரித்தனர். அவ்விவரங் களை காந்திஜி வைஸ்ராய்க்கு அறிவித்தார். அவ்விபரீதங்களைத் தடுக்க வைஸ்ராய் தம்மால் இயன்றவரை முயற்சி செய்தார். என்றாலும், அவரது முயற்சி பலனைக் கொடுக்கவில்லை. இறுதி யாக எல்லைப்புற மாகாணம் பாகிஸ்தானைச் சேர்ந்த ஒரு பகுதி யாயிற்று.

4. கடைசியாக, காஷ்மீர் பிரச்னையும் காந்திஜியின் கவ னத்தை ஈர்த்து வந்தது. 1946-இல் நேருஜி காஷ்மீரில் கைதி யாகி சில நாட்கள் அங்கிருந்தார். அதன் பின் மறுபடியும் காஷ்மீருக்குச் செல்ல அவருக்கு அவகாசம் கிடைக்கவில்லை. இதன் மத்தியில் ஷேக் அப்துல்லா கைதியாகி சிறையில் இருந் தார். எனவே, நேருஜி காஷ்மீருக்குச் செல்லவேண்டும் என்று துடித்துக்கொண்டிருந்தார். திருவாங்கூர், ஹைதராபாத் முதலிய சமஸ்தானங்களைப் போலவே காஷ்மீரும் சுதந்திர சமஸ்தான மாகத் திகழ வேண்டும் என்று காஷ்மீர் மகாராஜாவும், அவரது முதல் மந்திரி காக்கும் கனவு கண்டு வந்தனர். எனவே நேருஜி போன்றவர்களைத் தங்கள் எல்லைக்கு வராமல் தடுக்க மகா ராஜாவும் காஷ்மீர் பிரதம மந்திரியும் உறுதி கொண்டிருந்தனர். பின்னர் பண்டித நேருவின் ஸ்தானத்தில் காஷ்மீருக்குத் தாம் போவதாக காந்திஜி கூறினார். ஆனால் காந்திஜி அங்கே செல்லு வதை சர்தார் பட்டேல் ஆட்சேபித்தார். மகாராஜாவின் அனு மதிக்காகக் காத்துக் கொண்டிராமல் தாம் போவதாக நேருஜி கூறினார் என்றாலும், கடைசியில் காந்திஜியே காஷ்மீருக்குச் சென்றார்.

தமது காஷ்மீர் விஜயம் முடிந்ததும் காந்திஜியின் மனம் மீண்டும் நோவாகாலியை நோக்கிச் சென்றது. அங்கே அவர் செய்ய வேண்டிய ஏராளமான அலுவல்கள் இருந்தன. சுதந்திர விழாக் கொண்டாட்டங்கள் நடைபெறும்போது அவர் தலை நகரில் (டில்லியில்) இருக்க விரும்பவில்லை. இந்தியா துண்டாடப் படுவதும், சகோதரனை சகோதரன் பலாத்காரமாகத் தாக்குவ தும் மகிழ்ச்சிக் கொண்டாட்டத்திற்கான சமயம் அல்ல, துக்ககர மான சமயமே என்றும், தம்மைத் தாம் சோதனை செய்துகொள்ள வேண்டிய சமயம் என்றும் அவர் கருதினார். எனவே, அவர் காஷ்மீரிலிருந்து டில்லிக்கு வராமலேயே ஆகஸ்டு 8-ஆம் தேதி கல்கத்தாவுக்குச் சென்றார். 1946 ஆகஸ்டு மாதத்தில் கல்கத்தா வில் முஸ்லிம்கள் ஏராளமான ஹிந்துக்களைப் படுகொலை செய்ததி லிருந்து, அங்கே உண்மையான அமைதி ஏற்படவே இல்லை. எனவே, கல்கத்தாவில் வகுப்புக் கலகத் தீ ஜ்வாலை விட்டுக் கொண்டிருக்கையில், காந்திஜி நோவாகாலிக்குச் செல்லுவதால் யாதொரு பலனும் ஏற்படாது என்று சுஹ்ரவர்தி காந்திஜியிடம்

முறையிட்டார். கல்கத்தாவில் சங்கி அமைதி ஏற்படும்படி செய்யவேண்டும் என்று வங்காள கவர்னர் சர் பிரடரிக் பர்ரோஸ் கேட்டுக் கொண்டதற்கு இணங்காமல் மறுத்து வந்த காந்திஜி, சுஹ்ரவர்த்தியின் வேண்டுகோளுக்கு இசையும்படி நேர்ந்தது. ஆனால் கல்கத்தாவில் அமைதி ஏற்படும் விஷயமாக தம்முடன் ஒத்துழைப்பதாக சுஹ்ரவர்தி உறுதி கூறினால், அங்கே ஹிந்து, முஸ்லிம்களிடையே அந்நியோன்னியம் ஏற்படும்படி செய்யத் தாம் முயற்சிப்பதாக காந்திஜி ஒரு நிபந்தனை விதித்தார். பின்னர் என்ன நேர்ந்தது? சுதந்திரம் ஏற்பட்ட பிறகு அங்கே பீறிட்டெழுந்த சமூகக் கலகச் சூறாவளியை அடக்குவதற்காக காந்திஜி சாகும் வரையில் உண்ணாவிரதம் மேற்கொண்ட தன் பலனை, ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே எவ்வாறு இதய ஒற்றுமை ஏற்பட்டது? 'ஒரே ஒருவர் அடங்கிய எல்லை ராணுவம்' என்று மவுண்ட்பாட்டன் காந்திஜியை வர்ணித்த காரணம் என்ன? பஞ்சாபில் 55,000 சிப்பாய்களால் அடக்க முடியாத ஒரு நெருக்கடியை காந்திஜி எவ்விதம் சமாளித்தார்? இவையெல்லாம் 'மகாத்மா காந்தி-இறுதிக் கட்டம்' என்ற நூலின் இரண்டாம் பாகத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

சுதந்திரத்திற்குப் பிறகு, காந்திஜியும் பிரிட்டிஷ் அதிகாரிகளும் பரஸ்பரம் ஒரு சில கடிதங்களே எழுதினர். அவற்றில் ஒன்று காந்திஜி மவுண்ட்பாட்டனுக்கு எழுதிய கடிதமாகும். மவுண்ட்பாட்டன் கவர்னர் ஜெனரல் பதவியிலிருந்து விலகிக் கொள்ள விரும்பினார். அவர் இன்னும் சில காலமாவது அப்பதவியில் நீடித்திருக்க வேண்டும் என்று நேருஜி கருதினார். 1947 அக்டோபரில் அதாவது காந்திஜியின் 78-ஆவது ஜெயந்தி வைபவத்தின்போது, கிரிப்ஸ், லார்டு மவுண்ட்பாட்டன் ஆகியோருக்கும் காந்திஜிக்கும் கடிதப்போக்குவரத்து நடந்தது. அதுவே, இந்த உலகில் காந்திஜியின் கடைசி ஜெயந்தி வைபவமாக இருக்க வேண்டும் என்பது விதியாக இருந்தது.

பியாரிலால்

பகுதி ஒன்று

# அரசியல் முட்டுக்கட்டை

## 1

## சந்தித்துப் பேச ஆர்வம்

*இயற்கை வைத்தியசாலை,*
*6, தோடிவாலா ரோடு, புனா.*
*17—6—1944*

*மேன்மை தங்கிய வைஸ்ராய்க்கு,*
*வைஸ்ராய் முகாம்.*

*அன்புள்ள நண்பருக்கு,*

*இந்தக் கடிதம் நீங்கள் ஈடுபட்டுள்ள அலுவல்களையொட்டியதாக இராவிடில், இதை எழுதி நான் உங்களை சிரமப்படுத்தியிருக்கமாட்டேன்.*

*பொது நன்மைக்காக நான் உருவாக ஏதாவது செய்து தீர வேண்டும் என்று தேசம் முழுவதும் எதிர்பார்க்கிறது; வெளி நாட்டினர் கூட எதிர்பார்க்கிறார்கள். அவ்விதம் எதிர்பார்ப்பதற்குக் காரணம் எதுவும் இல்லை. என் உடல் நிலையில் பூரண அபிவிருத்தி ஏற்பட நீண்ட காலம் செல்லலாம் என்பதைக் கூற வருந்துகிறேன். நான் முற்றிலும் குணமடைந்தால் கூட, காங்கிரஸ் காரியக் கமிட்டியினரின் மனத்தை நான் அறிந்து கொண்டாலொழிய என்னால் எதுவும் செய்ய முடியாது. ஒரு கைதி என்ற முறையில் அவர்களைப் பார்க்க அனுமதிக்கும்படி முன்பு நான் வேண்டிக்கொண்டேன். அவ்விதம் அனுமதி கொடுக்கும்படி சுதந்திர மனிதன் என்ற முறையில் இப்போது நான் வேண்டிக் கொள்கிறேன். இவ்விஷயமாக ஒரு முடிவு செய்யுமுன் என்னை நீங்கள் பார்ப்பதாயின், நீண்டதூரம் பிரயாணம் செய்ய டாக்டர்கள் என்னை அனுமதித்த உடனேயே, நீங்கள் எங்கே வரச் சொன்னாலும் அங்கே நான் மகிழ்ச்சியுடன் வரத் தயாராக இருக்கிறேன்.*

நான் சிறையில் இருந்தபோது எனக்கும் அதிகாரிகளுக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தின் பிரதிகளை நண்பர்களின் சொந்த உபயோகத்திற்காக நான் அனுப்பியிருக்கிறேன். பத்திரிகை களிலும் வெளியிட அரசாங்கம் எனக்கு அனுமதி கொடுப்பது தான் நியாயமாகும் என்று எனக்குத் தோன்றுகிறது.

30-ஆம் தேதி வரையில் மேற்கண்ட விலாசத்திற்கே எனக்குக் கடிதம் எழுதலாம்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 2

# தீவிரமான கருத்து வேற்றுமை

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 22-6-1944.

அன்புள்ள ஸ்ரீ காந்தி.

உங்களுடைய ஜூன் 17-ஆம் தேதிக் கடிதம் கிடைத்தது. சமீபத்தில் நடந்த கடிதப் போக்கு வரத்திலிருந்து நமக்குள் இருக்கும் தீவிரமான கருத்து வேற்றுமை வெளியாகியிருக்கிறது. எனவே, தற்போது நாம் சந்தித்துப் பேசுவதால் எத்தகைய பலனும் ஏற்படாது; அதற்கு மாறாக வீண் நம்பிக்கையும், அதன் பின் ஏமாற்றமுமே ஏற்படும்.

காரியக் கமிட்டி அங்கத்தினர்களைப் பார்க்க வேண்டும் என்ற உங்களுடைய வேண்டுகோள் சம்பந்தமாகவும் அதே வாதம் பொருந்தும். 'இந்தியாவிலிருந்து வெளியேறுக' என்ற தீர்மானத்தில் நீங்கள் உறுதியுடன் இருப்பதாக சமீபத்தில் பகிரங்கமாக அறிவித்திருக்கிறீர்கள். உடனடியான எதிர் காலத்திற்கு அந்தக் கொள்கை நியாயமானதென்றோ அல்லது அனுபவ சாத்தியமானதென்றோ நான் கருதவில்லை.

நீங்கள் குணமடைந்த பின், நீங்கள் மேற்கொண்டு தீர ஆலோசனை செய்தபின், இந்தியாவின் நலன் அபிவிருத்தியடைவதற்கான திட்டவட்டமான, உருவான யோசனையை நீங்கள் கூறுவீர்களாயின், அதை நான் மகிழ்ச்சியுடன் ஆலோசிக்க முற்படுவேன்.

நமக்குள் நடந்த கடிதப் போக்குவரத்தை, என்னைக் கலந்து கொள்ளாமலேயே நீங்கள் உங்கள் நண்பர்களுக்கு வழங்கியிருக்கிறீர்கள். அக்கடிதங்கள் பத்திரிகைகளிலும் வெளியாகி

விட்டன. எனவே, நீங்கள் காவலில் இருந்தபோது எழுதப்பட்ட அரசியல் கடிதங்கள் எல்லாவற்றையும் வெளியிடும்படி நான் உத்தரவு பிறப்பித்திருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்.

## 3

# கெல்டருக்கு அளித்த பேட்டி

"தில்குஷா;"
பஞ்சகனி 15-7-1944

அன்புள்ள நண்பருக்கு,

"நியூஸ் கிரானிகிள்" பத்திரிகையைச் சேர்ந்த ஸ்ரீ கெல்டருக்கு நான் கொடுத்த பேட்டி விவரங்கள்* இப்போது பத்திரிகைகளில் வெளியாகியுள்ளன. 17-6-1944-இல் நான் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டுள்ள எனது வேண்டுகோளில் ஒன்றையாவது நீங்கள் இப்போது அங்கீகரிக்கலாம்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 4

வைஸ்ராய் முகாம், இந்தியா,
22-7-1944

அன்புள்ள ஸ்ரீ காந்திக்கு,

உங்கள் 15-ஆம் தேதிக் கடிதத்திற்கு நன்றி. ஸ்ரீ கெல்டருக்கு நீங்கள் அளித்த பேட்டி விவரங்களையும் அவற்றையொட்டிய உங்களுடைய விளக்கத்தையும் பார்த்தேன். அவற்றைப் பற்றி பலன் தரத்தக்க முறையில் நான் எத்தகைய வியாக்கியானமும் செய்வதற்கில்லை. ஆனால், சென்ற கடிதத்தில் நான் கூறியிருந்ததையே திருப்பிக் கூறுகிறேன். அதாவது, திட்டவட்டமான, உருவான ஒரு யோசனையை நீங்கள் சமர்ப்பிப்பீர்களாயின், அதை மகிழ்ச்சியுடன் பரிசீலனை செய்யத் தயாராக இருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்.

---

* ஸ்ரீ கெல்டருக்கு காந்திஜி அளித்த பேட்டியின் முழு விவரங்களையும் இந்தத் தொகுப்பின் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

# 5

# கதவைத் தட்டிக் கொண்டிருப்பேன்

பஞ்சகனி முகாம்,
27-7-1944.

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுடைய 12-ஆம் தேதிக் கடிதம் எனக்கு ஏமாற்றத்தைக் கொடுத்திருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். எனினும் ஏமாற்றம் ஏற்பட்டாலும், அதை லட்சியம் செய்யாமல் வேலை செய்வது எனக்குப் பழக்கமாகியிருக்கிறது. நீங்கள் கேட்டபடி இதோ என்னுடைய உருவான யோசனையைக் கூறுகிறேன்.

பின் வருமாறு பிரகடனம் செய்யும்படி நான் காரியக் கமிட்டிக்கு ஆலோசனை கூறத் தயாராக இருக்கிறேன்:

"நிலைமையில் தற்போது ஏற்பட்டுள்ள மாறுதல்கள் காரணமாக, 1942 ஆகஸ்டில் நிறைவேறிய தீர்மானத்தில் கண்டுள்ளபடி சட்ட மறுப்பில் ஈடுபடக் கூடாது. இந்தியாவுக்கு சுதந்திரம் அளிப்பதாக பிரிட்டன் பிரகடனம் செய்து, இந்தியா சட்ட சபைக்குப் பொறுப்பான தேசீய அரசாங்கத்தையும் அமைக்குமாயின், பிரிட்டனின் யுத்த முயற்சியில் காங்கிரஸ் பூரணமாக ஒத்துழைக்க வேண்டும். யுத்தம் நடைபெறும் வரையில் தற்போது நடைபெறுவதைப் போலவே ராணுவ நடவடிக்கைகள் தொடர்ந்து நடைபெற்றுவர வேண்டும். ஆனால் அவற்றிற்கான செலவை இந்தியாவின் தலையில் சுமத்தக் கூடாது. இந்தியாவுடன் ஒரு சமரசத்திற்கு வரவேண்டுமென்ற விருப்பம் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு இருக்குமாயின், கடிதப் போக்குவரத்துக்குப் பதிலாக, சிநேகபாவமான பேச்சுகள் ஆரம்பமாக வேண்டும். எனினும், நான் உங்கள் கையில் இருக்கிறேன். கௌரவமான சமரசம் ஏற்படுவதற்கான அற்ப நம்பிக்கை இருக்கும் வரையில் கூட, நான் தொடர்ந்து கதவைத் தட்டிக் கொண்டுதான் இருப்பேன்."

மேற்கண்ட கடிதத்தை எழுதிய பிறகு, லார்டு சபையில் லார்டு மன்ஸ்டர் பேசியிருப்பதை நான் பார்த்தேன். அச்சபையில் அவர் கொடுத்த சுருக்கமான விவரங்கள் எனது யோசனையைப் பிரதிபலிக்கின்றன. அவற்றை அடிப்படையாகக் கொண்டே பரஸ்பரம் சிநேகபாவமான பேச்சை ஆரம்பிக்கலாம்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 6

# தலைவர்களுக்கு நிபந்தனைகள்

*வைஸ்ராய் மாளிகை,*
*புதுடில்லி,*
*15-8-1944.*

அன்புள்ள ஸ்ரீ காந்திக்கு,

உங்களுடைய 27-7-1944 கடிதம் கிடைத்தது. நன்றி.

இந்தியப் பிரச்னை சம்பந்தமாக ஒரு சமரச முடிவுக்கு வர வேண்டும் என்பதில் பிரிட்டிஷ் சர்க்கார் மிக்க ஆர்வம் உடைய வர்களாக இருக்கிறார்கள். ஆனால், பேச்சு வார்த்தைகளுக்கு அடிப்படையாக நீங்கள் கூறியுள்ள யோசனைகள் சிறிதும் ஒப்புக் கொள்ளத் தக்கவை அல்ல. சென்ற மாதம் 28-ஆம் தேதி பார்லிமெண்டில் ஸ்ரீ அமெரி விடுத்த அறிக்கையை நீங்கள் வாசித் திருந்தால், நீங்கள் கூறியுள்ள யோசனைகள் ஒப்புக்கொள்ளத் தக்கவை அல்ல என்பதை உணர்ந்து கொள்வீர்கள். 1942 ஏப்ரல் மாதம் சர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸிடம் மௌலானா அபுல் கலாம் ஆஸாத் கூறியவற்றைப் போலவே உங்களுடைய யோசனைகளும் இருக்கின்றன. எந்தக் காரணங்களுக்காக பிரிட்டிஷ் சர்க்கார் அந்த யோசனைகளை நிராகரித்தார்களோ, அதே காரணங்களுக்காகவே இந்த யோசனைகளையும் நிராகரிக் கின்றனர்.

இந்தக் காரணங்களையெல்லாம் மறுபடியும் விவரித்துக் கொண்டிருக்காமல், அப்போது பிரிட்டிஷ் அரசாங்கம் தெளி வாகக் கூறிய சில விஷயங்களை உங்களுக்கு நினைவூட்டுகிறேன்.

இந்திய தேசீய வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள முக்கியமான கட்சிகளால் ஒப்புக்கொள்ளப்பட்ட ஓர் அரசியல் திட்டம் உரு வாக வேண்டும்; பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் அவசியமான உடன்படிக்கை ஏற்பாடுகளைச் செய்துகொள்ள வேண்டும். இந்த நிபந்தனைகளின் மீதே, யுத்தம் நின்ற பிறகு தங்குதடையற்ற சுதந்திரம் அளிப்பதாக பிரிட்டிஷ் அரசாங்கம் கூறியது.

யுத்தம் நடந்து கொண்டிருக்கையில், அரசியல் சட்டத்தில் எத்தகைய மாறுதல்களும் செய்வது சாத்தியமில்லை. அரசியல் சட்டத்தில் மாறுதல்கள் செய்தால்தான் நீங்கள் கூறும் விதம் இந்தியா சட்டசபைக்குப் பொறுப்பான "தேசீய அரசாங்கத்தை" அமைக்க முடியும்.

இன, மத சம்பந்தமான சிறுபான்மையோரின் நலன்களை யும், தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நலன்களையும் பாதுகாக்க வேண்டியதும், இந்திய சமஸ்தானங்களுடன் செய்துகொண்

டுள்ள உடன்படிக்கை விதிகளுக்கு முரணின்றி நடந்துகொள்ள வேண்டியதும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கடமையாகும். அந்தக் கடமையை நிறைவேற்ற வேண்டும் என்பதற்காகவே சில நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

மேற்கண்ட நிபந்தனைகளுக்கு உட்பட்டே இடைக்கால அரசாங்கத்தில் கலந்து கொள்ளும்படி இந்தியத் தலைவர்களை பிரிட்டிஷ் அரசாங்கம் அழைத்தது. தற்போதுள்ள அரசியல் சட்டத்தின்படி இடைக்கால அரசாங்கம் செயல்பட வேண்டும் என்பதே அவர்களின் நோக்கமாகும். ஒரு விஷயத்தை நான் தெளிவாகக் கூறிவிடவேண்டும். அதாவது யுத்தம் முடியும் வரையில் அரசாங்கத்தின் மற்றப் பொறுப்புகளிலிருந்து தற்காப்பு, ராணுவ நடவடிக்கைகளைப் பிரித்துவைக்க முடியாது. யுத்தம் நின்று, புதிய அரசியல் சட்டம் அமலுக்கு வரும் வரையில் பிரிட்டிஷ் அரசாங்கமும், கவர்னர் ஜெனரலும் எல்லாத் துறைகளிலும் தங்களுடைய பொறுப்பைக கைவிடாமல் வைத்துக் கொண்டே இருப்பார்கள். யுத்தச் செலவில் இந்தியாவின் பங்கு என்ன என்ற பிரச்னை, முக்கியமாக பிரிட்டிஷ் அரசாங்கமும், இந்திய அரசாங்கமும் சமரசமாகத் தீர்த்துக்கொள்ளவேண்டிய விஷயமாகும்.

எனவே தற்போதுள்ள நிலையில், உங்களுடைய யோசனையை அடிப்படையாகக் கொண்டு விவாதிப்பதால் யாதொரு பலனும் ஏற்படாது. தற்போதுள்ள அரசியல் சட்டத்தின் கீழ் அமைக்கப்படும் ஓர் இடைக்கால அரசாங்கத்துடன் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், மற்றும் முக்கிய சிறுபான்மை சமூகத்தினர் ஒத்துழைக்க விரும்புவார்களாயின், நிலைமையில் நல்ல முன்னேற்றம் ஏற்படலாம் என்று நம்புகிறேன். அத்தகைய இடைக்கால அரசாங்கம் வெற்றி பெறுவதற்கு, அது அமைக்கப்படு முன் புதிய அரசியல் எவ்விதம் தயாரிக்கப்பட வேண்டும் என்பது பற்றி, ஹிந்துக்கள், முஸ்லிம்கள், மற்றுமுள்ள முக்கியமான பிரிவினரிடையே உடன்பாடு ஏற்பட வேண்டும். இந்த உடன்பாடு, முற்றிலும் இந்தியர்களையே பொறுத்த விஷயமாகும். இந்தியத் தலைவர்களிடையே இப்போது இருப்பதைக்காட்டிலும் இன்னும் அதிக ஒற்றுமை ஏற்படும் வரையில், என்னால் கூட எத்தகைய உதவியாவது செய்ய முடியுமா என்பது சந்தேகம்தான். சிறுபான்மையோரின் பிரச்னைகளைத் தீர்ப்பது எளிதல்ல என்பதை உங்களுக்கு நினைவூட்டுகிறேன். பரஸ்பரம் விட்டுக் கொடுப்பதாலும், சகிப்புத் தன்மையினாலும் தான் அவற்றைத் தீர்க்க முடியும்.

யுத்தம் முடிந்த பிறகு, இடைக்கால அரசாங்கம் எவ்வளவு காலத்திற்கு அமலில் இருந்துவரும் என்பது, புதிய அரசியல் திட்டம் எவ்வளவு விரைவில் உருவாக்கப்படும் என்பதையே பொறுத்திருக்கிறது. புதிய அரசியலைத் தயாரிக்கும் விஷேடமாக இந்தியத் தலைவர்கள் ஒத்துழைக்க முற்பட்ட உடனேயே, அதன்

சம்பந்தமான பூர்வாங்க வேலைகள் ஆரம்பமாகிவிட வேண்டும். புதிய அரசியலைத் தயாரிக்கும் முறையைப் பற்றி அவர்களிடையே உண்மையான சமரச ஒப்பந்தம் ஏற்பட்டுவிடுமாயின், யுத்தம் முடிந்த பின் இறுதியான முடிவுகளைச் செய்யவும், பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் உடன்படிக்கை செய்துகொள்ளவும், அனாவசியமாக காலத்தைச் செலவழிக்க வேண்டிய அவசியம் இராது. அவ்விஷயமாகவும் முக்கிய பொறுப்பு இந்தியத் தலைவர்களையே சார்ந்திருக்கிறது,*

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

# 7
# சர்ச்சிலுக்குக் கடிதம்

தில்குஷா
பஞ்சகனி,
*17—7—1944*

அன்புள்ள நண்பருக்கு,

முன்பு நான் தங்களுக்கு அனுப்பியிருந்த வேண்டுகோளையே மீண்டும் வற்புறுத்தி நேற்று தங்களுக்கு ஒரு கடிதம் எழுதத் துணிந்தேன். இத்துடன் இணைக்கப்பட்டுள்ள கடிதத்தை பிரதம மந்திரிக்கு அனுப்பினாலன்றி, எனது முயற்சி அரைகுறையாக முடியுமென்று நான் கருதுகிறேன். இத்துடன் இணைக்கப்பட்டுள்ள கடிதத்தை எவ்வளவு முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக அனுப்ப நான் உங்களுடைய உதவியை நாடலாமா?

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

---

*வைஸ்ராயின் மேற்கண்ட பதிலைக் குறித்து காந்திஜி 18—8—1944-இல் பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கையொன்றில் கூறியதாவது: "வைஸ்ராய் கூறியுள்ள யோசனையின் சாரம் இதுதான்: எதிர்கால அரசியல் திட்டத்தையொட்டி எல்லா முக்கிய கட்சிகளுக்குமிடையே உடன்பாடு ஏற்பட்டாலொழிய, பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் முக்கிய கட்சிகளுக்கும் இடையே ஒப்பந்தம் ஏற்பட்டாலொழிய இந்தியாவின் அரசியல் நிலையில் யாதொரு மாறுதலும் ஏற்படுவதற்கில்லை. இப்போது இருப்பதைப் போலவே இந்திய அரசாங்கம் தொடர்ந்து நடந்துகொண்டிருக்கும். வைஸ்ராய் தமது பதிலில், உதாரணத்திற்காகவே சில கட்சிகளின் பெயர்களை மாத்திரம் கொடுத்துள்ளார். சந்தர்ப்பம் ஏற்படும்போது, மந்திரவாதியின் பையிலிருந்து வருவதைப் போல மற்றும் பல கட்சிகளின் பெயர்களும் வெளிவரும்! ஆட்சி அதிகாரத்தை பிரிட்டிஷார் எப்போது, எப்படி விட்டுக் கொடுப்பார்கள் என்பதை யார் அறிவார்? பிரிட்டிஷாரின் கையிலிருந்து அதிகாரத்தைக் கைப்பற்றும் சக்தியை இந்திய மக்கள் வளர்த்துக் கொண்டாலன்றி, 40 கோடி மக்கள் மீது தங்களுக்குள்ள அதிகாரத்தை விட்டு விட பிரிட்டிஷார் விரும்பவில்லை என்பது பளிங்கு போல் தெளிவாகத் தெரிகிறது. முற்றிலும் தார்மிக முறைகளால் இந்திய மக்கள் அவ்விதம் கைப்பற்றுவார்கள் என்பதில் எனக்குள்ள நம்பிக்கையை நான் ஒரு காலத்திலும் இழக்கமாட்டேன்."

## 8

(அதனுடன் இணைக்கப்பட்டிருந்த பின்வரும் கடிதம் பிரிட்டிஷ் பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சிலுக்கு காந்திஜி எழுதியது.)

தில்குஷா,
பஞ்சகனி,
*17—7—1944*

அன்புள்ள பிரதம மந்திரிக்கு,

என்னை 'நிர்வாணப் பக்கிரி' என்று நீங்கள் வர்ணித்ததாகக் கூறப்படுகிறது. அந்த 'நிர்வாணப் பக்கிரியை' நசுக்கிவிட நீங்கள் விரும்புவதாகவும் கூறப்படுகிறது. ஒரு பக்கிரியாக இருக்க நான் வெகு காலமாக முயற்சித்து வருகிறேன். அதிலும் நிர்வாணப் பக்கிரியாக இருப்பது இன்னும் அதிகக் கடினமாகும். எனவே, நீங்கள் என்னை அவ்விதம் வர்ணித்திருப்பது, நீங்கள் உத்தேசிக்காவிடினும், ஒரு புகழுரையே ஆகும். இந்த முறையி லேயே இப்போது நான் உங்களை அணுகுகிறேன். என்மீது நம்பிக்கை வைக்கும்படியும், உங்கள் நாட்டின் மக்களுக்காக வும், என் நாட்டின் மக்களுக்காகவும், அவர்களின் மூலம் உலக மக்களுக்காகவும் என்னை உபயோகப்படுத்திக் கொள்ளும்படியும் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள நண்பன்
மோ. க. காந்தி.

## 9

முகாம் : பிர்லா மாளிகை,
பம்பாய்,
*10-9-1944*

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

பிரதம மந்திரிக்கு நான் எழுதிய கடிதம் ஒன்றை அன்புடன் அவருக்கு அனுப்பும்படி கேட்டுக்கொண்டு 17-7-44-இல் உங்க ளுக்குக் எழுதினேன். என் வேண்டுகோளுக்கு இணங்க அது அவருக்கு அனுப்பப்பட்டதா என்பதை நான் அறிந்துகொள்ள லாமா? என்னுடைய கடிதம் வந்து சேர்ந்ததாக இதுவரை யாதொரு பதிலும் இல்லாததாலேயே இந்தக் கடிதம் எழுது கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 10

வைஸ்ராய் முகாம்,
சிம்லா,
13-9-1944

அன்புள்ள காந்திக்கு,

சென்ற 10-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதத்திற்காக வைஸ்ராய் தமது நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறார். 17-7-44-இல் தாங்கள் எழுதிய கடிதம் கிடைக்கவில்லை. அதன் பிரதியையும், அதனுடன் இணைக்கப்பட்ட கடிதத்தையும் அன்புடன் எனக்கு அனுப்புவீர்களா ? அனுப்பினால் வைஸ்ராய் அதைக் கவனித்து ஆவன செய்வார்.

தங்கள் உண்மையுள்ள,
ஈ. எம். ஜெங்கின்ஸ்

## 11

பிர்லா மாளிகை,
மலபார் ஹில், பம்பாய்,
17-9-1944

சர் ஈவான் எம். ஜென்கின்ஸ், கே. ஸி. எஸ். ஐ.,
வைஸ்ராய்முகாம், இந்தியா.

அன்புள்ள சர் ஈவானுக்கு,

13-ஆம் தேதி கடிதத்துக்கு நன்றி.

ஒரு முக்கியமான கடிதம் குறித்த இடத்திற்குப் போய்ச் சேராமல் தவறியது என் அனுபவத்திலேயே இதுதான் முதல் தடவையாகும். கைதவறிய கடிதத்தின் பிரதியை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அதற்கு உரிய காலம் கடந்துவிட்ட தெனினும், அதை மிக மிக முக்கியமான ஒரு கடிதமாக நான் கருதுகிறேன். என் உள்ளத்தைத் துருவிப் பார்த்ததன் பலனாக அது எழுதப்பட்டதாகும். எனவே, காலம் கடந்த இச் சமயத்திலும் எனது கடிதம் பிரதம மந்திரிக்கு அனுப்பப்பட வேண்டும் என்றே நான் விரும்புகிறேன்.

உங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 12

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி,
20-9-1944.

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

சர் ஈவான் ஜென்கின்ஸ் ரஜாவில் சென்றிருப்பதால், நான் உங்களுக்கு எழுதுகிறேன். உங்களுடைய 17-ஆம் தேதி கடிதம் வந்தது.

பிரதம மந்திரிக்குத் தாங்கள் எழுதிய கடிதத்தின் பிரதி, துரிதமான விமானத் தபாலில் இன்று அவருக்கு அனுப்பப் பட்டுள்ளது.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்
வைஸ்ராயின் உதவி அந்தரங்கக் காரியதரிசி

## 13

## சர்ச்சிலின் நன்றி

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி,
2-11-1944

அன்புள்ள ஸ்ரீ காந்திக்கு,

ஜூலை மாதம் 17ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதம் வந்து சேர்ந்ததாகவும், அதற்காக நன்றி செலுத்துவதாகவும் பிரதம மந்திரி அறிவித்துக்கொள்ள விரும்புகிறார்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

## 14

சேவா கிராமம்,
3-12-1944

அன்புள்ள நண்பருக்கு,

சென்ற ஜூலை 17-ஆம் தேதி பிரதமர் சர்ச்சிலுக்கு நான் எழுதிய கடிதம் புனிதத் தன்மை வாய்ந்ததென்பது எனது அபிப்

பிராயம். பொது மக்களுக்குத் தெரிய வேண்டும் என்பதற்காக அதை நான் எழுதவில்லை. எனினும் அதன் புனிதத் தன்மைக்கு இழுக்கு ஏற்படாமல் அதைப் பகிரங்கமாக வெளியிட வேண்டிய சந்தர்ப்பம் ஏற்படலாம். இருந்தாலும், பிரதம மந்திரியின் அனுமதியின்றி அதை வெளியிட நான் விரும்பவில்லை. அதை வெளியிட வேண்டிய அவசியம் ஏற்பட்டால், பிரதம மந்திரியின் அனுமதியை நான் பெறமுடியுமா?

அக் கடிதத்தில் உள்ள விவரங்களை ஒரு சில நண்பர்களுக்குக் காட்டினேன் என்பதை உங்களுக்கு நான் சொல்ல வேண்டும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 15

வைஸ்ராய் முகாம்,
புது டில்லி,
21-12-1944

எனது அன்புள்ள ஸ்ரீ காந்திக்கு,

உங்களுடைய கடிதத்தை வெளியிடுவதற்கு பிரதம மந்திரி இசைந்துள்ளார். உங்களுடைய கடிதம் வந்து சேர்ந்ததாக அவர் பதில் எழுதியதையும் நீங்கள் வெளியிட வேண்டும் என்பது அவரது விருப்பம்.

தங்கள் உண்மையுள்ள,
ஈ. எம். ஜென்கின்ஸ்.

பகுதி இரண்டு

# சிம்லா மகாநாடு

## 16

(தந்தி)

## 'நான் பிரதிநிதி அல்ல'

பஞ்சகனி,
14-6-1945

வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசிக்கு,
புது டில்லி.

வைஸ்ராயின் வானொலிப் பிரசங்கத்தை வாசித்தேன். சிம்லா மகாநாட்டுக்கு அழைக்கப்பட்டிருப்பவர்களின் பெயர்களை அவர் தமது பிரசங்கத்தில் குறிப்பிட்டுள்ளார். அதில் என்னுடைய பெயரும் இருக்கிறது. நான் எந்த ஸ்தாபனத்தின் பிரதிநிதியும் அல்ல என்று ஏற்கனவே தெளிவாகக் கூறியிருக்கிறேன். எனவே, காங்கிரசின் பிரதிநிதி என்ற முறையில் நான் மகாநாட்டுக்கு வருவதற்கில்லை. காங்கிரசின் பிரதிநிதியாக காங்கிரஸ் அக்கிராசனரோ அல்லது அவரால் நியமிக்கப்படுபவரோதான் வரமுடியும். தப்பெண்ணம் எதுவும் ஏற்படக் கூடாது என்பதற்காகவே அவசரமாக இதை அனுப்புகிறேன்.

காந்தி

## 17

(தந்தி)

புது டில்லி,
14-6-1945

மோ. க. காந்தி அவர்களுக்கு,
பஞ்சகனி.

இன்று மாலை என்னுடைய வானொலிப் பிரசங்கத்தை நீங்கள் கேட்டிருக்கலாம். இதன் முழு விவரமும், அதே சமயம் பார்லிமெண்டில் இந்தியா மந்திரி விடுத்துள்ள அறிக்கையும் நாளை

பத்திரிகைகளில் வெளியாகும். நான் கூட்ட உத்தேசித்திருக்கும் மகாநாட்டிற்கு வர நீங்கள் இசைவீர்கள் என்று நம்புகிறேன். இம் மாதம் 25-ஆம் தேதி சிம்லாவில் உள்ள வைஸ்ராய் ஜாகையில் முதல் கூட்டம் நடைபெறும். என்னுடைய அழைப்பை நீங்கள் அங்கீகரித்தால், மகாநாடு கூடுவதற்குமுன் உங்களுடன் விவாதிப்பதை வரவேற்கிறேன். அவ்விதம் பேசுவதற்காக 24-ஆம் தேதி சிம்லா வைஸ்ராய் விடுதிக்கு மாலை 3 மணிக்குத் தாங்கள் வர சௌகரியப்படுமா? நீங்கள் இந்த அழைப்பை அங்கீகரிப்பீர்கள் என்ற நம்பிக்கையுடன் ஆம்ஸ்டெல் என்ற பங்களாவை உங்களுடைய ஜாகைக்காக ஏற்பாடு செய்திருக்கிறேன்.

வைஸ்ராய்

# 18

(தந்தி)

பஞ்சகனி,
15-6-1945

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி.

தாங்கள் அன்புடன் அனுப்பிய அழைப்புத் தந்தி கிடைத்தது. நேற்று நான் அனுப்பிய தந்தியில் குறிப்பிட்டுள்ளபடி உங்களுடைய மகாநாட்டில் எனக்கு இடம் இல்லை. ஒரு தனி நபர் என்ற முறையில் நான் ஆலோசனை மாத்திரமே கூற முடியும். அரசியலில் சாதி ஹிந்துக்கள் என்றோ சாதி அல்லாத ஹிந்துக்கள் என்றோ யாருமில்லை. எனவே, அந்தச் சொல் பொய்க் கூற்றாகவும் மனத்தைப் புண்படுத்துவதாகவுமே இருக்கிறது. உங்களுடைய மகாநாட்டில் யார் அவர்களுடைய பிரதிநிதிகளாக இருப்பார்கள்? சாதி ஹிந்துக்களுடைய பிரதிநிதியாக காங்கிரஸ் இருக்க முடியாது. ஏனெனில், சுதந்திரத்தில் ஆர்வம் கொண்டு, சுதந்திரத்திற்காக உழைக்கும் எல்லா இந்தியர்களுக்கும் காங்கிரஸ் யாதொரு வேற்றுமையுமின்றி பிரதிநிதி ஸ்தாபனமாக இருக்கிறது. அதனால் தான் ஹிந்துக்களுக்கு தாங்கள் பிரதிநிதி ஸ்தாபனம் என்று ஹிந்து மகா சபை கூறிக்கொள்கிறது. அந்த ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள் கூட தாங்கள் சாதி ஹிந்துக்களின் பிரதிநிதிகள் என்று கூற மறுத்துவிடுவார்கள் என்பதே எனது அபிப்பிராயமாகும். தங்களுடைய வானொலிப் பிரசங்கத்தில் சுதந்திரம் என்ற சொல் கர்ம சிரத்தையுடன் தவிர்க்கப் பட்டிருக்கிறது! இந்தியர்களின் நவீன சிந்தனைப் போக்கை அனுசரித்து அந்தக் குறையைச் சீர்படுத்த வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. நமது தந்திகளை வெளியிடும்படி நான் யோசனை கூறுகிறேன்.

காந்தி

## 19

(தந்தி)

புது டில்லி,
15-6-1945

மோ. க. காந்தி அவர்களுக்கு,

பஞ்சகனி,

14-ஆம் தேதி தந்திக்கு நன்றி. விதி நுணுக்கத்தின்படி நிலைமை எவ்விதமாயினும், உங்களுடைய உதவியில் எனக்கு மதிப்பு உண்டு. எனவே நேற்று உங்களுக்குத் தந்தி மூலம் அனுப்பியுள்ள அழைப்பை ஏற்றுக் கொள்வீர்கள் என்று நம்பு கிறேன். காங்கிரசின் பிரதிநிதித்துவம் சம்பந்தப்பட்டவரையில், மேற்கொண்டு யோசித்தபின், அவசியம் என்று நீங்கள் கருது வோருடன் கலந்து ஆலோசித்த பின், உங்களுடைய இறுதியான அபிப்பிராயத்தை அன்பு கூர்ந்து எனக்கு அறிவியுங்கள். நான் மேற்கொண்டுள்ள கடமை முக்கியமானது என்பதையும், கஷ்ட மானது என்பதையும் நீங்கள் அறிவீர்கள் என்பதும், எனவே உங்களால் இயன்ற உதவியெல்லாம் செய்வீர்கள் என்பதும் எனக்குத் தெரியும்.

வைஸ்ராய்

## 20

(தந்தி)

பஞ்சகனி,
16-6-1945

மே. த. வைஸ்ராய்,

புது டில்லி

நேற்று நீங்கள் அன்புடன் அனுப்பிய தந்திக்குப் பதில் அளித்துக் கடிதம் எழுதியிருக்கிறேன்.

காந்தி

## 21

# காங்கிரசுடன் தொடர்பு இல்லை

"தில்குஷா"
பஞ்சகனி,
16-6-1945

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

நேற்று நீங்கள் அனுப்பிய தந்தி மாலை 3-45 மணிக்கு கிடைத்தது. அதற்குப் பதில் அளித்து தந்தி கொடுப்பதற்குப் பதிலாக இந்தக் கடிதம் எழுதுகிறேன். ஏனெனில், எனது நிலைமையை நீங்கள் பூரணமாக அறிந்துகொள்ள வேண்டும் என்பதே எனது ஆர்வமாகும். இந்தக் கடிதம் எழுதுவதாக அறிவித்து தங்களுக்குத் தந்தியும் அனுப்பியிருக்கிறேன். நேற்று காலை நான் பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கையின் * பிரதி ஒன்றையும் உங்கள் பார்வைக்காக இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அதை நீங்கள் வாசிக்க வேண்டும் என்பதே என் விருப்பம். உத்தியோக முறையிலும் சட்ட பூர்வமாகவும் எனக்கு காங்கிரசுடன் தொடர்பு இல்லை. வேண்டுமென்றே அந்தத் தொடர்பை நான் கத்தரித்துக் கொண்டேன். அதற்கு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும் இசைந்தது. பொதுவான லட்சியத்திற்காக மேற்கொண்டு இன்னும் சிறந்த முறையில் தொண்டு செய்யவேண்டும் என்பதற்காகவே அவ்விதம் செய்தேன். எனவே இந்த நிலையை, விருப்பம் போல மாற்றிக் கொண்டுவிட முடியாது. நடைபெறப் போகும் மகாநாட்டில் எனக்கு உத்தியோக பூர்வமான அந்தஸ்து எதுவும் இருக்க முடியாது. காங்கிரசின் உத்தியோக பூர்வமான பிரதிநிதியாக நான் வராமல் தனி நபர் என்ற முறையில் வருவது, உத்தியோக பூர்வமான பிரதிநிதிகள் அடங்கிய மகாநாடு என்ற தன்மையை மாற்றிவிடும். எனினும், எனது உதவி விரும்பத் தக்கது என்றும், நான் மகாநாட்டின் அங்கத்தினராக இராமலேயே உபயோகமாக இருக்கக் கூடியவன் என்றும் தாங்கள் கருதினால், மகாநாடு நடப்பதற்கு முன்பும், மகாநாடு நடக்கும் போதும் உங்களுக்கு உதவியாக இருப்பதை நான் ஒரு முக்கிய கடமையாகக் கருதுவேன். ஆனால், நான் வருவதை காரியக் கமிட்டியும் விரும்ப வேண்டும்.

நான் ஓர் உவமை கூற விரும்புகிறேன். காலஞ்சென்ற தீனபந்துவை நீங்கள் அறிந்திருக்கலாம். சி. எப். ஆண்ட்ரூ

---

* காந்திஜியின் மேற்கண்ட அறிக்கையைப் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

சையே தீனபந்து என்று நாங்கள் அன்புடன் அழைத்து வந்தோம். மதத்திற்கும், இந்தியாவுக்கும், மானிட வர்க்கத்திற்கும் தொண்டு செய்வதற்காக அவர் கேம்பிரிட்ஜ் பாதிரிமார் சங்கத்திலும், கிறிஸ்தவாலயத்திலும் உள்ள உத்தியோகத் தொடர்பைக் கத்தரித்துக் கொண்டார். இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் இடையே, எல்லாப் பிரிவினருக்கும் எல்லாக் கட்சிகளுக்கும் இடையே அவர்களை இணைக்கும் சங்கிலியைப்போல் மிகவும் மதிப்பு வாய்ந்த அந்தஸ்தை அவர் வகித்துவந்தார். அவரது இத்தகைய அந்தஸ்து நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது. என்னால் சாத்தியமாயின், அத்தகைய ஒரு அந்தஸ்தை வகிக்க நான் விரும்புகிறேன். அத்தகைய அந்தஸ்தை நான் ஒரு காலத்திலும் அடைய முடியாமற் போகலாம். இருந்தாலும், மனிதன் அத்தகைய அந்தஸ்தை அடைய முயற்சி செய்யலாம் அல்லவா?

மேற்கொண்டு சிந்தித்துப் பார்க்கும்படியும், மற்றவர்களுடன் கலந்து ஆலோசிக்கும்படியும் நீங்கள் எனக்கு யோசனை கூறியிருக்கிறீர்கள். அவ்விதமே நான் செய்தேன். எராவ்டா மத்திய சிறைக்கு அருகில் நான் இருக்கிறேன். சர்தார் வல்லபாய் பட்டேலும், ஸ்ரீ சங்கரராவ் தேவரும் அகமத் நகர் கோட்டையிலிருந்து எராவ்டா சிறைக்கு மாற்றப்பட்டார்கள். நேற்று அவர்கள் சிறையிலிருந்து விடுதலை அடைந்தனர். விடுதலை அடைந்த உடனே அவர்கள் மோட்டாரில் பஞ்சகனிக்கு வந்தார்கள். அவர்கள் இன்னும் என்னுடன்தான் இருக்கிறார்கள். அவசியமான எல்லா தஸ்தாவேஜுகளையும் அவர்களிடம் காட்டினேன். இக்கடிதத்தில் உள்ள விஷயங்களை அவர்களும் ஒப்புக் கொள்கின்றனர்.

நீங்கள் மேற்கொண்டுள்ள கடமை கஷ்டமானது என்பதையும், தர்ம சங்கடமானது என்பதையும் நான் பூரணமாக அறிந்திருக்கிறேன். எல்லாக் கட்சிகளுடைய உதவியையும், நல்லெண்ணத்தையும் நிச்சயமாக நீங்கள் பெறவேண்டும். மகாநாட்டில் உத்தியோக தோரணையில் காங்கிரசின் பிரதிநிதிகள் இருந்தாலன்றி காங்கிரசின் உதவியை நீங்கள் பெற முடியாது. காங்கிரஸ் அக்கிராசனரோ அல்லது காங்கிரஸ் அக்கிராசனரால் அல்லது காரியக் கமிட்டியினால் நியமிக்கப்பட்ட பிரதிநிதிகளோ உங்கள் மகாநாட்டிற்கு வந்தாலன்றி, மீதியுள்ள காரியக் கமிட்டி அங்கத்தினர்களை விடுதலை செய்ததன் நோக்கம் வீணாகிவிடும். நான் நினைப்பது சரியாயின், நான் உங்களுக்கு உடனடியாகக் கூறும் யோசனை என்னவெனில், காங்கிரஸ் அக்கிராசனரை நீங்கள் அழைக்க வேண்டும் என்பதே. காங்கிரஸ் மீதுள்ள தடை நீக்கப்பட்டிருக்கிறது; இன்னும் சில இடங்களிலுள்ள தடையும் நீக்கப்பட்டுவிடும் என்று எதிர்பார்க்கிறேன்.

உங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

# 22

# வேவலின் விளக்கம்

(தந்தி)

புது டில்லி,
16-6-1945

மோ. க. காந்தி அவர்களுக்கு,
பஞ்சகனி.

ஜூன் 15-ஆம் தேதி தாங்கள் அனுப்பிய தந்திக்கு நன்றி. உங்களுடைய அறிக்கையையும் இன்றைய பத்திரிகைகளில் நான் பார்த்தேன். 16-ஆம் தேதி நீங்கள் அனுப்பிய தந்தி இப்போது தான் கிடைத்தது. மகாநாட்டில் கலந்து கொள்ளும் விஷயமாக அதில் தாங்கள் குறிப்பிட்டுள்ள கடிதத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். மனத்தைப் புண்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் "சாதி ஹிந்துக்கள்" என்ற சொல்லை நான் உபயோகிக்கவில்லை என்று உங்களுக்கு உறுதி கூறு கிறேன். ஷெட்யூல் சாதிகளைச் சேர்ந்தவர்களைத் தவிர மற்றப்படி ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே சமத்துவம் இருக்க வேண்டும் என்பதே அதன் அர்த்தமாகும். நிர்வாக சபையின் அமைப்பு எப்படி இருக்க வேண்டும் என்பது, மகாநாட்டில் விவாதித்து முடிவு செய்ய வேண்டிய விஷயமாகும். சுதந்திரப் பிரச்னையையொட்டி ஜூன் 14-ஆம் தேதி பார்லிமெண்டில் இந்தியா மந்திரி நிகழ்த்திய பிரசங்கத்தைக் கவனிக்கும்படி உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். அது இந்தியப் பத்திரிகைகளில் பிரசுரமாகியிருக்கிறது. அதில் பொருத்தமான ஒரு பகுதி பின் வருமாறு.

"1942 மார்ச்சில் பிரிட்டிஷ் அரசாங்கம் சமர்ப்பித்த திட்டம் எவ்வித மாறுதலுமின்றி அப்படியே இருந்துவருகிறது. அது முக்கியமான இரண்டு கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. முதலாவதாக, காமன் வெல்தில் சுதந்திரமுள்ள ஒரு பங்காளியாகவோ அல்லது அவ்விதம் இல்லாமலும் கூட தன் சொந்த விதியைத் தானே நிர்ணயித்துக் கொள்ள இந்தியாவுக்கு உள்ள சுதந்திரத்திற்கு யாதொரு கட்டுப்பாடும் விதிக்கப்பட வில்லை. இரண்டாவதாக, இந்தியர்களால் உருவாக்கப்பட்ட அரசியல் திட்டத்தின் கீழ் மாத்திரமே இந்தியா தன் விதியை நிர்ணயித்துக் கொள்ள முடியும். ஆனல், அந்தத் திட்டம் இந்தியாவிலுள்ள முக்கிய கட்சிகளின் சம் மதத்தைப் பெற்றிருக்க வேண்டும்."

எனவே, எனது வானெலிப் பிரசங்கத்தில் உள்ள ஷரத்துகளை மாற்றுவது நடைமுறையில் சாத்தியமானதல்ல. பிரிட் டிஷ் அரசாங்கத்தினுல் அங்கீகரிக்கப்பட்ட யோசனைகளையே நான்

எடுத்துக் கூறியிருக்கிறேன். அதில் உள்ள விஷயங்களுக்கு விளக்கம் ஏதாவது தேவையாக இருந்தால், மகாநாட்டில் அவற்றைப் பற்றி விவாதிக்க வேண்டும் என்பதே எனது நோக்கமாகும். மகாநாட்டில் நீண்ட விவாதங்களில் ஈடுபடுவது விரும்பத்தக்கதல்ல என்பதே எனது அபிப்பிராயம். நட்பான சூழ்நிலையிலும், கட்சி துவேஷமின்றியுமே மகாநாடு நடைபெறும் என்று உங்களைப் போலவே நானும் நம்புகிறேன். நீங்கள் கூறிய யோசனைக்கு இணங்கவே, நமது தந்திகளைப் பத்திரிகைகளுக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறேன்.

வைஸ்ராய்

## 23

(தந்தி)

பஞ்சகனி,
17-6-1945

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி.

நேற்று மாலை கிடைத்த உங்கள் தந்தியை மிகவும் பாராட்டுகிறேன். அங்கத்தினர்களின் எண்ணிக்கையில் எவ்வித மாறுதலும் செய்யாமல் நடவடிக்கை முறையை ஒழுங்கு செய்யவும், அலுவல்களை துரிதமாகச் செய்யவும். மாகாநாட்டிற்கு வரும்படி காங்கிரஸ் அக்கிராசனருக்கோ அல்லது அவரால் நியமிக்கப்படும் பிரதிநிதிக்கோ உடனடியாக அழைப்பு அனுப்பும்படி யோசனை கூறுகிறேன். சாதி ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் சமமாகக் கருதும் முறை மாருவிடில், இந்தியா சுதந்திரம் பெறும் தறுவாயில், மதத்தை அடிப்படையாகக் கொண்ட பிரிவினை உத்தியோக தோரணையில் அமலுக்கு வந்துவிடும். சொந்த முறையில் இதற்கு நான் ஒரு காலத்திலும் ஆதரவு அளிக்க முடியாது; எனக்குத் தெரிந்த வரையில், காங்கிரசும் அதற்கு ஆதரவு அளிக்காது. காங்கிரசில் மிக மிகப் பெரும்பாலான அங்கத்தினர்கள் ஹிந்துக்களாயினும், காங்கிரஸ் முற்றிலும் அரசியல் ஸ்தாபனமாகவே இருக்க முயற்சித்து வந்திருக்கிறது. மகாநாட்டிற்கு வரும் எல்லா அங்கத்தினர்களையும் ஹிந்துக்கள் அல்லாதார்களாக நியமிக்கும்படி நான் காங்கிரசுக்கு யோசனை கூற முடியும். சாதி ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே நிர்ணயிக்கப்படும் சமத்துவ நிலை மாற்ற முடியாததாயின், நீங்கள் அறியாமலும், ஆனல் நிச்சயமாகவும் மகாநாட்டின் நோக்கம் வியர்த்தமாகிவிடும். காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகிற்கும் சமத்துவ அந்தஸ்து அளிப்பதை நான் புரிந்து கொள்ள முடியும். உங்களுக்கும் பிரிட்டிஷ் மக்களுக்கும் உதவி புரிய நான் ஆர்வம் உள்ளவனாக இருக்கிறேன். எனினும் அதற்காக நான் மூலாதாரமான,

உலகத்திற்கே பொதுவான கொள்கைகளைத் தியாகம் செய்ய முடியாது. ஏனெனில் அவ்விதம் தியாகம் செய்வது உதவி அளிப்பதாகாது.

காந்தி

# 24

# மௌலானா ஆசாதுக்கு அழைப்பு

(தந்தி)

புது டில்லி,
*17-6-1945*

மோ. க. காந்தி

பஞ்சகனி,

உங்களுடைய *16*—ஆம் தேதி கடிதத்திற்காக நன்றி. உங்களுடைய நிலைமையை நான் உணர்ந்திருக்கிறேன். *24*—ஆம் தேதி உங்களுடைய வருகையை ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் மகாநாட்டில் கலந்துகொள்ள வழி ஏற்படுமென நம்புகிறேன். என்னிடமிருந்து வந்ததாக கீழ்க்கண்ட செய்தியை நீங்கள் மௌலானா அபுல்கலாம் ஆஸாதுக்கு அறிவிப்பீர்களாயின், நான் நன்றியுள்ளவனாக இருப்பேன் :

"மகாநாட்டிற்கு வரும்படி உங்களை அழைக்கிறேன். அல்லது உங்களுடைய அதிகாரபூர்வமான பிரதிநிதியை அனுப்பக் கோருகிறேன். ஜூன் *25* திங்கட்கிழமை காலை *10-30* மணிக்கு சிம்லாவிலுள்ள வைஸ்ராய் விடுதியில் மகாநாடு நடக்கிறது. தேவையாயின் உங்கள் பிரதிநிதியின் ஜாகை வசதிக்கு ஏற்பாடு செய்யப்படும்."

உங்களுடைய கடிதத்தையோ, அல்லது இந்தத் தந்தியையோ நான் பத்திரிகைகளுக்கு அனுப்பவில்லை. பத்திரிகைகளில் அவற்றை வெளியிடுவதில் எனக்கு ஆட்சேபணை இல்லை.

வைஸ்ராய்

# 25

(தந்தி)

பஞ்சகனி,
*17-6-1945*

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி.

என்னுடைய ஜூன் *16* கடிதத்திற்கு உடனே பதில் அளித்ததற்காக நன்றி. இன்று அனுப்பிய தந்திக்கு தாங்கள் இன்னும் யாதொரு பதிலும் அனுப்பாததால், காங்கிரசின் நிலைமையோ எனது நிலைமையோ நிச்சயமற்றதாக இருக்கிறது. அவசியமான என்னுடைய திருத்தத்தை அங்கீகரிக்காவிடில், உங்களுடைய சார்பில்கூட நான் காங்கிரஸ் அக்கிராசனரை அழைப்பதற்கில்லை. உங்களுடைய *16*-ஆம் தேதி தந்தியின்படி அப்பிரச்னையை மகாநாடு விவாதிக்கவும் நீங்கள் விடப்போவதில்லை. எனவே, உங்களுடைய தந்தியில் குறிப்பிட்டிருந்தபடி நான் யாதொரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளாததற்காக மிகவும் வருந்துகிறேன். காரியக் கமிட்டிக் கூட்டம் இன்னும் நடைபெறவில்லை. தனி நபர்களின் தந்திப் போக்குவரத்தில் மிகுந்த தாமதம் ஏற்படுகிறது. நீங்கள் நிர்ணயித்துள்ள தேதிக்குள் எதுவும் செய்ய முடியாது என்று தோன்றுகிறது. தங்களுக்கு உதவியாக இருக்க வேண்டும் என்பதே எனது பூரணமான விருப்பம் என்றாலும், தவிர்க்க முடியாத தாமதத்தை நீங்கள் உணர்வீர்கள் என்றே நம்புகிறேன். எனவே மகாநாடு நடைபெறும் தேதியை மாற்ற வேண்டும் என்றும், நான் எழுப்பியுள்ள பிரச்னையை தெளிவாக விளக்க வேண்டும் என்றும் யோசனை கூறுகிறேன். உங்களுடைய விளக்கம் திருப்திகரமாக இருக்குமாயின், தாமதத்தைத் தவிர்ப்பதற்காக உங்களுடைய அழைப்பை நேராக அனுப்பிவிடுகிறேன். காரியக் கமிட்டியின் தீர்மானத்திற்காக, முதல் மந்திரிகளான காங்கிரஸ் தலைவர்கள் காத்துக் கொண்டிருக்கின்றார்கள் என்பதையும் உங்களுக்கு நான் அறிவிக்க வேண்டும். இறுதியான முடிவுக்கு வரும்வரையில், இந்தத் தந்திப் போக்குவரத்தை நான் வெளியிடவில்லை. எனினும், இவ்விஷயத்தையும் நீங்களே முடிவு செய்யலாம்.

காந்தி

## 26

(தந்தி)

புது டில்லி,
*18-6-1945*

மோ. க. காந்தி,
பஞ்சகனி.

நேற்று நீங்கள் அனுப்பிய இரண்டு தந்திகளுக்காக நன்றி. எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சீக்கிரத்தில் மௌலானா அபுல் கலாம் ஆஸாதுக்கு எனது அழைப்பு கிடைக்க வேண்டும். அதற்காக எனது அழைப்பை கல்கத்தாவில் உள்ள அவருக்குத் தந்தி மூலம் அனுப்பியிருக்கிறேன்.

பார்லிமெண்டில் ஸ்ரீ அமெரி விடுத்த அறிக்கையிலும், எனது வானொலிப் பேச்சிலும் மகாநாட்டில் விவாதிக்க வேண்டிய விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. மகாநாடு 25ஆம் தேதி நடைபெறும் என்றே இன்னும் நம்பிக்கொண்டிருக்கிறேன். எனது வானொலிப் பேச்சை மாற்ற முடியாது என்பது தெளிவாகும். மகாநாட்டில் அதன் சம்பந்தமான விவரங்களையெல்லாம் விவாதிப்பது விரும்பத்தக்கதல்ல என்று நினைக்கிறேன். இதை ஏற்கனவே உங்களுக்குக் கூறியிருக்கிறேன். சம்பந்தப்பட்ட நபர்களோ அல்லது கட்சிகளோ மகாநாட்டில் வரும் யோசனைகளை ஒப்புக்கொள்ள வேண்டும் என்றோ அல்லது நிராகரிக்க வேண்டும் என்றோ யாரும் எதிர்பார்க்கவில்லை; அந்த யோசனைகள் மகாநாட்டில் விவாதிப்பதற்குத் தகுதியானவையா என்பது மாத்திரமே உடனடியான கேள்வியாகும். இந்தக் கேள்விக்கு விடையளித்தால் மிகவும் உதவியாக இருக்கும்.

25-ஆம் தேதி மகாநாடு கூட வேண்டும் என்றே இன்னும் நான் எண்ணுகிறேன். மகாநாடு சிறிது காலம் தொடர்ந்து நடக்கலாம். ஆனால், அது ஆரம்பமாவதற்கு முன் தாமதிப்பது, வெற்றிக்கான சூழ்நிலைக்கு இடம் அளிக்காது. ஜூன் 16-இல் நீங்கள் எழுதிய கடிதம், 17-இல் நான் அனுப்பிய தந்திகள், அதே தேதியில் நீங்கள் அனுப்பிய இரண்டு தந்திகள், இப்போது அனுப்பும் இந்தத் தந்தி ஆகியவற்றை நான் பத்திரிகைகளுக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறேன்.

வைஸ்ராய்

## 27

(தந்தி)

பஞ்சகனி,
18-6-1945

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி.

எல்லா விஷயங்களையும் பற்றி நீங்கள் உடனடியாகவும், மனம் விட்டும் பதில் அளித்திருப்பதற்காகவும், மௌலானா சாகிபை நேரடியாக அழைத்திருப்பதற்காகவும் நன்றியுள்ளவனாக இருக்கிறேன். மகாநாட்டில் வரும் யோசனைகளை அங்கீகரிக்கவோ அல்லது நிராகரிக்கவோ அங்கத்தினர்களுக்கு உரிமை உண்டு என்று நீங்கள் கூறியிருப்பது, மகாநாட்டிற்கு அழைக்கப்பட்டிருப்பவர்களின் ஆட்சேபணைகளை அகற்றுவதாக இருக்கிறது. இதனால், மகாநாட்டில் சாதக பாதகங்களைப் பற்றி விவாதிக்க அவர்களுக்கு சுதந்திரம் உண்டு என்று ஏற்படுகிறது. முஸ்லிம்களுக்கும் சாதி ஹிந்துக்களுக்கும் இடையே சமநிலை தவிர்க்க முடியாதது என்பதைப்பற்றிய என்னுடைய ஆட்சேபணை அப்படியேதான் இருக்கிறது. அந்த அபிப்பிராயத்தை பிரிட்டிஷ் அரசாங்கம் மாற்றிக்கொள்ள முடியவில்லையாயின், நிர்வாக சபை அமைப்பதில் காங்கிரஸ் பங்கு எடுத்துக்கொள்ளக் கூடாது என்றே நான் காங்கிரசுக்கு யோசனை கூறுவேன். சாதி ஹிந்துக்களுடனே அல்லது சாதி அல்லாத ஹிந்துக்களுடனே காங்கிரஸ எக்காலத்திலும் தொடர்பு வைத்துக் கொண்டதில்லை. சுதந்திரம் கிடைப்பதாக இருந்தால் கூட காங்கிரஸ் ஒருபோதும் அவ்விதம் தொடர்பு வைத்துக்கொள்ள முடியாது. அவ்விதம் தொடர்பு வைத்துக் கொள்வது ஒரு தலைப்பட்சமானதாகவும், உண்மையற்றதாகவும், தற்கொலைக்கு ஒப்பானதாகவும் இருக்கும். இந்தியாவுக்கு சுதந்திரத்தை ஈட்டிக் கொடுப்பதற்காகவே காங்கிரஸ் வாழ்கிறது என்ற நற்பெயரை காப்பாற்றிக் கொள்ள வேண்டுமாயின், எல்லாப் பிரிவுகளையும் சேர்ந்த சிறந்த ஆடவர்களையும், பெண்களையுமே அது தேர்ந்தெடுக்க வேண்டும்; எப்போதும் அவ்விதமே தேர்ந்தெடுக்கும் என்றும் நான் நம்புகிறேன். சிறுபான்மையோரைச் சமாதானப்படுத்துவதற்காக அது, சிறந்தவர்களுக்கு அடுத்தபடியாக உள்ளவர்களைப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுத்திருக்கிறது. அவ்விதம் தேர்ந்தெடுத்தது, காங்கிரசுக்குப் பெருமையேயாகும். எனினும், அதற்காக சாதியையும் மதத்தையும் அடிப்படையாகக் கொண்ட வேற்றுமையை நிரந்தரமாக்குவதோ அல்லது அதை நியாயமென்று ஸ்தாபிப்பதோ கூடவே கூடாது. தாங்கள் முற்றிலும் ஹிந்துக்களின் நலன்களைப் பாதுகாக்கும் பிரதிநிதிகளே என்று ஹிந்து மகாசபையினர் கூறிக்கொள்கின்றனர். காரியக் கமிட்டியின் விருப்

பத்திற்கு உட்பட்டு நான் 24-ஆம் தேதி சிம்லாவுக்கு வரலாம் என்றே நம்புகிறேன். எனினும், எனது தீவிரமான அபிப்பிராயங்கள் காரணமாக, நான் சிம்லா மகாநாட்டில் பங்கு எடுத்துக் கொள்வதை நீங்கள் ரத்து செய்தாலும் அதை எள்ளளவும் அவமதிப்பாகக் கருத மாட்டேன். இந்தத் தந்தியும், இதற்கு ஏதாவது பதில் அனுப்பப்படுமாயின் அதுவும் வெளியிடப்படும் என்று எதிர்பார்க்கிறேன். செவ்வாய்க்கிழமை மாலை 2 மணிக்கு புனாவுக்குப் புறப்பட்டுச் செல்லுகிறேன்.

காந்தி

## 28

(தந்தி)

புது டில்லி,
19-6-1945

ஸ்ரீ காந்தி,
புனா.

ஜுன் 18-ஆம் தேதி நீங்கள் அனுப்பிய தந்திக்கு நன்றி. அழைக்கப்பட்டிருப்பவர்கள், மகாநாட்டில் கலந்து கொள்வது எளிதாகியிருப்பதாக நீங்கள் எண்ணுவதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். 21-ஆம் தேதி காரியக் கமிட்டி நடந்த உடனேயே மேற்கொண்டு தங்களுடைய அபிப்பிராயத்தை எதிர்பார்க்கிறேன். மகாநாடு வெற்றிபெறுவது, சம்பந்தப்பட்ட எல்லோருடைய நல்லெண்ணத்தையும், ஒத்துழைப்பையுமே பொறுத்திருக்கிறது என்பதை நீங்கள் உணர்வீர்கள் என்பது நிச்சயம். நீங்கள் கூறியபடியே இந்தத் தந்திகளைப் பத்திரிகைகளுக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறேன்.

வைஸ்ராய்

## 29

(தந்தி)

பம்பாய்,
22-6-1945

மே. த. வைஸ்ராய்,
வைஸ்ராய் முகாம், இந்தியா.

உங்களுடைய 19-ஆம் தேதி தந்தி கிடைத்தது. காரியக் கமிட்டிக் கூட்டம் இன்னும் நடந்து கொண்டிருக்கிறது என்பதை நீங்கள் பத்திரிகைகளில் பார்த்திருக்கலாம் என்பதே எனது பதிலாகும். இன்று நான் எல்லைப் புற மெயிலில் சிம்லாவுக்குப்

புறப்படுகிறேன். ரயில் வண்டி தாமதமின்றி வந்து சேருமாயின், குறிப்பிட்ட நேரத்தில் உங்களைச் சந்திக்கலாம் என்று நம்புகிறேன். அங்கே தங்க இடத்திற்கு ஏற்பாடு செய்ததற்காக உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன். நான் ராஜகுமாரி அமிருத கௌரியுடன் தங்க உத்தேசித்திருக்கிறேன்.

காந்தி

## 30

வைஸ்ராய் முகாம், இந்தியா,
(சிம்லா),
*24-6-1945*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இன்று மாலை நாம் பேசிக்கொண்டிருந்தபோது நீங்கள் கூறிய திட்டங்களைப் பற்றி நான் சிந்தனை செய்தேன். மகாநாடு முடியும் வரையில் நீங்கள் சிம்லாவிலேயே தங்கியிருந்தால் நான் நன்றியுள்ளவனாக இருப்பேன்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

## 31

'மேனர் வில்லா'
சிம்லா, *25-6-1945*

அன்புள்ள நண்பருக்கு,

உங்கள் கடிதம் கிடைத்ததென்பதை உடனடியாக அறிவிக்க முடியாதவாறு நான் அவ்வளவு களைப்புற்றிருந்தேன். தவிர, அதற்கு அவசரமும் இல்லை. மகாநாடு முடியும் வரையில் நான் சிம்லாவிலேயே தங்கியிருப்பேன்.

தங்களுடைய மிகவும் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 32

# மகாநாடு ஒத்திவைக்கப்பட்டது

*வைஸ்ராய் முகாம், இந்தியா*
*(சிம்லா), 30-6-1946*

*அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

நேற்று மகாநாடு ஜுலை *14*—ஆம் தேதிக்கு ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது என்பதை உங்களுடைய நண்பர்கள் உங்களுக்கு நிச்சயமாகச் சொல்லியிருப்பார்கள். கட்சிகள் தங்களுடைய பிரதிநிதிகளின் பெயர்கள் அடங்கிய ஜாப்தாக்களை எனக்கு அனுப்புவதற்கு வசதியாக இருக்கவே அவ்விதம் ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது. சம்பந்தப்பட்ட எல்லோரும் ஒப்புக் கொள்ளக் கூடிய விதத்தில் ஒரு நிர்வாக சபையை அமைக்க முடியுமா என்பதை அந்த ஜாப்தாவில் நான் பார்த்துக் கொள்ளலாம்.

உங்களுடைய திட்டங்கள் என்ன என்பது எனக்குத் தெரியாது. எனினும், மகாநாடு முடியும் வரையில் நீங்கள் சிம்லாவில் தங்கியிருக்க இயலும் என்றே நான் நம்புகிறேன். நீங்கள் இங்கேயிருந்து புறப்பட்டுச் செல்லத் தீர்மானித்தால், புறப்படுவதற்கு முன் உங்களை நான் மீண்டும் பார்க்கவேண்டும். அவ்விவரத்தைத் தாங்கள் அறிவித்தால், நான் நன்றியுள்ளவனாக இருப்பேன்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

## 33

*"மேனர் வில்லா",*
*மேற்கு சிம்லா,*
*30-6-1944.*

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுடைய இரண்டு கடிதங்களுக்காகவும் நன்றி. அவற்றில் ஒன்று, தூக்குத் தண்டனை அடைந்த கைதிகளைப் பற்றியது; மற்றொன்று மகாநாடு முடியும் வரையில் நான் சிம்லாவிலேயே இருக்க வேண்டும் என்பதைப் பற்றியது.

உடனடியான, நம்பிக்கை அளிக்கக்கூடிய பதிலுக்காக உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன் என்பதற்குமேல், உங்க

ளுடைய முதல் கடிதத்தைப்பற்றி நான் எதுவும் கூறவேண்டிய அவசியம் இல்லை.

இரண்டாவது கடிதத்திற்கு என்னுடைய பதில் என்னவெனில், நான் இங்கே இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்று தாங்கள் கருதும் வரையில், நான் சிம்லாவை விட்டுச் செல்லமாட்டேன் என்பதுதான். எந்த நேரத்தில் நான் தேவையாக இருப்பினும், உடனே எனக்குச் செய்தி அனுப்புங்கள்.

பண்டித ஜவாஹர்லால் நேரு நாளை சிம்லாவுக்கு வருகிறார் என்பதை நீங்கள் கவனித்திருக்கலாம் என்றும், தங்களையும் ஸ்ரீமதி வேவலையும் சந்திக்க நீங்கள் அவரை அழைப்பீர்கள் என்றும் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

# 34

# தூக்குத் தண்டனையைக் குறைக்க கோரிக்கை

"மேனர் வில்லா"
மேற்கு சிம்லா, 8-7-1945

மே. த. வைஸ்ராய்க்கு,
வைஸ்ராய் முகாம்.

அன்புள்ள நண்பருக்கு,

உத்தேசிக்கப்பட்டுள்ள நிர்வாக சபை சம்பந்தமாக, காங்கிரஸ் அங்கத்தினர்கள் அடங்கிய ஜாப்தாவை காங்கிரஸ் அக்கிராசனர் நேற்று தங்களுக்கு அனுப்பியிருக்கிறார். முஸ்லிம்களுக்கும் சாதி ஹிந்துக்களுக்கும் சம அந்தஸ்து அளிப்பதை நான் எவ்வளவோ கண்டித்தும் கூட, அக் கொள்கை மாறவில்லை. இதைக் குறித்து நான் வருந்துகிறேன். இருந்தாலும், அதன் காரணமாக எனது நிலைமையில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை. நிர்வாக சபையில் முஸ்லிம்களைவிட ஷெட்யூல் வகுப்பினர் அல்லாத ஹிந்துக்கள் குறைவாக இருக்க வேண்டும் என்ற என்னுடைய அபிப்பிராயம், முன்பு இருந்ததைக் காட்டிலும் அதிக உறுதியடைந்திருக்கிறது.

அந்த ஜாப்தாவில் ஹிந்து மகாசபைத் தலைவரான டாக்டர் சியாம பிரசாத் முகர்ஜியும் நியமிக்கப்பட்டிருப்பதை நீங்கள் கவனித்திருக்கலாம். அவ்விதம் நியமித்திருப்பது அவசியமானது என்றும் கண்ணியமானது என்றும் நினைக்கிறேன். காங்

கிரஸ் ஜாப்தாவை நீங்கள் ஒப்புக் கொண்டால், 14-ஆம் தேதி நடைபெறும் கூட்டத்திற்கு முன் டாக்டர் முகர்ஜியை நீங்கள் அழைக்க வேண்டுமென நான் யோசனை கூறுகிறேன்.

14-ஆம் தேதியன்றோ அல்லது அதற்குப் பிறகோ ஸ்ரீ மகேந்திர சௌத்ரியைத் தூக்கிவிடுவார்கள் என்று டாக்டர் ராஜேந்திர பிரசாத் எனக்கு அறிவிக்கின்றார். ஸ்ரீ மகேந்திர சௌத்ரி பீகாரில் உள்ள பகல்பூர் சென்ட்ரல சிறையில் இருக்கிறார். தூக்குத் தண்டனையைக் குறைக்கவோ அல்லது உத்தேசிக்கப்பட்டுள்ள நிர்வாக சபையின் பரிசீலனைக்கு விடுவதற்காக அந்த தண்டனையை நிறுத்திவைக்கும்படியோ நீங்கள் உத்தரவு பிறப்பிப்பீர்கள் என்று நினைக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 35

வைஸ்ராய் முகாம்,
இந்தியா (சிம்லா)
8-7-1945

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஜூலை 8-ஆம் தேதிக் கடிதத்திற்கு நன்றி. நிர்வாக சபையில் நியமிப்பதற்கான காங்கிரஸ் அங்கத்தினர்களின் ஜாப்தா எனக்குக் கிடைத்தது. அதை நான் பரிசீலனை செய்து வருகிறேன்.

உங்களுடைய கடிதத்தின் கடைசி பாராவில் நீங்கள் குறிப்பிட்டுள்ள விஷயத்தைப் பற்றி நான் விசாரிக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

## 36

# மகாநாடு தோல்வி

வைஸ்ராய் முகாம் இந்தியா,
(சிம்லா),
14-7-1945

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நீங்கள் சிம்லாவுக்கு வந்ததற்காகவும், எனது வேண்டுகோளுக்கிணங்க மகாநாடு முடியும் வரையில் இங்கே தங்கியதற்காகவும் நன்றி செலுத்துவதற்காகவே இக்கடிதத்தை நான் எழுது

கிறேன். மகாநாடு தோல்வியுற்றதைக் குறித்து மிகவும் வருந்து கிறேன். கட்சிகளை ஒன்று சேர்ப்பதற்காகச் செய்யப்பட்ட இந்த முயற்சி இறுதியில் முற்றிலும் வீணாகியதாக முடியாது என்றே நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

# 37

*"மேனர் வில்லா",*
*மேற்கு சிம்லா,*
*15-7-1945*

அன்புள்ள நண்பருக்கு,

*14*-ஆம் தேதி அனுப்பிய குறிப்புக்கு நன்றி. பொதுவான லட்சியம் நிறைவேறுவதற்கு நான் செய்த முயற்சியை நீங்கள் பாராட்டியிருப்பதை நினைக்க எனக்கு மகிழ்ச்சி உண்டாகின்றது. நான் இங்கேயிருந்து நாளை புறப்படுவதற்கு ஏற்பாடு செய்திருக் கிறேன் என்பதை நீங்கள் ஒருவேளை அறிந்திருக்கலாம். கல்கத் தாவிலிருந்து என்னை வார்தாவுக்கு ஏற்றிச் செல்லுவதற்காக அதி காரிகள் அன்புடனும் மரியாதையுடனும் ஒரு விசேஷ ரயில் வண் டியை ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

திருப்திகரமாகவும், நம்பிக்கையுடனும் ஆரம்பமாகிய மகாநாடு தோல்வியுற்றதை நினைக்க என் மனம் வருந்துகிறது. முந்திய மகாநாடு எந்தக் காரணத்தினால் தோல்வியுற்றதோ, அதேதான் இம்மகாநாடு தோல்வியடைந்ததற்கும் காரணம் என்று தோன்றுகிறது. மகாநாடு முறிந்ததற்கு இம் முறை தவறை நீங்களே ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால், உலகம் வேறு விதமாகவே நினைக்கும். இந்தியா நிச்சயமாக வேறு விதமாகவே நினைக்கிறது.

மகாநாடு தோல்வியுற்றதற்கு ஆழ்ந்த காரணம் இருக்கிறது என்ற சந்தேகத்தை நான் உங்களிடமிருந்து மறைக்கக் கூடாது. அதாவது அதிகார வர்க்க உலகம் ஆட்சி அதிகாரத்தைக் கைவிட விரும்பவில்லை என்பதே அந்தக் காரணம் ஆகும். அவ்விதம் செய்வது, முன்பு தங்களுடைய கைதிகளாக இருந்தவர் களிடம் அதிகாரத்தை ஒப்புவிப்பதாக ஆகும் அல்லவா?

அது எப்படியாயினும், மகாநாடு வெற்றியடைந்திருந் தால், நேசதேசங்களுக்கும்கூட இல்லாவிட்டாலும், பிரிட்டிஷா ருக்காவது தார்மிகச் சிறப்பு ஏற்பட்டிருக்கும். அந்தச் சிறப்பை தற்காலிகமாக அவர்கள் அடைய முடியவில்லை.

பீகார் வழக்கைப் பற்றி உங்களுக்கு நினைவூட்டாமல் இந்தக் கடிதத்தை நான் முடிக்க முடியாது. அது சட்டப்படி கடுமையான தண்டனை கொடுக்க வேண்டிய சாதாரண கொள்ளை என்று நீங்கள் பேச்சுவாக்கில் கூறியது, எனக்குக் கலக்கத்தைக் கொடுத்திருக்கிறது. இது அத்தகைய கொள்ளைக் குற்றம் அல்ல. மரண தண்டனை அடைந்துள்ள இளைஞன், கொள்ளையடிப்பதைத் தொழிலாகக் கொண்டவன் அல்ல. அவன் 25 வயதுக்குக் குறைந்தவன் என்றே நினைக்கிறேன். அவனது இளம் மனைவிக்கு 20 வயது ஆகிறது. அத்தகைய மரண தண்டனைகள் யாவும் ஆயுள் தண்டனையாகக் குறைக்கப்படும் என்று நம்புகிறேன். உயர்ந்த அரசியல் காரணங்களுக்காக இல்லாவிட்டாலும்கூட, ஜீவ காருண்ய நோக்கம் கொண்டாவது அவ்விதம் செய்ய வேண்டும் என்று தோன்றுகிறது.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 38

# ஸ்ரீமதி அகாதா ஹாரிசன்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி,
ஜூன் 1944.

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஸ்ரீமதி அகாதா ஹாரிசனிடமிருந்து உங்களுக்கு வந்த கடிதம் ஒன்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். வைஸ்ராய்க்கு வரும் விமானத் தபால்களுடன் இதுவும் வந்தது.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 39

2, கிரான்போர்ன் கோர்ட்,
ஆல்பர்ட் பிரிட்ஜ் ரோட்,
லண்டன் எஸ். டபிள்யூ. 11,
14-6-1944.

அன்புள்ள காந்திஜிக்கு,

உங்களுடைய உடல்நிலை மிகுந்த கவலையைக் கொடுத்துள்ளதெனினும், உங்களுடைய நிபந்தனையற்ற விடுதலை, இங்கேயுள்ள

உங்கள் நண்பர்களுக்கு எத்தகைய மகிழ்ச்சியளிக்கும் செய்தியாக இருக்கும் என்பதை நீங்கள் அறிவீர்கள். உங்களுக்கு உடனே கடிதம் எழுத வேண்டும் என்று முதலில் எனக்குத் தோன்றியது. ஆனால் நான் தந்திதான் கொடுத்தேன். ஏனெனில், நண்பர்கள் இந்த உதவியாவது உங்களுக்குச் செய்ய வேண்டாமா? அதாவது, உங்களுக்கு உடலில் சக்தி ஏற்படுவதற்காக உங்களை அமைதியாக இருக்கவிடுவதே அவர்கள் செய்யக்கூடிய உதவியாகும். ஆனால், நீங்கள் குணமடைந்து வருவதாகவும், குறைந்த நேரத்துக்கு பேட்டிகள் அளிக்க முடிகிறது என்றும் பத்திரிகைகளிலிருந்து நாங்கள் அறிகிறோம்.

ஜுஹுவில் நீங்கள் உங்கள் வேலையைத் தொடங்கியிருப்பதை நான் என் மனக் கண்ணால் காண முடிகின்றது. அதாவது இடைவிடாது ஜனக்கூட்டம் உங்களைக் காண வந்துகொண்டே இருக்கும்; சமாளிக்க முடியாத அளவுக்கு கடிதங்களும் தந்திகளும் வந்து குவிந்து கொண்டிருக்கும்; பலவீனமாக இருக்கும் உங்களுக்கு கஸ்தூரி பாயும், மகாதேவ தேசாயும் இராதது மிகுந்த வேதனையைக் கொடுக்கும்; உலகம் அனுபவித்துக் கொண்டிருக்கும் வேதனைகளில் நீங்களும் பங்கு எடுத்துக் கொள்வீர்கள்; இந்தியாவின் தற்போதைய நிலைமையும் உங்கள் உள்ளத்தில் பெரும் சுமையாக இருந்துவரும்.

ஹொரேஸ் அலெக்ஸாண்டராவது, நானாவது தங்களுடன் இச்சமயம் அங்கே இருக்க முடியவில்லையே என்று நான் அடிக்கடி எண்ணுவது உண்டு. பம்பாயில் நடக்கும் அகில இந்திய மாதர் மகாநாட்டிற்கு வரும்படி இங்கே உள்ள நான்கு பெண்களுக்கு அழைப்பு அனுப்பியிருந்தார்கள். எனவே நான் அங்கே வந்திருக்கலாம். இதையெல்லாம் நீங்கள் அறிவீர்கள். நானும் புறப்பட்டு வருவதற்குத் தயாராக இருந்தேன். விமானத்தில் இடம் கிடைப்பதற்குத் தடையாக உள்ள கஷ்டங்கள் சமாளிக்க முடியாதவை. நான் இந்தியாவில் இருந்திருந்தால், 1939-இல் உங்களைப் பார்க்க ராஜ்கோட்டிற்கு வந்தது போலவே இப்போது ஜுஹுவுக்கும் நான் வந்திருப்பேன்.

எத்தனை கடிதங்கள் எழுதினாலும், நேருக்கு நேராகப் பேசுவதைப் போல் ஆகாது. டிசம்பர் 2, மார்ச்சு 10 தேதிகளில் நான் எழுதிய கடிதங்களில் என் மனத்தில் இருப்பவைகளை உங்களுடன் பகிர்ந்துகொள்ள முயற்சித்திருந்தேன். என்னுடைய முதல் கடிதத்திற்குத் தாங்கள் எழுதிய பதில் கிடைத்தது. அதற்கும் நான் பதில் எழுதியிருந்தேன். நீங்கள் மிகவும் நோயுற்றிருந்ததால், மார்ச்சு மாதம் நான் எழுதிய கடிதத்தை நீங்கள் பார்த்திருக்கவே மாட்டீர்கள். உங்களுக்கு வந்துள்ள ஏராளமான கடிதங்களின் குவியலுக்குள் அது மறைந்து கிடக்கலாம். நேராகக் கடிதம் எழுதுவது சாத்தியமாகும் அளவுக்கு நீங்கள் குணமடையும் போது, அவ்விதமே செய்வீர்கள் என்பது எனக்குத் தெரியும்.

இப்போது நான் உங்களுக்குக் கடிதம் எழுதுவதற்குக் காரணம் என்னவெனில், சி. எப். ஆண்ட்ரூசின் காகிதங்களிடையே சென்ற வாரம் நான் கண்ட ஒரு குறிப்பைப் பற்றி உங்களுக்குக் கூற விரும்புவதுதான். அவர் பத்து ஆண்டுகளுக்கு முன் உங்களுக்கு அனுப்பிய ஒரு தந்தியின் சாரமே அந்தக் குறிப்பில் அடங்கியிருக்கிறது. அவர் அந்தத் தந்தியை அனுப்பியது எனக்கு நன்ருக நினைவில் இருக்கிறது. அப்போது ஒரு நெருக்கடி உருவாகி வந்தது. இங்கேயுள்ள நாங்கள் கலக்கமடைந்து கவலைப்பட்டுக் கொண்டிருந்தோம். நாங்கள் எல்லோரும் அதைப் பற்றி விவாதித்து, நேராக தபால் அலுவலகத்திற்குச் சென்ரேம். அப்போது சி. எப். ஆண்ட்ரூஸ் உங்களுக்குப் பின்வருமாறு ஒரு தந்தி கொடுத்தார் :

"யாதொரு நிபந்தனையும் விதிக்காமல் இரண்டு மனிதர்கள் சந்திக்கும்போது, சமாதானத்திற்கான ஒரு வழியைக் காணலாம்."

சென்ற ஆண்டில் நீங்கள் ஸ்ரீ ஜின்னுவுக்கு எழுதிய கடிதத்தின் நகலை நான் மிகுந்த அக்கறையுடன் வாசித்தேன். இந்தக் கடிதம் உங்களுக்கு வந்து சேருவதற்கு முன் நீங்கள் அவரைச் சந்தித்துப் பேசியிருப்பீர்கள். நீங்களும் வைஸ்ராயும் மற்ரெரு முறை சந்தித்துப் பேசப் போவதைப் பற்றியே முக்கியமாக என் மனம் சிந்தித்து வருகிறது. அதன் பலனுக "சமாதானத்திற்கான ஒரு வழி" ஏற்படலாம்.

பிரான்ஸ் படையெடுத்த முதல் வாரத்தின் இறுதியிலேயே இந்தக் கடிதம் எழுதப்பட்டுள்ளது. இந் நாட்களில் எனது சிந்தனைகள் அடிக்கடி உங்களைப் பற்றியவையாகவே இருந்து வருகின்றன. பலாத்காரத்தினுல் அல்லாமல் வேறு முறைகளைக் கைக்கொண்டு தகராறுகளைத் தீர்ப்பதற்கான ஒரு வழியை, சென்ற ஐம்பது ஆண்டுகளாக நீங்கள் செப்பனிட்டு வருகிறீர்கள். மிகவும் சோதனைக்கு உள்ளான இந்த உலகத்திற்கு ஒரு மகோன்னதமான வழியைக் காட்ட உங்களால்தான் முடியும் என்ற எண்ணம் இடைவிடாது என் மனத்தில் தோன்றி வருகிறது. அந்த வழி இதுதான் : எங்கும் பரவியுள்ள மகாயுத்தத்தின் இடையே ரத்தம் சிந்தாமல் நம் இரு நாடுகளுக்குள்ளும் கௌரவமான ஒரு சமாதான வழியைக் கண்டுபிடிக்க முடியும். அத்தகைய வழி சாத்துவிகத்தின் சக்தியைப் பிரகடனப்படுத்தும் எத்தகைய உண்மையான, உறுதியான, நிரந்தரமான ருசுவாக இருக்கும் !

என்றைக்காவது ஒரு நாள் காலைப் பத்திரிகைகளைப் பிரிக்கும்போது, அது உண்மையாகிவிட்டதைக் காணலாம் என்ற நம்பிக்கை என் உள்ளத்தில் ஏற்பட்டுள்ளது. சி. எப். ஆண்ட்ரூஸ் மரணம் அடைந்தபோது, நீங்கள் அவரைப் பற்றி எழுதிய கட்டுரையில் சிறந்த இந்தியர்களையும் சிறந்த ஆங்கிலேயர்களையும் பற்றிக் குறிப்பிட்டிருந்தீர்கள். அவர்க



1944 செப்டம்பர் 9-ஆம் தேதி பம்பாயில் சமரசப் பேச்சுகள் ஆரம்பமாகுமுன்
காந்திஜியும், ஸ்ரீ ஜின்னாவும்.

CONNEMARA PUBLIC LIBRARY
31 JAN 2002
MADRAS-600 008.

ளுடைய சீரிய குணத்தையும் நோக்கத்தையும் அறிந்ததன் பலஞகவே எனக்கு அத்தகைய நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. உங்களுடைய நண்பர்கள், அவர்களுடைய பிரார்த்தனைகளிலும் சிந்தனைகளிலும் உங்களை நினைத்து வருகிருர்கள்.

தங்கள்,
**அகாதா ஹாரிசன்**

## 40

*"தில்குஷா,"*
*பஞ்சகனி,*
*13-7-1944.*

அன்பார்ந்த ஸ்ரீ அபெல்,

ஸ்ரீமதி அகாதா ஹாரிசனின் கடிதத்துடன் அனுப்பியிருந்த தேதி குறிப்பிடாத உங்கள் கடிதம் கிடைத்தது. அதற்காக நன்றி.

வைஸ்ராயின் விமானத் தபால்களுடன் இத்துடன் இணைக்கப்பட்டுள்ள பதில் கடிதத்தை அனுப்பி வைப்பீர்களா?

தங்கள் அன்புள்ள,
**மோ. க. காந்தி**

## 41

# ஸ்ரீமதி அகாதா ஹாரிசனுக்கு பதில்

*"தில்குஷா,"*
*பஞ்சகனி,*
*13-7-1944.*

ஸ்ரீமதி அகாதா ஹாரிசன்,
2, கிரான்போர்ன் கோர்ட்,
ஆல்பர்ட் பிரிட்ஜ் ரோட்,
லண்டன் எஸ். டபிள்யூ. 11.

எனது அன்பார்ந்த அகாதாவுக்கு,

ஜூன் 14-ஆம் தேதியிட்ட உங்கள் கடிதம் கிடைத்தது. நான் செய்யும் ஒவ்வொரு காரியமும் மண்ணுகிவிடுகிறது. நான் "நம்பிக்கைக்குப் பாத்திரமாகாதவனுக" இருக்கும் வரையில்

அப்படித்தான் நடக்கும். நான் குற்றவாளியாக இருப்பேனாயின், எனது போக்கை உடனடியாகத் திருத்திக் கொள்வேன். ஆனால் அதற்கு மாறாக, ஒரு காலத்தில் அதிகாரிகளுக்கு என் மீதிருந்த நம்பிக்கையை இழக்கும்படியான காரியம் எதையும் நான் செய்து விடவில்லை என்பதை அறிவேன்.

காரியக் கமிட்டி அங்கத்தினர்களைப் பார்க்கவும், அதற்கு அனுமதி கிடைக்காவிடில் வைஸ்ராயைப் பார்க்கவும் நான் செய்த முயற்சியை நீங்கள் அறிவீர்கள். அம் முயற்சி நிறை வேறுவதற்கு முட்டுக் கட்டையாக இருப்பது, என்னைப் பற்றி பிரதம மந்திரி சர்ச்சில் கூறியுள்ள அபிப்பிராயமேயாகும். அடிக்கடி எடுத்துக் கூறப்படும் அந்த அபிப்பிராயத்தை நீங்கள் அறிவீர்கள். "நிர்வாணப் பக்கிரி"யான என்னை அவர் "நசுச்கிவிட" விரும்புவதாகக் கூறப்படுகிறது. உடலை நசுக்கிவிடலாம்; ஆனால், உள்ளத்தை ஒரு காலத்திலும் நசுக்கிவிட முடியாது. சர்ச்சில் அவ்விதம் கூறியது உண்மையாயின் (அது ஒரு போதும் மறுக்கப் படவில்லை) என்னுடைய "தோல்வி"களுக்கெல்லாம் அதுதான் காரணமாக இருக்கலாம்.

ஆனால், ஒரு விஷயத்தை நான் உறுதியாகக் கூற முடியும். எந்த விஷயத்தைக் குறித்தும் நான் கலக்கமோ அல்லது ஏமாற்றமோ அடைவதில்லை. நான் சத்தியத்தின் பிரதிநிதியாக இருப்பேனாயின், இறைவன் எனக்கு இடும் கட்டளைப்படி நான் செய்வேனாயின், என் மீதுள்ள சந்தேகமும், என்னைப் பற்றி உண்மையைச் சிதைத்துக் கூறுவதும் பொடிப் பொடியாகத் தகர்ந்து விடும். என் விஷயத்தில் பொறுமையாக மாத்திரம் இருங்கள். உங்களுக்காகவும் உங்களைப் போன்ற நண்பர்களுக்காகவும் என் மனம் நெகிழ்கின்றது.

ஹென்ரி போலக் அமெரிக்காவில் இருந்தபோது அவர் பத்திரிகைகளுக்கு எழுதிய ஒரு கடிதத்தை* சமீபத்தில் எனக்கு அனுப்பிவைத்தார்கள். அது என்னை ஆழ்ந்த வேதனைக்கு உள்ளாக்கியது என்பதை, அவரை (போலக்கை) நீங்கள் பார்க்கும் போது அவரிடம் சொல்லுங்கள். உண்மையா என்பதை என்னிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொள்ளாமல் என்னைப் பற்றிய பொய்க் கூற்றுகளை அவர் நம்பக் கூடும் என்று நான் ஒரு போதும் நினைத்ததில்லை.

---

* யுத்த சம்பந்தமாகவும், பிரிட்டன் அபாயகரமான நிலையில் இருக்கும்போது 'இந்தியாவிலிருந்து வெளியேறுக' என்று ஆங்கிலேயர்களுக்கு எச்சரிக்கை விடுத்து காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்தையொட்டியும் காந்திஜியின் நிலையைக் குறித்து ஹென்ரி போலக் தமது கடிதத்தில் ஏதேதோ குறிப்பிட்டிருந்தார். அதைப் பற்றியே காந்திஜி மேற்கண்ட கடிதத்தில் தமது வருத்தத்தை தெரிவித்துக் கொண்டுள்ளார். போலக்கின் கடிதம் தமது நற்பெயருக்கு மிகுந்த இழுக்கை உண்டாக்கக் கூடியதாக இருப்பதாய் காந்திஜி கருதினார்.

இந்தக் கடிதம் உங்களுக்குக் கிடைப்பதற்கு முன்பே. வகுப்பு வேற்றுமைச் சிக்கலைத் தீர்க்க நான் செய்துவரும் முயற்சியைப் பற்றி பத்திரிகைச் செய்திகளிலிருந்து நீங்கள் அறிந்துகொள்வீர்கள். ராஜாஜி சென்ற சில நாட்களாக இங்கேயே இருந்துவருகிறுர். அவருடன் கலந்து ஆலோசித்தே வகுப்பு வேற்றுமையைத் தீர்க்க முயற்சித்து வருகிறேன்.

எல்லா நண்பர்களுக்கும் எனது அன்பு. மூரியலுக்கு நான் ஒரு கடிதம் அனுப்பினேன்.

தங்கள்,
பாபு.

பகுதி மூன்று

# தூக்குத் தண்டனைகள்

## 42

## வைஸ்ராய் வேவலுக்குக் கடிதம்

"மேனர் வில்லா"
மேற்கு சிம்லா,
28-6-1945

அன்புள்ள நண்பருக்கு,

1942-இல் நிகழ்ந்த கலவரங்களின் விளைவாகச் சிலருக்கு விதிக்கப்பட்ட தூக்குத் தண்டனைகள் நிறைவேற்றப்படும் கட்டத்திற்கு வந்திருக்கின்றன. காரியக் கமிட்டியைச் சேர்ந்த டாக்டர் ராஜேந்திர பிரசாத் அத்தகைய சில தண்டனைகளைப்பற்றி என்னிடம் கூறியுள்ளார். சிமூர் வழக்கில் விதிக்கப்பட்ட தண்டனைகளைப் பற்றி நீங்கள் ஒரு வேளை அறிந்திருக்கலாம். மகாநாட்டின் இறுதிக் கட்டங்கள் எவ்வாறு உருவாகி வருகின்றன என்பது எனக்குத் தெரியாது. அது எப்படி இருப்பினும், அத்தகைய தூக்குத் தண்டனைகள் யாவும் ஆயுள் தண்டனைகளாகக் குறைக்கப்பட வேண்டும் என்று நான் யோசனை கூறுகிறேன். அவற்றையொட்டி நீதி மன்றங்களில் வழக்குகள் நடந்து கொண்டிருந்தாலும், இராவிட்டாலும், மேற்கொண்டு பொதுமக்களின் வேண்டுகோளோ அல்லது கிளர்ச்சியோ எதுவுமின்றி அத்தகைய தண்டனைகள் குறைக்கப்பட வேண்டும். இது உங்களுக்கு அப்பாற்பட்ட விஷயம் என்று நீங்கள் கருதினால், அதன் சம்பந்தமான முடிவுகளை ஒத்திவைக்கும்படி உங்களுக்கு நான் யோசனை கூறுகிறேன். வரப்போகும் தேசீய சர்க்கார் அவற்றைக் கவனித்துக் கொள்வார்கள்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி.

## 43

வைஸ்ராய் முகாம், இந்தியா,
(சிம்லா), ஜூன் 1945.

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

சிமூர், அஷ்டி முதலிய மற்றும் சில வழக்குகளில் நிறைவேற்றப்பட விருக்கும் தூக்குத் தண்டனைகளைப் பற்றி நீங்கள்

எழுதிய 28–ஆம் தேதியிட்ட கடிதத்துக்கு நன்றி. சிமூர், அஷ்டி வழக்குகள் சம்பந்தப்பட்ட கைதிகள், அப்பீல் செய்து கொள்ள விசேஷ அனுமதி கோரி பிரிவீ கவுன்சிலுக்கு விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிருர்கள் என்று அறிகிறேன். அவ்விஷயமாக பிரிவீ கவுன்சில் தன் முடிவைத் தெரிவிக்கும்வரையில், அவ்வழக்குகள் ஒன்றிலும் தண்டனையை நிறைவேற்ற வேண்டாம் என்று மாகாண அரசாங்கங்களுக்கு ஏற்கனவேயே உத்தரவு பிறப்பித்துள்ளேன். பிரிவீ கவுன்சிலின் முடிவு தெரிந்த பின் அவ்விஷயத்தை நான் ஆலோசிக்கும்போது, உங்களுடைய கடிதத்தை நினைவில் வைத்துக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

## 44

சேவா கிராமம்,
3-8-1945

சர் ஈ. எம். ஜென்கின்ஸ்,
வைஸ்ராய் அந்தரங்கக் காரியதரிசி,
வைஸ்ராய் முகாம்.

அன்புள்ள சர் ஈவான்,

மத்திய மாகாண சட்ட சபை அங்கத்தினரான ஸ்ரீமதி அனசூயாபாய் காளே இங்கு வந்திருந்தார். நாகபுரி ஹைகோர்ட்டின் தீர்ப்பை ஆட்சேபித்து அஷ்டி, சிமூர் கைதிகள் கொடுத்திருந்த அப்பீலை பிரிவீ கவுன்சில் நிராகரித்துவிட்டதாக அவர் கூறினர். எனவே, வைஸ்ராய் இரக்கம் கொண்டு தமக்குள்ள விசேஷ உரிமையை உபயோகித்தாலன்றி, கைதிகள் தூக்கு மேடைக்கு அனுப்பப்பட்டுவிடுவார்கள். சந்தர்ப்பம் வரும்போது இவ் வழக்குகளையும், இவை போன்ற மற்ற வழக்குகளையும் ஆலோசிப்பதாக வைஸ்ராய் அன்புகூர்ந்து என்னிடம் கூறினர். இப்போது சந்தர்ப்பம் வந்திருக்கிறது. மரண தண்டனை குறைக்கப்படுமென்று நான் நம்பலாமா?

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி.

## 45

(தந்தி)

சேவா கிராமம்,
9-8-1945

அந்தரங்கக் காரியதரிசி,
வைஸ்ராய் முகாம்.

சிமூர் கைதிகள் விஷயமாக 4-ஆம் தேதி கடிதம் அனுப்பினேன். நேற்று பதில் வந்திருக்க வேண்டும். பதில் வராததால், கடிதம் உங்களுக்கு வந்து சேர்ந்ததா என்று கவலையாக இருக்கிறது.

காந்தி

## 46

(தந்தி)

புது டில்லி,
10-8-1945.

மோ. க. காந்தி,
வர்தா.

9-ஆம் தேதியிட்ட உங்கள் தந்தி கிடைத்தது. உங்களுடைய 3-ஆம் தேதிக் கடிதம்* வந்து சேர்ந்தது. அது வைஸ்ராயின் முன்னிலையில் வைக்கப்பட்டிருக்கிறது.

வைஸ்ராய் அந்தரங்கக் காரியதரிசி.

## 47

# மகேந்திர சௌத்ரி

வைஸ்ராய் முகாம்,
இந்தியா (சிம்லா),
9-7-1945.

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நேற்று நீங்கள் எழுதியுள்ள கடிதத்தில் மகேந்திர சௌத்ரியின் வழக்கைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவரது

*காந்திஜி வைஸ்ராய்க்கு எழுதிய மேற்கண்ட கடிதம் பலனைக் கொடுத்தது. காந்திஜியின் வேண்டுகோளுக்கு இணங்க வைஸ்ராய் அவ் வழக்குகளில் தலையிட்டு, அஷ்டி, சிமூர் கைதிகளுக்கு விதிக்கப்பட்டிருந்த தூக்குத் தண்டனையை ஆயுள் தண்டனையாகக் குறைத்தார். அவ்விதம் தண்டனையைக் குறைத்து வைஸ்ராய் விடுத்த உத்தரவு 16—8—1945-இல் வெளியாயிற்று.

சார்பில் இரக்கம் காட்டும்படி கோரி எனது காரியாலயத்திற்கு ஒரு விண்ணப்பம் வந்திருக்கிறது. அது எனது ஆலோசனையில் இருக்கிறது. வழக்கமான முறையையொட்டி அவ்விஷயமாக நான் உத்தரவு பிறப்பிக்கும் வரையில், தூக்குத் தண்டனை ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

## 48

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி,
*18-7-1945*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நீங்கள் உங்களுடைய கடிதத்தில் குறிப்பிட்டிருந்த மகேந்திர சௌத்ரியின் வழக்கைப் பற்றி நான் பரிசீலனை செய்துள்ளேன். அது கொலையுடன் கூடிய ஒரு மோசமான கொள்ளை வழக்கு ஆகும். தகுந்த சாட்சியத்தின் மீதே மாங்கிர் செஷன்ஸ் நீதிபதி, எதிரி குற்றவாளியென்று முடிவு செய்தார். அவர் விதித்த தூக்குத் தண்டனையை ஹைக்கோர்ட்டாரும் உறுதி செய்து விவரமாகத் தீர்ப்புக் கூறியுள்ளனர். அத் தண்டனையை ஆட்சேபித்து அப்பீல் செய்துகொள்ள விசேஷ அனுமதி கோரி எதிரி சமர்ப்பித்த மனுவை பிரிவீ கவுன்சில் நிராகரித்துவிட்டது. மகேந்திர சௌத்ரி அரசியல் கைதி என்பதற்கு, வழக்கு சம்பந்தமான தஸ்தாவேஜிகளில் எவ்வித ஆதாரமும் இல்லை. மற்றும் வழக்கில் அவருக்குச் சாதகமாக எவ்வித ஆதாரமும் இல்லை. அவருக்கு 25 வயது ஆகிறது. அவர் பொறுப்பற்ற ஒரு சிறு பையன் அல்ல. கொள்ளையும் கொலையும் மிகக் கடுமையான குற்றங்கள். ஆகையால் சட்டப்படி தண்டனை நிறைவேற்றப்பட வேண்டும் என்று நான் தீர்மானித்திருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

## 49

சேவா கிராமம்,
*23-7-1945*

அன்புள்ள நண்பருக்கு,

மகேந்திர சௌத்ரியைப் பற்றித் தாங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. வழக்கின் தகுதிகள் எதுவாயினும், எவ்வளவு உயர்ந்தவராக இருந்தாலும் அவ்விஷயத்தில் ஒரு மனிதனின்

விவேகத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாது. அவருக்கு ஆலோசனை கூற பாரபட்சமற்ற ஒரு நீதிச் சபையை நியமித்திருக்க வேண்டும். குற்றவாளி என்பது ருஜுவானால் கூட ஒரு மனிதனின் உயிரை வாங்கத் தீர்மானிக்கும் விஷயத்தில் ஒருவருடைய விவேகத்தை மாத்திரம் நம்புவது சரியல்ல. மேற்கண்ட வழக்கின் சாதக பாதகங்களைப் பற்றி வாதிப்பதாயின் நான் எவ்வளவோ கூற முடியும். தவிர அவ் வழக்கு, நியாயமாகவோ, தவறாகவோ, அரசியல் சம்பந்தம் உள்ளதாகிவிட்டது. உங்களுக்கு புத்திசாலித்தனமான ஆலோசனை கூறப்பட்டிருக்க வேண்டும் என்பது எனக்கு எவ்வளவு விருப்பம் தெரியுமா!*

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

*அன்றைய தினமே காந்திஜி ராஜேந்திர பிரசாதுக்கு அனுப்பிய தந்தியில் கீழ் வருமாறு குறிப்பிட்டிருந்தார்: "வருந்துகிறேன். மகேந்திரா இறக்க வேண்டியது தான்."

பகுதி நான்கு

# இந்திய தேசீய ராணுவம்

## 50

## வதந்தி உண்மையா?

சேவா கிராமம்,
25-7-1945

மே. த. வைஸ்ராய்,
வைஸ்ராய் மாளிகை, புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

பர்மாவிலும் மற்ற இடங்களிலும் சுபாஷ் பாபுவுடன் சேர்ந்த பல்லாயிரக் கணக்கான இந்திய தேசீய சிப்பாய்கள் பிரிட்டிஷாரால் கைது செய்யப்பட்டு டில்லி கோட்டையில் சிறைப்படுத்தப்பட்டிருப்பதாயும், அவர்களுடைய தலைவர்கள் ஒரு ராணுவ கோர்ட்டின் தீர்ப்புக்கு இணங்க சுடப்பட்டதாயும் இப்போதுதான் சர்தார் வல்லபாய் பட்டேலிடமிருந்து நான் கேள்விப்பட்டேன். இது கடைத் தெரு வதந்தியென்றே நான் நினைக்கிறேன். அது எப்படியாயினும், உண்மையான நிலைமை பற்றி பொது மக்களுக்கு அறிவிக்க வேண்டும் என்பதே எனது யோசனையாகும். அவர்கள் சிறைப்பட்டிருப்பதும், அவர்கள் மீது வழக்கு நடப்பதும் உண்மையாயின், அவர்களுக்கு அவர்களுடைய விருப்பப்படி வக்கீல்களை நியமித்து உதவி புரிய வேண்டும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 51

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி,
29-7-1945.

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

வைஸ்ராய்க்குத் தாங்கள் எழுதிய 25-ஆம் தேதிக் கடிதம் வந்தது. அதற்காக வைஸ்ராய் தமது நன்றியைத் தெரிவிக்கும்

படியும், அது தமது ஆலோசனையில் இருந்து வருவதாகவும் உங்களுக்கு அறிவிக்கும்படி என்னிடம் கூறியுள்ளார்.

தங்கள் உண்மையுள்ள,
ஈ. எம். ஜென்கின்ஸ்.

## 52

இயற்கை வைத்தியசாலை,
6, தோடிவாலா ரோடு, புனா,
29-10-1945.

சர் ஈவான் எம். ஜென்கின்ஸ்,
வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசி,
வைஸ்ராய் மாளிகை, புது டில்லி.

அன்புள்ள சர். ஈவானுக்கு,

நான் நடுங்கிக் கொண்டும் பயந்து கொண்டும் இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். நான் எனது எல்லையைக் கடந்துவிடக் கூடாது என்பதே அதற்குக் காரணமாகும்.

சுபாஷ் பாபுவின் தலைமையில் இருந்த படைகளைச் சேர்ந்தவர்களின் மீது தொடரப்பட்டுள்ள வழக்கு விசாரணையை நான் கவனித்து வருகிறேன். தற்காப்பிற்காக ஆயுத பலத்தை உபயோகிப்பதை நான் அங்கீகரிக்க முடியாது என்றாலும், அப்படைகளின் பராக்கிரமத்தையும், தேச பக்தியையும் நான் போற்றாமல் இருப்பதற்கில்லை. இந்தியர்களில் மிக மிகப் பெரும்பாலோரின் அபிப்பிராயத்தை அரசாங்கம் அசட்டை செய்ய முடியாது. விசாரணையிலிருக்கும் அவர்களை இந்தியா முழுவதும் மிகுந்த அன்புடன் போற்றுகின்றது. சர்க்கார் பக்கத்தில் மகத்தான வலிமை இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இந்தியாவின் ஏகோபித்த அபிப்பிராயத்துக்கு எதிராக அந்த பலத்தை உபயோகித்தால், சர்க்கார் தங்களுடைய அதிகாரத்தையும் சக்தியையும் துஷ்பிரயோகம் செய்தவர் ஆவார்கள். என்ன செய்ய வேண்டும் என்று கூற எனக்கு உரிமை இல்லை. ஆனால் இப்போது செய்யப்பட்டுவரும் காரியம் சரியல்ல என்று மாத்திரம் கூறுகிறேன். இச்சந்தர்ப்பத்தில் எது சிறந்தது என்பதை வைஸ்ராயே தீர்மானிப்பாராக.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 53

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி,
6-11-1945

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இ. தே. ராணுவத்தைச் சேர்ந்த சிலர் மீது தொடரப்பட்டுள்ள வழக்கைப் பற்றி, அக்டோபர் 29-ஆம் தேதி சர் ஈவான் ஜென்கின்சுக்குத் தாங்கள் எழுதிய கடிதத்தை வைஸ்ராய் பார்த்து, உங்களுடைய அபிப்பிராயங்களைத் தெரிந்து கொண்டுள்ளார். உங்களுடைய அபிப்பிராயங்கள், பத்திரிகைகளில் வெளியாகும் கட்டுரைகளை அடிப்படையாகக் கொண்டுள்ளன. பெரும்பாலும் அக்கட்டுரைகளில் உண்மையான விவரங்கள் கூறப்படுவதில்லை. இப்போது கோர்ட்டில் நடந்து கொண்டிருக்கும் வழக்குகளைப் பற்றி வைஸ்ராய் எவ்வித அபிப்பிராயமும் கூற முடியாது அல்லவா?

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்.

## 54

இயற்கை வைத்தியசாலை,
6. தோடிவாலா ரோடு, புனா
12-11-1945

ஸ்ரீ ஜி. ஈ பி. அபெல்,
வைஸ்ராயின் அந்தரங்க உதவிக் காரியதரிசி,
புது டில்லி.

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

இ. தே. ரா. கைதிகளைப் பற்றி நான் எழுதிய கடிதத்திற்குத் தாங்கள் அளித்துள்ள பதிலுக்காக நன்றி. அவ்விஷயமாக, பத்திரிகைகளில் நான் வாசித்தவற்றை மாத்திரமல்ல, தேச மக்களின் உணர்ச்சியையும் வைஸ்ராய்க்கு அறிவிக்க வேண்டியது எனது கடமையாகும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 55

இயற்கை வைத்தியசாலை,
6, தோடிவாலா ரோடு, புனா,
*2-11-1945*

அன்புள்ள சர் ஈவான்,

இத்துடன் இணைக்கப்பட்டிருப்பதை நேற்று நான் பார்த்தேன். இதை* நீங்கள் பார்த்தீர்களா? எனது கடிதத்தை ஒரு தலைப்பட்சமாக சிதைத்து அவ்விதம் வெளியிட்டிருப்பது நான் செய்த வேலை அல்ல என்பதை வைஸ்ராய் அறிந்து கொள்ள வேண்டும். எனது காரியாலயத்தில் உள்ள ஒரு சில ஊழியர்கள் மிகுந்த நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள். என் அனுமதியின்றி எதையும் அவர்கள் பத்திரிகைகளுக்கு அனுப்பமாட்டார்கள். அவ்விதம் வெளியிட நான் அனுமதி கொடுப்பதும் முடியாத காரியம். ஏனெனில், மக்களிடத்திலோ அல்லது அரசாங்கத்தினிடத்திலோ எனக்குள்ள செல்வாக்கு முற்றிலும் தார்மிகமான செல்வாக்கேயாகும். எவ்விஷயத்தையும் உற்ற காலத்திற்கு முன் வெளியிடுவதன் மூலம் அந்தச் செல்வாக்கின் சக்தி போய் விடுகிறது. வைஸ்ராய்க்கு நான் எழுதிய கடிதத்தில் அந்தரங்கமான விஷயம் எதுவும் இல்லை என்பதை நான் அறிவேன். எனினும், அந்தக் கடிதப் போக்கு வரத்தின் நோக்கம் நிறைவேறி பலன் ஏற்படும் வரையிலும் அல்லது வைஸ்ராய் விரும்பும் வரையிலும் அதை வெளியிடும் உத்தேசம் எனக்கு இல்லை.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 56

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *6-11-1945*

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

சர் ஈவான் ஜென்கின்ஸ் வெளியூருக்குப் போயிருக்கிறார். எனவே, அவருக்குத் தாங்கள் எழுதிய கடிதத்திற்குப் பதில் எழுதும்படி வைஸ்ராய் என்னிடம் கூறியிருக்கிறார். இ. தே. ரா. வழக்கு சம்பந்தமாக, நீங்கள் தலையிட்டு வைஸ்ராயிடம் பேசிய

---

* டில்லி செங்கோட்டையில் இ. தே ராணுவத்தைச் சேர்ந்த சிலர் மீது ராணுவக் கோர்ட்டில் வழக்கு விசாரணை நடந்து கொண்டிருந்தது. அதையொட்டி காந்திஜிக்கும் வைஸ்ராய்க்கும் நடந்த கடிதப் போக்கு வரத்து சிதைந்த முறையில் பத்திரிகைகளில் வெளியாகியிருந்தது. பத்திரிகைகளிலிருந்து கத்தரிக்கப்பட்ட அப்பகுதியையே, வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசிக்கு எழுதிய கடிதத்துடன் காந்திஜி அனுப்பியிருந்தார்.

தாகப் பத்திரிகைகளில் வந்த செய்திகளைக் கத்தரித்து நீங்கள் அந்தக் கடிதத்துடன் அனுப்பியிருக்கிறீர்கள். உங்களுடைய கடிதத்திற்காக வைஸ்ராய் உங்களுக்கு நன்றி செலுத்துவதுடன், உங்களுடைய காரியாலயத்திலிருந்து பத்திரிகைகளுக்கு யாதொரு தகவலும் அனுப்பப்படவில்லை என்ற உறுதி மொழியையும் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொள்ளுகிறார்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்,
வைஸ்ராயின் அந்தரங்க உதவிக் காரியதரிசி.

## 57

காதி பிரதிஸ்தான்,
சோட்பூர் (கல்கத்தாவுக்கு அருகில்),
*8-1-1946*

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

பத்திரிகையிலிருந்து கத்தரிக்கப்பட்ட ஒரு பகுதியை*, நீங்கள் வாசிப்பதற்காக இக் கடிதத்துடன் அனுப்பியிருக்கிறேன். அதில் காணப்படும் செய்தி உண்மையாக இருக்க முடியுமா? வைஸ்ராய்க்கு சிரமத்தைக் கொடுக்காமலேயே நீங்கள் இதற்கு பதில் அளிக்க முடியும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 58

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *15-2-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஜனவரி 8-ஆம் தேதிக் கடிதத்திற்கு நன்றி. பகதூர்கார் முகாமில் உள்ள இ. தே. ரா. கைதிகளைப் பற்றி "ஹிந்துஸ்தான் ஸ்டாண்டர்ட்" பத்திரிகையிலிருந்து கத்தரிக்கப்பட்ட செய்தியையும் அத்துடன் தாங்கள் இணைத்திருந்தீர்கள்.

---

* மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ள பத்திரிகைச் செய்தியில், பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருந்தது: "இந்திய தேசிய ராணுவத்தினர் தேசிய கீதம் பாடியதற்காக பகதூர்கார் முகாமிலுள்ள இ. தே. ரா. கைதிகளில் 25 பேர் துப்பாக்கி முனையால் குத்திக் கொல்லப்பட்டனர். "ஜேய்ஹிந்த்" என்று கோஷம் செய்ததற்காகவும் பலர் தண்டிக்கப்பட்டனர்."

அவ்விஷயமாக விசாரித்து வருகிறேன். அதைப்பற்றி பின்னர் எழுதுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்.

## 59

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *19-1-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி.

பகதூர்கார் முகாம் சம்பந்தமாக அரசாங்கம் விடுத்துள்ள அறிக்கையை* இத்துடன் தங்களுக்கு அனுப்பியிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 60

ஹரிஜன் மந்திர்,
ரீடிங் ரோட், புது டில்லி,
*25-4-1946*

எனது அன்புள்ள ஸ்ரீ அபெல்,

காந்திஜியின் சார்பில் இந்தக் கடிதம் எழுதுகிறேன். எல்லா இ. தே. ரா கைதிகளும் கோஷ்டி கோஷ்டியாக விடுதலை செய்யப்படுவார்கள் என்று காந்திஜி நினைத்துக் கொண்டிருந்தார். இதன் மத்தியில், ஸ்ரீ ரகுநந்தன் சரணிடமிருந்து ஓர் அறிக்கை வந்திருக்கிறது. மூன்று இ. தே. ரா. கைதிகளைப் பற்றிய வழக்கைப் பற்றி அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதன் நகலையும்* இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

---

* மேலே குறிப்பிட்டுள்ள அரசாங்க அறிக்கையின் விவரம் பின்வருமாறு: "எதிர்த்ததன் காரணமாக 42 இ.தே.ரா. கைதிகளுக்கு, பின் புறத்தில் துப்பாக்கி ஈட்டி முனையினால் காயம் ஏற்பட்டது. யாரும் கொல்லப்படவில்லை. துப்பாக்கி ஈட்டியினால் யாரும் தாக்கப்படவும் இல்லை ... "ஜேய் ஹிந்த்" என்று கோஷம் செய்ததற்காக யாரும் தண்டனைக்கு உள்ளாகவில்லை."

* கர்னல் காஸ்லிவால், கர்னல் இனயத் ஹாசன், ரசூல் பக்ஷ் ஆகிய இ.தே. ராணுவத்தைச் சேர்ந்த மூவர்மீதும் ராணுவக் கோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டுள்ளது. அந்த ராணுவத்தைச் சேர்ந்த மேஜர் துரானியிடம் கொடுமையாக நடந்து கொண்டார்கள் என்பதே அம்மூவர்மீதும் உள்ள வழக்கு ஆகும். இ. தே. ரா. மேலிடத்தார் நடத்திய விசாரணையில் சில விவரங்களை ஒப்புக் கொள்ளும்படி செய்வதற்காக மேஜர் துரானியைக் கொடுமைப்படுத்தினார்களாம்.

இதன் சம்பந்தமாக காந்திஜி தமது அபிப்பிராயத்தைத் தெரிவிக்குமுன், ஒரு விஷயத்தை அவர் அறிந்து கொள்ள விரும்புகிறார். சுதந்திரம் வரப்போகும் சமயத்தில், இந்த வழக்குகளும், அவற்றின் விளைவாக ஏற்படும் வேதனையும் தொல்லையும் எதற்காக என்பதையே அவர் அறிந்து கொள்ள விரும்புகிறார்.

தங்கள் உண்மையுள்ள,
**அமிருத கௌரி**

## 61

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி, 26–4–1946*

எனது அன்பார்ந்த ராஜ்குமாரி சாகிபா,

நேற்று தாங்கள் எழுதிய கடிதத்திற்கு நன்றி. அக்கடிதத்தை இன்று ஸ்ரீ சுதீர் கோஷ் என்னிடம் சேர்ப்பித்தார்.

இ. தே. ரா. சம்பந்தமாக சர்க்கார் மேற்கொண்டுள்ள கொள்கையை நீங்கள் அறிவீர்கள். மிருகத்தனமாக நடந்து கொண்டதற்கு சாட்சியம் இருக்கும் இ. தே. ரா. நபர்களின் மீது மாத்திரமே வழக்குத் தொடருவார்கள். மேலே குறிப்பிட்டவர்களின் மீதுள்ள வழக்குகள் இந்த ரகத்தைச் சேர்ந்தவை என்றே நான் அறிகிறேன்.

இருந்தாலும், உங்களுடைய கடிதத்தையும், அத்துடன் இணைக்கப்பட்டிருந்ததையும் யுத்த இலாகாவுக்கு அனுப்பியிருக்கிறேன். அதன் சம்பந்தமாகத் தெரிவிக்க வேண்டியது ஏதாவது இருந்தால், அவர்கள் நேரடியாக உங்களுக்கு எழுதுவார்கள்.

தங்கள் உண்மையுள்ள,
**ஜி. ஈ. பி. அபெல்**

## 62

# ஹரிதாஸ் மித்ரா

*இயற்கை வைத்தியசாலை,*
*6, தோடிவாலா ரோட், புனா,*
*14–9–1945*

வைஸ்ராய்,
வைஸ்ராய் மாளிகை, புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

நீங்கள் லண்டனிலிருந்து திரும்பி வந்ததும் வராததுமாக உங்களைத் தொல்லைப் படுத்தவேண்டியிருப்பதைக் குறித்து நான்

வருந்துகிறேன். அதற்கு என்னுடைய ஒரே சமாதானம் என்ன வெனில், என்னுடைய நோக்கம் முற்றிலும் ஜீவகாருண்யத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதே.

ஸ்ரீ ஹரிதாஸ் மித்ரா கல்கத்தா சர்வகலாசாலையில் எம். ஏ. பட்டம் பெற்றவர் ; ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸின் சகோதரருடைய புதல்வியின் (வயது 22) கணவர். அவர் ஆதாரமற்ற சாட்சியத்தின் மீது மரண தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறார். அவர் விஷயத்தில் இரக்கம் காட்டும்படி அவருடைய மாமனும், அட்வொகேட் கார்டன் நோடும் தயாரித்த விண்ணப்பத்தை நான் வாசித்தேன். இரக்கம் காட்டவேண்டும் என்பதற்கு அவர்கள் தகுந்த காரணங்களை எடுத்துக் கூறியுள்ளனர். அது எப்படியாயினும், ஜப்பானுடன் நடந்து கொண்டிருந்த யுத்தம் முடிந்துவிட்டதால் கருணை காட்டவேண்டும் என்பது தவிர்க்க முடியாததாகிறது. இந்த மரண தண்டனை நிறைவேற்றப் பட்டால், அது மாபெரும் அரசியல் தவருக முடியும்.

நீங்கள் லண்டனிலிருந்து திரும்பிவந்து அதைப்பற்றி யோசிக்கும்வரையில், தண்டனையை நிறைவேற்றுவதை ஒத்தி வைக்கும்படி நீங்கள் உத்தரவிட்டிருந்ததைக் குறித்து மகிழ்ச்சி யடைகிறேன்.

இவ்வழக்கை, கைதியின் மனைவி என் கவனத்திற்குக் கொண்டுவந்தாள். அட்வொகேட் சரத் சந்திர போஸின் விருந்தாளியாக நான் இருந்தபோது நடத்திய பிரார்த்தனைக் கூட்டங்களில் அப்பெண் அடிக்கடி பாடியிருக்கிருள். சரத் சந்திர போஸையும் விடுதலை செய்யும்படி இந்திய சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருப்பதைக் குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி.**

# 63

வைஸ்ராய் மாளிகை,
புதுடில்லி, 18-9-1945

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உங்களுடைய 14-ஆம் தேதிக் கடிதத்திற்காக வைஸ்ராய் உங்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிருர். ஹரிதாஸ் மித்ராவின் வழக்கு இன்னும் வைஸ்ராயிடம் சமர்ப்பிக்கப்படவில்லை. அது இன்னும் வங்காள கவர்னரின் ஆலோசனையிலேயே இருந்து வருகிறது. கூடிய சீக்கிரம் அது வைஸ்ராயிடம் சமர்ப்பிக்கப் படும்.

தங்கள் உண்மையுள்ள,
**ஈ. எம். ஜென்கின்ஸ்.**

## 64

பிர்லா மாளிகை,
மவுண்ட் பிளசென்ட் ரோடு, பம்பாய்,
24-9-1945.

அன்புள்ள சர் ஈவான்,

ஸ்ரீ ஹரிதாஸ் மித்ராவைப் பற்றி நான் எழுதிய கடிதத்திற்கு நீங்கள் அனுப்பிய பதிலுக்காக நன்றி. அவ்விஷயமாக மேற் கொண்டு உங்களுடைய பதிலை எதிர்பார்க்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 65

புனு,
9-10-1945

அன்புள்ள சர் ஈவான்,

ஸ்ரீ ஹரிதாஸ் மித்ரா விஷயமாக வைஸ்ராய் முன்பே ஒரு தீர் மானத்திற்கு வந்திருக்க வேண்டும் என்பதை நான் நினைவூட்டு கிறேன். மரண தண்டனை குறைக்கப்படும் என்ற நம்பிக்கையின் மீது, கைதிக்கு ஆதரவளித்து நடைபெறும் பொதுக்கூட்டங்களை யும், ஊர்வலங்கள் முதலிய ஆர்ப்பாட்டங்களையும் நான் தடுத்து வைத்திருக்கிறேன். அவருடைய இளம் மனைவி இங்கே வந்திருந் தார். இந்தியாவிலும், பிரிட்டனிலும் கூட தனது கணவருக்கு ஆதரவாக பகிரங்க முயற்சி நடைபெற வேண்டும் என்ற ஆர்வம் அவருக்கு இருந்து வருகிறது. எனினும், அவர் எனது யோசனைக்குச் செவி கொடுத்துப் பொறுமையுடன் காத்துக் கொண்டிருக்கிறார்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 66

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 12-10-1945

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

அக்டோபர் 9-ஆம் தேதி கடிதத்திற்காக நன்றி. ஸ்ரீ ஹரிதாஸ் மித்ராவின் வழக்கு, இன்னும் சில தினங்களில் வைஸ்ராயின் உத் தரவுக்காக அவரிடம் சமர்ப்பிக்கப்படும்.

தங்கள் உண்மையுள்ள,
ஈ. எம். ஜென்கின்ஸ்

# 67

# காந்திஜியின் வேண்டுகோள்

இயற்கை வைத்தியசாலை,
6, தோடிவாலா ரோட்,
புனா, 19-10-1945

அன்புள்ள சர் ஈவான்

ஸ்ரீ ஹரிதாஸ் மித்ரா முதலிய மற்றவர்களுடன் ஸ்ரீ ஜோதிஷ் போஸும் மரண தண்டனை விதிக்கப்பட்டுள்ளார். அவரது தந்தை இரண்டு நாட்களுக்கு முன் என்னிடம் வந்திருந்தார். கைதிக்கு இரக்கம் காட்டி மரண தண்டனையைக் குறைக்க வேண்டும் என்ற விண்ணப்பத்தை அவர் என்னிடம் காட்டினார். ஹரிதாஸ் மித்ராவின் தண்டனை குறைக்கப்படுமாயின், இந்தக் கைதியும் இரக்கம் காட்டுவதற்கு உரியவராகிறார். ஸ்ரீ ஜோதிஷ் போஸ், செல்வாக்கற்ற ஒரு ஏழைத் தந்தையின் புதல்வர். எனினும், அவரது தண்டனையைக் குறைப்பதற்கு அவரது வறுமை தடையாக இராது என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயம்.

மற்றும் சிலர் அடங்கிய ஒரு கோஷ்டியினரும் மரண தண்டனையை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாக அறிகிறேன். யுத்த காலத்தில், அமைதியற்ற நிலையில் மேற்கண்ட தண்டனைகள் விதிக்கப்பட்டன. ஆனால், இப்போது நிலைமை மாறிவிட்டது. யுத்தம் முடிவடைந்து விட்டது. தாமதத்துக்குக் காரணம் எதுவாயினும், மரண தண்டனையடைந்தவர்கள் இன்னும் உயிருடன் இருந்து வருகிறார்கள். எனவே அந்த மரண தண்டனைகளையெல்லாம் புனராலோசனை செய்து அவற்றைக் குறைக்க வேண்டும் என்று நான் யோசனை கூறுவது எல்லை மீறியதாகுமா? என் அபிப்பிராயத்தில், நீதி உண்மையான நீதியாக இருக்க வேண்டுமாயின், அது இரக்கத்துடன்கூடியதாக இருக்க வேண்டும்.

எனவே இந்தக் கடிதத்தை, வைஸ்ராயின் ஆலோசனைக்காக அவரது முன்னிலையில் வைக்கும்படி தயவு செய்து உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 68

# மரண தண்டனை ரத்து

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *1-11-1945*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

மரண தண்டனையடைந்த ஹரிதாஸ் மித்ரா, ஜோதிஷ் சந்திர போஸ் இவ்விருவருக்கும் இரக்கம் காட்ட வேண்டுமென்று கோரி விண்ணப்பம் செய்து கொண்டதன் சம்பந்தமாக நமக்குள் நடந்த கடிதப் போக்குவரத்து உங்களுக்கு நினைவிருக்கலாம். இந்த விண்ணப்பங்களையும், மற்றும் இருவருடைய விண்ணப்பங்களையும் வைஸ்ராய் பரிசீலனை செய்து, நான்கு பேருக்கும் விதிக்கப் பட்டிருந்த மரண தண்டனையை ஆயுள் தண்டனையாகக் குறைத்திருக்கிறார்.

தங்கள் உண்மையுள்ள,
ஈ. எம். ஜென்கின்ஸ்

## 69

இயற்கை வைத்திய சாலை,
6, தோடிவாலா ரோட், புனா,
*7-11-1945*

அன்புள்ள சர் ஈவான்,

மரண தண்டனையடைந்த ஸ்ரீ ஹரிதாஸ் மித்ரா முதலிய மற்றும் மூவருக்கு இரக்கம் காட்ட வேண்டுமென்று கோரி அனுப்பிய விண்ணப்பங்கள் சம்பந்தமாக தாங்கள் எழுதியுள்ள கடிதத்திற்காக நன்றி செலுத்துகிறேன். அந்த தண்டனைகளைக் குறைத்ததற்காக நீங்கள் வைஸ்ராய்க்கு எனது நன்றியைத் தயவு செய்து தெரிவிப்பீர்களா?

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 70

காந்திஜியின் முகாம்,
புது டில்லி, *17-4-1946*

எனது அன்புள்ள ஸ்ரீ அபெல்,

ஸ்ரீ ஹரிதாஸ் மித்ராவின் சார்பில் நான் இக்கடிதம் எழுதுகிறேன். இந்த இளைஞனின் மரண தண்டனையை சில மாதங்

களுக்கு முன் வைஸ்ராய் நிறுத்திவிட்டது உங்களுக்கு ஞாபகம் இருக்கலாம்.

சமீபத்தில் பத்திரிகைகளில் வெளியாகியுள்ள ஓர் அறிக்கையின் நகலை* இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இதைப் பார்க்கும்போது, ஹரிதாஸ் மித்ரா மன்னிப்புக்கும் விடுதலைக்கும் உரியவராகிறார் என்று தெரிகிறது. ஸ்ரீ ஹரிதாஸ் மித்ராவின் வழக்கையொட்டி, அவரது மனைவி எனக்கு அனுப்பிய ஒரு சுருக்கமான குறிப்பையும் இத்துடன் அனுப்பியுள்ளேன்.

அறிக்கையில் கண்டுள்ள ஷரத்தின் கீழ் ஹரிதாஸ் மித்ரா வரலாம் என்றே நம்புகிறேன்.

தங்கள் அன்புள்ள,
அமிருத கௌரி

## 71

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 22-4-1946

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

தங்களுடைய 17-4-1946 கடிதத்தில் தாங்கள் எழுப்பியுள்ள ஹரிதாஸ் மித்ரா வழக்கு சம்பந்தமாக இப்போது விசாரணை நடத்தப்பட்டு வருகிறது. நீங்கள் கடிதத்துடன் அனுப்பியுள்ள அறிக்கை, ஜப்பானிய ஆக்கிரமிப்பின் கீழ் இருந்த பிரதேசங்களில் நிகழ்ந்த சம்பவங்களை மாத்திரமே குறிப்பிடுகிறது. இந்தியாவில் பகைவர்களுக்கு உதவி செய்த குற்றத்திற்காக ஹரிதாஸ் மித்ரா தண்டனை அடைந்தார். எனவே, அவரது வழக்கு மேற்கண்ட அறிக்கையின் கீழ் வரவில்லை.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்.

## 72

ரீடிங் ரோட், புதுடில்லி,
21-6-1946.

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

கல்கத்தாவைச் சேர்ந்த ஸ்ரீ ஹரிதாஸ் மித்ராவின் வழக்கைப் பற்றி உங்களுக்கு நினைவிருக்கலாம். அவருக்கு விதிக்கப்பட்

*மேற்கண்ட அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்ததாவது: "கொடுமையாகவோ அல்லது மிருகத்தனமாகவோ நடந்து கொண்டிராதவரையில், தென் கிழக்கு ஆசியாவைச் சேர்ந்த பிரிட்டிஷ் பிரதேசங்களில் பகைவர்களுடன் ஒத்துழைத்ததாகக் குற்றம் சாட்டப்பட்ட நபர்கள் மீது இரக்கம் காட்டி கிரிமினல் நடவடிக்கைகள் எதுவும் எடுத்துக் கொள்ளப் போவதில்லை என்று பிரிட்டிஷ் சர்க்கார் தீர்மானித்துள்ளனர்."

டிருந்த மரண தண்டனை வைஸ்ராயினல் குறைக்கப்பட்ட விவ ரத்தை, ஈவான் ஜென்கின்ஸ 1-11-1945-இல் எனக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

அதற்குப் பிறகு எத்தனையோ சம்பவங்கள் நிகழ்ந்துவிட்டன. ஹரிதாஸ் மித்ராவுக்கு இரக்கம் காட்டி மரண தண்டனையைக் குறைக்கும்படி 4-6-1946-இல் ஸ்ரீ கார்டன் நோட் அனுப்பிய விண்ணப்பத்திலிருந்து, ஹரிதாஸ் மித்ராவை இப்போது சிறை யில் வைத்திருப்பது சிறிதும் பொருத்தமற்ற காரியம் என்பது தெரிகிறது.

அவரது சிறைவாசத்தைப் பற்றி ஸ்ரீ மித்ராவின் மனைவி (ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸின் சகோதரருடைய புதல்வி) எனக்கு எழுதியிருக்கிறார். அதுபோன்ற மற்ற சிறைத் தண்டனைகளெல் லாம் ரத்து செய்யப்பட்டிருக்கும்போது, ஸ்ரீ ஹரிதாஸ் மித்ராவை மாத்திரம் தொடர்ந்து சிறையில் வைத்திருப்பது நியாயமா என்றே நான் வியப்படைகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 73

# விண்ணப்பம் வரவில்லை

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 25-6-1946

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

இன்று சிற்றுண்டி அருந்தும்போது ஹரிதாஸ் மித்ரா வழக்கு சம்பந்தமாக உங்களுடன் பேசவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன்; ஆனல் மறந்துவிட்டேன். ஹரிதாஸ் மித்ரா வின் சார்பில் 4—6—1946-இல் ஸ்ரீ கார்டன் நோட் அனுப்பிய விண்ணப்பம் இந்தக் காரியாலயத்திற்கோ அல்லது சம்பந்தப் பட்ட வேறு இலாகாக்களுக்கோ வரவேயில்லை. அது யாருடைய விலாசத்திற்கு அனுப்பப்பட்டது என்பதை நீங்கள் அறிவித் தால், நான் அதைக் கண்டுபிடிக்க இயலும். இல்லாவிடில், ஸ்ரீ கார்டன் நோட் எனக்கு மற்றொரு பிரதி அனுப்பும்படி நீங்கள் செய்யலாம்.

தங்கள் உண்மையுள்ள,
ஸி. டபிள்யூ. பி. ராங்கின்

## 74

பங்கி காலனி,
ரீடிங் ரோட், புது டில்லி,
26-6-1946

அன்புள்ள மேஜர் ராங்கின்,

நேற்று மாலை உங்களுடைய கடிதம் கிடைத்தது. ஹரிதாஸ் மித்ராவின் மரண தண்டனையைக் குறைக்கும்படி கோரி அனுப்பப்பட்ட விண்ணப்பத்தின் ஒரு நகலை இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

ஸ்ரீ கார்டன் நோட் சென்ற 7-ஆம் தேதி காந்திஜிக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு கூறியுள்ளார் :

"விண்ணப்பத்தின் புதிய நகல் ஒன்றில் கையெழுத்திட்டு இத்துடன் அனுப்பியிருக்கிறேன். கையெழுத்திட்ட பிரதி ஒன்று வைஸ்ராய்க்கும் அனுப்பப்பட்டிருக்கிறது."

ஏற்கனவே அனுப்பப்பட்ட பிரதி தபாலில் தவறியிருக்க வேண்டும். வைஸ்ராய்க்கும் நேராக ஒரு பிரதி அனுப்பும்படி ஸ்ரீ கார்டன் நோடுக்குத் தந்தி கொடுத்திருக்கிறோம். இதன் மத்தியில் நான் அனுப்பும் பிரதியை வைஸ்ராயின் முன்னிலையில் தயவு செய்து வையுங்கள்.

தங்கள் உண்மையுள்ள,
அமிருத கௌரி

## 75

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 28-6-1946

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

ஸ்ரீ ஹரிதாஸ் மித்ராவின் வழக்கு விஷயமாக 26-6-46-இல் மேஜர் ராங்கினுக்குத் தாங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. ஸ்ரீ கார்டன் நோட் சமர்ப்பித்த விண்ணப்பம் பரிசீலனையில் இருந்து வருகிறது.

இவ்விஷயமாக சென்ற 21-ஆம் தேதி காந்திஜி எழுதிய கடிதத்திற்காகவும் எனது நன்றியை அவருக்குத் தெரிவியுங்கள்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்.

## 76

வைஸ்ராய் முகாம் இந்தியா,
*சிம்லா, 12/13-7-1946*

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

ஹரிதாஸ் மித்ராவின் விண்ணப்பத்தைப் பற்றி சென்ற ஜூன் 26-ஆம் தேதி தாங்கள் எழுதியிருந்தீர்கள். அதன் சம்பந்தமாக நடந்த கடிதப் போக்குவரத்தைத் தயவு செய்து பாருங்கள். ஹரிதாஸ் மித்ராவின் சார்பில் ஸ்ரீ கார்டன் நோட் அனுப்பிய விண்ணப்பம் பரிசீலனையில் இருந்து வருகிறது. எனினும், தற்போது அவரை விடுதலை செய்யும் நோக்கம் எதுவுமில்லை.

தங்கள் உண்மையுள்ள,
**ஸி. டபிள்யூ. பி. ராங்கின்**

## 77

# தாமதிப்பது தவறு

முகாம்: பஞ்சகனி,
*22-7-1946*

அன்புள்ள நண்பருக்கு,

*13-7-46*-இல் நீங்கள் ராஜகுமாரிக்கு எழுதிய கடிதம் *18*-ஆம் தேதி வந்து சேர்ந்தது. நான்கு நாட்களாக அதைப் பற்றி நான் எதுவும் சிந்திக்கவே இல்லை. ஆனல், ஸ்ரீ ஹரிதாஸ் மித்ராவின் விடுதலையை வைஸ்ராய் தாமதிப்பது தவறு என்றே தோன்றுகிறது என்பதைக் கூறவேண்டியது எனது கடமையாகிறது. அவ்விதம் தாமதிப்பது, அரசாங்கம் பிரகடனம் செய்துள்ள கொள்கைக்கும் முரணகும்.*

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

---

* காந்திஜி மேற்கண்ட கடிதம் எழுதிய பின் சீக்கிரமாகவே ஹரிதாஸ் மித்ரா விடுதலை செய்யப்பட்டார்.

# 78

## வசுதா சிங் மரண தண்டனை

இயற்கை வைத்தியசாலை,
6, தோடிவாலா ரோடு, புனா,
*6-11-1945.*

அன்புள்ள சர் ஈவான்,

பைஜாபாத் ஜில்லாவைச் சேர்ந்த ஸ்ரீ வசுதா சிங் சார்பில் வைஸ்ராய்க்கு அனுப்பிய ஒரு விண்ணப்பத்தின் பிரதி ஒன்று எனக்கு அனுப்பப்பட்டுள்ளது. சர்க்காரின் அனுதாபத்தைக் கோரியே அந்த விண்ணப்பத்தை அனுப்பியிருக்கிறார்கள். அது, 1942-இல் நடந்த கலவரங்கள் சம்பந்தமான ஓர் அரசியல் வழக்கேயாகும். அஷ்டி, சிமூர் வழக்குகளையொட்டி எந்தக் கொள்கையின் கீழ் வைஸ்ராய் முடிவு செய்தாரோ, அதே கொள்கை இந்த வழக்கிற்கும் பொருத்தமாகும். எனவே, இந்த வழக்கிலும் வழக்கம்போல் மரண தண்டனையைக் குறைக்கும்படி நான் வைஸ்ராயைக் கேட்டுக் கொள்ளலாமா?

19-ஆம் தேதி மரண தண்டனையை நிறைவேற்றுவதென்று நிர்ணயிக்கப்பட்டிருப்பதால், இந்த விஷயத்தை விரைவில் ஆலோசனை செய்யவேண்டும் என்றும் நான் கேட்டுக்கொள்ளலாமா?

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

# 79

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *9-11-1945*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நவம்பர் 6-ஆம் தேதி தாங்கள் எழுதியுள்ள கடிதத்திற்கு நன்றி. வசுதா சிங்கிடமிருந்து ஐக்கிய மாகாண சர்க்காருக்கு ஒரு விண்ணப்பம் கிடைத்தது. அது தற்போது அந்த மாகாண கவர்னரின் ஆலோசனையில் இருந்துவருகிறது. இதன் மத்தியில் மரண தண்டனை நிறுத்திவைக்கப்பட்டிருக்கிறது.

தங்கள் உண்மையுள்ள,
**ஈ. எம். ஜென்கின்ஸ்**

## 80

# வைஸ்ராய்க்கு நன்றி

*சேவா கிராமம்,*
*25-11-1945*

*அன்புள்ள சர் ஈவான்,*

*அதிகமான அலுவல்கள் காரணமாகவும், சேவா கிராமத்திலிருந்து புனவுக்கு மாறிச் செல்லுவதற்கான ஏற்பாடுகள் செய்ய வேண்டியிருந்ததன் காரணமாகவும், உங்களுடைய 9-ஆம் தேதியிட்ட கடிதத்திற்குப் பதில் எழுதத் தவறிவிட்டேன். இதன் மத்தியில், பத்திரிகைகளிலிருந்தும், பீகாரிலிருந்து சொந்த முறையில் எனக்கு வந்த தந்திகளிலிருந்தும் மரண தண்டனையை வைஸ்ராய் குறைத்துவிட்டார் என்பதை அறிந்து கொண்டேன். அவ்விதம் தண்டனையைக் குறைத்ததற்காக வைஸ்ராய்க்கு எனது நன்றியைத் தயவு செய்து தெரிவிப்பீர்களா?*

*தங்கள் உண்மையுள்ள,*
**மோ. க. காந்தி**

## 81

# நேருஜியின் சூடான பிரசங்கங்கள்

*இயற்கை வைத்திய சாலை,*
*6, தோடிவாலா ரோடு, புனு*
*13-11-1945*

*அன்புள்ள சர் ஈவான்,*

*பண்டித ஜவாஹர்லால் நேரு கைது செய்யப்படலாம் என்பதுபற்றி லண்டனிலிருந்து வந்துள்ள ராய்ட்டர் செய்தியை, இப்போதுதான் நான் பார்த்தேன்.*

*பிரிட்டிஷார் ஆட்சி அதிகாரத்தைக் கைவிட விரும்பாமலும், மக்களுக்குச் சொந்தமானதை மக்களிடம் ஒப்புவிக்காமலும் இருப்பார்களாயின், பண்டித நேருவின் பிரசங்கங்கள் சூடாக இருக்கின்றன என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனல், பிரிட்டிஷார் வாயளவில் கூறுவது உண்மையெனில், அப் பிரசங்கங்களை சூடானவை என்று கூறுவதற்கில்லை. ஆனல், அவர் துவேஷத்துடனே, பகை உணர்ச்சியுடனே பேசுவதாகக் கூறுவது தவருகும். ஐ. ஸி. எஸ். அதிகாரிகளைக் கண்டித்து அவர் கடுமையாகப் பேசுகிருர் என்பதில் ஐயமில்லை. ஆனல்,*

அவ்விஷயமாக அவர் மக்களின் மன நிலையையே வெளியிடுகிறார்-அவர் கூறுவது சரியே. வைஸ்ராய் பிரகடனப்படுத்தியுள்ள "மறந்து விடுங்கள். மன்னித்து விடுங்கள்" என்ற அற்புதமான சித்தாந்தம், சிப்பாய்களின் அத்துமீறிய செயல்களுக்கு மாத்திரமே பொருந்தும். மன்னிக்க முடியாத ரத்த வெறி, ஜீவ காருண்யமற்ற தன்மை, லஞ்சம், ஊழல் போன்ற செயல்களுக்கு அந்தச் சித்தாந்தம் பொருந்தாது. பண்டித நேருவின் பேச்சுகள் தவறாயின், அவற்றை பகிரங்கமான, பாரபட்சமற்ற நீதிச் சபையின் முன் சோதனை செய்து பார்க்க வேண்டும். சர்க்காரின் கைகள் சுத்தமானவையாயின், பகிரங்கமான விசாரணையைக் குறித்து அவர்கள் பீதி அடைவதற்கு எதுவும் இல்லை.

தெளிவான ஒரு விஷயத்தைக் குறித்து வாதத்தில் இறங்கி வைஸ்ராயின் நேரத்தை நான் வீணாக்கமாட்டேன்.

தங்கள் உண்மையுள்ள
**மோ. க. காந்தி**

## 82

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *16-11-1945*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

தங்களுடைய நவம்பர் *13*-ஆம் தேதிக் கடிதம் எனக்குக் கிடைத்தது. அக்கடிதத்தை வைஸ்ராய் பார்வையிட்டார்.

தங்கள் உண்மையுள்ள,
**ஈ. எம். ஜென்கின்ஸ்**

பகுதி ஐந்து

# சிறைகளில் சித்திரவதை

## 83

## உண்மையாக இருக்க முடியுமா?

*இயற்கை வைத்திய சாலை,*
*6, தோடிவாலா ரோடு, புனா,*
*10-10-1945*

*அன்புள்ள சர் ஈவான்*

*ஒரு வழக்கின் விவரத்தை நான் இக்கடிதத்துடன் அனுப்பியிருக்கிறேன். பத்திரிகை நிருபர் அதை மிகவும் விரிவாக வர்ணித்திருக்கிறார்.* அவ்விவரங்கள் உண்மையாக இருக்க முடியுமா? அவை உண்மையாயின், அத்தகைய நிலையைச் சீர்திருத்த வைஸ்ராய் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ள உத்தேசித்திருக்கிறார்? இது தனி ஒரு சம்பவம் அல்ல. இது போன்ற பல நிகழ்ச்சிகளில் இதுவும் ஒன்று.*

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 84

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி, 13-10-1945*

*அன்புள்ள ஸ்ரீ காந்தி.*

*ஸ்ரீ ஷீல் பத்ர யாஜியிடமிருந்து வந்த அறிக்கையை இணைத்துத் தாங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. வைஸ்ராய்*

---

*** நேதாஜி சுபாஷ் சந்திர போஸினால் ஆரம்பிக்கப்பட்ட பார்வர்ட் பிளாக் கட்சியின் பிரபல அங்கத்தினரான யாஜி என்ற பிரமுகர், "இந்தியாவை விட்டு வெளியேறுக" என்ற போராட்டத்தையொட்டிக் கைது செய்யப்பட்டார். சிறையில் அவரை அதிகாரிகள் சித்திரவதைக்கு உட்படுத்தி மோசமான முறையில் நடத்தியதாக, மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ள நிருபர் விவரித்திருந்தார்.**

வெளியே முகாம் சென்றிருக்கிருர். உங்களுடைய கடிதத்தையும், அதனுடன் வந்த அறிக்கையையும் அவருக்கு அனுப்பியிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஈ. எம். ஜென்கின்ஸ்

## 85

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 1-1-1945

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

வைஸ்ராய் காஷ்மீரிலிருந்து திரும்பி வந்ததும், உங்களுடைய கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்த ஸ்ரீ ஷீல் பத்ர யாஜியின் அறிக்கையைப் பற்றி விசாரிக்க ஏற்பாடு செய்தார். அந்த அறிக்கையில் தவருன தகவல்களும், மிகைபடக் கூறும் விஷயங்களும் அடங்கியிருக்கின்றன என்பதில் அவருக்குச் சந்தேகம் இல்லை. எனினும், அதிலுள்ள சில அம்சங்களை மேற்கொண்டு விசாரிக்க ஏற்பாடு செய்துள்ளார்.

தங்கள் உண்மையுள்ள,
ஈ. எம். ஜென்கின்ஸ்

## 86

இயற்கை வைத்திய சாலை,
6, தோடிவாலா ரோடு, புனு,
7-11-1945

அன்புள்ள சர் ஈவான்,

ஸ்ரீ ஷீல் பத்ர யாஜி சம்பந்தமாகத் தாங்கள் எழுதிய கடிதத்திற்கு நான் நன்றி செலுத்த வேண்டியவனுக இருக்கிறேன். அந்த அறிக்கையில் உள்ள சில அம்சங்களைப் பற்றி மேற்கொண்டு பரிசீலனை செய்ய வைஸ்ராய் உத்தரவிட்டிருப்பதால், அந்தப் பரிசீலனையின் முடிவை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க காந்தி

# 87

# ஆதாரமற்ற புகார்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 26-11-1945

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஸ்ரீ யாஜியின் வழக்கைப் பற்றி ஏற்கனவே சர் ஈவான் ஜென்கின்ஸ் உங்களுக்கு பதில் கடிதம் எழுதியுள்ளார்.

2. ஸ்ரீ யாஜி எந்த நிலைமையில் சிறைபட்டார் என்பது பற்றி வைஸ்ராய்க்கு ஓர் அறிக்கை கிடைத்திருக்கிறது. அதில் உள்ள விவரங்கள் ஆதாரபூர்வமானவை என்று வைஸ்ராய் நம்புகிறார். உள் துறை மந்திரியும் திடீரென்று கோட்டைக்குச் சென்று, ஸ்ரீ யாஜி இருக்கும் இடத்தை நேரில் பார்வையிட்டார்.

3. ஸ்ரீ யாஜி தமது உடல் நிலையைப் பற்றிக் கூறியுள்ள புகார்கள் நிச்சயமாக மிகைபடக் கூறப்பட்டவை என்பது அறிக்கையிலிருந்து தெரிகிறது. அவர் வைக்கப்பட்டுள்ள அறை அவர் குறிப்பிட்டிருப்பதைக் காட்டிலும் அதிகப் பெரிதாகவும், அதிகக் காற்றோட்டமுள்ளதாகவும் இருக்கிறது. அங்கே வெளிச்சம் இல்லை என்பது உண்மையே. மற்றொரு புறம், சுவர்கள் கனமாக இருப்பதாலும் நேரடியான சூரிய வெளிச்சம் அங்கே இராததாலும் கோடைகாலத்தில் அது மிகவும் குளிர்ச்சியாக இருக்கிறது. அந்த அறையில் பூச்சிகள் ஏராளமாக இருப்பதாகக் கூறப்படும் புகாருக்கு ஆதாரம் இல்லை. கூரையில் பலகைகள் வைத்துத் தைக்கப்பட்டிருப்பதால், பாம்புகள் வருவது முடியாத காரியம். தேகப் பயிற்சி செய்வதற்கு இடம் விசாலமாக இருப்பதுடன், நிழல் கொடுக்கும் மரங்களும் இருக்கின்றன. கைதிகள் தினந்தோறும் ஒரு மணி நேரம் தேகப் பயிற்சி செய்வதற்கு அனுமதிக்கப்படுகிறார்கள். இந்தியத் துருப்புகளுக்கு எந்த உணவு கொடுக்கப்படுகிறதோ அதே உணவுதான் கைதிகளுக்கும் கொடுக்கப்படுகிறது. ஸ்ரீ யாஜிக்கு குடிக்க உப்புத் தண்ணீர் கொடுத்தார்கள் என்பது முற்றிலும் ஆதாரமற்ற புகாராகும். தாம் நிற்கவோ, நகர்ந்து செல்லவோ முடியாத நிலைமையில் இருப்பதாக அவர் கூறியிருப்பதும் சரியல்ல. சிறிது காலம் அவர் தினந்தோறும் கோட்டை ஆஸ்பத்திரிக்குச் சென்று சிகிச்சை செய்து கொண்டு வந்தார். பின்னர் சிகிச்சை பெறுவதற்காக அவரை, இந்தியன் மெடிகல் ஆஸ்பத்திரிக்கு அனுப்பினர்.

4. தனிப்பட்ட காவலர்கள் கொடுமையாக நடந்து கொண்டார்கள் என்பது போன்ற அவர் கூறியுள்ள பல புகார்களும் உண்மையா என்பதை இவ்வளவு காலத்திற்குப் பிறகு அறிந்து கொள்வது இயலாத காரியம். அவரது மற்றப் புகார்கள் மிகைபடக் கூறப்பட்டவை என்பதை நேரில் பார்த்த உடனேயே

தெரிந்து கொள்ளலாம். இவற்றைப் போலவே தான் மற்றப் புகார்களும் ஆதாரமற்றவை என்று ஊகிப்பது நியாயமேயாகும்.

5. இவ்விஷயத்தில் வைஸ்ராய் தாமே நேரில் அக்கறை எடுத்துக் கொண்டிருப்பதாக உங்களிடம் உறுதி கூறும்படி என்னைக் கேட்டிருக்கிறார். விசாரணையில் இருந்துவரும் கைதிகள் எல்லை மீறிக் கொடுமையாக நடத்தப்படவில்லை என்பதை அவர் உறுதியாகத் தெரிந்து கொண்டிருக்கிறார்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 88

முகாம்: காதி பிரதிஸ்தான்,
சோட்புரி, (கல்கத்தாவுக்கு அருகில்),
8-12-1945

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

ஸ்ரீ யாஜியைப் பற்றி நவம்பர் 26-இல் நீங்கள் எழுதியுள்ள கடிதம் கிடைத்தது. மிகவும் அக்கறையெடுத்துக்கொண்டு பதில் எழுதியிருப்பதைக் குறித்து நன்றியுள்ளவனாக இருக்கிறேன். இப்போது அந்த கனவானுடன் (ஸ்ரீ யாஜி) தொடர்பு வைத்துக் கொள்ளவும், தாங்கள் கூறியவற்றிற்கெல்லாம் அவர் என்ன சொல்லுகிறார் என்பதையும் அறிய முயற்சித்து வருகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 89

# பயங்கரமான விவரங்கள்

சேவா கிராமம்,
25-11-1945

அன்புள்ள சர் ஈவான்,

நான் சென்ற அக்டோபர் 10-ஆம் தேதி அனுப்பிய கடிதத்தைத் தொடர்ந்து இதை எழுதுகிறேன். அதன் பின் அதுபோன்ற மற்றும் பல விவரங்களைப் பத்திரிகைகளில் நான் பார்த்தேன். இப்போது என்னிடம் ஸ்ரீ பிரபுதயாள் வித்தியார்த்தி என்ற ஓர் இளைஞர் வந்திருக்கிறார். அவர் சிறிய ஏழைப் பையனாக இருந்தபோது என்னை வந்து பார்த்தார்.

அவரைப் பற்றி எனக்கு யாரும் சிபாரிசு செய்யவில்லை. இச்சம்பவம் 1935—இல் நிகழ்ந்தது. அதிலிருந்து அவர் ஒரு போதும் எனது மேற்பார்வைக்கு அப்பால் சென்றதில்லை. 1942 கொந்தளிப்புகளின் போது அவர் கைதியாகி சமீபத்தில் விடுதலை செய்யப்பட்டார். அவர் உடல் நிலை படுமோசமாகி வார்தாவுக்கு வந்து சேர்ந்தார். நான் அப்போது புனாவில் இருந்தேன். அவர் தாம் வந்திருப்பதை எனக்கு அறிவிக்கவே, புனாவுக்கு வரும்படி அவருக்குத் தந்தி கொடுத்தேன். அவரை அங்கே நன்கு பராமரிக்கவும், அவசியமாயின் டாக்டர் மேத்தாவின் ஆஸ்பத்திரியில் அவர் சிகிச்சை பெறுவதற்கு ஏற்பாடு செய்யவும் உத்தேசித்திருந்தேன். டாக்டர் மேத்தாவுடன்தான் நான் தங்கியிருந்தேன். சித்திரவதைக்கு உள்ளான பயங்கரமான விவரங்களை அவர் கூறியுள்ளார். அவ்விவரங்களைப் பற்றி இந்த நிலையில் நான் எதுவும் கூற விரும்பவில்லை.

இதற்கெல்லாம் மேலாக, டாக்டர் லோகியாவின் நண்பர்களிடமிருந்தும் எனக்குத் தகவல்கள் வந்திருக்கின்றன. டாக்டர் லோகியாவே சித்திரவதைக்கு உள்ளானதாக அவர்கள் என்னிடம் கூறுகின்றனர். டாக்டர் லோகியா திறமையும் பண்பாடும் உள்ளவர். இந்தியாவின் சுதந்திரத்திற்காக அவர் சுகமும், சௌக்கியமும் நிறைந்த வாழ்க்கையைத் துறந்தவர். அவரை நன்கு அறிவேன்; அவர் மூலம் அவரது தந்தையையும் அறிவேன்.

பத்திரிகைகளில் வெளியான எல்லா விவரங்களையும் நம்பாமல் இருக்க முடியவில்லை. மேற்கண்ட இரண்டு சம்பவங்களையும் நம்பாமல் இருக்க முடியவில்லை. இவ்விவரங்கள் மிகைபடக் கூறப்பட்டவை என்றும், பரிசீலனை செய்வதற்குத் தகுதியற்றவை என்றும் நிராகரிக்காமல் இருக்கவேண்டும் என்று நான் வைஸ்ராய்க்கு யோசனை கூறுகிறேன். மிகைபடக் கூறப்படும் விஷயங்களாயினும், அவற்றை வைஸ்ராய் மேற்கொண்டு விசாரித்து வருவதாக நவம்பர் 1-இல் நீங்கள் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அது எனக்கு ஆறுதல் அளிக்கிறது. அத்தகைய விவரங்கள் எல்லாவற்றையும் அவர் விசாரிக்க வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன். அவ்விதம் விசாரிக்க அவர் உத்தேசித்தால், இங்கே குறிப்பிட்ட இரண்டு சம்பவங்களையும், மற்றும் பல சம்பவங்களையும் பற்றிய விவரங்களை உங்களுக்கு அனுப்ப நான் தயாராக இருக்கிறேன். இச்சம்பவங்கள் ஆதாரபூர்வமானவை என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி.

## 90

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *1-12-1945*

*அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

சர் ஈவான் ஜென்கின்சுக்கு *25-11-1945*-இல் தாங்கள் எழுதிய கடிதத்திற்குப் பதில் அளிக்கும்படி அவர் என்னிடம் கூறியிருக்கிறார்.

ஸ்ரீ வித்தியார்த்தி, டாக்டர் லோகியா ஆகியவர்களைப் பற்றிய விவரங்களை நீங்கள் உள்துறை மந்திரிக்கு நேராக அனுப்பினால் வைஸ்ராய் மகிழ்ச்சியடைவார். அப்போது அவற்றைப் பூரணமாகப் பரிசீலனை செய்யலாம். ஸ்ரீ வித்தியார்த்தி புது டில்லிக்கு வந்து உள்துறை மந்திரியைப் பார்த்தால், அவர் மகிழ்ச்சியடைவார். ஸ்ரீ வித்தியார்த்திக்கு ஆகும் செலவு தொகைகளெல்லாம் கொடுக்கப்படும். உள்துறை மந்திரி டிசம்பர் *11*-ஆம் தேதி வரையிலும், *19*-ஆம் தேதிக்குப் பிறகும் பிரயாணம் செய்து கொண்டிருப்பார். எனவே, அந்தத் தேதிகளுக்கு இடையே வந்தால் அவருக்கு வசதியாக இருக்கும்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 91

முகாம் : காதி பிரதிஸ்தான்,
சோட்புரி (கல்கத்தாவுக்கு அருகில்),
*8-12-1945*

*அன்புள்ள ஸ்ரீ அபெல்,*

உங்களுடைய *1*-ஆம் தேதிக் கடிதத்திற்கு நன்றி. டாக்டர் ராம் மனோகர் லோகியாவைப் பற்றிய முழு விவரங்களையும் தங்களுக்கு அனுப்பிவைக்கிறேன். புது டில்லிக்குச் சென்று உள்துறை மந்திரியைப் பார்க்கும்படி ஸ்ரீ பிரபுதயாள் வித்தியார்த்திக்கு எழுதியிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி.

## 92

இயற்கை வைத்தியசாலை,
6, தோடிவாலா ரோடு, புனா,
20-2-1946.

ஜி. ஈ. பி. அபெல்,
வைஸ்ராய் அந்தரங்கக் காரியதரிசி,
வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

சர் ஈவான் ஜென்கின்ஸ் வைஸ்ராயின் அந்தரங்கக் காரிய தரிசியாக இருந்தபோது, 21-11-1945-ல் நான் எழுதிய ஒரு கடிதத்தைப் பற்றியே இங்கு குறிப்பிடுகிறேன். ஸ்ரீ பிரபுதயாள் வித்தியார்த்தியைப் புது டில்லிக்கு அனுப்பும்படி அவர் என்னைக் கேட்டிருந்தார். அதற்கிணங்க, அவரை டில்லிக்கு அனுப்பினேன். இவ்விஷயமாக சர் ஜான் தார்னே என்னுடைய மகன் பார்த்துப் பேசியிருப்பதால், எனக்கும் அவனுக்கும் கடிதப் போக்கு வரத்து நடந்து வருகிறது. எனினும் அவ்விசாரணையின் முடிவு என்ன என்றோ அல்லது அவ்விஷயமாக என்ன செய்ய உத்தேசிக்கப்பட்டிருக்கிறது என்றோ, உத்தியோக தோரணையில் எனக்கு யாதொரு தகவலும் இல்லை.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 93

வைஸ்ராய் முகாம்,
புது டில்லி, 12-3-1946

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஸ்ரீ வித்தியார்த்தியைப் பற்றி பிப்ரவரி 20-ஆம் தேதி நீங்கள் எழுதிய கடிதத்திற்குப் பதில் அளிப்பதில் தாமதம் ஏற்பட்டதைக் குறித்து வருந்துகிறேன்.

அவ்விஷயமாக உள்துறை மந்திரி, உங்கள் குமாரர் ஸ்ரீ தேவதாஸ் காந்தியுடன் விவரமாக விவாதித்தார். அதன் சம்பந்தமாக நாகபுரியில் இன்னும் விசாரணை நடந்து கொண்டிருக்கிறது. அந்த விசாரணையின் முடிவை அவருக்கு அறிவிப்பதாக உள்துறை மந்திரி உறுதி கூறியிருக்கிறார்.

தங்கள் உண்மையுள்ள,
**ஜி. ஈ. பி. அபெல்**

## 94

இயற்கை வைத்திய சாலை,
6, தோடிவாலா ரோட், புனா,
*17-3-1949.*

அன்பார்ந்த ஸ்ரீ அபெல்,

உங்களுடைய 12-ஆம் தேதிக் கடிதத்திற்கு நன்றி. டில்லி நிகழ்ச்சிகள் சம்பந்தமாக ஸ்ரீ வித்தியார்த்தி கூறியவையெல்லாம் பொய் என்ற முடிவுக்கு உள்துறை மந்திரி வந்திருப்பதாக எனது மகன் கூறுகிறான். மந்திரி செய்துள்ள முடிவைப் பற்றி அவன் கூறுவது சரியா? நாகபுரி விசாரணைகள் முடிவடைந்தபின், உள்நாட்டு மந்திரியின் முடிவைப் பற்றி நீங்கள் எழுதும்போது மேற்கண்ட கேள்விக்கு தயவு செய்து விடை அளியுங்கள்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 95

# 'பொய்க் கதை'

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி,
*28-3-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

பிரபுதயாள் வித்தியார்த்தி வழக்கு சம்பந்தமாக நீங்கள் மார்ச் 17-இல் எழுதிய கடிதத்தை தயவு செய்து பாருங்கள். நாகபுரியிலிருந்து டில்லிக்கு போலீஸ் காவலில் தம்மைக் கொண்டு வந்ததாகவும், செங்கோட்டையில் ராணுவத்தின் காவலில் ஒப்புவித்ததாகவும், அங்கே தம்மை ஒரு வாரம் வைத்திருந்து சித்திரவதைக்கு உட்படுத்தியதாகவும் பிரபுதயாள் வித்தியார்த்தி கூறினார். உள் துறை மந்திரி அதை சாங்கோபாங்கமாக விசாரித்து, அந்தக் கதை முற்றிலும் பொய் என்ற முடிவுக்கு வந்திருக்கிறார். உள் துறை மந்திரி மார்ச்சு 2-இல் ஸ்ரீ தேவதாஸ் காந்தியைச் சந்தித்தபோது, ஸ்ரீ தேவதாஸ் காந்தியும் அதே முடிவுக்கு வந்திருப்பதாகத் தெரிந்தது. நாகபுரியில் மத்திய மாகாண போலீசார் பிரபுதயாள் வித்தியார்த்தியை மோசமாக நடத்தயிருக்கலாம் என்றும், டில்லிக்கு அழைத்துச் சென்றதாகவும் அங்கே சித்திரவதைக்கு உட்படுத்தியதாகவும் அவர் கற்பனைக் கதையை ஜோடித்திருக்கலாம் என்றும் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறினார். நாகபுரியில் அவரை மோசமாக நடத்தினார்கள் என்ற அவரது புகார்களை, மத்திய மாகாண சர்க்கார் தீர விசா

ரித்தார்கள். ஆனால் அந்தப் புகார்களை உண்மை என்று ருசுப்பிக்க அவரால் முடியவே இல்லை. செங்கோட்டைக் கதையைக் கற்பனை செய்யும் சக்தி பிரபுதயாள் வித்தியார்த்திக்கு இருந்ததெனில், நாகபுரியில் மோசமாக நடத்தினார்கள் என்ற கதையையும் கற்பனை செய்யும் சக்தி அவருக்கு இருந்திருக்கும் என்பதைத் தவிர, உள் துறை மந்திரி மேற்கொண்டு எதுவும் சொல்லுவதற்கில்லை.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

# 96

முகாம்: காதி பிரதிஸ்தான்,
சோட்புரி (கல்கத்தாவுக்கு அருகில்),
*18-12-1945.*

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

டாக்டர் ராம் மனோஹர் லோகியாவை அதிகாரிகள் மோசமான முறையில் நடத்தியதைப் பற்றி ஏற்கனவே எழுதியிருக்கிறேன். அவ்விஷயமாக டாக்டர் லோகியா அவரது வக்கீலிடம் சமர்ப்பித்துள்ள வாக்கு மூலத்தின் பிரதி ஒன்றை, தாங்கள் கோரியபடியே இப்போது நான் அனுப்பியிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 97

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *20-12-1945*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

டாக்டர் லோகியாவைப் பற்றி * 18-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதத்திற்கு நன்றி. அவரது வாக்கு மூலத்தை உள் துறை மந்திரிக்கு அனுப்பும்படி வைஸ்ராய் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். அவ்விஷயத்தை உள் துறை மந்திரி கவனிப்பார்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

---

* இந்தியாவுக்கு பிரிட்டிஷ் மந்திரிகள் தூது கோஷ்டி வந்த பிறகு டாக்டர் ராம் மனோகர் லோகியாவும், ஸ்ரீ ஜெயப்பிரகாச நாராயணனும் 12-4-1946-இல் விடுதலை செய்யப்பட்டார்கள்.

பகுதி ஆறு

# கதர்க் கடைகளுக்கு லைசன்ஸ்

## 98

## ஏழை மக்களைத் தண்டிப்பதா?

*இயற்கை வைத்திய சாலை,*
*6, தோடிவாலா ரோடு, புனா,*
*10-10-1945*

அன்புள்ள சர் ஈவான்,

நான் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் தலைவன். இருபத்தைந்து ஆண்டுகளாக நடந்துவரும் அச்சங்கம், முற்றிலும் பொது மக்களுக்காகத் தொண்டு புரியும் ஸ்தாபனமாகும். வேலையில்லாத கோடிக்கணக்கான ஆடவர்கள், பெண்களின் நலனுக்காகவே அது நடத்தப்பட்டு வருகிறது. கையால் நூற்பது மேற்கொண்டு வளர்ச்சி பெறும்படி செய்வதற்காக, எனது யோசனையின் மீது சமீபத்தில் ஒரு விதி ஏற்படுத்தப்பட்டது. கதர் வாங்குவோரிடமிருந்து பணத்திற்குப் பதிலாக ஒரு குறிப்பிட்ட அளவு நூல் வாங்கிக் கொள்ளவேண்டும் என்பதே அந்த விதியாகும். சங்கம் ஆரம்பமானதிலிருந்து இதுவரையில் இந்தியா முழுவதும் உள்ள நூற்போருக்கு நான்கு கோடி ரூபாய்க்குமேல் ஊதியம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவர்களிடையே எல்லா சமூகங்களையும் சேர்ந்தவர்கள் இருக்கிறார்கள்.

இப்போது மாகாண சர்க்கார்கள் லைசன்ஸ் விதிகளை அமலுக்குக் கொண்டுவர ஏற்பாடு செய்துவருகிறார்கள் என்று அறிகிறேன். அவற்றின்படி, மில் துணி வியாபாரிகளைப்போல் கதர்க் கடைகளும் லைசன்ஸ் எடுத்துக் கொள்ள வேண்டுமாம். கையால் நூற்ற நூலின் விலையைக் குறித்தும், அவர்கள் ஆட்சேபணை எழுப்பியிருக்கிறார்கள். கதரையும் அதன் மூலம் ஏழை மக்களையும் தண்டிக்க வேண்டும் என்பது சர்க்காரின் உத்தேசம் அல்ல என்றே நான் நிச்சயமாகக் கருதுகிறேன். இது இந்தியா முழுவதையும் பொறுத்த விஷயமாதலால், செய்யப்படவிருக்கும் இந்தத் தவறுக்கு பரிகாரம் கிடைக்கும் என்ற நம்பிக்

கையுடன் நான் வைஸ்ராயையே அணுகத் துணிந்துள்ளேன். சங்கத்தின் கௌரவ காரியதரிசி இவ்விஷயத்தை மாகாண சர்க்கார்களின் கவனத்திற்குக் கொண்டுவந்துள்ளார் என்பதையும் நான் இங்கே குறிப்பிடலாம்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 99

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி,
13-10-1945

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

கதர்க் கடைகளுக்கு லைசன்ஸ் கொடுக்கும் விஷயமாக 10-10-1945-இல் நீங்கள் எழுதிய கடிதத்திற்கு நன்றி. வெளியூர்களில் பிரயாணம் செய்துவரும் வைஸ்ராய்க்கு அக்கடிதத்தை நான் அனுப்பியிருக்கிறேன். அதன் சம்பந்தமான நிலைமை என்ன என்பது பற்றி சம்பந்தப்பட்ட இலாகாவையும் கேட்டிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**ஈ. எம். ஜென்கின்ஸ்.**

## 100

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 19-10-1945

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

கதர்க் கடைகளுக்கு மாகாணங்களில் விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடுகள்பற்றி நான் விசாரித்து வருகிறேன் என்று அக்டோபர் 13-இல் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தேன். கதர் விலையைப் பற்றியோ அல்லது விநியோகத்தைப்பற்றியோ கட்டுப்பாடு எதுவும் விதிக்கவில்லை என்றும், மாகாண சர்க்கார்கள் விதித்துள்ள எத்தகைய கட்டுப்பாடுகளைப் பற்றியும் தங்களுக்கு எதுவும் தெரியாது என்றும் கைத்தொழில் இலாகா எனக்கு அறிவித்துளது. அவ்விஷயத்தைக் கவனிக்கும்படியும், உங்களுடைய புகார்களுக்குப் பரிகாரமாக என்ன செய்ய முடியும் என்பது பற்றியும் அந்த இலாகா மாகாண சர்க்கார்களைக் கேட்டிருக்கிறது.

இதன் சம்பந்தமான தகவல்களை வைஸ்ராயும் பார்வையிட்டுள்ளார்.

தங்கள் உண்மையுள்ள,
**ஈ. எம். ஜென்கின்ஸ்.**

# 101

# பிரிவீ கவுன்சிலின் தீர்ப்பு

*இயற்கை வைத்தியசாலை,*
*6, தோடிவாலா ரோடு. புனா,*
*20–10–1945*

*அன்புள்ள சர் ஈவான்,*

*கதருக்கு லைசன்ஸ் விதிக்கும் விஷயமாக 10–10–'45–இல் நான் எழுதிய கடிதத்தைத் தொடர்ந்து இதை எழுதுகிறேன். அகில இந்திய நூற்போர் சங்கத்திற்கு வருமான வரியிலிருந்து விலக்கு அளிக்கும் விஷயமாக முன்பு பிரிவீ கவுன்சில் ஆலோசிக்க வேண்டியிருந்தது. இந்த வழக்கு 'ஏ. ஐ. ஆர். 1944 பிரிவீ கவுன்சில்' 88–ஆவது பக்கத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனது வேண்டுகோளின் மீது, பிரிவீ கவுன்சிலின் தீர்ப்பு வெளியாகும் வரையில், வருமான வரி வசூல் செய்வதை நிறுத்தி வைக்க வேண்டுமென்று இதற்கு முன் பதவியிலிருந்த வைஸ்ராய் உத்தர விட்டிருந்தார். பிரிவீ கவுன்சில், பம்பாய் ஹைகோர்ட்டின் தீர்ப்பை ரத்துச் செய்துவிட்டது. அகில இந்திய நூற்போர் சங்கத்தின் முக்கியமான நோக்கம் ஏழைகளுக்கு உதவி அளிப்பதே என்றும், பொது மக்களின் நலனை அபிவிருத்தி செய்வதும் பொதுவாக அதன் நோக்கங்களில் ஒன்று என்றும், வியாபார முறையிலோ, சொந்த முறையிலோ லாபம் பெறுவது அச்சங்கத்தின் நோக்கமல்ல என்றும் பிரிவீ கவுன்சிலின் தீர்ப்பு கூறியது. அந்த ஆதாரங்களின் மீதே சங்கம் பொதுஜன நலனுக்கான ஒரு தரும ஸ்தாபனம் என்றும், எனவே வரியிலிருந்து விலக்கு பெறுவதற்கு அதற்கு உரிமை உண்டு என்றும் பிரிவீ கவுன்சில் முடிவு செய்தது. கதர் உற்பத்தியிலும், விற்பனையிலும் ஏதாவது லாபம் வருமாயின், அது கையால் நூற்பவர்களுக்கும் கைத்தறி நெசவாளர்களுக்குமே போய்ச் சேருகிறது. அப்படியிருக்க. கொள்ளை லாபத்தையும் பதுக்கலையும் தடுக்கும் சட்டத்தின் கீழ் வரும் மில் துணிகளுடன் அதை ஒப்பிடலாமா? கதரை உற்பத்தி செய்யும் ஏழைகளின் அற்ப வருமானத்திற்கு வரி விதிக்காமல் இருக்க வேண்டுமாயின், அத்தகைய கட்டுப்பாட்டிலிருந்து கதருக்கு முற்றிலும் விலக்கு அளிக்க வேண்டும்.*

*தங்கள் உண்மையுள்ள,*
**மோ. க. காந்தி**

## 102

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *1-11-1945*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

கொள்ளை லாபத்தையும், பதுக்கலையும் தடுக்கும் மாகாண சர்க்கார்களின் கட்டுப்பாடுகளிலிருந்து கதர்க் கடைகளுக்கு விலக்கு அளிக்க வேண்டும் என்று, தாங்கள் *29–10–1945*-இல் எழுதிய கடிதத்தை வைஸ்ராயிடம் காட்டினேன். கைத்தொழில், சிவில் சாதன விநியோக இலாகாவுக்கு அக் கடிதம் அனுப்பப் பட்டுளது. அந்த இலாகா அதிகாரிகள் உங்களுடைய கருத்துகளை மாகாண சர்க்கார் அதிகாரிகளுக்கு அறிவிப்பார்கள்.

தங்கள் உண்மையுள்ள,
**ஈ. எம். ஜென்கின்ஸ்**

## 103

இயற்கை வைத்தியசாலை,
*6*, தோடிவாலா ரொடு, புனா,
*5-11-1945*

அன்புள்ள சர் ஈவான்,

கதர் சம்பந்தமாக நீங்கள் எடுத்துக் கொண்டுள்ள நடவடிக்கையைக் குறித்து 1-ஆம் தேதி நீங்கள் எழுதியுள்ள கடிதத்திற்கு நன்றி.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 104

# வெல்லத் தொழில்

முகாம்: காதி பிரதிஸ்தான்,
சோட்புரி, (கல்கத்தாவுக்கு அருகில்),
*15-12-1945*

அன்புள்ள நண்பருக்கு,

ஐக்கிய மாகாணத்தில் வெல்லம் உற்பத்தி செய்வதற்குத் தடை விதிக்கப்பட்டிருப்பதாக அங்கிருந்து ஒரு நிருபர் எழுதுகிறார். வெல்லம் செய்தல், கிராமக் கைத்தொழில்களில் ஒன்றாகும். கரும்பு சாகுபடி செய்வோர், அவர்களுடைய வயல்களிலேயே

வெல்லம் உற்பத்தி செய்கிறார்கள். கிராமக் கரும்பாலைகளிலிருந்து பிழிந்து எடுக்கும் கரும்புச் சாற்றை கிராம வாணலிகளில் காய்ச்சி அவர்கள் வெல்லம் செய்கிறார்கள். எனவே, எனக்குக் கடிதம் எழுதிய நிருபர் தவறான தகவலைக் கொடுத்திருக்க வேண்டுமென நான் நினைத்து, அந்தத் தடை உத்தரவின் நகல் ஒன்றை எனக்கு அனுப்பி வைக்கும்படி அவரைக் கேட்டிருந்தேன். அவர் அவ்விதமே அந்த நகலை எனக்கு அனுப்பியிருக்கிறார். திடுக்கிடச் செய்யும் அந்த உத்தரவு இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது.* கரும்பு சாகுபடி செய்வோர் அந்த உத்தரவைக் கண்டித்து தீர்மானங்கள் நிறைவேற்றியதுடன், அது வாபஸ் செய்யப்படாவிடில் அதை மீறுவதென்றும் முடிவு செய்திருக்கிறார்கள். அதன் பலனாக அதிகாரிகள் முதலில் விடுத்த உத்தரவைச் சிறிது தளர்த்தினர். அந்தப் புதிய உத்தரவின் நகலும் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. இது, ஏழை மக்களை எவ்வளவு தூரம் பாதிக்கும் என்பதை நீங்கள் உணர்ந்துகொள்வீர்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. சர்க்கரை மில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காக முதல் உத்தரவை சர்க்கார் விடுத்திருக்க முடியாது. வெல்லமோ அல்லது சுத்தம் செய்யப்பட்ட சர்க்கரையோ நியாயமான முறையில் உபயோகிக்கப்படவும், விநியோகிக்கப்படவும் வேண்டும். அப்படியாயின், மேற்கண்ட உத்தரவு அந்த நோக்கமே தோல்வியுறும்படி செய்துவிடுகிறது. முதல் உத்தரவைப் போல் இரண்டாவது உத்தரவு அவ்வளவு மோசமல்ல என்றாலும், கிராம மக்களின் நலனைப் பொறுத்த மட்டில் அந்த உத்தரவு உண்மையில் பலன் அளிப்பதாக இல்லை. கிராமங்களில் செய்யப்படும் வெல்லத்திற்கு யாதொரு லைசன்ஸும் விதிக்கப்படக் கூடாது,

இது மாகாணத்தை மாத்திரம் பொறுத்த விஷயம் அல்ல; இந்தியாவில் கரும்பு சாகுபடியாகும் எல்லா இடங்களையும் பொறுத்ததாகும். அதனாலேயே, அதற்குப் பரிகாரம் கோரி வைஸ்ராயை அணுக நான் துணிந்துள்ளேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

* ஐக்கிய மாகாண சர்க்கார் விடுத்த உத்தரவில், சில குறிப்பிட்ட பிரதேசங்களில் யாரும் வெல்ல உற்பத்தி செய்யக் கூடாது என்றும், கரும்பைப் பிழிய ஆலைகள் அமைக்கவோ அல்லது அத்தகைய பிரதேசங்களுக்கு வெளியே குறிப்பிட்ட தொழிற்சாலைகளைத் தவிர வேறு எந்த இடத்திற்கும் கரும்புகளை எடுத்துச் செல்லவோ கூடாது என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது.

# 105

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *19-12-1945*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஐக்கிய மாகாணத்தில் வெல்லம் செய்யும் விஷயமாக, டிசம்பர் 15-ஆம் தேதியிட்ட உங்களுடைய கடிதத்திற்கு நன்றி. அக் கடிதத்தை நான் வைஸ்ராய்க்குக் காட்டினேன். அவ்விஷயத்தைப் பரிசீலனை செய்யும்படி அவர் உணவு இலாகாவுக்கு உத்தரவிட்டிருக்கிருர்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

# 106

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *3-1-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

வெல்லம் உற்பத்தி செய்யும் விஷயமாக நீங்கள் எழுதிய கடிதத்துக்கு உடனடியாக டிசம்பர் 19-ஆம் தேதி பதில் எழுதியிருந்தேன். அதன் சம்பந்தமாக வைஸ்ராய் பரிசீலனை செய்ததன் முடிவை இப்போது நான் உங்களுக்குக் கூற முடியும்.

உங்களுக்குக் கிடைத்த தகவலைக் கொண்டு நீங்கள் நினைத்ததுபோல் நிலைமை அவ்வளவு மோசமானதாக இல்லை. ஐக்கிய மாகாணத்தில் உள்ள ஒரு சிறிய பிரதேசத்தைத் தவிர, வேறு எங்கும் வெல்ல உற்பத்தி தடுக்கப்படவில்லை. நீங்கள் குறிப்பிடும் உத்தரவு, ஐக்கிய மாகாணத்தில் கரும்பு சாகுபடியாகும் 15 சதவிகிதம் பிரதேசத்தையே பாதித்திருக்கிறது. மீதி 85 சதவிகிதம் பிரதேசத்தில் உள்ள கரும்பு சாகுபடியாளர்களுக்கு, தங்கள் விருப்பப்படி வெல்லம் செய்துகொள்ள உரிமை இருக்கிறது. பீகாரில் அத்தகைய உத்தரவு எதுவும் இல்லை. வங்காளத்திலும் இப்போது அவ்வித உத்தரவு எதுவும் இல்லை. சென்ற டிசம்பர் 15-ஆம் தேதி வரையில் வங்காளத்தில் அவ் விஷயமாகச் சில கட்டுப்பாடுகள் இருந்தன. அறுவடைக் கால ஆரம்பத்திலேயே முற்றாத கரும்புகள் வெட்டப்படுவதைத் தடுக்கவே அக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. இந்தியாவில் வேறு எந்த மாகாணத்திலும் அத்தகைய தடை உத்தரவு இல்லை.

ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த ஒரு பிரதேசத்தில் மாத்திரம் அவ்வித உத்தரவு பிறப்பித்ததற்குத் தகுந்த காரணம்

இருக்கிறது. இந்தியாவில் சர்க்கரை தேவைக்குப் போதுமான தாக இல்லை. வெல்லத்துக்கும், முக்கியமாக சர்க்கரைக்கும் அதிகமான கிராக்கி இருந்து வருகிறது. எனவே அவற்றின் உற்பத்தியும் விநியோகமும் திட்டமிடப்பட்டுச் செய்யப்பட வேண்டும் என்பது ஐக்கிய மாகாண சர்க்காரின் அபிப்பிராய மாகும். சர்க்கரைக்காகவும், வெல்லத்துக்காகவும் ஒதுக்கப் பட்ட பிரதேசங்களைப் பிரித்து வைத்தாலொழிய, எத்தகைய திட்டமும் சாத்தியமல்ல. ஏனெனில் அந்தச் சரக்குகளின் விலைகள் ஒன்றையொன்று பாதிப்பவையாக இருக்கின்றன. தவிர, உற்பத்தியாகும் இடங்களிலிருந்து கரும்புகளை சர்க்கரைத் தொழிற்சாலைகளுக்குக் கொண்டு செல்வதும் லாபகரமானதாக இல்லை; கரி. பெட்ரோல், டயர்கள், வாகன்கள் முதலியவை களுக்காக வீண் செலவும் ஏற்படுகிறது. இதில் இன்னும் மோசமானது என்னவெனில், சர்க்கரையும் வீணாகிறது. அதாவது வெகு தூரம் எடுத்துச் செல்லுவதால், கரும்பில் உள்ள சர்க்கரை சத்தும் குறைந்துவிடுகிறது. ஐக்கிய மாகாண சர்க்கார் அவ் விதம் உத்தரவு பிறப்பித்ததற்கு இவையெல்லாம்தான் காரணம் என்பதை வைஸ்ராய் அறிந்துகொண்டுள்ளார்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்.

# 107

# பர்மா, மலேயா நாடுகளுக்கு வைத்திய கோஷ்டி

காதி பிரதிதான்,
சோட்புரி, (கல்கத்தாவுக்கு அருகில்),
8-1-1940

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

டாக்டர் பி. ஸி. ராயை வைஸ்ராய் அறிவார். இந்தியாவில் உள்ள மிகப் பிரபல டாக்டர்களில் அவரும் ஒருவர். கல்கத் தாவில் உள்ள பல ஆஸ்பத்திரிகளின் திறமையான நிர்வாகத் திற்கு அவர்தான் பொறுப்பாளியாவார். அவரது தொண்டுகளை இந்திய அரசாங்கம் உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறது. போர் கமிட்டியிலும்* அவர் அங்கத்தினராக இருந்தார். மலேயா விலும், பர்மாவிலும் உள்ள மக்களுக்கு வைத்திய உதவி அளிப்ப

* இந்தியாவில் கிடைக்கக்கூடிய வைத்திய வசதிகளையும், மக்களின் தேவைகளையும் மதிப்பிட்டு அவற்றை நிறைவேற்றுவதற்கான முறைகளைச் சிபாரிசு செய்வதற் காக ஸ்ரீ போர் தலைமையில் இந்திய சர்க்காரால் நியமிக்கப்பட்ட கமிட்டியைப் பற்றியே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

தற்காக ஒரு கோஷ்டியை அனுப்ப காங்கிரஸ் ஏற்பாடு செய்திருக்கிறது. அந்தக் கோஷ்டிக்குத் தகுந்த வசதிகள் அளிக்க இந்திய சர்க்கார் தயங்குவதாக, டாக்டர் ராய் என்னிடம் கொடுத்த காகிதங்களிலிருந்து அறிகிறேன். தங்களால் இயன்றதையெல்லாம் சர்க்கார் செய்துவருவதே அவர்களுடைய தயக்கத்திற்குக் காரணம் என்று தெரிகிறது. ஆனால், இது போன்ற விஷயங்களில் மிகவும் சக்தி வாய்ந்த சர்க்கார் கூட போதிய அளவுக்கு உதவி செய்துவிட முடியாது. போதிய உதவியின்றி மக்கள் கஷ்டப்படும்படி விட்டுவிடக் கூடாது. எனவே, வைத்திய கோஷ்டியை காங்கிரஸ் அனுப்புவதாலேயே அதை அங்கீகரிக்க சர்க்கார் தயங்குகின்றனர் என்ற கூற்றை, என் மனத்திலிருந்து அகற்றிவிட நான் விரும்புகிறேன். மிகுந்த திறமைசாலியான டாக்டர் பி. ஸி. ராய் அளிக்க முன்வந்துள்ள பேருதவி நிராகரிக்கப்பட மாட்டாதென்றே நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 108

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *14-1-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

பர்மாவுக்கும் மலேயாவுக்கும் காங்கிரஸ் வைத்திய கோஷ்டி அனுப்புவதன் சம்பந்தமாக ஜனவரி 8-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதத்திற்கு நன்றி. இந்தக் கடிதம், பம்பாயில் வைஸ்ராயுடன் நான் பிரயாணம் செய்துகொண்டிருந்தபோது எனக்குக் கிடைத்தது. கூடிய சீக்கிரம் அதற்கு நான் பதில் எழுதுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 109

வைஸ்ராய் மாளிகை,
புது டெல்லி, *30-1-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

பர்மாவுக்கும் மலேயாவுக்கும் ஒரு வைத்திய கோஷ்டி அனுப்புவதன் சம்பந்தமாக ஜனவரி 8-ஆம் தேதி நீங்கள் எழுதிய கடிதத்திற்குப் பதில் எழுதுவதற்குச் சிறிது தாமதம் ஏற்பட்டதற்காக வருந்துகிறேன். இதுபோன்ற விஷயங்களில், மற்ற சர்க்கார்களையும் கலந்துகொள்ள வேண்டியிருப்பதால் சிறிது கால

மாகிறது என்பதை நீங்கள் அறிந்துகொள்வீர்கள் என்பது நிச்சயம்.

வைத்திய கோஷ்டி அனுப்புவதைக் குறித்து பர்மிய சர்க்கார் நன்றி கூறியுள்ளனர். எனினும் அதை ஏற்றுக்கொள்ள அவர்கள் மறுத்துவிட்டார்கள். ஏனெனில், அதற்கு இது உற்ற சமயமில்லை என்று அவர்கள் கருதுகிறார்கள். போக்குவரத்து சாதனங்களும் இடவசதிகளும் சீர்குலையும் அளவுக்குப் பூராவாக உபயோகிக்கப்பட்டிருப்பதாகவும், வைத்திய கோஷ்டியினர் இந்தியர்களுக்கு மாத்திரமல்ல, மற்ற சமூகத்தினருக்கும் வைத்திய உதவி அளிக்க வருவதால் அவர்களுக்கு வேண்டிய வசதிகளை சர்க்காரே தங்கள் சொந்தச் செலவில் செய்து கொடுக்க வேண்டியிருக்கும் என்றும் பர்மிய சர்க்கார் கூறியுள்ளனர்.

இருந்தாலும், இந்தியாவிலிருந்து அனுப்பப்படும் வைத்திய கோஷ்டியை மலேயாவில் உள்ள பிரிட்டிஷ் ராணுவ சர்க்கார் ஒப்புக்கொண்டுள்ளனர். இவ்விஷயமாக, காமன்வெல்த் தொடர்பு இலாகாவிலிருந்து வைத்திய கோஷ்டியினருக்குத் தகவல் அறிவிக்கப்படும்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 110

# கைதியான இந்திய அரசாங்க ஏஜண்டு

சேவா கிராமம்,
7-2-1946

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

பர்மாவுக்கும் மலேயாவுக்கும் வைத்திய கோஷ்டி அனுப்புவதன் சம்பந்தமாக சென்ற மாதம் 30-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதம் சென்ற 4-ஆம் தேதி சென்னையில் எனக்குக் கிடைத்தது. அதற்காக நன்றி.

பர்மா சர்க்காரின் நிலைமை ஓரளவு விசித்திரமாக இருக்கிறது. சென்ற ஜூன் மாதம் சிம்லாவில் பர்மா கவர்னரைச் சந்திக்கும் நல்ல வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. எத்தகைய வைத்திய உதவியையும், அதிலும், இந்தியாவில் உள்ள மிக்க புகழ்பெற்ற வைத்தியர்களில் ஒருவருடைய திறமையுடன் கூடிய மேற்பார்வையின் கீழ் வரும் வைத்திய கோஷ்டியை பர்மா சர்க்கார் வரவேற்பார்கள் என்றே நான் நினைத்தேன். வைத்தியத் துறையில் அவருக்குள்ள தனித் திறமைக்கு மாத்திரமல்ல, அவ

ருக்குள்ள மகத்தான நிர்வாகத் திறமைக்கும் டாக்டர் ராய் புகழ் பெற்றவர்.

மலேயா சம்பந்தப்பட்ட வரையில் வைத்திய கோஷ்டி வர வேற்கப்பட்டிருப்பதைக் குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன். அதற்காக வைஸ்ராய்க்கு நன்றி செலுத்துகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 111

காதி பிரதிஸ்தான்,
சோட்புரி, (கல்கத்தாவுக்கு அருகில்),
*7-1-1946*

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

சில தினங்களுக்கு முன் வரையில் மலேயாவில் இந்திய அர சாங்க ஏஜண்டாக இருந்த ஸ்ரீ எஸ். ஸி. கோஹோவின் மனைவி ஸ்ரீமதி சரோஜ் வாசினி கோஹோ என்னை வந்து பார்த்து, அவ ரது கணவருக்காக வைஸ்ராயின் உதவியை நாடும்படி என்னைக் கேட்டுக்கொண்டார். அவர் சிங்கப்பூரில் கைது செய்யப்பட் டிருப்பதாகத் தெரிகிறது. வைஸ்ராயிடம் சமர்ப்பிக்கப்பட்ட அவரது (ஸ்ரீமதி கோஹோ) விண்ணப்பத்தின் நகல் ஒன்றையும் அவர் என்னிடம் கொடுத்திருக்கிறார். அதன் சம்பந்தமான விவரங்கள் இப்போது சர்க்காரிடம் இருக்கின்றன. அவையெல் லாம் உண்மையாயின், அவரது கணவரைப்பற்றிச் சிறிதும் கவலைப்பட வேண்டாம் என்று அவரிடம் கூறியிருக்கிறேன். இதன் சம்பந்தமான விவரங்களைத் தாங்கள் தயவு செய்து எனக்குக் கூற முடியுமா?

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 112

வைஸ்ராய் முகாம்,
இந்தியா, *11-1-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஸ்ரீ எஸ். ஸி. கோஹோவைப் பற்றித் தாங்கள் எழுதிய கடி தத்திற்கு நன்றி. அக் கடிதத்தை வைஸ்ராய் முன் வைத்திருக் கிறேன். அவரது உத்தரவின் மீது நான் அவ்விஷயமாக விசா ரித்து வருகிறேன். கூடிய சீக்கிரம் அதன் சம்பந்தமாகத் தங் களுக்கு எழுதுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**ஜி. ஈ. பி. அபெல்**

## 113

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *18-1-1946*

*எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி*

*ஸ்ரீ கோஹோவைப் பற்றி 7-1-1946-இல் தாங்கள் எழுதிய கடிதத்திற்குப் பதிலாகவே இதை எழுதுகிறேன்.*

*நேச தேசத் தலைமை தளபதியிடம் இவ்விஷயத்தை வைஸ்ராய் பிரஸ்தாபித்திருக்கிறார். இருந்தாலும் அதன் முடிவு எப்படி இருக்கும் என்பது பற்றி இப்போது எதுவும் கூறுவது சாத்தியமில்லை. டில்லியில் இருக்கும் நேச தேசத் தலைமை தளதிபதியின் பிரதிநிதியுடன் காமன்வெல்த் தொடர்பு இலாகா இவ்விஷயமாகத் தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறது.*

*மலேயாவை ஜப்பான் ஆக்கிரமித்துக்கொள்ளுமுன் ஸ்ரீ கோஹோ இந்திய அரசாங்க ஏஜண்டாக நியமிக்கப்பட்டார் என்றாலும், அவர் அப்பதவியை ஏற்றுச் செயல் புரிவதற்கான சந்தர்ப்பமே ஏற்படவில்லை. எனினும் அதற்கும், இப்போது எழுந்துள்ள பிரச்னைக்கும் சம்பந்தமில்லை.*

*தங்கள் அன்புள்ள,*
**ஜி. ஈ. பி. அபெல்.**

## 114

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *26-2-1946*

*எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,*

*உங்களுடைய 14-2-1946 கடிதத்திற்கு நன்றி. ராஜா மகேந்திர பிரதாப் இந்தியாவுக்குத் திரும்பி வருவதற்கு உதவி அளிப்பது சாத்தியமா என்பதுபற்றி நான் விசாரித்து வருகிறேன். எனினும் அது அவ்வளவு எளிதான காரியம் அல்ல என்றே அஞ்சுகிறேன். மேற்கொண்டு இதைப் பற்றிப் பின்னர் எழுதுகிறேன்.*

*ஸ்ரீ கோஹோவைப் பொறுத்தமட்டில் நிலைமை இதுதான்: ஜப்பானுடன் ஒத்துழைத்ததற்காகக் குற்றம் சாட்டப்பட்டுள்ள இந்தியர்களின் வழக்குகளை, லண்டனிலிருந்து உத்தரவு வரும் வரையில் நிறுத்தி வைக்கும்படி மலேயாவில் உள்ள பிரிட்டிஷ் ராணுவ சர்க்காரைக் கேட்டிருக்கிறார்கள். சாதாரண கொள்கையை அனுசரிப்பதாயின், அவர்கள் மீதுள்ள வழக்கு விசாரணை தொடர்ந்து நடைபெற வேண்டும். ஆனால், ஜப்பானுடன் ஒத்துழைத்ததற்காக மட்டிலும் வழக்குகள் தொடரக் கூடாது என்பது இந்தியாவின் கொள்கையாதலால். இந்தக் கொள்கையே*

மலேயாவிலும் பின்பற்றப்பட வேண்டும் என்று இந்திய சர்க்கார் கேட்டிருக்கிறார்கள். இதன் சம்பந்தமாக முடிவான ஒரு தீர்மானத்திற்கு வரும் வரையில் நடவடிக்கைகள் நிறுத்திவைக்கப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ கோஹோ* ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டிருக்கிறார் என்றும் நம்புகிறேன். மலேயாவில் இந்தியர்களின் சார்பில் எதிர் வழக்காடுவதற்கான வசதிகளை இந்திய சர்க்கார் செய்துள்ளனர் என்பது தங்களுக்குத் தெரியும்.

தங்கள் உண்மையுள்ள,

ஜி. ஈ. பி. அபெல்.

## 115

## ராஜா மகேந்திர பிரதாப்

காதி பிரதிஸ்தான், சோட்புரி,

முகாம்: கௌஹாத்தி, 12-1-1946

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

உங்களுக்கு இந்தக் கடிதத்தை காந்திஜியின் சார்பில் நான் எழுதிக் கொண்டிருக்கிறேன். ராஜா மகேந்திர பிரதாபிடமிருந்து இரண்டு தினங்களுக்கு முன் காந்திஜிக்கு ஒரு கடிதம் வந்தது. அது 19-10-1945-இல் யோகோஹாமா சிறையிலிருந்து எழுதப்பட்டதாகும். அமெரிக்கா செஞ்சிலுவை மூலம் அக்கடிதம் வந்தது. ராஜா மகேந்திர பிரதாபின் நண்பர் ஒருவரிடமிருந்தும் காந்திஜிக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. அவர் இந்தியாவில் எங்கேயோ ஒரு சிறையில் வைக்கப்பட்டிருப்பதாக வதந்தி உலவுகிறது என்று அந்த நண்பர் எழுதியிருக்கிறார். இது உண்மையா? உண்மையாயின், அவரைப் பற்றிய விவரங்களை காந்திஜிக்குத் தாங்கள் அறிவிக்க முடியுமா?

தங்கள் உண்மையுள்ள,

அமிருத கௌரி

## 116

வைஸ்ராய் மாளிகை,

புது டில்லி, 16-1-1946

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

உங்கள் 12-ஆம் தேதிக் கடிதத்திற்கு நன்றி. ராஜா மகேந்திர பிரதாபைப் பற்றி நான் விசாரித்து கூடிய சீக்கிரம் உங்களுக்கு எழுதுகிறேன்.

---

* ஸ்ரீ கோஹோவை 1946 மார்ச் மாதம் மலேயா ராணுவ சர்க்கார் விடுதலை செய்தனர். அவர் மீது மேற்கொண்டு வழக்கு எதுவும் நடைபெறவில்லை.

எங்கள் இருவரிடமிருந்தும் வாழ்த்துக்கள். உங்களைப் பார்க்க சந்தர்ப்பம் கிடைக்குமென நாங்கள் நம்புகிறோம்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 117

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி, 27-1-1946*

*எனது அன்புள்ள ராஜகுமாரி அமிருத கௌரி,*

*ராஜா மகேந்திர பிரதாபைப் பற்றி நான் விசாரித்தேன். அவர் இந்தியாவில் இருப்பதாக வெளியாகியுள்ள வதந்தி சரியல்ல. எங்களுக்குத் தெரிந்தவரையில் அவர் இன்னும் டோக்கியோவில்தான் இருக்கிறார். அவரை இங்கே அனுப்பும் உத்தேசமும் இருப்பதாகத் தெரியவில்லை. அவர் பிரிட்டிஷ் பிரஜை அல்ல என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம்.*

*நல் வாழ்த்துக்கள்,*

*தங்கள் உண்மையுள்ள,*
ஜார்ஜ் அபெல்.

## 118

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி, 1-3-1946*

*எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,*

*ராஜா மகேந்திர பிரதாப் இந்தியாவுக்குத் திரும்பிவருவதன் சம்பந்தமாக சென்ற மாதம் 27-ஆம் தேதி தங்களுக்கு எழுதியிருந்தேன். இந்தியாவிற்குள் வர அவர் அனுமதிச் சீட்டு எதற்கும் விண்ணப்பம் செய்துகொள்ளவில்லை. அவர் விண்ணப்பம் செய்துகொண்டால், உங்களுடைய கோரிக்கையை நான் நினைவில் வைத்துக் கொள்கிறேன்.*

*தங்கள் உண்மையுள்ள,*
ஜார்ஜ் அபெல்

# 119

# 'ஹரிஜன்' பத்திரிகைக்குக் காகிதம்

*இயற்கை வைத்திய சாலை,*
*6, தோடிவாலா ரோடு, புனா,*
*5-3-1946*

*அன்புள்ள ஸ்ரீ அபெல்,*

*'ஹரிஜன்' பத்திரிகைக்குக் கொடுக்கப்படும் காகிதத்தின் அளவை அதிகரிக்க முடியுமா என்று கேட்டு உங்களுக்கு எழுதும்படி காந்திஜி எனக்குப் பணித்துள்ளார். இந்தப் பத்திரிகையில் விளம்பரமே இல்லை. எல்லாப் பக்கங்களிலும் வாசிப்பதற்கான விஷயங்களே அடங்கியிருக்கின்றன. அப்படியிருந்தும் கூட, ஒவ்வொரு வாரமும் பிரசுரிக்க இடமின்றி ஏராளமான விஷயங்கள் தங்கி விடுகின்றன. பொதுமக்களின் கோரிக்கையைச் சமாளிக்க முடியாமல் இருக்கிறது. 'ஹரிஜன்' பொதுமக்களுக்குத் தேவையாக இருப்பதைப் போல் சர்க்காருக்கும் தேவையாக இருக்கிறது என்று கருதினால், அதற்கு அதிக அளவு காகிதம் கிடைக்கும்படி நீங்கள் பார்த்துக்கொள்வீர்களா? அதிகமாக விஷயங்களைப் பிரசுரிப்பதற்கோ அல்லது அதிகமான பிரதிகள் அச்சடிப்பதற்கோ போதிய காகிதம் கிடைக்க வேண்டும்.*

*பத்திரிகையின் மானேஜர் வழக்கம்போல் விண்ணப்பம் செய்துகொண்டுள்ளார், இருந்தாலும் சிவப்பு நாடா முறை நீங்கள் அறிந்ததுதான்.*

*தற்போதைய 'ஹரிஜன்' பத்திரிகையில் 16 பத்திகள்தான் அடங்கியிருக்கின்றன. முன்பு அதைப் போல் இருமடங்கு பத்திகள் இருந்தன. நவஜீவன் அச்சுக்கூடத்தில் உருது மொழியிலும் 'ஹரிஜன்' வெளிவருவதற்கு ஏற்பாடாகிவருகிறது. எனினும் இது, விண்ணப்பத்திற்குப் புறம்பான விஷயமாகும். பல்வேறு மாகாணங்களிலும் மாகாண மொழிகளில் அதை வெளியிட உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.*

*அன்புடன்,*

*தங்கள் உண்மையுள்ள,*
அமிருத கௌரி

## 120

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *18-3-1946*

என் அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

'ஹரிஜனு'க்குத் தேவையான காகிதம் சம்பந்தமாக நீங்கள் சென்ற 5-ஆம் தேதி எழுதிய கடிதத்தைத் தயவு செய்து பாருங்கள்.

நீங்கள் அக்கடிதம் எழுதிய பிறகு ஒவ்வொரு வாரமும் ஒரு லட்சம் பிரதிகள் அச்சடிப்பதற்கான காகிதம் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. அதாவது 'ஹரிஜனு'க்கு அளிக்கும் காகிதம் மாதத்திற்கு 5 டன்னிலிருந்து $7\frac{1}{2}$ டன்னுகை உயர்த்தப்பட்டிருக்கிறது. இதைக் கொண்டு ஒரு லட்சம் பிரதிகள் அச்சடிக்கலாம்.

அப் பத்திரிகையின் சார்பில் அனுப்பப்பட்ட விண்ணப்பத்தில் கேட்டுக்கொண்டபடி அதிகமாக அனுமதிக்கப்படவில்லை என்றாலும், இப்போது அனுமதிக்கப்பட்டுள்ள காகிதம் உங்களுடைய தேவையைப் பெரிதும் பூர்த்தி செய்யும் என வைஸ்ராய் நம்புகிறார்.

உணவு நிலைமையைக் குறித்து 'ஹரிஜன்' மூலம் காந்திஜி கூறியுள்ள சிறந்த புத்திமதியை வைஸ்ராய் பாராட்டுகிறார்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 121

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *22-3-1946*

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

'ஹரிஜன்' பத்திரிகைக்கு மாதம் 10 டன் காகிதம் கொடுப்பதாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது என்று அறிகிறேன். இது உங்களுக்கும் காந்திஜிக்கும் ஒரு நல்ல செய்தியாக இருக்கும்.

நேற்று என் மனைவி லேடி இர்வின் கல்லூரிக்கு வந்திருந்தாள். அவள் உங்களைத் தேடிப் பார்த்தார். அங்கு ஏராளமானவர்கள் இருந்ததால், உங்களை அவளால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஸ்ரீமதி ஸ்காட்டும் அவளுடன் கூட இருந்ததால், உங்களைக் காண முடியாதது அவளுக்கு வருத்தத்தைக் கொடுத்தது. எந்தக் கொண்டாட்டங்களுக்கும் நான் நேரில் வர முடியாமற் போவதைக் குறித்து வருந்துகிறேன்.

காகிதத்தைப் பற்றி எழுதும் கடிதத்தில் சொந்த விஷயத்தையும் குறிப்பிட்டதற்காக வருந்துகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**ஜார்ஜ் அபெல்.**

## 122

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

உங்கள் கடிதத்திற்கு நன்றி. கைத்தொழில், 'சப்ளை' இலாகா, காகித விநியோக விஷயமாக ஏற்கெனவேயே 'ஹரிஜன்' மானேஜருக்கு அறிவிக்காவிடில், உடனே அறிவிக்கும்படி கேட்டிருக்கிறேன்.

காப்டன் இர்ஷத் அலி சாகிப்சாதா சம்பந்தமான வழக்கைப் பரிசீலனை செய்யும்படி யுத்த இலாகாவுக்கு எழுதியிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**ஜி. ஈ. பி. அபெல்**

## 123

# முகர்ஜி, தேஷ்ராஜ், இர்ஷத் அலி

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *16-4-1946.*

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

உங்களுடைய ஏப்ரல் 14-ஆம் தேதிக் கடிதத்திற்கு நன்றி. உங்களுடைய கடிதத்துடன் ஹவில்தார் என். எம். முகர்ஜியின் தாயாரான விதவையிடமிருந்து வந்துள்ள விண்ணப்பத்தையும் அனுப்பியிருக்கிறீர்கள். தமது மகனின் மரண தண்டனை நிறைவேற்றப்பட்டதா, இல்லையா என்பதை அம்மாது அறிந்து கொள்ள முயற்சித்திருக்கிறார்.

*11-1-1944*-இல் யுத்த இலாகா வெளியிட்டுள்ள நி. *47627/36*/ஏ.ஜ. *8* (பி) அறிக்கையிலிருந்து ஹவில்தாரின் மரண தண்டனை *27-9-1943*-இல் நிறைவேற்றப்பட்டது என்பது தெளிவாகத் தெரிகிறது. இருந்தாலும் நான் அவசர விசாரணை நடத்திவருகிறேன்; முடிவை உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**ஜி. ஈ. பி. அபெல்**

# 124

# ஹவில்தாரின் மரண தண்டனை

காந்திஜி முகாம்,
புது டில்லி, 17-4-1946

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

16-ஆம் தேதிக் கடிதத்திற்கு நன்றி. ஹவில்தாரின் மரண தண்டனை நிறைவேற்றப்பட்டுவிட்டது என்பது எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது. ஆனால் பாவம், அவரது தாயார் அதை நம்ப மறுக்கிறார். அதனால்தான் உங்களைத் தொந்தரவு செய்கிறேன்.

சயல்காட்டிலிருந்து* நேற்று மாலை வந்த ஒரு தந்தியை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இந்தத் தந்தியைத் தவிர, மரண தண்டனை விதிக்கப்பட்டவரைப் பற்றி காந்திஜிக்கு வேறு எதுவுமே தெரியாது. தண்டனையை ரத்து செய்து பாதுகாக்கப்பட வேண்டிய ஓர் அருமையான உயிர் எதற்காகப் போகவேண்டும்? அதன் காரணமாகவே, உடனே அன்புடன் விசாரிப்பதற்காக இந்தத் தந்தியை உங்களுக்கு அனுப்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
அமிருத கௌரி

# 125

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 17-4-1946

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

தேஷ்ராஜைப் பற்றி இன்று தாங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி.

தொடர்ந்து ஐந்து கொலைகளில் பங்கு எடுத்துக் கொண்டதாக செஷன்ஸ் கோர்ட்டார் தேஷ்ராஜுக்கு மரண தண்டனை விதித்தனர். ஹைகோர்ட்டாரும் அந்தத் தண்டனையை உறுதி செய்தனர். இரக்கம் காட்டி தண்டனையைக் குறைக்கும்படி எதிரி வைஸ்ராய்க்கு மனுச் செய்து கொண்டார். வைஸ்ராய் அதைப் பரிசீலனை செய்து பிப்ரவரி மாதம் எதிரியின் மனுவை

---

* சயல் காட் சிறையில் இருந்த தேஷ்ராஜ் என்பவரிடமிருந்து காந்திஜிக்கு வந்த தந்தியையே ஸ்ரீமதி அமிருத கௌரி மேலே குறிப்பிட்டிருக்கிறார். தாம் நிரபராதி என்பதை ருசுப்பிப்பதற்குச் சந்தர்ப்பம் அளிப்பதற்காக மரண தண்டனையை நிறுத்தி வைக்கும்படி வைஸ்ராய் லார்டு வேவலைக் கேட்டுக் கொள்ளுமாறு தேஷ்ராஜ் அந்தத் தந்தி மூலம் காந்திஜியை வேண்டிக் கொண்டிருந்தார்.

நிராகரித்துவிட்டார். எனவே, அவ்விஷயமாக மேற்கொண்டு எதுவும் செய்ய முடியாதென்றே அஞ்சுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**ஜி. ஈ. பி. அபெல்**

## 126

வைஸ்ராய் மாளிகை.
புது டில்லி, *19-4-1946*

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

சென்ற 16-ஆம் தேதி நான் எழுதிய கடிதத்தைத் தொடர்ந்தே இதையும் எழுதுகிறேன். நான் விசாரித்ததிலிருந்து ஹவில்தார் என். எம். முகர்ஜியின் மரண தண்டனை 27-9-1943-இல் நிறைவேற்றப்பட்டது என்பது உறுதியாகி யிருக்கிறது. முகர்ஜியின் தாயாருக்கும் அவ்விவரம் அறிவிக்கப்பட்டதாக யுத்த இலாகா அதிகாரிகள் கூறுகின்றனர்.

தங்கள் உண்மையுள்ள,
**ஜி. ஈ. பி. அபெல்**

## 127

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *23-3-1946*

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

காப்டன் இர்ஷத் அலி சாகிப்சாதா சம்பந்தமாக தாங்கள் எழுதிய கடிதத்தை யொட்டி அவ்விஷயமாக விசாரித்ததில், சில நாட்களுக்கு முன் இந்த அதிகாரி விடுதலை செய்யப்பட்டார் என்று இப்போது அறிகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**ஜி. ஈ. பி. அபெல்**

## 128

# ஹர்பர்ட் பிஷர்

பிர்லா மாளிகை,
முசூரி, *4-6-1946*

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

இதார்சியில் உள்ள நண்பர்கள் ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஜெர்மானியரான ஸ்ரீ ஹர்பர்ட் பிஷர் எனக்குத் தெரிந்தவர்.

வர்தாவில் உள்ள கிராமக் கைத்தொழில்கள் சங்கத்தில் அவர் சிறிது காலம் இருந்தார். அவரது மனைவி ஜமெய்க்காவைச் சேர்ந்தவர். எனினும், அவர் இந்தியாவில் இருக்கிறார். அவரும் நண்பர்கள் ஸ்தாபனத்தைச் சேர்ந்தவரே. ஏதோ ஓர் ஏற்பாட்டின்படி ஸ்ரீ பிஷரையும் அவரது மனைவியையும் ஜெர்மனிக்கு அனுப்பப் போவதாக அறிகிறேன். ஸ்ரீ பிஷர் இப்போது சடாராவில் சிறை வைக்கப்பட்டிருக்கிறார். அவரை ஜெர்மனிக்கு அனுப்புவதற்கு முன் நான் அவரைச் சந்திப்பது சாத்தியமாக இருக்குமா?

இவ்விஷயம் வைஸ்ராயின் இலாகாவுக்கு உட்பட்டதா அல்லது நான் வேறு யாருக்காவது எழுத வேண்டுமா?

தங்கள் உண்மையுள்ள,
**எம். கே. காந்தி**

## 129

வைஸ்ராய் மாளிகை,
புதுடில்லி, 6-6-1946

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஸ்ரீ ஹர்பர்ட் பிஷரைப்* பற்றித் தாங்கள் எழுதிய 4-ஆம் தேதிக் கடிதத்துக்கு நன்றி. இவ்விஷயமாக நான் விசாரித்து வருகிறேன். இதன் சம்பந்தமாக ஸ்ரீ ஹொரேஸ் அலெக்சாண்டரும் டெலிபோன் மூலம் கேட்டுக் கொண்டார். எனது விசாரணையின் முடிவு என்ன என்பதை அவருக்கு அறிவிக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**ஜி. ஈ. பி. அபெல்**

## 130

# டாக்டர் சுரேஷ் சந்திரா

பிர்லா மாளிகை,
முசூரி, 6-6-1946

எனது அன்புள்ள ஸ்ரீ அபெல்,

ஜெர்மனியில் சிறைவைக்கப்பட்டுள்ள எழுத்தாளரின் தந்தை காந்திஜிக்கு எழுதிய கடிதத்தை இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

---

* ஸ்ரீ பிஷரும் ஸ்ரீமதி பிஷரும் ஜெர்மனிக்குச் செல்லுமுன் காந்திஜியைச் சந்தித்துப் பேச அனுமதிக்கப்பட்டார்கள். இந்தியா சுதந்திரம் பெற்ற பின், புது டில்லியில் உள்ள ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு வர்த்தகப் பிரதிநிதி ஸ்தாபனத்தில் ஸ்ரீ பிஷர் பதவி வகித்து வந்தார்.

நிர்வாக அலுவல்களில் தங்களுக்குள்ள சிறந்த அனுபவம் காரணமாக, கீழ்க்கண்ட விஷயமாகத் தங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள காந்திஜி விரும்புகிறார். அதாவது ஜெர்மனியில் சிறைவைக்கப்பட்டுள்ள இளைஞரின் விருப்பம் போற்றத்தக்கதென்றே தோன்றுகிறது. அவரது விருப்பம் நிறைவேற ஏதாவது உதவி செய்ய முடியுமா?

தங்கள் உண்மையுள்ள,
அமிருத கௌரி

## 131

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *8-6-1946*

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

முசூரியிலிருந்து தாங்கள் எழுதிய கடிதம் இன்று எனக்குக் கிடைத்தது. டாக்டர் சுரேஷ் சந்திராவைப் பற்றி நான் விசாரித்து வருகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஜார்ஜ் அபெல்

## 132

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *18-6-1946*

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

சென்ற 8-ஆம் தேதி ஸ்ரீ அபெல் எழுதிய கடிதத்தைத் தொடர்ந்து இக்கடிதம் எழுதும்படி அவர் என்னைக் கேட்டிருக்கிறார். ஜெர்மனியில் உள்ள பிரிட்டிஷ் ராணுவ சர்க்கார் மூலம் டாக்டர் சுரேஷ் சந்திராவைப் பற்றி விசாரிக்கும்படியும், அவருக்கு உதவிபுரிய ஏதாவது செய்ய முடியுமா என்றும் இந்தியா மந்திரி காரியாலயத்தைக் கேட்டிருக்கிறோம்.

தங்கள் அன்புள்ள,
ஸி. டபிள்யூ. பி. ரான்கின்

## 133

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *27-7-1946*

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

டாக்டர் சுரேஷ் சந்திரா சம்பந்தமாக சென்ற மாதம் 18-ஆம் தேதி நான் எழுதிய கடிதத்தைத் தயவு செய்து பாருங்கள்.

பர்லினில் உள்ள இந்திய ராணுவ கோஷ்டியின் மூலம் அவரைப் பற்றிய தகவல் கிடைத்திருக்கிறது. மே மாதம் மத்தியில் பேடர்பார்ன் சிறை முகாமிலிருந்து டாக்டர் சுரேஷ் சந்திரா விடுதலை செய்யப்பட்டதாகவும், அவர் இப்போது கீழ்க்கண்ட விலாசத்தில் வசித்து வருவதாகவும் அறிவித்திருக்கிறார்கள்:

பர்கர்மிஸ்டரி,
லாங்கன்,
23, வெஸர்மண்டி (ஜெர்மனி)

இந்தியாவுக்குத் திரும்பிவர அவர் விரும்புகிறாரா என்றும் அவரைக் கேட்டிருக்கிறார்கள். அவரிடமிருந்து பதில் எதிர்பார்க்கப்படுகிறது. திரும்புவதென்று அவர் தீர்மானித்தால், உங்களுக்கு அறிவிக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஸி. டபிள்யூ. பி. ரான்கின்

# 134

# போலந்திலிருந்து வந்த அகதிகள்

இயற்கை வைத்தியசாலை, புனா,
முகாம்: பம்பாய், 9-7-1946

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

பல ஆண்டுகளாக நான் அறிந்த ஒரு போலந்து பெண்மணியிடமிருந்து வந்துள்ள கடிதத்தைக் கீழே கொடுத்திருக்கிறேன்:

"போலந்திலிருந்து வந்த அகதிகளில் சுமார் 5000 பேர்கள் இப்போது இந்தியாவில் இருக்கிறார்கள். முதலில் அவர்களுக்கு போலந்து சர்க்காரும், பின்னர் பிரிட்டிஷ் சர்க்காரும் ஆதரவு அளித்து வந்தனர். இப்போது அவர்கள் ஐக்கிய நாடுகள் உதவி, புனருத்தாரண நிர்வாகத்தின் பொறுப்பில் எடுத்துக் கொள்ளப் படுவார்கள் என்று கூறப்படுகிறது. அவர்களில் சுமார் 3600 பேர்கள் கூடிய சீக்கிரம் பிரிட்டனில் சிப்பாய்களாக உள்ள அவர்களுடைய குடும்பத்துடன் போய்ச் சேர்ந்து கொள்வார்கள். இங்கிருந்து சுமார் 1400 பேர்கள் வெளியேற்றப்பட்டுள்ளனர். அவர்கள் எந்த இடத்திற்கு அனுப்பப்பட்டிருக்கிறார்கள் என்பது எங்களுக்கு இன்னும் தெரியவில்லை. இந்தியாவிலிருந்து எல்லா ஐரோப்பியர்களையும் இந்திய சர்க்கார் அவசரம் அவசரமாக வெளியேற்ற முற்பட்டுவருகிறார்கள். இந்தியாவைச் சேர்ந்த பலவிடங்களிலும் போலந்தைச் சேர்ந்த ஏராளமானவர்கள் பல்வேறு வேலைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்கள் யாருடைய

தரும உதவியையும் நாடவில்லை. அவர்கள் தற்போது செய்து வரும் வேலைகள், இந்தியாவுக்கு மிகவும் பலன்தரத்தக்கவை யாகவும் இருக்கின்றன. அப்படிப்பட்டவர்களைக் கூட அவர்களுடைய விருப்பத்துக்கு விரோதமாக இந்தியாவிலிருந்து வெளியேறும்படி நிர்ப்பந்தப்படுத்தி வருகிறார்கள். அவ்விதம் நிர்ப்பந்தப்படுத்துவதற்கான பல காரணங்களில், தங்களிடையே அந்நிய நாட்டினர் இருப்பதை இந்தியர்கள் விரும்பவில்லை என்று இந்திய சர்க்கார் பிரதிநிதிகள் கூறுவதும் ஒன்றாகும். போலந்தில் தற்போது கலப்பற்ற அடிமைத்தனமும், பயங்கர ஆட்சியுமே நிலவிவருகின்றன. தற்போதைய நிலையில் 5000 போலந்தினரில் 77 பேர்கள்தான் போலந்திற்குத் திரும்பிச் செல்லத் தயாராக இருக்கிறார்கள் என்று தெரிகிறது.”

மேற்கண்ட கடிதம் எழுதியிருப்பவர் கூறுவதில் ஏதாவது உண்மை உண்டா என்பதை அன்புடன் எனக்கு அறிவியுங்கள்.

தங்கள் உண்மையுள்ள,

எம். கே. காந்தி

## 135

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இந்தியாவில் உள்ள போலந்து அகதிகளைப்பற்றித் தாங்கள் சென்ற 9-ஆம் தேதி எழுதியுள்ள கடிதத்துக்கு நன்றி. அவ்விஷயமாக நான் விசாரித்து வருகிறேன். மீண்டும் தங்களுக்கு எழுதுகிறேன்.

தங்கள் அன்புள்ள,

ஜார்ஜ் அபெல்

## 136

# நிர்ப்பந்தப்படுத்தவில்லை

வைஸ்ராய் மாளிகை,
புதுடில்லி, 22-7-1946

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஜூலை 9-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டுள்ள போலிஷ் அகதிகள் பிரச்னைபற்றி நான் விசாரித்தேன். இந்தியாவில் சுமார் 5000 போலிஷ் அகதிகள் இருக்கிறார்கள் என்றும், அவர்களில் சுமார் 4000 பேர் பிரிட்டனில் உள்ள

அவர்கள் குடும்பத்துடன் கூடிய சீக்கிரம் சேர்ந்து கொள்வார்கள் என்றும் உங்களுடைய நிருபர் கூறியிருப்பது உண்மைதான். ஆனால், ஏற்கனவே 1400 பேர்கள் வெளியேற்றப்பட்டுள்ளனர் என்பது சரியல்ல. இந்தியாவிலிருந்து அதிகமாக யாரையும் இன்னும் வெளியேற்றவில்லை. போலந்துக்குத் திரும்பிச் செல்ல விரும்பாத யாரையும் நிர்ப்பந்தப்படுத்தவில்லை.

அவர்களைத் திருப்பி அனுப்பும் தற்போதைய திட்டம், பிரிட்டிஷ் சர்க்காருடைய ஏற்பாட்டின் கீழ் இந்தியாவுக்கு வந்து, பிரிட்டிஷ் சர்க்காரின் செலவில் பராமரிக்கப்பட்டவர்களை மாத்திரமே பொறுத்ததாகும் ; தங்களுடைய சொந்த முயற்சியால் இந்தியாவுக்கு வந்து இங்கே வேலை தேடிக்கொண்டுள்ளவர்கள் அத்திட்டத்தின் கீழ் வரமாட்டார்கள்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

# 137

புனா,
1-8-1946

எனது அன்புள்ள ஸ்ரீ அபெல்,

ஜுலை 22-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதத்திற்காக காந்திஜியின் சார்பில் உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன்.

போலந்தைச் சேர்ந்த எந்த நண்பருக்காக காந்திஜி அந்தக் கடிதம் எழுதினாரோ அந்த நண்பருக்கு, உங்களுடைய கடிதத்தின் நகல் ஒன்றை அனுப்புகிறேன்.

அன்புடன்,
தங்கள் உண்மையுள்ள
அமிருத கௌரி

பகுதி ஏழு

# தென்னுப்பிரிக்கா பிரச்னே

## 138

## பொருளாதார நடவடிக்கை

*புது டில்லி,*
*10-6-1946*

*எனது அன்பார்ந்த ஸ்ரீ அபெல்,*

*தென்னுப்பிரிக்காவிலிருந்து இப்போதுதான் வந்த தந்தியின்* நகலே உங்களுக்கு அனுப்ப வேண்டுமென காந்திஜி விரும்பியதன் மீதே, அதை இத்துடன் உங்களுக்கு அனுப்புகிறேன்.*

*அந்தத் தந்தியில் கண்டுள்ள விவரங்களுக்குச் சிறிதும் ஆதாரம் இருக்க முடியாது என்றே காந்திஜி நம்புகிருர்.*

*தங்கள் உண்மையுள்ள,*
**அமிருத கௌரி.**

## 139

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி, 11—6—1946*

*எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,*

*சொராப்ஜி ரஸ்டம்ஜியிடமிருந்து வந்த தந்தியின் நகலுடன் தங்களிடமிருந்து வந்த கடிதத்திற்கு நன்றி. அதுபோன்ற தந்தி*

---

*தென்னுப்பிரிக்காவில் உள்ள இந்திய சமூகத்திற்கு விரோதமாக தென்னுப்பிரிக்க சர்க்கார் மேற்கொண்ட நிறவேற்றுமைக் கொள்கைக்குப் பிரதியாக, இந்திய சர்க்கார் அந்த நாட்டின் மீது பொருளாதார நடவடிக்கைகளே மேற்கொண்டனர். அதை அனுசரித்து இந்திய சர்க்கார் தென்னுப்பிரிக்காவுடன் செய்து கொண்டிருந்த வர்த்தக ஒப்பந்தத்தை 1946 ஜூன் 26-ஆம் தேதிக்குப் பிறகு ரத்து செய்துவிடப் போவதாக அறிவித்திருந்தனர். எனினும், வர்த்தக ஒப்பந்தம் ரத்தாகிவிடப் போவதை அறிந்த தென்னுப்பிரிக்கா, அந்த ஒப்பந்தத்தில் அனுமதிக்கப்பட்ட அளவைக் காட்டிலும் அதிகமாக சணலேயும், கோணிப் பைகளேயும் இந்தியாவிலிருந்து வாங்க முயற்சித்து வருவதாகவும், அவற்றை ஏற்றிச் செல்லுவதற்காக ஒரு விசேஷக் கப்பல் ஏற்பாடு செய்யப்பட்டுவருவதாகவும் தென்னுப்பிரிக்காவிலிருந்து ஒரு நிருபர் காந்திஜிக்குத் தந்தி மூலம் அறிவித்திருந்தார். அந்தத் தந்தியைப் பற்றியே மேலே ஸ்ரீமதி அமிருத கௌரி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிருர்.

வைஸ்ராய்க்கும் வந்தது. அவ்விஷயமாக நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படி அவர் காமன்வெல்த் தொடர்பு இலாகாவைக் கேட்டிருக்கிறார். அதன் முடிவைத் தங்களுக்கு அறிவிக்கும்படி, அந்த இலாகா காரியதரிசியான ஸ்ரீ பானர்ஜியை நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 140

காமன் வெல்த் தொடர்பு இலாகா,
புது டில்லி, *17-6-1946*

அன்புள்ள அம்மணி,

தென்னாப்பிரிக்கா இந்தியர் காங்கிரஸ் கோஷ்டியின் தலைவரான ஸ்ரீ சொராப்ஜியிடமிருந்து வைஸ்ராய்க்கு வந்த ஒரு தந்தியின் நகல், வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசியிடமிருந்து எனக்குக் கிடைத்திருக்கிறது. தென்னாப்பிரிக்காவுக்கு சணலையும், கோணிப் பைகளையும் ஒரு விசேஷக் கப்பல் ஏற்றிச் செல்லும் விஷயமாக அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஸ்ரீ ரஸ்டம்ஜி இந்த இலாகாவுக்கும் நேரில் ஒரு தந்தி கொடுத்திருக்கிறார்.

அவ்விஷயமாக விசாரித்ததன் பலனைக் கிடைத்த பின் கண்ட தகவல்களை உங்களுக்கு அறிவிக்க விரும்புகிறேன்.

தந்தியில் குறிப்பிட்டுள்ள சணலும், கோணிப்பைகளும், தென்னாப்பிரிக்காவுக்கு அனுப்ப வேண்டிய ஒப்பந்த அளவுக்கு அதிகமானவை அல்ல. அவை, ஏற்கனவே அனுப்பாமல் பாக்கியிருந்த சரக்குகளாக இருக்கலாமேயொழிய, அனுப்பவேண்டிய விகிதத்துக்கு உபரியானவை அல்ல.

தங்கள் உண்மையுள்ள,
ஆர். என். பானர்ஜி
இந்திய சர்க்கார் காரியதரிசி.
காமன்வெல்த் தொடர்பு இலாகா,

## 141

புது டில்லி, *21-6-1946*

அன்புள்ள ஸ்ரீ பானர்ஜி,

தங்களுடைய ஜூன் 18-ஆம் தேதிக் கடிதத்துக்கு நன்றி. அதை நான் காந்திஜிக்கு வாசித்துக் காட்டினேன். தென்னாப்

பிரிக்காவுக்கு மாதந்தோறும் அனுப்பப்படும் சணல், கோணிப்பை களின் அளவு என்ன என்பதையும், அவை எப்போது நிறுத்தப் படும் என்பதையும் எனக்கு அன்புடன் அறிவித்தால் நான் நன்றி யுடையவளாக இருப்பேன். இந்திய சர்க்கார் தென்னுப்பிரிக் காவுக்கு எதிராகப் பொருளாதார நடவடிக்கைகளை மேற் கொண்ட பிறகும் கூட, சரக்குகளின் பழைய பாக்கியை அனுப்பித் தீரவேண்டுமா?

தங்கள் உண்மையுள்ள,
அமிருத கௌரி

## 142

காமன்வெல்த் தொடர்பு இலாகா,
புது டில்லி, 11-7-1946.

அன்புள்ள ராஜகுமாரி அமிருத கௌரி,

ஜூன் 21-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதத்திற்கு, அவசர அலுவல்கள் காரணமாக முன்பே பதில் எழுத முடியாததற்காக வருந்துகிறேன்.

இதுவரையில் மாதா மாதம் அல்ல, வருடந்தோறும் குறிப் பிட்ட அளவு சணலும், சணலால் செய்யப்பட்ட சாதனங்களும் தென்னுப்பிரிக்காவுக்கு அனுப்பப்பட்டு வந்திருக்கின்றன. 1946 ஜூன் மாதம் முடிய இந்த வருடத்திற்கு அனுப்ப வேண்டிய அளவு 31,000 டன்கள் ஆகும். வருட விகிதத்தைச் சமமாகப் பிரித்து 12 மாதங்களில் தென்னுப்பிரிக்கா எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற அவசியம் எதுவுமில்லை.

கப்பல்களில் இடம் கிடைப்பதற்குத் தகுந்தவாறும், மற்று முள்ள வசதிகளை முன்னிட்டும், மாதந்தோறும் அனுப்பும் அளவில் ஏற்றத் தாழ்வு இருப்பது இயல்பேயாகும்.

வர்த்தக ஒப்பந்தத்தை ரத்து செய்வதாக நோட்டீஸ் கொடுத்த பின், நோட்டீஸ் காலம் முடிவதற்குள் ஏற்றுமதிகளை நிறுத்த முடியாது. ஆனால் அந்த கெடு ஜூன் 26-ஆம் தேதியோடு முடிந்து விட்டது. அந்தத் தேதிக்குப் பிறகுதான் பொருளாதார நடவடிக் கைகள் உண்மையிலேயே அமலுக்கு வந்தன. அதிலிருந்து எல்லா ஏற்றுமதிகளும் நிறுத்தப்பட்டுவிட்டன. ஜூன் மாதம் 22-ஆம் தேதி வரையில் ஏற்றுமதியாக வேண்டிய வருடாந்தர விகிதமான 31,000 டன்னில் கூட 1500 குறைவாகவே, அதாவது 29,500 டன் சரக்குகளே ஏற்றுமதியாகியுள்ளன.

ஏற்கனவே கூறப்பட்டிருப்பது போல், எல்லா ஏற்றுமதிகளும் இப்போது நின்றுவிட வேண்டும்.

தங்கள் உண்மையுள்ள,
**ஆர். என். பானர்ஜி**

## 143

சேவா கிராமம்,
*10-8-1946*

அன்புள்ள ஸ்ரீ பானர்ஜி,

ஜுலை 11-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதம் இம்மாதம் 7-ஆம் தேதி கிடைத்தது.

இந்த வருடத்திற்காக தென்னாப்பிரிக்காவுக்கு ஒதுக்கப்பட்ட சணல், சணல் சாதனங்கள் பூராவும் ஆறு மாத காலத்திற்குள் அனுப்பப்பட்டுவிட்டது துரதிருஷ்டமாகும். பொருளாதார நடவடிக்கைகளுக்கு ஏதாவது பொருள் உண்டு எனில், அரை வருடத்திற்கான கோட்டா அனுப்பப்பட்ட உடனேயே ஏற்றுமதி நிச்சயமாக நிறுத்தப்பட்டிருக்க வேண்டும்.

தங்கள் உண்மையுள்ள,
**அமிருத கௌரி**

## 144

காமன்வெல்த் தொடர்பு இலாகா,
புது டில்லி, *3-9-1946*

அன்புள்ள ராஜகுமாரி அமிருத கௌரி,

ஆகஸ்டு 10-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதத்திற்கு, முன்பே பதில் எழுத முடியாததற்காக நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

எனது முந்திய கடிதம் நிலைமையை நன்கு தெளிவாக்கவில்லை என்று நினைக்கிறேன். சணல் வர்த்தக சம்பந்தமான வருடம் 1946 ஜுன் 25-ஆம் தேதி முடிவடைந்தது. (சணல் வர்த்தக சம்பந்தமான வருடம் சாதாரண வருடத்தைப் போன்றதல்ல.) 1946 ஜுன் 25-ஆம் தேதிக்கு முன் ஏற்றுமதியாகியுள்ள அளவு, ஒதுக்கப்பட்ட கோட்டா அளவுக்குச் சிறிது குறைவாகவே இருக்கிறது. ஒப்பந்தத்தை ரத்து செய்வதாக அறிவித்திருந்த மூன்று மாத கெடு, ஜுன் 25-ஆம் தேதிதான் முடிவடைந்தது. எனவே, ஏற்றுமதிக்கு விதிக்கப்பட்ட தடை அந்தத் தேதிக்குப் பிறகு மாத்திரமே அமலுக்கு வரமுடியும். ஆதலால்,

ஜூன் 25—க்கு முன், கோட்டாவுக்கு உட்பட்ட எந்த அளவு சணல் ஏற்றுமதியையும் இந்திய சர்க்காரால் தடுக்க முடிய வில்லே. அந்தத் தேதிக்குப் பிறகு, இந்தியத் துறைமுகங்களி லிருந்து ஒரு டன் சணல்கூட தென்னுப்பிரிக்காவுக்கு ஏற்றுமதி செய்யப்படவில்லே; இந்த வருடத்துக்கும் தென்னுப்பிரிக்கா வுக்கு யாதொரு 'கோட்டாவும்' ஒதுக்கப்படவில்லே. மற்ற நாடுகள் வழியாக தென்னுப்பிரிக்காவுக்கு இந்திய சணல் சாத னங்கள் கள்ளத்தனமாகச் செல்லாமல் இருப்பதற்காக, தென் னுப்பிரிக்காவுக்குப் பக்கத்தில் உள்ள நாடுகளேயும் இந்திய சர்க்கார் கடுமையாகக் கண்காணித்து வருகின்றனர்.

இந்தக் கடிதம் நிலேமையைத் தெளிவாக்குகிறதென நான் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஆர். என். பானர்ஜி

## 145

[தென்னுப்பிரிக்க அரசாங்கம் ஆசிய மக்களுக்கு எதிராகக் கைக் கொண்ட நிறவேற்றுமைக் கொள்கை சம்பந்தமாக 1946 ஜூன் மாதம் காந்திஜிக்கும் வைஸ்ராய்க்கும் கடிதப் போக்குவரத்து ஆரம்பமாயிற்று. அதற்கு முன் காந்திஜிக்கும் தென்னுப்பிரிக்கா பிரதம மந்திரி பீல்டு மார்ஷல் ஸ்மட்சுக்கும் அவ்விஷயமாகத் தந்திப் போக்குவரத்து நடந்தது. அந்தத் தந்திகளின் விவரங்களும், காந்திஜி – வைஸ்ராய் கடிதப் போக்குவரத்தும் கீழே கொடுக்கப் பட்டுள்ளன:]

# ஜெனரல் ஸ்மட்ஸுக்குத் தந்தி

புனு,
18-3-1946

பீல்டு மார்ஷல் ஸ்மட்ஸ்,
கேப்டவுன்,
தென்னுப்பிரிக்க யூனியன்,

ஆசியாக்காரர் பற்றிய உங்களுடைய கொள்கையைச் சீர் திருத்த வேண்டும். அது உங்களுக்குத் தகுதியற்றது. அச்ச மளிக்கும் நில வாக்குரிமை மசோதாவையாவது நீங்கள் வாபஸ் செய்து, ஆலோசகர்கள் அடங்கிய ஒரு வட்டமேஜை மகாநாட் டைக் கூட்ட வேண்டும். அதில் குறைந்தபட்சம் தென்னுப்

பிரிக்கா, பிரிட்டிஷ், இந்திய அரசாங்கப் பிரதிநிதிகள் கலந்து கொள்ள வேண்டும். சாத்தியமாயின், சம்பந்தப்பட்ட எல்லா அரசாங்கங்களும் அதில் கலந்துகொள்ளும்படி செய்ய வேண்டும். ஆசியாக்காரர் சம்பந்தமான மசோதாவிலிருந்து எழும் பொதுவான நிறவேற்றுமையையும் ஆசிய, ஆப்பிரிக்கக் கொள்கையையும் பரிசீலனை செய்வதற்காகவே அம் மகாநாட்டை நடத்த வேண்டும். நீங்கள் விரும்பினலொழிய, இதைப் பிரசுரிக்க வேண்டாம்.

உங்களுடையவும், தென்னுப்பிரிக்காவினுடையவும் உண்மையான நண்பன்,

காந்தி.

## 146

(தந்தி)

# காந்திஜிக்கு ஸ்மட்ஸ் பதில்

கேப் டவுன்,
2-3-1946

மகாத்மா காந்தி,

புனு,

நீங்கள் எடுத்துக்கொண்டுள்ள அக்கறையையும், நட்புறவைக் காட்டும் உங்களுடைய அன்பார்ந்த செய்தியையும் நான் மிகவும் பாராட்டுகிறேன். அதுபோலவே எனது நட்பையும் அக்கறையையும் நான் தெரிவித்துக் கொள்கிறேன். நேட்டாலில் சமீப வருடங்களாக கஷ்டங்கள் மிக மிகக் கடுமையாகிவிட்டன. எனவே, நிலைமை மேலும் மோசமாகிவிடாமல் இருப்பதற்கான நடவடிக்கைகள் அவசரமாகக் கைக்கொள்ளப்பட வேண்டும். இல்லாவிடில், இந்தியர்கள் மற்றெல்லோரையும் விட அதிகமான துன்பத்திற்கு உள்ளாகும்படி நேரலாம். இங்குள்ள இந்தியர் ஸ்தாபனங்களுடன் பல மகாநாடுகள் நடத்தியும் கூட யாதொரு தீர்வும் காணமுடியவில்லை. வெளிநாட்டு அரசாங்கங்களுடன் வட்டமேஜை மகாநாடு கூடுவது நடைமுறையில் சாத்தியமல்ல. உத்தேசிக்கப்பட்டுள்ள சட்டமானது, இந்தியர்களுக்கு அரசியல் அந்தஸ்தை அளிக்கின்றது. அவ்விதம் அளிக்க வேண்டியது அவசியமாகியிருக்கிறது. தென்னுப்பிரிக்கா சட்டப்படி அவர்களுக்கு ஐரோப்பியர்களே பிரதிநிதிகளாக இருப்பார்கள் என்ருலும், அது முன்னேற்றகரமான ஒரு சிறந்த முறையே ஆகும். மேலும், இந்தியர்கள் ஊடுருவி வந்துவிடுவார்களோ என்ற அச்சத்தைத் தணிப்பதற்காக, நேட்டாலில் இந்தியர்களுக்கென்றே சில பிரதேசங்களைப் பிரித்து வைக்க வேண்டும் என்பதே அந்த மசோதாவின் நோக்கமாகும். அந்தப் பிரதேசங்களில் இந்தியர்களும் மற்றவர்களும் தங்கள் விருப்பப்படி சுதந்திரமாக நிலங்

களை வாங்கவும், அவற்றில் வாழவும் முடியும். எனவே, இந்தியர்களை ஒதுக்கிவைப்பதென்ற பிரச்னையே எழவில்லை. அத்தகைய பிரதேசங்களை, கூட்டுக் குழுவினரே எல்லை வகுத்துப் பிரித்து வைப்பார்கள். அந்தக் குழுவில் இந்தியர்களுக்கும் போதிய பிரதிநிதித்துவம் அளிக்கப்படும். நேட்டாலில் எந்த இடத்தில் வேண்டுமாயினும் நிலங்கள் வாங்கவோ, அவற்றில் வசிக்கவோ இந்தியர்களுக்கு உள்ள உரிமைகளை மசோதா கட்டுப்படுத்துகிறது என்ருலும், அதன் நோக்கம் நியாயமற்றதல்ல. இந்தியர்களின் அபிவிருத்திக்கும், இன்னும் பல வருட காலத்திற்கு இன அமைதி நிலவுவதற்கும் அம் மசோதா நடைமுறையில் சாத்தியமான ஒரு அடிப்படையாக அமைந்திருக்கிறது. ஆதலால் அதை அங்கீகரிக்கும்படி உங்களுக்கு நான் சிபாரிசு செய்கிறேன். தென்னுப்பிரிக்காவில் உள்ள பல்வேறு இனத்தினரிடையே அந்நியோன்னிய பாவத்தைப் பாதுகாப்பதில் எவ்வளவு பெரிய கஷ்டங்கள் இருக்கின்றன என்பதைத் தாங்கள் அறிவீர்கள். எளிதில் எல்லைமீறிப் போய்விடக் கூடிய அவ் விஷயமாக நான் மிகவும் நட்பு உணர்ச்சியுடன் நடந்துகொண்டு வருகிறேன் என உங்களுக்கு உறுதி கூறுகிறேன். இந்தத் தந்தி உங்களுடைய தகவலுக்காகவேயன்றி, பிரசுரிப்பதற்கல்ல. எனினும் விரும்பத் தக்கதென்று நீங்கள் கருதினல், இவ்விஷயமாக எனக்கும் உங்களுக்கும் தந்திப் போக்குவரத்து நடந்துவருவதாக அறிவிப்பதில் அபாயம் எதுவும் இருப்பதாக நான் நினைக்கவில்லை.

ஸ்மட்ஸ்.

## 147

புனு,
22-3-1946

பீல்ட்–மார்ஷல் ஸ்மட்ஸ்,
கேப்டவுன்,
தென்னுப்பிரிக்கா யூனியன்,

தந்திக்காக நன்றி. இந்த வருடத்தில் இந்தியா சுதந்திரம் பெற்றுவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அதில் உங்களுக்கு நம்பிக்கை இருந்தால், அதுவரை காத்திருங்கள். கற்பைக் காக்க வேலி கட்டுவது போலத்தான் நாகரிகத்தைக் காக்க வேலிகட்டுவதும்! உங்களுடைய நல்ல நோக்கத்தில் சந்தேகம் இல்லை. கூறப்படும் காரணத்தில்தான் குறை இருக்கிறது. இந்தியர்களைத் தாழ்ந்த அந்தஸ்துள்ளவர்களாகச் செய்வதையே இந்தியா கண்டிக்கின்றது. இந்தியர்களுக்கு அளிக்க உத்தேசிக்கும் உரிமை சந்தேகத்திற்கு இடமானது. குறிப்பிட்ட பிரதேசங்களில் நில உரிமை அளிப்பது, ஒதுக்கி வைப்பதேயாகும். நமது தந்திகளில் அடங்கியுள்ள விவரங்களை, உங்களுடைய விருப்பத்திற்கு மரியாதையாக நான் வெளியிடப் போவதில்லை.

காந்தி

## 148

வால்மீகி மந்திர், ரீடிங் ரோடு,
புது டில்லி, *15-6-1947*.

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

சமீபத்தில் தென்னாப்பிரிக்கா சட்டசபையில் ஆசியாக்காரர்களுக்கு விரோதமாக நிறைவேறிய சட்டத்தை ஆட்சேபித்து இந்தியர்கள் அங்கே சாத்துவிக எதிர்ப்பு இயக்கத்தை ஆரம்பித்திருக்கிறார்கள். இதை பத்திரிகைகளில் வைஸ்ராய் பார்த்திருக்கலாம் என்பதில் எனக்கு ஐயமில்லை. லார்டு ஹார்டிஞ்ஜ் வைஸ்ராயாக இருந்தபோது தென்னாப்பிரிக்காவில் நிகழ்ந்த அது போன்ற ஒரு சம்பவத்தை ஆதரித்தார். எனவே இப்போதும் வைஸ்ராய் அந்த எதிர்ப்பு இயக்கத்தை ஆதரித்துத் தமது அபிப்பிராயத்தைத் தெரிவிப்பார் என்று எதிர்பார்ப்பது அதிகமாகுமா?

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 149

# வைஸ்ராயின் அனுதாபம்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *18-6-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் நடத்தும் சாத்துவிக எதிர்ப்பு இயக்கத்தைப் பற்றி 15-ஆம் தேதி தாங்கள் எழுதிய கடிதத்தை வைஸ்ராயிடம் காட்டினேன்.

தென்னாப்பிரிக்காவுடன் செய்து கொண்டுள்ள வர்த்தக ஒப்பந்தத்தை ரத்து செய்து விடுவதாக இந்திய சர்க்கார் ஏற்கனவேயே நோட்டீஸ் கொடுத்துவிட்டார்கள். அதைப்பற்றி ஆலோசிப்பதற்காக, தங்களுடைய ஹைகமிஷனரையும் தென்னாப்பிரிக்காவிலிருந்து திருப்பி அழைத்திருக்கிறார்கள்; அப்பிரச்னையை ஐக்கிய நாடுகள் சபையில் கொண்டு வரவும் தீர்மானித்திருக்கிறார்கள். அம்முறைகளையெல்லாம் வைஸ்ராயும் அங்கீகரித்திருக்கிறார்.

தென்னாப்பிரிக்கா இந்தியர் பிரச்னையில் வைஸ்ராய் பூரண அனுதாபம் கொண்டுள்ளார்; அவர்களுக்கு ஆதரவாகத் தம்மால் இயன்றதையெல்லாம் செய்துள்ளார். எனினும், அவ்விஷயமாகத் தாம் பகிரங்கமாக எதுவும் கூறுவது தவறாகும் என்றும், அவ்விதம் செய்வதால் தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்கு நன்மை

யைக் காட்டிலும் அதிகமான தீமையே விளையக்கூடும் என்றும் அவர் கருதுகிருர்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 150

புது டில்லி, 25-6-1946

எனது அன்புள்ள ஸ்ரீ அபெல்,

தென்னுப்பிரிக்காவைப் பற்றி காந்திஜி எழுதியுள்ள கட்டுரையின் முன் நகல் ஒன்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இதை நீங்கள் வைஸ்ராயின் முன்னிலையில் வைத்தால், காந்திஜி நன்றியுள்ளவராக இருப்பார். அந்தக் கட்டுரை அடுத்த 'ஹரிஜன்' இதழில் வெளியாகும்.*

நேற்று வைஸ்ராய் மாளிகையில் நடந்த விருந்தை நான் நன்கு ரசித்தேன்.

தங்கள் உண்மையுள்ள,
அமிருத கௌரி

## 151

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 26-6-1946

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

தென்னுப்பிரிக்காவைப் பற்றி காந்திஜி எழுதியுள்ள கட்டுரையின் முன் பிரதியை அனுப்பிவைத்ததற்காக உங்களுக்கு நன்றி செலுத்தும்படி வைஸ்ராய் என்னைக் கேட்டுள்ளார். வைஸ்ராய் மாளிகையில் நடந்த விருந்தை நீங்கள் ரசித்ததைக் கேட்டு அவர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

பின் குறிப்பு: அமெரிக்கர்கள் கூறுவதுபோல் அலுவல்களிலிருந்து சிறிது ஓய்வு எடுத்துக் கொள்வது மிகச் சிறந்ததாக இராதா?†

---

*மேலே குறிப்பிட்டுள்ள 'ஹரிஜன்' கட்டுரையைப் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

† பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூதுகோஷ்டி ஆரம்பித்த சமரசப் பேச்சுகள் முறிந்ததைப் பற்றியே வைஸ்ராய் லார்டு வேவலின் அந்தரங்கக் காரியதரிசியான ஸ்ரீ அபெல், மேற்கண்ட விதம் வேடிக்கையாகக் குறிப்பிட்டிருக்கிருர். எனினும், சில வாரங்களுக்குப் பின் லார்டு வேவல் மீண்டும் சமரசப் பேச்சுகளை ஆரம்பித்து நடத்தினர்.

## 152

பங்கி காலனி,
புது டில்லி, *27-6-1946*

எனது அன்புள்ள, ஸ்ரீ அபெல்,

இன்று டர்பனிலிருந்து வந்த இரண்டு தந்திகளின் பிரதிகளை* உங்களுக்கு அனுப்பி வைக்கும்படி காந்திஜி என்னைக் கேட்டிருக்கிறார்.

தயவு செய்து அவற்றை வைஸ்ராயின் முன்னிலையில் வையுங்கள்.

நாளை மாலை நாங்கள் பஞ்சகனிக்குச் செல்லலாமென நம்புகிறேன். அவ்விதம் சென்றால், நீங்கள் கூறுவது போல், "மூச்சு விடுவதற்கு" அருமையான சந்தர்ப்பம் கிடைக்கும்!

தங்கள் உண்மையுள்ள,
அமிருத கௌரி.

## 153

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *1-7-1946*

அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

ஜூன் *27*-இல் தாங்கள் எழுதிய கடிதமும், அதனுடன் இணைக்கப்பட்டிருந்த இரு தந்திகளின் நகல்களும் கிடைத்தன.

ஸ்ரீ அபெல் சிம்லாவுக்குச் சென்றிருக்கிறார். தந்திகள், கடிதம் எல்லாவற்றையும் அவருக்கு அனுப்பியிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஐ. டி. ஸ்காட்,
வைஸ்ராயின் உதவிக் காரியதரிசி.

---

* நேட்டால் இந்தியர் காங்கிரசின் சாத்துவிக எதிர்ப்பு சபையைச் சேர்ந்த ஸ்ரீ ஏ. ஐ. மீரும், நேட்டால் இந்தியர் காங்கிரஸ் தலைவர் டாக்டர் நாயக்கரும் காந்திஜிக்குக் கொடுத்திருந்த தந்திகளே மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. வெறிபிடித்த ஐரோப்பியர்கள் அங்கே புரிந்த அக்கிரமங்களும், தென்னாப்பிரிக்க சர்க்காரின் அடக்கு முறைகளும் அத் தந்திகளில் விவரிக்கப்பட்டிருந்தன.

## 154

புனு,
4-7-1946

எனது அன்புள்ள ஸ்ரீ அபெல்,

கனம் ஆகா கானிடமிருந்து காந்திஜிக்கு இன்று காலே வந்த தந்தியின் *நகலே இத்துடன் அனுப்புகிறேன்.

ஆகா கானின் விருப்பத்திற்கிணங்க, அசுவின் சௌத்ரிக்கு விமானத்தில் இடம் கிடைப்பதற்கு வைஸ்ராய் ஏதாவது உதவி செய்ய முடியுமா என்பதை அறிந்துகொள்ள காந்திஜி விரும்புகிறுர்.

உஷ்ணம் காரணமாக நீங்கள் எடுத்துக்கொண்டுள்ள ஓய்வு உங்களுக்கு மகிழ்ச்சி அளித்து வருகிறதென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
அமிருத கௌரி

## 155

வைஸ்ராய் முகாம், இந்தியா
சிம்லா, 9-7-1946

என் அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

உங்களுடைய 4வ கடிதத்திற்கு நன்றி.

ஜுலே 7வ டர்பனிலிருந்து வந்த ராய்ட்டர் செய்தியிலிருந்து ஸ்ரீ சௌத்ரி 10வ நியூ யார்க்கிற்குப் புறப்படுவார் என்று தெரிகிறது. எனவே, அவருக்கு விமானத்தில் இடம் கிடைத்து

---

*மேலே குறிப்பிட்டுள்ள தந்தியின் விவரம் பின் வருமாறு:
மகாத்மா காந்தி,
புனு.

சொராப்ஜி கைது செய்யப்பட்டுள்ளார். எனவே நம்முடைய நிலேயை விளக்கிப் பொது மக்களின் அபிப்பிராயத்தைத் திரட்டுவதற்காக அசுவின் சௌத்ரி நியூ யார்க்கிற்குப் புறப்பட்டுச் செல்ல வேண்டியது மிகவும் அவசியமாகும். விமானத்தில் செல்ல அவருக்கு இடம் கிடைத்தாலன்றி அவர் நியூ யார்க் செல்லுவது முடியாத காரியம். இங்கே இருந்து கொண்டு என்னுல் இயன்றதை யெல்லாம் செய்து வருகிறேன். எனினும் நிலேமை அதிருப்திகரமாக இருக்கிறது. தயவு செய்து தலேயிட்டு ஆவன செய்யுங்கள். அசுவின் சௌத்ரிக்கு விமானத்தில் இடம் கிடைக்க இந்திய சர்க்கார் மூலம் ஏற்பாடு செய்யுங்கள். போபால், ஜின்னு முதலியோரை அணுகி ஏதாவது செய்யுங்கள். தயவு செய்து எல்லோருமாக ஒருமித்து முயற்சி செய்யுங்கள். இப்போது இறுதியாக, இந்திய சர்க்கார் என்னே நியூ யார்க்கிற்கு அனுப்ப விரும்பினுல்,அது எவ்வளவு தாழ்ந்த அந்தஸ்துள்ள அலுவலாக இருப்பினும், என் உடல் நலம் குன்றியுள்ள இச்சமயத்தில் கூட நான் அதைப் பற்றி ஆலோசிக்கத் தயாராக இருக்கிறேன்.

ஆகா கான்.

விட்டது என்றே நினைக்க வேண்டியிருக்கிறது. இருந்தாலும், ஹைகமிஷனர் காரியாலயத்திலிருந்து அதன் சம்பந்தமான நிலைமை என்ன என்பதை திட்டவட்டமாக அறிந்து தெரிவிக்கும் படி வைஸ்ராயின் சார்பில் நான் காமன்வெல்த் தொடர்பு இலாகாவைக் கேட்டிருக்கிறேன்.

இங்கே கால நிலை மிகவும் குளிர்ச்சியாகவும் ஆனந்தமாகவும் இருக்கிறது. எனினும், மழை மிகவும் அதிகம்.

தங்கள் உண்மையுள்ள,

ஜி. ஈ. பி. அபெல்.

பகுதி எட்டு

# கோவாவில் அடக்கு முறை

## 156

## நண்பர்களின் துன்பம்

*முகாம்: பஞ்சகனி,*
*19-7-1946*

*எனது அன்புள்ள ஸ்ரீ அபெல்,*

*கோவாவில் நிகழ்ந்துள்ள சம்பவங்களைக் கவனிக்கும்படி உங்களிடம் நான் கூற வேண்டும் என்பது காந்திஜியின் விருப்பம். அச்சம்பவங்கள்* 18-7-1946 "பம்பாய் கிராணிகிள்" பத்திரிகையில் விவரமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன.*

*நேற்று அங்கிருந்து காந்திஜிக்கு வந்த ஒரு தந்தியின் நகலை† இத்துடன் அனுப்பியிருக்கிறேன். கோவாவிலிருந்து வந்த நண்பர்களும் காந்திஜியை நேரில் கண்டு தங்களுடைய துன்பங்களை விவரித்துக் கூறினார்கள். இவற்றிலிருந்து, கோவாவில் அதிகாரிகள் அராஜகமான காரியங்களைச் செய்துவருகிறார்கள் என்றே தோன்றுகிறது. அந்த அராஜகத்தைத் தடுக்க வைஸ்ராய் ஏதாவது செய்யக்கூடுமா என்பதை காந்திஜி அறிய விரும்புகிறார்.*

*தங்கள் உண்மையுள்ள,*
அமிருத கௌரி

---

* "பம்பாய் கிராணிகிள்" பத்திரிகையில் வெளியான விவரங்களின் சாரம் பின் வருமாறு:

சிவில் உரிமைகளுக்காகப் போராடி வரும் கோவா மக்கள்மீது போர்ச்சுகீய அதிகாரிகள் அடக்குமுறைகளைப் பிரயோகிக்க ஆரம்பித்திருக்கிறார்கள். அவர்கள், டாக்டர் லோகியாவை ஐந்து வருட காலத்திற்கு கோவாவிலிருந்து நாடு கடத்தியிருக்கிறார்கள். கோவா காங்கிரஸ் ஸ்தாபகரையும், அதன் காரியதரிசியையும் கைது செய்து, ராணுவ கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்திருக்கிறார்கள். பொதுக் கூட்டங்கள் தடை செய்யப்பட்டிருக்கின்றன. அந்தத் தடையுத்தரவை லட்சியம் செய்யாமல் பொதுக் கூட்டங்களில் கலந்து கொண்ட பெண்கள் உள்படப் பலரையும் அதிகாரிகள் அடித்துக் கொடுமை செய்தனர்.

† கோவா காங்கிரஸ் காரியதரிசி கைதியான விவரமும், அவர் ஒரு ராணுவச் சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார் என்றும், அவர் மீதுள்ள வழக்கு விசாரணை ராணுவ கோர்ட்டில் நடைபெறும் என்றும் காந்திஜிக்கு வந்த தந்தியில் குறிப்பிடப்பட்டிருந்தன.

## 157

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *3-8-1946*.

எனது அன்பார்ந்த ராஜகுமாரி சாகிபா,

நீங்கள் சென்ற மாதம் 19உ எழுதிய கடிதத்தில் கோவா சம்பவங்களைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தீர்கள். நட்புறவுடன் இருந்துவரும் ஓர் அந்நிய சர்க்கார் விஷயங்களில் இந்திய சர்க்கார் தலையிடுவது இயலாத காரியம். எனினும், கோவாவில் நிகழ்ந்து வரும் சம்பவங்களை இந்திய சர்க்கார் கவனித்து வருகிறார்கள். அப்போதைக்கப்போது அங்கே நிகழும் சம்பவங்களைப் பூரணமாக அறிந்துகொள்வதற்கான முறைகளையும் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

சமீப காலமாக அங்கே நிலைமை அபிவிருத்தி அடைந்திருக்கிறது என்று பத்திரிகைச் செய்திகளிலிருந்து தெரிகிறது.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 158

சேவா கிராமம்,
*13-8-1946*

எனது அன்புள்ள ஸ்ரீ அபெல்,

உங்களுடைய 3உ கடிதம் முதலில் பஞ்சகனிக்குச் சென்று விட்டு இன்றுதான் இங்கு வந்து சேர்ந்தது.

காந்திஜிக்கு வரும் செய்திகளிலிருந்து கோவாவில் நிலைமை அபிவிருத்தி அடையவில்லை என்பது தெரிகிறது. வரப்போகும் 'ஹரிஜன்' இதழில் எழுதியுள்ள குறிப்பின் நகல் ஒன்றை* இத்துடன் இணைத்து அனுப்பியுள்ளேன். "நட்புறவுடன் இருக்கும் ஓர் அந்நிய நாட்டின் விஷயங்களில் தலையிடுவது" இயலாத காரியமாக இருக்கலாம். எனினும், இந்தியர்களைக் கொடுமையாகவும் அநீதியாகவும் நடத்துவதை நட்பு முறையில் எடுத்துக் காட்டுவது இயலாத காரியம் அல்ல.

காந்திஜியின் யோசனைக்கு இணங்க பம்பாய் ஆர்ச் பிஷப் எழுதிய கடிதத்தின் நகலையும்† இத்துடன் இணைத்துள்ளேன்.

---

* மேலே குறிப்பிட்டுள்ள 'ஹரிஜன்' குறிப்பு, கோவா கவர்னர் ஜெனரல் அந்தக் குறிப்பை ஆட்சேபித்து எழுதிய கடிதம், அவருக்கு காந்திஜியின் பதில் ஆகியவற்றைப் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

† கோவாவில் நடைபெறும் சட்டவிரோதமான அமளிகளில் கோவா ரோமன் கத்தோலிக்கப் பாதிரியாரும் பங்கு எடுத்துக் கொள்வதாக காந்திஜிக்குப் புகார் வந்ததன் மீது, அதன் சம்பந்தமான உண்மையைத் தெரிந்து கொள்வதற்காக அவர் பம்பாய் ஆர்ச் பிஷப்புக்கு ஒரு கடிதம் எழுதினார். அதை ஆர்ச் பிஷப் விசாரிக்க வேண்டும்

கோவாவில் நிகழ்ந்துவரும் சம்பவங்களின் போக்கை நீங்கள் அறிந்துகொள்வதற்கு அது உதவியாக இருக்கும். இங்கிருந்து கோவாவுக்குச் செல்லும் இந்தியர்களை அந்நியர்களாகக் கருது வது நட்புக்கு முரணான காரியம் அல்லவா?

அன்புடன்,

தங்கள் உண்மையுள்ள,
அமிருத கௌரி

## 159

சேவாகிராமம்,
17–8–1946

எனது அன்பார்ந்த ஸ்ரீ அபெல்,

காந்திஜிக்கு இப்போது வந்த ஒரு தந்தியின் நகலை‡ உங்களுக்கு அனுப்பி வைக்கும்படி அவர் எனக்குக் கட்டளையிட்டுள்ளார். அதற்கு வியாக்கியானம் தேவையில்லை. கோவாவில் நிலைமை சீர்கெட்டு வருவதாகவே தோன்றுகிறது.

அன்புடன்,

தங்கள் உண்மையுள்ள,
அமிருத கௌரி

---

என்று காந்திஜி கேட்டுக் கொண்டிருந்தார். அதற்கு ஆர்ச் பிஷப் அளித்திருந்த பதிலில், கோவா பாதிரியாரைப்பற்றி விசாரிக்க போப் கோர்ட்டிற்கு மாத்திரமே அதிகாரம் உண்டென்றும், சாதாரண விஷயங்களைப் பொறுத்தமட்டில் உலக கத்தோலிக்க சர்ச் உலகத்திலுள்ள எல்லா நாடுகளுடனும் சமாதானமாக இருப்பதையே கொள்கையாகக் கொண்டிருக்கிறதென்றும் குறிப்பிட்டிருந்தார்.

‡ மேலே அமிருத கௌரி குறிப்பிட்டுள்ள தந்தியின் விவரம் வருமாறு: "கோவாவில் சத்தியாக்கிரக இயக்கத்தை யொட்டிக் கைதியான மற்றொரு கோவா தலைவரான புருஷோத்தம் ககோத்கார் காற்றோட்டமில்லாத அசுத்தமான அறையில் சிறை வைக்கப்பட்டிருக்கிறார். கொலை, கொள்ளைகள் சம்பந்தமாகக் கைது செய்து வழக்குத் தொடரப்பட்டுள்ள குற்றவாளிகளுடன் அவரையும் சேர்த்து வைத்திருக்கிறார்கள். அவருக்குக் கொடுக்கப்படும் உணவும் மிகவும் குறைவாக இருக்கிறது. உணவுக்காக அவர் சிறையில் வேலை செய்யத் தயாராக இருந்தும் கூட, பாதி வயிற்றுக்கு கூடப் போதாத உணவே அவருக்கு அளித்து வருகிறார்கள்."

## 160

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 22-8-1946

எனது அன்பார்ந்த ராஜகுமாரி சாகிபா,

கோவாவைப் பற்றி நீங்கள் 17உ எழுதிய கடிதத்திற்கு நன்றி.

வைஸ்ராயும், பண்டித ஜவாஹர்லால் நேருவும் இன்று சந்தித்துப் பேசினார்கள்; மீண்டும் சந்தித்துப் பேசப் போகிறார்கள். இடைக்கால சர்க்கார் ஏற்படுவதற்கான காரியங்கள் பூர்த்தியாகும் நிலையில் இருக்கின்றன என்றே தோன்றுகிறது. கூடிய சீக்கிரம் முஸ்லிம் லீக் ஒத்துழைப்பதற்கு இணங்கிவரும் என்றே நான் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

பகுதி ஒன்பது

# துணிப் பற்றுக்குறையும் மிருக வளர்ப்பும்

## 161

## கவர்னருடன் கடிதப் போக்குவரத்து

*சேவா கிராமம்,*
*2—8—1946*

*மே. த. வங்காள கவர்னருக்கு,*
*கல்கத்தா.*

*அன்பார்ந்த நண்பருக்கு,*

*உங்களுடைய இரண்டு பிரசங்கங்களின் பிரதிகளை ஸ்ரீ சுதீர் கோஷ் அன்புடன் என்னிடம் கொடுத்தார். எனது தினசரி அலுவல்களிலிருந்து அப்போதைக்கப்போது சிறிது ஓய்வு கிடைத்தபோது ஒரு பிரசங்கத்தை வாசித்து முடித்தேன்.*

*இப்போதைக்கு இரண்டு விஷயங்களையொட்டி உங்களுடைய கவனத்தை ஈர்க்கவே இதை நான் எழுதுகிறேன். அகில இந்திய நூற்போர் சங்கம் வகுத்துள்ள கொள்கையைத் தாமதமின்றிப் பின்பற்றுவதன்மூலம் துணிப் பற்றுக்குறையை நீங்கள் சமாளிக்க முடியும். அச்சங்கத்திற்கு வங்காளத்திலும் கிளை இருக்கிறது. அத்திட்டத்தை ஒரே வாக்கியத்தில் கூறிவிடலாம். ஒவ்வொரு குடும்பமும் அது உற்பத்தி செய்யும் பருத்தியை நூற்க வேண்டும்; ஒவ்வொரு கிராமமும் அதற்குத் தேவையான துணியை நெய்ய வேண்டும் என்பதுதான் அத்திட்டம். உலகிலேயே இதுதான் மாபெரும் கூட்டுறவு முயற்சியாகும்.*

*இரண்டாவது, கால்நடைப் பிரச்னையாகும். அவ்விஷயமாக நீங்கள் காதி பிரதிஸ்தானைச் சேர்ந்த ஸ்ரீ சதீஷ் சந்திர தாஸ் குப்தாவைச் சந்திக்க வேண்டும். அவர் நோயுற்றிருப்பதால், அவரைச் சந்திக்க முடியாமல் இருக்கலாம். இப்போதுதான் அவர் அவ்விஷயமாக மாபெரும் ஒரு நூலை* வெளியிட்டுள்ளார்.*

* "இந்தியாவில் பசு" என்ற நூலையே மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ளார். அது கிடைக்குமிடம்: காதி பிரதிஸ்தான், 15, பங்கிம் சாட்டர்ஜி தெரு, கல்கத்தா—12

நான் வங்காளத்திற்கு வருவதுபற்றி நீங்கள் அனுப்பிய செய்தியை ஸ்ரீ சுதீர் கோஷ் என்னிடம் கொண்டுவந்து கொடுத்தார். அதற்காக உங்களுக்கு நான் நன்றி செலுத்துகிறேன். வங்காளத்தில் பெய்யும் மழை எவ்வளவு சீக்கிரமாக என்னை அனுமதிக்கின்றதோ அவ்வளவு சீக்கிரமாக வர நான் ஆர்வம் உடையவனாக இருக்கிறேன். நான் அங்கு வரும்போது தங்களைச் சந்திப்பதே எனது முதல் வேலையாக இருக்கும்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 162

# கவர்னரின் அழைப்பு

சர்க்கார் மாளிகை,
கல்கத்தா, 8-8-1945

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

தங்களுடைய ஆகஸ்டு 2உ கடிதத்திற்கு நன்றி. நீங்கள் வங்காளத்திற்கு வரும்போது உங்களைச் சந்திக்க நான் மிகவும் மகிழ்ச்சியுடையவனாக இருக்கிறேன். நீங்கள் விஜயம் செய்யும் போது, நான் உங்களுக்கு என்ன வசதிகள் அளிக்க வேண்டும் என்பதை எனக்கு அறிவிப்பீர்கள் என்று நம்புகிறேன்.

நீங்கள் விரும்பினால், கல்கத்தாவில் உங்களுடைய உபயோகத்திற்காக ஒரு மோட்டாரை உங்களிடம் ஒப்புவிக்க ஆர்வம் உடையவனாக இருக்கிறேன்; சாத்தியமான வேறு போக்குவரத்து வசதிகள் அளிக்கவும் ஏற்பாடுகள் செய்யத் தயாராக இருக்கிறேன். கிராமப் பிரதேசங்களில் உங்களுக்கு அளிக்கப்படும் உபசாரங்களுக்குக் குறைவே இராது என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும் குறிப்பாக, நண்பர்கள் வைத்திய உதவிப் படையைச் சேர்ந்த ஸ்ரீ சைமண்ட்ஸைப் பற்றிக் கூற விரும்புகிறேன். அவரைத் தாங்கள் அறிவீர்கள். நீங்கள் கிராமப் பிரதேசங்களுக்கு விஜயம் செய்யும்போது அவர் தம்மால் இயன்ற எத்தகைய உதவியும் அளிக்க ஆர்வம் உடையவராக இருப்பார் என்பதை நான் அறிவேன்.

இங்கே நீங்கள் விஜயம் செய்யும்போது நீங்கள் குறிப்பிட்டுள்ள உடை பற்றியும், கால்நடைகள் ஆகிய மற்றும் பல விஷயங்களைப் பற்றியும் உங்களுடன் நீண்ட நேரம் பேசுவதற்கான சந்தர்ப்பத்தை நான் ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

ஆர். ஜி. கேஸி

## 163

*சேவா கிராமம், 14-8-1945*

மே. த. வங்காள கவர்னருக்கு,
கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

நேற்று கிடைத்த உங்கள் 8வ. கடிதத்திற்கு நன்றி. நீங்கள் அன்புடன் அளிக்க விரும்பும் உதவியை, எனக்குத் தேவையாயின் நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். ஆம், ஸ்ரீ சைமண்ட்ஸை நான் நன்கு அறிவேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 164

*சர்க்கார் மாளிகை,*
*கல்கத்தா, 1-12-1945*

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இந்தக் குறிப்பை நான் சுதீர் கோஷ்மூலம் தங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். நீங்கள் எப்போது விரும்பினலும், சாத்தியமாயின் நாளேயோ (ஞாயிற்றுக்கிழமை) அல்லது திங்கட்கிழமையோ தங்களேப் பார்க்க மிகவும் ஆர்வம் உடையவனுக இருக்கிறேன்.

உங்களுடைய நீண்ட தூரப் பிரயாணத்திற்குப் பிறகு நீங்கள் சிறிது களேத்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன். உங்களுடைய பிரயாணம் சௌகரியமாக இருந்திருக்கும் என்றும், வழியில் தாங்கள் அதிக சிரமத்திற்கு உள்ளாகும்படி நேர்ந்திராது என்றும் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**ஆர். ஜி. கேஸி**

## 165

# “ஆக்கத் திட்டம்”

*சோட்பூர், 6-12-1945*

மே. த. வங்காள கவர்னருக்கு,
கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

‘ஆக்கத் திட்டத்’தின் பிரதி* ஒன்று வேண்டும் என்பதில் நீங்கள் ஆர்வம் உடையவராக இருப்பதால், நான் உங்களுக்காக

---

* காந்திஜி எழுதிய “ஆக்கத் திட்டம், அதன் பொருளும் இடமும்” என்ற நூல் ஆமதாபாத் நவஜீவன் அச்சகத்தில் வெளியிடப்பட்டதாகும்.

ஒரு பிரதி வாங்கி அனுப்பியிருக்கிறேன். ஆனால் திருத்தப்பட்ட பதிப்பின் ஒரு மாதிரி இன்றைய தபாலில் எனக்கு வந்தது. உங்களுக்கு விருப்பமானதை வாசியுங்கள். அந்தப் பிரதியை எனக்குத் திருப்பி அனுப்பவேண்டிய அவசியம் இல்லை.

சமாளிக்க முடியாத அலுவல்களுக்கிடையே, சாத்தியமான வரையில் மற்றவைகளையும் சேகரித்து அனுப்ப நான் முயற்சித்து வருகிறேன்.

உங்களையும் ஸ்ரீமதி கேஸியையும் சந்தித்ததில் எனக்கு உண்டான மகிழ்ச்சியை மீண்டும் தெரிவிக்க விரும்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 166

## ‘அக்கறையுடன் வாசித்தேன்

*சர்க்கார் மாளிகை,*
*கல்கத்தா, 9-12-1945*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

திருத்தப்பட்ட உங்களுடைய ‘ஆக்கத் திட்டம்’ என்ற நூலின் பிரதியை எனக்கு அனுப்பிவைத்ததற்கு மிக்க நன்றி. அதை நான் மிகுந்த அக்கறையுடன் வாசித்தேன்; மீண்டும் வாசிக்கப்போகிறேன்.

அதை வாசித்ததும், முக்கியமாக வீடுகளில் நூற்பதையும், நெசவு செய்வதையும் பற்றி வாசித்ததும், எனக்கு ஏற்பட்ட முதல் உணர்ச்சி என்னவெனில், நீங்கள் கூறுவதை நான் முற்றிலும் ஒப்புக்கொள்ளுகிறேன் என்பதுதான். சென்ற இரண்டு வருடங்களாக நமக்கு ஏற்பட்ட பல கஷ்டங்களில் ஒன்று, நூல் மிக மிகக் குறைவாகக் கிடைக்கிறது என்பதே. இதை நான் உங்களிடம் கூறியுள்ளேன் என்று நினைக்கிறேன். அதன் விளைவாக, இம் மாகாணத்தில் நெசவையே தொழிலாகக் கொண்டவர்களில் ஒரு சிறு பகுதியினருக்குத்தான் வேலை இருந்தது. நூல் பற்றுக்குறை இந்தியா முழுவதையும் பாதித்திருக்கிறதென நான் நினைக்கிறேன். ஒவ்வொரு விவசாயியும் தன் சொந்தத்திற்குத் தேவையான பருத்தியை உற்பத்தி செய்வதாயின், அவரது முக்கிய உணவுப் பொருளான நெல் உற்பத்தியாகும் நிலப் பரப்பு குறைந்துவிடும். ஏற்கனவேயே நெல் உற்பத்தியாகும் பரப்பு மிகவும் குறைவாகவே இருக்கிறது. எனவே அவருக்குத் தேவையான பருத்தியை உற்பத்தி செய்யும்படி அவரைத் தூண்டுவது மிகவும் கஷ்டமான காரியம்.

மேலே நான் கூறியது போல், உங்களுடைய யோசனையை நான் எதிர்க்கவில்லை. இப்போது வங்காளத்திலுள்ள விவசா

யியின் சராசரி நேரம் வீணடிக்கப்படுகிறது. எனவே, பலன் தரத்தக்க வேலையில் அவர்கள் தங்கள் நேரத்தில் ஒரு பகுதியையோ அல்லது முழுவதையுமோ செலவிடும் முறைகளை நான் வரவேற்பேன்.

உங்களுடைய திட்டம் அமலுக்கு வருவதாக இருந்தால்கூட, நீர்ப்பாசனத்தினால் செய்யக்கூடிய காரியத்தை அது செய்ய முடியாது; அதாவது பருவ காலத்திற்கு அடிமையாக இருப்பதிலிருந்தும், வங்காளத்தில் நீர்ப்பாசனமின்மை காரணமாக எழும் பல அசௌகரியங்களிலிருந்தும் விவசாயிகளுக்கு அது விடுதலை அளித்துவிட முடியாது.

மற்றொரு விஷயம். சிறந்த ஆஸ்திரேலியக் கம்பளி கொஞ்சம் அனுப்பும்படி நான் விமானத் தபாலில் ஆஸ்திரேலியாவுக்கு எழுதியிருக்கிறேன். அதிலிருந்து உங்களுக்கு உண்மையான நல்ல சால்வை நெய்து கொள்ளலாம். அதை உங்களுக்குப் பின்னர் அனுப்பிவைக்கிறேன்.

எங்கள் இருவருடைய புகைப்படத்திலும் நீங்கள் கையெழுத்திட்டதற்காக நான் நன்றியுடையவனாக இருக்கிறேன். அதற்குப் பிரதியாக உங்களுடைய நிதிக்கு மகிழ்ச்சியுடன் நான் ஒரு சிறு தொகை அனுப்பியுள்ளேன்.

உங்களுக்கு நல் வாழ்த்துக்கள்,

தங்கள் உண்மையுள்ள,

ஆர். ஜே. கேஸி

# 167

# நேரத்தை உபயோகிக்கும் கலை

காதி பிரதிஸ்தான்,
சோட்பூர்,
8-12-1944

மே. த. வங்காள கவர்னர்,
கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

இன்று நீங்கள் வெளியிடப் போகும் உங்களுடைய வானொலிப் பிரசங்கத்தை இப்போதுதான் வாசித்து முடித்தேன். அது ருசிகரமாக இருப்பதுடன், அதில் பல தகவல்களும் அடங்கியிருக்கின்றன. நதிகளின் மூலம் வங்காளக் குடாக் கடலில்போய் விழுந்து வீணாகும் தண்ணீரைத் தேக்கி வங்காள மக்களுக்குப் பலனளிக்கும்படி செய்தால், மகத்தான நன்மை ஏற்படும். ஆனால், அது நீண்ட காலத் திட்டமாகும். இதன் மத்தியில்,

லட்சக்கணக்கான மக்களுக்கு, அவர்கள் வேலை செய்யும் நேரத்தின் ஒவ்வொரு விநாடியையும் அவர்களுடைய சொந்த நன்மைக்கு உபயோகப்படுத்திக் கொள்ள கற்றுக்கொடுக்க வேண்டும். அவர்கள் இந்தக் கலையைக் கற்றுக்கொண்டால், தேக்கப்பட்ட தண்ணீரை அவர்கள் நன்கு பயன்படுத்திக் கொள்வார்கள்.

"வங்காளத்திலுள்ள கோடிக்கணக்கான குடியானவர்கள் பாதி நேரத்திற்குமேல் யாதொரு வேலையுமின்றி சோம்பிக் கிடக்கிறார்கள். அவர்களுடைய நிலை, உலகிலேயே மகத்தான வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னையாகியிருக்கிறது. மிகவும் சக்தி வாய்ந்ததாக இருக்கக்கூடிய அவர்களுடைய உழைப்பு வீணாவதும் பெரும் நஷ்டமாகும்." என்று நீங்கள் கூறியிருப்பது முற்றிலும் சரியே.

அந்தப் பிரச்னை தீருவதற்கான முழு வழியையும் நான் காட்டியிருக்கிறேன். மிக மிகக் குறைவான மூலதனத்தைக் கொண்டு சர்க்கார் அதை இன்று செயலில் கொண்டுவர முடியும். அதாவது, பணத்தைக் காட்டிலும் மனித உழைப்பைப் பெரிதாகக் கருதுங்கள். இதுவரை உபயோகித்துக் கொள்ளப் படாத அந்த உழைப்பு, என்றென்றும் வற்றாத வருமானத்தைக் கொடுக்கக்கூடியது. அந்த உழைப்பை உபயோகிக்க உபயோகிக்க, வருமானம் மேன்மேலும் அதிகமாகுமே யொழிய குறையாது. நான் உங்களது ஆலோசகராக இருந்தால், உங்களுடைய பிரசங்கம் அச்சிடப்படுவதற்கு முன், "அந்தப் பிரச்னையை நாம் பரிசீலனை செய்வோம்" என்று நீங்கள் கூறியிருப்பதை அடுத்து ஒன்றிரண்டு பாராக்களைச் சேர்க்கும்படி நான் யோசனை கூறியிருப்பேன்; மனித உழைப்பை உடனடியாக உபயோகப்படுத்திக்கொள்வதற்கான வழியையும் காட்டியிருப்பேன். அதைத் தொடர்ந்து நீங்கள், ஒரு நீண்ட கால யோசனையாக உங்களுடைய கவர்ச்சியான திட்டத்தை விவரித்திருக்கலாம்.

பிரசங்கத்தில் உங்களுடைய முடிவுரை சரியா? நீங்கள் சொல்லுகிறீர்கள் : "என் மனத்திற்குத் தெரிந்தவரையில் இந்தப் பிரச்னைக்கு விடை நமது அரசியலிலோ, நமது மதத்திலோ அல்லது நமது ஆர்வத்திலோ இல்லை; நமது சூழ் நிலையின் நிரந்தரமான அம்சங்களிலேயே இருக்கிறது. அதாவது வங்காளத்தின் நிலத்திலும், நீரிலுமே இருக்கிறது."

இது, சிந்தனையின் பெரிய கோளாறு ஆகும். இதை அடிப்படையாகக் கொண்டே செயலும் இருக்கிறது. பிரிட்டிஷ் உத்தியோக வர்க்கத்தினால் இது வாழையடி வாழையாக அனுசரிக்கப் பட்டு வருகிறது. மாகாண சர்க்கார் நிர்வாகத்தில் வங்காள மக்கள் யாவருக்கும் அக்கறை இருந்தாலொழிய, உங்களுடைய மகத்தான திட்டம் ஒன்றுமில்லாமல் போய்விடும். எனவே, மதமும், தனி நபர்களின் ஆர்வமும்கூட ஒன்றுக்கொன்று இணைந்தே இருக்கின்றன. வங்காளத்தில் உள்ள நிலத்தையும்

நீரையும் போல் மதமும் தனி நபர்களின் ஆர்வமும், நமது சூழ் நிலேயின் நிரந்தரமான அம்சங்களேயாகும். இவையும் நிலத் தையும் நீரையும் போல் மாறக்கூடியவையே.

சிந்தனேயுடன் கூடிய உங்களுடைய பிரசங்கத்தையொட்டி எனது அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி நீங்கள் கேட்டீர்கள். என் மனத்தில் எழுந்த அபிப்பிராயத்தை அப்படியே தெரிவித் திருக்கிறேன்.

விதை உருளேக் கிழங்குகள் சம்பந்தமாக இன்று காலே நான் எழுதிய கடிதத்தை யொட்டி உடனடியாக நீங்கள் நடவடிக்கை எடுத்துக்கொண்டதற்கு மிகவும் நன்றி.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 168

# வங்காளத்தின் சாபத்தீடு

சர்க்கார் மாளிகை,
கல்கத்தா, 10-12-1945

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

டிசம்பர் 8உ நீங்கள் எழுதிய கடிதத்தை யொட்டியும் (வங்கா ளத்தில் நீர்ப்பாசன விஷயமாக எனது வானெலிப் பிரசங்கத் தைப் பற்றியது), உங்களுடைய 'ஆக்கத் திட்டத்தை'ப் பற்றியும் நான் மீண்டும் உங்களுக்கு எழுதத் துணிகிறேன்.

லாபகரமான, ஆரோக்கியமான கிராமத் தொழில்களின் மூலமே கிராம வாழ்க்கையைப் புனருத்தாரணம் செய்ய வேண்டு மென உங்களேப் போலவே நானும் ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இருந்தாலும் மற்ற விஷயங்களே யொட் டியும், வங்காளத்தைப் பொறுத்த மட்டிலாவது நான் கூறுவது தான் சரி என்று நம்புகிறேன். அதாவது சுபிட்சத்திற்கு மூலா தாரமாக இயற்கையான சூழ்நிலேயைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதையே நான் வற்புறுத்துகிறேன். வறுமைதான் வங்கா ளத்தின் சாபத்தீடாக இருக்கிறது. (இந்தியாவில் உள்ள மற்ற மாகாணங்களேப் பற்றி எனக்குத் தெரியாது). வறுமையைத் தொடர்ந்து அதன் விளேவாக எழுத்தறிவின்மையும், நோயும் ஏற்படுகின்றன. ஊட்டமின்மையாலும், வறுமையினுலும் மக்கள் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் வரையில், அவர்கள் சந்தோஷ மாகவோ அல்லது சுதந்திரத்துடனே இருப்பது முடியாத காரியம்.

நம் இருவருடைய லட்சியமும் ஒன்றுதான் என்றே எனக்குத் தோன்றுகிறது. ஆனல், அதை அடைவதற்கு, நாம் வெவ்வேறு

வழிகளில் செல்லுகிறோம். மனிதனின் சந்தோஷ வாழ்வே நமது லட்சியம்; அதாவது மனிதன் பூரண சுதந்திரத்துடன் வாழ்வதே. அதற்கான இயற்கை சூழ்நிலையை உண்டாக்க நான் விரும்புகிறேன். மனிதனின் சந்தோஷ வாழ்வுக்கு அது முதலாவது தேவை என்பதே எனது நம்பிக்கையாகும். உங்களுடைய கருத்துக்கு நான் விளக்கம் கூறுவது சரியாயின், இந்த இயற்கைச் சூழ்நிலையை கட்டுப்படுத்தாமலேயே சந்தோஷமாக வாழ்வை எய்த முடியும் என்பது உங்களுடைய அதிகத் துணிச்சலான கற்பனையாகும். வீடுகளில் நூற்றல், நெசவு முதலிய மற்ற கிராமக் கைத்தொழில்களில் எனக்கு மதிப்பு இல்லை என்று நீங்கள் தயவு செய்து தவறாக நினைக்க வேண்டாம். வங்காளத்தில் உள்ள நாங்கள் நூல் வேண்டுமென்று கூக்குரலிட்டு வருகிறோம். ஏனெனில், இங்கு நூல் பற்றாக்குறை நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது. நெசவாளர்களில் ஒரு பகுதியினர்தான், சற்றேறக் குறைய நெசவைத் தங்கள் தொழிலாகக் கொண்டுள்ளவர்கள்தான் சமீப காலமாக ஏதோ காலம் தள்ளி வருவது சாத்தியமாகியிருக்கிறது. நாங்கள் எவ்வளவோ முயற்சித்தும்கூட, அவர்கள் மிகவும் கஷ்டத்திற்கு உள்ளாகி வருகிறார்கள் என்பதை நான் நன்கு அறிவேன்.

ஒவ்வொரு விவசாயியும் அவரது சொந்தத்திற்குத் தேவையான உடைகளுக்கு வேண்டிய பருத்தியைப் பயிரிடுவதென்ற கொள்கையை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால், அவர் பருத்தியைப் பயிரிட முற்பட்டால், அவர் உற்பத்தி செய்யும் அரிசி குறைந்துவிடும் என்ற உண்மையை மறந்துவிடக் கூடாது. நான் கையால் உங்களுக்கு எழுதிய கடிதத்தில் இதைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன் என்று நினைக்கிறேன். உழவு மாடுகளுக்கும் கறவை மாடுகளுக்கும் ஏதாவது ஊட்டமளிக்கக் கூடிய பயிர்களை வளர்ப்பதற்காக, நெல் விளையும் நிலத்தில் ஒரு சிறு பகுதியை விவசாயிகள் தியாகம் புரியும்படி செய்ய நாங்கள்முயற்சித்து வருகிறோம். ஆனால், எங்கள் முயற்சி வெற்றி பெறவில்லை. மாடுகள் தற்போது ஊட்டச் சத்து இல்லாத வைக்கோலையே தின்று "உயிர் வாழ்ந்து" வருகின்றன.

கிராமக் கைத்தொழில்கள் புத்துயிர் பெற்றால் நான் மகிழ்ச்சி அடைவேன். எனினும், வங்காளத்தின் நோய்களுக்கு இது உண்மையான பரிகாரமாக இருக்குமென நான் நினைப்பதற்கில்லை. உணவுப் பற்றாக்குறை, போஷணைக் குறைவு, வறுமை ஆகியவையே வங்காளத்தின் நோய்கள் ஆகும். நிலங்களில் போதிய உற்பத்தியின்மையே அதற்குக் காரணம். இம் மாகாணத்தில் நிலமும் தண்ணீரும் இணக்கமான முறையில் அபிவிருத்தி அடைந்தால்தான் அந்த நோய்களுக்குப் பெரிதும் பரிகாரம் காணமுடியும் என்பது எனது நம்பிக்கையாகும்.

நான் கூறியுள்ள யோசனை, அந்த நோய்களுக் கெல்லாம் கைகண்ட மருந்தாக இல்லாமலிருக்கலாம். "இந்த உலகில்

கடவுள் மனிதனுக்காக ஏற்படுத்தியுள்ள புதிர்களில் மனித இயற்கைதான் மாபெரும் புதிராகும். அந்தப் புதிரை அவிழ்த்து விட்டால், நாம் பின்னர் எல்லாப் பிரச்னைகளையும் தீர்த் தவர்களாவோம்" என்று எங்கேயோ நான் வாசித்ததாக ஞாபகம். மனித இயற்கை என்ற பிரச்னையைத் தீர்க்க நான் முற்பட வேண்டும். ஆனல் நான் அவ்விதம் செய்ய முற்பட வில்லை. மனித இயற்கை, தானகவே சிறந்த முறையில் பெறு வதற்கான சந்தர்ப்பங்களைச் சிருஷ்டிக்கவே நான் விரும்பு கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**ஆர். ஜி. கேஸி**

# 169

# ஓய்வு நேரம் வீணுகக்கூடாது

காதி பிரதிஸ்தான்,
சோட்பூர், 12-12-1945

மே. த. வங்காள கவர்னர்,
கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுடைய 10வ கடிதம் கிடைத்தது. அதற்காக நன்றி.

உங்களுடைய நீர்ப்பாசனத் திட்டத்தின் முக்கியத்தை நான் குறைத்துக் கூறவில்லை. அதனுடன் எனது யோசனையையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்றே நான் கூறியிருக்கிறேன். கோடிக்கணக்கான கிராமவாசிகளுக்கு ஓய்வு நேரம் இருக்கிறது என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயமாகும். அந்த நேரத்தில் அவர்கள் வேலையில் ஈடுபடுவதன்மூலம், அவர்கள் ஒவ்வொரு வருக்கும் உடனடியான நிவாரணம் ஏற்படும் என்பதே எனது யோசனை. நீங்கள் கையால் எழுதியுள்ள குறிப்பிலும் எனது யோசனையை நீங்கள் முற்றிலும் ஆதரிக்கிறீர்கள் என்றே தோன் றுகிறது. அப்படியிருக்க அத் திட்டத்தை அமலுக்குக் கொண்டு வருவதன்மூலம், உடைப் பற்ருக் குறை சம்பந்தப்பட்டவரையி லாவது உடனடியாக நம்பிக்கை அளிக்கக்கூடிய ஒரு நிலைமை ஏற்படும்படி செய்வதில் வங்காள அரசாங்கத்திற்கு என்ன கஷ்டம் இருக்கிறது?

இயற்கையான சூழ்நிலையைக் கட்டுப்படுத்தாமல், மகிழ்ச்சி யளிக்கும் நல்வாழ்வு ஏற்படும்படி செய்வது சாத்தியமென்று நான் ஒருபோதும் கூறியதில்லை. ஆனல், எத்தகைய விவாதத் திலும் ஈடுபட எனக்கு விருப்பம் இல்லை. கையால் நூற் பதிலும், நெய்வதிலும், மற்றக் கிராமக் கைத் தொழில் களிலும் உங்களுக்கு மதிப்பு இருக்குமாயின், அவை செயல்

படுவதற்கான ஒரு வழியை நான் கூறியிருக்கிறேன். ஒவ்வொரு விவசாயியும், அவரது சொந்தத்துக்குத் தேவையான பருத்தியை உற்பத்தி செய்ய வேண்டும் என்பது எனது திட்டத்தின் முக்கியமான நிபந்தனை அல்ல. மூலாதாரமான பயிருக்குப் பாதகத்தை விளைவிக்கக் கூடிய விதத்தில் பருத்தி சாகுபடி செய்யும்படி ஒரு விவசாயியையும் நிச்சயமாக நிர்ப்பந்தப்படுத்தக் கூடாது; அவ்விதம் ஆலோசனைகூடக் கூறக் கூடாது. வீணாகும் தண்ணீரை உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பது உங்களுடைய திட்டமாகும். அது போல், வீணாகும் ஓய்வு நேரத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே எனது திட்டமாகும்.

இதை உடனடியாக நடைமுறையில் அமலுக்குக் கொண்டு வர இயலும் என்பதை நீங்கள் ஆதரித்தால், முழு விவரங்கள் அடங்கிய திட்டத்தை உங்கள் பார்வைக்கு நான் அனுப்ப முடியும். ஏற்கனவே நான் உங்களிடம் கூறியிருப்பதுபோல், அகில இந்திய நூற்போர் சங்கத்தின் நிர்வாகத்தில் உள்ள பல்வேறு கதர் ஸ்தாபனங்களின் உதவியால், அத்திட்டத்தைச் செயலில் நிறைவேற்ற முடியும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 170

## கோபி மாளிகை

சர்க்கார் மாளிகை,
கல்கத்தா, 10-12-1946

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இப்போது ஒரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது. நீங்கள் விரும்பினால், இவ்விஷயத்தில் நீங்கள் உதவி புரியக் கூடும் என்று நான் நினைக்கிறேன்.

விஷயம் இதுதான்:

இந்த மாகாணத்தில் உள்ள ஆஸ்பத்திரிகளில் படுக்கைகளின் தொகையை அதிகப்படுத்துவதற்காக வங்காள சர்ஜன் (மேஜர் ஜெனரல் டபிள்யூ. ஈ. ஆர். டைமண்ட்) பல்வேறு வழிகளிலும் மகத்தான முயற்சிகள் செய்து வருகிறார். இப்போது அதன் சம்பந்தமாக ஒரு பெரிய சந்தர்ப்பம் கிடைத்துள்ளது. அதாவது பிரிட்டிஷ், அமெரிக்க ராணுவ ஆஸ்பத்திரிகள் விற்பனைக்கு வந்திருக்கின்றன. முற்றிலும் திருப்திகரமான ஏற்பாடுகளின் இறுதிக் கட்டத்தில் நாங்கள் இருக்கிறோம். அதன்படி, குறைந்த பட்சம் நான்கு அமெரிக்க ராணுவ ஆஸ்பத்திரிகளில் உள்ள எல்லாத் தளவாடங்களையும் வங்காள அரசாங்கம் வாங்கிக்

கொள்ளும். அந்த ஆஸ்பத்திரிகளில் மொத்தம் பல்லாயிரக்கணக்கான படுக்கைகள் இருக்கின்றன.

இதைத் தவிர, மிதுனபுரி நகருக்கு வெளியே சுமார் ஒன்றரை மைல் தூரத்தில் பிரிட்டிஷ் ராணுவ ஆஸ்பத்திரி ஒன்று இருக்கிறது. கோபி மாளிகையின் மைதானத்தில் இந்த ஆஸ்பத்திரி இருக்கிறது. அந்த மாளிகை ஸ்ரீ டி. எல். கான் என்ற கனவானுக்குச் சொந்தமானது. அந்த ஆஸ்பத்திரிக் கட்டிடத்தை, ஆஸ்பத்திரி செயல்பட்டுக் கொண்டிருக்கும் போதே அங்குள்ள சாதனங்களுடன் அப்படியே ஆர்ஜிதம் செய்து கொள்ள சர்ஜன் ஜெனரல் ஆர்வமுடையவராக இருக்கிருர். கோபி மாளிகையை வாங்கிக் கொள்வது நமது நோக்கத்திற்கும் உகந்ததாக இருக்கும். (உண்மையில் நமது நோக்கம் நிறைவேறுவதற்கு அது அத்தியாவசியமாகும்). அதாவது, அந்த மாளிகையைச் சேர்ந்த கட்டிடங்கள் நிரந்தரமாகவே ஓர் ஆஸ்பத்திரியாக மாற்றப்பட்டிருக்கும். பின்னர் அதை க்ஷயரோக வைத்தியசாலையாக உபயோகித்துக் கொள்ளலாம். அதன் பலனை, மேற்கொண்டு நமக்குத் தேவையான 650 படுக்கைகள் கிடைக்கும். இம் மாகாணத்தில் இந்த பயங்கரமான நோயைச் சமாளிப்பதற்கு இது ஒரு பேருதவியாக இருக்கும்.

சர்ஜன் ஜெனரலின் மேற்கண்ட நோக்கம் நிறைவேறுவதற்கு உதவி புரிய வேண்டும் என்பதில் நான் மிகுந்த அக்கறையுள்ளவனாக இருக்கிறேன்.

இருந்தாலும், கோபி மாளிகையை விற்கும்படி ஸ்ரீ கானைத் தூண்ட சுகாதார இலாகாவும், ஸ்தல ஸ்தாபன இலாகாவும் செய்த முயற்சிகள் இதுவரையில் வெற்றி பெறவில்லை. இதன் சம்பந்தமாக ஸ்ரீ கானிடமிருந்து ஸ்ரீ பாஸ்டினுக்குக் (ஜில்லா மாஜிஸ்ரேட், மிதுனபுரி) கிடைத்த கடிதத்தை இத்துடன் இணைத்திருக்கிறேன்.

ஸ்ரீ கான் காங்கிரஸ் அங்கத்தினர் என்று தெரிகிறது. நிச்சயமாக உங்களுக்கிருக்கும் செல்வாக்கை ஸ்ரீ கான் விஷயத்தில் உபயோகித்து, அவர் எனது சர்க்கார் அநீதியாக நடந்து கொள்கிறதென்ற அபிப்பிராயம் உடையவராயினும், அவரது சொத்தை விற்கும்படி செய்ய நீங்கள் விரும்பலாம் என்று எனக்குத் தோன்றுகிறது.

ஸ்ரீ கான் மிகவும் செல்வவந்தர் என்றும், அவர் சாதாரணமாக கல்கத்தா, மிண்டோ பார்க் சாலை, 3-ஆம் நம்பரில் வசித்து வருகிருர் என்றும் அறிகிறேன். அவர் மிதுனபுரியில் உள்ள கோபி மாளிகைக்கு எப்போதாவது தான் வருகிருர் என்றும் எனக்கு அறிவித்துள்ளனர். எனவே, அந்த மாளிகை அவரது சொந்த உபயோகத்துக்குத் தேவையில்லை என்றும் நான் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

ஆர். ஜி. கேஸி

## 171

காதி பிரதிஸ்தான்,
சோட்பூர், 12-12-1945

மே. த. வங்காள கவர்னருக்கு,
கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

கோபி மாளிகை சம்பந்தமாக 10-ஆம் தேதி நீங்கள் எழுதிய அன்பார்ந்த கடிதம் கிடைத்தது. இது மிகவும் தரும சங்கடமான ஒரு விஷயமாதலால், பலன் தரத்தக்க விதத்தில் நான் எதுவும் செய்ய முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை. தவிர, சீக்கிரத்தில் தற்போதைய ஆட்சியின் ஸ்தானத்தில் பொது மக்களின் அரசாங்கம்* ஏற்படப் போவதால், அவ்விஷயமாக ஏன் அவசரப்பட வேண்டும்?

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 172

# விதைக்கான உருளைக்கிழங்கு

காதி பிரதிஸ்தான்,
சோட்பூர், 8-12-1945

மே. த. வங்காள கவர்னருக்கு,
கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

மிக மிகத் தயக்கத்துடனேயே நான் இதை எழுதுகிறேன். எவ்வளவுக்கு அதிகமாகப் பார்க்கிறேனோ, எவ்வளவுக்கு அதிகமாகக் கேட்கிறேனோ அவ்வளவுக்கு, வங்காளத்தில் நிகழ்ந்துவரும் சம்பவங்களைக் குறித்து எனது வேதனை அதிகமாகியிருக்கிறது. அதற்கு இதோ ஓர் உதாரணம் கூறுகிறேன். இது உடனடியாகக் கவனிக்க வேண்டிய விஷயம் ஆகும்.

உருளைக் கிழங்கு பயிரிடுவோர், விதைக்கான உருளைக் கிழங்குகளைப் பெற முடியவில்லை என்றும், பயிரிட வேண்டிய காலம் ஒரு வாரத்தில் முடிவடைந்துவிடும் என்றும் சதீஷ் பாபு ஒரு

* காந்திஜி குறிப்பிட்டுள்ள அச்சந்தர்ப்பத்தில் பொதுத் தேர்தல்கள் நடந்து கொண்டிருந்தன. அதன் பலனாக வங்காளத்தில் பொது மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு மந்திரி சபை ஏற்படும் என்று எதிர்பார்க்கப்பட்டது. 1946 ஏப்ரலில் முஸ்லிம் லீக் தலைவர் எச். எஸ். சுஹ்ராவர்த்தியை முதல் மந்திரியாகக் கொண்ட மந்திரி சபை பதவியேற்றது.

செய்தி கொண்டுவந்திருக்கிறுர். விதைக்கான உருளைக் கிழங்குகள் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் இருக்கின்றன. ஆனல், பயிரிடுவோர் அவற்றைப் பெற முடியவில்லை.

சதீஷ் பாபு கொண்டுவந்துள்ள செய்தி உண்மையாயின், ஏதோ பெரும் தவறு நடந்திருக்கிறது என்பது தெளிவாகிறது. இவ்விஷயமாக நீங்கள் ஏதாவது செய்ய முடியுமா என்று கேட்க விரும்புகிறேன். சாமர்த்தியசாலியான ஸ்ரீ டேயைப் பற்றி நீங்கள் என்னிடம் சொல்லிக்கொண்டிருந்தீர்கள். இத்தகைய விஷயங்களில் அவரது ஊழியத்தைப் பயன்படுத்திக்கொள்வதாகவும் கூறினீர்கள். உடனடியாக இவ்விஷயத்தைக் கவனிப்பதற்காக அவரையாவது அல்லது வேறு எந்த அதிகாரியையாவது என்னிடம் நீங்கள் அனுப்ப முடியுமா?

இக் கடிதத்தை உடனே உங்களிடம் கொண்டு போவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறேன். வங்காளம் பெரியது. ஆனல், இவ் விஷயம் சிறியதுதான். இருந்தாலும் உருளைக் கிழங்கு பயிரிடும் ஏழைகளுக்கு இதைக் காட்டிலும் பெரிய பிரச்னை வேறு எதுவும் இல்லை. அவர்களுடைய ஜீவனத்திற்கே* இப்போது ஆபத்து ஏற்பட்டிருக்கிறது.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 173

# தேர்தல்களில் சலுகை

காதி பிரதிஸ்தான்,
சோட்பூர், 16-12-1945

மே. த. வங்காள கவர்னருக்கு,
கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

தேர்தல்களில் காலித்தனமும் சலுகையும் தாண்டவமாடுவதாக எனக்கு இடைவிடாமல் புகார்கள் வந்துகொண்டிருக்கின்றன. நாம் இவற்றைப் பற்றி ஒரு தடவை பேசினேம். எனினும் அந்தப் புகார்கள் நிற்கவில்லை. இத்தகைய நிகழ்ச்

---

* விதைக்கான உருளைக் கிழங்குகள் கிடைக்க வங்காள கவர்னர் உடனடியாக மேற்கொண்ட நடவடிக்கைகளுக்காக காந்திஜி நன்றி கூறியிருப்பதை, முந்திய பக்கங்களில் பிரசுரமாகியுள்ள 167-ஆம் கடிதத்தில் காணலாம்.

சிகளை நீங்கள் விரும்பவில்லை என்பதை நான் அறிவேன். இவ் விஷயமாகத் தாங்கள் ஏதாவது செய்ய முடியுமா?*

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 174

# சிட்டகாங் அட்டூழியங்கள்

சரண்ய ஆசிரமம்,
கௌஹாதி, 10-1-1946

மே. த. வங்காள கவர்னருக்கு,
கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

இன்று எனக்குக் கிடைத்த ஒரு தந்தியின் நகலை, இந்தக் கடிதத்துடன் அனுப்பியிருக்கிறேன். அந்தக் கதை நம்ப முடியாததாகத் தோன்றுகிறது. அதற்கு ஏதாவது ஆதாரம் இருக்குமாயின், அதை நீங்கள் விசாரித்து, அவசியமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்வீர்கள் என்பதை நான் அறிவேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 175

(தந்தி)

கௌஹாதி,
12-1-1946

வங்காள கவர்னரின் அந்தரங்கக் காரியதரிசி,
கல்கத்தா.

சிட்டகாங் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் தந்தி அனுப்பியிருக்கிறார். ராணுவத் தொண்டர் படையைச் சேர்ந்த சிலர் பெண்களை மானபங்கப் படுத்துவதாயும், அப்படையினரை எதிர்த்தால் அவர்கள் மேலும் தங்கள் தோழர்களை அழைத்துவந்து கிராம வாசிகளைத் தாக்கியும், வீடுகளுக்குத் தீவைத்தும், சொத்துக்

* முஸ்லிம் லீகர்கள் காலித்தனமாக நடந்துகொண்டு தம்மைப் பயமுறுத்துவதாகவும், அவற்றிற்கு போலீசார் உடந்தையாக இருப்பதாயும், வங்காளத்தின் முன்னாள் முதல் மந்திரியான மௌல்வி பஸ்லுல் ஹக், காந்திஜியிடம் புகார் செய்தார். அவ்விஷயத்தைத் தாம் கவர்னரிடம் கூறிப் பரிகாரம் தேடுவதாக உறுதி கூறியதற்கு இணங்கவே வங்காள கவர்னருக்கு காந்திஜி மேற்கண்ட கடிதம் எழுதினார்.

களைக் கொள்ளையடித்தும் வஞ்சம் தீர்த்துவருவதாயும் தந்தியில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இவ்விஷயமாக பூரண விசாரணை நடைபெறும் என்றும், ஒழுங்கான முறையில் நீதி வழங்கப்படும் என்றும் நம்புகிறேன்.

காந்தி

## 176

*அரசாங்க மாளிகை,*
*கல்கத்தா,*
*15-1-1946*

*எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

*கௌஹாதியிலிருந்து 10-ஆம் தேதி தாங்கள் எழுதியுள்ள கடிதத்திற்கு நன்றி. மிகவும் வருந்தத்தக்க சிட்டகாங் சம்பவத்தைப் பற்றி அதில் நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவ் விஷயமாக டைசனின் (என் காரியதரிசி) தந்தி உங்களுக்குக் கிடைத்திருக்கும். நேற்று இங்கு அவ் விஷயமாகப் பத்திரிகைகளுக்கு அனுப்பப்பட்ட அரசாங்க அறிக்கையின் நகலையும்* இத்துடன் இணைத்துள்ளேன். குற்றம் செய்தவர்கள் மீது கோர்ட்டில் கிரிமினல் வழக்குத் தொடரப்படும் என்பதை அதிலிருந்து நீங்கள் அறிந்துகொள்ளலாம். அது ஒரு மிருகத்தனமான செய்கையாகும். அதில், ஆறுதல் அளிக்கக்கூடிய ஒரு சிறிய விஷயம் என்னவெனில், அவர்கள் வங்காளிகள் அல்ல என்பதுதான்.*

*டயமண்ட் துறைமுகத்தில் ஏற்பட்ட பயங்கரமான உயிர்ச் சேதம் மற்றொரு துக்ககரமான சம்பவமாகும்.† இனி அவ்விதம் நேராமல் இருப்பதற்கான முறைகளைக் கைக்கொள்வதற்*

---

* வங்காள கவர்னர் மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிட்டுள்ள அரசாங்க அறிக்கையின் விவரம் பின்வருமாறு:

1946 ஜனவரி 7-இல் சிவில் தொழிலாளர் பிரிவைச் சேர்ந்த சிலர் (அவர்கள் வங்காளத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல) பெண்களை நாடி சிட்டகாங் நகருக்கு அருகில் உள்ள ஒரு கிராமத்திற்குச் சென்றனர். அங்கே அவர்களுக்கும் கிராமவாசிகளுக்கும் சச்சரவு ஏற்படவே, அவர்கள் தங்கள் பிரிவைச் சேர்ந்த மற்றும் சுமார் 300 பேர்களை அழைத்துக்கொண்டு வந்தனர். அதனுல் கிராமத்தில் பெரும் கலகம் ஏற்பட்டது. அவர்கள் வீடுகளுக்குத் தீ வைத்ததுடன், சொத்துக்களையும் கொள்ளையிட்டனர். 8 வீடுகள் தீக்கிரையானதுடன், 61 குடும்பங்களும் வீடுவாசல்களை இழந்தனர். கலகம் காரணமாக 21 கிராமவாசிகள் காயம் அடைந்தார்கள். அதில் ஒருவர் பின்னர் மாண்டார். ஒரு பெண் கற்பழிக்கப்பட்டதாகவும் தெரிகிறது.

† 1946-இல் கங்கா சாகர் மேளா நடந்தபோது, யாத்திரீகர்கள் கங்கை நதியின் முகத்துவாரத்தில் உள்ள சங்கம் தீவுக்குச் செல்ல கப்பலில் ஏறுவதற்காக தற்காலிகமான சிறிய கப்பல் துறைகளை நிர்மாணித்திருந்தனர். அவை இடிந்து வீழ்ந்ததன் விளைவாக 147 பேர் கொல்லப்பட்டனர்; 80 பேர் காயமடைந்தனர். உயிரிழந்தவர்களில் 80 பேர் பெண்களும், 7 பேர் குழந்தைகளும் ஆவர்.

காக, அதன் சம்பந்தமான உண்மைகளையும், காரணங்களையும் தெரிந்துகொள்ள முயற்சித்து வருகிறேன்.

18உ வெள்ளிக்கிழமை 7-30 மணிக்கு என்னை வந்து பார்க்க தங்களுக்கு சௌகரியமாக இருக்குமென்று நம்புகிறேன். நீங்கள் இங்கிருந்து புறப்படுவதற்கு முன் நாம் இருவரும் சந்தித்துப் பேச இந்த ஒரு சந்தர்ப்பம்தான் கிடைக்குமென்று தோன்று கிறது. உங்களுடைய நீண்ட கடிதத்தில் பல விஷயங்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அக் கடிதத்துடன் மற்றும் பல தகவல்களை இணைத்து அனுப்பியிருக்கிறீர்கள். நீங்கள் நேரில் பேசிய, கடிதங்களில் கண்ட பெரும்பாலான விஷயங்களுக்கும் நாம் சந்திக்கும்போது உங்களுக்கு நான் பதில் அளிக்க முடியு மென நம்புகிறேன். கடிதங்களில் சில கைவசம் இருக்கின்றன. அதற்குள் எல்லாவற்றையும் பூரணமாக விசாரிப்பது சாத்திய மல்ல.

தங்கள் உண்மையுள்ள,

ஆர். ஜி. கேஸி.

பகுதி பத்து

# கதர் ஸ்தாபனங்களுக்குத் தடை

## 177

## காந்திஜியின் குறிப்பு

*காதி பிரதிஷ்டான்,*
*சோட்பூர், 8-1-1946*

*மே. த. வங்காள கவர்னருக்கு,*
*கல்கத்தா.*

*அன்புள்ள நண்பருக்கு,*

*நேற்றிரவு நான் வாக்குறுதியளித்தபடி உங்களுக்கு இந்தக் குறிப்பை அனுப்புகிறேன்.*

### 1. மஹிஷதள்-தாம்லுக் உப பிரிவு, மிதுனபுரி ஜில்லா

*1944 ஜூன் 27-ஆம் தேதி ஸ்ரீதர் சந்திர கோஸ்வாமி அனுப்பிய விண்ணப்பத்தின் மீது, கைப்பற்றப்பட்ட சாமான் களைத் திருப்பிக் கொடுத்துவிடும்படி அப் பிரிவு அதிகாரி உத்தர விட்டார். ஆனால், அந்தச் சாமான்கள் இன்னும் திருப்பிக் கொடுக் கப்படவில்லை. காணமற்போன சாமான்களுக்கு ஈடுத் தொகை கொடுக்கப்படவில்லை என்றும் எனக்குத் தகவல் கிடைத்திருக் கிறது. அதன் சம்பந்தமான தஸ்தாவேஜுகள் இத்துடன் அனுப் பப்பட்டுள்ளன.*

### 2. காண்டை உப பிரிவு

*அந்தப் பிரதேசத்திலும் மற்ற உப பிரிவுகளிலும் கூட தண்ணீர் உவர்ப்பாகியிருக்கிறது. அந்தத் தண்ணீரையெல்லாம் இறைத்துவிட்டு, குடிப்பதற்கு உகந்த தண்ணீர் கிடைக்கும்படி செய்ய வேண்டும்.*

*இந்த வேலை எவ்வளவு அவசரமானது என்பதை விளக்கி, தொண்டு புரியும் நண்பர்கள் சங்கத்திலிருந்து கிடைத்துள்ள கடிதத்தை இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.*

## 3. அபய ஆசிரமம், கோமில்லா

அடக்கம்-3 என்று குறிப்பிடப்பட்ட அறிக்கையை இத்துடன் இணைத்திருக்கிறேன். ஒரு விசித்திரமான நிலைமையை அது வெளிபடுத்துவதாக இருக்கிறது. ஆசிரம நடவடிக்கைகள் யாவும் பொது மக்களுக்கு நன்மை பயக்கக் கூடியவை என்பதுடன், நிர்மாண அலுவல்களுமாகும். இதை நான் நேரில் அறிவேன். இங்கு சமூக சீர்திருத்தத்தை அடிப்படையாகக் கொண்டே பள்ளிக்கூடங்கள் நடத்தப்படுகின்றன. அவற்றில் படிக்கும் பெரும்பாலான குழந்தைகளும் முஸ்லிம்கள் ஆவர். அவர்கள் வருமானத்தைக் கோரி நூல் நூற்கும் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். நூல், பருத்தி, கதர் முதலியவற்றைச் சேமித்து வைப்பதற்காக அங்கே ஒரு பண்டசாலையும் அமைக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ சுரேஷ் பானர்ஜியின் திறமை மிக்க மேற்பார்வையில் அங்கே ஒரு ஆஸ்பத்திரியும் நடைபெற்றுவருகிறது.

## 4. மற்ற கதர் ஸ்தாபனங்கள்

அடக்கம் - 4-இல் மற்ற கதர் ஸ்தாபனங்கள் எவ்வாறு பாதிக்கப் பட்டிருக்கின்றன என்பது சுருக்கமாகக் குறிப்பிடப் பட்டிருக்கிறது.

## 5. விற்பனை வரிச் சட்டம்

விற்பனை வரிச் சட்டம் 1941 ஜூலை 1-ஆம் தேதி நிறைவேறியது என்று அறிகிறேன். அந்தச் சட்டத்திலிருந்து கைத்தறித் துணிகளுக்கு விலக்கு அளிக்கப்பட்டது. ஆனால் அதில், 1944 மார்ச்சு 30-ஆம் தேதி ஒரு திருத்தம் கொண்டு வந்து நிறைவேற்றினர். பின்னர் ஒரு ரூபாய்க்கு ஒரு பைசாவாக இருந்த விற்பனை வரி, 2 பைசாவாக உயர்த்தப்பட்டது. மீண்டும் 1945 ஜூன் 25-இல் அது கவர்னரின் அவசரச் சட்டத்தின் கீழ் மூன்று பைசாவாக உயர்த்தப்பட்டது. முதலில் விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருந்த கைத்தறித் துணிகளுக்கு மீண்டும் வரி விதித்தனர். ஆனால் முறையே ரூ. 10, ரூ. 15, ரூ. 18 விலை மதிப்புள்ள வேஷ்டி, புடவை, லுங்கி முதலியவற்றிற்கு அச்சட்டத்திலிருந்து எப்போது விலக்கு அளித்தார்கள் என்பது தெளிவாகத் தெரியவில்லை.

நான் கூற விரும்புவது என்னவெனில், கதருக்கு அதாவது கையால் நூற்று, கையால் நெய்த துணிகளுக்கும் அல்லது கையால் நூற்ற நூலுக்கும் எல்லா வரிகளிலிருந்தும் விலக்கு அளிக்க வேண்டும் என்பதே. நியாயமாக, மில் நூலிலிருந்து நெய்யப்பட்டதாக இருப்பினும் கை நெசவுத் துணிகளுக்கு வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும். ஏனெனில், அவ்வரியினால் கைநெசவாளர்கள் பாதிக்கப்பட்டுள்ளனர். எனவே, வேஷ்டி, புடவை, லுங்கி ஆகியவற்றிற்கு விலக்கு அளிப்பதால் யாதொரு உதவியும் இல்லை. கதருக்கு விதிக்கப்படும் வரியிலிருந்து அரசாங்

கத்திற்குக் கிடைக்கும் வருமானம் மிகவும் சொற்பமேயாகும். கை நெசவுத் துணிகளுக்கு விதிக்கப்படும் வரியிலிருந்து அரசாங் கத்துக்குக் கிடைக்கும் வருமானம் மிகவும் அதிகமில்லாவிடினும், குறைவானதன்று. ஏனெனில், கை நெசவுத் துணி உற்பத்தி அதிகமாதலால், அதிலிருந்து அரசாங்கத்திற்கு சுமாரான வரு மானம் கிடைக்கிறது. எனினும், அதனால் ஏழை நெசவாளர்கள் பாதிக்கப்படுகிறார்கள். கதருக்கு வரி விதிப்பதன் விளைவாக ஏழைகளான ஆயிரக்கணக்கான நூற்போர் கஷ்டத்திற்கு உள்ளா கிறார்கள். அந்த வரி அவர்களுக்கு தண்டனையாகிவிடுகிறது. ஏழைகளான நூற்போருக்கு அது ஒரு தண்டனையாக இருக்க வேண்டும் என்பது, சட்டத்தைத் தயாரித்தவர்களின் நோக்கம் அல்ல என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயம். இதை அர சாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவந்தால், உடனே பரிகாரம் கிடைத்துவிடும். அகில இந்திய நூற்போர் சங்கத்தைச் சேர்ந்த கதர் நிலையங்கள் யாவும் ஏழை மக்களுக்கு நன்மை பயக்கும் ஸ்தாபனங்கள் ஆகும். அவற்றை நடத்துவோர் அ. இ. நூ. சங்க ஊழியர்களாவர். அச்சங்கம் பொது ஜன நன்மைக்கான ஸ்தாபன மாதலால், அதற்கு வருமானவரி விதிக்கக் கூடாது என்று சமீபத் தில் பிரிவீ கவுன்ஸில் தனது தீர்ப்பில் குறிப்பிட்டிருக்கிறது. அந்த வரியிலிருந்து கறந்த பாலுக்கு விலக்கு அளிக்கப்பட்டிருக்கிற தெனினும், மற்ற விதமான பாலும் தயிரும் அந்த வரிக்கு உட்பட வேண்டியிருக்கின்றன. வரியில் உள்ள இந்த ஷரத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்த வரி சம்பந்தமான அசல் சட்டம் 1941 வங்காள சட்டம் என்று கூறப்படுகிறது.

## 6. பேணி

பேணி, ஜப்பானியரால் வெடிகுண்டு வீசப்பட்ட பிரதேச எல்லைக்குள் இருக்கிறது. எனவே அப்போது அரசாங்கம் 98 கிராமங்களை மக்கள் காலி செய்யும்படி கூறியது. யுத்தம் நின்ற பின், ஆறு மாதங்களில் அந்தக் கிராமங்களை கிராம வாசிகளிடம் திருப்பிக் கொடுத்துவிடுவதாக அரசாங்கம் உறுதி மொழி அளித் தது. அப்படியிருந்தும், 28 கிராமங்கள் இன்னும் அரசாங்கத்தின் வசமே இருந்து வருகின்றன. கிராமங்கள் காலி செய்யப்பட்ட போது, வியாபாரச் சரக்குகளை அப்புறப்படுத்தக் கூடாது என்று தடுத்துவிட்டனர். இதை தீர விசாரிக்க வேண்டியது அவசிய மாகும்.

இத்துடன் நான் இணைத்திருக்கும் அடக்கம்-5-இல் என்று மேலே கூறப்பட்டிருப்பதன் சம்பந்தமான விவரங்கள் அடங்கி யிருக்கின்றன.

இந்தக் கடிதத்தை நான் அவசரமாக எழுதியிருக்கிறேன். இதன் முக்கியமான நோக்கம் என்னவெனில், நீங்கள் வாசிப்ப தற்கு எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சுருக்கமாக இருக்க வேண்டும் என்பதேயாகும். அஸ்ஸாமிலிருந்து 14-ஆம் தேதி

திரும்பி வந்துவிடலாமென நான் நம்புகிறேன். மேற்கொண்டு ஏதாவது தஸ்தாவேஜுகள் தேவையாயின், நான் திரும்பிவந்த பின் தங்களுக்கு அனுப்புகிறேன். நேற்று மாலை நான் உங்களிடம் கூறியதுபோல், அதில் கூறப்பட்டுள்ளவை உண்மையா என்பதை நான் கூற முடியாது. ஆனால், அவை உண்மை என்றே எனது சக ஊழியர்கள் கூறியுள்ளனர். அவை உண்மை அல்லவெனில் தவறை நான் திருத்திக் கொள்வேன். ஆனால், அவை உண்மையென்று தாங்கள் கண்டால், அவற்றைப் பற்றி உடனே விசாரணை செய்ய வேண்டுமென நான் யோசனை கூறுகிறேன். அதிகக் கஷ்டமின்றியும், செலவு இல்லாமலும் பரிகாரம் செய்யக்கூடிய விஷயங்களை மாத்திரமே நான் குறிப்பிட்டிருக்கிறேன். எனினும் அவைதான் மிகவும் அவசரமாகத் தேவையை நாடும் ஏழைகளுக்குப் பரிகாரமாக இருக்கும்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 178

அரசாங்க மாளிகை,
கல்கத்தா, *15-1-1946*

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

கைத்தறித் துணி, கையால் நூற்ற நூல் ஆகியவற்றின் மீதுள்ள விற்பனை வரி விஷயம் பற்றியே இக்கடிதம் எழுதுகிறேன். என்னுடன் பேசியபோது இதைப் பற்றி நீங்கள் குறிப்பிட்டீர்கள், கடிதமும் எழுதினீர்கள்.

எனது அதிகாரிகள் இவ்விஷயத்தை பூரணமாக விசாரிக்கும் படி செய்தேன். இதன் சம்பந்தமான பல்வேறு அம்சங்களை யொட்டியும் அவர்கள் அறிக்கைகள் அனுப்பியுள்ளனர். அந்த அறிக்கைகளின் சாரத்தைக் கீழே கொடுத்திருக்கிறேன்:

கையால் நூற்கப்பட்டதாயினும், மில்லில் நூற்கப்பட்டதாயினும், எவ்வித நூலுக்கும் விற்பனை வரி எதுவும் இல்லை. கைத்தறி நெசவுத் துணி சம்பந்தமாக, தற்போதைய நிலைமை இதுதான். ஜோடி விலை ரூ. *10*-க்கு மேற்படாத கைத்தறி நெசவு வேஷ்டிகளுக்கும், ஜோடி விலை ரூ. *15*-க்கு மேற்படாத கைத்தறி நெசவுப் புடவைகள் எதற்கும், ஒன்று விலை ரூ. *4*-க்கு மேற்படாத எந்த அளவு லுங்கிக்கும் விற்பனை வரி இல்லை.

*1944* மார்ச் *29*-ஆம் தேதி மேற்கண்ட விலை வரம்புகள் அறிவிக்கப்பட்டன. அதன் பின் ஒவ்வொரு பொருளின் விலையும் மிகவும் உயர்ந்துவிட்டது. எனவே, இந்த விலை வரம்புகளை மாற்ற வேண்டியது அவசியம் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். இவ் விஷயத்தை உடனே பரிசீலனை செய்ய நான் ஏற்பாடு செய்

கிறேன். விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட வேண்டிய துணிகளின் விலை வரம்பை நாங்கள் உயர்த்துவோம். உங்களுடைய உயர்ந்த நோக்கத்தை நான் அறிவேன். அந்த நோக்கம் நிறைவேறுவதற்கு ஏற்றவாறு, விலை வரம்பு உயர்த்தப்படும்.

கையால் நூற்ற நூலிலிருந்தோ அல்லது மில் நூலிலிருந்தோ கையால் நெய்யப்படும் துணிகளுக்கெல்லாம் இந்த விலக்குகள் உண்டு என்பதை, நான் கூறியிருப்பதிலிருந்து நீங்கள் உணர்ந்து கொள்ளலாம்.

தங்கள் உண்மையுள்ள,

ஆர். ஜி. கேஸி.

# 179

# கதருக்கு வரி விலக்கு

அரசாங்க மாளிகை

கல்கத்தா, 30-1-1946

என் அன்புள்ள ஸ்ரீ காந்தி,

வங்காளத்தில் விற்பனை வரி சம்பந்தமாக சென்ற 15-ஆம் தேதி நான் அனுப்பிய கடிதத்தைத் தொடர்ந்து இதை எழுதுகிறேன். இவ்விஷயமாக நாம் மேற்கொண்டு விவாதித்தது உங்களுக்கு நினைவிருக்கலாம். இவ் விஷயத்தை நான் தீர ஆலோசித்து எனது அதிகாரிகளுடன் அலசி ஆராய்ந்தேன். நான் உங்களுடன் விவாதித்ததிலிருந்து இவ்விஷயம் உங்கள் உள்ளத்தை ஆட்கொண்டிருக்கிறது என்பதை உணர்ந்ததே அதற்குக் காரணம். அவ்விதம் ஆராய்ந்ததன் பலனாக, வரியிலிருந்து விலக்கு அளிப்பதற்காக நிர்ணயித்துள்ள விலையின் வரம்பை அதிகப்படுத்துவதென்று தீர்மானித்துள்ளேன். அதாவது வேஷ்டிகளின் விலை வரம்பு ரூ. 10-லிருந்து ரூ. 20 ஆகவும், லுங்கிகளின் விலை வரம்பு ரூ. 4-லிருந்து ரூ. 8-ஆகவும், புடவைகளின் விலை வரம்பு ரூ. 15-லிருந்து ரூ. 25-ஆகவும் உயர்த்தப்படும். அதாவது இந்த விலைக்குக் குறைந்தவைகளுக்கு விற்பனை வரி இல்லை. கையால் நெசவு செய்த துணிகள், மில் துணிகள், கையால் நூற்கப்பட்ட நூலிலிருந்தும் மில் நூலிலிருந்தும் நெசவு செய்த துணிகள், எல்லாவற்றிற்கும் இந்த விலக்கு உண்டு. அவ்விரண்டிற்கும் வேற்றுமை பாராட்டி வரி விதிப்பது, வரி வசூல் நிர்வாகம் சம்பந்தப்பட்ட வரையில் சாத்தியமானதல்ல.

கதர் சம்பந்தப்பட்ட வரையில் இந்த வரி விலக்கின் பலன் என்ன வெனில், தான் உடுத்திக் கொள்ள வாங்கும் ரகத் துணிக்கு ஏழை வரி கொடுக்க வேண்டியிராது. விலக்கு அளிக்கும் முறை 1944 ஏப்ரலில் மாற்றப்பட்டதெனினும், மலிவான கதருக்கு

எப்போதுமே விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டு வந்திருக்கிறது. விலக்குகள் அளிக்கும் விஷயமாக அரசாங்கத்தின் முக்கிய நோக்கம், துணி வாங்கும் ஏழைகளுக்குப் பரிகாரம் அளிப்பதேயன்றி உற்பத்தியாளருக்கு அல்ல. உற்பத்தியாளர் எப்போதுமே தமக்கு விதிக்கப்படும் வரியை ஏழைகள் மீது சுமத்திவிடுகிறார்.

கையினால் நூற்றுக் கையினால் நெசவு செய்த துணி என்ன விலையாயினும், அதற்கு வரி விலக்கு அளிக்கும் விஷயமாக தீர ஆலோசித்தேன். ஆனால் அவ்விதம் விலக்கு அளித்தால், எந்தக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு விலக்கு அளிக்கப்படுகிறதோ அந்தக் கொள்கை பயனற்றதாகிவிடும் என்ற முடிவுக்கு வந்துள்ளேன். துணி வாங்கும் ஏழைகளுக்குப் பரிகாரம் அளிக்க வேண்டும் என்பதே அக்கொள்கையாகும். மிகவும் விலையுயர்ந்த கதர் வாங்க யாராவது ஆசைப்பட்டால், அதற்கு அவர் ஏன் வரி கொடுக்கக்கூடாது என்பதற்கு யாதொரு காரணமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அத்தகைய சந்தர்ப்பங்களில் துணி வாங்குவோர்தான் வரி செலுத்த வேண்டியவராக இருக்கிறார்.

பால் ஏடைக்கும், ஏடை எடுக்கப்பட்ட பாலுக்கும் தற்போதைய வரி விலக்கு உண்டு என்று வர்த்தக வரி கமிஷனர் தெளிவாகக் கூறுகிறார். எனவே, அவற்றிற்கு வரி விதிக்கப்படவில்லை. இதற்கு மாறாக நிகழ்ந்திருப்பதைத் தாங்கள் அறிந்திருந்தால், அதை ரத்து செய்யும்படி உத்தரவிட நான் மகிழ்ச்சியுடையவனாக இருப்பேன். எனினும், தற்போது அத்தகைய உத்தரவு பிறப்பிக்க வேண்டிய அவசியமில்லை என்று எனது ஆலோசகர்கள் கூறுகின்றனர்.

ஏழைக்கு உதவியாக இருக்க வேண்டும் என்ற நோக்கத்துடனேயே பாலுக்கு விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. தயிரைப் பற்றியும் நீங்கள் என்னிடம் குறிப்பிட்டீர்கள். அது உண்மையில் ஏழைகள் வாங்கும் பொருள் அல்ல. கறவை மாடுகள் வைத்துக் கொண்டிருப்போரைத் தவிர மற்றவர்களுக்கு அது ஒரு போகப் பொருளாகவே இருக்கிறது. இதன் காரணமாகவும், மற்றும் அதற்கு விலக்கு அளிப்பதில் உள்ள நிர்வாக சம்பந்தமான கஷ்டங்கள் காரணமாகவும், தயிருக்கு விலக்கு அளிக்க வேண்டியது அவசியம் என்று நான் நினைக்கவில்லை.

தங்கள் உண்மையுள்ள,

ஆர். ஜி. கேஸி

# 180
# கவர்னரின் விளக்கம்

*அரசாங்க மாளிகை,*
*கல்கத்தா, 18-1-1946*

*எனது அன்புள்ள காந்தி,*

*காண்டை, தாம்லுக் உப பிரிவுகளில் புயல் காற்று அடித்த பின் உவர்ப்பு நீராகிவிட்ட ஏராளமான குளங்களையும் பற்றி நான் விசாரிக்கும்படி செய்தேன். உவர்ப்பு நீரை வெளியேற்றி விட்டு, மழைக் காலத்தில் அவற்றில் நல்ல தண்ணீரைப் பாய்ச்சும் விஷயமாக ஏதோ சிறிதளவு வேலைகள் நடந்துள்ளன. என்றாலும், இன்னும் செய்ய வேண்டிய எத்தனையோ வேலைகள் பாக்கி இருக்கின்றன என்பது தெளிவாகும். அந்த இரு உப பிரிவுகளிலும் இதுவரை சுமார் 2000 குளங்களில் அவ்வித வேலைகள் நடந்திருக்கின்றன. மேலே நான் கூறியதுபோல் இன்னும் எத்தனையோ குளங்களில் அத்தகைய வேலைகள் நடை பெற வேண்டியிருக்கின்றன. இந்த வேலைகள் துரிதமாக நடை பெறும்படி நான் பார்த்துக் கொள்கிறேன்.*

*காண்டை, தாம்லுக் உப பிரிவுகளில் குழாய்க் கிணறுகள் தோண்டும் விஷயமாக நிலைமை மேலே குறிப்பிட்டது போல் அவ்வளவு மோசமாக இல்லை. அதன் சம்பந்தமாக சில வேலைகள் நடந்துள்ளன. இப்போது அதற்கான சாதனங்கள் எளிதில் கிடைப்பதால், அதையொட்டி இன்னும் அதிக வேலைகள் நடை பெற முடியும். எனவே, அந்த வேலைகளும் நடைபெறும்படி நான் பார்த்துக்கொள்கிறேன். குறிப்பாக, காண்டை உப பிரிவில் குழாய்க் கிணறு தோண்டுவது கஷ்டமான வேலையாக இருக் கின்றது. அங்குள்ள பூமியின் இயல்பே அதற்குக் காரணம். தவிர, நல்ல தண்ணீர் கிடைக்க அங்கே மிக மிக ஆழமாகத் தோண்ட வேண்டியிருக்கிறது. ஸ்ரீ லீயின் கடிதத்தை இத் துடன் நான் திருப்பி அனுப்பியுள்ளேன்.*

*கோமில்லாவில் உள்ள அபய ஆசிரமத்தையும், பங்குரா, கல்கத்தா முதலிய இடங்களிலுள்ள கதர் ஸ்தாபனங்களையும் பற்றி நீங்கள் குறிப்பிட்டிருந்தீர்கள். அவற்றைப் பற்றிய அறிக்கைகளை அனுப்பும்படி சம்பந்தப்பட்ட ஜில்லா மாஜிஸ்தி ரேட்டுகளைக் கேட்டிருக்கிறேன். கிடைத்தவுடன் அவை ஜாக்கி ரதையாகப் பரிசீலனை செய்யப்படும்.*

*பேனி பிரதேசத்திலிருந்து (நோவாகாலி ஜில்லா) கிராம வாசிகளைக் கட்டாயப்படுத்தி வெளியேற்றியதன் சம்பந்தமாக அறிக்கை அனுப்பும்படி கமிஷனரைக் கேட்டிருக்கிறேன். அதைப்பற்றிய முழு விவரங்களும் கிடைத்ததும், அவற்றை நன்கு கவனிக்கிறேன்.*

*கைப்பற்றிய சாமான்களைத் திருப்பிக் கொடுக்கும் விஷய மாக ஸ்ரீதர் சந்திர கோஸ்வாமி அனுப்பிய விண்ணப்பத்தைப்*

பற்றிய விவரங்களை அறிவிக்கும்படி ஜில்லா மாஜிஸ்திரேட்டைக் கேட்டிருக்கிறேன். முழு விவரங்கள் கிடைத்ததும் அவ்விஷயமும் கவனிக்கப்படும்.

தங்கள் உண்மையுள்ள,

ஆர். ஜி. கேஸி

# 181

# "சொர்க்கப் பிறவிகள்"

*சேவா கிராமம்,*
*வழி : வர்தா, 8-2-1946*

மே. த. வங்காள கவர்னருக்கு,
கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

தங்களுடைய மூன்று கடிதங்களும் கிடைத்தன.

இப்போது நீங்கள் பதவியையும், இந்தியாவையும் விட்டுச் செல்ல விருப்பதால், நமக்குள் கருத்து வேற்றுமை ஏற்பட்டுள்ள பல விஷயங்களையொட்டியும் நான் இனிமேல் உங்களைத் தொந்தரவு செய்யமாட்டேன். உப்பு, கதர் சம்பந்தமாக உங்களுடைய கருத்தை மாற்ற என்னால் இயலாமற்போனதைக் குறித்து, நான் எனது வருத்தத்தைத் தெரிவிக்காமலிருக்க முடியவில்லை. பாலைப்பற்றிய நிலைமை விசித்திரமாக இருக்கிறது. இதன் சம்பந்தமாக உங்கள் அபிப்பிராயத்தை மாற்றுவதென்ற பேச்சிற்கே இடமில்லை. இது ஓர் உதாரணமாகும். அதிகாரிகளின் ஆலோசனைக்கு இணங்க நீங்கள் கொடுத்துள்ள பதில், இந்தியாவில் உள்ள அதிகார வர்க்கத்தின் மன நிலையையே காட்டுகிறது. அதாவது, வெட்ட வெளிச்சமான தவறுகளைக்கூட ஒப்புக்கொள்ள அதிகார வர்க்கம் மறுப்பதையே குறிப்பிடுகிறேன். அதனால்தான், சிவில் சர்விஸ் அதிகாரிகளை "சொர்க்கப் பிறவிகள்" என்று நாங்கள் குறிப்பிடுகிறோம். காலஞ்சென்ற மாண்டேகு* அவர்களை, "மரக்கட்டை போன்றவர்கள்" என்று குறிப்பிட்டார்.

உத்தியோகத் தொல்லைகளிலிருந்து நீங்கள் விடுதலை அடைந்தபின், நீங்களும், ஸ்ரீமதி கேஸியும், நானும் எப்போதாவது சந்தித்துப் பேச நேர்ந்தால், வங்காளத்தில் நிகழ்ந்த பல கோர நிகழ்ச்சிகளையும் குறித்து நாம் மனமாரச் சிரிப்போம். அப்போது இவையெல்லாம் கடந்த கால நிகழ்ச்சிகளாகிவிடுமென நம்புவோமாக. ஆனால் அத்தகைய கோர நிகழ்ச்சிகளுக்கு

---

* ஸ்ரீ மாண்டேகு 1917-லிருந்து சில ஆண்டுகள் வரையில் இந்தியா மந்திரியாக இருந்தார்.

அதிகாரிகளின் நகைக்கத்தக்க தவறுகளே மூல காரணமாக இருக்கும்.

கைதிகள் விடுதலை சம்பந்தமாக நீங்கள் கூறியிருப்பதை நான் புரிந்து கொண்டுள்ளேன்.

லட்சக்கணக்கான மக்களுக்கு நன்மை பயக்கும் விதத்தில் செஞ்சிலுவைச் சங்க அலுவல்கள் உருவாகி வருமென நம்பு கிறேன், "மனிதனால் சிருஷ்டிக்கப்பட்ட பஞ்சத்தைப் * பற்றி நான் விடுத்த அறிக்கையை உங்களுடைய தகவலுக்காக இத் துடன் இணைத்திருக்கிறேன். நம்முடைய சம்பாஷணையை சரியாகக் குறிப்பிட்டிருக்கிறேன் என்றே நம்புகிறேன்.

கம்பளங்கள் நெய்வதற்காக ராஜகுமாரிக்கு நீங்கள் அன் புடன் ஆஸ்திரேலிய கம்பளி நூல் அனுப்பி யிருப்பதற்கு நன்றி. நெசவாளர்களிடமிருந்து அவை வந்ததும் எப்படி இருக்கின்றன என்பதை உங்களுக்கு அறிவிக்கிறேன். திபேத் கம்பளியைக் காட்டிலும் ஆஸ்திரேலியக் கம்பளியினால் சிறந்த கம்பளங்கள் நெய்யலாமா என்பதையும் அப்போது நான் உங்களுக்குக் கூறு கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி.

# 182

## கவர்னரின் சமாதானம்

அரசாங்க மாளிகை,
கல்கத்தா, 13-2-1946

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

18-1-1946-இல் நான் எழுதிய கடிதம் உங்களுக்கு நினைவிருக் கலாம். நீங்கள் ஜனவரி 8-இல் எழுதிய கடிதத்தில் குறிப்பிட் டிருந்த பல விஷயங்களை யொட்டியும் விசாரிப்பதாக நான் எனது

* "1943-இல் வங்காளத்தில் ஏற்பட்ட பஞ்சம் மனிதனால் சிருஷ்டிக்கப்பட்ட தல்ல" என்று காந்திஜி வங்காள கவர்னரிடம் ஒப்புக் கொண்டதாக, பத்திரிகைகளில் ஒரு செய்தி வெளியாகியிருந்தது. அவ்விதம் காந்திஜி ஒப்புக் கொண்டது உண்மையா என்று ஒரு பத்திரிகைப் பிரதிநிதி கேட்டபோது காந்திஜி கூறியதாவது: "நான் அவ்விதம் ஒரு போதும் ஒப்புக் கொண்டதில்லை. '1943-இல் வங்காளத்தில் ஏற்பட்ட பஞ்சம் மனிதனால் உண்டு பண்ணப்பட்டதே என்று சில வட்டாரங்களில் கூறப்படு கிறது. பஞ்சத்திற்கு நிச்சயமான காரணம் மோசமான நிர்வாக ஊழலேயாகும். மற்ற விஷயங்களைப்போல் ராணுவ முக்கியத்துவம் என்ற பெயரால் பஞ்சமும் சிருஷ்டிக் கப்பட்டது' என்பதே எனது நம்பிக்கை. நிச்சயமாக அது கடவுளின் செயல் அல்ல."

கடிதத்தில் வாக்களித்திருந்தேன். எனவே, அவை ஒவ்வொன்றையும் பற்றிய நிலைமையை நான் கீழே கொடுத்துள்ளேன் :

## 1. பாபு ஸ்ரீதர் சந்திர கோஸ்வாமியின் விண்ணப்பம்

ஒரு ஜப்தி உத்தரவை நிறைவேற்றுவதற்காகவே பிரஸ்தாப சாமான்கள் கைப்பற்றப்பட்டன. *1943*-இல் அவை பகிரங்க ஏலத்தில் விற்கப்பட்டுவிட்டன. விற்பனைத் தொகை கஜானாவில் சேர்த்துக்கொள்ளப்பட்டுளது. ஏலத் தேதிக்கு முன் அச் சாமான்களுக்கு உரிமை கோரி யாரும் விண்ணப்பம் செய்து கொள்ளவில்லை என்று தெரிகிறது. விற்பனை நடந்து வெகு காலத்திற்குப் பிறகு, பாபு ஸ்ரீதர் சந்திர கோஸ்வாமி உரிமை விண்ணப்பம் ஒன்றை அனுப்பினார். அதன்மீது, சாமான்களை அவரிடம் சேர்ப்பித்துவிட வேண்டும் என்று உத்தரவிடப்பட்டது. சாமான்கள் பொது ஏலத்தில் விற்கப்பட்டுவிட்டதால், கஜானாவில் சேர்க்கப்பட்டிருக்கும் விற்பனைத் தொகையை வாங்கிக் கொள்ளும்படி மனுதாரரைக் கேட்டுக் கொண்டார்கள். ஜப்தி செய்ததும், சாமான்களை விற்றதும் சட்ட விரோதமானது என்றும், மிகவும் குறைந்த தொகையான ரூ. *32-4-0*க்கு அவை விற்கப்பட்டுள்ளன என்றும் மனுதாரர் கூறி, அந்தத் தொகையை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டார்.

நீண்ட காலத்துக்கு முன் ஏலத்தில் விற்கப்பட்ட சாமான்களைத் திருப்பிக் கொடுப்பது சாத்தியமில்லாத காரியம் என்பதை நீங்கள் அறிந்துகொள்ளலாம். எனினும், நியாயமான நஷ்ட ஈடு கொடுக்கும்படி ஜில்லா மாஜிஸ்திரேட்டுக்கு மனுதார் விண்ணப்பம் செய்துகொள்வாராயின், அவரது மனு ஆலோசிக்கப்படும்.

## 2. அபய ஆசிரமம், கோமில்லா

கோமில்லாவைச் சேர்ந்த அபய ஆசிரமங்கள் சட்ட விரோதமானவை என்று அரசாங்கம் பிரகடனம் செய்து, *1942*—இல் அந்தக் கட்டிடங்களை ஆக்கிரமித்துக் கொண்டது. எனவே, *1942* கொந்தளிப்புகளை யொட்டி காங்கிரஸ் கமிட்டிகளுக்கும், மற்றச் சங்கங்களுக்கும் விதிக்கப்பட்டிருந்த தடைகளை நீக்கிய போது, மேற்கண்ட ஸ்தாபனங்களுக்கு விதிக்கப்பட்ட தடைகளை ரத்து செய்ய வேண்டிய பிரச்னை எழவில்லை. எனவே, அந்த ஸ்தாபனங்களுக்கு விதிக்கப்பட்ட தடைகள் இன்னும் அமலில் இருந்துவருகின்றன. எனினும், அவற்றை நீக்கும் விஷயமாக நான் ஆலோசித்துவருகிறேன். தடைகள் ரத்தாகும்போது, சொத்துக்களுக்கு ஏதாவது சேதம் ஏற்பட்டிருந்தால் அவற்றிற்கு நஷ்ட ஈடு கொடுக்கும் விஷயம் ஆலோசிக்கப்படும்.

## 3. இதர கதர் ஸ்தாபனங்கள்

**பரகாந்தா :** இங்கே கைப்பற்றப்பட்ட சாமான்கள், இந்திய கிரிமினல் சட்டம் 17-ஆவது பிரிவின்படி ஜில்லா மாஜிஸ்திரேட்டின் உத்தரவுக்கிணங்க அரசாங்கத்திஞல் பறிமுதல் செய்யப்பட்டன. எனவே, அவை சம்பந்தப்பட்டவரையில் சட்டப்படி உரிமை கோர முடியாது. அப்படியிருந்தும், புயல் நிவாரணத்திற்காக விநியோகம் செய்யப்பட்ட சில துணிகளைத் தவிர மற்றவை யெல்லாம், சென்ற வருடம் காங்கிரஸ் ஸ்தாபனங்களின் மீதுள்ள தடைகள் ரத்து செய்யப்பட்டபோது. திருப்பிக் கொடுக்கப்பட்டுவிட்டன. நஷ்ட ஈடு கோரி சங்கத்தின் வக்கீல்கள் 'நோட்டீஸ்' அனுப்பியுள்ளனர். சட்ட விதிகளின்படி அது முடிவு செய்யப்படும். அதன் கட்டிடம் இன்னும் திருப்பிக் கொடுக்கப்படவில்லை. அங்கே அரசாங்கக் காரியாலயம் ஒன்று இருப்பதால், அதைத் திருப்பிக் கொடுக்க இயலவில்லை. எனினும், கூடிய விரைவில் வேறு இடம் பார்த்துக்கொண்டு அந்தக் கட்டிடத்தை விட்டுவிடும்படி சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு நான் உத்தரவிட்டிருக்கிறேன்.

**விஷ்ணுபூர் :** கட்டிடத்தைத் திருப்பிக் கொடுத்துவிடும்படி உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. கட்டிடத்திற்கு ஏதாவது சேதம் காரணமாக நஷ்ட ஈடுகோரிஞல், அது கவனிக்கப்படும்.

**சோனமுகி :** அகில இந்திய நூற்போர் சங்கம் விண்ணப்பம் செய்து கொண்டதன்மீது, அங்கிருந்து கைப்பற்றப்பட்ட சாமான்கள் திருப்பிக் கொடுக்கப்பட்டுவிட்டன. சேதமடைந்த சாமான்களுக்காக மதிப்பாக ரூ. 2500 அனுமதிக்கப்பட்டது. 1942-இல் கைப்பற்றப்பட்ட போது இருந்த விலை நிலவரப்படியே ஈடுத் தொகை கணக்கிடப்பட்டது. சிற்சில இடங்களில் துணிகளில் இணைக்கப்பட்டிருந்த விலைக் குறிப்புகளின்படி தொகை கணக்கிடப்பட்டது. பின்னர், சங்க வக்கீல்கள் மொத்தமாக ரூ. 36,150 கொடுக்க வேண்டுமென்று கோரிஞர்கள். இந்தக் கோரிக்கை இப்போது பரிசீலனையில் இருந்துவருகிறது. இதன் சம்பந்தமான மற்ற விவரங்கள் எனக்குத் தெரியாது.

**பவானிபூர் :** இங்கே சாமான்கள் கைப்பற்றப்பட்ட பின், உரிமையாளர் விண்ணப்பம் செய்துகொள்ளலாம் என்று ஜில்லா மாஜிஸ்திரேட் அறிக்கை வெளியிட்டார். குறிப்பிட்ட கால கெடுவிற்குள் யாரும் விண்ணப்பம் செய்துகொள்ளாததால், சாமான்களை ஏலத்தில் விற்றுவிடுமாறு உத்தரவிடப்பட்டது. அந்தக் கால கெடுவிற்குள் ஜில்லா மாஜிஸ்திரேட்டுக்கு விண்ணப்பம் அனுப்பியதாக அ. இ. நூ. சங்க வக்கீல்கள் கூறுகின்றனர். இந்த விஷயம் இப்போது விசாரிக்கப்பட்டு வருகிறது.

**பாங்கி இருப்பு :** வங்காள சென்ட்ரல் பாங்கியில் இருந்த அ. இ. நூ. சங்கத்தின் காலேஜ் தெரு கிளை ஸ்தாபனத்துக்குச் சொந்தமான தொகையையும், நாடியாவில் வங்காள பாங்கியில்

இருந்த ரூ. 74-ஐயும் பறிமுதல் செய்துவிடும்படி உத்தரவிடப் பட்டது. இந்தத் தொகைகளைத் திருப்பிக் கொடுக்க முடியுமா என்பது எனக்குச் சந்தேகமாகவே இருக்கிறது. இருந்தாலும் அவ்விஷயமாக என்ன செய்ய முடியும் என்பதை நான் பரிசீலனை செய்துவருகிறேன். மிதுனபுரி, பீர்பூம் ஜில்லாக்களில் உள்ள சில பாங்கிகளில் சங்கத்திற்குச் சொந்தமான சிறிய தொகைகள் இருந்தன என்று தெரிகிறது. இவ்விஷயமாக அறிக்கைகள் அனுப்பும்படி ஜில்லா அதிகாரிகளைக் கேட்டிருக்கிறேன்.

## 4. பேனி

எங்களுடைய அதிகாரத்திற்கு அப்பாற்பட்ட காரணங் களால், பேனி உப பிரிவைச் சேர்ந்த மக்கள் மிகவும் துன்பத் திற்கு உள்ளாகியிருக்கிறார்கள் என்பதை நான் ஒப்புக்கொள் கிறேன். அரசாங்கம் தங்களுடைய உபயோகத்திற்காக எடுத்துக் கொண்ட கிராமங்கள் சம்பந்தப்பட்டவரையில், தற்போதைய நிலைமை இதுதான். 40 கிராமங்களைச் சேர்ந்த பகுதிகளை அரசாங்கம் இன்னும் திருப்பிக் கொடுக்கவில்லை. அவற்றில் 8 கிராமங்களை அரசாங்கம் தங்களுடைய உபயோகத்திற்கு வைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஏனெனில் அவை, விமான நிலையங்களாகவும், வேறு உபயோகத்திற்காகவும் மாற் றப்பட்டிருக்கின்றன. (அந்த இடங்களில் மக்கள் வாழ்வதும், விவசாயத்தில் ஈடுபடுவதும் முடியாத காரியம்). 14 கிராமங் களில் செங்கல்கள் முதலியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. எனவே அப்பிரதேசங்களைத் திருப்பிக் கொடுக்குமுன், செங் கல்களையெல்லாம் அகற்ற வேண்டிய பிரச்னை இருக்கிறது. அவற்றை அகற்றுவதற்காக 'டெண்டர்'கள் அனுப்பும்படி ராணுவ அதிகாரிகள் கண்டிராக்டர்களைக் கேட்டிருக்கிறார்கள். யுத்தம் சட்ட பூர்வமாக ஏப்ரல் மாதம் முதல் தேதி முடிவடை கிறது என்று நம்புகிறேன். கிராமவாசிகள் அவரவருடைய கிராமங்களுக்கும் வீடுவாசல்களுக்கும் திரும்பி வந்து சேரும்படி தூண்ட எல்லா முயற்சிகளும் செய்ய வேண்டும் என்பதை நான் முற்றிலும் ஒப்புக்கொள்கிறேன். பருவ காலத்துக்கு முன் விவசாயம் செய்வதற்கு உற்ற காலத்தில், சாத்தியமான வரையில் எல்லா நிலங்களையும் திருப்பிக் கொடுத்துவிட நாங்கள் எல்லா விதத்திலும் முயற்சி செய்து வருகிறோம்.

அரசாங்கம் ஆர்ஜிதம் செய்துகொண்ட பிரதேசங்களிலிருந்து மக்கள் தங்களுக்குச் சொந்தமான ஜங்கம சாமான்கள், வியா பாரச் சரக்குகள் முதலியவற்றை அப்புறப்படுத்துவதைத் தடுப்ப தென்ற பேச்சிற்கே இடமில்லை. அதற்கு மாறாக, அரசாங்கம் அந்தப் பிரதேசங்களை ஆர்ஜிதம் செய்து கொண்டபோது, மக்கள் தங்களுக்குச் சொந்தமான சாமான்களையெல்லாம் அப் புறப்படுத்திக் கொண்டு செல்லும்படி அவர்களை அதிகாரிகள் கேட்டுக் கொண்டார்கள். சாமான்களை அப்புறப்படுத்துவதற்கு

உதவியாக அவர்களுக்கு வண்டிகளும் மோட்டார்களும் கொடுக்கப்பட்டன.

உங்களுடைய கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்த மற்றொரு அடக்கத்தில் விமானப் படையெடுப்புகள் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அத்தகைய புகாருக்குக் காரணம் இருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். குறிப்பான துன்பத்திற்கு உள்ளானவர்களுக்கு உடனடியாகப் பரிகாரம் அளிக்க வேண்டியது பாக்கியிருந்தால், அதைப் பரிசீலனை செய்யும்படி உள்ளூர் அதிகாரிகளை நான் கேட்டிருக்கிறேன். குறிப்பிட்ட விமானப் படையெடுப்பு நடந்த பின், உதவியின்றித் தங்களுடைய வீடுகளைப் பழுது பார்க்க முடியாத ஏழைகளுக்கு ரூ. 5000 (ரூ. 500 அல்ல) பகிர்ந்தளிக்கப்பட்டது. தீர விசாரணை செய்த பிறகே 154 நபர்களுக்கு இந்தத் தொகை பகிர்ந்து கொடுக்கப்பட்டது. விமானப் படையெடுப்பிற்குப் பிறகு வியாபாரச் சரக்குகளில் உணவுப் பொருட்களை மாத்திரம் நகரிலிருந்து அப்புறப்படுத்தக் கூடாதென்று உத்தரவு பிறப்பித்தார்கள். அப்போது நகரத்தில் இருந்தவர்களின் வாழ்வுக்குப் பாதுகாப்பு அளிக்கவே, அத்தகைய உத்தரவு பிறப்பிக்க வேண்டியது அவசியமாயிற்று.

காயமடைந்தவர்களுக்கு நஷ்ட ஈடாகவும், கொல்லப்பட்டவர்கள் அல்லது முடமானவர்களின் குடும்பத்தினருக்கு உதவியாகவும், யுத்தத்தில் காயமடைந்தவர்களுக்கு உதவி அளிக்கும் விஷயமாக இந்திய அரசாங்கம் வகுத்துள்ள திட்டத்தின்படி உதவித் தொகைகள் கொடுக்கப்பட்டன. அத் திட்டத்தின்படி நடந்து கொள்ள நாங்கள் கட்டுப்பட்டிருக்கிறோம். குறிப்பாக, வாழ்க்கைச் செலவு அதிகமாகியுள்ள தற்போதைய நிலையில், அளிக்கப்பட்டுள்ள தொகைகளின் விகிதம் குறைவு என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். அவ் விகிதத்தைத் தற்காலிகமாக உயர்த்த முடியாதா என்பது பற்றிப் பரிசீலனை செய்ய ஏற்பாடு செய்துள்ளேன். அவ்விதம் உயர்த்தப்படலாம் என்று நான் உறுதிமொழி கூற முடியாது. ஏனெனில், இது வங்காள மாகாணத்தை மாத்திரம் பொறுத்த விஷயம் அல்ல.

வீடு வாசல்களையும், நிலங்களையும் அரசாங்கம் ஆர்ஜிதம் செய்து கொண்டபின் அவ்விடங்களைக் காலிசெய்துவிட்டு வெளியேறியவர்களுக்கு, இதுவரையில் ரூ. 1½ கோடி நஷ்டஈடு கொடுக்கப்பட்டிருக்கிறதென்று அறிகிறேன். நஷ்ட ஈடுத் தொகை மொத்தத்தில் பெருந்தன்மையாகவே நிர்ணயித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. உண்மையில், நிர்ணயிக்கப்பட்ட தொகைக்கு மேல் கொடுக்கப்பட்ட இனங்களையும் கண்டு பிடித்திருக்கிறார்கள். மக்களுடைய நிலங்கள் அரசாங்கத்தின் வசம் இருந்து வரும் வரையில், ஒவ்வொரு தடவையும் கண்டு முதல் செய்ய முடியாமல் அவர்கள் இழந்த பயிர்களுக்கு நஷ்ட ஈடுத் தொகை கொடுக்கப்பட்டுவரும். மேலே நான் குறிப்பிட்டிருப்பதுபோல்,

எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு விரைவில், மக்கள் மீண்டும் அவர்களுடைய வீடுவாசல்களும் நிலங்களும் இருக்குமிடத்திற்குச் செல்லும்படி செய்ய நாங்கள் பெரு முயற்சி செய்து வருகிறோம்.

இவ்விஷயங்களையெல்லாம் கவனிக்க இன்னும் அதிக நேரம் செலவிடவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். இத்தகைய பல விஷயங்களையொட்டியும் வங்காள அரசாங்கம் கொடுமையான அல்லது தான்தோன்றித்தனமான ஒரு நிலையை மேற்கொள்ளவில்லை என்பதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன். சில விஷயங்களில் இன்னும் அதிகமாகச் செய்திருக்க முடியும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் சென்ற சில வருடங்களாக வங்காள மாகாணத்தில் உள்ள மக்கள் மாத்திரமல்ல, அரசாங்கமும் அதிக சிரமத்தை வகிக்கவேண்டியவர்களாக இருக்கிறார்கள்.

மேற்கண்ட கடிதத்தை நான் முடித்ததும், பிப்ரவரி 8-ஆம் தேதியிட்ட உங்கள் கடிதம் கிடைத்தது. அதற்காக மிகவும் நன்றி.

நீங்கள் கடிதத்தில் கூறியிருப்பது, என் மனத்தை வேதனைக்கு உள்ளாக்கியிருக்கிறது என்பதை நான் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஏனெனில், நாம் விவாதித்த பல விஷயங்களையொட்டியும் திருப்தி ஏற்படும்படி செய்ய நான் வெகுதூரம் சென்றிருக்கிறேன். நாம் பன்முறை சந்தித்துப் பேசியுள்ளோம். எனவே அதெல்லாம், உங்கள் கடிதத்தின் அத்தகைய தொனியில் முடிவடைவதை நான் விரும்பவில்லை. அதன் காரணமாக, நாம் விவாதித்த சில விஷயங்களைப்பற்றி நான் ஏற்கனவே சொன்னதையே மீண்டும் குறிப்பிடத் துணிகிறேன். ஏனெனில், அவற்றைக் குறித்து உங்கள் மனத்தில் இன்னும் சிறிது தப்பெண்ணம் இருப்பதாகத் தோன்றுகிறது.

முதலாவதாக, உப்பை எடுத்துக் கொள்வோம். உப்பு சம்பந்தமாக இந்த மாகாணத்தில் உள்ள தற்போதைய நிலையை உங்களுக்கு விவரித்துக் கூறினேன். நீங்கள் விரும்பியதும் அத்தகைய நிலைமைதான் என்றும் நம்பினேன். உப்பு நிர்வாக அதிகாரியுடன் நான் விவாதித்தபோது, தற்போது அமலில் இருந்துவரும் வழக்கத்தை அவர் முன்னரைக் காட்டிலும் அதிக விவரமாக எடுத்துக் கூறினர். நீங்கள் விரும்பிய முறை ஏற்கனவேயே நடைமுறையில் இருந்துவருவதால், அவ்விஷயத்தை மேற்கொண்டு தொடர வேண்டிய அவசியம் இல்லையென்று நான் நம்பி, உப்பு நிர்வாக அதிகாரியுடன் எனது விவாதத்தை முடித்துக் கொண்டேன்.

கதரைப் பொறுத்த மட்டில், எந்த விலைக்குக் கீழ் விற்பனை வரி விதிக்க முடியாதோ அந்த விலை மிகவும் உயர்த்தப்பட்டிருக்கிறது. இதன் பலனாக, பெரும்பாலான கதர்த் துணிகளுக்கும் (சுமார் 95 சதவிகிதம் துணிகளுக்கென நான் ஊகிக்கிறேன்) விற்பனை வரியிலிருந்து விடுதலை அளித்திருக்கிறோம்.

நான் தங்களுக்கு அளித்துள்ள பதில்கள், அதிகாரிகளின் ஆலோசனையின் மீது அளிக்கப்பட்டவை அல்ல என்பதை நான் உங்களுக்குச் சுட்டிக்காட்ட வேண்டுமென நினைக்கிறேன். நான் அதிகாரிகளைக் கலந்தாலோசித்து அவர்களுடைய ஆலோசனையைக் கேட்டுக் கொண்டேன். என்றாலும், பல விஷயங்களில் நான் அதற்கு மேலேயே வெகுதூரம் சென்றிருக்கிறேன்.

பாலைப்பற்றி நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். தயிருக்கு விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிப்பதை நானே விரும்பவில்லை என்று நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அதற்குக் காரணம் இதுதான்: இந்த மாகாணத்தைப் பொறுத்தமட்டில், ஏழைகள் தயிர் உட்கொள்வதில்லை என்று என்னிடம் அதிகாரிகள் கூறியுள்ளனர். அதே சமயத்தில், தயிருக்கு விதிக்கப்பட்டுள்ள விற்பனை வரியை நாம் ரத்து செய்வோமாயின், நாம் அத்துடன் நிற்க முடியாது; அதனுடன் தொடர்புள்ள மற்றப் பொருட்களுக்கும் விற்பனை வரியை ரத்து செய்யவேண்டிய நிர்ப்பந்தம் நமக்கு ஏற்படும். விற்பனை வரி சம்பந்தமாக, குறிப்பாக ஆஸ்திரேலியாவில் நான் மிகுந்த அனுபவம் பெற்றிருக்கிறேன். மிகவும் கண்காணிப்புடன் இராவிட்டால், விற்பனை வரிக்கு அளிக்கப்படும் விலக்குகள் எல்லையின்றிப் போய்க்கொண்டே இருக்கும். அதன் விளைவாக, அரசாங்கத்தின் வருமானம் மிகவும் பாதிக்கப்பட்டு விடும்.

1943–இல் வங்காளத்தில் ஏற்பட்ட பஞ்சம் சம்பந்தமாக, நான் ஓர் அந்தரங்கமான தகவலை உங்களுக்குக் கூறலாம். இது மனிதனால் சிருஷ்டிக்கப்பட்ட பஞ்சம் அல்ல என்று உங்களுக்குத் திருப்தி ஏற்படும்படி செய்துவிட்டதாக நான் பிரிட்டிஷ் பார்லிமெண்டு தூது கோஷ்டியினரிடம் கூறவில்லை. 1931–லிருந்து ஆண்டுதோறும் பயிர் சாகுபடியின் மொத்த டன்கள் எவ்வளவு என்பதை விளக்கிக் காட்டும் படத்தின் ஒரு நகலை அவர்களுக்குக் கொடுத்தேன். அந்த நகல் ஒன்றை உங்களுக்கும் கொடுத்தேன். இதன் சம்பந்தமாக உங்களுக்கு நான் கொடுத்த விளக்கத்தையும் அவர்களிடம் கூறினேன். அதற்கு நீங்கள் என்ன பதில் அளித்தீர்கள் என்று அவர்கள் கேட்டனர். அதற்குமேல் அவ்விஷயத்தைத் தொடரவில்லை என்று நான் கூறினேன். இதிலிருந்து, உங்களுக்கு அவ்விஷயமாகத் திருப்தி ஏற்படும்படி நான் செய்துவிட்டதாக அவர்கள் அர்த்தம் செய்து கொண்டுவிட்டார்கள். முற்றிலும் தவறான இதை அவர்கள் பகிரங்கமாகக் கூறிவிட்டார்கள் என்றும் தெரிகிறது.

ஒரு விஷயத்தை நான் மீண்டும் வற்புறுத்திக் கூறாமல் வங்காளத்தையும் உங்களையும் விட்டுச் செல்ல நான் விரும்பவில்லை. (நான் திரும்பத் திரும்பக் கூறுவது உங்களுக்கு அலுப்பாக இருக்கலாம்). அதாவது தற்போதைய அற்ப அளவில் கூட, இந்த மாகாணத்தில் உள்ள மக்களுக்கு அவசியமான குறைந்தபட்சத் தேவையைக் காட்டிலும் 27½ லட்சம் டன் குறைவாக 1942-43-இல்

நெல் சாகுபடியாகியிருக்கிறது. (குறைந்த விளைச்சல், பூச்சிகள், இயற்கை உற்பாதங்கள் முதலியவையே அதற்குக் காரணம்). சென்ற பல ஆண்டுகளில் 1942-43-ஆம் வருடத்திய விளைச்சல் தான் மிக மிகக் குறைவாகும். 1940-41-லும் விளைச்சல் குறைவே என்றாலும், அப்போது பர்மாவிலிருந்தும், தென் கிழக்கு ஆசியாவிலிருந்தும் யாதொரு தடையுமின்றி வங்காளத்துக்கு அரிசி வர முடிந்தது. 1943 பஞ்சத்திற்கு 90 சத விகிதம் எதிர்பாராத நெல் உற்பத்திக் குறைவே காரணம். இதுதான் முற்றிலும் உண்மை என்று நான் நம்புகிறேன். அந்தப் பற்றுக்குறையின் ஒரு சிறு பகுதியைத்தான் வங்காளத்திற்கு வெளியிலிருந்து தருவிப்பதன் மூலம் ஈடுசெய்ய முடிந்தது. இந்த நிலையில், 1943-இல் வங்காளத்தில் ஏற்பட்ட பஞ்சம் மனிதனால் சிருஷ்டிக்கப்பட்டதென்று ஒருவர் எப்படிக் கூறமுடியும் என்பதுதான் எனக்குத் தெரியவில்லை.

இது, வங்காளத்தில் என்னுடைய பதவி காலத்தின் கடைசி வாரமாகும். எனவே கல்கத்தாவில் இப்போது நிகழ்ந்து வரும் வருந்தத்தக்க சம்பவங்கள்,* இந்தக்கடைசி வாரத்தின் நினைவாக இருப்பது எனக்கு மகத்தான துக்கத்தைக் கொடுத்திருக்கிறது. அச் சம்பவங்கள் மனக் கசப்பையும் துவேஷத்தையும் உண்டு பண்ணுவதாக இருக்கின்றன. இந்தக் கலகங்களும், அவற்றிற்கு மூலகாரணமான வெறியைத் தூண்டுவதும் நற்சகுனமென நான் நம்ப முடியாது. அவற்றிற்குப் பொறுப்பாளிகளின் குறுகிய நோக்கம் மிகவும் வருந்தத்தக்கதாகும். எனினும் துரதிருஷ்டமான இவ் விஷயத்தை நான் விவரிக்கப் போவதில்லை. அதற்கு மாறாக உங்களுக்கு ஆரோக்கியமும் நல்ல அதிர்ஷ்டமும் ஏற்பட வேண்டுமென வாழ்த்துகிறேன். இறுதியில் எல்லாம் சீராகிவிடும்.

தங்கள் உண்மையுள்ள,

ஆர். ஜி. கேஸி

# 183

# உப்பு வரி

அரசாங்க மாளிகை,
கல்கத்தா, 15-1-1946

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உப்பு வரி சம்பந்தமாகவே இக்கடிதம் எழுதுகிறேன். இதைப் பற்றியும் நீங்கள் என்னுடன் பேசினீர்கள். உப்பு வரி அவரது அதிகார எல்லையில் (வங்காளம், அஸ்ஸாம், ஒரிஸா) எவ்விதம்

*1946 பிப்ரவரி மாதம் கல்கத்தாவில் தொடர்ந்து வேலை நிறுத்தங்களும், பலாத்காரத்துடன் கூடிய ஆர்ப்பாட்டங்களும் நிகழ்ந்தன. அவை காரணமாக அந் நகரில் மூன்று நாட்கள் வரையில் அமைதியின்றி எல்லாம் சீர்குலைந்து கிடந்தன.

வசூலிக்கப்படுகிறது என்பது பற்றி எனக்கு அறிக்கை அனுப்பும் படி இந்திய அரசாங்க உப்பு வரி அதிகாரிக்கு எழுதினேன். அவரைத் தருவித்து அவ்விஷயமாக அவருடன் நீண்ட நேரம் பேசினேன். அவருடன் பேசியதன் பலனாக கீழ்க்கண்ட விவரங்கள் தெரிய வந்தன:

அப் பிரதேசங்களில் உப்பு வரியின் "ஜீவகாருண்ய ஷரத்து"* (அல்லது காந்தி-இர்வின் உடன்படிக்கை) பெருந்தன்மையுடன் அமல் நடத்தப்பட்டு வருகிறது. அவ்விதம் அமல் நடத்தப்படுவதால், அரசாங்கத்தின் வருமானம் குறைவதன் மூலம் லட்சக்கணக்கான தொகை நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. மிதுனபுரி, குல்னா, நோவாகாலி, சிட்டகாங் முதலிய ஜில்லாக்களில் உள்ள உவர்ப்பு நிலப் பிரதேசங்கள் "ஷெட்யூல்டு பிரதேசங்கள்" என்று பிரகடனம் செய்யப்பட்டிருக்கின்றன. இந்தப்பிரதேசங்களில் உள்ள கிராமவாசிகள், தங்களுக்குத் தேவையான உப்பை, வரியோ, லைசன்சோ எதுவும் இல்லாமல் உற்பத்தி செய்து கொள்ள அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் சட்டத்தை மீறி நடந்தால், அவ்விதம் செய்யக்கூடாதென்று அத்தகைய நபர்களை எச்சரிப்பதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாது என்று எனக்கு அறிவிக்கப்படுகிறது. அதனாலேயே "பெருந்தன்மையுடன் அமல் நடத்தப்படுகிறது" என்று மேலே நான் குறிப்பிட்டிருக்கிறேன்.

உப்பு வரி நிர்வாக அதிகாரியுடன் நான் பேசியதிலிருந்து, உப்பு உற்பத்தி சம்பந்தப்பட்டவரையில் ஏழைகள் எவ்விதத்திலும் பாதிக்கப்படவில்லை என்பதில் எனக்குத் திருப்தி ஏற்பட்டிருக்கிறது.

தங்கள் உண்மையுள்ள,
**ஆர். ஜி. கேஸி**

# 184

# நேரில் விவாதிப்போம்

*மே. த. வங்காள கவர்னருக்கு,* *சோட்பூர், 16-1-1946*
*கல்கத்தா.*

*அன்புள்ள நண்பருக்கு,*

*உங்களுடைய அன்பார்ந்த இரண்டு கடிதங்களும் கிடைத்தன. 18–ஆம் தேதி மாலை 7–50 மணிக்குக் கடைசி முறையாக உங்களைக்*

---

* காந்தி–இர்வின் உடன்படிக்கையின் 20–ஆவது பாராவில் உள்ள "ஜீவகாருண்ய ஷரத்தி"ன் விவரம் பின்வருமாறு: "ஏழை மக்களுக்குப் பரிகாரம் அளிப்பதற்காக, பக்கத்திலுள்ள பிரதேசங்களில் உப்பு சேகரிக்கவோ அல்லது உற்பத்தி செய்யவோ அரசாங்கம் அனுமதி அளிக்கிறது, இப்போதே சிற்சில இடங்களில் அத்தகைய விதி அமலில் இருந்து வருகிறது. கிராமவாசிகள் உற்பத்தி செய்து கொள்ளும் உப்பை தங்களுடைய சொந்தத்திற்கு உபயோகித்துக் கொள்ளவோ அல்லது அத்தகைய கிராமங்களுக்குள் விற்கவோ செய்யலாம். ஆனால் கிராமங்களுக்கு வெளியே யாருடனும் உப்பு வியாபாரத்தில் ஈடுபடக்கூடாது."

கண்டு பேச நான் மிகவும் மகிழ்ச்சியுடையவனாக இருக்கிறேன். இது கடைசி முறையாக இருக்கக் கூடாது என்பதே எனது நம்பிக்கை.

இரண்டு பயங்கரமான நிகழ்ச்சிகளையொட்டி நீங்கள் நேர்மையான, தீவிரமான நடவடிக்கையை மேற்கொண்டதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன்.

உப்பு பிரச்னையை யொட்டி எனது நிலையை உங்களுக்குத் தெளிவாக விளக்குவதில் நான் வெற்றி பெறவில்லை. ஆனால், அவ் விஷயத்தை எழுத்து மூலம் விவாதித்து உங்களுக்கு நான் தொந்தரவு கொடுக்கக் கூடாது. சந்தர்ப்பத்திற்குத் தகுந்தாற்போல், வெள்ளிக்கிழமையன்று அவ்விஷயத்தைப் பற்றி உங்களுடன் நான் விவாதிக்க முற்படுவேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 185

# உப்பு விற்பனையும் வரியும்

*அரசாங்க மாளிகை,*
*கல்கத்தா,*
*20-1-1946*

*எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

*உப்பு விஷயமாக நான் உங்களுடன் இரு முறை விவாதித்ததும், உங்களுக்கு அவ்விஷயமாக ஜனவரி 15௳ நான் எழுதியதும் உங்களுக்கு நினைவிருக்கலாம். மீண்டும் அதைப் பற்றி எழுத நான் துணிகிறேன்.*

*வங்காளத்தில் தனி நபர்கள் செய்யும் உப்பின் அளவு 1944-45-இல் சுமார் 5 லட்சம் மணங்குகள் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. (இந்தப் புள்ளி வெறும் மதிப்பீடேயாகும். கடைசியாகக் கிடைத்துள்ள புள்ளி விவரம் இதுதான்.) வங்காளத்தில் உள்ள "ஷெட்யூல்டு பிரதேசங்களில்" அரசாங்க கண்டிராக்டர்களுக்கு தனி நபர்கள் விற்பனை செய்துள்ள உப்பின் அளவு சுமாராக 60,000 மணங்குகள் இருக்கும். மீதி (உற்பத்தியின் பெரும் பகுதி) அந்தப் பிரதேசங்களிலும், சுற்றுவட்டமுள்ள பிரதேசங்களிலும் மக்கள் சொந்தத்திற்கு உபயோகப்படுத்திக் கொண்டதாகும். அதற்கு அவர்கள் வரி கொடுக்கவில்லை.*

*ஜனவரி 15௳ நான் உங்களுக்கு எழுதிய கடிதத்தில் பின் வருமாறு கூறியிருக்கிறேன்: "1943-லிருந்து, எவ்வளவுக்கு முடியுமோ அவ்வளவுக்கு உப்பு உற்பத்தி செய்யும்படி கிராமவாசி*

களுக்கு உற்சாகம் அளித்து வந்தனர். ஆனால் தங்களுடைய சொந்தத் தேவைகளுக்கு மேல் உபரியாக இருப்பதை அவர்கள் வங்காள அரசாங்க கண்டிராக்டர்களிடம் விற்க வேண்டும் என்பது நிபந்தனையாகும்.''

இவ்விதம் என்னையறியாமலேயே நான் கூறி, தங்களுக்குத் தப்பெண்ணம் ஏற்படும்படி செய்திருக்கலாம். "அவர்களுடைய சொந்தக் கிராமங்களுக்குத் தேவையானது போக உபரியாக இருப்பதை'' என்று நான் கூறியிருக்க வேண்டும்.

இது, காந்தி-இர்வின் ஒப்பந்தத்தின் 3-ஆவது பாராவுக்கு உடன்பாடானதாகும். அது கூறுவதாவது: "கிராமங்களுக்கு வெளியே வர்த்தகம் செய்யும் நோக்கத்துடன், அவர்கள் உப்பை விற்பனை செய்யக்கூடாது.''

இப் பகுதியில் காந்தி-இர்வின் ஒப்பந்தம் நேர்மையாக, பெருந்தன்மையாகக் கூட நிர்வகிக்கப்பட்டு வருகிறது என்று இன்னும் நான் நம்புகிறேன். இதை நான் முன்பு உங்களிடம் கூறியுள்ளேன் என்று எண்ணுகிறேன்.

நாம் விவாதித்த மற்றும் பல விஷயங்களை யொட்டியும் இன்னும் விசாரணையும் ஆலோசனையும் நடந்து வருகின்றன. அவை முடிவடைந்ததும் உங்களுக்கு நான் எழுதுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**ஆர். ஜி. கேஸி**

# 186

# பாதுகாப்புக் கைதிகள்

காதி பிரதிஸ்தான்,
சோட்பூர், 16-12-1945

மே. த. வங்காள கவர்னருக்கு,

கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுடைய கைதிகளைப் பற்றிய விவரங்கள் என்னிடம் வந்து குவிந்துகொண்டிருக்கின்றன. என்னிடம் உள்ள விவரங்களின்படி, அரசியல் சீர்திருத்தத்துக்கு முன் உள்ள கைதிகளில் 25 பேர் சிறைகளில் இருக்கின்றனர். அவர்கள் யாவரும் பத்து ஆண்டுகளுக்கு மேலாகச் சிறையில் இருந்து வருகிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாகச் சிறையில் இருந்து வருகிறார்கள்.

அவர்களைத் தவிர, விசாரணை செய்யப்படாத கைதிகளும் இருக்கிறார்கள். அவர்கள், ஒருதலைப் பட்சமான ரகசிய சாட்சி

யத்தின் மீது சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். அந்தச் சாட்சியம் என்ன என்பதும் அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் யாவரும் அரசியல் கைதிகளே ஆவர்.

அவர்களிடையே இரண்டு பெண் கைதிகளும் இருக்கிறார்கள். அவர்களை ஒரு சிறையில் கூட்டில் அடைப்பது போல் அடைத்து வைத்திருக்கிறார்கள்.

அவர்கள் பயங்கரமான செயல்களில் ஈடுபடுவார்களென அஞ்சுவதற்கில்லை என்று என்னிடம் கூறப்படுகிறது. அக் கைதிகள் யாவரும் பொதுத் தொண்டில் ஆர்வம் உடையவர்களாக இருக்கலாம். எனினும், அவர்களைச் சிறையில் அடைத்து வைத்திருப்பதற்கு அதை ஒரு காரணமாகக் கூறமுடியாது.

எனவே, சிறிதும் தாமதமின்றி அவர்கள் எல்லோரையும் விடுதலை செய்ய வேண்டுமென நான் கேட்டுக்கொள்கிறேன்.

நீங்களும், நானும் நம்புவதுபோல், அரசாங்க நிர்வாக அதிகாரம் மக்களிடம் மாற்றப்படுமுன் சிறிது கண்ணியமாகவும் அனுதாபத்துடனும் நடந்துகொள்ள வேண்டும் என்றே நான் வேண்டிக் கொள்கிறேன்.

விரும்பத்தக்கதென்று கருதும்பட்சத்தில், அந்தக் கைதிகளைப் பார்த்துப் பேசுவதாக நான் கூறினேன், இன்னும் அவ்விதமே கூறுகிறேன்.

நான் 18உ சாந்திநிகேதனுக்குப் புறப்பட்டுச் செல்லுகிறேன். 20உ மாலை திரும்பி வருவேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 187

# அரசாங்கத்தின் தவறு

காதி பிரதிஸ்தான்,
சோட்பூர், 24-12-1945

மே. த. வங்காள கவர்னருக்கு,

கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

22உ நாம் சந்தித்துப் பேசியபோது, டாட்டென்ஹாம் பிரசுரத்துக்கு நான் அளித்துள்ள பதிலின் ஒரு பிரதியை உங்களுக்கு அனுப்புவதாக வாக்களித்தேன். இப்போது அதை மகிழ்ச்சியுடன் உங்களுக்கு அனுப்புகிறேன். அதை வாசிப்பதற்கும், சாத்தியமாயின் அவ்விவரத்தை ஸ்ரீமதி கேஸிக்கு அறிவிப்பதற்கும் உங்களுக்கு நேரம் இருக்குமென நம்புகிறேன்.

நாம் சந்தித்தபோது உப்பு வரியைப் பற்றி உங்களிடம் கேட்க மறந்துவிட்டேன். ஜீவ காருண்யமான இவ் விஷயத்தை நீங்கள் மறந்திருக்கமாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

நேற்று நான் சில நண்பர்களைச் சந்தித்துப் பேசியபோது, என்னிடம் அவர்கள் கேட்ட முதல் கேள்வி கைதிகளைப் பற்றியது தான். ஒரு பெண்மணியே அந்தக் கேள்வி கேட்டார். இந்தக் கைதிகளில் சிலருடைய ஆரோக்கியம் சீர்குலைந்துவிட்டது. எனவே, இவர்களை இன்னும் சிறையில் வைத்திருப்பதில் உங்களுடைய அரசாங்கம் பிடிவாதம் காட்டுமாயின், அது முற்றிலும் தவருகுமென நான் கருதுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 188

# கைதிகளைப் பார்க்க கோரிக்கை

காதி பிரதிஸ்தான்,
சோட்பூர், 5-1-1946

மே. த. வங்காள கவர்னருக்கு,
கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

நான் மிதுனபுரி ஜில்லா செல்லுவதற்கும், அங்கே தங்கியிருப்பதற்கும் வசதியாக அதிகாரிகள் ஏற்பாடுகள் செய்ததற்காக உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன்.

ஸ்ரீ எஸ். பக்ஷி என்னைப் பார்க்க விரும்புவதாக மாகாண சிறை மேலதிகாரி (சூபரிண்டெண்டெண்ட்) எனக்கு எழுதியுள்ளார். எனவே, நான் அவரைப் பார்க்கக் கடமைப்பட்டுள்ளேன். ஆனல், அஸ்ஸாமிலிருந்து நான் திரும்பிவந்த பிறகு தான் அவரைப் பார்க்க முடியும். அதேசமயத்தில், அங்கே உள்ள மற்றக் கைதிகளையும் நான் பார்க்க முடியுமா?

அடுத்த திங்கட்கிழமை நீங்கள் என்னைப் பார்க்க விரும்புவதாக ஸ்ரீ சுதீர் கோஷ் கூறுகிருர். அன்று மாலை 7-30 மணிக்கு தங்களைக் காண நான் மகிழ்ச்சியுடையவனுக இருப்பேன்.

மின்சார கம்பெனி தொழிலாளர்களுக்கு * கஷ்ட நிவாரணம் அளித்ததற்காகவும் நான் உங்களுக்கு நன்றி செலுத்தவேண்டும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

---

* கல்கத்தா மின்சார சப்ளை கம்பெனியைச் சேர்ந்த சில தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கிவிட்டார்கள். அவர்களுக்கு உதவி அளித்ததைப் பற்றியே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிருர்.

# 189

# கைதிகள் விடுதலை

அரசாங்க மாளிகை,
கல்கத்தா, 4-2-1946

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நான் உங்களுக்கு சரமாரியாகக் கடிதங்கள் எழுதுவதன் மூலம் உங்களுடைய சுமைகளை அதிகப்படுத்துவதற்காக வருந்துகிறேன். பழைய பிரச்னைகளையெல்லாம் முடித்து இங்கே காரியாலயத்தைத் துப்புரவாக வைக்க வேண்டியிருப்பதால், நாம் விவாதித்த பல விஷயங்களையும் பரிசீலனை செய்து முடித்ததும், நான் அவற்றைப் பற்றித் தங்களுக்கு எழுத வேண்டியவனாக இருக்கிறேன்.

பாதுகாப்புக் கைதிகளில் 41 பேரை ஜனவரி மாதத்தில் விடுதலை செய்ய நான் உத்தரவளித்திருக்கிறேன் என்பதைக் கூறவே இந்தக் கடிதம் எழுதுகிறேன். மேலும் சுமார் 50 பேர்கள் பிப்ரவரி மாதம் விடுதலை செய்யப்படுவார்கள். யார் யாரை விடுதலைசெய்வது பத்திரமானதாகத் தோன்றுகிறதோ அவர்களை விடுதலை செய்யும் நடவடிக்கை இனிமேல் தொடர்ந்து மேற்கொள்ளப்படும்.

அருமையான, சுத்தம் செய்யப்பட்ட 25 பவுண்ட் ஆஸ்திரேலியக் கம்பளி சில தினங்களுக்கு முன் ஆஸ்திரேலியாவிலிருந்து விமானத்தில் வந்து சேர்ந்தது. அதை ஜாக்கிரதையாகக் கட்டி நேராக ராஜகுமாரி அமிருத கௌரியின் சிம்லா விலாசத்திற்கு அனுப்பியுள்ளேன்.

வங்காளத்தில் உள்ள இந்திய செஞ்சிலுவை சங்கத்திற்காக ஆஸ்திரேலியா என் பெயருக்கு 200 பேல்கள் கம்பளி (சுமார் ஒரு லட்சம் ரூபாய் பெறுமானமுள்ளது) அனுப்பியிருக்கிறது. இவ்வளவு கம்பளிகளும் இப்போது ஆஸ்திரேலியாவுக்கும் இந்தியாவுக்கும் இடையே கடலில் வந்து கொண்டிருக்கின்றன. அவை அடக்கவிலைக்கு விற்கப்படும். சாத்தியமானவரையில், இம்மாகாணத்தில் உள்ள கையால் நூற்பவர்கள், கை நெசவாளர்களுக்கே அவை பகிர்ந்து அளிக்கப்படும். அவற்றின் மூலம் கிடைக்கும் தொகை இந்திய செஞ்சிலுவை சங்கத்திற்குப் போய்ச் சேரும். எதிர்காலத்தில் வங்காள மக்களுக்குப் பெரிதும் (1946 ஜூன் மாதத்திற்குப் பிறகு முற்றிலும்) கஷ்ட நிவாரணம் அளிக்கும் மகத்தான கடமையில் அது கவனம் செலுத்திவரும்.

இவ்விஷயமாக நேற்றிரவு நான் வானொலிமூலம் செய்த சுருக்கமான பிரசங்கத்தின் நகலை இத்துடன் அனுப்பத் துணிகிறேன்.

உங்களுக்கு நல் வாழ்த்துக்கள்.

தங்கள் உண்மையுள்ள,
ஆர். ஜி. கேஸி

## 190

# துக்ககரமான நிகழ்ச்சி

இயற்கை வைத்திய சாலை,
6, தோடிவாலா ரோடு, புனா, 10-3-1946

மே. த. சர் பிரடிரிக் பர்ரோஸ்,
வங்காள கவர்னர்,
கல்கத்தா.

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுக்கு முன் பதவியில் இருந்த ஸ்ரீ கேஸி உங்களுக்காக சில பிரச்னைகளை விட்டுச்சென்றுள்ளார். மீதியுள்ள வங்காள அரசியல் கைதிகள்,பாதுகாப்புக் கைதிகள் பிரச்னையை நீங்களே கவனிக்க வேண்டியிருக்கும் என்று அவர் என்னிடம் கூறிச் சென்றார்.

உங்களுடைய பதவியின் ஆரம்பக் கட்டத்தில் உங்களுக்கு நான் தொல்லை கொடுக்க விரும்பவில்லை. எனினும், டம் டம் சிறையிலுள்ள முக்கியமான கைதிகளிடமிருந்து எனக்கு இப்போது வந்துள்ள கடிதம் அவ்விதம் செய்ய என்னைத் தூண்டுவதாக இருக்கின்றது. அந்தக் கடிதமே விளக்கமாக எல்லாவற்றையும் அறிவிக்கிறது. அவ்விஷயமாக நான் கூறுவது இது தான்: இவர்கள் மீது எத்தகைய பலமான சந்தேகம் இருந்தாலும் இவர்களை விசாரணையின்றி சிறையில் வைத்திருப்பது துக்ககரமான ஒரு நிகழ்ச்சியேயாகும்; அல்லது இது ஒரு வெட்கக்கேடாகும் என்று கூட நான் சொல்லலாம். தைரியமாக எல்லோரையும் விடுதலை செய்யும்படி நான் கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 191

அரசாங்க மாளிகை,
கல்கத்தா, 16-3-1946

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

எனது மரியாதையையும், மனப் பூர்வமான நல்வாழ்த்துக்களையும் உங்களுக்குத் தெரிவிப்பதற்காகவே இந்தச் சுருக்கமான குறிப்பை எழுதுகிறேன். இன்று காலை நான் சுதீர் கோஷைக் கண்டு பேசினேன். ஸ்ரீ கேஸிக்கு நீங்கள் எழுதிய கடிதங்களில் எழுப்பியிருந்த பல்வேறு பிரச்னைகளை யொட்டியும் விடைகள் என்ன என்பதை அவருக்கு நான் விவரமாக விளக்கிக் கூறினேன்.

எனக்குத் தாங்கள் எழுதிய கடிதத்தில் பாதுகாப்புக் கைதிகளைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவ் விஷயமாக இன்றைய நிலைமை என்ன என்பதை விவரித்து உங்களுக்கு சீக்கிரத்தில் கடிதம் எழுதுகிறேன்.

மார்ச் மாதம் முடிய உள்ள நிலைமையை சுதீர் உங்களுக்கு எடுத்துக் கூறுவார்.

தங்கள் உண்மையுள்ள,
எப். பர்ரோஸ்,

## 192

அரசாங்க மாளிகை,
கல்கத்தா,
19-3-1946

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

சுதீர் கோஷ் சனிக்கிழமை என்னைப் பார்த்தார். ஸ்ரீ கேஸியுடன் நீங்கள் விவாதித்த விஷயங்கள் எவ்வளவில் இருக்கின்றன என்பதை அவருக்கு நான் விவரித்துக் கூறினேன். எனினும் மார்ச் 10௳ நீங்கள் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டுள்ள விஷயத்தில் நீங்கள் மிகுந்த அக்கறை கொண்டிருப்பதாக நான் கருதுவதால், அவ்விஷயமாக உங்களுக்கு நான் இக்கடிதம் எழுதுகிறேன்.

உங்கள் கடிதத்தில் கண்ட பாதுகாப்புக் கைதிகள் சம்பந்தமாக, எனக்கு முன் பதவியில் இருந்தவரின் கொள்கையையே நான் பின்பற்றி வருகிறேன். இப்போது இன்னும் சிறையில் இருக்கும் பாதுகாப்புக் கைதிகள் மிக மிக அபாயகரமானவர்கள் என்ற உண்மையைக் கவனிக்கும் போது, நான் விஷயங்களை மிகவும் துரிதப்படுத்தியிருக்கிறேன் என்று கூறிக்கொள்ளலாம். மார்ச் மாதம் முதல் இரண்டு வாரங்களில் 61 பாதுகாப்புக் கைதிகள் விடுதலை அடைந்திருக்கிறார்கள். மார்ச் 15௳ விடுதலை அடைந்தவர்கள் போக சிறையில் உள்ள பாதுகாப்புக் கைதிகளின் தொகை 115. இந்த மாதம் முடிவதற்குள் அவர்களிலும் பெரும்பாலோர் விடுதலை செய்யப்படுவார்கள்.

தங்கள் உண்மையுள்ள,
எப். பர்ரோஸ்

## 193

*இயற்கை வைத்தியசாலை,*
*6, தோடிவாலா ரோடு, புனா.*
*22-3-1946*

*அன்புள்ள நண்பருக்கு,*

*ஸ்ரீ சுதீர் கோஷ் மூலம் நீங்கள் அனுப்பிய கடிதத்தைப் பெரு மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொண்டேன். இந்தக் கடிதத்துடன் அவர் உங்களிடம் வருகிறார். கைதிகள், உப்பு, மின்சார கார்ப்பொரேஷன் சிப்பந்திகள், கதர் ஆகியவைகளைப் பற்றி எனது அபிப்பிராயங்களையும் எண்ணங்களையும் அவர் உங்களிடம் கூறுவார்.*

*தங்களுக்கும் ஸ்ரீமதி பர்ரோஸுக்கும் எனது வணக்கம்.*

*தங்கள் உண்மையுள்ள,*
மோ. க. காந்தி

## 194

# கிருஷ்ணகர் கல்லூரி ஆர்ப்பாட்டம்

*அரசாங்க மாளிகை,*
*கல்கத்தா, 24-1-1946*

*எனது அன்புள்ள ராஜகுமாரி,*

*கிருஷ்ணகர் பற்றி ஸ்ரீ ஸ்மாரஜித் பானர்ஜி கையெழுத்திட்ட குறிப்புடன் ஜனவரி 19உ நீங்கள் அனுப்பிய கடிதத்திற்காக மிக்க நன்றி.*

*எந்த விஷயங்களைக் குறித்து ஸ்ரீ பானர்ஜி எழுதியுள்ளாரோ அவற்றைப் பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. நான் கூற விரும்புவது என்னவெனில், கிருஷ்ணகர் கல்லூரிக்கு எனது யாத்திரை மிகவும் அமைதியாக நிகழ்ந்தது என்பதுதான். தூரத்தில் சிறு பையன்கள் சில கோஷங்கள் செய்ததைத் தவிர. வேறு எவ்வித ஆர்ப்பாட்டமும் நடைபெறவில்லை.*

*வழக்கமாக எல்லோரும் செல்லும் பாதையில்தான் நான் மோட்டாரில் கல்லூரி மைதானத்துக்குச் சென்றேன். "அமிருத பஜார் பத்திரிகை" கூறுவது போல் கொல்லைப் புற வழியாகச் செல்லவில்லை. நான் பார்த்தவரையில் மேடையில் காலி இடமின்றி எல்லோரும் உட்கார்ந்திருந்தனர். பாதி இடங்களில் மாணவர்களே உட்கார்ந்திருந்தனர் என்று எண்ணுகிறேன்.*

*நான் கூறியது போல், அவ் விஷயத்தை அவ்வளவு முக்கியமானதாக நான் கருதவில்லை. ஆனால் உண்மையில், "அமிருத பஜார் பத்திரிகை"யில் வெளியாகியிருந்த விவரங்கள் முற்றிலும் தப்பெண்ணத்தை உண்டாக்குவதாக இருக்கின்றன, எனினும்,*

இதுபோல் அடிக்கடி நிகழ்வது வழக்கமாதலால், இதைப் பற்றிக் குறிப்பிடுவது வீண் வேலையாகும்.*

உங்களை இங்கே கல்கத்தாவில் சந்தித்துப் பேச சந்தர்ப்பம் கிடைத்ததைக் குறித்து எனது மனைவியும் நானும் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தோம். ஸ்ரீ காந்தியைச் சந்திக்கவும், அவருடன் நீண்ட நேரம் பேசவும் சந்தர்ப்பம் கிடைத்ததைக் குறித்தும் மகிழ்ச்சியடைந்தோம் என்பதை நான் சொல்ல வேண்டிய தேவை இல்லை. சொந்த முறையிலும், சிநேக முறையிலும் அவருடன் பழகி அவரை அறிந்துகொள்ள வேண்டியது என் கடமையென நான் கருதுகிறேன். அவர் இங்கே இருந்தபோது நாங்கள் விவாதித்த பல விஷயங்களையும் நான் இன்னும் பரிசீலனை செய்து வருகிறேன்.

25 பவுண்டு எடையுள்ள அருமையான ஆஸ்திரேலியா கம்பளி ஆஸ்திரேலியாவிலிருந்து விமானத்தில் வந்துகொண்டிருக்கிறது. அது வந்து சேர்ந்தவுடன் அதை உங்களுடைய சிம்லா விலாசத்துக்கு அனுப்பிவைக்கிறேன்.

எங்கள் இருவரிடமிருந்தும் நல் வாழ்த்துக்கள்.

என்னை நம்புங்கள்,
தங்கள் உண்மையுள்ள,
ஆர். ஜி. கேஸி

---

* வங்காள கவர்னர் ஸ்ரீ ஆர். ஜி. கேஸி எழுதிய மேற்கண்ட கடிதம் தமக்குக் கிடைத்ததாக அறிவித்த ஸ்ரீமதி ராஜகுமாரி அமிருத கௌரி, "கிருஷ்ணைகர் கல்லூரியில் உங்களுக்குத் திருப்திகரமாக எல்லாம் நடந்திருந்தால் சரிதான்" என்று அவருக்குப் பதில் எழுதியிருந்தார்.

பகுதி பதினொன்று

# உணவு நெருக்கடி

## 195

## வைஸ்ராயின் கடிதம்

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி, 9-2-1946*

*அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

*உணவு நிலைமைபற்றி ஸ்ரீ கோஷுடன் எனது அந்தரங்கக் காரியதரிசி பேசியுள்ளார். அதை ஸ்ரீ கோஷ் உங்களுக்கு விவரித்துக் கூறுவார். தென்னிந்தியாவில் பிரயாணம் செய்து விட்டு இப்போதுதான் நான் திரும்பிவந்துள்ளேன். உணவு தானியங்களில் சிக்கன முறைகளைக் கைக்கொள்ளவும், மழை யின்மையால் வரண்ட பிரதேசங்களில் மக்களுக்கு அவசியமான உணவு கிடைக்கும்படி செய்யவும் நாங்கள் தேவையான முறை களை மேற்கொள்ள உத்தேசித்துள்ளோம். ஏராளமானவர்களின் உயிர், இவ்விஷயமாக அரசியல் கட்சிகளின் நிலைமை என்ன என்பதையே பொறுத்திருக்கிறது.*

*நீங்கள் டில்லிக்கு வரக்கூடுமாயின், அவ்விஷயம் பூராவையும் பற்றி உங்களுடன் பேச நான் விரும்புகிறேன்.*

*இவ்விஷயத்தில் காலம்தான் முக்கியமாகும். நீங்கள் உட னடியாக டில்லிக்கு வருவீர்களாயின், நான் மிகவும் நன்றி யுள்ளவனாக இருப்பேன்.*

*தங்கள் உண்மையுள்ள,*
**வேவல்**

## 196

*சேவாகிராமம்,*
*10-2-1946*

*மே. த. வைஸ்ராய்,*
*புது டில்லி,*

*அன்புள்ள நண்பருக்கு,*

*9—ஆம் தேதி நீங்கள் எழுதிய அன்பார்ந்த கடிதத்தை ஸ்ரீ சுதீர் கோஷ் என்னிடம் கொடுத்தார். என்னால் முடிந்திருக்கு*

மாயின், உங்களுடைய அழைப்பிற்கிணங்க நான் டில்லிக்கு வந்திருப்பேன். ஆனால் உடல் நிலை சம்பந்தமாகவும் தார்மிக ரீதியாகவும் அவ்விதம் வர முடியாததற்கான காரணங்களை நம்முடைய பரஸ்பர நண்பரிடம் விவரித்துக் கூறியிருக்கிறேன். அவர் உங்களிடம் அவற்றைப் பூரணமாக விளக்கிக் கூறுவார். எனது யோசனையையும் அவர் உங்களிடம் கூறுவார். எனினும், நீங்கள் அனுப்பும் எந்தப் பிரதிநிதியையும் சந்தித்துப் பேச நான் மகிழ்ச்சியுடையவனாக இருப்பேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 197

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *10-2-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

சென்னையில் நீங்கள் பிரயாணம் செய்துவந்த பின், நீங்கள் சுகவீனம் அடைந்திருப்பதற்காக வருந்துகிறேன். சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டால் உங்களுடைய உடல் நிலை சீராகிவிடும் என்று நம்புகிறேன். நீங்கள் டில்லிக்கு வர முடியாததால், உணவு நிலையைப்பற்றி விவாதிப்பதற்காக யாரையாவது உங்களிடம் அனுப்பும்படி யோசனை கூறியிருந்தீர்கள். அந்த யோசனையை நான் வரவேற்கிறேன். அதற்கிணங்க, உணவு நிலைமையைப்பற்றி விவாதிப்பதற்காக ஸ்ரீ அபெல்லை உங்களிடம் அனுப்புகிறேன். எனது மனதை அவர் அறிவார். நாம் சந்தித்துப் பேச சந்தர்ப்பம் ஏற்பட்டால் நான் என்ன கூறுவேனோ, அதையே அவர் கூறுவார்.

எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சீக்கிரத்தில் அதே விஷயமாக என்னைப் பார்க்கும்படி ஸ்ரீ ஜின்னாவையும் கேட்டிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**வேவல்**

## 198

# உணவுப் பொருள் ஏற்றுமதிக்குத் தடை

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி,
*15-2-1946*

என் அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

பிப்ரவரி 13உ தாங்கள் எழுதிய கடிதத்திற்கு நன்றி. உணவு நிலைமைபற்றி காந்திஜி பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கையை*

---

* மேலே குறிப்பிட்டுள்ள காந்திஜியின் அறிக்கையைப் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

வைஸ்ராய் பார்த்து மகிழ்ச்சியடைந்தார். அதற்காக அவர் மிகவும் நன்றியுள்ளவராக இருக்கிறார். நாளை இரவு அவரும் உணவு நிலைமைபற்றி வானொலி மூலம் பேசப்போகிறார்.

ஏற்றுமதித் தடை சம்பந்தமாக அனுப்பிய தந்தியின் நகலுக்காகவும் தங்களுக்கு நன்றி செலுத்துகிறேன். இதையெல்லாம் இப்போதே நாங்கள் கவனித்துவருகிறோம். உணவுக்கு உபயோகமான பொருள் ஏதாவது ஏற்றுமதி செய்யப்படுமாயின், அது உடனே தடுக்கப்படும். இருந்தாலும், இவ்விஷயமாக நான் திட்டமாக எதுவும் கூறுவதற்கில்லை.

டெலிபோன் மூலம் நான் பேசியபோது, நான் கூற விரும்பியதைத் தெளிவாகச் சொல்லவில்லையோ என்று அஞ்சுகிறேன். பத்திரிகைகளுக்கு விடுக்கப்பட்ட அரசாங்க அறிக்கை புது டில்லியிலிருந்து அனுப்பப்பட்டதாகும். அது நான் திரும்பிவருவதற்கு முன் விடுக்கப்பட்டுவிட்டது. அதனால்தான் உங்களுக்கு நான் டெலிபோன் செய்தேன். உணவு நிலைமைபற்றி பத்திரிகைகளுக்கு விடுத்த செய்தி புது டில்லியிலிருந்து வந்த அரசாங்க அறிக்கையாகும். நான் திரும்பிவருவதற்கு முன்பே அது வெளியிடப்பட்டு, 6-30 மணிக்கு வானொலி மூலமும் அறிவிக்கப்பட்டுவிட்டது. அதனால்தான் உங்களுக்கு நான் டெலிபோன் செய்தேன். நிலைமையை ஸ்ரீ காந்தியினிடம் தெரிவிப்பதற்காக வார்தாவுக்குச் சென்றேன் என்பதைத் தவிர, எனது டெலிபோன் செய்தியில் நான் வேறு ஒன்றும் கூறவில்லை. ஆனால் நான் அங்கே சென்றதற்குக் காரணம் என்ன என்பதை யாரும் நன்கு உணரவில்லை. எனவே அவ்விஷயமாக நான் எதிர்பார்த்ததைக் காட்டிலும் அதிகப்படியாகக் கூறப்பட்டிருக்கிறது. எனினும், அதனால் பெரிய தீங்கு எதுவும் நேர்ந்துவிடவில்லை என்பதை ஸ்ரீ காந்தி ஒப்புக் கொள்வார் என்றே நான் நினைக்கிறேன். இன்று காலைப் பத்திரிகைகளில், அறிக்கையுடன் வேறு சில விஷயங்களும் பிரசுரமாக நாங்கள் ஏற்பாடு செய்தோம். ஸ்ரீ காந்தியின் உடல் நிலை திருப்திகரமாக இருக்கிறது என்பதைக் காட்டுவதே அவ்விதம் செய்ததன் நோக்கமாகும். இருந்தாலும், 6-30 மணிக்கு வானொலிமூலம் விடுத்த அறிக்கையை மாற்ற முடியவில்லை. *

உணவு நிலைமைபற்றி நமது பொதுவான லட்சியம் நிறைவேறுவதற்கான முயற்சிகளைத் தொடர்ந்து செய்துவர ஸ்ரீ காந்தியினால் இயலும் என நான் நம்புகிறேன்.

---

* "துரதிர்ஷ்டவசமாக காந்திஜி பிரயாணம் செய்யக்கூடிய நிலையில் இல்லை" என்று அரசாங்க அறிக்கை கூறியது. எனவே, வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசி அவரைப் பார்ப்பதற்காக சேவாகிராமத்துக்குச் சென்றிருந்தார். ஆனால் பத்திரிகைகளுக்கு அனுப்பப்பட்ட அந்த அறிக்கை வெளியான அதே சமயத்தில் ஸ்ரீ அபெல்லின் அறிக்கையும் வெளியாகியது. அதில் அவர் கூறியிருந்ததாவது: "காந்திஜியின் உடல் நிலை நன்றாகவே இருக்கிறது, இருந்தாலும், சமீபத்தில் அவர் நாடெங்கும் நீண்ட பிரயாணம் செய்ததன் காரணமாக சிறிது களைப்படைந்திருக்கிறார்." அரசாங்க அறிக்கையும், ஸ்ரீ அபெல்லின் அறிக்கையும் முரண்பாடாக இருந்ததால் ஏற்பட்ட குழப்பத்தையே ஸ்ரீ அபெல் மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

கோதுமை, அரிசி, அவற்றிலான பண்டங்கள் ஆகியவற்றின் பங்கீட்டை அடியோடு குறைத்துவிட்டதால், பெரும்பாலான நேரமும் நான் பசியினால் அவதிப்படவேண்டியிருக்கிறது!

எங்கள் இருவரிடமிருந்தும் நல் வாழ்த்துக்கள்,

தங்கள் உண்மையுள்ள,

ஜார்ஜ் அபெல்

## 199

இயற்கை வைத்தியசாலை,
5, தோடிவாலா ரோட், புனா,
*21-2-1946*

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

உணவு நிலைமையைச் சமாளிக்க இங்கே இன்னும் சில யோசனைகளைக் கூறுகிறேன். இவை நண்பர்கள் எனக்கு அனுப்பிய யோசனைகளாகும்.

ஆக்க வேலைகளைச் செய்வதற்கான இந்த அரிய சந்தர்ப்பத்தை இந்திய ராணுவத்துக்கு அளிக்க வேண்டும். அவர்கள் எளிதில் எங்கும் செல்ல முடியும். எனவே அவசரமாகக் கிணறுகள் தோண்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ள இடங்களுக்கெல்லாம் ராணுவத்தினரை அனுப்பலாம்.

உபரி உணவுப் பொருட்கள் சம்பந்தப்பட்ட வரையில், மீனைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தியாவின் கடற்கரையைச் சுற்றி மீன்கள் ஏராளமாக இருக்கின்றன. யுத்தம் முடிந்துவிட்டதால், சென்ற ஐந்து ஆண்டுகளாகக் கடற்கரை நெடுக பாதுகாப்பு அலுவல்களில் ஈடுபட்டிருந்த சிறிய கப்பல்களையும் நடுத்தரமான கப்பல்களையும் மீன்கள் பிடிப்பதற்கு உபயோகிக்கலாம். மீன் இலாகாவின் உதவியுடன் அந்த அலுவல்களை இந்தியக் கடற்படை மேற்கொள்வதற்கு ஏற்பாடு செய்யலாம். யுத்த காலத்தில் நினைத்ததையெல்லாம் செய்ய முடியுமாயின், யுத்த கால முயற்சிகளைப் போல் சமாதான காலத்திலும் ஏன் முயற்சிகள் செய்யக்கூடாது? இப்போது கூட மீன் ஏழைகளான பெரும்பாலோரின் சாதாரண உணவுப் பொருளாக இருந்து வருகிறது.

பொது நந்தவனங்களிலெல்லாம் காய் கறிகள் பயிரிட வேண்டும் என்று உடனடியாக சட்டம் கொண்டுவர வேண்டும். இந்த இடங்களிலும் ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் பணி புரியும்படி செய்ய வேண்டும். தங்களுடைய தோட்டங்களில் காய் கறிகள் பயிரிட விரும்புவோருக்குத் தேவையான அதிகப்படியான தொழிலாளர்கள், ராணுவத்திலிருந்து இலவசமாகக் கிடைக்கும்படி செய்ய வேண்டும்.

கூட்டுறவு சங்கங்களின் மூலமோ அல்லது அவை போன்ற ஸ்தாபனங்களின் மூலமோ உணவு பகிர்ந்தளிக்கப்படவேண்டும்.

பிரிட்டனிலோ அல்லது வேறிடங்களிலோ உள்ள உறவினர்களுக்கோ அல்லது நண்பர்களுக்கோ உணவு பார்சல்கள் அனுப்புவதையெல்லாம் நிறுத்திவிட வேண்டும். வேர்க்கடலை, எண்ணெய்கள், பிண்ணுக்குகள் ஆகியவற்றின் ஏற்றுமதியையும் நிறுத்திவிட வேண்டும்.

ராணுவத்தினிடம் இருக்கும் உணவுப் பொருட்களின் இருப்புகளையெல்லாம் உடனடியாக விடுவிக்க வேண்டும். அவ்விஷயத்தில் ராணுவத்தினருக்கும் பொதுமக்களுக்கும் இடையே யாதொரு வேற்றுமையும் இருக்சக் கூடாது. இச்சந்தர்ப்பத்தில், 11-2-1946 'அமிருத பஜார் பத்திரிகை'யில் வெளியான கீழ்க்கண்ட செய்தியை வைஸ்ராயின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்:

"புழுத்துப் போய் வீணாகிவிட்ட ஏராளமான ஆட்டா மாவை, சென்ற சில தினங்களாக நாராயணகஞ்சில் உள்ள சீதாலக்ஷா நதியில் கொட்டி வருகிறார்கள் என்று தெரிகிறது."

இதற்கு முன் ஒருபோதும் இராதவாறு நடைபெற்றுவரும் லஞ்ச ஊழல் நிறுத்தப்பட்டு, அரசாங்க சிப்பந்திகளும் பொதுமக்களும் யோக்கியப் பொறுப்பான, நேர்மையான அலுவல்களில் ஈடுபட்டாலன்றி, மனச் சோர்வை விட்டுவிட வேண்டும் என்றும், அதிக உணவு பயிர் செய்ய வேண்டும் என்றும் பிரசாரம் செய்வதால் யாதொரு பலனும் ஏற்படாது.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

# 200

## உணவுப் பிரச்னையின் விரோதிகள்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 26-2-1946.

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உணவு நிலைமையைச் சமாளிப்பதற்கான யோசனைகள் கூறி, நீங்கள் பிப்ரவரி 21-ஆம் தேதி எழுதியுள்ள கடிதத்திற்காக நன்றி. உங்களுடைய கடிதத்தை வைஸ்ராய்க்குக் காட்டினேன். நீங்கள் அதை எழுதியதற்கு அவரும் உங்களுக்கு நன்றியுள்ளவராக இருக்கிறார். பல்வேறு யோசனைகளையும் பரிசீலனை செய்ய அவர் ஏற்பாடு செய்வார்.

ஒன்றிரண்டு நாட்களுக்கு முன்புதான், மீன் பிடிக்கும் விஷயமாக இந்தியக் கடற்படை உதவியளிப்பது சாத்தியமாக இருக்குமா என்று வைஸ்ராய் பிரதம தளபதியைக் கேட்டார்.

அவ்விதம் செய்வது, சமீபத்தில் நிகழ்ந்த சம்பவங்கள்* காரணமாக கடினமாக இருக்கலாம். இருந்தாலும் இதன் மத்தியில், கானடாவிலிருந்தும் நியூபவுண்ட்லந்திலிருந்தும் உலர்ந்த மீன்களை இறக்குமதி செய்வது சாத்தியமா என்பது பற்றிப் பரிசீலனை செய்ய வைஸ்ராய் ஏற்பாடு செய்திருக்கிறார். மீன் பிடிக்கும் தொழிலை நவீன முறையில் அபிவிருத்தி செய்வதற்குத் தகுதியான சாதனங்களும், கப்பல்களும் கிடைக்கும் விஷயமாகவும் பரிசீலனை செய்ய அவர் ஏற்பாடு செய்திருக்கிறார். அதிக உணவு உற்பத்தி இயக்கத்திற்கு ஏற்கனவேயே ராணுவத்தினர் பேருதவி புரிந்து வருகிறார்கள். கிணறுகள் தோண்டுவது, பூமியைச் சமமாக்குவது போன்ற காரியங்களுக்காக அவர்கள் யந்திர வகைகளைக் கொடுத்து வருகிறார்கள்.

டில்லியில் பரந்த அளவுள்ள பிரதேசம் உழுது பயிரிடப்பட்டு வருகிறது. பங்களாக்களைச் சேர்ந்த தோட்டங்களிலும் பரந்த முறையில் காய்கறிகளை பயிரிடப் போகிறார்கள். இந்தியாவுக்கு வெளியே அனுப்பப்படும் பார்சல்களையும் நிறுத்திவிடும்படி உத்தரவிடப்பட்டிருக்கிறது. வேர்க்கடலை, எண்ணெய்கள், பிண்ணாக்குகள் ஏற்றுமதி பிரச்னையும் அவசரமாகப் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

திறமை வாய்ந்த உணவு நிர்வாகத்திற்கு, லஞ்சமும் ஊழலும் படுமோசமான விரோதிகள் என்பது ஒப்புக் கொள்ளப்பட்ட விஷயமாகும். உணவுக் கட்டுப்பாடு விதிகளை அமலுக்குக் கொண்டு வருவது, மாகாண அரசாங்கங்களின் கையில் இருக்கிறது. இவ்விஷயத்தில் புதிய மந்திரி சபைகள் பலன் ஏற்படும்படியான காரியங்களைச் செய்யலாம்.

தங்கள் உண்மையுள்ள,

ஜி. ஈ. பி. அபெல்

# 201

(தந்தி)

புனா,
*4-3-1946*

வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசிக்கு,
புது டில்லி.

கடிதத்திற்காக நன்றி. என் கடிதத்தையும் உங்களுடைய பதிலையும் நான் வெளியிடலாமா?

காந்தி

* பிரிட்டிஷ் ராணுவ அதிகாரிகளை எதிர்த்து இந்தியக் கடற்படையினரிடையே அப்போது ஏற்பட்ட கலகத்தையே 'சம்பவங்கள்' என்று வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசியான ஸ்ரீ ஜி. ஈ. பி. அபெல் மேற்கண்ட தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

## 202

(தந்தி)

புது டில்லி.
5-3-1946

ஸ்ரீ காந்தி,
இயற்கை வைத்திய சாலை,
6, தோடிவாலா, புனா.

உங்களுடைய பிப்ரவரி 21-ஆம் தேதிக் கடிதத்தையும் அதற்கு 26-ஆம் தேதி நான் எழுதிய பதிலையும் வெளியிடுவதில் யாதொரு ஆட்சேபணையும் இல்லை.

வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசி

## 203

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 24-4-1946

எனது அன்புள்ள சுதீர்,

இன்று தாங்கள் அனுப்பிய குறிப்புக்காக நன்றி. வெள்ளிக் கிழமை உங்களுடன் உணவு அருந்துவதை எனது மனைவியும், நானும் ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

கிங்ஸ்வேய்க்கு இரு புறத்திலும் உழப்பட்டிருக்கும் நிலத்தைப்பற்றி காந்திஜியின் கேள்விக்கு நான் அளிக்கும் பதில் இதுதான்: புல் வளர்ந்துள்ள பிரதேசத்தை உழுதபின் அதன் வேர்கள் காய்ந்து கருகும்படி விட்டுவிட வேண்டும். எனக்கு நிச்சயமாகத் தெரியாவிடினும், அங்கே சோளம் பயிரிட உத்தேசிக்கிறார்கள் என்றே நினைக்கிறேன்.* எனவே, இன்னும் சுமார் ஒரு மாத காலத்திற்கு தற்போதுள்ள நிலைமையில் அதை விட்டுவைப்பது

---

* மேலே ஜார்ஜ் அபெல் தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ள சம்பவத்தின் முழு விவரம் பின்வருமாறு:

1946 ஏப்ரல் மாதம் பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூது கோஷ்டியினரைச் சந்திப்பதற்காக காந்திஜி டில்லிக்குச் சென்றிருந்தார். அவர்களில் ஒருவரைச் சந்தித்தபின், காந்திஜி கிங்ஸ்வே வழியாகத் திரும்பினார். வந்தபோது, இருபுறத்திலும் நிலங்கள் வெகு காலத்திற்கு முன்பே உழுதுவைக்கப்பட்டிருப்பதைக் கண்டார். அங்கே எதுவும் பயிரிடப் படவில்லை. சாதாரணமாக சம்பந்தப்பட்ட அரசாங்க இலாகாவின் அசிரத்தையும் தாமதமுமே அதற்குக் காரணமாக இருக்குமென்று காந்திஜி எண்ணி, அவ்வமயம் தம்முடன் நடந்துவந்து கொண்டிருந்த சுதீர் கோஷிடம் அதைச் சுட்டிக்காட்டி, அதை வைஸ்ராய் அந்தரங்கக் காரியதரிசியின் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டும் என்று அவரிடம் கூறினார். பின்னர் ஜார்ஜ் அபெல்லுக்கு ஸ்ரீ சுதீர் எழுதிய கடிதத்தில் அவ்விஷயத்தைக் குறிப்பிட்டிருந்தார். அதற்குத்தான் ஜார்ஜ் அபெல் மேற்கண்ட விதம் சமாதானம் கூறியிருந்தார்.

தான் புத்திசாலித்தனமாகும். என்னுடைய தோட்டத்திலும் அவ்விதமேதான் செய்யப்பட்டுவருகிறது.

தங்கள் உண்மையுள்ள,
ஜார்ஜ் அபெல்

## 204

புனா,
22-2-1946

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

நேற்று காந்திஜி தங்களுக்கு எழுதிய கடிதத்தைத் தொடர்ந்து கீழ்க்கண்ட தகவலையும் உங்களுக்கு அறிவிக்கும்படி கூறியுள்ளார்.

1. சென்ற வாரம் 'மூங்' என்ற பருப்பு அடங்கிய 2951 மூட்டைகள் அவர்களுடைய கப்பல்கள் ஒன்றில் வெளிநாட்டுக்குச் சென்றதாக பம்பாய் நியூ தோலரா ஸ்டீம்ஷிப் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர் கூறுகிறார்.

2. 'பீகம்,' 'ஜலஜோதி' என்ற இரண்டு கப்பல்களும் சென்ற வாரம் பருப்பு வகைகள் அடங்கிய 35,000 மூட்டைகளை கொழும்புக்கு ஏற்றிச் சென்றன.

3. பத்திரிகையிலிருந்து கத்தரித்து இத்துடன் இணைக்கப் பட்டுள்ள செய்தி, சென்ற செப்டம்பர் மாதம் ஏராளமான அரிசி ஏற்றுமதி செய்யப்பட்டதாகக் கூறுகிறது.*

உங்களுடைய 15உ கடிதத்திற்காக நன்றி. பத்திரிகைகளில் வெளியான அரசாங்க அறிக்கையைக் குறித்து காந்திஜிக்குத் தப்பெண்ணம் எதுவும் இல்லை.

தங்கள் உண்மையுள்ள,
அமிருத கௌரி

## 205

# அரிசி ஏற்றுமதி

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 25-2-1946

அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

பிப்ரவரி 22உ தாங்கள் எழுதியுள்ள கடிதத்திற்காக நன்றி. 1945 ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் வெளிநாடுகளுக்கு

---

* "1946 ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் ஒரே ஒரு கம்பெனியார் மாத்திரம், ரூ. 94 லட்சம் பெறுமானமுள்ள 22,504 டன் அரிசி மூட்டைகளை கல்கத்தா துறைமுகத்திலிருந்து வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்திருக்கிறார்கள்" என்பதே மேலே குறிப்பிடப்பட்டுள்ள பத்திரிகைச் செய்தியாகும்.

அரிசி ஏற்றுமதியாகியிருப்பதாக வெளிவந்துள்ள பத்திரிகைச் செய்தியை நான் உணவு இலாகாவுக்கு அனுப்பியிருக்கிறேன். இதுபற்றிய உண்மைகள் என்ன என்பது எனக்குத் தெரியாது.

பருப்பு வகைகள் சம்பந்தப்பட்ட வரையில் தற்போதைய நிலைமை இதுதான். நாம் மாதந்தோறும் இலங்கைக்கு 3000 டன் பருப்பு வகைகளை ஏற்றுமதி செய்து வருகிறோம். இலங்கையில் உணவுப் பங்கீடு நான்கு பவுண்டாக இருந்துவருகிறது. இலங்கைக்குப் பருப்பு ஏற்றுமதி செய்வதைத் தடுப்பதால் அங்கு நெருக்கடியான நிலைமை ஏற்படுமென்றாலும்கூட, அந்த ஏற்றுமதி இப்போது தடுக்கப்பட்டிருக்கிறது.

தங்கள் உண்மையுள்ள,

ஜி. ஈ. பி. அபெல்

## 206

புனா,
3-3-1946

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

சென்ற மாதம் தாங்கள் எழுதிய கடிதத்திற்காகவும், பருப்பு வகைகள் ஏற்றுமதி சம்பந்தமாக அதில் அடங்கியுள்ள தவலுக்காகவும் உங்களுக்கு நன்றி தெரிவிக்க வேண்டும் என்பது காந்திஜியின் விருப்பமாகும்.

ஸ்ரீமதி லெஸ்டருக்கு பிரயாண அனுமதிச் சீட்டு வழங்கும் விஷயமாக தாங்கள் விசாரித்ததற்காகவும் நான் நன்றி செலுத்துகிறேன். அதில் உள்ள கஷ்டத்தை நான் உணருகிறேன்.* இவ்விஷயமாக ஸ்ரீமதி லெஸ்டருக்கும் நான் எழுதுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

அமிருத கௌரி

* காந்திஜியின் நண்பரும், இந்திய சுதந்திரப் போராட்டத்தின் ஆதரவாளருமான ஸ்ரீமதி மூரியல் லெஸ்டர் (கிங்ஸ்லி ஹால், ஈஸ்ட் என்ட், லண்டன்) இந்தியாவுக்கு விஜயம் செய்ய விரும்பினார். இந்தியாவுக்கு வர பிரயாண அனுமதிச்சீட்டு பெறும் விஷயமாக அவருக்குச் சிறிது சங்கடம் ஏற்பட்டது. எனினும் பிறகு அவர் அனுமதிச் சீட்டு பெற்று இந்தியாவுக்கு வருவது சாத்தியமாயிற்று. இவ்விஷயமே மேற்கண்ட கடிதத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிக்கிறது. ஸ்ரீமதி லெஸ்டர் இந்தியாவுக்கு வந்து சமூகக் கலகம் ஏற்பட்ட பிறகு கிழக்கு வங்காளத்திலுள்ள நோவாகாலிக்குச் சென்றார். அங்கு நிகழ்ந்த சம்பவங்களைக் குறித்து காந்திஜிக்கு விளக்கமாக ஓர் அறிக்கையும் அனுப்பினார்.

# 207

# உணவுப் பங்கீடு முறை

இயற்கை வைத்தியசாலை,
6, தோடிவாலா ரோடு, புனா,
*25-2-1946*

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

நெல்லூரிலிருந்து ஒருவர் பின்வருமாறு எழுதியுள்ளார் :

“மூன்று பிரிவுகளாகப் பிரித்து உணவுப் பங்கீடு முறை நடைபெறுகிறது. ‘ஏ’ பிரிவினருக்கு அரிசியும், ‘பி’ பிரிவினருக்கு அரிசியும் கோதுமையும், ‘ஸி’ பிரிவினருக்கு அரிசியும் கேழ்வரகும் அளிக்கப்படுகின்றன. பியூன்களிலிருந்து உயர்தர அதிகாரிகள் வரையில் அரசாங்க ஊழியர்கள் யாவரும் ‘ஏ’ பிரிவினராவர்; ‘பி’ பிரிவினர் மத்தியதர வகுப்பைச் சேர்ந்தவர்கள்; ‘ஸி’ பிரிவினர் தொழிலாளர்களாவர்.

“இது முற்றிலும் நெல் விளையும் பிரதேசமாதலால், அரிசியைத் தவிர வேறு எதுவும் சாப்பிட்டு யாருக்கும் பழக்கமில்லை. ஆகையால் அத்தகைய பிரிவுகளை ரத்து செய்துவிடவும், எவை கிடைக்கின்றனவோ அவற்றைச் சமமாக எல்லோருக்கும் பங்கிட்டுக்கொடுக்கும்படியும் ஆலோசனை கூறுங்கள். பெஜவாடா, ராஜமகேந்திரவரம் போன்ற நதி முகத்துவாரப் பிரதேசங்களுக்கு இந்தப் பிரச்னை பொதுவானது. இவ் விஷயமாக மக்களிடையே மிகுந்த மனக் கொதிப்பு ஏற்பட்டிருக்கிறது. விரைவில் ஒரு சமரசம் ஏற்படாவிடில், கலகங்கள் கூட உண்டாகலாம்.”

இந்த நிருபர் கூறுவது உண்மையாயின், அது ஒரு நியாயமான புகாரேயாகும். அதற்கு உடனே பரிகாரம் அளிக்க வேண்டும். அது பொய்ச் செய்தியாயின், அதற்கு ஆதாரபூர்வமான ஒரு மறுப்பை வெளியிட வேண்டும்.

பத்திரிகைகளில் வெளியிடுவதற்காக மேற்கண்ட செய்தி காந்திஜிக்கு அனுப்பப்பட்டது. ஆனால் அவர் அதை முதலில் வைஸ்ராய்க்கு அனுப்பிவைக்க விரும்பினார்.

தங்கள் உண்மையுள்ள,
அமிருத கௌரி

# 208

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *21-3-1946*

அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

சென்னையில் உணவுப் பங்கீடு முறைபற்றி சென்ற மாதம் 25வ தாங்கள் எனக்கு எழுதியிருந்தீர்கள். பதில் எழுதத் தாமதம் ஏற்பட்டதற்காக வருந்துகிறேன். அதன் சம்பந்தமான

உண்மைகள் என்ன என்பதைப்பற்றி நான் விசாரித்துக் கொண்டிருந்ததே தாமதத்திற்குக் காரணமாகும். நான் எதிர்பார்த்தபடியே உணவுப் பங்கீடு சம்பந்தமாக வேற்றுமை எதுவும் இல்லை. அரிசி சாப்பிடுவோர், தினை உணவு சாப்பிடுவோர், கலப்பு உணவு சாப்பிடுவோர் என்ற பிரிவினை ஒரு சமயத்தில் இருந்தது. அவரவருடைய பழக்கமான உணவை முக்கியமாகக் கொண்டே அத்தகைய பாகுபாடு இருந்தது. ஆனால் இப்போது அவ்வழக்கம் அமலில் இல்லை. ரேஷன் கார்டு வைத்துக் கொண்டிருப்போர் யாவரும் தங்கள் விருப்பப்படி அரிசியோ, தினையோ அல்லது கோதுமையோ வாங்கிக் கொள்ளலாம்.

இந்தத் தகவலை ஸ்ரீ காந்திக்கும் அறிவிப்பீர்கள் என்று நம்புகிறேன். இவ்விஷயமாக பரந்த முறையில் தப்பெண்ணம் எதுவும் இல்லை என்று தோன்றுகிறது. எனினும் மறுப்பு வெளியிடவேண்டியது விரும்பத்தக்கது என்று சென்னை அரசாங்கம் கருதினால் அவ்விதமே செய்யப்படும்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

# 209

அரசாங்க மாளிகை,
பம்பாய், 13-3-1946

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசியான ஸ்ரீ அபெல் விமானத்தில் இன்று பம்பாய்க்கு வருகிறார். உணவு நிலைமை சம்பந்தமாக வைஸ்ராயிடமிருந்து உங்களுக்கு ஒரு முக்கியமான செய்தியுடன் அவர் வருகிறார்.

சாத்தியமாயின் இன்றோ, இல்லாவிடில் நாளை காலையிலோ அவர் உங்களைச் சந்திக்க மிகவும் ஆர்வம் உடையவராக இருக்கிறார். இன்று மாலைக்கு முன்பு அவர் வரமாட்டார். எனவே உங்களைச் சந்திக்க அவருக்கு மாலை 6 மணியிலிருந்து எந்த நேரமும் வசதியாக இருக்கும்.

இந்தக் கடிதத்தை ஆர். பி. தேசாயின்மூலம் நான் அனுப்பிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் மிகவும் அன்பு கூர்ந்து அவர்மூலம் பதில் அனுப்புவீர்களா? அநேகமாக பிர்லா மாளிகையில் நீங்கள் சந்திக்கலாம். அபெல் உங்களை எந்த இடத்தில் வேண்டுமாயினும் சந்திக்கத் தயாராக இருக்கிறார்.*

தங்கள் உண்மையுள்ள,
ஜே. எஸ். ட்ரு

* அன்று இரவு 8 மணிக்கு ஸ்ரீ அபெல்லைச் சந்திப்பது தமக்கு மகிழ்ச்சியளிக்கும் என்று காந்திஜி மேற்கண்ட கடிதத்திற்குப் பதில் அனுப்பினார்.

## 210

சர்க்கார் மாளிகை,
பம்பாய், 13-3-1946

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உங்கள் கடிதத்திற்காக மிகவும் நன்றி, இன்று மாலே ஸ்ரீ அபெல் வந்ததும், இன்றிரவு 8 மணிக்கு பிர்லா மாளிகையில் உங்களேச் சந்திக்கும்படி அவரைக் கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஜே. எஸ். ட்ரூ

## 211

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 13-3-1946

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உணவு நெருக்கடியைச் சமாளிப்பதற்கான ஒரு யோசனையைப்பற்றி உங்களுடன் விவாதிப்பதற்காக நான் எனது அந்தரங்கக் காரியதரிசி ஸ்ரீ அபெல்லே அனுப்பியிருக்கிறேன். அது பற்றி நீங்கள் மிகுந்த அக்கறையுடன் தீர்க்காலோசனே செய்வீர்கள் என நம்புகிறேன். இந்திய மக்கள் பஞ்சத்தினுல் துன்பத்திற்கு உள்ளாகாமல் தடுப்பதே நம் எல்லோருடைய ஒரே லட்சியமாகும். எனவே, இவ்விஷயத்தில் தலேவர்களுடைய பூரண ஒத்துழைப்பு அவசியம் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயமாகும்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

## 212

பம்பாய், 14-3-1946

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

எவ்விஷயத்தையும் எழுத்துமூலம் குறிப்பிட வேண்டாம் என்று நீங்கள் கூறினீர்கள். நானும் அதை மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டேன். எனினும் நேற்றிரவு தூங்கி விழித்தபோது நமது சம்பாஷணேயைப்பற்றி நான் ஆலோசித்தேன். அவ்விஷயமாக சோம்பல் கூடாது என்றும், நாம் விவாதித்த விஷயங்களே எழுத்துமூலம் குறிப்பிடவேண்டும் என்றும் எண்ணினேன். எனவே, அவ்விஷயங்களே இந்தக் குறிப்பில் அடங்கியிருக்

கின்றன. நாம் விவாதித்த விஷயங்கள் எனக்கு நன்கு ஞாபகத்தில் இருக்கின்றன என்றே நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

(மேற்கண்ட கடிதத்துடன் இணைக்கப்பட்ட குறிப்பு)

வைஸ்ராய் கூறிய யோசனை இதுதான் என்று நினைக்கிறேன்; தலைவர் என்ற முறையில் அவரும், ஸ்ரீ ஜின்னாவும், சாத்தியமானால் போபால் நவாப் சாகிபும், நானும் உணவு நிலைமையைக் கட்டுப்படுத்தி ஒழுங்கு செய்ய வேண்டும் என்பதுதான்.

அந்த யோசனையை அங்கீகரிப்பதால் ஏற்படக் கூடிய நிலைமை உண்மையற்றதாக இருக்கும் என்றும், எனவே அவரது நோக்கம் வெற்றி பெறுதென்றும் நான் கூறினேன். பின்னர் நீங்கள், வைஸ்ராய்க்கு உதவியாக என்னுடன் சேர்ந்து பணி புரிய மௌலானா ஆஸாதை அழைப்பது சாத்தியமா என்று கேட்டீர்கள். அத்தகைய விஷயங்களில் நான் ஒரு நிபுணன் என்று கருதப்படுவதால், அது சாத்தியமாக இருக்கும் என்று நான் சொன்னேன். எனினும், தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அடங்கிய நிர்வாக சபை இல்லாமல் என்ன செய்தாலும் அது, பசிப் பிணியால் துன்பப்படும் கோடிக்கணக்கான கிராமவாசிகளின் விதியைப் பொறுத்த ஒரு நெருக்கடியான நிலைமைக்கு மேலெழுந்தவாரியான பரிகாரமாகவே இருக்கும் என்றும் நான் கூறினேன்.

மோ. க. காந்தி

## 213

அரசாங்க மாளிகை,
பம்பாய், 14-3-1946

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஸ்ரீ பியாரிலால் என்னிடம் கொண்டுவந்து கொடுத்த உங்களுடைய கடிதத்திற்காக நன்றி.

நேற்றிரவு நடந்த விவாதத்தைப்பற்றிய எனது சுருக்கமான குறிப்புக்கும் உங்களுடைய குறிப்புக்கும் சிறிது வேற்றுமை இருக்கிறது என்பதை அவரிடம் நான் விளக்கிக்கூறினேன். எந்தெந்த விஷயத்தில் அவ்வித வேற்றுமை இருக்கிறது என்பதையும் மேலெழுந்தவாரியாக அவரிடம் குறிப்பிட்டேன்.

இவ்விஷயமாக எதையும் எழுத்து மூலமாகக் குறிப்பிட வேண்டாம் என்றே வைஸ்ராய் விரும்புவார் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். ஏனெனில், எப்போதாவது ஒரு கட்டத்தில் அது பரஸ்பரம் குற்றம் சாட்டும் அபாயத்திற்கு

இடம் கொடுப்பதாகிவிடும். நேற்றிரவு சொன்னதைப்போல, எவ்வளவுக் கெவ்வளவு குறைவாகக் கூறுகிறேமோ அவ்வளவுக்கு நல்லது என்றே வைஸ்ராய் எண்ணுவார். நேற்று நடந்த விவாதத்தைப்பற்றி இன்று அவரிடம் நான் விவரித்துக் கூறு கிறேன். அவருக்கு ஏமாற்றமாக இருக்குமென்றாலும், அவரது யோசனையை அங்கீகரிக்க உங்களால் முடியாததற்கு நீங்கள் கூறிய காரணங்கள் என்ன என்பதை அவரிடம் தெளிவாக எடுத்துக் கூறுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

ஜி. ஈ. பி. அபெல்

## 214

அன்புள்ள ஸ்ரீ அபெல்,

உங்களுடைய அன்பார்ந்த கடிதத்திற்கு நன்றி. நம்முடைய பேச்சுவார்த்தைகளைப் பற்றி எனது கருத்தை எழுத்துமூலம் நான் குறிப்பிட்டதற்குக் காரணம், நமது நிலைமையைப் பற்றி யாதொரு தப்பெண்ணமும் ஏற்படாமல் தடுக்க வேண்டும் என்பதேயாகும். உங்களையோ, என்னையோ நான் தருமசங்கட மான ஒரு நிலைமைக்கு உட்படுத்திவிடமாட்டேன். நிச்சயமாக வைஸ்ராயை அத்தகைய நிலைமைக்கு உட்படுத்தவே மாட்டேன். நீங்கள் கொண்டுவந்த செய்தியைப் பற்றி நான் அறிந்து கொண்டதை, எழுத்து மூலம் நான் குறிப்பிட்டது நன்மையே என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள். ஆனால், எதையும் பத்திரிகைகளுக்கு வெளியிடும் நோக்கம் எனக்கு நிச்சயமாக இல்லை. பொதுவாக, காரியக் கமிட்டிக்கு அவ்விஷயமாக ஏதாவது சொல்ல வேண்டியவனாக இருக்கிறேன். பத்திரிகை களுக்கு எதுவும் சொல்லப் போவதில்லை.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 215

அரசாங்க மாளிகை,
பம்பாய், *14–3–1946*

அன்புள்ள ஐயா,

வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசி ஸ்ரீ அபெல்லுக்கு ஸ்ரீ காந்தியினிட மிருந்து விமானத்தின்மூலம் ஒரு கடிதம் அனுப்பு வதன் சம்பந்தமாக நான் ராஜகுமாரியுடன் டெலிபோனில் பேசினேன்.

அவ்விதம் அனுப்புவது சாத்தியமல்ல என்று அஞ்சுகிறேன். ஏனெனில், வைஸ்ராய் இன்று மாலை ஜெயபூரிலிருந்து ஆள்வா

ருக்குச் செல்லுகிறார். ஆள்வாருக்கு விமானத் தபால் போக்கு வரத்து இல்லை. இன்று மாலை நீங்கள் நேராக வைஸ்ராய்க்கு எழுதியுள்ள கடிதம் (பத்திரமாகப் போய்ச்சேருவதற்காக அதில் "அவசரம்" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது) *16வ* காலை ஆள்வாருக்கு போய்ச் சேரும். வைஸ்ராய் முகாம், ஆள்வார், ராஜபுதனம் என்ற விலாசத்திற்கு நீங்கள் கடிதம் எழுதலாம்.

தங்கள் அன்புள்ள,

ஜே எஸ். டிரு

# 216

*அரசாங்க மாளிகை,*
*பம்பாய், 15-3-1946*

*அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,*

மார்ச் *14வ* நீங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. ஸ்ரீ அபெல்லுக்கு ஸ்ரீ காந்தி எழுதிய கடிதம் ஒன்றையும் அத்துடன் இணைத்திருந்தீர்கள். ஆள்வாருக்கு விமானத் தபால் போக்கு வரத்து இல்லை என்று நான் அறிவித்து உங்களுக்குக் கடிதம் எழுதிய பின் உங்களுடைய கடிதம் கிடைத்தது.

காலதாமதம் ஏற்படாமல் இருப்பதற்காக ஸ்ரீ காந்தியின் கடிதத்தை அவசரத் தபாலில் ஸ்ரீ அபெல்லுக்கு அனுப்பியிருக்கிறேன். அது அவருக்கு நாளை காலையில் போய்ச் சேரும்.

தங்கள் உண்மையுள்ள,

ஜே. எஸ். டிரு

# 217

## நிருபரின் யோசனை

*இயற்கை வைத்தியசாலை,*
*6, தோடிவாலா ரோடு, புனா.*
*1-3-1946*

*பம்பாய் கவர்னரின் அந்தரங்கக் காரியதரிசிக்கு,*
*பம்பாய்.*
*அன்புள்ள ஐயா,*

'ஹரிஜனி'ல் ஒரு நிருபர் பல்வேறு விஷயங்களைப் பற்றி எழுதியிருப்பதுடன், ஒரு யோசனையும் கூறியுள்ளார். கணேஷ் கிந்திலுள்ள பரந்த நிலத்தில் உணவுப் பொருட்களைப் பயிரிடும்

படி பம்பாய் அரசாங்கத்தை நான் அணுக வேண்டும் என்பதும், தேவைப்படுவோருக்கு அவற்றைக் கொடுக்க வேண்டும் என்ப துமே அந்த யோசனையாகும். அது புத்திசாலித்தனமான ஒரு யோசனை என்று நான் நினைக்காமலிருக்க முடியவில்லை. அதை வைஸ்ராய் மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்வாராயின், அதன்மூலம் அதிசயிக்கத் தக்க பலன்கள் ஏற்படும்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 218

அரசாங்க மாளிகை,
பம்பாய், 5-3-1946

அன்புள்ள ஐயா,

கணேஷ்கிந்திலுள்ள அரசாங்க மாளிகை நிலத்தில் உணவுப் பொருட்கள் பயிரிடுவதையொட்டி நீங்கள் 1௨ எழுதிய கடிதம் வந்து சேர்ந்தது என்பதை நன்றியுடன் தெரிவித்துக் கொள் கிறேன். விரைவில் உங்களுக்கு ஒரு பதில் அனுப்பப்படும்.

தங்கள் உண்மையுள்ள,

ஜே. எஸ். டிரு

## 219

அரசாங்க மாளிகை,
பம்பாய், 9-3-1946

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

கணேஷ்கிந்திலுள்ள அரசாங்க மாளிகையின் நிலத்தில் உணவுப் பொருட்கள் பயிரிடும் விஷயமாக நீங்கள் 1௨ எழுதிய கடிதம் கிடைத்தது.

சென்ற சில ஆண்டுகளில், அந்த நிலத்தின் பெரும் பகுதி யிலும் பயிர்கள் போடப்பட்டிருக்கின்றன. மீதியுள்ள பரந்த நிலத்திலும் கால்நடைகளின் தீவனத்திற்காக புற்கள் பயிரிடப் பட்டிருக்கின்றன. சில இடங்களில் நிலம் முற்றிலும் செழுமை யற்றதாக இருக்கிறது. இதுவரை பயிரிடப்படாத நிலங்களைப் பரிசீலனை செய்து, எந்தப் பிரதேசத்தில் மேற்கொண்டு பலன் தரத்தக்க முறையில் பயிரிடலாம் என்பதைக் கூறும்படி வைஸ் ராய் சமீபத்தில் விவசாய இலாகாவைக் கேட்டிருக்கிறார்.

வைஸ்ராய் கணேஷ்கிந்தில் வந்து வசிக்கும்போது, இது வரை என்ன பயிர்கள் போடப்பட்டிருக்கின்றன என்பதை

உங்களுக்குக் காட்டுவதற்காக, உங்களை அந்த நிலங்களைச் சுற்றி அழைத்துச் செல்ல சந்தர்ப்பம் கிடைக்கும் என்று நம்புகிறார்.

தங்கள் உண்மையுள்ள,

ஜே. எஸ். டிரு

## 220

பிர்லா மாளிகை,
பம்பாய், *13-3-1946*

அன்புள்ள ஸ்ரீ டிரு,

காந்திஜி சென்ற 1உ எழுதிய கடிதத்திற்கு நீங்கள் 9உ பதில் எழுதியிருக்கிறீர்கள். உங்கள் பதிலுக்காக நன்றி செலுத்த காந்திஜி விரும்புகிறார். ஒருநாள் வைஸ்ராயுடன் கணேஷ்கிந்தி லுள்ள நிலங்களைப் பார்க்கும் சந்தர்ப்பத்தை அவர் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்.

உங்கள் உண்மையுள்ள,

அமிருத கௌரி

## பகுதி பன்னிரண்டு

# தனிப்பட்டவர்களுக்கு சலுகை

## 221

## உப்பு உற்பத்திக் கட்டுப்பாடு

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி, 11-3-1946*

*எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,*

*மார்ச் 6வ நீங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. தனிப் பட்டவர்கள் உப்பு உற்பத்தி செய்வதற்கும் விற்பதற்கும் உள்ள கட்டுப்பாடுகள் அகற்றப்படவேண்டும் என்பதன் சம் பந்தமாக வைஸ்ராய் ஆலோசனை கேட்க உத்தேசித்துள்ளார். இருந்தாலும் அந்த யோசனையை ஒப்புக்கொள்வது சாத்தியமா என்பது அவருக்குச் சந்தேகமாக இருக்கிறது.*

*உங்கள் உண்மையுள்ள,*

ஜார்ஜ் அபெல்

*பின் குறிப்பு: பெண்டரல் மூனுக்கு,* திட்ட, அபிவிருத்தி இலாகாவில் ஓர் உத்தியோகம் அளிக்கப்பட்டது. அதை அவர் ஏற்றுக் கொண்டுள்ளார்.*

---

* 1942-இல் பெண்டரல் மூன், ஐ. ஸி. எஸ். சிம்லாவில் உதவி கமிஷனராக இருந்தார். ராஜகுமாரி அமிருத கௌரி கைதியானதைக் கண்டித்து அவர் அந்தரங்கமாக ஒரு கடிதம் எழுதியிருந்ததற்காக வேலையிலிருந்து நீக்கப்பட்டார். அக்கடிதம் யுத்த காலத் தணிக்கையாளரால் கண்டுபிடிக்கப்பட்டது. அவருக்கு மீண்டும் உத்தியோகம் அளிக்கப்பட்டுள்ளது என்பதையே ஸ்ரீ ஜார்ஜ் அபெல் மேலே குறிப்பிட்டிருக்கிருர்.

## 222

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *1-4-1946*

எனது அன்புள்ள ராஜகுமாரி சாகிபா,

உப்பைப்பற்றி மார்ச் 6வ நீங்கள் எழுதிய கடிதத்திற்கு இப்போது நான் பதிலளிக்க முடியும்.

தனியார் உப்பு உற்பத்தி செய்யும் விஷயமாக உள்ள எல்லாக் கட்டுப்பாடுகளையும் அகற்றிவிடவேண்டுமென காந்திஜி கூறிய யோசனை பரிசீலனை செய்யப்பட்டது. அதன் சம்பந்தமாக நான் மார்ச் 11வ அனுப்பிய பதிலில் தெரிவித்திருந்த எனது சந்தேகம் நியாயமே என்பது இப்போது ருசுவாகியிருக்கிறது. இரு சார்பிலும் கூறப்படும் வாதங்களை நான் பரிசீலனை செய்ய வேண்டிய தேவை இல்லை. பல தடவைகளிலும் அவை விவாதிக்கப்பட்டுள்ளன : அவை எல்லோரும் அறிந்தவையுமாகும். அந்த யோசனையை சர்க்கார் அங்கீகரிக்க முடியாதவர்களாக இருக்கிறார்கள்.

உங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

## 223

# பிரிட்டிஷ் பிரதிநிதிகளுடன் கடிதப் போக்குவரத்து

வால்மீகி மந்திர்,
ரீடிங் ரோட், புது டில்லி, *2-4-1946*

லார்டு பெதிக் லாரென்ஸ்,
இந்தியா மந்திரி,
புது டில்லி.

அன்புள்ள லார்டு லாரென்ஸ்,

உங்களுடனும், சர் ஸ்டாபோர்டுடனும் தனித்த முறையில் சில விஷயங்களைப்பற்றி விவாதிக்கும்படி நான் நமது பரஸ்பர நண்பரான சுதீர் கோஷிடம் கூறினேன். அவற்றை நான் எழுத்து மூலம் குறிப்பிடுவதையே நீங்கள் விரும்புவீர்களென அவர் என்னிடம் கூறுகிறார்.

கோடிக்கணக்கான வாயில்லா மக்களைத் தவிர சுதந்திர ஆர்வமுள்ள யாவருக்கும், அவர்கள் காங்கிரஸ்காரர்களாயினும் அல்லவாயினும், ஒரு விஷயம் பொதுவானதாக இருக்கிறது.

அதாவது பலாத்காரக் குற்றம் சாட்டப்பட்டவர்களாயினும், அல்லவாயினும், அரசியல் கைதிகளை உடனடியாக விடுதலை செய்துவிடவேண்டும். சுதந்திரம் அத்தியாவசியம் என்பது பொதுவான லட்சியமாகிவிட்டதால், அவர்கள் இப்போது அரசாங்கத்திற்கு அபாயகரமானவர்களாக இருக்க முடியாது. ஸ்ரீ ஜெயப்பிரகாச நாராயணும், டாக்டர் லோஹியாவும் கற்றறிஞர்கள், பண்பாடு உள்ளவர்கள். எந்த சமூகமும் அவர்களைக் குறித்துப் பெருமை அடையும். எவரையும் தலைமறைவாக இருப்பவராகக் கருதும் காலம் மலையேறிவிட்டது. கைதிகளை விடுதலை செய்யும் பிரச்னையை, வரப்போகும் தேசீய அரசாங்கத்தின் பொறுப்பில் விடுவதை, யாரும் அறிந்து கொள்ளவோ அல்லது பாராட்டவோ முடியாது. அந்தப் பிரச்னையைத் தீர்க்காமல் சுதந்திரம் அளிப்பது கண்ணியமாக இராது.

மற்றொரு பிரச்னை மக்களைப் பாதிப்பதாகும். நான் உப்பு வரியையே குறிப்பிடுகிறேன். அரசாங்கத்திற்கு வருமானம் கிடைக்கக்கூடிய ஓர் இனம் என்ற முறையில் அது மிகவும் அற்பமே. மக்களுக்குத் தொல்லை விளைவிக்கக் கூடிய இனம் என்ற முறையில், அதனல் ஏற்படக் கூடிய விபரீதம் வர்ணிக்கமுடியாதது. உப்பு வரி சம்பந்தமான ஏகபோக பாத்தியம் என்ற சுமை மக்களைப் பாதித்து வருமாயின், அவர்கள் சுதந்திரத்தைப் பாராட்ட முடியாது. அதன் சம்பந்தமான வாதங்களைக் கூறி உங்களுக்கு அலுப்பு ஏற்படும்படி நான் செய்யக் கூடாது. சுதந்திரத்திற்கு இந்தியர்களின் மனத்தைப் பக்குவப்படுத்தவேண்டும் என்பதற்காகவே, இந்த இரண்டு விஷயங்களையும் நான் குறிப்பிட்டிருக்கிறேன். இவற்றைப்பற்றி, வேறு சூழ்நிலையில் நான் ஸ்ரீ கேஸியுடன்* விவாதித்தேன் என்பதை இங்கே நான் கூறலாம். இப்போது நான் அதே விஷயமாக தற்போதைய வங்காள கவர்னருடன் கடிதப்போக்குவரத்து வைத்துக் கொண்டிருக்கிறேன். உப்பு வரி சம்பந்தமாக ஸ்ரீ அபெல்லிடமிருந்து இன்று எனக்கு ஒரு கடிதம் வந்தது. எனது யோசனையை அரசாங்கம் அங்கீகரிப்பதற்கில்லை என்று அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

* முந்திய பக்கங்களில் வெளியாகியுள்ள 183, 184, 186-ஆம் கடிதங்களைப் பார்க்கவும்.

## 224

# உப்பு வரி ரத்தாகுமா?

*வால்மீகி மந்திர், ரீடிங் ரோட்,*
*புது டில்லி, 6-4-1946*

மேன்மை தங்கிய வைஸ்ராய்,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

இம்மாதம் 3-ஆம் தேதி மந்திரி சபைத் தூது கோஷ்டியுடன் நான் விவாதித்த இரண்டு விஷயங்களைப் பற்றியே இக்கடிதம் எழுதுகிறேன்.

சர் ஆர்ச்சிபால்டு ரௌலண்ட்ஸ் நேற்றிரவு என்னுடன் உப்பு வரியைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். மூன்று மாதங்களுக்கு முன் அவர் என்னைச் சந்தித்திருந்தால், உப்பு வரி ரத்து செய்யப் பட்டிருக்கும் என்று அவர் எங்களுடைய பேச்சின் முடிவில் பட்ட வர்த்தனமாக ஒப்புக்கொண்டார்.* என்னுடைய கடிதம் சாத்திய மானவரையில் சுருக்கமாக இருக்க வேண்டும் என்பதற்காக எங்களுடைய முக்கியமான பேச்சின் மற்றப் பகுதியை நான் விட்டுவிடுகிறேன். ஆர்ச்சிபால்டு ரௌலண்ட்ஸ் அவ்விதம் ஒப்புக்கொண்டதால், அவருடன் மேற்கொண்டு பேசுவதற்காக ஸ்ரீ சுதீர் கோஷை அனுப்பினேன். இன்னும் மூன்று மாதங்களில் அவர் அதை ரத்து செய்துவிட உத்தேசித்துள்ளார். மேலே உள்ளவர்களின் ஆதரவு இருந்தாலன்றி, ஒரு தனிப்பட்ட அதி காரி எவ்வளவு சக்தி வாய்ந்தவராயினும், திறமைசாலியாயினும் எதுவும் செய்ய முடியாது என்பதை நான் அறிவேன். எனவே, ஜீவகாருண்யமான இந்த வேலையில் உங்களுடைய உதவியை நான் நாடுகிறேன். மந்திரி சபைத் தூது கோஷ்டியினிடம் நான் சமர்ப்பித்த யோசனையை, அதைக் காட்டிலும் முக்கியமாகக் கருதுகிறேன். மிகவும் கண்ணியத்துடனும், கௌரவத்துடனும் எங்கேயோ மூலையில் இருக்கும் ஒரு கிராமத்திலுள்ள பரம ஏழையும் கூட உடனடியாக உணர்ந்துகொள்ளக் கூடிய விதத் தில் சுதந்திரம் ஏற்பட வேண்டும். உங்களுக்கு விருப்பம்

---

* மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ள சர் ஆர்ச்சிபால்டு, வைஸ்ராய் நிர்வாக சபை யில் நிதி மந்திரியாக இருந்தார். காந்திஜியும் நிதி மந்திரியும் பேசிக்கொண்டிருந்த போது, உப்பு வரியை ரத்து செய்வதை ஆதரித்துத் தமது மனம் மாறியிருப்பதாகவும், இருந்தாலும் உப்பு வரி ரத்து செய்யப்பட்ட பிறகும் கூட அரசாங்கத்திற்கு உப்பு உற்பத்திசெய்யும் ஏக போக பாத்தியம் இருக்கவேண்டுமென்பதே தமது அபிப்பிராயம் என்றும் கூறினார். ஆனால் அவ்விதம் செய்வதால், உப்பு வரியை ரத்து செய்யும் நோக்கம் பெரிதும் வீணாகிவிடும் என்று காந்திஜி கருதினார். கடைசியாக ஆர்ச்சி பால்டின் வேண்டுகோளுக்கிணங்க, காந்திஜி ஒரு நகல் பிரகடனத்தை அவருக்கு அனுப்பிவைத்தார். அந்தப் பிரகடனத்தின் மூலம் உப்பு வரி ரத்தாகிவிட்டது என்பது அறிவிக்கப்பட்டது. அத்துடன் காந்திஜி ஒரு குறிப்பும் அனுப்பியிருந்தார். மேற் கண்ட பிரகடனத்தையும், குறிப்பையும் பின்சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

இருந்து, நேரமும் இருந்தால், மேற்கொண்டு இதன் சம்பந்த மான விவரங்களை நீங்கள் சுதீர் பாபுவிடமிருந்து தெரிந்துகொள் ளலாம். அவர்தான் இந்தக் கடிதத்தைக் கொண்டுவருகிறார்.

கைதிகள் எந்த நேரத்திலும் விடுதலை அடையலாம் என்று தெரிவதால், அவர்களைப் பற்றி நான் எதுவும் கூறப்போவதில்லை.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 225

சந்த்விக், சிம்லா மேற்கு,
*3-5-1946*

*அன்புள்ள ஸ்ரீ அபெல்,*

உப்புப் பிரச்னை என் மூளையைவிட்டு அகலவேயில்லை. ஆங்கி லேயர்களின் கௌரவத்துக்குக் குந்தகம் ஏற்படாமல் இருக்க வேண்டுமாயின், இந்த ஏகபோக பாத்தியத்தை ரத்து செய்யும் விஷயமாக ஒரு நாள்கூடத் தாமதம் ஏற்படக் கூடாது என்று நான் கூறுகிறேன்.

ஏகபோக பாத்தியம் எவ்வளவு மோசமானது என்பதை வைஸ்ராய் அறிந்துகொள்ளும்படி செய்வதற்காகவே ஸ்ரீ பியாரி லால் தயாரித்துள்ள விவரமான குறிப்பை இத்துடன் இணைத் திருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 226

வைஸ்ராய் முகாம், இந்தியா,
சிம்லா, *6-5-1946*

*அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

உப்பு வரி பற்றி மே 3௳ தாங்கள் எழுதிய கடிதத்திற்கா கவும், ஸ்ரீ பியாரிலாலின் குறிப்பிற்காகவும் நான் நன்றியுள்ள வனாக இருக்கிறேன்.

நீங்கள் முதன் முதலாக அப்பிரச்னையை அவரிடம் கூறியதி லிருந்து, வைஸ்ராய் தாமே நேரில் அந்தப் பிரச்னையை ஆராய்ந் துள்ளார். எனினும் அவ்விஷயமாக இப்போது நடந்துவரும் விசாரணையின் முடிவு எப்படியிருக்கும் என்பதை அவர் கூறுவது இயலாத காரியம். அவ்விஷயத்தில் நீங்கள் எவ்வளவு ஆழ்ந்த

அக்கறை கொண்டிருக்கிறீர்கள் என்பதை அவர் உணர்ந்துள்ளார். எனினும் உப்பு வரியை ரத்து செய்வதால் ஏற்படக்கூடிய விளைவுகளையும், எந்தப் புதிய அரசாங்கத்திற்கும் அதனால் நேரக்கூடிய நஷ்டத்தையும் முற்றிலும் பரிசீலனை செய்ய வேண்டும் என்றும் அவர் கருதுகிறார்.

தங்கள் உண்மையுள்ள,

ஜி. ஈ. பி. அபெல்

## 227

வைஸ்ராய் முகாம், இந்தியா,
சிம்லா, *10-5-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உடனே தகுந்த முறைகளைக் கைக்கொண்டாலொழிய, உப்பு வரியைக் குறைப்பதாலோ அல்லது ரத்து செய்வதாலோ உப்புப் பஞ்சம் ஏற்படுவது நிச்சயமென வதந்திகள் உலவிவருகின்றன என்று நிதி மந்திரி எனக்கு அறிவித்துள்ளார். வியாபாரிகளும், மொத்தமாக சரக்கு எடுப்பவர்களும், உப்பு உற்பத்தியாளர்களிடமிருந்து உப்பு வாங்க முன்வரவில்லை. லாரிகள் இல்லாததால், வரி கொடுத்து வாங்கிய ஏராளமான உப்பு மூட்டைகளைக் குறைந்த விலைக்கு விற்கும்படி நேர்ந்துவிடுமோ என்று அவர்கள் அஞ்சுகிறார்கள். பம்பாய் உப்பு வியாபாரிகளிடமிருந்தும், வியாபாரிகள் சங்கத்தினிடமிருந்தும் பலமான விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன.

உப்புப் பஞ்சம் ஏற்பட்டால், ஏழை மக்களுக்குத் துன்பம் உண்டாகும். எனவே அத்தகைய பஞ்சத்தைத் தடுப்பதற்காக, பத்திரிகைகள்மூலம் சர்க்கார் ஓர் அறிக்கை விடுக்க உத்தேசித்திருக்கிறார்கள். அந்த அறிக்கையின் பிரதி ஒன்றை இத்துடன் இணைத்து அனுப்பியிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

வேவல்

### மேற்கண்ட கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்த அறிக்கை

உப்பு வரி குறைக்கப்படலாம் அல்லது ரத்து செய்யப்படலாம் என்ற வதந்திகளின் விளைவாக உற்பத்தியாளர்கள், வியாபாரிகள் ஆகியோரின் மனத்தில் சந்தேகமும், நிச்சயமற்ற நிலையும் ஏற்பட்டிருக்கின்றன. அதன் காரணமாக, உப்பு வாங்க யாரும் உற்சாகத்துடன் முன்வரவில்லை. எனவே உப்பு வியாபா

ஏழும், உற்பத்தியும் மந்தமாகியிருக்கின்றன. போதாக்குறைக்கு, தற்போதுள்ள போக்குவரத்துக் கஷ்டங்களும், மழைக் காலத்தில் ஏற்படக்கூடிய இன்னும் அதிகமான போக்குவரத்துக் கஷ்டங்களும் உப்புப் பஞ்சத்தை உண்டாக்கிவிடலாம் என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இத்தகைய அபாயங்களெல்லாம் ஏற்படாமல் தவிர்ப்பதற்காக, அந்தப் பிரச்னை சம்பந்தமான எல்லா அம்சங்களையும் பூரணமாக விசாரித்த பிறகே, எத்தகைய மாறுதலையும் அமலுக்குக் கொண்டுவர அரசாங்கம் விரும்புகிறது. அவ்விதம் பரிசீலனை செய்ய மிகவும் காலதாமதமாகும். தீர்வை செலுத்தப்பட்ட கையிருப்புகளெல்லாம் தீருவதற்காக உப்பு வரியில் அரசாங்கம் எவ்வித மாறுதலும் செய்யுமுன், தாராளமாக அவகாசம் கொடுத்து ஒரு முன்னறிவிப்பை வெளியிடுவார்கள்.

# 228

# பொறுப்பற்ற மனம்

*சந்த்விக், சிம்லா மேற்கு,*
*11-5-1946*

*மே. த. வைஸ்ராய்,*
*சிம்லா.*

*அன்புள்ள நண்பருக்கு,*

*உப்பைப் பற்றி 10வ தாங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றியுள்ளவனாக இருக்கிறேன்.*

*பொறுப்பற்ற மனம் எப்படி வேலை செய்கிறது என்பதற்கு இது ஒரு சிறந்த உதாரணமாகும். கௌரவத்தைப் பற்றி பிரிட்டிஷ் சர்க்கார் கவலைப்படவில்லை என்று, சென்ற திங்கட் கிழமை நான் மௌனமாக இருந்தபோது என்னிடம் கூறினீர்கள். எனது மௌனம் முடிந்ததும் மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் வந்தார்கள். பின்னர் நாங்கள் கடினமான பெரிய அரசியல் விஷயங்களில் மூழ்கிவிட்டோம்.*

*நீங்கள் அன்புடன் எனக்கு அனுப்பிய அரசாங்க அறிக்கை, ஒரு மானக்கேடான விஷயம் என்பதே எனது அபிப்பிராய மாகும். என்னுடைய மனம் எப்போதும் பாமர மக்களையே சிந்திக்கிறது; அவர்களுடைய மன நிலைக்கு இணங்க நடந்து கொள்வதையே விரும்புகிறது. அவ்விஷயமாக எனது மனத்திலிருந்து எழும் நேரடியான விடை, உப்பு உற்பத்தி சம்பந்தமாக வெறுக்கத்தக்க ஏகபோக பாத்தியத்தையும், வரியையும், குறிப்பாக, பஞ்சம் ஏற்பட்டுள்ள இக்காலத்தில் ரத்து செய்துவிட வேண்டும் என்பதேயாகும். ஆனால், நீதியை அடிப்படையாகக் கொண்ட இந்த சாதாரண நடவடிக்கையைக் கூட, உங்களுக்குப்*

பின் எப்போது வந்தாலும், அவ்விதம் வரப்போகும் சுதந்திர இந்திய அரசாங்கத்தினிடம் விட்டுவிட வேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்கள்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 229

*வைஸ்ராய் முகாம், இந்தியா,*
*(சிம்லா), 11-5-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உப்பு வரியைப்பற்றிய உங்களுடைய கடிதத்திற்காக நன்றி. இவ்விஷயமாக நீங்கள் விவாதிக்க அக்கறை கொண்டால், அதைப்பற்றி உங்களுடன் பேச நான் மகிழ்ச்சி அடைவேன். இன்று மாலை 7 மணிக்கு உங்களுக்கு வசதியாக இருக்குமா?

தங்கள் உண்மையுள்ள,

வேவல்

## 230

*வைஸ்ராய் முகாம், இந்தியா*
*(சிம்லா), 12-5-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உங்களுடன் நான் பேசியதன் பயனாக, உப்பு வரிபற்றிய அறிக்கையை வெளியிடாமல் நிறுத்தி வைக்க ஏற்பாடுசெய்திருக்கிறேன். புகார் செய்து கொண்ட வர்த்தக ஸ்தாபனங்களுக்கு, உப்பு வரி உடனடியாக ரத்து செய்யப்படமாட்டாது என்றும், அவ்விஷயமாக நியாயமான முன் எச்சரிக்கை கொடுக்கப்படும் என்றும் நிதி மந்திரி அறிவிப்பார். இனியும் போதிய அளவு உப்பு கையிருப்பில் இருக்க இது உதவியாக இருக்குமென்று அவர் நம்புகிறார்.

தங்கள் உண்மையுள்ள,

வேவல்,

## 231

# காந்திஜியின் திட்டம்

*வால்மீகி மந்திர்,*
*ரீடிங் ரோட், புது டில்லி, 25-9-1946*

அன்புள்ள ஸ்ரீ கிரீன்பீல்ட்,

நான் அளித்த உறுதிமொழிக்கு இணங்க இத்துடன் எனது திட்டத்தை அனுப்பியிருக்கிறேன். சீர்குலைவு, அரசாங்கத்துக்கு

ஏற்படும் நஷ்டம் எல்லாவற்றையும் குறைக்க அதில் நான் முயற்சித்திருக்கிறேன். இனி உப்பு, தீர்வைக்கு உரிய ஒரு பொருளாக இராது. என்றாலும், உணவின் துணைப் பொருளான அதைச் சுத்தம் செய்யும் முறையும் மனிதனுக்காகவும் மிருகத்திற்காகவும் அதன் உற்பத்தியும் நாளுக்கு நாள் வளர்ச்சியடைந்து வரும். மக்களுக்குச் சுமையாக இருந்துவரும் அந்த வரியை ரத்து செய்வதால் ஏற்படும் நஷ்டம், உப்பு அதிகமாக வியாபாரம் ஆவதன் மூலம் ஈடு செய்யப்பட்டுவிடும்.

இதில் ஏதாவது குற்றம் குறைகள் இருப்பதை நீங்கள் கண்டால், சிறிதும் தயக்கமின்றி அவற்றைத் தயவு செய்து என்னிடம் கூறுங்கள்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

காந்திஜி தயாரித்து, மேற்கண்ட கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்த திட்டத்தின் விவரம் பின்வருமாறு :

1946 அக்டோபர் முதல் தேதியிலிருந்து உப்பு உற்பத்தி சம்பந்தமான ஏகபோக பாத்தியம் ரத்தாகிவிடும். இனிமேல் விதிக்கப்படும் சில விலக்குகளுக்கும் நிபந்தனைகளுக்கும் உட்பட்டு, 1947 ஜனவரி முதல் தேதியிலிருந்து உப்பு வரியும் ரத்தாகிவிடும்.

எல்லோரும் அறிந்த இர்வின்-காந்தி ஒப்பந்தத்திலுள்ள ஜீவகாருண்ய ஷரத்து முற்றிலும் அமலில் இருந்துவரும். உப்பு வரி செலுத்தாமல் ஏமாற்றும் தனிப்பட்ட உப்பு உற்பத்தியாளர்கள் விஷயத்தில் அதிகாரிகளின் பரிசோதனையும் தலையீடும் இனி நின்றுவிடும். உப்பளங்கள், உப்புத் தொழிற்சாலைகள் ஆகியவை சம்பந்தமான சர்க்கார் கட்டுப்பாடு, உப்பு உற்பத்தித் தொழில் முற்றிலும் தேசீய மயமாகும்வரையில் சிறிதும் வழுவின்றித் தொடர்ந்துவரும். ஆனால், அந்தத் தொழிற்சாலைகளும், உப்பளங்களும், தனிப்பட்ட உற்பத்தியாளர்களைப் போல் அல்லாமல், டிசம்பர் 31 வரையில் வரி செலுத்திவரவேண்டும்.

மேற்கண்ட அறிக்கையைப் பூரணமாக அமலுக்குக் கொண்டுவருவதற்காக, உப்புச் சட்டத்திலோ அல்லது விதிகளிலோ ஏதாவது மாறுதல் செய்ய வேண்டியது அவசியமாயின் அதை உடனே செய்யவேண்டும். எனினும் அவ்வித மாறுதலைச் செய்வது, அந்த அறிக்கை உடனே அமலுக்கு வருவதற்குத் தடையாக இருக்கக் கூடாது.

## 232

ரெவின்யூ சென்ட்ரல் போர்டு,
புது டில்லி, *25-9-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இன்று நீங்கள் எழுதிய கடிதத்திற்காகவும், அதனுடன் இணைக்கப்பட்டிருந்த அறிக்கைக்காகவும் மிக்க நன்றி.

நான் ஏற்கனவே இவ்விஷயமாக நிதி மந்திரியுடன் கலந்து ஆலோசித்து வருகிறேன். உங்களுடைய திட்டத்தை நாங்கள் மிகுந்த அக்கறையுடன் பரிசீலனை செய்வோம் என்பதை நீங்கள் நிச்சயமாக நம்பலாம்.

தங்கள் உண்மையுள்ள,
**எச். கிரீன்பீல்டு**

## 233

இந்திய அரசாங்கம்,
நிதி இலாகா (ரெவினியூ டிவிஷன்),
புது டில்லி, *17-4-1947*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

சென்ற வருடம் நாம் உப்புப் பிரச்னைபற்றி விவாதித்த போது நான் கூறியது உங்களுக்கு நினைவிருக்கலாம். இந்தியாவில் உப்பு உற்பத்தி சம்பந்தமாக நான் ஒரு துண்டுப் பிரசுரத்தைத் தயாரித்து வருவதாகக் கூறினேன். தற்போது உப்பு உற்பத்தி, விநியோகம், மக்கள் உட்கொள்ளும் அளவு ஆகியவை பற்றிய பொதுவான விவரங்களைக் கொடுப்பதே அந்தத் துண்டுப் பிரசுரத்தின் நோக்கமாகும். எதிர்காலத்தில் உப்பு நிர்வாகம் எவ்விதம் இருக்கவேண்டும் என்பதை முடிவு செய்ய மந்திரி சபைக்கு உதவியாக இருக்க வேண்டும் என்பதும் அதன் நோக்கமாகும். இவ்விஷயத்தில் நீங்கள் காட்டிய ஆழ்ந்த அக்கறை எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. அந்தத் துண்டுப் பிரசுரத்தை நீங்கள் படிக்க விரும்பலாம் என்பதற்காக அதன் பிரதி ஒன்றை உங்களுக்கு அனுப்புகிறேன். அந்தத் துண்டுப் பிரசுரத்தைப் பற்றியோ அல்லது பொதுவாக அவ் விஷயத்தைப் பற்றியோ நீங்கள் ஏதாவது அபிப்பிராயம் கூற விரும்பினால், அது மிகவும் வரவேற்கப்படும் என்பதை நான் சொல்லத் தேவையில்லை.

நல் வாழ்த்துக்கள்.

தங்கள் உண்மையுள்ள,
**எச். கிரீன்பீல்டு**

## 234

வால்மீகி மந்திர், ரீடிங் ரோடு,
புது டில்லி, 6-5-1947

அன்புள்ள ஸ்ரீ கிரீன்பீல்டு,

நீங்கள் சென்ற மாதம் 17உ எழுதிய கடிதம் 25உ எனக்குக் கிடைத்தது. அப்போது நான் டில்லிக்கு வரத் தயாராகிக் கொண்டிருந்தேன். அக் கடிதத்திற்காக உங்களுக்கு நன்றி.

நான் கூறும் யோசனைகளை அந்தத் துண்டுப் பிரசுரத்தில் சேர்ப்பதற்காக அதை எனக்கு அனுப்பியிருக்கிறீர்களா? அப்படியாயின், நான் எந்தத் தேதிக்கு முன் அதை உங்களுக்கு அனுப்ப வேண்டும் என்பதைத் தயவு செய்து அறிவியுங்கள். எனக்குச் சிறிது ஓய்வு இருப்பதாகத் தோன்றும்போது, அந்தத் துண்டுப் பிரசுரத்தை வாசிப்பதற்காக அதை நான் என்னுடன் எடுத்துச் செல்லுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 235

இந்திய அரசாங்கம்,
நிதி இலாகா (ரெவினியூ டிவிஷன்),
புது டில்லி, 7-5-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஸ்ரீ கிரீன்பீல்டுக்கு மே 6உ நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. அவர் தற்காலிகமாக ரஜாவில் சென்றிருக்கிறார். எனவே உங்களுடைய கடிதத்திற்கு நான் பதில் எழுதுகிறேன். அவரது ஸ்தானத்தில் இப்போது நான் ரெவினியூ சென்ட்ரல் போர்டு அங்கத்தினராக இருக்கிறேன்.

நீங்கள் விரும்பும் எத்தகைய யோசனைகளும் வரவேற்கப்படும். ஆனால், தயவு செய்து உங்களுக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவு காலம் எடுத்துக்கொள்ளுங்கள். பிரசுரத்தைத் திருத்துவதற்காக குறிப்பிட்ட தேதி எதுவும் நிர்ணயிக்கப்படவில்லை.

உங்கள் உண்மையுள்ள,
எப். எம். இன்னஸ்

## 236

# ஏகபோக உரிமை கூடாது

பங்கி காலனி,
புது டில்லி, 22-6-1947

அன்புள்ள ஸ்ரீ கிரின்பீல்டு,

உப்பைப் பற்றி நீங்கள் தயாரித்துள்ள சுவை ததும்பும் பிரசுரத்தை இப்போதுதான் வாசித்து முடித்தேன். அது அச்சகத்திற்கு அனுப்பப்பட்டிராவிடில், அதில் இன்னும் சில நல்ல அம்சங்களைச் சேர்க்கலாமெனில், எதிர்கால அபிவிருத்தி பற்றிய யோசனைகள் அடங்கிய பத்தாம் அத்தியாயத்தில், இன்னும் சில விவரங்களைச் சேர்க்க வேண்டுமென்று நான் யோசனை கூறுவேன். அதாவது குறைந்த அளவில் பொதுமக்கள் உப்பை உற்பத்தி செய்வதற்கான மலிவான, பலன் தரத்தக்க முறைகளை அவர்கள் அறிந்துகொள்ளும்படி செய்ய வேண்டும்.

உப்பு நிர்வாக சபை ஒன்றை அமைக்க வேண்டும் என்று நீங்கள் யோசனை கூறியிருக்கிறீர்கள். அந்த யோசனை கவர்ச்சியாகத்தான் இருக்கிறது. எனினும், உற்பத்தியையும் விநியோகத்தையும் குறிப்பிட்டவர்களுக்கு அளிக்கும் 'லைசன்ஸ்'மூலம் கட்டுப்படுத்தும் யோசனையை நான் சிறிதும் விரும்பவில்லை. தற்போதைய உப்புப் போக்குவரத்தை நான் பரிசீலனை செய்து வருகிறேன். அது மிகவும் அதிருப்தியளிப்பதாக இருக்கிறது. விசேஷ கண்டிராக்டர்கள் உப்பு உற்பத்தி செய்வதாகவும், அதன் விலைகளைக்கூட அவர்கள் தங்கள் விருப்பப்படி கட்டுப்படுத்துவதாகவும் கூறப்படுகிறது. எனக்குக் கிடைத்துள்ள இந்தத் தகவல் தவறாக இருக்கலாம். அது தவறு அல்லவெனில், அந்த முறை ஒரு பெரிய இடையூறே ஆகும். மனத்திற்கு மகிழ்ச்சியளிக்கக் கூடிய விதத்தில் நாம் பல தடவை பேசிக்கொண்டிருந்தோம். ஒரு சமயம் அவ்விதம் பேசிக்கொண்டிருந்தபோது நான் தங்களிடம் கூறிய யோசனைக்குக் கட்டுப்பட்டு நடக்கத் தயாராக இருக்கிறேன். அதாவது அரசாங்கத்தினுலோ அல்லது அரசாங்கத்தின் மேற்பார்வையிலோ உப்பு உற்பத்தி செய்யப்பட வேண்டும். எனினும் ஏகபோக உரிமை என்று எதுவும் இருக்கக் கூடாது. யார் விரும்பினுலும் அவரது சொந்தப் பொறுப்பில் அவ்விஷயமாக அரசாங்கத்துடன் போட்டி போடலாம். அவ்விதம் செய்வதால், மலிவான விலைக்குச் சிறந்த ரக உப்பு உற்பத்தியாகும். அக்கறையுடனும், கவனத்துடனும், விசுவாசத்துடனும் இவ்விதம் செய்வதன்மூலம், மக்களுக்கும் மிருகங்களுக்கும், உப்பிட்டு வைக்கும் உணவுப் பொருட்களுக்கும், கைத்தொழிலுக்கும் தேவையான உப்பு முழுவதையும் இந்தியா உற்பத்தி செய்ய முடியும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 237

# கட்டுப்பாடு அவசியம்

*ரெவின்யூ சென்ட்ரல் போர்டு,*
*முகாம் : சிம்லா, 28-6-1947*

*அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

*சென்ற 22வ ஸ்ரீ கிரீன்பீல்டுக்குத் தாங்கள் எழுதிய கடிதத் திற்காக நன்றி செலுத்தவே இக்கடிதம் எழுதுகிறேன். ஸ்ரீ கிரீன் பீல்டு ரஜாவில் இங்கிலாந்துக்குச் சென்றிருக்கிறார். அந்த ஸ்தா னத்தில் நான் தற்காலிகமாக இருந்துவருகிறேன்.*

*உங்களுடைய யோசனைக்கு இணங்க, சிறிய அளவில் உப்பு உற்பத்தி செய்வதற்கான மலிவான, பலன் தரத்தக்க முறை களின் விவரம் அடங்கிய ஒரு நகலைத் தயாரிக்க நான் ஏற்பாடு செய்துவருகிறேன். எனினும் இதை, பத்தாம் அத்தியாயத்தில் சேர்ப்பதைக் காட்டிலும் துண்டுப் பிரசுரத்தின் பின் சேர்க்கை யாக சேர்த்துக்கொள்ளலாம். உப்புத் தொழிலின் எதிர்கால வளர்ச்சியைப் பற்றிய பொதுவான விவரங்களே அந்த அத்தியா யத்தில் அடங்கியிருக்கின்றன.*

*உத்தேசிக்கப்பட்டுள்ள உப்பு போர்டைப் பற்றியும், லைசன்ஸ் மூலம் உற்பத்தியையும் விநியோகத்தையும் கட்டுப்படுத்துவது பற்றியும் நீங்கள் கூறியுள்ள அபிப்பிராயங்களை யொட்டி, இப் போது திட்டவட்டமாக எதுவும் கூறுவது கடினமாகும். உப்புச் சட்டத்தின் எதிர்காலம் நிச்சயமற்றதாக இருக்கிறது. ஏனெனில் தற்போது இந்த அரசாங்கமோ குறிப்பிட்ட எந்தக் கொள்கை யையும் பின்பற்றுவதாக உறுதி கூறமுடியாது. இருந்தாலும் தற்காலிகமாக நான் பின்வரும் யோசனைகளைக் கூறுகிறேன்.*

*கைத்தொழிலின் நலன்களையும், உப்பை உபயோகிக்கும் மக்களின் நலன்களையும் உத்தேசிக்கும் போது, லைசன்ஸ் முறையின்மூலம் உற்பத்தி, விநியோகக் கட்டுப்பாடு விரும்பத் தக்கது என்றே தோன்றுகிறது. உற்பத்தி செய்வதற்கு லைசன்ஸ் பெறுவதன் முக்கிய நோக்கங்கள் பின்வருமாறு :*

*1. உற்பத்தி செய்யப்படும் உப்பின் ரகத்தையும் அள வையும் மேற்பார்வையிடுவதற்குப் போதிய ஏற்பாடு ;*

*2. தொழிற்சாலைகளிலிருந்து அதிக பட்சமான உப்பு உற் பத்தியாகும்படி செய்தல் ;*

*3. அபாயகரமான, வீணான போட்டியைத் தடுத்தல் ;*

*4. உப்பின் விநியோகத்தையும், விலையையும் கட்டுப் படுத்தல் ;*

*5. உப்பு உற்பத்தி, விநியோகம் ஆகியவை பற்றிய புள்ளி விவரங்களைத் தயாரித்தல்,*

அத்தகைய கட்டுப்பாடு இராவிடில் அபாயம் ஏற்படும். அதாவது பொருளாதார முறைகளுக்கு விரோதமாக ஏராளமான உற்பத்தி ஸ்தாபனங்கள் அமைக்கப்படும். உப்பின் ரகம், விலைகள் சம்பந்தமாக மக்களின் நலன்களைக் கவனியாமல் சீக்கிரமாக லாபமடைய வேண்டும் என்ற நோக்கத்துடன், அவை அமைக்கப்படும். சரியான வழிகாட்டும் நிபுணர்களின்றி மனம் போனபடி அந்தத் தொழில் வளர அனுமதித்துவிட்டால், சலுகைகள் காட்டப்படும் சில இடங்களில் மாத்திரமே உற்பத்தியில் முழு கவனமும் செலுத்தப்படும். அதன் காரணமாக, அதன் வளர்ச்சி சீராகவும் விரும்பத்தக்கதாகவும் இராது.

அரசாங்கத்தின் ஏக போக உரிமையை ஸ்தாபிக்க வேண்டும் என்பது தற்போதைய நோக்கம் அல்ல என்று உங்களுக்கு நான் உறுதி கூறுகிறேன். உற்பத்தித் துறையிலும் சரி, விநியோகத் துறையிலும் சரி, தனிப்பட்டவர்களின் முயற்சியை அறவே ரத்து செய்துவிடும் உத்தேசமும் இல்லை. அவ்விஷயமாக அரசாங்கத்துக்கும் தனிப்பட்டவர்களுக்கும் இடையே ஓரளவு போட்டி ஏற்படும்படி செய்வதால், தொழில் திறமை வளர்ச்சியடையும். அத்துறையில் புதிய முயற்சிகளுக்கும் உற்சாகம் அளிக்கப்பட வேண்டும். நிர்ணயிக்கப்பட்டுள்ள தரத்திற்கும் விலைக்கும் பாதகம் ஏற்படாத முறையில், உற்சாகம் அளிக்கப்பட வேண்டும். அதுபோலவே, விநியோக சம்பந்தமாக உப்பு போர்டு சில கட்டுப்பாடுகளை விதிக்கும். எனினும் சாத்தியமான வரையில் தற்போதுள்ள மொத்த, சில்லறை வியாபாரிகளையே பூரணமாக உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

குறிப்பாக, பம்பாய் மாகாணத்தில் உப்புப் போக்குவரத்து மிகவும் அதிருப்திகரமாக இருந்துவருகிறது என்பது உண்மையே. தீர்வையை அகற்றியதன் பயனை, உப்பை உபயோகிக்கும் மக்களுக்கு இன்னும் யாதொரு லாபமும் ஏற்படவில்லை. இது ஏமாற்றத்தை அளிப்பதாக இருக்கிறது. இந்த நிலைமைக்கு முக்கிய காரணம் என்னவெனில், உற்பத்தி செய்யும் பருவ காலத்தில் சீதோஷ்ண நிலை சாதகமாக இராததுடன், தொழிலாளர் தகராறும் ஏற்பட்டுவிட்டதேயாகும். உப்பு விலையைக் குறைப்பதற்காகவும், தற்போதைய பற்றாக்குறையைத் தீர்ப்பதற்காகவும் உப்பை இறக்குமதி செய்ய நாங்கள் தீவிரமான முயற்சிகள் செய்துவருகிறோம். சென்ற சட்டசபைக் கூட்டத்தில் உப்பு மசோதா சட்டமாகி, உப்பு போர்டும் அமலுக்கு வந்திருந்தால், நிலைமை எவ்வளவோ திருப்திகரமாக இருந்திருக்கும்.

மேலே நான் குறிப்பிட்டிருப்பதுபோல, இவையெல்லாம் தற்காலிகமான குறிப்புகளேயாகும். எனவே, எதிர்காலக் கொள்கையைப் பற்றி நான் உறுதியாக எதுவும் கூற முடியாது. எனினும் நேரம் வரும்போது உங்களுடைய கடிதத்தை மிகுந்த

அக்கறையுடன் கவனித்து ஆவன செய்வோம் என்பதை நான் சொல்லத் தேவையில்லை.

தங்கள் உண்மையுள்ள,
எப். எம். இன்னஸ்

# 238

லாயிட்ஸ் பாங்கி மேற்பார்வை,
6, பால் மால், லண்டன், எஸ். டபிள்யூ. 1
4-8-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உங்களுடைய கடிதம், இங்கிலாந்தில் என் விலாசத்திற்கு அனுப்பப்பட்டிருக்கிறது. நான் எதிர்பார்த்ததுபோல், இப்போது நான் ரஜாவில் இங்கேதான் இருக்கிறேன் என்று உங்களுக்குச் சொல்லியிருக்கிறுர்கள்.

உப்பைப்பற்றி நான் எழுதிய ஒரு சிறிய துண்டுப் பிரசுரம் ரசமாக இருக்கிறது என்று நீங்கள் கூறியிருப்பதைக் குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன். இன்னும் அது அச்சிடப் படவில்லை. மந்திரி சபைத் தூது கோஷ்டிக்கும், பொறுக்குக் கமிட்டிக்கும், மற்றும் உடனடியாக சம்பந்தப்பட்டவர்களுக்கும் கொடுப்பதற்குப் போதிய பிரதிகளை நாங்கள் தயாரித்துவிட்டதால், நான் ரஜாவிலிருந்து திரும்பிவரும்வரையில் அதை அச்சிடுவதை ஒத்திவைப்பதென நாங்கள் தீர்மானித்தோம். ஆகையால் அதில் ஏதாவது மாறுதல்கள் செய்ய வேண்டியது அவசியமாயின், அப்படியே செய்யலாம்.

ஒழுங்காக அமைக்கப்பட்ட எந்த உப்பு நிர்வாக சபையும், சிறந்த,தங்கள் சொந்தத்திற்குத் தேவையான, மலிவான உப்பை மக்கள் உற்பத்தி செய்துகொள்ளும் விஷயமாக, தெளிவான, எளிதான கட்டளைகள் பிறப்பிக்க முடியும் என்பது நிச்சயம். இதில் முக்கியமான விஷயம் என்னவெனில், அந்த நிர்வாக சபையில் திறமைசாலிகளும் அறிவாளிகளும் அங்கத்தினர்களாக இருக்கவேண்டும்; லைசன்ஸ் பெற்ற தொழிற்சாலைகளிலிருந்து வாங்குவோரின் ஆரோக்கியத்திற்குப் பாதுகாப்பு அளிப்பது போல், தனித்த முறையில் சொந்தத்திற்கு உப்பு செய்வோரின் ஆரோக்கியத்திற்கும் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்பதை உணர்ந்தவர்களாக இருக்கவேண்டும்.

தற்போது விநியோக முறையில் அதிருப்திகரமான அம்சங்கள் நிறைய இருக்கின்றன. பொதுமக்களின் நலன்கள் பூரணமாகப் பாதுகாக்கப்பட வேண்டுமாயின், சிற்சில விஷயங்களையொட்டி வழிகாட்டுவதற்கான முறைகளையும், மற்றும் சில விஷயங்களில் கட்டுப்பாடு முறைகளையும் கைக்கொள்ள வேண்டியது அவசியம் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன்.

ஏகபோக உரிமையைப் பொறுத்தமட்டில், அவ்விஷயமாக எந்த அளவுக்குத் தாங்கள் அதிகாரத்தை மேற்கொள்வது என்பதை எதிர்கால அரசாங்கங்கள்தான் தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.

தற்காலிகமாக நான் விடைபெற்றுக்கொள்கிறேன். செப்டம்பர் மாதத்தில் நான் இந்தியாவுக்குத் திரும்பிவிடலாமென்று எதிர்பார்க்கிறேன்.

அன்புடன்,

தங்கள் உண்மையுள்ள,

எச். கிரீன்பீல்டு

பகுதி பதின்மூன்று

# மந்திரி சபைத் தூது கோஷ்டி

## 239

## பெதிக் லாரென்சுக்கு வாழ்த்து

*சேவாகிராமம், 4-8-1945*

*லார்டு பெதிக் லாரென்ஸ்,*
*லண்டன்.*

*அன்புள்ள நண்பருக்கு,*

*மந்திரி சபைத் தூது கோஷ்டியில் நீங்கள் நியமிக்கப்பட்டிருப்பதற்காக உங்களுக்கு நான் எனது வாழ்த்துக்களை அனுப்பலாமா? இந்தியா மந்திரி காரியாலயத்தை நாகரிகமான முறையில் புதைத்துவிட்டு, அதன் சாம்பலிலிருந்து ஓர் உயர்ந்த ஞாபகச் சின்னத்தை எழுப்பவேண்டுமாயின், அந்த வேலைக்கு உங்களைக் காட்டிலும் அதிகத் தகுதி வாய்ந்த ஒருவர் யார் இருக்கமுடியும்?*

*தங்கள் உண்மையுள்ள,*
**மோ. க. காந்தி**

## 240

*இந்தியா மந்திரி காரியாலயம்,*
*ஒயிட்ஹால், 14-8-1945*

*அன்புள்ள நண்பருக்கு,*

*நம்மை எதிர்நோக்கி நிற்கும் பிரச்னைகளை வெற்றிகரமாகத் தீர்ப்பதற்காக, சொந்த முறையில் உங்களுடைய மனப்பூர்வமான நல் வாழ்த்துக்களைப் பெறுவது உண்மையாகவே மிகவும் மகிழ்ச்சியை அளிக்கக் கூடியதாகும்.*

*நமக்குள் பல ஆண்டுகளாக நீடித்து இருந்துவரும் நட்பு, இந்தியாவுக்கும் இந்திய மக்களுக்கும் நிரந்தரமான நன்மை ஏற்படுவதற்கான அந்நியோன்னிய ஒத்துழைப்புக்குக் காரணமாக இருக்குமென்று பெரிதும் நம்புகிறேன்.*

என்னுடன் என் மனைவியும் உங்களுக்கு நல் வாழ்த்துக்கள் அனுப்ப விரும்புகிறாள்.

எப்போதும்,
தங்கள் உண்மையுள்ள,
எப். டபிள்யூ. பெதிக்-லாரென்ஸ்

## 241

# நல்வாழ்த்துக்களும் நம்பிக்கையும்

*11*, ஓல்டு ஸ்கொயர்,
லிங்கன்ஸ் இன், *4-10-1945*

எனது அன்பார்ந்த காந்திஜி,

என்னுடைய திருமண தினமும் உங்களுடைய பிறந்த நாளும் ஒரே நாளில் வருகின்றன என்பதை இப்போதுதான் நான் தெரிந்து கொண்டேன். காலம் கடந்துவிட்டாலுங்கூட, எனது மனைவியும் நானும் உங்களுக்கு நல்வாழ்த்துக்களையும், கலக்கமடைந்துள்ள இந்த உலகில் மகிழ்ச்சியளிக்கும் எதிர்காலத்திற்கு நாம் எல்லோரும் நமது பங்கைச் செய்ய வேண்டுமென்ற நம்பிக்கையையும் அனுப்புகிறோம்.

தங்கள் உண்மையுள்ள,
பெதிக்-லாரென்ஸ்

## 242

புனா,
*12-11-1946*

அன்புள்ள லார்டு லாரென்ஸ்,

உங்களுடைய திருமண தினமும் என்னுடைய பிறந்த நாளும் ஒரே சமயத்தில் வருவது எவ்வளவு அருமையாக இருக்கிறது. உங்கள் வாழ்த்துக்களுக்காக நன்றி. நானும் பதிலுக்கு வாழ்த்துக் கூறுகிறேன். திருமணம் ஒரு புதிய பிறவி அல்லவா? பெண்கள் வாக்குரிமை பெறுவதற்காகப் போராடிய லேடி லாரென்ஸ்மூலம்தான் நான் முதன் முதலாக உங்களை அறிந்து கொண்டேன் அல்லவா? சட்ட மறுப்புக் கலையில் அப்போது நான் ஒரு கற்றுக் குட்டியாக இருந்தேன். காலஞ் சென்ற ஸ்ரீ பாங்கர்ஸ்டுக்கும் அவரது மகளுக்கும் எனக்கும் அப்போது நட்பு முறையில் கருத்து வேற்றுமைகளும் இருந்தன. எனினும் உங்களுடைய மனைவியுடனும் காலஞ் சென்ற ஸ்ரீமதி டெஸ்பார்டுடனும் எனக்குக் கருத்து வேற்றுமை எதுவும் இல்லை.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 243

# நம்பிக்கையின் சிகரம்

வர்த்தக போர்டு,
மில்பாங்க், லண்டன்.
*19-12-1945*

எனது அன்பார்ந்த ஸ்ரீ காந்தி,

அன்பும் அமைதியும் நிறைந்த எங்களுடைய பண்டிகையான கிறிஸ்துமஸ் நெருங்கிவரும் இச் சமயத்தில், உங்களுடைய உடல் நலனுக்காகவும், உங்கள் உள்ளத்தை ஆட்கொண்டுள்ள எல்லா லட்சியங்களும் நிறைவேறுவதற்காகவும் உங்களுக்கு என்னுடைய மனப்பூர்வமான, தாழ்மையான வாழ்த்துக்களை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

வரப்போகும் மாதங்களில் நாம் ஒருவரையொருவர் நன்கு அறிந்துகொள்வதன் மூலமும், பரஸ்பரமுள்ள மரியாதை, நம்பிக்கையின் மூலமும் இந்தியாவுக்கு ஆனந்தமான, ஒளிவீசித் திகழும் ஓர் எதிர்காலத்தை உருவாக்குவது நம்மால் இயலும் என்பதே எனது ஆழ்ந்த நம்பிக்கையாகும்.

அதற்காக நீங்கள் உங்களுடைய வாழ்நாள் முழுவதும் எவ்வளவு தொண்டு புரிந்திருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். உங்களுடைய ஆசைகள் நிறைவேறுவதன்மூலம், நீங்கள் உங்களுடைய நம்பிக்கையின் சிகரத்தைக் காணும்படியான வாய்ப்பு உங்களுக்குக் கிடைக்க வேண்டும் என்பதே எனது பிரார்த்தனையாகும்.

நம்முடைய இரண்டு தேசங்களையும் எதிர் நோக்கி நிற்கும் பெரிய பிரச்னைகளை திருப்திகரமாகத் தீர்க்கும் முயற்சியில் எனது பங்கைச் செய்ய நான் எப்போதும் தயாராக இருக்கிறேன்.

இந்த கிறிஸ்துமஸ் பண்டிகையையொட்டியும், வரப்போகும் புதிய வருடத்தையொட்டியும் உங்களுக்கு எனது அன்பார்ந்த நல்வாழ்த்துக்கள்.

உங்களுடைய மிகவும் உண்மையுள்ள,
ஆர். ஸ்டாபோர்ட் கிரிப்ஸ்

## 244

சேவா கிராமம்,
வார்தா வழி (இந்தியா),
முகாம்: கௌஹாட்டி, *12-1-1946*

அன்புள்ள சர் ஸ்டாபோர்டு,

நீங்கள் 19-12-1945-இல் எழுதிய கடிதத்தைக்கண்டு ஆனந்தமடைந்தேன். வங்காளத்திலும், அஸ்ஸாமிலும் நான் சுற்றுப்பிர

யாணம் செய்துகொண்டிருப்பதால், உங்களுடைய அன்பார்ந்த வாழ்த்துக்கள் நேற்றுத்தான் கிடைத்தன. உங்களுடன் ராஜகுமாரி பேசிய விவரங்களை அவர் எனக்கு விவரித்துக் கூறினர். என்னிடம் உங்களுக்கு எவ்வளவு ஆழ்ந்த அன்பு இருக்கிறது என்பதையும் அவர் எடுத்துக் கூறினர். இந்தியர்களின் மனப்போக்கை அனுசரித்து சரியான காரியத்தைச் செய்ய வேண்டுமென்ற உறுதி இப்போது இருந்துவருகிறதென நான் நம்பிக்கொண்டிருக்கிறேன். சரியாக நடந்துகொள்வது பற்றி எட்வர்ட் மன்னர் ஒரு சமயம் கூறியது எனக்கு நன்ருக நினைவில் இருக்கிறது. அப்போது நான் தென்னுப்பிரிக்காவில் இருந்தேன். பிரிட்டிஷாருக்கும் போயர்களுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கைக்கு யார் கூறும் விளக்கம் சரி என்ற கேள்வி எழுந்தது. பிரிட்டிஷாரின் விளக்கத்தைக் காட்டிலும் போயர்களின் விளக்கத்தை அங்கீகரிப்பதே சரி என்று எட்வர்ட் மன்னர் சாந்தமாக வற்புறுத்தினர். ஆச்சரியப்படத்தக்க அந்த விதியே இந்தத் தடவையும் மீண்டும் அனுசரிக்கப்பட வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

ஏங்கி நிற்கும் இந்த உலகிற்கு புதிய வருஷமானது மிகவும் தேவையான சாந்தியையும் நல்லெண்ணத்தையும் கொண்டுவருமென உங்களுடன் நானும் நம்புகிறேன். அவற்றிற்காகவே "சாந்தி மன்னர்" (ஏசு நாதர்) வாழ்ந்தார், உயிரையும் கொடுத்தார்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 245

# ஆன்மிக ஐக்கிய சிந்தனை

மந்திரி சபைத் தூது கோஷ்டி காரியாலயம்,
வைஸ்ராய் மாளிகை, புது டில்லி, 28-3-1946

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

அடுத்த வாரம் எங்களை வந்து சந்திக்கும்படி உங்களுக்கு அனுப்பப்பட்ட அழைப்பையொட்டி ஏற்பட்ட குழப்படியைக் கேட்க நான் மிகவும் வருந்துகிறேன்.* உங்களை மீண்டும்

---

* உத்தியோக முறையில் நடவடிக்கைகள் ஆரம்பமாகுமுன், சொந்த முறையில் காந்திஜியைச் சந்தித்துப் பேசுவது சாத்தியமாக இருக்குமென மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் நம்பிவந்தனர். ஆனல் வைஸ்ராய் காரியாலயத்திலிருந்து காந்திஜிக்கு அனுப்பியிருந்த அழைப்பில், ஒரு பேட்டிக்காக ஏப்ரல் 3-ஆம் தேதி டில்லியில் இருக்க வேண்டுமென்று மாத்திரமே கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தது. மந்திரிசபைக் கோஷ்டியினர் டில்லிக்கு வந்ததும், அவ்விதம் காந்திஜிக்கு அழைப்பு அனுப்பியதைக் கேட்டு மிகவும் மனம் வருந்தி, மேற்கண்ட கடிதத்தையும், இதைத் தொடர்ந்து வெளியாகியுள்ள மற்ருெரு (தெ. 246) கடிதத்தையும் ஒரு விசேஷ தூதரின்மூலம் காந்திஜிக்கு அனுப்பி வைத்தனர்.

காணவும், சங்கடமான இந்த சமயத்தில் புத்தி சாதுர்யமுள்ள உங்களது ஆலோசனையைக் கேட்டுப் பலன் பெறவும் நான் மிகுந்த ஆர்வத்துடன் இருக்கிறேன் என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள்.

அகாதா ஹாரிசன் அடுத்த ஞாயிற்றுக்கிழமை அமைதியான சிந்தனையிலும் பிரார்த்தனையிலும் ஈடுபடும்போது, அதில் நானும் கலந்து கொள்வதாக வாக்குக் கொடுத்திருக்கிறேன். அதில் நீங்களும் கலந்து கொள்ளலாமென்றும், சிறிது நேரம் நாம் ஆன்மிக ஐக்கிய சிந்தனையில் ஈடுபடலாமென்றும் நான் நம்பி யிருந்தேன். அங்கே வருவது உங்களுக்கு சாத்தியமாக இருக்கு மென்றே நான் இன்னும் மிகுந்த நம்பிக்கையுடன் இருந்துவரு கிறேன். உத்தியோக சூழ் நிலையில் நாம் சந்திப்பதற்கு முன், சொந்த முறையில் உங்களைச் சந்தித்துப்பேச அங்கே சந்தர்ப்பம் ஏற்படும் என்றும் நான் நம்புகிறேன்.

அது எப்படியாயினும், ஒரு தடவைக்குமேல் உங்களைச் சந்தித்துப் பேச வாய்ப்பு ஏற்படுமென்று நம்புகிறேன். ஏனெனில், தற்போதைய முயற்சி ஒரு பெரிய சுமையாக இருப்ப தாகவே எனக்குத் தோன்றுகிறது. எனவே இதைச் சமாளிக்க எங்களுக்குக் கிடைக்கக் கூடிய எல்லா உதவியையும் நாட வேண்டியது அவசியமாகும். நீங்கள் அளிக்கும் உதவியைக் காட்டிலும் அதிகமாக வரவேற்கத் தகுந்ததும், அதிக விவேகத் துடன் கூடியதுமான வேறு உதவி எதுவும் இருக்க முடியாது.

உங்கள் மிகவும் உண்மையுள்ள,

ஆர். ஸ்டாபோர்ட் கிரிப்ஸ்

## 246

# நாற்பது ஆண்டுகளுக்கு முன்

*2, வில்லிங்டன் கிரஸென்ட், 28-3-1946*

எனது அன்புள்ள காந்திஜி,

நாற்பது ஆண்டுகளுக்கு முன், எங்களுடன் விருந்து சாப்பிடு வதற்காக நீங்கள் கிளிமெண்ட்ஸ் ஹோட்டலுக்கு வந்திருந்த போது நமக்குள் அறிமுகமும் நட்பும் ஆரம்பமாயின. அந்த அறி முகத்தையும் நட்பையும் புதுப்பித்துக் கொள்வதற்காக மீண்டும் உங்களைக் காணும் சந்தர்ப்பத்தை நான் மிகுந்த ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

புதன்கிழமை மாலை நிர்ணயிக்கப்பட்டுள்ள கூட்டத்தில் உயர்ந்த கொள்கைகள் சம்பந்தமான விஷயங்களைப்பற்றி விவா திக்கப்படும். அதற்குமுன் நாம் சொந்த முறையில் கலந்து பேசுவ தற்காக நீங்கள் மேற்கண்ட சிறிய வீட்டில் என்னை வந்து பார்ப் பீர்களாயின், அது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கும்.

மாலை 7 மணி உங்களுக்கு மிகவும் சரியான நேரம் என்று நான் அறிகிறேன். அடுத்த ஞாயிறு அல்லது திங்கட்கிழமை மாலை அந்த நேரத்துக்கு உங்களைப் பார்த்துப் பேச நான் மகிழ்ச்சியுடையவனாக இருப்பேன். உண்மையில் ஞாயிற்றுக் கிழமை பூராவும் எனக்கு வேறு அலுவல் இராததால், உங்களுக்கு எந்த நேரம் சௌகரியப்பட்டாலும் அப்போது நாம் பேசலாம்.

உங்களைக் கண்டால், உங்களுக்குத் தன்னுடைய நல்வாழ்த்துக்களைத் தெரிவிக்கும்படி நான் லண்டனிலிருந்து புறப்படுவதற்குமுன் என் மனைவி என்னிடம் சொன்னாள்.

எப்போதும் உங்கள் உண்மையுள்ள,
**பெதிக்-லாரென்ஸ்**

# 247

# கிரிப்ஸின் வேண்டுகோள்

*மந்திரி சபைத் தூது கோஷ்டி காரியாலயம்,*
*வைஸ்ராய் மாளிகை, புது டில்லி, 4-4-1946*

எனது அன்பார்ந்த ஸ்ரீ காந்தி,

நீங்கள் இங்கே தங்கியிருப்பதை நீடிப்பதற்கான வாய்ப்பு இருக்கிறதென்று நான் கேள்விப்படுகிறேன். அவ்விதமே செய்யும்படி நான் உங்களை மனப்பூர்வமாகக் கேட்டுக் கொள்கிறேன்.

சம்பந்தப்பட்ட முக்கியமான கட்சிகளுடன் நெருங்கிய சமரசப் பேச்சை நாங்கள் ஆரம்பிக்குமுன், பல்வேறு பிரிவினர்களையும், பல்வேறு நலன்களை முக்கியமாகக் கொண்டவர்களையும் நாங்கள் பேட்டி காண வேண்டியிருக்கிறது. இது, சாத்தியக் கூறுகள் உருவாகிவரும் நேரமாகும். எனவே இப்போது உங்களுடைய ஆலோசனையை நாடுவோர் விஷயத்தில் உங்களுடைய செல்வாக்கு எவ்வளவு பலனளிக்கக்கூடியதாக இருக்கும் என்பதை நான் அறிவேன். நெருங்கிய சமரசப் பேச்சுகள் ஆரம்பமானதும், உங்களுடைய ஆலோசனையை நாங்களும் நாடவேண்டியிருக்கும் என்பது நிச்சயம். நீங்கள் இங்கிருந்து புறப்பட்டுச் சென்றுவிட்டால், உங்களுடைய உதவி எங்களுக்குக் கிடைக்காமற்போய்விடும்.

நீங்கள் புது டில்லியில் இருக்க வேண்டியது எனக்கு அல்ல, இந்தியாவுக்கு அத்தியாவசியமாகும். தயவு செய்து இங்கேயே தங்கியிருங்கள்.

உங்களுடைய மிகவும் உண்மையுள்ள
**ஆர். ஸ்டாபோர்ட் கிரிப்ஸ்.**

# 248

# நிலைமை தெளிவாகவில்லை

*மந்திரி சபைத் தூது கோஷ்டி காரியாலயம்,*
*வைஸ்ராய் மாளிகை, புது டில்லி, 4-4-1946*

*எனது அன்பார்ந்த காந்திஜி,*

*நீங்களும் நானும் சென்ற திங்கட்கிழமையன்று எனது பங்களாவிலும், பின்னர் புதன்கிழமையன்று காரியாலயத்திலும் சந்தித்தபோது, ஸ்ரீ ஜின்னாவுடன் நீங்கள் சொந்த முறையில் பேசத் தயாராக இருந்தால் எங்களுக்கு உதவியாக இருக்குமா என்று கேட்டீர்கள்.*

*நீங்களும் அவரும் சந்தித்துப் பேசுவதால் மிகுந்த பலன் ஏற்படக்கூடிய காலம் வரலாம் என்றே நான் இன்னும் கருதுகிறேன். ஸ்ரீ ஜின்னாவும் உங்களுடன் பேச மகிழ்ச்சியுடன் இருப்பார் என்பதை நான் அறிவேன். எனினும், நீங்கள் சந்தித்துப் பேசுவதன் பலனாக உருவான ஒப்பந்தம் எதுவும் ஏற்படுவதற்குரியவாறு இப்போது நிலைமை தெளிவாகவில்லை என்ற முடிவுக்கு நானும் எனது சகாக்களும் வந்திருக்கிறோம்.*

*உங்களுடைய திட்டங்களை அது பாதிக்கலாம் என்பதற்காகவே, இந்த அபிப்பிராயத்தைத் தாமதமின்றி உங்களுக்கு அறிவிக்க வேண்டுமென்று நான் கருதுகிறேன். எனவே, கால வரையறையின்றி டில்லியில் தங்கியிருக்க வேண்டுமென நான் உங்களைக் கேட்க முடியாது.*

*மீண்டும் உங்களைப் பார்த்துப் பேசியதற்காக எனது மகிழ்ச்சியையும், நீங்கள் நட்பு முறையில் ஏற்கனவே அளித்த உதவிக்காக உங்களுக்கு எனது நன்றியையும் நான் தெரிவித்துக் கொள்ளலாமா?*

*உங்கள் உண்மையுள்ள,*
**பெதிக்-லாரென்ஸ்**

# 249

# தூது கோஷ்டியின் திட்டம்

*மந்திரி சபைத் தூது கோஷ்டி காரியாலயம்,*
*வைஸ்ராய் மாளிகை, புது டில்லி, 10-4-1946*

**அந்தரங்கமானது**

*எனது அன்புள்ள ராஜகுமாரி,*

*எங்களுடைய அலுவல்கள் எவ்விதம் உருவாகின்றன என்பதை நீங்களும் உங்களுடைய குருவும் அறிய விரும்பலாம்.*

எனவே எங்கள் மனத்தில் இருப்பதை உங்கள் இருவருக்கும் அந்தரங்கமாக அறிவிப்பதற்காகவே இந்தக் கடிதம் எழுது கிறேன்.

அடுத்தவாரம் நாங்கள் மிகவும் தீவிரமாகப் பேச்சுவார்த் தைகளை ஆரம்பிக்கலாமென நம்புகிறோம். காங்கிரசையும் முஸ்லிம் லீகையும் ஒரு பொதுவான கொள்கைக்கு இணங் கும்படி செய்ய வேண்டும் என்பதும் எங்களுடைய நம்பிக்கை யாகும். பின்னர் நாங்கள் காஷ்மீருக்குச் சென்று நான்கு நாட்கள் அங்கே தங்கியிருப்போம். அப்போது அவ்விரு ஸ்தாபனங்களும், அவ் விஷயமாகச் சிந்தனை செய்வதற்கு வசதியாக இருக்கும். காஷ்மீரிலிருந்து ஏப்ரல் 24-இல் திரும்பி வந்து விடலாமென நாங்கள் எதிர்பார்க்கிறோம். அதிலிருந்து சில நாட்களுக்குள் திட்டமான நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கும்; இடைக்கால அரசாங்கத்தை அமைப்பதற்காக ஏதாவதொரு அடிப்படையில் தகுந்த ஏற்பாடு களையும் செய்ய வேண்டியிருக்கும். ஏப்ரல் 24-க்கும் அதிலி ருந்து ஒன்றிரண்டு வாரங்களுக்கும் இடையே மிகவும் மூலா தாரமான பிரச்னைகளையொட்டி காந்திஜியின் ஆலோசனையை நாங்கள் நாட வேண்டியிருக்கும். அந்தக் காலத்திற்குள் இறுதி யான ஒரு முடிவுக்கு வந்துவிட வேண்டும். எனவே, அப்போது நாங்கள் மகாத்மாவை சீக்கிரமாகவும் சுலபமாகவும் கண்டு பேசு வதற்கு வசதியாக இருக்க வேண்டும். நாங்கள் சங்கடமான பிரச்னைகளைச் சமாளிக்கும்படி நேர்ந்தால், அப்போது காந்தி ஜியின் உதவி எங்களுக்குக் கிடைக்குமென நான் நம்புகிறேன்.

உங்களுக்கு அன்பார்ந்த நல்வாழ்த்துக்கள்.

ஆர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ்

# 250

## மக்களும் மன்னர்களும்

புது டில்லி,
12-4-1946

அன்புள்ள சர் ஸ்டாபோர்டு,

நேற்றிரவு நான் உங்களுடன் பேசிக்கொண்டிருந்தபோது இந்திய சமஸ்தானங்களைப் பற்றிச் சொல்ல விரும்பினேன், ஆனால் அதைக் கூற மறந்துவிட்டேன். பண்டித நேரு சமஸ்தான மக்கள் மகாநாட்டின் தலைவர், ஷேக் அப்துல்லா அதன் உப தலைவர். மகாநாட்டின் கமிட்டியினரை சென்ற புதன் கிழமை சந்தித்துப் பேசினேன். மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் தங்களை அலட்சியம் செய்துவிட்டதாக அவர்கள் புகார் கூறினர். அதற்கு மாறாக, சமஸ்தான மன்னர்கள் விஷயத்தில் தூதுகோஷ் டியினர் அதிக கவனம் செலுத்துவதாகவும் அவர்கள் கூறினர்.

இது நல்ல கொள்கையாக இருக்கலாம். இது தீங்கை விளைவிக்கும் கொள்கையாகவும், தார்மிக ரீதியாக எத்தகைய சமாதானமும் கூறுவதற்கு இடமில்லாததாகவும் இருக்கலாம். இந்தியா முழுவதும் சுதந்திரம் அடையுமாயின், இறுதியான பலன் முற்றிலும் நல்லதாகவே இருக்கலாம், நல்லதாகத்தான் இருக்க வேண்டும். அப்படியாயின், அலட்சியம் செய்வதன்மூலம் சமஸ்தான மக்களுக்கு மனக் கசப்பு ஏற்படும்படி செய்வது தீமையேயாகும். மக்கள்தான் முக்கியமானவர்கள்; மக்களின்றி தனித்த முறையில் மன்னர்களுக்கு எவ்வித முக்கியத்துவமும் இல்லை. மன்னர்களுக்குள்ள செயற்கை அந்தஸ்து இந்திய அரசாங்கத்தினல் கொடுக்கப்பட்டதாகும்; ஆனல் அவர்களுடைய வாழ்வு அந்தந்த சமஸ்தானங்களில் வாழும் மக்களையே பொறுத்திருக்கிறது. இவ் விவரங்களை நீங்கள் உங்களுடைய சகாக்களுக்குக் கூறுவதும் கூருததும் உங்களுடைய விருப்பத்தைப் பொறுத்தது. நேற்றிரவு நமக்குள் நடந்த பேச்சுவார்த்தைகளைப்போல் இதுவும் முற்றிலும் உத்தியோகப் பற்றற்றதாகும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி.

## 251

# நெருக்கடி ஏற்படலாம்

மந்திரி சபைத் தூது கோஷ்டி காரியாலயம்,
வைஸ்ராய் மாளிகை, புது டில்லி, 27-4-1946

எனது அன்பார்ந்த காந்திஜி,

நாளுக்கு நாள் உஷ்ணம் அதிகமாகிவருவதால், குளிர்ச்சியாக இருக்கக்கூடிய பல வசதிகளை எனக்குச் செய்துகொடுத்து வருகிறீர்கள். நீங்கள் தொடர்ந்து இங்கே இருந்து வருவதற்காக நானும் எங்கள் கோஷ்டியினரும் எங்களுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேம். நீங்கள் இங்கே டில்லியில் தங்கியிருப்பது எங்களுக்குப் பேருதவியாக இருந்துவருகிறது. நம்முடைய பொதுவான முயற்சிகள் வெற்றி பெறுவதற்கு உங்களுடைய உதவி அத்தியாவசியமாகும். எதிர்காலத்தில் நெருக்கடியான நிலைமை ஏற்படலாம். எனினும், இந்தப் பிரச்னை முடிவடைந்து நம்முடைய அலுவல்கள் திருப்திகரமாக முடிந்தது என்ற உணர்ச்சியுடன் நாம் டில்லியிலிருந்து புறப்பட்டுச் செல்லும் காலம் அதிக தூரத்தில் இல்லை என்றே நான் நம்பத் துணிகிறேன்.

உங்கள் உண்மையுள்ள,
பெதிக்-லாரென்ஸ்

# 252

# தவறு நடந்திருக்கிறது

புது டில்லி,
*29-4-1946*

அன்புள்ள சர் ஸ்டாபோர்டு,

நான் எவ்வளவு கவலைக்கு உள்ளாகியிருக்கிறேன் என்பதை நீங்கள் அறியவில்லை. ஏதோ தவறு நடந்திருக்கிறது.* இருந்தாலும் நான் சிம்லாவுக்கு வருகிறேன். தவிர்க்க முடியாத என்னுடைய பெரிய குடும்பத்தை நான் ராஜகுமாரியின் வீட்டிற்கு அழைத்துச் செல்ல முடியாது. எனவே 15 பேருக்கு அரசாங்கம்தான் ஜாகைக்கு இடம்கொடுக்க வேண்டும். எங்களுக்குப் பணிவிடை செய்ய யாரும் தேவையில்லை. ஆனால் சமையல் பாத்திரங்களும் உணவுப் பொருள்களும் கொடுக்க வேண்டியது அவசியமாகும். ஆட்டுப் பால், ரயிலில் இடம், கல்காவிலிருந்து நாங்கள் சிம்லாவுக்குச் செல்ல மோட்டார் வசதி ஆகியவையும் தேவையாகும். இதெல்லாம் எனக்கு விசித்திரமாகவே இருக்கிறதென்றாலும், அதுதான் உண்மையுமாகும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

---

* டில்லியில் நடந்த சமரசப் பேச்சுகளை ஒத்திவைத்துவிட்டார்கள். அதற்குப் பதிலாக சிம்லாவில் காங்கிரஸ், முஸ்லிம் லீக் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு கூட்டத்தைக் கூட்டுவதென்றும் தீர்மானித்துவிட்டார்கள். இதையே 'தவறு' என்று காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். சிம்லாவில் நடைபெறும் மகாநாட்டிற்காக அனுப்பப்பட்டிருந்த அழைப்பில் காங்கிரசும் முஸ்லிம் லீகும் பிரதிநிதிகளை அனுப்ப வேண்டும் என்று கேட்டிருந்தார்கள். "மூலாதாரமான சில கொள்கைகளை" அடிப்படையாகக் கொண்டு அந்தப் பிரதிநிதிகள் சமரசப் பேச்சுகளில் ஈடுபடவேண்டும் என்று குறிப்பிட்டிருந்தார்கள். அந்த அழைப்பை ஏற்றுக்கொள்வது மேற்கண்ட அடிப்படையை ஏற்றுக்கொள்வதாகும். ஆனால் அந்த அடிப்படையில் பாகிஸ்தான் உருவாவதற்கான விதைகள் அடங்கியிருக்கின்றன என்று காந்திஜி கருதினார். இந்தப் பீதியை காந்திஜி மந்திரி சபைத் தூது கோஷ்டியினரிடம் அறிவித்தபோது, அந்த அழைப்பை அங்கீகரிப்பது எவ்வித உறுதிமொழியும் அளிப்பதாகாது என்று அக் கோஷ்டியினர் சமாதானம் கூறினர். ஜின்னாவை மகாநாட்டில் கலந்துகொள்ளும்படி செய்வதற்காவே, அழைப்பை அவ்விதம் தயாரித்திருப்பதாகவும் அவர்கள் கூறினர். இது, உள்ளொன்றுவைத்துப் புறமொன்று பேசுவதாக காந்திஜிக்குத் தோன்றியது. உடனே அவர் காங்கிரசில் உள்ள தமது சகாக்களை எச்சரித்தார். சிம்லா மகாநாட்டையொட்டி வந்த அழைப்பை ஏற்றுக்கொள்ளுமுன், மந்திரி சபைத் தூதுகோஷ்டியினரிடமிருந்து அவ் விஷயமாக எழுத்துமூலம் விளக்கம் அனுப்பும்படி கேட்குமாறு தமது சகாக்களுக்கு யோசனை கூறினார்; அவ்விதமே விளக்கம் கோரி மௌலானா அபுல்கலாம் ஆசாதுக்கும் லார்டு பெதிக்-லாரென்சுக்கும் 1946 ஏப்ரல் 28, 29 தேதிகளில் கடிதப் போக்குவரத்து நடந்தது.

## 253

வைஸ்ராய் மாளிகை,
சிம்லா, 5-5-1946

எனது அன்பார்ந்த ஸ்ரீ காந்தி,

மனத்தை மிகவும் கவரும் உங்களுடைய டாக்டர் என்னைப் பார்ப்பதற்காக நேற்றிரவு வந்தார். அவர் என் உள்ளத்தையே கொள்ளை கொண்டுவிட்டார்! அவரிடம் எனக்கு மிகுந்த நம்பிக்கை உண்டாயிற்று. அவர் என்னை மீண்டும் சரியான நிலைமைக்குக் கொண்டுவந்து விடுவார் என்பது நிச்சயம்.

தற்காலிகமாக நான், காலை ஆகாரத்திற்கு முன்பு நடப்பதில்லை. எனவே நான் நீங்கள் இருக்குமிடத்திற்கு வர முடியாது. எனினும் இன்னும் ஒன்றிரண்டு நாட்களில் நான் மீண்டும் நடக்கத் தொடங்குவேன். எனவே நிச்சயமாக உங்களை வந்து பார்த்து மீண்டும் ஒரு தடவை உங்களுடன் அளவளாவ உத்தேசித்திருக்கிறேன். மிகவும் முக்கியமான கூட்டங்கள் இன்று காலை ஆரம்பமாகின்றன. அக்கூட்டங்களின் பலனை இந்திய மக்களுக்கு இன்ப வாழ்வாகிய இனிய பழம் கிடைக்க வேண்டுமென நான் இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

உங்களுடைய மிகவும் உண்மையுள்ள,
ஆர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ்

## 254

வைஸ்ராய் முகாம், இந்தியா
(சிம்லா), 6-5-1946

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இன்று மாலை 7 மணிக்கு இங்கே வந்து வைஸ்ராயுடன் சிறிது நேரம் பேசுவதற்கு உங்களுக்கு வசதியாக இருக்குமா? டெலிபோனில் பதில் கூறும்படி (நெ. 601) தாங்கள் சுதீர் கோஷைக் கேட்பீர்களா? அந்த நேரம் உங்களுக்கு வசதியாக இருக்குமா என்பதை எனக்கு அறிவியுங்கள்.

தங்கள் உண்மையுள்ள,
ஜி. ஈ. பி. அபெல்

பின் குறிப்பு: நீங்கள் விரும்பினால், நாங்கள் ஒரு மோட்டாரை அனுப்புகிறோம்.

# 255

# காரசாரமான விவாதம்

*சத்விக்,*
*சிம்லா மேற்கு, 8—5-1946*

*அன்புள்ள சர் ஸ்டாபோர்டு,*

மந்திரி சபைத் தூது கோஷ்டி கூறிய யோசனைகளைப் பற்றி நான்கு காங்கிரஸ் பிரதிநிதிகளும் காரசாரமாக விவாதித்தார்கள். முதலாவது யோசனை என்னவெனில், பிரதிநிதிகள் அதை ஒப்புக்கொண்டால், அது அவர்களைக் கட்டுப்படுத்தும்; காங்கிரஸ் அதை நிராகரித்தாலன்றி அதன் ஷரத்துகள் அவர்களையும், எனவே காங்கிரசையும் கட்டுப்படுத்தும் என்பதுதான். இதே வாதம் லீகுக்கும் பொருந்தும். எனினும் நேற்றிரவு நீங்கள் என்னிடம் கூறியதை ஆதாரமாகக் கொண்டு, அவை யாரையும் கட்டுப்படுத்தா என்று அவர்களிடம் கூறினேன். அந்த ஷரத்துகளில் எதையும் நிராகரிக்க அரசியல் நிர்ணய சபைக்கு உரிமை உண்டு என்றும், அந்த ஷரத்துகளைத் திருத்தவோ, அல்லது அவற்றுடன் எதையாவது சேர்க்கவோ காங்கிரஸ் பிரதிநிதிகளுக்கும் லீக் பிரதிநிதிகளுக்கும் சுதந்திரம் உண்டு என்றும் கூறினேன். மேலும், அவற்றை அடிப்படையாகக் கொண்டு அந்த இரண்டு ஸ்தாபனங்களையும் (காங்கிரசையும் லீகையும்) அரசியல் நிர்ணய சபைக்குள் கொண்டுவர வேண்டும் என்பது மாத்திரமே அதன் நோக்கமென்றும் குறிப்பிட்டேன். மேற்கண்டவைகளை நீங்கள் உறுதி செய்து, அவ்விதம் பகிரங்கமாக ஒரு பிரகடனமும் வெளியிடுவீர்களாயின், முக்கியமான தகராறு தீர்ந்துவிடும்.

பெரும்பான்மையான ஹிந்துக்கள் இருக்கும் ஆறு மாகாணங்களுக்கும், பெரும்பான்மையான முஸ்லிம்கள் இருக்கும் ஐந்து மாகாணங்களுக்கும் சமத்துவ உரிமை அளிக்கும் சங்கடம் தான் தீர்க்க முடியாததாக இருக்கிறது. பெரும்பான்மையான முஸ்லிம்கள் இருக்கும் மாகாணங்களின் ஜனத்தொகை பத்தொன்பது கோடியாகும். இது, பாகிஸ்தானைக் காட்டிலும் படுமோசமானது. அதன் ஸ்தானத்தில் கூறப்படும் யோசனை என்னவெனில், மத்திய சட்டசபையும் நிர்வாக சபையும் ஜனத்தொகை அடிப்படையில் உருவாக்கப்பட வேண்டும். இது நியாயமற்றதாகத் தோன்றினல், சமரசம் ஏற்பட முடியாத மற்ற விஷயங்களைப்போல் இதை பிரிட்டிஷார் அல்லாதவர்கள் அடங்கிய பாரபட்சமற்ற ஒரு நீதிச் சபையின் தீர்ப்புக்கு விட வேண்டும். இந்த இரண்டு விஷயங்களும் தெளிவாகிவிட்டால், பின்னர் நான் செல்லும் வழியில் யாதொரு தடையும் இராது.



டில்லியில் காந்திஜி சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸைச் சந்தித்தபோது
வேடிக்கையாக ஏதோ கூறியதைக் கிரிப்ஸ் உள்பட எல்லோரும் ரசிக்கின்றனர்.

NARA PUBLIC LIBRA



1946-இல் நோவாகாலியில் வகுப்பு வெறிக்கு இலக்காகித் துன்பத்திற்குள்ளானவர்கள் காந்திஜியினிடம் முறையிடுகின்றனர்.

31 JAN 2002

இதற்காக நீங்கள் இருக்குமிடத்திற்கு ஓடிவராமல், இக்கடிதத்தை உங்களுக்கு அனுப்பினால் போதும் என்று நான் நினைத்தேன். மகாநாடு கூடுவதற்கு முன் நாம் சந்திக்க வேண்டுமா அல்லது இவ்விஷயமாகக் கடிதப் போக்குவரத்து போதுமா என்பதை முடிவு செய்யும் பொறுப்பை உங்களிடமே விட்டுவிடுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி,

# 256

## தகராறு தீர வழி

வைஸ்ராய் மாளிகை,
சிம்லா. 9-5-1946

எனது அன்பார்த்த ஸ்ரீ காந்தி,

நேற்றிரவு மேத்தாவின் அற்புதமான சிகிச்சைக்குப் பிறகு நான் படுக்கச் சென்றபோது, சுதீர் உங்களுடைய கடிதத்தைக் கொண்டுவந்தார். எனவே, நான் அவர் மூலமே உங்களுக்குப் பதில் சொல்லி அனுப்பினேன். நான் கூறியதை அவர் உங்களிடம் சொல்லியிருப்பார்.

அவர் கூறியதை உறுதி செய்வதற்காக மாத்திரமே இந்தக் கடிதம் எழுதுகிறேன்.

நீங்கள் கூறியுள்ள முதல் விஷயத்தையொட்டி எனக்குத் தெரிந்தவரையில் நிலைமை இதுதான். காங்கிரஸ் பிரதிநிதிகளும் முஸ்லிம் பிரதிநிதிகளும் புதிய அரசியலைத் தயாரிப்பதற்கான ஏதோ ஓர் அடிப்படையை ஒப்புக் கொண்டால், கௌரவம் வாய்ந்தவர்கள் என்ற முறையில் அவர்கள் அந்த அடிப்படையை அரசியல் நிர்ணய சபை ஒப்புக் கொள்ளும்படி செய்ய தங்களால் இயன்ற முயற்சியையெல்லாம் செய்ய வேண்டும். அதற்குக் குறைவாக எதுவும் செய்வது, தங்களுடைய வாக்குறுதியை நிறைவேற்றியதாகாது.

இரண்டாவது விஷயம், மத்திய அரசாங்கத்தில் காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகிற்கும் சம அந்தஸ்து இருப்பதைப்பற்றியது. இவ்விஷயத்தில் உங்களுடைய ஆட்சேபணையை நான் பாராட்டுகிறேன். எனினும், பாகிஸ்தானைவிட அது படுமோசமானது என்று கூறுவதற்கில்லை. இந்தச் சங்கடத்தை முஸ்லிம் லீகின் சம்மதத்தைப் பெற்று ஏதாவது சர்வதேச மத்தியஸ்த முறையின் மூலம் தீர்த்துக்கொண்டால், அவ்விஷயமாக இரு ஸ்தாபனங்

களுக்குள்ளும் ஒப்பந்தம் ஏற்படுவதற்கு எவ்விதத் தடையும் இருப்பதற்கில்லை.

மேற்கொண்டு உதவியாக இருக்கக் கூடிய இந்த யோசனைக்காக நான் மிகவும் நன்றியுள்ளவனாக இருக்கிறேன். மகாநாடு கூடியபின், இன்று மாலை மீண்டும் உங்களைக் கண்டுபேச மிகவும் ஆர்வமுள்ளவனாக இருக்கிறேன்.

தங்களுடைய மிகவும் உண்மையுள்ள,
ஆர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ்

# 257

# லாரென்ஸ்-காந்திஜி கருத்து வேற்றுமை

மந்திரி சபைத் தூது கோஷ்டிக் காரியாலயம்,
வைஸ்ராய் மாளிகை, புது டில்லி 21-5-1946

அன்புள்ள காந்திஜி,

சர் ஸ்டாபோர்டு இப்போது நோயுற்றிருப்பதால், அவர் தமது அலுவல்களைக் கவனிக்க முடியாதவராக இருக்கிறார். இதைக் கேட்க நீங்கள் மிகவும் வருந்துவீர்கள் என்பதை நான் அறிவேன். 'ஹரிஜனி'ல் நீங்கள் எழுதியுள்ள கட்டுரையின் முன் பிரதி ஒன்றை இணைத்து அவருக்குத் தாங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. அவர் நோயுற்றிருப்பதால், அவரால் தங்களுக்குப் பதில் எழுத இயலவில்லை.

எனினும், அந்தக் கட்டுரையை என்னிடமும் காட்டும்படி நீங்கள் உங்களுடைய கடிதத்தில் கூறியிருந்த யோசனைக்கு இணங்க அவரது காரியதரிசி என்னிடம் கட்டுரையைக் காட்டினார். எனது சகாக்களையும், என்னையும், எங்களுடைய அறிக்கையையும்பற்றி நீங்கள் நட்பு முறையில் பாராட்டிக் கூறியிருப்பதற்காக நான் உங்களுக்குக் கடமைப்பட்டவனாக இருக்கிறேன். எனினும், மற்ற விஷயங்களையொட்டி உங்களுடைய கருத்துகளுக்கும் என்னுடைய கருத்துகளுக்கும் மிகவும் வேற்றுமை இருக்கிறது என்பதை நிச்சயமாக நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்கள்.

உங்கள் உண்மையுள்ள,
பெதிக்-லாரென்ஸ்

* மேலே குறிப்பிட்டுள்ள 'ஹரிஜன்' கட்டுரையை பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

# 258

# பேச்சுவார்த்தைகளின் சாரம்

*வால்மீகி மந்திர், ரீடிங் சாலை,*
*புது டில்லி, 20-5-1946*

*லார்டு பெதிக் லாரென்ஸ்,*
*வைஸ்ராய் மாளிகை,*

*அன்பார்ந்த பிரபுவுக்கு,*

நேற்று காலையிலும் அதற்கு முன் தினமும் நான் தங்களுடன் விவாதித்த விஷயங்கள் மிகவும் முக்கியமானவை. எனது நிலையும் எனது நடவடிக்கைகளும் அவற்றையே பொறுத்திருக்கின்றன. எனவே அவற்றை நான் எழுத்து மூலம் குறிப்பிடுவது பலன் தரத்தக்கதாக இருக்குமென்று நினைக்கிறேன். நான் தவறாகப் புரிந்து கொண்டிருந்தால், நீங்கள் என்னைத் திருத்தலாம். அவசியமான இடங்களில் இது உங்களுக்கு உதவியாகக் கூட இருக்கலாம்.

நமக்குள் நடந்த பேச்சுவார்த்தைகளின் சாரத்தை, என் திறமைக்கு எட்டிய வரையில் காங்கிரஸ் காரியக் கமிட்டியினரிடம் நான் கூறியிருக்கிறேன்.

இந்த முன்னுரையுடன், நமக்குள் நடந்த சம்பாஷணையின் சாரத்தைக் கொடுக்கத் தொடங்குகிறேன்:

1. மாகாண சட்டசபைகளில் உள்ள ஐரோப்பிய உறுப்பினர்கள், அரசியல் நிர்ணய சபைப் பிரதிநிதிகள் தேர்தலில் வோட்டுக் கொடுக்காமலும், முஸ்லிம் அல்லாத பிரதிநிதிகளின் வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்படாமலும் பார்த்துக் கொள்வதாக நீங்கள் அன்பு கூர்ந்து எனக்கு உறுதி கூறினீர்கள்.

2. சமஸ்தானங்களின் சார்பில் 93 பிரதிநிதிகளுக்கான தேர்தல் போபால் நவாப் சாகிபினாலும் பண்டித ஜவாஹர்லால் நேருவினாலும் நிர்ணயிக்கப்படும். அவ்விஷயமாக சமரச ஒப்பந்தம் எதுவும் ஏற்படாவிட்டால், சமஸ்தானங்களின் சார்பில் பிரதிநிதிகள் தேர்தல் இராது. அரசாங்க அறிக்கையின் 20-ஆவது பிரிவில் குறிப்பிட்டுள்ளபடி மன்னர்களின் நலன்களும் அவர்களுடைய மக்களின் நலன்களும் ஓர் ஆலோசனைக் கமிட்டியின் மேற்பார்வையில் இருக்கும்.

3. மாகாண சட்டசபைகளுக்குச் சமமான ஒரு சபை பிரிட்டிஷ் பலுசிஸ்தானில் இராததால், அதிக அக்கறை எடுத்துக் கொண்டு, அதையும் ஆலோசனைக் கமிட்டியின் மேற்பார்வையில் கொண்டுவர வேண்டும். இதன் மத்தியில். மற்ற மாகாணங்களில் இருப்பதுபோல் பலுசிஸ்தானத்திலும் சட்டசபை

முதலியன ஏற்படுவதற்கு வழிவகை செய்ய வேண்டியது இடைக் கால தேசீய அரசாங்கத்தின் கடமையாகும்.

4. சுதந்திர சம்பந்தமான பூர்வாங்க அலுவல்கள் நடை பெறும் போதே, சமஸ்தானங்களில் பிரிட்டிஷாருக்குள்ள சர்வாதிகாரம் ரத்தாகிவிட வேண்டும். இந்த யோசனையை நடைமுறையில் கொண்டுவருவது அபாயமாகும் என்று சர் ஸ்டாபோர்டு கருதினர். ஆனல் எனது கருத்து அதற்கு நேர் மாருக இருந்தது. எனது யோசனையை ஒப்புக் கொண்டால், அதன் பலனுக சமஸ்தான மக்கள் புத்துயிர் பெறுவார்கள்; அவர் களுக்கு மிகுந்த உற்சாகமும் உண்டாகும். இடைக்கால அரசாங் கம், மன்னர்களுக்கும் ஒரு வரப்பிரசாதமாகவே இருக்கும். அவர் கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சிருஷ்டிகளே என்ருலும், தாங்கள் தொடர்ந்து பதவியில் இருப்பதற்கு அந்த அரசாங்கத்தின் தயவையே அவர்கள் நாட வேண்டியவர்களாக இருக்கிருர்கள் என்ருலும், அந்த அரசாங்கத்தின் கொடுங்கோன்மையின் கீழ் அவர்கள் திணறிக் கொண்டிருக்கிருர்கள். எனவே, அந்த ஆதிக்கத்தை உடனடியாக ஒழிப்பது, மன்னர்களின், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அந்தரங்க சுத்திக்கு ஒரு சோதனையாகவும் இருக்கும்.

இந்தியர்களின் இந்த உணர்ச்சி உங்களுடைய இருத யத்தில் எதிரொலிக்கவில்லையாயின், சர் ஸ்டாபோர்டின் யோசனையை அமலுக்குக் கொண்டு வருவதுடன் நான் சொந்த முறையில் திருப்தியடைவேன். அவரது யோசனை இதுதான்: "சமஸ்தான மக்களின் சுதந்திரத்தையும் முன்னேற்றத்தையும் நசுக்குவதன் மூலட அந்த மக்களுக்கு எதிராக சமஸ்தான மன்னர்களுக்குப் பாதுகாப்பு அளித்துவந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்ய அரசாங்கம், தற்காலிகமாக சமஸ்தான மக்களின் பாதுகாப் பிற்கான, முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்." சமஸ்தான மக்கள் பிற்போக்கானவர்களாக இருக் கிருர்களெனில், இந்தியாவில் பிரிட்டிஷாரின் நேரடியான ஆட்சியின் கீழ் இருக்கும் மக்களிலிருந்து அவர்கள் வேறுபட்ட வர்கள் என்பது அதற்குக் காரணமல்ல, ஆனல் அவர்கள் இரட்டை நுகத்தடியின் கீழ் துன்பப்பட்டு வருவதே அதற்குக் காரணமாகும். தேசீய அரசாங்கத்தைக் கலந்து கொண்டு சமஸ்தானங்களில் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய ஆட்சி முறை செயல் பட்டுவர வேண்டும் என்ற யோசனையையும் நான் ஒப்புக் கொண்டேன்.

5. நீங்களும் சர் ஸ்டாபோர்டும் மனம் விட்டு எல்லா வற்றையும் கூறியிருப்பதைக் குறித்து நான் உங்களைப் பாராட்டு கிறேன். இருந்தாலும் ஒரு விஷயத்தை நான் குறிப்பிட வேண்டும். அமைதியையும் ஒழுங்கையும் நிலைநிறுத்துவதற் காகவோ அல்லது வெளியிலிருந்து ஏற்படும் ஆபத்தைத் தடுப்ப தற்காகவோ இந்தியாவில் பிரிட்டிஷ் துருப்புகள் தொடர்ந்து இருந்து வருமாயின், இந்தியாவுக்கு அளிக்கப்படும் சுதந்திரம்

ஒரு கேலிக்கூத்தாகவே இருக்கும் என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும். அங்கிலேயில், அரசியல் நிர்ணய சபையின் அலுவல்கள் முடிவடைந்த பின்னரும் கூட, இந்தியாவின் நிலைமை இப்போது இருப்பதைக் காட்டிலும் சிறந்ததாக இருக்க முடியாது. துருப்புகளைப் பற்றிய நிலை அப்படியே இருக்குமாயின், "அடுத்த மாதம் சுதந்திரம்" என்பது போலிக் கூற்றாகவோ அல்லது சிந்தனையற்ற ஒரு கூக்குரலாகவோ தான் இருக்கும். ஓர் அரசியல் திட்டத்தை உருவாக்குவதில் அரசியல் நிர்ணய சபை வெற்றி பெற்றாலும் சரி, அல்லது தோல்வியுற்றாலும் சரி, "இந்தியாவை விட்டு வெளியேறுக" என்ற தீர்மானத்தை பிரிட்டிஷார் யாதொரு நிபந்தனையுமன்றி ஒப்புக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு விஷயத்திலும் பிரிட்டிஷாரின் போக்கு அடியோடு மாற வேண்டியது அவசியமாகும்.

6. இடைக்கால அரசாங்கத்தைப் பொறுத்தமட்டில், நான் எவ்வளவுக்கு அதைப் பற்றிச் சிந்திக்கிறேனோ அவ்வளவுக்கு எனது நிலை அதிக உறுதியாகியிருக்கிறது. அதாவது ஒழுங்காக அமைக்கப்பட்ட ஒரு தேசீய அரசாங்கம், சட்ட நுணுக்கப்படி இல்லாவிட்டாலும், உண்மையில் தேர்ந்தெடுக்கப்பட்ட மத்திய சட்ட சபைக்குப் பொறுப்பாளியாக இருக்க வேண்டும். அரசியல் நிர்ணய சபைக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு முன்பே, அத்தகைய ஒரு தேசீய அரசாங்கம் அமைக்கப்பட்டுவிட வேண்டும். அப்படியானால்தான், வரப்போகும் நிகழ்ச்சிகளைப் பற்றிய ஓர் உண்மையான சித்திரத்தைக் கொடுக்க முடியும். சக்தியும், திறமையும், நல்லுறவும் வாய்ந்த ஒரு தேசீய அரசாங்கம் உடனடியாக அமைக்கப்பட வேண்டும் என்பதை, உணவு நெருக்கடி வற்புறுத்துகிறது. அத்தகைய அரசாங்கமின்றி, எங்கும் தாண்டவமாடும் ஊழலை ஒழிக்க முடியாது; வெளிநாடுகளிலிருந்து எதிர்பார்க்கப்படும் உணவு தானியங்கள் இந்தியக் கடற்கரைகளில் இறக்குமதியானாலும்கூட, அத்தகைய அரசாங்கமின்றி மக்களிடையே விரும்பத்தக்க மனநிலையை உண்டுபண்ண முடியாது. ஏற்கனவே இந்தியாவில் கோடிக்கணக்கான மக்கள் பஞ்சத்தினால் கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பதால் ஏற்பட்டுள்ள வேதனை ஒருபுறமிருக்க, அத்தகைய அரசாங்கத்தை அமைக்கும் விஷயமாக ஒவ்வொரு நாளும் ஏற்படும் தாமதம் மற்றொரு விதத்தில் அதிக வேதனையைக் கொடுப்பதாகும். எனவே, தேசீய அரசாங்கத்தை காங்கிரஸ் அமைத்தாலும், முஸ்லிம் லீக் அமைத்தாலும் சமத்துவ அந்தஸ்து என்ற பேச்சிற்கே இடமிருக்க முடியாது. இந்தியாவிலுள்ள சிறந்த, ஊழலுக்கு இடம் கொடுக்காத ஆடவர்களும் பெண்களுமே அத்தகைய காரியத்திற்குத் தேவை. எனவே அவ்விஷயமாக வைஸ்ராய் துரிதமான நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டு வருவதைக் காண நான் மகிழ்ச்சியடைகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 259

# இணங்க முடியாது

மந்திரி சபைத் தூதுகோஷ்டி காரியாலயம்,
வைஸ்ராய் மாளிகை, புது டில்லி, 30-5-1946

**அந்தரங்கமானது**

எனது அன்பார்ந்த காந்திஜி,

உங்களுடைய கடிதங்கள் கிடைத்தபின், அவற்றில் கண்டுள்ள விஷயங்களைப் பற்றி காங்கிரசிடமிருந்தும் உத்தியோக முறையில் ஒரு கடிதம் கிடைத்தது. இந்தக் கடிதத்திற்கு நாங்கள் கூடிய விரைவில் பதில் எழுத உத்தேசித்திருப்பதால், நீங்கள் எழுப்பியுள்ள பல்வேறு விஷயங்களைப் பற்றியும் இப்போது நான் பதில் எழுத விரும்பவில்லை.

உங்கள் கடிதத்திலுள்ள யோசனைகளுக்கு நாங்கள் இணங்க முடியாது. குறிப்பாக, புதிய அரசியல் திட்டம் அமலுக்கு வந்த பிறகுதான் சுதந்திரம் வர வேண்டுமேயன்றி, அதற்கு முன்பு அல்ல என்பதை உங்களுக்குத் தெளிவாக அறிவிக்கும்படி மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் விரும்புகின்றனர்.

நல்வாழ்த்துக்கள்.

தங்கள் உண்மையுள்ள,
பெதிக்-லாரென்ஸ்

# 260

# ஏகாதிபத்திய தோரணை

வால்மீகி மந்திர், ரீடிங் சாலை,
புது டில்லி, 22-5-1946

லார்டு பெதிக்-லாரென்ஸ்
வைஸ்ராய் மாளிகை.

அன்புள்ள நண்பருக்கு,

என்னுடைய கடிதங்களுக்கு உடனே பதில் எழுதியதற்காக நன்றி. இருந்தாலும், உங்களுடைய பதிலில் பழைய அதிகார மணம் வீசுவது துரதிர்ஷ்டமாகும். "உண்மையாகவே சுதந்திரம்" என்ற கூக்குரலுக்கு ஆதாரம் எதுவும் இல்லையா?

20உ நான் எழுதிய கடிதத்தில் கூறப்பட்டிருப்பவையே எனது உறுதியான கருத்துகளாகும். உங்களுடைய கடிதம்.

கலப்பற்ற ஏகாதிபத்திய தோரணையில் இருக்கிறது. அது ஒழிந்துவிட்டதென்றே நான் நினைத்தேன்.

இது நீண்ட கால நண்பர் ஒருவர் எழுதும் கடிதமாகும்.

சர் ஸ்டாபோர்டு நோயுற்றிருப்பதை அறிய நான் மிகவும் வருந்துகிறேன். அவர் சீக்கிரத்தில் குணமடைந்து விடுவார் என்றே நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 261

புது டில்லி,
24-5-1946

லார்டு பெதிக்-லாரென்ஸ்,
வைஸ்ராய் மாளிகை.

அன்புள்ள பிரபுவுக்கு,

காரியக் கமிட்டியில் இன்று மாலை ஒரு தீர்மானம் நிறைவேறி யிருக்கிறது. அதை ஒரு நல்ல தீர்மானம் என்றே நான் கூறு கிறேன். காங்கிரசைப் பொறுத்தமட்டில், இப்போது டில்லியை விட்டுச் செல்ல எனக்கு சுதந்திரம் உண்டு. ஆனல், நான் என்ன செய்ய வேண்டுமென்று நீங்கள் கூறுகிறீர்கள்?

உங்களுடைய அலுவல்கள் மிகவும் கடினமானவையாக இரா என்றே நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 262

மந்திரி சபைத் தூது கோஷ்டி காரியாலயம்,
வைஸ்ராய் மாளிகை, புது டில்லி, 25–5-1946

எனது அன்பார்ந்த காந்திஜி,

நேற்று நீங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. காங்கிரஸ் காரியக்கமிட்டி கலைவதும், முஸ்லிம் லீக் கூட்டத்திற்காக நாங்கள் காத்துக்கொண்டிருப்பதும் முற்றிலும் இயல்பாகவே எனக்குத் தோன்றுகிறது. முஸ்லிம் லீகின் இறுதியான கூட்டம் ஜூன் 5உ நடைபெறும் என்று நான் அறிகிறேன்.

இந்த இடைக் காலத்தில் நீங்கள் ஏன் டில்லியில் தங்கி யிருக்கும் சிரமத்தை மேற்கொள்ள வேண்டும் என்று எனக்குத்

தெரியவில்லை. ஆனல், கட்சிகள் இங்கு மீண்டும் வரும்போது, நீங்களும் இங்கு வந்து எங்களுக்கு உதவி புரிவீர்கள் என்று மிகவும் நம்புகிறேன்.

இந்தியா பூரண ஆட்சி உரிமையையும் சுதந்திரத்தையும் பெறும்படி செய்ய வேண்டுமென்ற ஒரே லட்சியத்துடனேயே நான் இந்தியாவுக்கு வந்திருக்கிறேன். எனவே, உங்களுடைய ஒத்துழைப்பை நான் பெரிதும் நாடுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
பெதிக்-லாரென்ஸ்.

## 263

புது டில்லி,
27-5-1946

லார்டு பெதிக்-லாரென்ஸ்,
வைஸ்ராய் மாளிகை.

அன்புள்ள பிரபுவுக்கு,

'ஹரிஜனி'ல் நான் எழுதியுள்ள கட்டுரையின்* பிரதி ஒன்றை முன்கூட்டியே உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். உங்கள் கோஷ்டியின் அலுவல்கள் யாவும் சரியாக நடைபெறுகின்றன என்றே நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 264

# 'வரவை எதிர்பார்க்கிறேன்'

எனது அன்பார்ந்த காந்திஜி,

'ஹரிஜனி'ல் நீங்கள் எழுதியுள்ள இரண்டாவது கட்டுரையின் பிரதி ஒன்றை எனக்குத் தாங்கள் அனுப்பியிருப்பது, உங்களது அன்பையே காட்டுகிறது.

டில்லிக்கு மீண்டும் உங்களுடைய வரவையும் காங்கிரஸ் காரியக் கமிட்டியினரின் வரவையும் அடுத்த வாரக் கடைசிக்குள் ஆர்வத்துடன் எதிர்பார்க்கிறேன். அப்படியானல் தான், எதற்காக இந்தியாவுக்கு வந்தோமோ அந்த அலுவலைப்

* மேலே குறிப்பிட்டுள்ள கட்டுரையை பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

பூர்த்தி செய்து கொண்டு நாங்கள் இங்கிலாந்துக்குத் திரும்ப முடியும்.

முசூரியில் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கும் உங்களுக்கு நல்வாழ்த்துக்கள்.

தங்கள் உண்மையுள்ள,
பெதிக்-லாரென்ஸ்

# 265

## நிச்சயமற்ற நிலைமை

புது டில்லி, *27-5-1946*

அன்புள்ள சர் ஸ்டாபோர்டு,

நான் 'ஹரிஜனு'க்கு மும்முரமாக எழுதிக் கொண்டிருந்த போது, நேற்று நீங்கள் எழுதிய உருக்கமான கடிதம் கிடைத்தது. என்னைப் பார்க்க வந்திருந்தவர்கள் திரும்பிச் சென்றதும் நான் உங்களுடைய கடிதத்தை வாசித்தேன் என்றாலும், உடனே பதில் எழுதுவதற்கு நேரமில்லை.

உங்களுடைய கடிதத்தில் 'மிகவும் அந்தரங்கமானது' என்று நீங்கள் குறிப்பிட்டிருந்ததால், அதை உங்களுக்குத் திருப்பி அனுப்பியுள்ளேன். எனினும், உலகம் பார்க்கக் கூடாத விஷயம் எதுவும் அதில் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

அரசாங்க அறிக்கை, எங்களுக்கு விடுத்திருக்கும் கோரிக்கைகளையும் கட்டளைகளையும் நான் பூரணமாக ஒப்புக் கொள்கிறேன். இருந்தாலும், பிரிட்டிஷாரிடமிருந்து வரும் ஒவ்வொன்றையும் போல் இதுவும் அவநம்பிக்கையையே உண்டாக்குகிறது. அரசாங்க அறிக்கை நம்பிக்கையை அளித்தது, இன்னும் நம்பிக்கையை அளிக்கிறது. எனினும், அந்த தஸ்தாவேஜு வெளியானதிலிருந்து நிகழ்ந்துள்ள சம்பவங்கள் என்னுடைய நம்பிக்கையைச் சீர்குலைப்பதாக இருக்கின்றன என்பதை ஒப்புக் கொள்ள நான் வருந்துகிறேன். அந்த அறிக்கையைப் பற்றிய விளக்கம், சுதந்திரத்தைப் பற்றிய பிரகடனங்கள், சமஸ்தானங்களில் பிரிட்டனுக்குள்ள அதிகாரம், துருப்புகள் பிரச்னை, பலுசிஸ்தான் தேர்தல் சம்பந்தமாக உத்தேசித்துள்ள முடிவு, ஐரோப்பியரின் வாக்குகள் பற்றிய நிச்சயமற்ற நிலைமை, எல்லாவற்றிற்கும் மேலாக, காத்துக் கொண்டிருக்கும் கொள்கை, இடைக்கால அரசாங்கம் அமைக்கும் விஷயமாக முடிவில்லாத தாமதம் ஆகியவை, எந்தக் காலத்திலாவது இடைக்கால அரசாங்கம் ஏற்படுமா என்றும், எந்தக் காலத்திலாவது அரசியல் நிர்ணய

சபை கூடுமா என்றும் என்னை வியப்படையும்படி செய்கிறது. 'நடைமுறையில் சுதந்திரம்' என்ற கூக்குரல் கூட காற்றோடு காற்றாக மறைந்துவிட்டதா?

இருந்தாலும் நம்பிக்கைக்கு எதிராக நான் நம்பிவருகிறேன்; மந்திரி சபைத் தூது கோஷ்டியின் வெற்றிக்காக வேலைசெய்து வருகிறேன். எனினும், உண்மையிலேயே மனத்தில் எழும் சந்தேகத்தை நான் அக் கோஷ்டியினரிடமிருந்தோ அல்லது பொது மக்களிடமிருந்தோ மறைக்கவில்லை. நம்பிக்கை இருப்பதுபோல் பாசாங்கு செய்வது, எள்ளளவும் பலனற்றதாகும். மனத்தில் உண்மையாக எழும் நம்பிக்கைதான் முக்கியமானது. இருந்தாலும், நம்பிக்கையைப்பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? சூரியன் காலையில் பனியை அறவே அகற்றிவிடுவதுபோல், நேர்மையான, நம்பத் தகுந்த நடவடிக்கை எல்லா சந்தேகங்களையும் அகற்றிவிடும்.

உங்களுடைய ஓய்வைக் கெடுக்க வேண்டும் என்பதற்காக இதை நான் எழுதவில்லை. நீங்கள் எழுதிய கடிதத்திற்கு நியாயமான, பூரணமான பதில் அளிக்க வேண்டிய அவசியம் ஏற்படாவிட்டால், நான் உங்களுக்குக் கடிதம் எழுதாமலே இருந்திருப்பேன்.

அடுத்த 'ஹரிஜன்' இதழுக்கு நான் எழுதிய கட்டுரையின்* முன்பிரதி ஒன்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

சீக்கிரமாக குணமடைய முயற்சி செய்யுங்கள்.

நான் ஏதாவது செய்ய வேண்டுமென நீங்கள் விரும்பினால், எனக்கு ஒரு தூதரை அனுப்பத் தயங்காதீர்கள். நாளை காலை நான் முசூரிக்குப் புறப்பட்டுச் செல்லுகிறேன். புறப்படுமுன் 'ஹரிஜனு'க்கு எழுத வேண்டியதை எழுதி முடித்துவிட வேண்டும். என்னுடைய கையெழுத்தை வாசிக்கும் கஷ்டத்தை உங்களுக்குக் கொடுக்க நான் விரும்பாததால், எனக்காக இதைப் பார்த்து எழுதும்படி ராஜகுமாரியைக் கேட்டுக்கொண்டிருக்கிறேன். இவ்விஷயத்தை நீங்கள் உங்களுடைய சகாக்களுடனே அல்லது நீங்கள் விரும்பும் வேறு யாருடனே கலந்து கொள்ளலாம்.

எனது கட்டுரையின் பிரதி ஒன்றை லார்டு பெதிக்-லாரன்சுக்கும் அனுப்பியிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

---

* ஏற்கனவே லார்டு பெதிக்-லாரென்ஸுக்கு அனுப்பிய கட்டுரையையே காந்திஜி சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸுக்கும் அனுப்பியிருப்பதாகக் குறிப்பிட்டுள்ளார்.

## 266

# காந்திஜியின் பதில்

*பிர்லா மாளிகை, முசூரி, 1 6-1946*

*லார்டு பெதிக்-லாரென்ஸ்,*
*வைஸ்ராய் மாளிகை, புது டில்லி.*

*அன்புள்ள பிரபுவுக்கு,*

*சென்ற மாதம் 27உ தாங்கள் எழுதிய அன்பார்ந்த கடிதத்திற்குப் பதில் எழுத வேண்டிய அவசியம் இல்லை என்று நான் எண்ணினேன். ஆனால் இப்போது அதற்குப் பதில் எழுத வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது.*

*அடுத்த வாரக் கடைசிக்குள் நானும், காங்கிரஸ் காரியக் கமிட்டியினரும் டில்லிக்குத் திரும்பி வருவதை, "ஆர்வத்துடன் எதிர்பார்க்கிறீர்கள்". மௌலானா சாகிப் நேற்று என்னுடன் இருந்தார். 9-ஆம் தேதிக்கு முன் அவர்களில் பலரும் டில்லிக்குத் திரும்பி வருவது சிறிதும் சாத்தியமல்ல என்று அவர் என்னிடம் கூறினார். அவர்களில் பலருக்கும் அந்தத் தேதி வரையில் முக்கியமான அலுவல்கள் இருக்கின்றன. அவற்றை அவர்கள் ரத்து செய்வதும் முடியாத காரியம் என்பது மௌலானா சாகிபுக்குத் தெரியும். எனவே, காரியக் கமிட்டிக் கூட்டத்தை 9உ கூட்ட அவர் உத்தேசித்திருக்கிறார். நானும் 9உ காலையில் புறப்பட்டு 10 மணிக்கு டில்லி வந்து சேரலாமா என்றே நினைக்கிறேன். எனவே, அன்று மாலை 2 மணிக்கு முன் நான் யாரையும் சந்திக்க நேரம் கிடைக்காது. இவ்விதமே செய்யலாமா அல்லது 9-ஆம் தேதிக்கு முன் நான் அங்கு வரவேண்டுமென நீங்கள் விரும்புகிறீர்களா? நீங்கள் விரும்பினால், 8உ காலையில் இங்கிருந்து நான் புறப்பட்டுவருகிறேன்.*

*நீங்கள் உடல் நலத்துடன் இருந்து வருகிறீர்கள் என்றும், சர் ஸ்டாபோர்டு இழந்த பலத்தை நாளுக்கு நாள் மீண்டும் பெற்று வருகிறார் என்றும் நம்புகிறேன்.*

*இங்கே கால நிலை இயல்பாகவே குளிர்ச்சியாக இருந்து வருகிறது.*

*தங்கள் உண்மையுள்ள,*
**மோ. க. காந்தி**

## 267

மந்திரி சபைத் தூது கோஷ்டி காரியாலயம்,
வைஸ்ராய் மாளிகை, புதுடில்லி, 3-6-1946

எனது அன்பார்ந்த காந்திஜி,

ஜூன் 1வ நீங்கள் எழுதிய கடிதத்திற்காகவும், நான் கேட்டுக்கொண்டால் காங்கிரஸ் காரியக் கமிட்டியினர் டில்லிக்கு வருவதற்கு முன்பே நீங்கள் அன்புடன் திரும்பிவரத் தயாராய் இருப்பதாக அறிவித்திருப்பதற்காகவும் நன்றி.

காரியக் கமிட்டியினர் டில்லிக்குத் திரும்பிவந்த பின் என்ன செய்வதென்பது பற்றிய கால அட்டவணை விஷயமாக நான் இன்னும் சிந்திக்கவில்லை. எனினும், அவர்கள் வருவதற்கு முன் நீங்கள் திரும்பி வரவேண்டிய காரணம் எதுவும் இல்லை என்றே தோன்றுகிறது. இந் நிலையில் அவசியம் ஏற்படுவதற்குமுன், குளிர்ச்சியான முசூரியை விட்டுவிட்டு உஷ்ணமான டில்லிக்கு வரும்படி உங்களைக் கேட்பது முற்றிலும் தவருகும். இந்த ஓய்வு உங்களுக்கு மகிழ்ச்சியளித்திருக்கிறது என்றே நம்புகிறேன்.

ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் மிகவும் குணம் அடைந்திருக்கிறார் என்பதைக் கேட்க நீங்கள் மகிழ்ச்சியடைவீர்கள். எனினும் அவர் இன்னும் பலவீனமாகவே இருந்து வருகிறார்.

நல்வாழ்த்துக்கள்.

தங்கள் உண்மையுள்ள,
பெதிக்-லாரென்ஸ்

## 268

பிர்லா மாளிகை,
முசூரி, 5-6-1946

லார்டு பெதிக்-லாரென்ஸ்,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுடைய 3வ கடிதம் கிடைத்தது.

உங்களுடைய ஆலோசனைக்கு இணங்க நான் 8வ மாலை வரையில் முசூரியில் இருந்துவிட்டு, அன்றிரவு 11 மணிக்கு டில்லி வந்து சேருவேன். இதன் பலனுக, பரபரப்போ, அவசரமோ இல்லாமல் மறுநாள் காலை அலுவல்களைக் கவனித்துவிட்டு, அன்று மாலை நடக்கும் காரியக் கமிட்டிக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்குத் தயாராக இருக்கலாம்.

நம் இருவருக்கும் நண்பரான ஹொரேஸ் அலெக்சாண்டர் இந்தக் கடிதத்தை உங்களிடம் கொடுப்பார்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 269

# அறிவுக்கு எட்டாதவர்

புது டில்லி,
மௌனதினம், *10-6-1946*

லார்டு பெதிக்-லாரென்ஸ்
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

வரப்போகும் 'ஹரிஜனு'க்கு இந்தக் கட்டுரையை எழுதியிருக்கிறேன். அதன் பிரதி ஒன்றை நீங்களும் சர் ஸ்டாபோர்டும் பார்க்க விரும்புவீர்கள் என்றே அதை இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

## அறிவுக்கு எட்டாதவர்

கடவுளை, யாரும் அறிந்துகொள்ள முடியாதவர் என்று சில அறிஞர்கள் வர்ணிக்கிறார்கள்; அவர் அறிவுக்கு எட்டாதவர் என்று மற்றும் சிலர் வர்ணிக்கின்றனர்; அவர் 'இது அல்ல' 'அது அல்ல' என்று மேலும் சிலர் கூறுகின்றனர். எனினும் தற்போதைய வாதத்திற்கு 'அறிவுக்கு எட்டாதவர்' என்று வைத்துக்கொள்வதே நல்லது.

நேற்று (ஜூன் 9) நான் பிரார்த்தனைக் கூட்டத்தில் ஒரு சில வார்த்தைகள் கூறியபோது, இந்த மாபெரும் 'அ' (கடவுள்) காட்டக்கூடிய வழியையும்,அளிக்கக்கூடிய சக்தியையுமே நம்பவேண்டும் என்றும், அதற்காக அவர்கள் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்றும் குறிப்பிட்டேன். இதைக் காட்டிலும் அதிகமாக நான் எதுவும் கூற முடியவில்லை. இப்போது இந்தியாவில் மக்களின் முன்னிலையில் மகத்தான ஒரு நாடகம் நடந்துவருகிறது. அந்த நாடகத்தில் எல்லாக் கட்சிகளும் வெற்றிகரமாகச் சமாளிக்க வேண்டிய கஷ்டங்கள் இருக்கின்றன. எனவே எல்லோரும் அறிவுக்கு எட்டாதவர் மீது நம்பிக்கை வைக்க வேண்டும். அவர் பல சமயங்களில் மனிதனின் அறிவைக் குழப்பி, அவனது குப்பைத் திட்டங்களையெல்லாம் இமை கொட்டும் நேரத்தில் சீர்குலைத்துவிடுகிறார். அறிவுக்கு எட்டாத கடவுளிடத்தில் தங்களுக்கு நம்பிக்கை இருப்பதாக பிரிட்டிஷார் கூறுகின்றனர்.

முஸ்லிம் லீகும் அவ்விதமே கூறுகிறது. அல்லா-ஓ-அக்பர் என்று கூறுவதில் அவர்கள் ஆனந்தம் அடைகின்றனர். அதற்குச் சமமான ஒரே கோஷம் காங்கிரஸில் இல்லை என்பது இயல்பே யாகும். எனினும், இந்தியா முழுவதற்கும் பிரதிநிதி ஸ்தாபன மாக இருக்க காங்கிரஸ் விரும்புகிறது. இந்தியாவில் கடவுளிடம் நம்பிக்கையுள்ள கோடிக்கணக்கான மக்களுக்கு, அவர்கள் கடவுளுடைய மாளிகையின் எந்தப் பகுதியைச் சேர்ந்தவர்களா யினும், காங்கிரஸ் பிரதிநிதி ஸ்தாபனமாக இருந்துவருகிறது.

நான் யாராலும் அசைக்க முடியாத நம்பிக்கைவாதியாக இருந்தும்கூட, இதை எழுதிக்கொண்டிருக்கும் சமயத்தில், அரசியல் துறையில் எல்லாம் பத்திரமாக இருக்கின்றன என்று நான் திட்டவட்டமாகச் சொல்ல இயலாதவனாக இருக்கிறேன். எனவே, இப்போது நான் சொல்லக் கூடியதெல்லாம் இதுதான்; எல்லாக் கட்சிகளும் சிறந்த முறையில் முயற்சிகள் செய்தும்கூட அபாயம் நேருமாயின், அதுவும் நன்மைக்குத்தான் என்றும், அபாயத்தில்தான் அபாயமின்மை இருக்கிறது என்றும் என் னுடன் சேர்ந்து சொல்லும்படி அவர்களை நான் அழைக்கிறேன். நாம் அறிந்தாலும் சரி, அறியாவிட்டாலும் சரி, நாம் எல்லோரும் கடவுளின் குழந்தைகளே. நாம் கடவுளின் குழந்தைகள் எனில், என்ன நேர்ந்தாலும் அதை நாம் நன்மையாகவே எடுத்துக் கொண்டு, நாம் செல்ல வேண்டிய அடுத்தபடி எங்கே இருந் தாலும் அதை அடைய உற்சாகத்துடனும் நம்பிக்கையுடனும் வேலை செய்ய வேண்டும். அவ்விதம் வேலை செய்வதற்கான ஒரே நிபந்தனை என்னவெனில், ஒவ்வொரு கட்சியினரும் அகில இந்தி யாவின் நன்மைக்காக யோக்கியப் பொறுப்புடன் சிறந்த முறையில் பாடுபட வேண்டும். பந்தயத்தில் நாம் வெற்றி பெற வேண்டியது அதுதான், வேறு எதுவும் அல்ல.

மோ. க. காந்தி

# 270

## 'கடவுளிடத்தில் நம்பிக்கையில்லை'

*மந்திரி சபைத் தூது கோஷ்டி காரியாலயம்,*
*வைஸ்ராய் மாளிகை, புது டில்லி, 10-6-1946*

**சொந்தப் பார்வைக்கு**

*எனது அன்பார்ந்த காந்திஜி,*

கடவுளின் பிரார்த்தனையையொட்டி உங்கள் மனத்தில் எழுந்த சிந்தனைகளை என்னுடனும் ஸ்டாபோர்டுடனும் பகிர்ந்துகொண்டிருப்பதற்காக உங்களுக்கு நன்றி. எனக்குப்

புறம்பான சக்திகளையே நான் நம்பும்போது, தாங்கள் குறிப்பிடும் 'அ' என்ற கடவுளின் கட்டளையை ஒப்புக்கொள்வதுடன் நான் திருப்தியடைய வேண்டும் என்ற பலமான உணர்ச்சி எனக்கு ஏற்படுகின்றது. பிஜாரென்சன்* கூறியிருப்பது போல், சிற்சில சமயங்களில் ஏற்படும் பலன் நமது சக்திக்கு அப்பாற்பட்டதாக இருக்கலாம். எனினும், என் சொந்த முறையில் நான் ஒரு முடிவுக்கு வர வேண்டியிருக்கும்போது, அது ஏராளமானவர்களின் நலனையும் பொறுத்ததாக இருக்கும் போது, அது சரியான முடிவாக இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டிய மகத்தான பொறுப்பை நான் வகிக்க வேண்டியவனாக இருக்கிறேன்.

பின்வரும் கதையை நான் உங்களுக்கு எப்போதாவது கூறியிருக்கிறேனோ? அநீதிக்குப் பின்னணியில் நேர்மையும் நீதியும் பொதிந்து கிடக்கின்றன என்ற ஆழ்ந்த நம்பிக்கைக்கு அந்தக் கதை ஓர் உதாரணமாகும். ஒரு குடியானவன் தனது நிலையைக் குறித்து மிகுந்த கவலையில் ஆழ்ந்திருந்தான். அப்போது ஒரு பாதிரியார், "அப்பா, கடவுளிடத்தில் நீ நம்பிக்கை வை" என்று அவனிடம் கூறினார். அப்போது குடியானவன் இவ்விதம் சொன்னான்: "இல்லை, எனக்குக் கடவுளிடத்தில் நம்பிக்கை இல்லை. இரண்டு ஆண்டுகளுக்கு முன் நான் என்னுடைய பன்றியை இழந்ததற்கு அவர்தான் காரணம். சென்ற வருஷம் அவர் என் வீடு தீப்பற்றி எரியும்படி செய்தார். சென்ற கோடை காலத்தில் அவர் என் மனைவியையும் கொண்டுபோய் விட்டார். ஆகையால், கடவுளிடத்தில் நம்பிக்கைவைக்க நான் மறுக்கிறேன். ஆனால், உங்களுக்கு ஒன்று மாத்திரம் கூறுகிறேன். அவருக்கு மேலே ஒரு சக்தி இருக்கிறது. கடவுள் எல்லை மீறிப் போகும் போது, அந்த சக்தி அவரை இழுத்து மட்டந்தட்டி விடும்!"

தங்கள் உண்மையுள்ள,
பெதிக்-லாரென்ஸ்

---

* பிஜாரென்சென் (1832–1910) நார்வே தேசத்தில் பிறந்த சிறந்த கவியும் இலக்கிய மேதையும் ஆவார். அவர் ஏராளமான கவிதைகளும், நாடகங்களும், நாவல்களும் எழுதி, நவீன ஐரோப்பிய இலக்கிய உலகில் பெரும் புகழுடனும் செல்வாக்குடனும் விளங்கினர்.

# 271

# இடைக்கால சர்க்காரும் அரசியல் நிர்ணய சபையும்

வால்மீகி மந்திர், ரீடிங் ரோடு,
புது டில்லி, *12-6-1946*

மேன்மை தங்கிய வைஸ்ராய்,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுடன் நான் பேசி முடிந்ததும், அங்கிருந்து நேராக காரியக் கமிட்டிக் கூட்டத்திற்குச் சென்றேன். மௌலானா சாகிப் நோயுற்றிருப்பதால், அக்கூட்டம் அவரது ஜாகையிலேயே நடந்தது. நமக்குள் நடந்த பேச்சின் சாரத்தை காரியக் கமிட்டியினருக்கு நான் எடுத்துக் கூறினேன். பெயர்களை நிர்ணயிப்பதற்காக கட்சிகள் கூட வேண்டும்; ஆனால் எந்தக் கட்சியும் சம அந்தஸ்தைப்பற்றிப் பேசக்கூடாது; தற்காலிகமான இடைக் கால அரசாங்க மந்திரி சபையில் சேர வேண்டியவர்களின் பெயர்கள் அடங்கிய ஒரு கூட்டு ஜாப்தாவைத் தயாரிக்கும்படி நீங்கள் அவர்களைக் கேட்கவேண்டும்; அந்த ஜாப்தாவை நீங்கள் அங்கீகரிப்பீர்கள்; நீங்கள் அதை அங்கீகரிக்காவிட்டால், உங்களுடைய திருத்தங்களுக்கிணங்க அவர்கள் வேறு ஒரு ஜாப்தாவைத் தயாரிக்கவேண்டும்; அந்த ஜாப்தாவின்படி ருசுப்பிக்கப் பட்ட திறமையும், அப்பழுக்கற்ற நேர்மையும் உள்ளவர்கள் அடங்கிய கூட்டு அரசாங்கம் அமைக்கப்படும். கட்சிகள் கூட வேண்டுமென்ற உங்களுடைய 'யோசனையை இந்த நிபந்தனைகளின் கீழ் நான் மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டதாகவும் அவர்களிடம் கூறினேன். கட்சிகளுக்குள் சமத்துவ அந்தஸ்து என்பதற்குப் பதிலாக நீண்டகால ஒரு விதியைத் தீவிரமாக அமலுக்குக் கொண்டுவருவதாக உங்கள் அறிக்கையில் குறிப்பிடவேண்டும் என்றும் நான் யோசனை கூறினேன். அதாவது பெரிய வகுப்புப் பிரச்னைகள் யாவும் அந்தந்த வகுப்பைச் சேர்ந்தவர்களின் வாக்குகளைக்கொண்டே தீர்மானிக்கப்படவேண்டும் என்பதுதான் அந்த விதியாகும். எவ்வளவோ முயற்சி செய்தும்கூட கட்சிகளுக்குள் எத்தகைய ஒப்பந்தமும் ஏற்படாவிடில், இரு கட்சிகளுடைய ஜாப்தாக்களின் தராதரத்தை நீங்கள் பரிசீலனை செய்து, ஒரு கட்சியின் ஜாப்தாவையோ அல்லது மற்றொரு கட்சியின் ஜாப்தாவையோ (கலப்பு ஜாப்தாவை அல்ல) நீங்கள் அங்கீகரித்து, இடைக்கால அரசாங்க மந்திரிகளின் பெயர்களை அறிவிக்க வேண்டும் என்றும் நான் யோசனை கூறினேன். இந்த யோசனையை நீங்கள் அங்கீகரிப்பதாகத் தோன்றியது என்றும் காரியக் கமிட்டிக்கு நான் அறிவித்தேன்.

கட்சிகளின் கூட்டு ஆலோசனை நடைபெறுவதாயின் அதில் மௌலானு சாகிபும் கலந்து கொள்ளவேண்டும் என்றும், அவ்விதம் கலந்து கொள்வது காங்கிரசின் கௌரவத்தைப் பொறுத்த விஷயம் என்றும் நான் அவர்களுக்குக் கூறினேன். மௌலானு சாகிப் கலந்து கொள்வது காயிதே ஆஜம் ஜின்னு வெறுக்கும் ஒரு விஷயம் என்று நீங்கள் கூறினீர்கள். அவ்வித வெறுப்புக்குச் சிறிதும் காரணம் இல்லை என்றும், இருபத்தைந்து ஆண்டுகளாக காங்கிரசினிடம் நம்பிக்கையுடனும், விசுவாசத்துடனும் இருந்துவரும் ஓர் ஊழியரை காங்கிரஸ் தியாகம் செய்துவிடும் என எதிர்பார்க்க முடியாது என்றும் நான் உங்களுக்குப் பதில் அளித்தேன். மௌலானு சாகிபின் தன்னலத்தியாகமும், தேசீய லட்சியத்தில் அவருக்குள்ள ஈடுபாடும் ஒருபோதும் சந்தேகத்துக்குக் காரணமாக இருந்ததில்லை. எனவே உங்களுடைய நீண்டகால அனுபவமும், தருமசங்கடமான பிரச்னைகளைச் சமாளிப்பதில் உங்களுக்குள்ள திறமையும், இந்தத் தகராறைத் தீர்ப்பதற்கான ஒரு வழியை உங்களுக்குக் காட்டும்.

அரசியல் நிர்ணய சபை சம்பந்தப்பட்டவரையில், ஐரோப்பியர்கள் வாக்களிப்பது நினைக்கவும் முடியாத விஷயம் என்ற உண்மையையும், இந்தியாவில் வசித்துவரும் ஐரோப்பியர்களின் பகிரங்கப் பிரகடனத்தின் மூலமோ அல்லது அவர்கள் சார்பில் நீங்கள் விடுக்கும் ஒரு பிரகடனத்தின் மூலமோதான் அரசியல் நிர்ணய சபை அமைவது சாத்தியமாகும் என்பதையும் உங்கள் கவனத்திற்குக் கொண்டுவந்ததாக கமிட்டியினரிடம் நான் இறுதியாகக் கூறினேன். அந்தப் பிரச்னையையொட்டி நீங்கள் கவனம் செலுத்திவருவதாயும், அது திருப்திகரமாக முடிவு செய்யப்படும் என்றும் உங்களிடமிருந்து நான் தெரிந்து கொண்டேன்.

கூட்டு சமரசப் பேச்சு என்ற விஷயமாக நீங்கள் ஏற்கனவேயே தகுந்த முயற்சிகளை மேற்கொள்ளத் தொடங்கியிருக்கலாம். நமது சம்பாஷணைகளைப்பற்றி நான் அவர்களுக்குக் கூறிய விவரங்களை எழுத்துமூலம் குறிப்பிடுவது உங்களுக்கும் காரியக் கமிட்டியினருக்கும் நான் செய்ய வேண்டிய கடமை என்று நினைத்தேன். அவ்விஷயமாக நான் ஏதாவது தவருகப் புரிந்து கொண்டிருந்தால், நீங்கள் தயவு செய்து அதைத் திருத்துவீர்களா?

உங்களுக்கு அனுப்ப வேண்டிய நகல் கடிதத்தை காரியக் கமிட்டியினர் தயாராக வைத்துக் கொண்டிருந்தார்கள் என நான் கூறலாம். எனினும் எனது யோசனைக்கு இணங்க, இந்தக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள தங்களுடைய முயற்சிகளின் இறுதியான முடிவுதெரியும் வரையில் அதைப்பற்றி யோசிப்பதை ஒத்திவைத்திருக்கிருர்கள். சமத்துவ அந்தஸ்து, ஐரோப்பியர்களின் வோட்டு, உத்தேசிக்கப்பட்டுள்ள அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர்களாக அவர்களுடைய தேர்தல் ஆகியவை சம்பந்தமாக நான் நேற்று உங்களிடம் கூறிய அபிப்பிராயத்தையே நகல் கடிதத்திலும் குறிப்பிட்டிருக்கிருர்கள்.

உங்களுடைய முயற்சி பலனைக்கொடுக்கும் என்ற நம்பிக்கையுடன் இந்தக் கடிதத்தை நான் முடிக்கிறேன். அவ்விதம் பலனைக் கொடுக்கவேண்டும் என்றே எல்லோரும் ஆர்வத்துடன் எதிர் பார்த்துக் கொண்டிருக்கிருர்கள்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

# 272

# ஒரே சமயத்தில் இரண்டு குதிரைகள்மீது சவாரி!

பங்கி காலனி, ரீடிங் ரோடு,
புது டில்லி, *13-6-1946*

லார்டு வேவல்,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

லார்டு லாரென்ஸ், தம்மைப் பார்க்க நேற்றிரவு என்னை அழைத்தபோது உங்களுடைய நன்றியை அவர் எனக்குத் தெரிவித்தார்.

பிறர் நன்றி செலுத்த வேண்டும் என்பதற்காக நான் மனமறிந்து எதுவும் செய்த குற்றத்திற்கு ஒருபோதும் ஆளானதில்லை என்று நான் கூறுவதை தயவு செய்து நம்புங்கள். நீங்கள் ஒரு பெரிய சிப்பாய், துணிகரமான சிப்பாய். எனவே துணிச்சலுடன் நேர்மையான காரியத்தைச் செய்யுங்கள். நீங்கள் சவாரி செய்ய ஒரு குதிரையையோ அல்லது மற்ருெரு குதிரையையோ நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். எனக்குத் தெரிந்த வரையில், ஒரே சமயத்தில் இரண்டு குதிரைகளின்மீது சவாரி செய்வதில் நீங்கள் ஒரு போதும் வெற்றி பெற முடியாது. ஒன்று காங்கிரஸ் கொடுத்துள்ள பெயர்களையோ அல்லது லீக் கொடுத்துள்ள பெயர்களையோ ஏற்றுக் கொள்ளுங்கள். பொருத்தமற்ற கலப்பட முறையைக் கைக் கொள்ள முயற்சித்து பயங்கரமான வெடி ஏற்படும்படி செய்துவிடாதீர்கள். அது எப்படியாயினும், ஒரு கால கெடுவை நிர்ணயித்து, அதற்கு மேல் நாங்கள் டில்லியிலிருந்து புறப்பட்டுச் சென்றுவிடலாம் என்று கூறுங்கள்.

நான் கூறுவதன் அர்த்தத்தைத் தெளிவாக்கியிருப்பதாகவே நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 273

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி, 13-6-1946*

*அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

*நேற்றும் இன்றும் நீங்கள் எழுதிய இரு கடிதங்களுக்காகவும், உதவியாக இருக்கக் கூடிய உங்களுடைய யோசனைகளுக்காகவும் நன்றி. அந்த யோசனைகளை நிச்சயமாக நான் மனத்தில் வைத்துக் கொள்வேன்.*

*இன்று காலை நான் சுதீர் கோஷுடன் பேசிக் கொண்டிருந்தேன். மீண்டும் மாலையில் பண்டித ஜவாஹர்லால் நேருவைப் பார்க்கலாமென நம்புகிறேன்.*

*தங்கள் உண்மையுள்ள,*
வேவல்

## 274

# நெருப்புடன் விளையாட்டு

*புது டில்லி,*
*19-6-1946*

*அன்புள்ள சர் ஸ்டாபோர்ட்,*

*உங்கள் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருக்கும் ஒருவிதமான புயலைப் பற்றி சுதீர் என்னிடம் கூறினர். நேற்று முன்தினம் உங்களுடைய அருமை மனைவியை நான் சந்தித்தேன்.*

*நீங்கள் கவலைப்பட வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். உங்களுடைய வாழ்க்கையிலேயே மிகவும் கஷ்டமான ஒரு விஷயத்தை நீங்கள் சமாளிக்கும்படி நேர்ந்திருக்கிறது. பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் நெருப்புடன் விளையாடி வருகின்றனர். உங்களுக்குத் தைரியம் இருந்தால், ஆரம்பம் முதல் நான் கூறிவரும் யோசனையை நீங்கள் நிறைவேற்றியிருப்பீர்கள். கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை என்ற நிலையை நீங்கள் விட்டுவிட வேண்டும் என்று நான் அப்போதே கூறினேன். ஒன்று முஸ்லிம் லீகை நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும் அல்லது காங்கிரசைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். இரண்டு ஸ்தாபனங்களும் உங்களுடைய சிருஷ்டிகள்தான். நீங்கள் இங்கே இருக்கும் ஒவ்வொரு நாளும் ஒரு சமயம் காங்கிரசுடன் சல்லாபம் செய்து உறவு கொண்டாடு*

கிறீர்கள்; மற்றொரு சமயம் முஸ்லிம் லீகுடன் நட்புக் கொள்கிறீர்கள்; மறுபடியும் காங்கிரசுடன் உறவு வைத்துக் கொள்கிறீர்கள். இவ்விதமே உங்களுடைய சக்தியெல்லாம் தேய்ந்து குன்றிப் போகிறது. இப்படியாயின், காரியம் நடைபெறாது. ஒன்று நீங்கள் நேர்மையுடன் நடந்து கொள்வதாக உறுதி செய்து கொள்ள வேண்டும் அல்லது பிரிட்டிஷ் சமய சஞ்சீவிக் கொள்கைக்கு ஏற்றவாறு நடக்க உறுதி கொள்ள வேண்டும். இந்த இரண்டில் எந்தக் கொள்கையை மேற்கொண்டாலும், தைரியம் அவசியமாகும். உங்களுடைய கால அட்டவணையை மாத்திரம் உறுதியுடன் பின்பற்றுங்கள். வானம் இடிந்து விழுவதாக இருந்தாலும், நீங்கள் குறிப்பிட்ட தேதிகளில் குறிப்பிட்ட அலுவல்களைச் செய்து முடிக்கவேண்டும்.

கூட்டு மந்திரி சபையை அமைக்க நீங்கள் காங்கிரசை அனுமதித்தாலும் அல்லது முஸ்லிம் லீகை அனுமதித்தாலும் *16*–ஆம் தேதிக்குள் புறப்பட்டு விடுங்கள். எது நன்மை என்பதை, உங்களுடைய சிருஷ்டிகளான காங்கிரசையும், முஸ்லிம் லீகையும் காட்டிலும் வெகு காலமாகச் சேகரித்து வைத்திருக்கும் விவேகத்தையுடைய பிரிட்டிஷார் நன்கு அறிவார்கள் என நீங்கள் நினைத்தால், நான் மேற்கொண்டு எதுவும் கூறுவதற்கில்லை. எனினும், நீங்கள் அவ்விதம் எண்ணும் கோஷ்டியைச் சேர்ந்தவர் அல்ல என்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். அப்படியாயின், *16*–ஆம் தேதி உங்களுடைய பிரயாணத்தை ரத்து செய்யாமல், பாவம், உங்களுடைய மனைவியையும் அழைத்துக் கொண்டு இங்கிலாந்துக்கு புறப்பட்டுச் செல்லுங்கள். பிரிட்டிஷார் தைரியமாகச் செய்த பிரகடனம், இந்தியர்களின் நம்பிக்கைக்கு உகந்தவாறு நிறைவேற்றப்பட்டாலொழிய, நீங்கள் இங்கிலாந்தில் அரசியலை விட்டுவிட்டு முற்றிலும் குடும்ப வாழ்க்கையில் ஆழ்ந்துவிடுங்கள். விவேகம் உள்ளவருக்கு ஒரு வார்த்தை போதும்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி.**

## 275

# கிரிப்ஸின் உறுதி

மந்திரி சபைத் தூது கோஷ்டி காரியாலயம்,
வைஸ்ராய் மாளிகை, புது டில்லி, *13-6-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உங்களுடைய கடிதத்திற்காக நன்றி. எங்களில் சிலரைப் போல நீங்களும் ஓரளவு பொறுமையிழந்துவிட்டீர்கள் என்று



1946 ஜுலை 6-ஆம் தேதி பம்பாயில் நடந்த அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில்
காங்கிரஸ் அக்கிராசனர் நேருஜியுடன் காந்திஜி தீவிரமான ஆலோசனையில் ஈடுபட்டிருக்கின்றார்.



1946 ஜூலை 6-ம் தேதி பம்பாயில் நடந்த அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில்
அப்துல் கபார் கானுடன் காந்திஜி.

நான் அஞ்சுகிறேன்! எனினும், இத்தகைய கஷ்டமான விஷயங்களைச் சமாளிப்பதில் "எல்லையற்ற பொறுமை" காட்ட வேண்டும் என்று நீங்கள் எனக்கு புத்திமதி கூறியதை நான் எப்போதும் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறேன். இங்கேயுள்ள கஷ்டமான பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு உதவியாக இருக்கக் கூடிய எந்த அலுவலையும் பாக்கி வைக்காமல் செய்துவிட வேண்டும் என்பதே எனது உறுதியாகும். அவ்விதம் செய்வதற்கு முன் தாய் நாட்டிற்குத் திரும்பும் ஆசைக்கும், ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசைக்கும் நான் இடம் கொடுக்கப் போவதில்லை.

தகுந்த நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளுவதற்குப் போதிய தைரியம் எனக்கும் எனது சகாக்களுக்கும் உண்டு என்று நான் உங்களுக்கு உறுதி கூற முடியும். ஆனல், அந்த தைரியத்தை விவேகத்துடன் உபயோகிக்கவே நாங்கள் விரும்புகிறோம்.

நாங்கள் இந்தியாவிலிருந்து புறப்படுவதற்கு முன், பிரச்னையை சமரசமாகத் தீர்ப்பதற்கான ஒரு வழியைக் கண்டுபிடிக்க நாங்கள் உதவி புரியலாம் என்ற மகத்தான நம்பிக்கை இன்னும் எனக்கு இருக்கிறது.

தங்களிடம் எனக்குள்ள பேரன்பையும் மதிப்பையும் தெரிவித்துக் கொள்வதுடன், நோயுற்ற என் விஷயத்தில் தங்களுக்குள்ள அனுதாபத்திற்காகவும் அக்கறைக்காகவும் நன்றி செலுத்துகிறேன்.

தங்களுடைய மிகவும் உண்மையுள்ள,
**ஆர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ்**

# 276

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி,
13-6-1946

அன்புள்ள நண்பருக்கு,

இன்று மாலை 4 மணிக்கு நாங்கள் வெளியிடப்போகும் அறிக்கையின் பிரதி ஒன்றை உங்களுக்கு நான் இத்துடன் அனுப்பியிருக்கிறேன். காங்கிரஸ் அக்கிராசனருக்கும், முஸ்லிம் லீக் தலைவருக்கும் நான் அனுப்பியுள்ள கடிதத்தின் பிரதியையும் இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.* இந்த யோசனைக்கு உங்களுடைய ஆதரவை நாங்கள் பெறலாம் என்று நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**வேவல்**

*மேலே வைஸ்ராய் வேவல் குறிப்பிட்டிருக்கும் அறிக்கையையும், கடிதத்தையும் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

# 277

# ஒளி மறைந்து விட்டது

பங்கி காலனி, ரீடிங் ரோடு,
புது டில்லி, 24-6-1946

அன்புள்ள சர் ஸ்டாபோர்ட்,

உங்களையும் ஸ்ரீமதி கிரிப்ஸையும் குறித்து என் உள்ளம் நெகிழ்கின்றது. இந்தக் கடிதத்தை நான் தங்களுக்கு எழுதாமல் இருக்கவே விரும்பினேன். இருந்தாலும் நான் எழுதித் தீரவேண்டியிருக்கிறது. அரசியல் நிர்ணய சபையில் இடம்பெற காங்கிரஸ் தயாராக இருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. இருந்தாலும், திக்குத் திசை தெரியாத இருளில் பாயும்படி நான் காரியக் கமிட்டிக்கு ஆலோசனை கூற மாட்டேன். சுதீர், தற்போது நிலவிவரும் இருளில் நான் ஒளியைக் காணும்படி செய்தார். எனினும் அந்த ஒளி இப்போது இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. எல்லா உறுதிமொழிகளையும் நீங்கள் குப்பை மேட்டில் தூக்கியெறிந்துவிட்ட பிறகு எங்கு பார்த்தாலும் சூன்யமாக இருக்கிறது.* நாம் பேசிக்கொண்டிருந்தபோது முழுத் தகவல்களையும் அறிவிக்கும்படி நான் உங்களை வற்புறுத்த முடிய வில்லை. இடைக்கால அரசாங்கத்துடன் தொடர்பற்ற எத்தகைய நீண்ட கால யோசனையையும் ஒப்புக்கொள்ள வேண்டாம் என்று நான் காரியக் கமிட்டிக்கு யோசனை கூற உத்தேசித்திருக்கிறேன். அவர்களுக்கு எது நியாயமானதாகத் தோன்றுகிறதோ அவ்விதம் நடந்துகொள்ளும்படி நான் காரியக் கமிட்டியினருக்கு யோசனை கூறமுடியாது. அவ்விதம் கூறுவது என் மனச் சாட்சிக்கு விரோதமாக நடந்துகொள்வதாகும். என்னைச் சூழ்ந்துள்ள இருளை அகற்றுவதற்கான ஒளி எதையும், உங்களுடன் பேசியதன் பலனை நான் காணவில்லை என்று மாத்திரமே அவர்களிடம் கூறப் போகிறேன். எனினும் அபாய அறிகுறிகள் இருக்கின்றன என்பதை உருவான முறையில் ருசுப்பிக்க எதுவும் இல்லை என்றும் நான் கூறப்போகிறேன்.

இக் கடிதத்தை உங்களுக்கு அனுப்புவதற்காக நான் வருந்துகிறேன். இருந்தாலும், நாளை மாலை 6-30 மணிக்கு மௌலானா சாகிபின் வீட்டில் கூடும் காரியக் கமிட்டியுடன் எனது உணர்ச்சியைப் பகிர்ந்து கொள்ளுமுன் அதை உங்களுக்கு அறிவிக்க வேண்டும் என்று நான் நினைத்தேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

---

* இடைக்கால அரசாங்கம் அமைக்கும் யோசனை ஒத்திவைக்கப்பட்டதையே காந்திஜி மேற்கண்டவிதம் குறிப்பிட்டிருக்கிறார்.

# 278

# சமரசப் பேச்சுகளுக்குப் பிறகு

வர்த்தக போர்ட்,
*மில்பாங்க், எஸ். டபிள்யூ. 1.*
*8-7-1946*

சொந்தப் பார்வைக்கு

*எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

இப்போது நான் மீண்டும் லண்டனுக்குத் திரும்பிவந்து எனது அலுவல்களைக் கவனித்து வருகிறேன். எனவே, நான் இந்தியாவில் இருந்தபோது நீங்கள் எனக்கு மிகவும் உதவியாக இருந்ததற்காக எனது வாழ்த்துக்களையும், நன்றியையும் தெரிவித்து உங்களுக்கு இந்தக் கடிதம் எழுத விரும்புகிறேன். நமக்குள் கருத்து வேற்றுமைகள் இருந்தன. அவற்றை நாம் ஒருவருக்கொருவர் ஒளிவு மறைவின்றி தெரிவித்துக் கொண்டோம். நண்பர்கள் அவ்விதம் மனம் விட்டுப் பேசுவதால் நட்பு அதிகமாகிறது. அதன் காரணமாக நமது நட்பும் அதிகமாகியிருக்கிற தென்றே நான் கருதுகிறேன்.

வெவ்வேறான பின்னணியிலிருந்தும் சூழ்நிலையிலிருந்தும் வந்துள்ள நாம் இயல்பாகவே வெவ்வேறான வழிகளை மேற்கொண்டோம். என்றாலும், நாம் ஒரே லட்சியத்தை அடையவே முயற்சித்தோம் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். நீங்கள் அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் தலையிட்டு மிகவும் உதவியாக இருந்ததைப் பற்றி வாசிக்க நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். அங்கே முடிவாகும் தீர்மானம் மேற்கொண்டு உதவியாக இருக்கும் என்பது நிச்சயம்.

இப்போது நாம் இடைக்கால அரசாங்கப் பிரச்னையைத் தீர்க்க வேண்டியவர்களாக இருக்கிறோம். அவ் விஷயமாக ஒரு சமரசம் ஏற்படுவதற்கு உங்களால் இயன்றதையெல்லாம் நீங்கள் செய்வீர்கள் என்பதை நான் அறிவேன். அம் முயற்சியின் பலனாக, இரு பெரிய கட்சிகளும், இந்தியாவின் உடனடியான நன்மைக்காக ஒன்று சேர்ந்து வேலை செய்வது சாத்தியமாகலாம். என்னுடைய பிரசங்கங்கள் அடங்கிய ஒரு சிறிய புத்தகத்தின் பிரதி ஒன்றை உங்களுக்கு அனுப்பும் உரிமையை நான் எடுத்துக் கொண்டிருக்கிறேன். அது சென்ற ஆகஸ்டு மாதம் வெளியிடப்பட்டது. மற்றொன்று இந்த வாரம் வெளியாகிறது. அது சாதாரண தபாலில் அனுப்பப்பட்டிருப்பதால், இன்னும் ஒன்றிரண்டு வாரங்கள் வரையில் அது உங்கள் கைக்குக் கிடைக்காதென அஞ்சுகிறேன்.

நாங்கள் திரும்பிவந்ததிலிருந்து எங்களுக்கு ஓய்ச்சலே ஒழிவே இல்லை. எங்களுடைய மகள் மிகவும் நோயுற்றிருந்ததால், சென்ற சில நாட்களை நாங்கள் டாக்டர்களுடனும் விசேஷ வைத்திய நிபுணர்களுடனுமே கழித்தோம். சிகிச்சைக்காக அவளை, என் மனைவி சென்ற வெள்ளிக்கிழமை ஒரு விசேஷ வைத்திய விடுதிக்கு அழைத்துச் சென்றாள். அவளைப் பார்ப்பதற்காக நான் நேற்று அங்கே சென்றேன். அவள் தற்காலிகமாக அங்கேயே இருக்கப் போகிறாள் இது ஓரளவு திருப்தியளிக்கும் விஷயமாகும். அந்தப் பிரதேசத்தில் அற்புதமான, ஆன்மிகமான சூழ்நிலை இருந்து வருகிறது. இதுவும், அவள் பெறும் வேறு சிகிச்சையும் அவள் குணம் அடைவதற்கு உதவியாக இருக்கும் என நாங்கள் நம்புகிறோம்.

நாங்கள் இருவரும், அன்பார்ந்த நினைவுகளையும் நல்வாழ்த்துக்களையும் உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

தங்களுடைய மிகவும் உண்மையுள்ள,
**ஆர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ்**

# 279

# சாத்தியமான சிறந்த வழி

*வர்த்தக போர்டு,*
*மில்பாங்க், எஸ். டபிள்யூ. 1.*
*20-7-1946*

**அந்தரங்கமானது**

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நார்மன் கிளிப், நீங்கள் ரயில் வண்டியில் அவருடன் பேசிய மிகவும் ரசமான விவரங்களை முதலில் எனக்கு அனுப்பியிருக்கிறார்.* அவை பல பிரச்னைகளை எழுப்புகின்றன. எனவே, அவற்றைப் பற்றி சில வார்த்தைகள் எழுத விரும்புகிறேன். பேசுவதைப் போல் கடிதம் அவ்வளவு திருப்தி அளிக்கக் கூடியதல்ல. இருந்தாலும், தொலைவில் இருப்பவர் பேசுவதற்குப் பதிலாகச் செய்யக் கூடிய சிறந்த காரியம் கடிதம் எழுதுவது தான்.

இது முற்றிலும் சொந்த முறையில் எழுதும் கடிதம்; அதாவது பிரிட்டிஷ் சக்கரவர்த்தியின் மந்திரி என்ற முறையில் அல்ல, ஒரு மனிதன் என்ற முறையில் எழுதுவதாகும்!

---

* நார்மன் கிளிப் காந்திஜியுடன் பேசிய விவரங்களைப் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

உங்களுடைய நிலையைத் தெளிவாக எடுத்துக் கூறுவதில் நீங்கள் வெற்றி பெறவில்லை என்று கூறினீர்கள். உங்களை அறிந்துகொள்ளும் முயற்சியை நாங்கள் கைவிட்டுவிட்டதாகவும் நீங்கள் நினைத்தீர்கள். என்னைப் பொறுத்தமட்டில் அது உண்மை யல்ல என்றே நம்புகிறேன். நார்மன் கிளிப்பிடம் நீங்களே கூறி யுள்ள விளக்கத்திற்கிணங்க நாங்கள் உங்களை அறிந்து கொண் டிருக்கிறோம் என்றே நம்புகிறேன். நாங்கள் சமர்ப்பித்த நடை முறையில் சாத்தியமான யோசனைகள் எங்களுடைய அபிலாஷை களைப் பிரதிபலிப்பதாக இல்லை என்ற எண்ணம் உங்களுக்கு எப்படியோ ஏற்பட்டுவிட்டது என்று நாங்கள் நம்பினோம். எங்களுடைய அபிலாஷைகள் சிறந்தவை என்பதை நீங்கள் ஒப்புக்கொண்டீர்கள். என்றாலும், இந்திய நிலைமையின் உண்மை யான உட்பொருளை நாங்கள் உணர்ந்துகொள்ளத் தவறிவிட் டோம் என்றும், அதன் காரணமாக நாங்கள் கூறியுள்ள நடை முறையில் சாத்தியமான யோசனைகள் குற்றம் குறைகள் உள்ளன வாக இருக்கின்றன என்றும் நீங்கள் நினைத்தீர்கள்.

இந்திய நிலைமையை ஆழ்ந்து அறிந்துகொண்டிருப்பதாக நாங்கள் பாசாங்கு செய்யவில்லை. எந்த ஐரோப்பியரும், அவர் எவ்வளவு காலம் இந்தியாவில் வசித்தவராக இருப்பினும், இந்தி யர்களைப் போல் இந்தியப் பிரச்னைகளை உணர்ந்துகொள்ள முடியாது. அது போலவே பிரிட்டிஷ் பிரச்னைகளை, பிரிட்டி ஷாரைப் போல் எந்த இந்தியரும் உணர்ந்துகொள்ள முடியாது.

எங்கள் முன்னிலையில் கூறப்பட்ட கருத்து வேற்றுமைகளை நாங்கள் உணர்ந்து, அவற்றைச் சமாளிக்க எங்களால் இயன்றதை யெல்லாம் செய்தோம். ஆனால், அவற்றைச் சீர்தூக்கிப் பார்த்து கருத்து வேற்றுமைகளை அகற்றவோ அல்லது அவற்றைச் சரிக் கட்டிக் கொண்டுபோகவோ நாங்கள் முயற்சி செய்து ஒரு வழியைக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது.

உங்களுடைய கருத்தையும் நாங்கள் நன்கு உணர்ந்து கொண் டோம் என்று நம்புகிறேன். இடைக்கால அரசாங்கத்தை அமைக் கும் கடமையை முற்றிலும் காங்கிரசிடம் ஒப்படைத்து விட்டு, இந்தியா முழுவதற்கும் அது நியாயமான உரிமையை வழங்கும் என்ற நம்பிக்கையுடன் இருப்பதே சிறந்த வழி என்பது உங்க ளுடைய அபிப்பிராயமாகும். இந்தியாவின் தற்போதைய சரித் திரத்தில் அது நடைமுறையில் சாத்தியமற்ற ஒரு வழி என்பதை, இந்திய அரசியல் வட்டாரங்களில் நிலவிய உணர்ச்சியிலிருந்து நீங்கள் தெரிந்து கொண்டிருப்பீர்கள். இரு கட்சியினரின் ஒத் துழைப்பைப் பெறவும் முயற்சி செய்ய நாங்கள் கடமைப்பட்டிருந் தோம். உங்களுடைய யோசனையை அடிப்படையாகக் கொண்டு அத்தகைய ஒத்துழைப்பை நாங்கள் பெற்றிருக்க முடியாது. உள்நாட்டுத் தகராறுகள் குறைவாக இருந்த காலத்தில்* அத்தகைய ஒத்துழைப்பு சாத்தியமாக இருந்திருக்

*1919-22-இல் கிலாபத் பிரச்னையை யொட்டி ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்று சேர்ந்தபோது, மேலே ஸ்ரீ ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் குறிப்பிட்டுள்ள அத்தகைய

கலாம். வாதிப்பதற்கான கொள்கையளவில் அந்த ஒத்துழைப்பு உண்மையில் சிறந்ததுதான். எனினும், பல விஷயங்களிலும் இருப்பது போல், சிறந்ததற்கு அடுத்தபடியாக இருப்பதைக் கொண்டே நாம் திருப்தியடைய வேண்டியிருக்கிறது. ஏனெனில், கொள்கையளவில் சிறந்ததாக இருப்பது நடைமுறையில் சிறந்த தாக இருப்பதில்லை.

எனவே, எங்களுடைய நடவடிக்கை மிகவும் உயர்ந்த கொள்கையை அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை. பிரச்னை யைத் தீர்க்க நடை முறையில் எது சாத்தியம் என்பதையே அடிப் படையாகக் கொண்டிருந்தது. இடைக்கால அரசாங்கம் அமைப் பதற்கு நடைமுறையில் சாத்தியமான மிகச் சிறந்த வழி என்ன வெனில், கூட்டு அரசாங்கத்தை அமைப்பதுதான். அதை அமைப் பதற்கு நீங்கள் மதிப்பு மிக்க உங்களுடைய உதவியெல்லாம் அளிப்பீர்கள் என்று நான் மனப்பூர்வமாக நம்புகிறேன்.

நான் இங்கே திரும்பி வந்ததிலிருந்து பிரிட்டிஷ் பொது மக் களின் அபிப்பிராயத்தை அறிந்து கொள்வது எங்களால் சாத்திய மாகியிருக்கிறது. நாங்கள் மேற்கொண்ட, இந்தியாவில் நாங் கள் வெளியிட்ட பரந்த அபிப்பிராயங்களைப் பிரிட்டிஷ் பொது மக்கள் ஆதரிக்கின்றனர் என்பதில் ஐயமில்லை. கூறப்பட்ட உறுதி மொழியிலிருந்து யாராவது பின்வாங்கி விடுவார்களோ என்று அஞ்ச வேண்டியதில்லை. எங்களால் இயன்ற வரையில் முன் னேக்கிச் செல்ல வேண்டும் என்றே ஒவ்வொருவரும் ஆர்வத் துடன் இருக்கின்றனர். அவ்விஷயத்தில், நீங்கள் சமீபத்தில் 'ஹரிஜனி'ல் எழுதிய கட்டுரையில் உள்ள குறிப்பு* முற்றிலும் சரியானது என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும்.

இவ்வளவு நீண்ட கடிதத்தை வாசிக்கும் சிரமத்தை உங்கள் மீது சுமத்துவதற்காக நான் வருந்துகிறேன். இருந்தாலும், நார்மன் கிளிப்பிற்கு நீங்கள் அளித்துள்ள பேட்டியில் நான் மிகவும் அக்கறை கொண்டதால், தங்களுக்கு இக் கடிதத்தை அவசியம் எழுத வேண்டும் என்று எனக்குத் தோன்றியது.

---

ஒத்துழைப்பு சாத்தியமாகியிருக்கலாம் என்று 'மகாத்மா காந்தி' என்ற நூலில் பெதிக்-லாரென்ஸ் குறிப்பிட்டிருக்கிறார்.

*14-7-1946 'ஹரிஜன்' பத்திரிகையில் காந்திஜி பின் வருமாறு எழுதியிருந்த தையே மேற்கண்ட கடிதத்தில் சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் குறிப்பிட்டிருக்கிறார்: "தீமை கள் யாவற்றிற்கும் பிரிட்டிஷாரின் சூழ்ச்சிகள் தான் காரணம் என்று கூறுவது மடத் தனமாகும். அறிவற்ற இந்தக் கொள்கை, அந்நியரின் ஆதிக்கத்தை நிரந்தரமாக இருக்கும்படி செய்து விடும். அது பிரிட்டிஷ் ஆதிக்கமாகத்தான் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. எப்படியிருந்தாலும், பிரிட்டிஷார் போய்விடுவார்கள். அரசாங் கத்தின் அறிக்கையிலிருந்து நான் அறிந்து கொண்டவரையில் ஒழுங்கான முறையில் போய்விடவே பிரிட்டிஷார் விரும்புகின்றனர். அல்லது இந்தியா எக்கேடு கெட்டாவது போகட்டும் என்று அவர்கள் போவார்கள். அப்போது இந்தியா அகிம்சை வழியைக் கைவிட்டுவிடுமாயின், ஆயுதந்தாங்கிய வல்லரசுகள் சேர்ந்த ஒரு கூட்டம் இந்தியா விஷயத்தில் தலையிடுவது நிச்சயம்தான்."

*உங்களுக்கு என்னுடைய நல்வாழ்த்துக்களை அனுப்புவதில் எனது மனைவியும் கலந்து கொள்கிறாள்.*

*தங்களுடைய மிகவும் உண்மையுள்ள,*
**ஆர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ்**

# 280
# சோதனைக் காலம்

*சேவா கிராமம்.*
*வார்தா வழி, 7-8-1946*

*அன்புள்ள சர் ஸ்டாபோர்டு,*

*நீங்கள் எழுதிய அன்பார்ந்த இரண்டு கடிதங்களும் எனக்குக் கிடைத்தன. இரண்டையும் அந்தரங்கமானவையாகவே கருதுவேன் என்பது நிச்சயம்.*

*உங்களுடைய ஆரோக்கியம் மீண்டும் சீர்குலைந்திருக்கிறது என்றும், நீங்கள் நீண்ட கால ஓய்வு எடுத்துக் கொள்ளும்படியான அவசியம் ஏற்பட்டிருக்கிறது என்றும் ராய்ட்டர் தந்திச் செய்திகளிலிருந்து நான் அறிகிறேன். அதைக் குறித்து நான் வருந்துவதுடன், உங்களுடைய வைத்திய ஆலோசகர்கள் கூறுவதற்கு நீங்கள் செவி சாய்ப்பீர்கள் என்றும், உழைத்து உடல் தேயும்படி விட்டு விடமாட்டீர்கள் என்றும் நம்புகிறேன். உங்களையும், உங்களைப் பற்றியும், மற்ற எவரையும் காட்டிலும் உங்களுடைய அருமை மனைவியின் மூலமே நான் அதிகமாகத் தெரிந்துகொண்டேன்.*

*உங்களைப் பற்றியும் உங்களுடைய சகாக்களின் நிலைமை பற்றியும் நீங்கள் கூறுவதையெல்லாம் நான் உணர்கிறேன். உங்கள் நிலையிலிருந்து பார்க்கும்போது அது நியாயமானதென்றே நான் கூறுகிறேன். அத்தகைய நம்பிக்கை இருக்கும் வரையில் நான் உங்களுடைய சார்பில் பேசுவதை நீங்கள் காணலாம். ஆனால், இப்போது சோதனைக் காலம் வந்து கொண்டிருக்கிறது. கடைசியாக முஸ்லிம் லீக் செய்துள்ள முடிவைக் குறித்து நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்பதை நான் கவனித்து வருவேன்.**

*உங்கள் இருவருக்கும் நல்வாழ்த்துக்கள்.*

*தங்கள் உண்மையுள்ள,*
**மோ. க. காந்தி**

---

*29-7-1946-இல் முஸ்லிம் லீக் தலைவர்கள் கூடி, ஏற்கனவே பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூது கோஷ்டியின் திட்டத்திற்குத் தாங்கள் அளித்திருந்த அங்கீகாரத்தை வாபஸ் செய்துகொண்டனர். முஸ்லிம் லீகின் இந்த மனமாற்றத்தையே காந்திஜி மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

பகுதி பதினான்கு

# இடைக்கால அரசாங்கம்

## 281

## பிரதம மந்திரி அட்லிக்குக் கடிதம்

புனா,
*3-7-1946*

*பிரதம மந்திரிக்கு,*
*லண்டன்.*

*அன்புள்ள பிரதம மந்திரிக்கு,*

காலஞ்சென்ற மெக்டொனல்டு* உங்களிடம் ஓர் இந்தியனை அறிமுகம் செய்துவைத்த சம்பவம் உங்களுக்கு நினைவில் இருக்க முடியுமா என்று நான் வியப்படைகிறேன். அவன்தான் இந்தக் கடிதம் எழுதும் நான். அந்த அற்பகால அறிமுகத்தை ஆதார மாகக் கொண்டு உங்களுக்கு என்னுடைய இளம் நண்பரான ஸ்ரீ சுதீர் கோஷை அறிமுகம் செய்து வைக்கத் துணிகிறேன். அவர் பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் இடையே நம்பிக்கைக்கு உகந்த, உறுதியான ஒரு பாலமாகத் திகழ்கிறார். இரு நாடு களையும் அவர் மிகுந்த ஆர்வத்துடன் நேசிக்கிறார். பிரிட்டனில் பரந்த முறையில் அவர் ஏராளமானவர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டுள்ளார். நீங்கள் அனுப்பிய மந்திரி சபைத் தூது கோஷ்டியினருக்கும் அவர் மனமிசைந்து தம்மை ஒரு கருவியாகச் செய்து கொண்டிருந்தார். அவர்களுடைய தூண்டு தலின் மீதே ஸ்ரீ கோஷ் இங்கிலாந்துக்குச் செல்லுகிறார். அவர் தமக்குத் தாமே விதித்துக் கொண்டுள்ள ஒரு புனித கடமையில் விரைவில் வெற்றி பெற வேண்டும் என்று நான் அவருக்கு வாழ்த்துக் கூறியிருக்கிறேன். இந்தியாவைப் பற்றி அவர் அறிந்து கொண்டபடி பிரிட்டனுக்குத் தாம் விளக்கிக் கூற முடியுமென அவர் நினைக்கிறார். அவரது திறமைக்கு எட்டிய வரையில் என்னைப் பற்றியும் அவர் பிரிட்டிஷாருக்கு விளக்கிக் கூற வேண்டியவராக இருக்கிறார். ஒரு ஸ்தாபனத்தைப் பற்றி விளக்கிக் கூறுவதைக் காட்டிலும் ஒரு நபரைப் பற்றி விளக்கிக் கூறுவது மிக மிகக் கடினமான காரியமாகும். அவரது முயற்சி

*ஜேம்ஸ் ராம்ஸே மெக்டொனல்டு (1866–1937) 1924–லும், 1929–லும் பிரிட்டிஷ் தொழிற்கட்சி அரசாங்கத்தில் இரண்டு தடவை பிரதம மந்திரி பதவியை வகித்தார். 1931-35–இல் அமைக்கப்பட்டு கன்சர்வேடிவ் கட்சியினரின் ஆதிக்கம் அதிகமாக இருந்த கூட்டு அரசாங்கத்திலும் ஸ்ரீ மெக்டொனல்டு பிரதம மந்திரியாக இருந்தார்.

வெற்றி பெற கடவுள் அருள் புரிந்து, அவரது நாவில் சரியான வார்த்தை தோன்றும்படி செய்வாராக.

மகத்தான பொறுப்பை நீங்கள் சிரமமின்றி வகித்து வருகிறீர்களென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 282

# ஸ்ரீ அட்லியின் பதில்

10, டௌனிங் தெரு,
ஒயிட்ஹால்,
14-8-1946

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஸ்ரீ கோஷை அறிமுகம் செய்து வைத்து நீங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. அவருடன் பேசியது, எனக்கு மிகவும் மகிழ்ச்சியளித்தது.* நமது இரு நாடுகளுக்கும் பூரணமான சமரசம் ஏற்படலாமென நான் நம்புகிறேன்.

கடைசியாக நாம் ஜார்ஜ் லான்ஸ்பரியுடன் பார்லிமெண்டில் சந்தித்துப் பேசினோம் என்று நினைக்கிறேன். நீங்கள் சுகமாக இருக்கிறீர்களென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஸி. ஆர். அட்லி

## 283

# கள்ளம் கபடமற்ற மனிதர்

வால்மீகி மந்திர், ரீடிங் ரோடு,
புது டில்லி, 28-8-1946

மே. த வைஸ்ராய்,
வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

ஒரு நண்பன் என்ற முறையில், ஆழ்ந்த சிந்தனைக்குப் பிறகே இதை நான் எழுதுகிறேன்.

---

* தமக்கும் பிரதம மந்திரி ஸ்ரீ அட்லிக்கும் நடந்த பேச்சைக் குறித்து ஸ்ரீ சுதீர் கோஷ் காந்திஜிக்கு அனுப்பிய விவரமான கடிதத்தைப் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

நீங்கள் ஒரு கள்ளங்கபடமற்ற மனிதர் என்றும், ஒரு சிப்பாய் என்றும், உங்களுக்கு சட்டம் தெரியாது என்றும் நேற்று மாலை நீங்கள் பல தடவை திருப்பித் திருப்பிக் கூறினீர்கள். நாம் எல்லோருமே சிப்பாய்களாக இராவிட்டாலும், எல்லோரும் கள்ளங் கபடமற்ற மனிதர்கள் தான். நம்மில் சிலர் சட்டத்தை அறிந்திருக்கலாம். சமீபத்தில் கல்கத்தாவில் நடந்த பயங்கரமான நிகழ்ச்சிகள்* மீண்டும் நடவாமல் தடுப்பதற்கான முறைகளை உருவாக்குவதே நம்முடைய நோக்கம் என்று நான் நினைக்கிறேன். சிறந்த முறையில் அவற்றை மேற்கொள்வது எப்படி என்பதே இப்போது நம்முன் உள்ள பிரச்னையாகும்.

நேற்று மாலை நீங்கள் பேசியது பயமுறுத்துவதாகவே இருந்தது. பிரிட்டிஷ் மன்னரின் பிரதிநிதி என்ற முறையில் நீங்கள் ஒரு சிப்பாயாக மாத்திரம் இருப்பது முடியாத காரியம். நீங்கள் சட்டத்தை அலட்சியம் செய்வதோ, அதிலும் நீங்களே இயற்றிய சட்டத்தை அலட்சியம் செய்வதோ முடியாத காரியம். அவசியமாயின், உங்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரரான ஒரு சட்ட நிபுணர் உங்களுக்கு உதவிபுரிய வேண்டும். பண்டித நேருவின் முன்னிலையிலும், என் முன்னிலையிலும் நீங்கள் வைத்த திட்டத்தை காங்கிரஸ் ஏற்று நடைமுறையில் கொண்டு வராவிடில், நீங்கள் அரசியல் நிர்ணய சபையையே கூட்டப் போவதில்லை என்று பயமுறுத்தினீர்கள். உங்களுக்கு உண்மையிலேயே அத்தகைய உத்தேசம் இருக்குமாயின், ஆகஸ்டு 12-ஆம் தேதி நீங்கள் வெளியிட்ட அந்த அறிக்கையை வெளியிட்டிருக்க வேண்டியதேயில்லை.† எனினும் அவ்விதம் வெளியிட்டுவிட்டதால், நீங்கள் காங்கிரசுக்கு விடுத்த அழைப்பை வாபஸ் செய்து கொண்டு, உங்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான மற்றொரு மந்திரி சபையை அமைக்க வேண்டும். உள்நாட்டு அமைதிக்காகவும், ஒழுங்கிற்காகவும் பிரிட்டிஷ் ராணுவம் இங்கே வைக்கப்படுமாயின், பின்னர் உங்களுடைய இடைக்கால அரசாங்கம் ஒரு கேலிக் கூத்தாகவே முடியும். இந்தியாவில் சண்டையிடும் பிரிவுகளின் மீது பிரிட்டிஷ் ராணுவத்தின் உதவியைக் கொண்டு காங்கிரஸ் தனது கட்டளையைச் சுமத்த முடியாது. வங்காளத்தில் சமீபத்தில் நிகழ்ந்த மிருகத்தனமான செயல்களுக்கு அஞ்சி காங்கிரஸ் வளைந்து கொடுக்கும் என்றும், தவறான முறை என்று அது கருதும் ஒன்றை மேற்கொள்ளும் என்றும் எதிர்பார்க்க முடியாது. அவ்விதம் பணிந்து போவதே, அத்தகைய பயங்கர நிகழ்ச்சிகள் மீண்டும் நடைபெறுவதற்கு வழி செய்வதாக முடியும்; இரு பிரிவுக

1. * ஸ்ரீ ஜின்னாவின் நேரடி நடவடிக்கை காரணமாக கல்கத்தாவில் எழுந்த சமூக வெறிக்கு ஆயிரக்கணக்கான மக்கள் பலியான பயங்கர சம்பவங்களைப் பற்றியே மேலே காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

2. † அரசாங்கத்தை அமைக்கும்படி காங்கிரஸ் தலைவரை வைஸ்ராய் அழைத்திருக்கிறார் என்பதும், அந்த அழைப்பை காங்கிரஸ் ஒப்புக்கொண்டிருக்கிறது என்பதுமே வைஸ்ராய் வெளியிட்ட அறிக்கையாகும். இதையே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

ளிடையே உள்ள வஞ்ச புத்தி ஆழ்ந்து சென்று, சந்தர்ப்பம் நேரும்போது அதிக உக்ரமாகவும் அதிக மானக்கேடான முறையிலும் பொங்கி எழும்படி செய்யும். இந்தியாவில் ஓர் அந்நிய வல்லரசு பலமான ராணுவத்துடனும், அதைக்குறித்து கர்வத்துடனும் தொடர்ந்து இருந்துவருவதே அத்தகைய நிகழ்ச்சிகளுக்கெல்லாம் முக்கிய காரணமாக இருக்கும்.

இதை நான், ஒரு ஹிந்து என்ற முறையிலோ அல்லது ஒரு முஸ்லிம் என்ற முறையிலோ கூறவில்லை; ஓர் இந்தியன் என்ற முறையில் மாத்திரமே கூறுகிறேன். எனக்குத் தெரிந்த வரையில், நீங்களோ அல்லது வேறு எந்த பிரிட்டிஷாரோ அறிவதைக் காட்டிலும் ஹிந்துக்களின் மன நிலையையும், முஸ்லிம்களின் மன நிலையையும் காங்கிரஸ் அதிகமாக அறிந்து கொண்டிருக்கிறது. நீங்கள் அறிவித்துள்ள காங்கிரஸ் அரசாங்கத்தை நீங்கள் முற்றிலும் நம்ப முடிந்தாலொழிய, நான் ஏற்கனவே கூறியது போல நீங்கள் உங்களுடைய தீர்மானத்தைப் புனராலோசனை செய்ய வேண்டும்.

தயவு செய்து இக்கடிதத்திலுள்ள முழு விவரங்களையும், பிரிட்டிஷ் மந்திரி சபைக்கு அறிவியுங்கள்.*

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 284

வைஸ்ராய் மாளிகை.
புது டில்லி, 28-8-1946

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இன்று நீங்கள் எழுதியுள்ள கடிதத்திற்கு நன்றி. உங்களுடைய விருப்பத்திற்கிணங்க, உங்கள் கடிதத்தின் முழு விவரங்களையும் தந்தி மூலம் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு அனுப்பியிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

---

* காந்திஜி வைஸ்ராய் லார்டு வேவலுக்கு எழுதிய கடிதத்தை வைஸ்ராய் லண்டனுக்குத் தந்தி மூலம் அறிவித்தார். அது பிரிட்டிஷ் மந்திரி சபையினரிடையே எத்தகைய அபிப்பிராயத்தை உண்டாக்கியது என்பதை, ஸ்ரீ சுதீர் கோஷ் காந்திஜிக்கு எழுதியுள்ள கடிதத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். அந்தக் கடிதம் பின் சேர்க்கைப் பகுதியில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

# 285

# வேவலின் விருப்பம்

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி,*
*25-9-1946*

*எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

*27-ஆம் தேதியோ அல்லது அதற்கு ஒன்றிரண்டு நாட்களுக்குப் பிறகோ நீங்கள் புது டில்லியிலிருந்து புறப்பட்டுச் செல்லலாம் என்று வைஸ்ராய் அறிவதால், நீங்கள் புறப்பட்டுச் செல்லுவதற்கு முன் உங்களைப் பார்த்துப் பேசும் சந்தர்ப்பம் அவருக்குக் கிடைக்கும் என்று நம்புகிறார்.*

*நீங்கள் இங்கு வந்து அவருடன் பேச இயலுமாயின், உங்களுடைய வசதிக்கு உகந்த ஒரு நேரத்தை நிர்ணயிக்க உங்களுடைய சிப்பந்திகளில் ஒருவரைக் கொண்டு டெலிபோன் மூலம் பேசச் சொல்லுங்கள்.*

*நல் வாழ்த்துக்கள்,*

*தங்கள் உண்மையுள்ள,*
*ஜி. ஈ. பி. அபெல்,*
*வைஸ்ராய் அந்தரங்கக் காரியதரிசி.*

# 286

# மூன்று கட்சிகள்!

*வால்மீகி மந்திர், ரீடிங் ரோடு,*
*புது டில்லி, 27-6-1946*

*அன்புள்ள நண்பருக்கு,*

*நேற்று நான் உங்களுடன் பேசிய விவரங்களை எழுத்துமூலம் குறிப்பிட வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது.*

*காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகிற்கும் சமரசம் ஏற்படும் விஷயமாக இதுவரை நீங்கள் செய்த முயற்சியின் பலனை அன்புடன் எனக்கு விளக்கிக் கூறினீர்கள். நாம் பேசிக்கொண்டிருந்தபோது, உங்கள் மனமும் முஸ்லிம் லீகின் பக்கமே சார்ந்திருக்கிறது என்றும் நீங்கள் குறிப்பிட்டீர்கள். இரு கட்சிகளுக்குமிடையே ஒரே ஒரு விஷயத்தில் மாத்திரமே கருத்து வேற்றுமை இருக்கிறது என்பது உங்களுடைய அபிப்பிராயமாகும். மந்திரி சபையில் காங்கிரசுக்கு ஒதுக்கப்பட்டுள்ள ஸ்தானங்களில் லீகைச் சேராத*

ஒரு முஸ்லிமை நியமிக்கும் விஷயம்தான் அந்தக் கருத்து வேற்று மையாகும். காங்கிரசின் நிலைமை நியாயமானது என்பதை நீங்கள் முற்றிலும் உணர்ந்திருப்பதாகவும், எனினும் சமரசம் ஏற்பட வேண்டும் என்பதற்காக காங்கிரஸ் அவ் விஷயத்தில் தனது உரிமையை விட்டுக்கொடுப்பதே சிறந்த ராஜ தந்திர மாகும் என்றும் நீங்கள் கூறினீர்கள். அது ஓர் உரிமையை விட்டுக் கொடுக்கும் விஷயமாக இருந்தால், அது மிகவும் எளிது என்றும், ஆனால் அவ்விதம் செய்வது லீகைச் சேராத முஸ்லிம் களுக்கு காங்கிரஸ் செய்ய வேண்டிய கடமையைச் செய்யாமல் விட்டதாகும் என்றும் நான் வற்புறுத்தினேன். மனத்தில் எதுவும் வைத்துக்கொள்ளாமல் காங்கிரசும் முஸ்லிம் லீகும் பரஸ்பரம் ஒரு சமரசத்திற்கு வந்தால், அது ஒரு மகத்தான நாளாக இருக்கும் என்றும், பரஸ்பரம் போராடுவதற்காக அவை ஒன்று சேருவது மிகக் கேவலமான காரியம் என்றும் நீங்கள் கூறியதை நான் முற்றிலும் ஒப்புக்கொண்டேன். காயிதே ஆஜம் ஜின்னா பண்டித நேருவைக் கண்டு பேசி ஒரு கௌரவமான சமரசத்திற்கு வர முயற்சிக்க வேண்டும் என்று நான் வற்புறுத்தி னேன். மோசமான நிலைமை ஏற்பட்டு, அரசியல் நிர்ணய சபையை முஸ்லிம் லீக் பிடிவாதத்துடன் பகிஷ்காரம் செய்து, பிரிட்டிஷ் அரசாங்கமும் அரசியல் நிர்ணய சபையைக் கைவிட்டு விடுவதென்று தீர்மானிக்குமாயின், அதை முற்றிலும் கௌரவ மான ஒரு தீர்மானமென்றே நான் கருதுவேன். ஏனெனில், அரசியல் நிர்ணய சபை அமைக்கும் யோசனையைத் தாங்கள் கைவிடப் போவதில்லை என்று பிறர் நினைக்கும்படி மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் நடந்துகொண்டிருக்கிறார்கள். இருந்தாலும், முக்கிய கட்சிகளில் ஒன்று அதை பகிஷ்காரம் செய்யும்போது, அரசியல் நிர்ணய சபை தொடர்ந்து நடைபெறு மென்றோ அல்லது நடைபெறக்கூடு மென்றோ நான் எதிர்பார்க்கவில்லை என்று சொன்னேன். இச் சந்தர்ப்பத்தில் நீங்கள், இரண்டு பெரிய கட்சிகள் மாத்திரமில்லை, மூன்று கட்சிகள் இருக் கின்றன என்றீர்கள். உங்கள் கருத்துப்படி சமஸ்தானங்கள் தான் மூன்றாவது கட்சியாகும். அரசியல் நிர்ணய சபை தொடர்ந்து பகிஷ்காரம் செய்யப்படுமாயின், சமஸ்தானங்கள் அதில் கலந்துகொள்வது முற்றிலும் சந்தேகம்தான் என்று நீங்கள் குறிப்பிட்டீர்கள்.

பின்வரும் அபிப்பிராயத்தை நான் ஒருவனே கொண்டிருந் தாலும், அதாவது இரண்டு கட்சிகளில் ஒன்று ஒத்துழைக்க மறுத்து, பகிஷ்காரவாதிகளை அடக்க பலாத்காரத்தை உபயோ கிக்கும்படி நேருமாயின், நடைமுறையில் அமலுக்கு வரக் கூடிய ஓர் அரசியல் திட்டத்தை உருவாக்குவதை நான் சிந்திக்கவும் முடியாது என்று கூறினேன்.

பிறகு, அரசியல் நிர்ணய சபை நடைபெறவில்லையாயின், அதன் விளைவாக என்ன முடிவு ஏற்படும் என்பதைத் தர்க்க ரீதி

யாகப் பரிசீலனை செய்யும்படி நீங்கள் என்னைக் கேட்டீர்கள். இடைக்கால அரசாங்கத்தைப் பற்றி நான் என்ன நினைக்கிறேன் என்றும் கேட்டீர்கள். என்ன நேர்ந்தாலும், ஒரு தடவை தேசீய அரசாங்கம் அமைக்கப்பட்டுவிட்டால், அந்த அரசாங்க மந்திரிகள் தங்களுடைய திறமையின்மை காரணமாக தாங்கள் அந்தப் பதவிகளை வகிக்க இயலாது என்று கருதினாலொழிய, அது (அரசாங்கம்) தொடர்ந்து நடைபெற வேண்டும் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை என்றும் நான் உங்களிடம் கூறினேன். தேசீய அரசாங்கத்திற்கு காங்கிரஸ் தன்னிடமுள்ள சிறந்த நபர்களை நியமித்தது என்றும், ஒரு கட்சியின் சார்பில் அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும் என்ற உத்தேசத்துடன் அவர்கள் அரசாங்க நிர்வாகத்தை ஏற்கவில்லை என்றும், தேசம் முழுவதற்கும் தாங்கள் தன்னலமற்ற தொண்டு செய்ய வேண்டும் என்றே அதை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்றும் நான் கூறினேன். உங்களுடைய மனமும், லீக் தலைவர்களின் மனமும் நோகக்கூடாது என்பதற்காகவே அவர்கள் இரண்டு முஸ்லிம் ஸ்தானங்களைப் பூர்த்தி செய்யவில்லை. பின்னர் லீக் தலைவர்கள் இடைக்கால அரசாங்கத்தில் சேரலாம் என்ற நம்பிக்கையினாலேயே அவர்கள் அந்த ஸ்தானங்களைப் பூர்த்தி செய்யவில்லை. இடைக்கால அரசாங்கம் தொடர்ந்து செயல்படுமா என்பது உங்களுக்குச் சந்தேகமாக இருக்கிறது என்றும், அது எப்படியாயினும், நீங்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஓர் ஊழியரே என்றும், அவர்களின் கட்டளைப்படி நீங்கள் நடந்துகொள்ள வேண்டியவராக இருக்கிறீர்கள் என்றும் நீங்கள் கூறினீர்கள். உங்களுடைய அந்த நிலையை நான் பாராட்டினேன். என்றாலும், உண்மையான தேசீய அரசாங்கம் மிகவும் அத்தியாவசியமானது என்று நான் கூறினேன். அந்தக் கொள்கையிலிருந்து பிறழ்வது, பிரிட்டிஷார் மீது இந்திய மக்களுக்குப் பெரும் சந்தேகத்தை உண்டாக்கும் என்றும், அதனால் பேரபாயம் ஏற்படும் என்றும் நான் கூறினேன்.

நம்முடைய அன்பார்ந்த பேச்சின் இறுதியில் நான் மேற்கொண்டு ஏதாவது சொல்ல விரும்பினால் அப்படியே செய்யலாம் என்று நீங்கள் உற்சாகமூட்டினீர்கள். பின்னர் நான் காஷ்மீர் பிரச்னையைப் பற்றிக் குறிப்பிட்டேன். அவ் விஷயமாக காரியக் கமிட்டி ஒரு நியாயமான தீர்மானத்தைச் செய்திருக்கிறது. காஷ்மீர் சமஸ்தானத்தின் பிடிவாதத்தினாலோ அல்லது வீண் கௌரவம் காரணமாகவோ மோசமான விளைவுகள் ஏற்படுமாயின், அந்தத் தகராறைத் தீர்க்க சட்டபூர்வமான நிலைமை ஒருபுறமிருக்க, நீங்கள் நட்பு முறையில் உதவிபுரிய வேண்டும் என்றும் நான் கேட்டுக்கொண்டேன்.

நேற்றிரவு நான் பண்டித நேருவுடனும், சர்தார் பட்டேலுடனும் பேசிக்கொண்டிருந்தேன். அதன் பலனாக, இன்னும் சில

நாட்கள்வரையில், ஒரு மாதம் வரையில்கூட இங்கே தங்கி யிருக்கத் தீர்மானித்திருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 287

## வேவலின் மறுப்பு

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *27-9-1946*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இன்று நீங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. இப்போது நடந்துவருவது போன்ற சமரசப் பேச்சுகளின் போது, சம்பாஷணைகளைப் பற்றி இரு சாராரும் ஒப்புக்கொள்ளும் குறிப்பு களைத் தயாரிக்க முற்படுவது புத்திசாலித்தனமாகாது என்றே நான் நினைக்கிறேன். பிரிட்டிஷ் மந்திரிசபைத் தூது கோஷ்டியி னரின் சமரசப் பேச்சுகள் நடந்த சமயத்திலும் அவ்விதம் செய்வ தில்லை என்று தீர்மானிக்கப்பட்டது. எனவே, என் மனமும் முஸ்லிம் லீகிற்கு சலுகை காட்டுவதையே விரும்புகிறது என்று நீங்கள் கூறியிருப்பதைத் தவிர, உங்கள் கடிதத்திலுள்ள மற்ற விஷயங்களைப் பற்றி நான் வியாக்கியானம் செய்யப்போவதில்லை. முஸ்லிம் லீகிற்குச் சலுகை காட்டுவதையே என் மனம் விரும்பு கிறது என்று நான் சொல்லவே இல்லை. எழுத்துமூலம் நமக்குள் உடன்பாடு ஏற்பட வேண்டுமாயின், நீங்கள் கூறியுள்ள மற்றும் பல விஷயங்களையும் மாற்ற வேண்டுமென்றே நான் யோசனை கூறுவேன்.

நான் உங்களைப் பார்க்க மகிழ்ச்சியடைந்தேன். ஒரு சமரசம் ஏற்பட நீங்கள் உங்களுடைய செல்வாக்கை உபயோகிப்பீர்கள் என்று நான் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
வேவல்

# 288

# மதிப்புவாய்ந்த முறை

வால்மீகி மந்திர், ரீடிங் ரோடு,
புது டில்லி, 28-9-1946

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுடைய நேற்றைய கடிதம் கிடைத்தது. அதற்காக எனது நன்றி.

நம்மிடையே நிகழ்ந்த பேச்சு மிகவும் முக்கியமான விஷயங்களைப் பற்றியதாக இருந்ததால், என் மனத்தில் பதிந்த விஷயங்களை உங்களிடம் கூறவேண்டும் என்று நான் நினைத்தேன். அப்போதுதான் நான் ஏதாவது தவருகக் குறிப்பிட்டிருந்தால் நீங்கள் என்னைத் திருத்த முடியும். ஏனெனில், நமது சம்பாஷணையின் சாரத்தை நான் பண்டித நேருவுக்கும் மற்ற நண்பர்களுக்கும் அறிவிக்க வேண்டியிருந்தது. மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் சமரசப் பேச்சுகளில் ஈடுபட்டிருந்தபோது, எங்களுடைய பேச்சுகளைப்பற்றிய எனது குறிப்பை நான் லார்டு பெதிக் லாரென்சுக்கோ அல்லது சர் ஸ்டாபோர்டு கிரிப்சுக்கோ அனுப்புவது வழக்கம். அவ்விதம் அனுப்பியது பலன் தரத்தக்கதாக இருந்தது. உங்களுடைய திருத்தத்தைப் பொறுத்த மட்டில் அதை நான் தயக்கமின்றி ஒப்புக் கொள்கிறேன். உங்களுக்கும் காயிதே ஆஜம் ஜின்னாவுக்கும் நடந்த சம்பாஷணையைப்பற்றி நீங்கள் விவரிக்கத் தொடங்கிய போதே, அவர் கூறிய சில விஷயங்கள் நியாயமற்றவை என்று நீங்கள் சொன்னாலும், உங்களுடைய மனம் முஸ்லிம் லீகிற்குச் சலுகை காட்டுவதாகவே இருக்கிறதென்ற திட்டமான அபிப்பிராயம் எனக்கு ஏற்பட்டது. எனினும் நீங்கள் திருத்திய பிறகு, அவ்விஷயமாக என்னுடைய அபிப்பிராயத்திற்கு மதிப்பில்லை.

உங்களுக்கு நேரமிருந்தால், மற்ற விஷயங்களையொட்டியும் நீங்கள் காணும் தவறுகளைத் திருத்தவேண்டுமென நான் விரும்புகிறேன். நமக்குள் நடந்த பேச்சுகளை நாம் ஒருபோதும் பகிரங்கமாக வெளியிடப் போவதில்லை என்றாலும், சென்ற 55 ஆண்டுகளாக சூருவளியைப் போன்ற என்னுடைய பொது வாழ்க்கையில், பரஸ்பரம் நன்கு அறிந்து கொள்வதற்கும், மேற்கொண்டு பேச்சு வார்த்தைகளை நடத்துவதற்கும் சம்பாஷணைகளை எழுத்து மூலம் குறிப்பிடுவது எல்லையற்ற மதிப்பு வாய்ந்ததென்பதை நான் கண்டிருக்கிறேன். எனினும் இவ்விஷயத்தில் உங்களுடைய விருப்பமே இறுதியானது. "ஒரு சமரசத்திற்காக என்னுடைய செல்வாக்கை உபயோகிக்கவேண்டும்" என்ற உங்களுடைய "நம்பிக்கையை" நிறைவேற்றவே நான் விரும்புகிறேன். என் உள்ளத்தில் உள்ள இந்த லட்சியத்திற்காக, உங்களை

சரியாகவும் பூரணமாகவும் அறிந்து கொள்ள எப்போதும் நான் இயல்பாகவே விரும்புவேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

# 289

# மகிழ்ச்சியளிக்கும் நாள்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *29-9-1946*

எனது அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நேற்று நீங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. சரியான குறிப்புகள் இருக்க வேண்டியது அவசியம் என்று நீங்கள் கூறுவதை நான் முற்றிலும் உணர்கிறேன். இருந்தாலும், இந்த சமரசப் பேச்சுவார்த்தைகள் நடக்கும் காலத்தில், சொந்த முறையில் விவாதிப்பதைப் பற்றிய குறிப்புகள் இருக்க வேண்டும் என்பதை ஒப்புக் கொள்ள முடியாது என்ற கொள்கையை நான் கைவிடுவதற்கில்லை. எனவே, உங்களுடைய முதல் கடிதத்தைப்பற்றி நான் மேற்கொண்டு வியாக்கியானம் எதுவும் செய்ய மாட்டேன்.

ஒரு சமரசத்திற்காக உங்களுடைய மகத்தான செல்வாக்கை நீங்கள் உபயோகிப்பீர்கள் என்பதைக் கேட்க நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். ஒரு சமரசம் ஏற்பட வேண்டியது அவசியம் என்பதை இப்போது எல்லோரும் பொதுவாக ஒப்புக் கொள்கிறார்கள். இடைக்கால அரசாங்கம் பூரண பிரதிநிதித்துவம் வாய்ந்த ஒரு கூட்டு சர்க்காராகத் திகழும் நாள் நம் எல்லோருக்கும் பெருமையையும் மகிழ்ச்சியையும் அளிப்பதாக இருக்கும்

தங்கள் உண்மையுள்ள,
**வேவல்**

# 290

# கவர்னரின் குற்றச்சாட்டு

பாட்னா, *17-3-1947*

மே. த. பீகார் கவர்னர்.

அன்புள்ள நண்பருக்கு,

தனி நபரின் நடத்தையைப்பற்றி நீங்கள் கூறியது எனக்கு ஆச்சரியத்தைக் கொடுத்ததால், சனிக்கிழமை பிரார்த்தனைக்குப்

பிறகு நடந்த கூட்டத்தில் அதைப்பற்றி நான் குறிப்பிட்டேன். (மக்களுக்குப் பொறுப்பற்ற ஓர் அரசாங்கத்தைச் சேர்ந்த அதிகாரி ஒருவர் அவ்விதம் குறிப்பிடுவது விசித்திரமேயாகும்.)

நேற்று மாலை நான் உங்களுடைய மந்திரிகளைச் சந்தித்து, சென்ற சனிக்கிழமை நாம் பேசியதன் சாரத்தை எடுத்துக் கூறினேன். நான் அவர்களிடம் பின்வருமாறு கூறினேன் :

1. முஸ்லிம்கள்தான் மிகவும் துன்பத்திற்கு உள்ளானவர்கள். அப்படியிருந்தும் அவர்களைச் சமாதானப்படுத்தும் விஷயத்தில் காங்கிரஸ் மந்திரிகள் காலம் கடத்தி வருகிறார்கள் என்று நீங்கள் கருதுகிறீர்கள்.

2. முஸ்லிம்களிடையே நம்பிக்கை ஏற்படும்படி செய்வதற்கான தீவிர நடவடிக்கை எடுத்துக்கொள்ள மந்திரிகள் விரும்பவில்லை என்பதே அவ்விதம் காலம் கடத்துவதன் அர்த்தமாகும் என்று நிரந்தரமான அரசாங்க அதிகாரிகள் விளக்கம் கூறுகின்றனர்.

3. குற்றவாளிகள்மீது சரியான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

4. லீகின் கோரிக்கைகள், அவற்றின் தகுதிகளை அடிப்படையாகக் கொண்டல்ல, அவை லீகின் கோரிக்கைகள் என்பதற்காக நிராகரிக்கப்பட்டுவிட்டன.

இந்தக் குற்றச் சாட்டுகளையெல்லாம் நான் சந்தித்த மந்திரிகள் முற்றிலும் ஆட்சேபித்தனர். அந்தக் கூற்றுகளைக் கண்டு வியப்படைவதாக முதல் மந்திரி கூறினார். சிறுபான்மையோர் பிரச்னை உள்பட பல பிரச்னைகளையொட்டியும் உங்களுக்கும் அவர்களுக்கும் கருத்து வேற்றுமை இருப்பதாக முதல் மந்திரி கூறினார். சிறுபான்மையோர் பிரச்னை சம்பந்தமாக உங்களுக்கும் அவர்களுக்கும் கருத்து வேற்றுமை இருந்தாலும் கூட, அந்தப் பிரச்னையையொட்டி உங்களுடைய யோசனையை ஆட்சேபணையின்றி அங்கீகரிப்பதாக முதல் மந்திரி தமது சார்பிலும் தமது சகாக்களின் சார்பிலும் உங்களிடம் உறுதி கூறினார்.

நான் இக்கடிதம் எழுதுவதற்கு ஒரே காரணம், உங்களுக்கும் உங்கள் மந்திரிகளுக்கும் இடையேயுள்ள கருத்து வேற்றுமைகளை விளம்பரப்படுத்துவதற்காக அல்ல, உங்களிடையே உள்ள தப்பெண்ணங்களை அகற்றி, என்னால் இயன்றவரையில் பதவியிலிருந்து விலகும் பிரிட்டிஷ் அதிகாரவர்க்க உலகத்திற்கும் இந்திய அரசியல் வாதிகளுக்குமிடையே நல்லெண்ணத்தை வளர்க்க வேண்டும் என்பதற்காகவேயாகும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 291

# கவர்னரின் பரிவு

அரசாங்க மாளிகை,
பாட்னு, *17-3-1947*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உங்களுடைய இன்றைய கடிதத்திற்குப் பதிலளித்து நான் தனியாக வேறு கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறேன்.

நீங்கள் பாட்னுவில் இருக்கும் வரையில் என்னுடைய தோட்டத்தை உபயோகித்துக் கொள்ளலாம் என்பதற்காக மாத்திரமே இந்தக் கடிதம் எழுதுகிறேன். அது பெரிதாகவும் சந்தடியின்றி அமைதியாகவும் இருக்கிறது. காலையிலோ அல்லது மாலையிலோ நீங்கள் அங்கே அமைதியாக உலாவவோ அல்லது ஓய்வு எடுத்துக்கொள்ளவோ விரும்பலாம். அங்கே உங்களைப் பார்ப்பதற்காக ஜனங்கள் கூட்டமாக வரமாட்டார்கள். உங்களுக்கு அங்கே எத்தகைய தொந்தரவும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டுமென்றும் நான் உத்தரவிட்டுவிடுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
எச். டோ

## 292

# அவரது விளக்கம்

கவர்னர் முகாம்,
பீகார், *17-3-1947*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உங்களுடைய கடிதத்திற்காக நன்றி. எந்த ஒரு பொது மனிதரும் தன் உள்ளத்தைத் தானே துருவிப் பார்த்துக் கொண்டாலொழிய, தானே ஒரு சிறந்த மனிதனுக முயற்சிப்பதில் முதலில் தன் கவனத்தைச் செலுத்தினலன்றி, மற்ற ஜனங்களைச் சீர்திருத்தலாம் என்றும், அவர்களைச் சிறந்தவர்களாகச் செய்யலாம் என்றும் நம்ப முடியாது என்பதே எப்போதும் என்னுடைய அபிப்பிராயமாகும். மக்களுக்குப் பொறுப்பற்ற அதிகார வர்க்கத்தைச் சேர்ந்த ஒருவர் என்று தாங்கள் குறிப்பிடும் நான், இந்த அபிப்பிராயம் கொண்டிருப்பதைக் குறித்து நீங்கள் ஏன் அவ்வளவு ஆச்சரியப்பட வேண்டும் என்பது எனக்குத் தெரியவில்லை.

நமது சம்பாஷணையைப் பற்றி நீங்கள் கொடுத்த சுருக்கமான விவரங்களை எனது மந்திரிகள் கடுமையாக ஆட்சேபித்ததைக் குறித்து நான் வியப்படையவில்லை. அவ் விவரங்களை நான் இன்னும் சற்று அதிக விரிவாகக் குறிப்பிடலாமா?

1. கலவரங்கள் ஆரம்பமானதிலிருந்தே அவற்றில் நஷ்டமடைந்தவர்களுக்கு ஈடு செய்யத் தாங்கள் உத்தேசித்திருப்பதாக எனது மந்திரிகள் உடனே பிரகடனம் செய்திருக்க வேண்டும் என்று நான் நினைத்தேன். உடனே அவ்வாறு செய்திருந்தால், மந்திரி சபை மேற்கொண்ட முறைகளுக்கு விரோதமாக எழுந்த கட்டுக்கோப்பான எதிர்ப்பு பெரும் அளவில் ஏற்பட்டிராது என்றும் நினைக்கிறேன். மிகுந்த தாமதத்திற்குப் பிறகே, கலகங்களில் நஷ்டம் அடைந்தவர்களுக்கு ஈடு செய்ய உத்தேசித்திருப்பதாக அறிவிக்கப்பட்டது.

இவ்விஷயமாக நான் கொண்டுள்ள கருத்துகளை முதல் மந்திரி நன்கு அறிவார். என்னைப் பொறுத்தமட்டில், எவ்வளவு தொகை செலவாகுமென்று தெரிந்துகொள்ள முடியாத ஒரு விஷயத்தையொட்டி உறுதி கூறுவதில் அவருக்கு உள்ள கஷ்டங்களை நான் முற்றிலும் உணர்ந்தேன்.

2. இதிலிருந்து, அவ்விஷயத்தை மந்திரி சபையினர் அவசரமானதென்று கருதவில்லை என சில அதிகாரிகள் ஊகித்துக் கொண்டது உண்மையேயாகும். ஜனவரி மாத மத்தியில் நான் சாப்ராவுக்குச் சென்றபோது, அக்டோபர் மாத இறுதியில் நடந்த கலகங்களில் கஷ்டத்திற்கு உள்ளானவர்களுக்கு பணமோ, சாதனங்களோ எதுவும் விநியோகிக்கப்படவில்லை. கலகக்காரர்களால் பாழான இடங்களெல்லாம் அப்படியே கிடந்தன.

நான் திரும்பிவந்ததும் எனது எண்ணங்களை நான் முதல் மந்திரியிடம் தெரிவித்தேன். கலகங்களில் கஷ்டநஷ்டம் அடைந்தவர்களுக்குப் புனர்வாழ்வு அளிப்பதே மிகவும் அவசரமான வேலை என்று ஜில்லா அதிகாரிகளின் மனத்தில் பதிய வைப்பதற்கான அவசியமான முறைகளை அவர் எடுத்துக் கொண்டார் என்பதைக் கூற நான் மகிழ்ச்சியடைகிறேன். இதை முதல் மந்திரி எப்போதுமே உணர்ந்திருக்கிறார் என்றே நான் நம்புகிறேன். அவ்விஷயத்தில் மந்திரி சபையினர் அரை மனத்துடன் இருந்தார்களென்று கூற வேண்டும் என்பது நிச்சயமாக எனது நோக்கமே இல்லை. ஆனால் சில மாதங்களாகவே, முதலில் ஏற்பட்ட தாமதம் காரணமாக, பல கீழ்த்தர அதிகாரிகள் அத்தகைய அபிப்பிராயம் கொண்டிருந்தனர்.

3. குற்றம் செய்தவர்களுக்குத் தண்டனை கொடுக்கும் விஷயமாக நான் எதுவுமே கூறியதாக எனக்கு ஞாபகமில்லை. ஒரு வேளை, நீங்கள் அடுத்தடுத்துப் பலரையும் சந்திப்பதால், வேறு யாராவது கூறிய கருத்துகளை நான் கூறியதாக நீங்கள் எண்ணியிருக்கலாம்.

உண்மையில் இவ்விஷயமாக எனது கருத்துகள் நீங்கள் கூறியதற்கு மாறுனவை. குற்றவாளிகளில் மிகமிகச் சிறிய ஒரு பகுதியினரைத் தவிர வேறு யாரையும் சட்ட பூர்வமாக தண்டிப்பது சாத்தியமாக இருக்குமென நான் நினைக்கவில்லே. அதற்குக் கூட போலீசார், மாஜிஸ்திரேட்டுகளின் நேரத்தில் பெரும்பகுதி முற்றிலும் வீணுகிவிடும். அந்த நேரத்தை வேறு சிறந்த முறையில் செலவிடலாம். எனவே இவ்விஷயத்தில் பலன்தரத்தக்க ஒரே வழி என்னவெனில், கூட்டு அபராதம் விதிப்பதேயாகும் என்பதே எனது அபிப்பிராயம்.

4. லீகின் கோரிக்கைகளே, லீக் விடுத்த கோரிக்கைகள் என்பதற்காக மந்திரி சபை நிராகரித்ததென நான் நினைக்க வில்லே. ஆனல் பீகாரில் உள்ள ஹிந்துக்கள், வங்காளத்தில் ஹிந்து அகதிகள் எப்படி நடத்தப்படுவதாக நினேக்கிறுர்களோ அதைக் காட்டிலும் அதிகப் பெருந்தன்மையுடன் முஸ்லிம் அகதி களே நடத்த அன்றும் விரும்பவில்லே, இப்போதும் விரும்பவில்லே என்றே நினேக்கிறேன். ஆரம்பத்தில் அவர்களிடையே, 'பொறுத் திருந்து பார்ப்போம்' என்ற மன நிலேயே இருந்துவந்தது.

முஸ்லிம் அகதிகள் சம்பந்தமாக, தெளிவான திட்டங்களேச் சமர்ப்பிக்கும் பொறுப்பை நாம் முஸ்லிம்களிடம் ஒப்படைத்து, அவை அனுமதிக்கப்பட்டால் அவற்றை நிறைவேற்ற முற்பட்டி ருக்கவேண்டும். இவ்விஷயத்தை நான் முதல் மந்திரி யுடன் விவாதித்தேன். அவர் என் அபிப்பிராயத்தை எதிர்க்க வில்லே. கலகங்களின் விளேவாகத் துன்பத்திற்கு உள்ளான வர்களுக்கு நாம் நஷ்டஈடு கொடுத்தால், ஓர் இன்ஷூ ரன்ஸ் கம்பெனியிடமிருந்து பெறும் நஷ்ட ஈடுத் தொகையைப் போல எங்கே, எப்படி அந்தத் தொகையைச் செலவு செய்யவேண்டும் என்று தீர்மானிப்பதை அவர்களுடைய பொறுப்பிலேயே விட்டுவிட வேண்டும்.

பொதுவாக சிறுபான்மையோர் பிரச்னே சம்பந்தமாக எனக்கும் எனது மந்திரிகளுக்கும் உள்ள கருத்து வேற்றுமைகள், நட்பு முறையில் விவாதித்துத் தீர்க்க முடியாத கட்டத்துக்கு ஒரு போதும் சென்றதில்லேயென்று நினேக்கிறேன். சமீபத்தில் நிகழ்ந்த கலவரங்களேப் பொறுத்தமட்டில், மந்திரிகளின் யோசனேக்கு எதிராக என்னுடைய விசேஷ அதிகாரங்களே உபயோகிக்க வேண்டிய நிலேமை எனக்கும் ஒரு போதும் ஏற்படவில்லே. இரண்டு சமூகங்களுக்குமிடையே நம்பிக்கை ஏற்படும்படி செய்வது மிக மிகக் கஷ்டமான பிரச்னேயாக இருக்கிறது. இவ்விஷயமாக எனக்கும் மந்திரிகளுக்குமிடையே போதிய ஒத்து ழைப்பு இல்லே என்று நீங்கள் நினேக்கக்கூடாது என்பதே எனது விருப்பமாகும்.

தங்கள் உண்மையுள்ள,

ஹியூ டோ

# 293

# ஆங்கில நண்பர்கள் கூறிய விவரம்

பாட்னா,
21-3-1947

மே. த. சர் ஹியூ டோ,
பீகார் கவர்னர்,
பாட்னா.

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுடைய மூன்று கடிதங்களும் கிடைத்தன. அவற்றிற்காக நன்றியுள்ளவனாக இருக்கிறேன். பீகாரில் பாதிக்கப்பட்ட பிரதேசங்களில் இப்போது நான் யாத்திரை செய்து கொண்டிருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியும். என்னைச் சூழ்ந்துள்ள சந்தடியிலிருந்தும் அமளியிலிருந்தும் சிறிது ஓய்வு பெறுவதற்காக உங்களுடைய அழகான நந்தவனத்தை என் உபயோகத்திற்கு விட நீங்கள் அன்புடன் முன்வந்திருப்பதை நான் நினைவில் வைத்துக் கொள்கிறேன். மக்களுக்குப் பொறுப்பற்ற அதிகாரவர்க்கத்தைச் சேர்ந்தவர் என்ற வார்த்தையை, அதன் பழைய அர்த்தத்திலேயே நான் குறிப்பிட்டிருக்கிறேன். நீங்கள் கொடுங்கோல் ஆட்சியின் பிரதிநிதி அல்ல; நிச்சயமாக ஜனநாயகத்தின் பிரதிநிதியும் அல்ல. நான் ஏற்கனவே கூறியதுபோல், நீங்கள் முக்கியமாக மக்களுக்குப் பொறுப்பற்ற அதிகார வர்க்கத்தின் பிரதிநிதியே. மக்களுக்குப் பொறுப்பற்ற அத்தகைய அதிகாரங்களடங்கிய ஒரு ஸ்தாபனத்தின் பிரதிநிதியாக இருப்பதால், தாங்கள் தங்களுடைய முழு மனிதத்தன்மைக்கும் இடம் கொடுக்க முடிவதில்லை என்று சில ஆங்கில நண்பர்கள் என்னிடம் பட்டவர்த்தனமாகக் கூறினார்கள்.

அவர்களில் சிலர், உங்களைப் போல் உயர்ந்த பதவியில் இருப்பவர்கள் ஆவர். என் மனத்தில் ஏற்பட்ட இந்த எண்ணம் காரணமாகவே, "உண்மையான சீர்திருத்தக்காரர் தன்னிடமிருந்தே சீர்திருத்தத்தை ஆரம்பிக்க வேண்டுமென அனுபவம் எனக்குக் கற்பித்திருக்கிறது" என்று நீங்கள் கூறியதை நான் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

நீங்கள் தாமதமின்றி உடனே எனக்குப் பதில் அளித்து அனுப்பிய 17ஆ கடிதத்திலுள்ள மற்ற விவரங்கள் சம்பந்தப்பட்ட வரையில், நீங்கள் அனுப்பியுள்ள திருத்தத்தையும், உங்களது நிலைமையைப் பற்றிய விளக்கத்தையும் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். இவ்விதம் நாம் மனம்விட்டு கருத்துகளைப் பரிமாறிக் கொள்வதன் பலனாக, ஏதாவது நன்மை ஏற்படுமென்றே நான் நம்பிக் கொண்டிருக்கிறேன்.

உங்களுடைய 18-வ கடிதம் இன்று காலையில்தான் என் கைக்குக் கிடைத்தது. பீகார் முதல் மந்திரிக்கு நீங்கள் எழுதியுள்ள கடிதத்தைப் பற்றி அதில் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அது இன்னும் என் கைக்குக் கிடைக்கவில்லை. நாளை கிடைக்குமென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 294

# நல்லுறவு ஏற்பட உதவி

பாட்னு,
21-3-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நேற்று நீங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. அது இப்போதுதான் எனக்குக் கிடைத்தது. நீங்கள் பாட்னுவுக்குத் திரும்பிவந்ததும், மேற்கொண்டு நாம் பேசலாமென நம்புகிறேன். நீங்கள் அப்போது ஏதாவது ஆலோசனை கூறினல், நான் நன்றியுள்ளவனுக இருப்பேன். நீங்கள் இந்த மாகாணத்திற்கு விஜயம் செய்தது, இரு சமூகங்களுக்குமிடையே நல்லுறவு ஏற்படுவதற்குப் பேருதவியாக இருந்தது, இன்னும் இருந்துவருகிறது. இன்னும் செய்வதற்கு எவ்வளவு பாக்கியிருக்கிறது என்பதைத் தாங்கள் உணர்ந்திருக்க வேண்டும்.

நீங்கள் குறிப்பிட்டுள்ள அர்த்தத்தில், நான் மக்களுக்குப் பொறுப்பற்ற அதிகாரவர்க்கத்தைச் சேர்ந்த ஒருவன் என்றே நினைக்கிறேன். அந்த வார்த்தையைக் குறித்து நான் கோபம் அடையவில்லை. நவீன வாழ்க்கையின் சிக்கல் காரணமாக, பெரும்பாலான ஆட்சியாளர்களும் தாங்கள் விரும்புவதைக் காட்டிலும் அதிகமாகத் தங்கள் அறையிலேயே கட்டுண்டு கிடக்கிருர்கள். உங்கள் விஷயத்தில் கூட இது உண்மையாக இருக்க வேண்டும். ஆனல் அந்த வார்த்தையில் பாதிகூட எனக்குப் பொருத்தமற்றதாக இருக்கும் நாளை நான் ஆர்வத்துடன் விரைவில் எதிர்பார்க்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
எச். டோ.

## 295

# மூன்றுவது யாத்திரை

பாட்ஞ,
*25-3-1947*

*மே. த. சர் ஹியூ டோ,*
*அரசாங்க மாளிகை,*
*பாட்ஞ.*

*அன்புள்ள நண்பருக்கு,*

*22வ நீங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. நாளை, என்னுடைய கையினல் கடிதம் எழுதுவதால் ஏற்படும் மகிழ்ச்சியைத் துறக்க வேண்டியவனக இருக்கிறேன். ஏனெனில், என்னுடைய மோசமான கையெழுத்தை நீங்கள் வாசிக்க வேண்டிய தொந்தரவை உங்களுக்கு நான் கொடுக்க விரும்பவில்லை. என் கையெழுத்தைக் குறித்து நான் உண்மையில் வெட்கம் அடைகிறேன். நீங்கள் எதைப் பற்றியாவது என்னுடன் எப்போது விவாதிக்க விரும்பினலும், தயவு செய்து அதை எனக்கு அறிவிக்கத் தயங்காதீர்கள். நான் எப்போதும் அதற்குத் தயாராக இருக்கிறேன்.*

*நாளை காலை நான் எனது மூன்றுவது யாத்திரையைத் தொடங்குகிறேன். 28வ திரும்பிவருகிறேன்.*

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி.



1947 மார்ச் 31-ஆம் தேதி வைஸ்ராய் லார்டு மவுண்ட்பாட்டன் தம்பதிகளை காந்திஜி முதன் முதலாகச் சந்திக்கிறார்.



1947 ஆகஸ்டு 14-ம் தேதி நடுநிசிக்கு இந்தியாவின் சுதந்திரம் பிரகடனம் செய்யப்படும் காட்சி.

பகுதி பதினைந்து

# காந்திஜி-மவுண்ட்பாட்டன் கடிதப் போக்குவரத்து

## 296

## காந்திஜியைச் சந்திக்க ஆர்வம்

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி, 22-3-1947*

*அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

*இன்றுதான் டில்லி வந்து சேர்ந்தேன். நாம் விரைவில் சந்திக்கலாம் என்ற நம்பிக்கையைத் தெரிவிக்கவே இதை நான் எழுதுகிறேன். பீகாரில் உள்ள அலுவல்கள் காரணமாக நீங்கள் உடனே டில்லிக்கு வருவது கடினமாக இருக்கலாம் என்பதை நான் உணருகிறேன். இருந்தாலும், எப்போது தாங்கள் வருவது சாத்தியம் என்பதைக் குறித்து எனக்கு அறிவியுங்கள். உங்களைக் காண நான் ஆவலுள்ளவனாக இருக்கிறேன்.*

*நல்வாழ்த்துக்கள்.*

*தங்கள் உண்மையுள்ள,*
மவுண்ட்பாட்டன் (பர்மா)

## 297

## பீகாரில் கொந்தளிப்பு

*பாட்னா,*
*26-3-1947*

*மே. த. லார்டு மவுண்ட்பாட்டன் (பர்மா),*
*புது டில்லி.*

*அன்புள்ள நண்பருக்கு,*

*22ஆ தாங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. அது நேற்று எனக்குக் கிடைத்தது.*

*தற்போது பீகாரைவிட்டு வெளியே செல்லுவதில் எனக்குள்ள கஷ்டத்தை தாங்கள் நன்கு அறிந்திருக்கிறீர்கள்.*

எனினும், உங்களுடைய அன்பான அழைப்பைத் தவிர்க்க நான் துணியவில்லை. பீகாரில் உள்ள கொந்தளிப்பான ஓர் இடத்திற்கு நான் இப்போதுதான் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். ஆகையால், டில்லிக்கு நான் புறப்படும் சரியான தேதியை உங்களுக்கு அறிவிக்க முடியவில்லை. அதற்காக என்னை நீங்கள் மன்னிப்பீர்களா? பீகாரில் நான் மேற்கொண்டுள்ள இந்த மூன்ருவது யாத்திரையிலிருந்து 28உ திரும்புகிறேன். எனவே அந்தத் தேதிக்குப் பிறகு டில்லிக்கு எனது புறப்பாடு என்னால் இயன்றவரையில் சீக்கிரமாகவே இருக்கும்.

இந்தக் கடிதம் சாத்தியமான வரையில் உங்களுக்கு சீக்கிரமாகக் கிடைக்க வேண்டும் என்பதற்காக இதை, மேன்மை தங்கிய பீகார் கவர்னரின்மூலம் அனுப்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

பின் குறிப்பு:—30உ நான் புது டில்லிக்குப் புறப்படலாமென எதிர்பார்க்கிறேன்.

மோ. க. கா.

## 298

# அரசியல் திட்ட நகல்

பங்கி காலனி,
புது டில்லி,
5-4-1947

அன்புள்ள லார்டு இஸ்மே,

நீங்கள் குறிப்பிட்ட அரசியல் திட்டத்தின் மேலெழுந்த வாரியான விவரங்களை பண்டித நேரு என்னிடம் கூறினர். அது, நான் அவசரமாகக் கூறிய அம்சங்களை அடிப்படையாகக் கொண்ட ஒரு நகலே என்றும், அந்த அம்சங்களை அனுசரித்து தாங்கள் ஒரு நகல் ஒப்பந்தத்தைத் தயாரிக்கப் போவதாகவும் மே. த. வைஸ்ராயிடமிருந்து நான் தெரிந்து கொண்டேன். அவற்றைத் திருத்தவோ, அவற்றில் சேர்க்கவோ, அவற்றிலிருந்து உங்கள் விருப்பப்படி சிலவற்றை விட்டு விடவோ உங்களுக்கு நிச்சயமாக உரிமை உண்டு.

இன்று இரண்டு தடவை பண்டித ஜவாஹர்லால் நேருவுடன் நான் பேசினேன். இரண்டாவது தடவையாக அவருடன் பேசிக் கொண்டிருந்தபோது, திட்டத்தின் மேலெழுந்தவாரியான விவரங்கள் அடங்கிய நகலை அவர் மாலை 5 மணிக்கு என்னிடம் கொடுத்தார்.

அதில் ஏழாவது ஷரத்து பின்வருமாறு இருக்க வேண்டும்: "இந்த எல்லைக்கு உட்பட்டு ஆட்சி அதிகாரத்தை மாற்றுவதற்கு முன்பே ஒரு நிபந்தனையின்மீது பாகிஸ்தான் திட்டத்தைச் சமர்ப்பிக்க ஸ்ரீ ஜின்னாவுக்கு முற்றிலும் உரிமையுண்டு. அதாவது பாகிஸ்தானுக்கு ஆதரவாக மனமாற்றம் ஏற்படும்படி செய்வதில் அவர் வெற்றிபெற வேண்டுமேயன்றி, ஆயுத பலாத்காரத்தில் ஈடுபடும்படி அவர் கேட்டுக்கொள்ளக் கூடாது. இதற்காக பலாத்காரத்தில் ஈடுபடுவதைத் தாம் விரும்பவில்லை என்றும் அவர் கூறிவருகிறார். அவ்விதமாக, இவ்விஷயத்தில் ஒரு மாகாணத்தையோ அல்லது மாகாணத்தின் ஒரு பகுதியையோ நிர்ப்பந்தப் படுத்துவது கூடாது."

எட்டாவது ஷரத்து இவ்விதம் இருக்க வேண்டும்:

"இந்தியா சட்டசபையில் காங்கிரசுக்கு நிச்சயமான பெரும்பான்மை ஸ்தானங்கள் இருக்கின்றன. லீகின் கொள்கையை, லீக் மேற்கொண்டுள்ள கொள்கை என்பதற்காக எதிர்த்து காங்கிரஸ் தனது பெரும்பான்மை பலத்தை ஒருபோதும் உபயோகிக்காது. அதற்கு மாறாக, லீக் அரசாங்கம் கொண்டுவரும் ஒவ்வொரு மசோதாவுக்கும் காங்கிரஸ் மனப்பூர்வமாக ஆதரவு அளிக்கும். ஆனால், அத்தகைய மசோதா இந்தியா முழுவதற்கும் நன்மை அளிப்பதாக இருக்கவேண்டும். அது இந்தியாவின் நலனுக்கு உகந்ததா, அல்லவா என்பதை பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பிரதிநிதி என்ற முறையில் அல்ல, மனிதன் என்ற முறையில் லார்டு மவுண்ட்பாட்டன் முடிவு செய்ய வேண்டும்."

இதை நான் வாயால் கூற, ஒருவர் எழுதி முடித்தபோது மணி 8-45 ஆயிற்று. இந்தக் கடிதம் இன்றிரவே தங்களுக்குக் கிடைக்க வேண்டுமென நான் ஆர்வத்துடன் இருக்கிறேன். இதை மேலெழுந்தவாரியாகவே திருத்தியிருக்கிறேன். நகல் ஒப்பந்தம் தயாரிக்கப்படும்போது, மற்றும் பல விஷயங்களைச் சேர்க்க வேண்டியிருக்கலாம்.

இவ்விஷயமாக பண்டித நேரு ஒரு மூலாதாரமான ஆட்சேபணையை எழுப்பியுள்ளார். அதை நான் இங்கே கூறி உங்களுக்குத் தொந்தரவு கொடுக்க விரும்பவில்லை. மேற்கண்ட விவரங்களை நடைமுறையில் அமலுக்குக் கொண்டுவர முடியுமெனில், நான் மீண்டும் வைஸ்ராயைக் கண்டு பேசவும், அப்போது நான் பண்டித நேருவின் ஆட்சேபணையைப்பற்றி விவாதிக்கவும் விரும்புகிறேன். அந்தத் திட்டத்தை ஸ்ரீ ஜின்னாவின் முன்னிலையில் வைக்குமுன், அதை சில நண்பர்களுக்குக் காட்ட விரும்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி.

[நகல் ஒப்பந்தத்தில் சேர்ப்பதற்காக சில ஷரத்துகளைத் தாம் கூறியதாக காந்திஜி மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். பின் வரும் ஷரத்துகளே காந்திஜி கூறியவை : ]

1. மந்திரி சபையை அமைக்கும் உரிமை ஸ்ரீ ஜின்னாவுக்கு அளிக்கப்படவேண்டும்.

2. மந்திரி சபையில் தமது விருப்பப்படி யாரை வேண்டுமாயினும் தேர்ந்தெடுத்துக் கொள்ள ஸ்ரீ ஜின்னாவுக்குப் பூரண உரிமை உண்டு. மந்திரி சபை அங்கத்தினர்கள் எல்லோரும் முஸ்லிம்களாக இருக்கலாம், அல்லது எல்லோரும் முஸ்லிம் அல்லாதாராக இருக்கலாம், அல்லது இந்திய மக்களில் எல்லாப் பிரிவினரையும் எல்லா மதத்தினரையும் சேர்ந்தவர்களாக இருக்கலாம்.

3. இதை ஸ்ரீ ஜின்னா அங்கீகரித்தால், காங்கிரஸ் அவருடன் மனப்பூர்வமாக ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறது. ஆனால் ஸ்ரீ ஜின்னாவின் மந்திரி சபையினர் கொண்டுவரும் சகல மசோதாக்களும் இந்திய மக்களின் நலன்களுக்கு உகந்தவையாக இருக்க வேண்டும்.

4. எது இந்திய மக்களின் நலனுக்கு உகந்தது அல்லது உகந்ததல்ல என்பதை முடிவு செய்யும் முழு அதிகாரமும் சொந்த முறையில் லார்டு மவுண்ட்பாட்டனைச் சார்ந்தது.

5. லீகின் சார்பிலும் அல்லது ஸ்ரீ ஜின்னாவினால் அமைக்கப் பட்ட மந்திரி சபையில் பதவி வகிக்கும் வேறு கட்சிகளின் சார்பிலும், இந்தியா முழுவதும் சமாதானத்தைப் பாதுகாக்க தங்களால் இயன்றதையெல்லாம் செய்வதாக ஸ்ரீ ஜின்னா உறுதியளிக்க வேண்டும்.

6. தேசீயப் பாதுகாப்புப் படையோ அல்லது தனித்த முறையில் வேறு எந்த விதமான ராணுவமோ இருக்கக்கூடாது.

7. 8–ஆவது ஷரத்துகள் மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிடப் பட்டுள்ளன.

9. ஸ்ரீ ஜின்னா இந்த யோசனைகளை நிராகரித்துவிட்டால், அதே ஷரத்துகளை அவசியமான மாறுதல்களுடன் காங்கிரசின் அங்கீகாரத்திற்கு விடவேண்டும்.

# 299

# பஞ்சாப் நண்பர்களின் அவசரக் கடிதம்

*பங்கி காலனி, ரீடிங் ரோடு,*
*புது டில்லி, 7-4-1947*

*அன்புள்ள நண்பருக்கு,*

*பஞ்சாபிலுள்ள நண்பர்களிடமிருந்து எனக்கு அவசரமான கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன. ஒரு சில நாட்களாவது அங்கே வந்து தங்கியிருக்கும்படி அவர்கள் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டிருக்கிருர்கள். நான் அங்கே செல்லுவதற்கு பண்டித நேருவும் இசைந்துள்ளார். நீங்களும் எனக்கு யோசனை கூற வேண்டுமென விரும்புகிறேன்.*

*பின்னர் நோவாகாலியிலிருந்தும் அழைப்புகள் வந்துகொண் டிருக்கின்றன. சென்ற இரண்டு நாட்களாக வந்துகொண் டிருக்கும் தந்திகளை நான் நம்புவதாயின், நோவாகாலியில் சட்ட விரோதமான செயல்கள் அதிகமாகிக் கொண்டிருக்கின்றன எனலாம். அங்கே மக்களை உயிருடன் எரிக்கும் முயற்சிகளை இரண்டு தடவை கண்டுபிடித்தனர். கொள்ளை முதலியனவும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. அவ்விஷயமாக, பத்திரிகை களில் என்னுடைய அறிக்கையை நீங்கள் காணலாம்.*

*இந்த பலாத்கார எழுச்சி ஒரு சில்லறை விஷயம் அல்ல. இப்போதே அதைச் சமாளிக்க முடியாவிட்டால், இன்னும் பதினெசு மாதங்களுக்குப் பிறகு அதைச் சமாளிக்கவே முடியா மற்போய்விடும்.*

*தங்கள் உண்மையுள்ள,*
**மோ. க. காந்தி**

# 300

# மவுண்ட்பாட்டனின் யோசனை

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி,*
*7-4-1947*

*அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

*உங்களுடைய இன்றைய கடிதத்திற்காக மிக்க நன்றி. உங்களுக்கு ஆலோசனை கூறுவது எனக்குக் கடினமாக இருக் கிறது. பஞ்சாபில் கலவரங்களுக்கான மூலகாரணங்கள் இன்னும் இருந்து வருகின்றன என்றாலும், உடனடியான கலவரங்களைச்*

சமாளிப்பதில் பெரும் அளவு வெற்றி கிடைத்திருக்கிறது. இந்தப் பருவ காலத்தில் நீங்கள் பஞ்சாபில் யாத்திரையை மேற்கொண்டு உங்களுடைய சக்தியை வீணடிப்பது சரியா என்பது எனக்குச் சந்தேகமாக இருக்கிறது.

அங்கே பீறிட்டெழுந்துள்ள பலாத்கார நிகழ்ச்சிகள் அற்ப விஷயம் அல்ல என்பதை நான் முற்றிலும் ஒப்புக் கொள்கிறேன். நாம் செய்ய வேண்டியது என்னவெனில், இந்தியா சட்ட சபையில் உள்ள கட்சிகளிடையே ஒரு சமரச ஒப்பந்தம் ஏற்படும் படி செய்ய வேண்டும்; சாத்தியமாயின், பலாத்காரத்தை எதிர்த்து ஒரு கூட்டு முன்னணியை உருவாக்க வேண்டும். அடுத்துவரும் எதிர்காலத்தில், அதற்குப் பரிகார முறைகளைக் கண்டுபிடிக்கும் விஷயமாகவே எனது முயற்சிகள் யாவும் இருக்கும். நீங்கள் எங்கே இருந்தாலும் அவ்விஷயமாக உங்களுடைய உதவியில் நான் நம்பிக்கை வைக்கலாம் என்பதை அறிவேன்.

உங்களைச் சந்தித்துப் பேசியது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தது. நீங்கள் கூறியவையெல்லாம் மனத்தை மிகவும் கவர்வதாக இருந்தன.

தங்கள் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

# 301

# வழிகாட்டும் குரல்

பங்கி காலனி, ரீடிங் ரோடு,
புது டில்லி, 8-4-1947

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுடைய கடிதங்களுக்காக நன்றி.

நான் பஞ்சாபிற்குச் செல்லும் விஷயமாக, காலநிலை தடையாக இருக்க விடமாட்டேன். இறுதியாக எனது அந்தராத்மாவின் குரலே வழிகாட்டியாக இருக்கும். நான் போவதென்று தீர்மானித்தால், புறப்படும் தேதியை உங்களுக்கு அறிவிக்கிறேன்.

நான் எச்சமயத்தில் எங்கே இருந்தாலும், என்னுடைய உதவியை நீங்கள் நம்பலாம் என்பது நிச்சயம்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 302

# காந்திஜியின் திட்டத்துக்கு ஆதரவில்லை

*பங்கி காலனி, ரீடிங் ரோடு,*
*புது டில்லி, 11-4-1947*

*அன்புள்ள நண்பருக்கு,*

*நான் பண்டித நேருவுடன் பல தடவை சுருக்கமாகப் பேசிக் கொண்டிருந்தேன். அவருடன் ஒரு மணி நேரம் தனியாகவும் பேசிக்கொண்டிருந்தேன். பிறகு, நான் உங்களிடம் விவரித்த திட்டத்தைப் பற்றி நேற்றிரவு காரியக் கமிட்டி அங்கத்தினர் களில் பலருடனும் பேசினேன். அதில் அடங்கியுள்ள ஷரத் துகளை அவர்களுக்கு விளக்கிக் கூறினேன். பட்ஷா கானைத் தவிர வேறு யாரும் எனது திட்டத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்ய என்னால் முடியவில்லை என்பதைக் கூற நான் வருந்து கிறேன்.*

*எனது திட்டம் பண்டித நேருவின் உள்ளத்திற்கோ அல்லது அறிவுக்கோ உடன்பாடானதாக இருக்கும்படி செய்ய என்னால் முடியவில்லை. எனவே, மேற்கொண்டு எனது முயற்சியைத் தொடர்ந்து செய்ய வேண்டுமா என்பது எனக்குத் தெரியவில்லை. எனினும், அங்கே இருந்த சில காரியக் கமிட்டி அங்கத்தினர் களுடன் அதைப் பற்றி விவாதிக்கும் வரையில் தமக்குத் திருப்தி ஏற்படாது என்று நேருஜி அன்புடன் கூறினார்.*

*எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் என்னுடைய திட்டம் சரி என்று அவர்களுக்குத் திருப்தி ஏற்படும்படி செய்ய முடியாததைக் குறித்து நான் வருந்துகிறன். நான் திறந்த மனத் துடன் எவ்வித வாதத்திற்கும் செவி கொடுக்கத் தயாராக இருந்தும்கூட, எனது நிலையை மாற்றிக்கொள்ளும்படி அவர் களால் செய்ய முடியவில்லை. எனவே, உங்களுடைய ஆலோசனை யிலிருந்து என்னை விலக்கிவிடும்படி நான் உங்களைக் கேட்டுக் கொள்ள வேண்டியிருக்கிறது.*

*இடைக்கால அரசாங்கத்தில் பதவி வகிக்கும் காங்கிரஸ் காரர்கள் அனுபவமும் உறுதியும் வாய்ந்தவர்கள்; தேசத்தின் பண்பட்ட ஊழியர்கள். எனவே, காங்கிரசின் சார்பில் அவர் களே முழு ஆலோசகர்களாகவும் இருப்பார்கள்.*

*காலஞ்சென்ற ஸி. எப். ஆண்ட்ரூஸ் மேற்கொண்டிருந்த நிலையையே நானும் மேற்கொள்ள விரும்புகிறேன். அவர் வேறு எவருக்கும் பிரதிநிதியாக இருக்கவில்லை; அவர் தமக்குத் தாமே பிரதிநிதியாக இருந்தார். தனித்த முறையில் என்னுடைய தொண்டு தங்களுக்குத் தேவையாக இருக்குமாயின், எப்போதும் அதைத் தங்கள் விருப்பப்படி உபயோகித்துக் கொள்ளலாம்.*

மேலே குறிப்பிட்டுள்ள சந்தர்ப்பங்கள் காரணமாக, நீங்கள் சம்மதம் அளித்தால், சாத்தியமாயின் நாளையே பாட்னுவுக்குப் புறப்பட நான் உத்தேசித்திருக்கிறேன்.

இவ்விதம் அடிக்கடி உங்களைப் பேட்டி காண்பது, தாங்க முடியாதவாறு உங்களுக்கு சிரமமாக இராதென்று நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 303

# வகுப்பு வெறியைக் கண்டித்து அறிக்கை

பீகார் கவர்னர் முகாம்,
பாட்னு, 14-4-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இத்துடன் இணைக்கப்பட்டுள்ள செய்தி, மே. த. வைஸ்ராயிடமிருந்து உங்களுக்கு நேற்றிரவு தந்திமூலம் வந்தது. அதற்குப் பதில் அளித்துத் தாங்கள் கடிதம் எழுத விரும்பினுல், இன்று காலை 11 மணிக்குமுன் அதை பாட்னு அரசங்க மாளிகைக்கு அனுப்பக் கோருகிறேன். இன்று நான் விமானத்தில் டில்லிக்குச் செல்லுவதால், மே. த. வைஸ்ராய்க்கு நீங்கள் எழுதும் பதிலை என்னுடன் எடுத்துச் செல்லுவேன்.

தங்கள் உண்மையுள்ள,
கிராப்டன்

# ஜின்னுவின் நிபந்தனை

# 304

மேற்கண்ட கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்த வைஸ்ராயின் தந்திச் செய்தி பின்வருமாறு:

சென்ற பத்து நாட்களாக நான் உங்களுடன் பேசிக் கொண்டிருந்தது, எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுத்தது. உங்களுடைய யாத்திரை சௌகரியமாக இருந்ததென நம்புகிறேன்.

நீங்கள் டில்லியிலிருந்து புறப்பட்டுச் செல்லுமுன், பலாத்காரச் செயல்களை குறித்து மிகவும் வருந்துவதாக வெளியிட உத்தேசித்துள்ள அறிக்கையில் கையெழுத்திட்டீர்கள் அல்லவா? அதில் ஸ்ரீ ஜின்னுவும் கையெழுத்திடத் தயாராக இருக்கிருர். ஆனுல் அந்த அறிக்கையில் உங்களுடைய கையெழுத்தும் அவருடைய கையெழுத்தும் மாத்திரமே இருக்க வேண்டும்

என்பது அவரது நிபந்தனையாகும். ஸ்ரீ கிருபளானியும் கையெழுத்துப் போட வேண்டுமென்று நீங்கள் எண்ணுவதாகக் கூறினீர்கள். எனினும் இதை நீங்கள் ஒரு நிபந்தனையாகக் கூறவில்லை. உங்களிடமிருந்து பதில் வரும்வரையில் நானும் யாதொரு அறிக்கையையும் வெளியிடப் போவதில்லை. இவ்விஷயத்தை என் விருப்பத்திற்கு விட்டுவிட பண்டித நேரு இசைந்துள்ளார். எனினும், உங்களுடைய அபிப்பிராயங்களையும் தெரிந்து கொள்ள வேண்டுமென நான் கருதுகிறேன். அந்த அறிக்கையில் உங்களுடைய கையெழுத்து மாத்திரம் இருந்தாலன்றி, ஸ்ரீ ஜின்னா அதில் கையெழுத்திட மாட்டார். எனவே அதற்கு இணங்கும்படி உங்களை நான் கேட்டுக் கொள்ளலாமா? தயவு செய்து உடனே பதில் எழுதுங்கள்.

## 305

பாட்னா,
*14-4-1947*

அன்புள்ள ஸ்ரீ கிராப்டன்,

உங்களுடைய யோசனைக்கு நன்றி. இருந்தாலும், இத்துடன் இணைக்கப்பட்டுள்ள செய்தியை நீங்கள் அன்பு கூர்ந்து தந்தி மூலம் அனுப்பிவைத்தால், விரைவில் போய்ச்சேரும்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

மேற்கண்ட கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்த தந்திச் செய்தி பின் வருமாறு :

பாட்னா,
ஏப்ரல், 14.

மே. த. வைஸ்ராய்,

செய்தி இப்போதுதான் கிடைத்தது. மிக்க நன்றி. எனது யாத்திரை அமைதியாகவே இருந்தது. காங்கிரஸ் அக்கிராசனரும் கையெழுத்திட வேண்டும் என்பது எனது அபிப்பிராயம். அவர் கையெழுத்திடக் கூடாது என்பதற்குக் காரணத்தை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். அது எப்படியாயினும், நீங்களும் பண்டிட்ஜியும் இறுதியாக முடிவு செய்யும்படி விட்டுவிடுகிறேன்.

**காந்தி**

## 306

காந்திஜி அனுப்பிய மேற்கண்ட தந்திக்கு வைஸ்ராயிடமிருந்து வந்த பதில் தந்தி பின்வருமாறு :

ஸ்ரீ காந்தி,

இறுதியாக முடிவு செய்யும் பொறுப்பை பண்டித நேருவும் என்னிடம் விட்டுவிட்டார் என்பதை உங்களுக்கு அறிவிக்க மகிழ்ச்சியடைகிறேன். வேண்டுகோள் விடுக்க வேண்டியது அத்தியாவசியமானது என்று கருதுகிறேன். நீங்களும் ஸ்ரீ ஜின்னுவும் மாத்திரமே கையெழுத்திட்டு அறிக்கை வெளியிடுவதே சிறந்ததென்று நான் எண்ணினேன். ஸ்ரீ ஜின்னு இப்போது கையெழுத்திட்டுவிட்டார். உடனடியாக அறிக்கை வெளியிடப் படுகின்றது.

வைஸ்ராய்

# காந்திஜி, ஜின்னு வேண்டுகோள்

வகுப்பு வெறி காரணமாக எழுந்த பலாத்காரச் செயல்களைக் கண்டித்தும், அமைதியாக இருக்கும்படி மக்களைக் கேட்டுக் கொண்டும் காந்திஜியும் ஸ்ரீ ஜின்னுவும் கையெழுத்திட்டு விடுத்த அறிக்கையின் விவரம் பின்வருமாறு :

சமீபத்தில் நிகழ்ந்த சட்ட விரோதமான செயல்களையும் பலாத்காரச் செயல்களையும் குறித்து நாங்கள் மிகவும் வருந்துகிறோம். அவை இந்தியாவின் நற்பெயருக்கு மிகுந்த அவமானத்தை உண்டாக்கியிருக்கிறது. தாக்கியவர்கள் யாராயினும், துன்பத்திற்குள்ளானவர்கள் யாராயினும், நிரபராதிகளான மக்கள் அச் செயல்களால் சகிக்க முடியாத துன்பத்திற்கு ஆளாகியிருக்கிறார்கள்.

அரசியல் லட்சியங்களை அடைவதற்காக பலாத்காரத்தை உபயோகிப்பதை நாங்கள் எக்காலத்திலும் கண்டிக்கிறோம். இந்தியாவிலுள்ள சகல சமூகங்களையும், அவர்கள் எந்த மதத்தினராயினும், பலாத்காரச் செயல்களிலும் குழப்பத்தை உண்டாக்கும் நடவடிக்கைகளிலும் ஈடுபடவேண்டாம் என்றும், அத்தகைய செயல்களைத் தூண்டக் கூடிய பேச்சையும் எழுத்தையும் கூடத்தவிர்க்க வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறோம்.

எம். ஏ. ஜின்னு மோ. க. காந்தி

# 307

# மன்னர்கள், ஐ. ஸி. எஸ். அதிகாரிகள் கடமை

*பாட்னுவுக்குச் செல்லும் ரயிலில்,*
*8-5-1947*

*மே. த. வைஸ்ராய்,*
*சிம்லா.*

*அன்புள்ள நண்பருக்கு,*

*சென்ற ஞாயிற்றுக்கிழமை நாம் சந்தித்துப் பேசியபோது நான் கூறிய விஷயங்களையும், நான் கூற விரும்பிய, ஆனால் நேரம் இல்லாததால் அரை குறையாகக் கூறிவிட்டு வந்த விஷயங்களையும் சுருக்கமாகக் குறிப்பிட வேண்டும் என்று என் மனத்திற்குத் தோன்றியது.*

*1. இந்தியாவைப் பிரிப்பதற்கு, பிரிட்டிஷாருக்கு எந்தவிதத்தில் சம்பந்தமிருந்தாலும், அது அவர்கள் செய்யும் முதல் தரமான தவருகவே இருக்கும். இந்தியாவின் பிரிவினை வந்துதான் தீர வேண்டுமெனில், அது பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வாபசான பிறகு, கட்சிகளிடையே ஏற்படும் ஒப்பந்தத்தின் பலனுகவோ அல்லது ஆயுதப் போரின் விளைவாகவோ வரட்டும். ஆயுதப் போர் தவிர்க்கப்பட வேண்டும் என்று காயிதே ஆஜம் ஜின்னு கூறுகிருர். போட்டிக் கட்சிகளிடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டால், ஒரு மத்தியஸ்த நீதிச் சபையை ஸ்தாபிப்பதன் மூலம் சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பு அளிக்க முடியும்.*

*2. இதன் மத்தியில், காங்கிரஸ்காரர்களோ அல்லது காங்கிரஸ்காரர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களோ, அல்லது முஸ்லிம் லீகர்களோ அல்லது முஸ்லிம்லீகர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களோ அடங்கிய இடைக்கால அரசாங்கம் ஏற்பட வேண்டும். இன்றைய இரட்டை ஆட்சிமுறையில் (காங்கிரஸ் காரர்களும் முஸ்லிம் லீகர்களும் அடங்கிய ஆட்சி முறை) ஒற்றுமையோ, கூட்டாக வேலை செய்யும் கட்டுப்பாடோ இல்லை. அவ்விதம் இருப்பது நாட்டின் நலனுக்கு அபாயமாகும். கட்சிகள் மந்திரி சபையில் உள்ள ஸ்தானங்களை இறுகப்பற்றிக் கொண்டிருப்பதிலும், உங்களுடைய மனம் கோணுமல் நடந்து கொள்வதிலும் தங்களுடைய சக்தியை வீணுக்கிவருகிருர்கள். அவர்களிடையே ஒத்துழைப்பு இல்லாததால், அரசாங்கம் சீர்குலைந்து, நல்ல, திறமையுள்ள அரசாங்கத்துக்கு இன்றியமையாத அதிகாரிகளின் யோக்கியப் பொறுப்புக்கு அபாயம் ஏற்பட்டிருக்கிறது.*

3. இந்தக் கட்டத்தில் எல்லைப் புற மாகாணத்திலோ அல்லது வேறு எந்த மாகாணத்திலோ பொதுஜன வாக்கு எடுப்பது ஆபத்தான காரியமாகும். இருக்கும் சாதனங்களை வைத்துக் கொண்டே நீங்கள் சமாளிக்கவேண்டும். முதல் மந்திரி டாக்டர் கான் சாகிபுக்குப் புறம்பாக எதுவும் செய்யக் கூடாது. பிரிவினை ஏற்பட்டுத்தான் தீரவேண்டும் என்ற நிலை உண்டானால் மாத்திரமே, இந்த பாராவில் நான் குறிப்பிட்டுள்ளவை பொருந்தும்.

4. பஞ்சாபையும் வங்காளத்தையும் பிரிப்பது எந்த விதத்திலும் தவறு என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். அது அனாவசியமாக லீகிற்கு எரிச்சலை உண்டாக்கும். இதுவும், மற்றெல்லாப் புதிய எற்பாடுகளும் பிரிட்டிஷார் வெளியேறிய பிறகுதான் வர முடியும். பரஸ்பர ஒப்பந்தத்தின் மீது அந்த ஏற்பாடுகள் எப்போது வேண்டுமாயினும் வரலாம். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி அதிகாரம் அமலில் இருந்து வரும் வரையில், தேசத்தில் அமைதியைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு பிரிட்டிஷாரைச் சார்ந்ததாகவே இருக்க வேண்டும். தற்போதைய நெருக்கடியில் அந்த ஆட்சி யந்திரம் தகர்ந்து வருவதுபோல் தோன்றுகிறது. நிறைவேற்ற முடியாத, நிறைவேற்றக் கூடாத பல்வேறு நம்பிக்கைகளுக்கு இடம் கொடுத்ததே அத்தகைய நெருக்கடிக்குக் காரணமாகும். மீதியுள்ள பதின்மூன்று மாத காலத்தில் இந்த நம்பிக்கைகளுக்கு இடமில்லை. எனினும், பிரிட்டிஷார் வேளியேற வேண்டும் என்ற ஒரே விஷயத்தில் எல்லோரும் முழுகவனத்தையும் செலுத்துவார்களாயின், அந்தக் கால அளவை மிகவும் லாபகரமான முறையில் குறைத்துவிட முடியும். மற்ற எல்லா அலுவல்களையும் ஒதுக்கிவைத்துவிட்டு நீங்கள் அதைச் செய்ய முடியும்; உங்களால் மாத்திரம்தான் அதைச் செய்ய முடியும்.

5. கடற்படை யுத்தத்தில் நீங்கள் ஈடு இணையற்ற நிபுணராகத் திகழ்கின்றீர்கள். அது ஒரு பெரிய காரியம்தான். இருந்தாலும் உங்களிடம் இப்போது ஒப்படைக்கப்பட்டுள்ள கடமையுடன் ஒட்பிடும்போது, அது அற்ப விஷயமேயாகும். உங்களுக்கு வெற்றியைக் கொடுத்த ஒரே உறுதியும், மனத் தெளிவும் இப்போதைய கடமையை நிறைவேற்றுவதில் உங்களுக்கு அதிகத் தேவையாக இருக்கின்றன.

6. இந்தியாவில் நீங்கள் விட்டுச் செல்லும் சொத்து, குழப்பமும் கொந்தளிப்புமாக இராமல் இருக்க வேண்டுமாயின், நீங்கள் ஒரு முடிவுக்கு வந்தாக வேண்டும். அதாவது சமஸ்தானங்கள் உள்பட இந்தியா முழுவதற்குமான அரசாங்கத்தை நீங்கள் ஒரே கட்சியினிடம் விட்டுவிட வேண்டும். முஸ்லிம் லீக் பிரதிநிதிகளோ அல்லது சில சமஸ்தானங்களின் பிரதிநிதிகளோ இராத பிரதேசங்களின் நிர்வாகத்திற்கு, அரசியல் நிர்ணய சபையே வழிவகை செய்ய வேண்டும்.

7. பஞ்சாபையும், வங்காளத்தையும் பிரிக்கக்கூடாது எனில், அந்த மாகாணங்களில் உள்ள சிறுபான்மையோர் அலட்சியம் செய்யப்படுவார்கள் என்று அர்த்தமில்லை. அந்த இரு மாகாணங்களிலும் உள்ள சிறுபான்மையோர் சக்திவாய்ந்தவர்கள், அவர்களின் தொகையும் அதிகம். எனவே, அவர்கள் விஷயத்தில் கவனம் செலுத்தித்தான் தீரவேண்டும். பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கம் சிறுபான்மையோரைத் திருப்தி செய்ய முடியாவிடில், கவர்னர்கள் தீவிரமாகக் குறுக்கிட வேண்டும்.

8. சமஸ்தானங்களின்மீது பிரிட்டிஷாருக்குள்ள அதிகாரத்தை வேறு யாரிடமும் ஒப்படைக்க முடியாது என்பது தீமையான ஒரு சித்தாந்தமாகும். சமஸ்தானங்கள் விசேஷ அதிகாரங்களுடன் தனியாக இயங்குவது, சுதந்திர இந்தியாவுக்கே ஆபத்தை விளைவிக்கும். இந்தியாவில் பிரிட்டிஷாருக்குள்ள அதிகாரங்கள் யாவும், அவர்களுக்குப் பின்வரும் சுதந்திர சர்க்காருக்கு இருக்க வேண்டும். எனவே, பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள மக்களைப்போல் சமஸ்தான மக்களும் சுதந்திர இந்தியாவின் அம்சமேயாவர். தற்போதைய இந்திய மன்னர்கள், பிரிட்டிஷ் ஆட்சி அதிகாரத்தின் பராமரிப்பிற்காகவும் கௌரவத்திற்காகவும் சிருஷ்டிக்கப்பட்டவர்களே. அதனால்தான் பிரிட்டிஷார் அவர்களைச் சகித்து வருகிறார்கள். சமஸ்தான மக்கள்மீது அந்த மன்னர்களுக்கு இருக்கும் தங்குதடையற்ற அதிகாரங்கள், பிரிட்டிஷ் சர்க்காருக்கே படுமோசமான ஒரு களங்கமாகும். புதிய ஆட்சியின் கீழ், மக்களின் பாதுகாப்பாளர்கள் என்ற முறையில் மாத்திரமே மன்னர்கள் சில அதிகாரங்களை உபயோகிக்கலாம்; அரசியல் நிர்ணய சபை அவர்களுக்கு அளிக்கும் அதிகாரங்களையும் அவர்கள் உபயோகிக்கலாம். இதிலிருந்து அவர்கள், சொந்தத்தில் ராணுவமோ அல்லது ஆயுதத் தொழிற்சாலைகளோ வைத்துக் கொள்ளக் கூடாது என்று ஏற்படுகிறது. அவர்களுடைய திறமையும், ராஜ தந்திரமும் இந்தியக் குடியரசின் அதிகாரத்தின் கீழ், சமஸ்தானங்கள் உள்பட இந்தியாவிலுள்ள எல்லா மக்களின் நலனுக்காகவும் உபயோகிக்கப்பட வேண்டும். சமஸ்தானங்கள் விஷயத்தில் என்ன செய்யவேண்டும் என்பதை மாத்திரமே நான் கூறியிருக்கிறேன். அதை எப்படிச் செய்ய வேண்டும் என்பதை, இந்தக் கடிதத்தில் கூறுவது எனது உரிமை அல்ல.

9. சிவில் சர்விஸ் விஷயமும், சமஸ்தானப் பிரச்னையைப் போல் கடினமானதே என்றாலும், அதைப்போல் அவ்வளவு திணற வைப்பதல்ல. புதிய ஆட்சிக்குத் திருப்தி ஏற்படும் வகையில் நடந்து கொள்ளும்படி அந்த அதிகாரிகளுக்கு இப்போது முதற்கொண்டே கற்பிக்க வேண்டும். அவர்கள் எந்தக் கட்சியின் சார்பிலும் இருக்கக் கூடாது, அவர்களிடம் வகுப்புவாதத்தின் அறிகுறியே இருக்கக்கூடாது. அவ்விதம் இருப்பவர்கள் விஷயத்தில் கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும்.

அந்த அதிகாரிகளிடையே உள்ள ஐரோப்பியர்கள், பழைய ஆட்சியினிடமும் பிரிட்டனிடமும் வைத்திருந்த விசுவாசத்திற்குப் பதிலாக, புதிய ஆட்சியினிடம் விசுவாசம் வைக்க வேண்டும் என்பதை அறிய வேண்டும். அவர்கள் தாங்கள் ஆட்சியாளர்கள் என்றும், எனவே தாங்கள் மேலானவர்கள் என்றும் கருதுவது வழக்கமாக இருந்துவந்திருக்கிறது. அந்த வழக்கத்தை அவர்கள் விட்டுவிட்டு, மக்களுக்கு உண்மையான தொண்டு புரியும் உணர்ச்சிக்கு இடம் கொடுக்க வேண்டும்.

*10.* சென்ற செவ்வாய்க்கிழமை நான் காயிதே ஆஜம் ஜின்னாவுடன் $2\frac{3}{4}$ மணி நேரம் ஆனந்தமாகப் பேசிக் கொண்டிருந்தேன். அகிம்சையை வற்புறுத்தி நாங்கள் கையெழுத்திட்டு விடுத்த அறிக்கையைப்பற்றிப் பேசினோம். அகிம்சையில் அவருக்குள்ள நம்பிக்கையை அவர் வற்புறுத்திக் கூறினார். பத்திரிகைகளுக்கு விடுப்பதற்காக அவர் தயாரித்த அறிக்கையிலும் அவர் அகிம்சையை வற்புறுத்தியுள்ளார்.

*11.* பாகிஸ்தானையும் பிரிவினையையும் பற்றி நாங்கள் பேசினோம். எப்போதும் போலவே நான் பாகிஸ்தான் திட்டத்தை தீவிரமாக எதிர்த்துவருவதாக அவரிடம் கூறினேன். எனினும் அகிம்சையில் தமக்குள்ள நம்பிக்கையை அவர் பிரகடனம் செய்திருப்பதால், பலாத்காரமின்றி விவாதத்தின் மூலமே அவர் தமது எதிரிகளின் மனத்தை மாற்ற முயற்சிக்க வேண்டும் என்று அவருக்கு யோசனை கூறினேன். ஆனால், பாகிஸ்தான் பிரச்னை வாதத்திற்குரிய ஒரு விஷயம் அல்லவென்று அவர் உறுதியாகக் கூறிவிட்டார். தர்க்க ரீதியாகப் பார்த்தால், அகிம்சையில் நம்பிக்கையுள்ள ஒருவருக்கு எதுவும்,-கடவுள் உண்டா என்பது கூட, வாதத்திற்கு அப்பாற்பட்ட விஷயம் அல்ல.

மகத்தான அலுவல்களுக்குப் பிறகு நீங்களும் உங்கள் மனைவியாரும் சுகமாக ஓய்வு எடுத்துக் கொண்டுவருகிறீர்களென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 308

## நம்பமுடியாத கட்டுக் கதை

புது டில்லி, *28–6–1947*

**அவசரம்**

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி,

அன்புள்ள நண்பருக்கு,

இன்று மாலை உங்களுக்கு ஒரு கடிதம் அனுப்பினேன். மாலைப் பிரார்த்தனையும், நடையும் முடிந்த பிறகு சில விஷயங்

களைப்பற்றி உங்களுடன் பேச விரும்புகிறேன். நாம் ஏற்கனவே சந்தித்தபோது அவ்விஷயங்களைப்பற்றி மேலெழுந்தவாரியாகக் குறிப்பிட்டேனேயன்றி, விவரிக்க முடியவில்லை.

இரண்டு கட்சிகளிடையே அல்லது மூன்று கட்சிகளிடையே கூட ஏதாவதொன்றைத் தேர்ந்தெடுக்கும்படி நான் பார்லிமெண்டு தூதுகோஷ்டியினரிடமும், மந்திரி சபைத் தூதுகோஷ்டியினரிடமும் கூறினேன். எல்லோரும் கூறுவது சரி என்று சொல்லி எல்லோரையும் மகிழ்விக்க முயற்சித்தால், அவர்கள் படுதோல்வியே அடைவார்கள். இக்கட்டான ஒரு நிலையிலிருந்து உங்களை விடுவித்துக் கொள்ள நீங்கள் தைரியத்துடனும் யோக்கியப் பொறுப்புடனும் முயற்சிக்கிறீர்கள் என்று நான் நம்பிக் கொண்டிருந்தேன். ஆனால் எனது கண்கள் திறக்கப்பட்டன. நீங்கள் கூறுவதை நான் சரியாக அறிந்து கொண்டேன் எனில், காங்கிரஸ்காரர்களைப்போல் காயிதே ஆஜம் ஜின்னாவும் லீக் அங்கத்தினர்களும் கூறுவதும் சரிதான் என்றும், காங்கிரசைக் காட்டிலும் காயிதே ஆஜம் ஜின்னா கூறுவதுதான் சரி என்றும் கூறினீர்கள். அது மனித சாத்தியமில்லாத காரியம் என்று சொன்னேன். ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஒருவர் கூறுவதுதான் முற்றிலும் சரியாக இருக்க வேண்டும். இந்த தேச சரித்திரத்தின் மிகவும் நெருக்கடியான இந்தக் கட்டத்தில் நீங்கள் ஒரு கட்சியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். காங்கிரசைக் காட்டிலும் காயிதே ஆஜம் ஜின்னா கூறுவதுதான் அதிக உண்மையானது என்றும், அதிக நியாயமானது என்றும் நீங்கள் எண்ணினால், உங்களுடைய ஆலோசகர்களாக நீங்கள் லீக் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும்; எல்லா விஷயங்களிலும் மனம் விட்டும், பகிரங்கமாகவும் அவர்களையே வழிகாட்டியாகக் கொள்ளவேண்டும்.

குறிப்பாக, காங்கிரஸ் அங்கத்தினர்களின் நிலை உதவி அளிப்பதாக இராவிடில், ஆகஸ்டு 15உ கூட நீங்கள் பதவியிலிருந்து விலக காயிதே ஆஜம் விடமாட்டார் என்று நீங்கள் ஜாடையாகக் கூறினீர்கள். இந்தக் கூற்று என்னைத் திடுக்கிட வைத்தது. இந்தியாவை இரண்டாகப் பிளப்பதற்கு பிரிட்டிஷார் உடந்தையாக இருந்தது முதல் தவறு என்பதை நான் சுட்டிக் காட்டினேன். அந்தத் தவறைச் சீர்படுத்துவது இனி சாத்தியமல்ல. எனினும், அதற்கு ஊக்கமளிக்காமல் இருப்பது முற்றிலும் சாத்தியமாகும், அவசியமுமாகும் என்பதே எனது அபிப்பிராயம்.

நீங்கள் கூறிய மற்றொரு விஷயமும் என்னைத் திடுக்கிட வைத்தது. அதாவது இந்தியாவில் பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பு இருக்கும்போதே பிரிவினை ஏற்படாவிடில் ஹிந்துக்கள் பெரும்பான்மையோர் அடங்கிய கட்சியினராதலின், பின்னர் பிரிவினையை ஒருபோதும் அனுமதிக்க மாட்டார்கள் என்றும், பலாத்காரத்தினால் முஸ்லிம்களை அடிமைகளாக இருக்கும்படி செய்து

விடுவார்கள் என்றும் நீங்கள் கூறினீர்கள். இவ்விதம் கூறுவது மோசமான ஒரு தவறு என்று நான் சொன்னேன். இவ்விஷயமாக புள்ளி விவரங்களைக் கூறுவது, வாதத்திற்கு நிற்கமுடியாது என்று சொன்னதுடன் ஒரு லட்சத்துக்கும் குறைவான பிரிட்டிஷ் சிப்பாய்கள் இந்தியாவை முற்றிலும் அடிமைத்தனத்தில் ஆழ்த்தி வைத்திருக்கும் உதாரணத்தையும் நான் எடுத்துக் கூறினேன். அந்த உவமை சரிதான் என்றும், இரண்டிற்கும் அளவில்தான் வேற்றுமை என்றும் கூறினேன்.

இப்போது உங்களுடைய ஆலோசனைக்காக பின்கண்ட விஷயங்களைக் குறிப்பிடுகிறேன்.

(அ) இந்திய யூனியனுக்கு உட்பட்ட எந்த மாகாணத்தையும், தான் பலாத்காரமாக ஆட்சிபுரிய முற்படாது என்று காங்கிரஸ் உறுதி மொழி அளிக்கின்றது.

(ஆ) தங்களிடையே சாதி வேற்றுமை மலிந்துள்ள பல கோடி ஹிந்துக்கள், ஒற்றுமையும் கட்டுப்பாடும் மிகுந்த சில கோடி முஸ்லிம்களை பலாத்காரத்தினால் அடக்கிவைப்பது முடியாத காரியமாகும்.

(இ) பிற்காலத்தில் ஆங்கிலேயர்கள் இந்தியாவை அடிமைப் படுத்தியதைப் போல், முஸ்லிம் ராஜாக்களும் அதே முறைகளைக் கைக்கொண்டு சிறிது சிறிதாக இந்தியாவை அடிமைபடுத்தினார்கள் என்பதை மறந்துவிடக்கூடாது.

(ஈ) ஷெட்யூல்டு வகுப்பினரையும், பூர்வீகக் குடிமக்களையும் முஸ்லிம்களின் பக்கத்தில் இழுத்துக்கொள்வதற்கான இயக்கம் ஏற்கனவேயே இருந்துவருகிறது.

(உ) வீண் பீதிக்குக் காரணமாக இருந்துவரும் சாதி ஹிந்துக்கள் மேற்கூறியவிதம் மிகச் சிறுபான்மையோரே என்பதை திட்டவட்டமாக நிரூபிக்க முடியும். இவர்களில் ரஜபுத்ர வகுப்பினர் இன்னும் தேசீயவாதிகளாக மாறவில்லை. பிராம்மணர்களும் பனியாக்களும் ஆயுதங்களை உபயோகிப்பதில் இன்னும் பயிற்சி செய்யப் படாதவர்களாகவே இருந்து வருகிறார்கள். அவர்களுடைய ஆதிக்கம் இருக்கும் இடங்களில், அது முற்றிலும் தார்மிக ரீதியான ஆதிக்கமாகவே இருந்து வருகிறது. சூத்திரர்களோவெனில், ஷெட்யூல்டு வகுப்பினரைப் போலவே இருந்து வருகிறார்கள் என்பதைக் குறித்து வருந்துகிறேன். எனவே அத்தகைய ஹிந்து சமூகத்தினர், எண்ணிக்கையில் அதிகமானவர்கள் என்பதற்காக, கோடிக்கணக்கான முஸ்லிம்களை நசுக்கி விடுவார்கள் என்று கூறுவது, திகைப்பை யுண்டாக்கும் ஒரு கட்டுக்கதையே யாகும்.

அதனால்தான், இந்தக் கொள்கையை மேற்கொள்வதில் நான் ஒருவனே தனியாக இருப்பினும் கூட, நான் அகிம்சையையும் சத்தியத்தையும் பின்பற்றுவதாக பிரதிக்ஞை செய்துவருகிறேன்.

அதே சமயத்தில், ஈடு இணையற்ற தைரியத்திற்கும் பிரதிநிதியாக இருக்க விரும்புகிறேன். அந்த தைரியத்தின் முன்னிலையில் அணுகுண்டு கூட அற்பமாகி விடுகிறதெனில், மிகுந்த சக்தி வாய்ந்த யுத்தக் கப்பல்களெல்லாம் எம்மாத்திரம்?

இந்தக் கடிதத்தை என்னுடைய நண்பர்கள் யாருக்கும் நான் காட்டவில்லை.

எந்த ஒரு விஷயத்திலாவது நான் உங்களைத் தவருகப் புரிந்துகொண்டிருப்பேனுயின், நீங்கள் என்னைத் திருத்துங்கள். நான் அதை மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொள்கிறேன். எதைப் பற்றி யாவது நான் கூறுவது தெளிவாக இல்லாவிடில், உங்கள் விருப் பம்போல் கடிதத்தின்மூலமோ அல்லது நேரில் சந்தித்தோ, அதைத் தெளிவாக விளக்க நான் முயற்சிக்கிறேன். நான் இந்தக் கடிதம் எழுதுவதற்கு ஒரே காரணம், நீங்கள் தவறுகள் செய்துவிடாமல் தவிர்க்க வேண்டும் என்ற கவலையேயாகும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 309

# வருந்துகிறேன்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 28-6-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இன்று காலை தாங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. அக் கடிதத்தை நான் மிகுந்த அக்கறையுடன் வாசித்தேன்.

நீங்கள் அதை எழுதியதற்காக மகிழ்ச்சி அடைகிறேன். ஏனெனில், உங்களுடைய கடிதத்தை வாசித்த பிறகு, முதலி லிருந்து கடைசிவரையில் நான் கூறியதன் அர்த்தம் உங்க ளுக்குத் தெளிவாகப் புரியும்படி செய்ய நான் தவறிவிட்டேன் என்றே எனக்குத் தோன்றுகிறது. மற்றவர்களுக்கு உங்க ளுடைய கடிதத்தை நீங்கள் காட்டாததைக் குறித்தும் நான் மகிழ்ச்சி அடைகிறேன். உண்மையில் நான் குறிப்பிடாத அபிப் பிராயங்கள் எனக்கு இருப்பதாகக் கூறப்படுவதைக் குறித்து நான் மிகவும் வருந்துகிறேன்.

நாம் அடுத்த தடவை சந்திக்கும்போது, மீண்டும் இவ் விஷயங்களைப் பற்றி விவாதிக்க நீங்கள் இசைவீர்கள் என்று நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

# 310

# இந்திய சுதந்திர மசோதா

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 30-6-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

இந்திய சுதந்திர மசோதாவை, யாதொரு ஆட்சேபணையுமின்றி உங்களுக்குக் காட்ட வேண்டுமென பண்டித நேரு, சர்தார் வல்லபாய் பட்டேல், நான் எல்லோரும் கருதுகிறோம். ஆகையால் அந்த மசோதாவைப் பார்க்க நாளை காலை 10 மணிக்கு அவர்களுடன் வைஸ்ராய் மாளிகைக்கு வரும்படி உங்களை அழைக்கிறேன். அவ்விதம் நீங்கள் வர இயலுமென நான் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

# 311

# மவுண்ட்பாட்டனுக்கு காந்திஜியின் யோசனைகள்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 7-6-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நேற்று மாலை நாம் பேசிக்கொண்டிருந்த போது, நீங்கள் அன்பு கூர்ந்து சில யோசனைகள் கூறினீர்கள். அவற்றைச் சுருக்கமாக நான் வைஸ்ராய்க்கு அனுப்பியிருக்கிறேன். அந்தக் குறிப்பை இத்துடன் இணைத்து உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன்.

உங்களுடைய அபிப்பிராயங்களை நான் சரியாக விளக்கிக் கூறியிருக்கிறேன் என்று மிகவும் நம்பிக்கையுடன் இருக்கிறேன். ஆனால், நான் ஏதாவது தவறுகள் செய்திருப்பதாக நீங்கள் கருதி எனக்கு அவற்றைக் குறிப்பிட்டால், நான் மகிழ்ச்சியுடையவனாக இருப்பேன். அதன் பலனாக, நான் வைஸ்ராயினிடம் கொடுத்துள்ள பிரதியிலும் திருத்தங்கள் செய்யலாம்.

நம்முடைய பேச்சு எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது.

தங்கள் உண்மையுள்ள,
இஸ்மே

**மேற்கண்ட கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்த குறிப்பு :**

## 1. வடமேற்கு எல்லைப்புற மாகாணம்

*ஸ்ரீ ஜின்னாவுடன் பின்வரும் ரீதியில் வைஸ்ராய் பேச வேண்டும் என்று காந்தி யோசனை கூறுகிறார் :*

*"வடமேற்கு எல்லைப் புற மாகாணத்தில் பொதுஜன வாக்கு எடுப்பு, ரத்தக்களரிக்குக் காரணமாகிவிடக் கூடாது என்பதில் நான் மிக மிக அக்கறையுடையவனாக இருக்கிறேன். அதன் காரணமாக சகோதரர்களான பட்டாணியருக்கும் பட்டாணியருக்கும் ரத்தப் பகைகள் ஏற்பட்டுவிடக்கூடாது. அதைத் தவிர்க்க முடியுமா என்பதே எனக்கு வியப்பாக இருக்கிறது. நீங்கள் கோரிய பாகிஸ்தான் இப்போது உங்களுக்குக் கிடைத்து விட்டதால், நீங்கள் அந்த மாகாணத்திற்குச் சென்று, தற்போதைய மந்திரிகள், அவர்களைப் பின்பற்றுவோர் உள்பட சகல கட்சிகளையும் சேர்ந்த அந்த மாகாண மக்களைக் கண்டு பேசுவது புத்திசாலித்தனமாக இராதா? இதுவரையில் வாயளவில் பேசப்பட்டு வந்த பாகிஸ்தான் இப்போது உண்மையாகிவிட்டதால், அது பாகிஸ்தானில் ஒரு மாகாணமாகச் சேரலாம் என்ற நம்பிக்கையில், பாகிஸ்தான் என்றால் என்ன என்பதை நீங்கள் அவர்களுக்கு தீவிரமாக விளக்கிக் கூறமுடியும்.*

*"உங்களுடைய முயற்சி வெற்றிபெற்றுவிட்டால், உத்தேசிக்கப்பட்டுள்ள பொதுஜன வாக்கு எடுப்பும், அதன் விளைவுகளும் தவிர்க்கப்படலாம். இந்த யோசனையை ஏற்றுக் கொள்ள நீங்கள் இசைந்தால், கான் சகோதரர்களும் அவர்களைப் பின்பற்றுவோரும் நண்பர்கள் என்ற முறையில் உங்களைச் சந்தித்து நீங்கள் கூறுவதற்குச் செவி சாய்ப்பார்கள் என்று நான் நிச்சயமாக உறுதிகூற முடியும்."*

*ஸ்ரீ ஜின்னாவுக்கு விடுக்கும் இந்த வேண்டுகோள் வெற்றி பெறாவிடில், அதைத் தமக்கு அறிவிக்கும்படியும், அப்போது நிலைமையை மீண்டும் தாம் ஆலோசிப்பதாயும் ஸ்ரீ காந்தி கூறினார். பொதுஜன வாக்கு எடுப்பின் மூலம் நிரந்தரமான ரத்தப் பகைகள் ஏற்படும் என்று அப்துல் கபார் கான் மிகவும் கவலைப்படுவதாகவும், எனவே அதைத் தவிர்க்க, கௌரவத்திற்குக் குந்தகமில்லாதவாறு தாம் எத்தகைய தீவிரமான முறையையும் மேற்கொள்ளத் தயாராக இருப்பதாயும் ஸ்ரீ காந்தி கூறினார். கடைசி முறையாக, அவர் (அப்துல் கபார் கான்) தம்முடைய சகோதரரையும், மற்ற மந்திரிகளையும் ராஜிநாமா செய்யும்படி ஆலோசனை கூறவும், பின்னர் 93-ஆவது பிரிவின் கீழ் அந்த மாகாணத்தை ஆட்சி புரியும்படி வைஸ்ராயைக் கேட்கவும் தயாராக இருப்பதாகவும் ஸ்ரீ காந்தி குறிப்பிட்டார்.*

மற்றொரு விஷயத்தையும் ஸ்ரீ காந்தி வற்புறுத்திக் கூறினார். மேற்கண்ட பிரச்னையைப்பற்றி தமது சகாக்களுடன் கலந்து

விவாதிக்கவில்லை என்றும், ஆகையால் இந்தக் கட்டத்தில் அதைப்பற்றி யாரிடமும் கூறவேண்டாம் என்றும் அவர் குறிப்பிட்டார்.

## 2. வங்காளமும் பஞ்சாபும்:

மேலே கூறிய அதே முறைகளைக் கொண்டு மேற்கு வங்காளத்தையும், கிழக்கு பஞ்சாபையும் பாகிஸ்தானில் சேர்த்துக் கொள்ளும்படி ஸ்ரீ ஜின்னாவுக்கு ஆலோசனை கூற வேண்டும் என்றும் ஸ்ரீ காந்தி கூறினார்.

## 3. ஸ்ரீ ஜின்னா - காங்கிரஸ் தலைவர்கள் ஒத்துழைப்பு:

ஸ்ரீ ஜின்னா காது கொடுத்துக் கேட்பதற்குற்ற சரியான மன நிலையில் இருக்கும்போது, வைஸ்ராய் பின்வருமாறு அவரிடம் கூறவேண்டும் என்றும் ஸ்ரீ காந்தி கூறினார்:

''என்னால் இயன்ற எந்த வழியிலாவது, ஒரு சமரச ஒப்பந்தத்திற்கு வர இரு கட்சிகளுக்கும் உதவி புரியவே நான் இங்கு இருக்கிறேன். இதை மகிழ்ச்சியளிக்கும் ஒரு விஷயமாக மாத்திரமல்ல, ஒரு கடமையாகவும் நான் கருதுகிறேன். எனினும், எப்போதும் நான் இந்தியாவிலேயே இருந்துவர முடியாது என்பதை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். இப்போது ஒரு முடிவு ஏற்பட்டுவிட்டது; உங்களுக்கு பாகிஸ்தானும் கிடைத்து விட்டது. எனவே இப்போது நண்பர்கள் என்ற முறையில் நீங்களாக காங்கிரஸ் தலைவர்களிடம் சென்று அவர்களுடன் பேசி, பல்வேறு பிரச்னைகளையொட்டியும் உங்களிடையே ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ள நீங்கள் ஏன் முயற்சிக்கக்கூடாது? என்னுடைய தலைமையில் மாத்திரமே கூடும் வழக்கத்தை விட்டு விட்டு, மேலே கூறிய விதம் செய்தால் இப்போதிருப்பதைக் காட்டிலும் சிறந்த ஒரு சூழ்நிலை ஏற்படும்.

## 4. பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும், இந்தியா, பாகிஸ்தான் அரசாங்கங்களுக்குமிடையே ஒப்பந்தங்கள்:

ஹிந்துஸ்தான், பாகிஸ்தான் சர்க்கார்களுடன் பிரிட்டிஷ் சர்க்கார் வெவ்வேறு ஒப்பந்தங்கள் செய்து கொண்டிருக்கலாம் என்றும், அவற்றின் விளைவாக ஒரு சர்க்காரைக் காட்டிலும் மற்றொரு சர்க்காருக்கு பிரிட்டிஷார் அதிக சலுகைகள் காட்டலாம் என்றும் பலமான பேச்சு இருந்துவருகிறதென்று ஸ்ரீ காந்தி கூறினார். எனவே இரு சர்க்கார்களுடனும் பிரிட்டிஷ் சர்க்கார் ஒரே விதமான ஒப்பந்தங்களே செய்து கொண்டிருக்கிறார்கள் என்றும், அது எப்படியாயினும் ஒரு சர்க்காரை விட மற்றொரு

சர்க்கார் விஷயத்தில் பாரபட்சமான சலுகை காட்டுவார்கள் என்ற பேச்சிற்கே இடமில்லையென அறிவிக்க வேண்டியது முக்கியமாகும் என்றும் ஸ்ரீ காந்தி கூறினர்.

# 312

# அற்புதமான யோசனைகள்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 10-6-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நீங்கள் லார்டு இஸ்மேயிடம் கூறிய அற்புதமான யோசனைகளுக்காக மிக்க நன்றியுள்ளவனாக இருக்கிறேன். டில்லியில் முஸ்லிம் லீக் கூட்டங்கள் நடந்துவருவதால், ஸ்ரீ ஜின்னா அவற்றில் மிகவும் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார். எனினும் மிகவும் சீக்கிரமாக சந்தர்ப்பம் கிடைத்தபோது, நீங்கள் கூறியுள்ள யோசனைகளை நிச்சயமாக அவரிடம் சொல்லுகிறேன்.

அவருக்குத் திருப்தி ஏற்படும்படி செய்ய என்னால் இயன்ற வரையில் முயற்சிக்கிறேன். எனினும் என்னுடைய தலையீட்டினால் அதிக பலன் ஏற்படுமென நீங்கள் நினைக்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

உங்களுடைய குறிப்பின் 4-ஆவது பாராவில் கூறப்பட்டுள்ள யோசனை சிறந்ததென்று நான் நினைக்கிறேன். அதை பிரிட்டிஷ் சர்க்காருக்கும் தெரிவிக்கிறேன். ஒரு வேளை பிரதம மந்திரி பார்லிமெண்டில் விவாதம் நடைபெறும்போது அவ்விஷயமாக உறுதிமொழி கூறுவார்.

தங்கள் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

# 313

# எல்லாக் கட்சிகளையும் திருப்தி செய்ய முயற்சி!

புது டில்லி, 10/11-6-1947

அன்புள்ள நண்பருக்கு,

ராஜகுமாரி, உங்களுக்கும் அவருக்கும் நடந்த சம்பாஷணையின் சாரத்தை எனக்கு எடுத்துக் கூறினர்.

எந்தச் சமயத்தில் நான் விரும்பினாலும் உங்களைக் கண்டு பேசலாமென நீங்கள் அன்பு கூர்ந்து என்னிடம் கூறியிருக்

கிறீர்கள். என்றாலும், உங்களுடைய அன்பை நான் அதிகமாகப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது. ஆனால், திட்டம் ஒழுங்காகவும் துரிதமாகவும் செயல்படுவதற்கு அவசியமானதென்று நான் கருதும் சில விஷயங்களை எழுத்துமூலம் அறிவிக்க விரும்புகிறேன்.

1. எல்லைப் புற மாகாணத்தில் பொதுஜன வாக்கு எடுப்பு சம்பந்தமாக நான் ஒரு விஷயத்தை ஒப்புக் கொள்ள வேண்டும். அதாவது எனது யோசனை பண்டித நேருவுக்கும் அவரது சகபாடிகளுக்கும் திருப்தி அளிக்கவில்லை. நான் ஏற்கனவே உங்களிடம் கூறியதுபோல், எனது யோசனை அவர்களுக்குத் திருப்தி அளிக்காவிடில், அதற்குமேல் செல்ல என் மனம் இடம் கொடுக்காது.

2. எனினும் இது, நான் கூறிய யோசனையை எந்த விதத்திலும் பாதிப்பதாகாது. அதாவது எல்லைப் புற மாகாணத்துக்குச் செல்லும்படியும், அங்கே பட்ஷா கான் உள்பட மந்திரிகளையும் செந்தொண்டர்களையும் அன்புடன் கண்டு பேசும்படியும் நீங்கள் காயிதே ஆஜம் ஜின்னாவை அழைக்க வேண்டும். இன்று அந்த மாகாணம் அடைந்துள்ள சிறந்த நிலைக்கோ அல்லது மோசமான நிலைக்கோ அவர்கள்தான் காரணம் ஆவர். அவர் அம் மாகாணத்துக்குச் செல்லுமுன், அவர் கூறுவதற்கு எல்லோரும் மரியாதையுடன் செவிகொடுப்பார்கள் என்று அவருக்கு உறுதிமொழி அளிக்கப்பட வேண்டும் என்பதில் சந்தேகமில்லை.

3. காயிதே ஆஜம் இந்த யோசனையை ஆதரித்தாலும் ஆதரிக்காவிட்டாலும், கள்ளம் கபடமற்ற மனமுள்ள பட்டாணியர் ஹிந்துஸ்தானில் சேர விரும்புகிறாரா அல்லது பாகிஸ்தானில் சேர விரும்புகிறாரா என்பதைப் பற்றி அவரைக் கேட்குமுன், பாகிஸ்தான் திட்டத்தைப்பற்றிய விவரங்களை பட்டாணியரிடம் கூறும்படி அவரிடம் (ஸ்ரீ ஜின்னாவிடம்) கேட்க வேண்டும். ஹிந்துஸ்தானத்தில் தனது நிலைமை என்ன என்பதை பட்டாணியர் அறிவார் என்றே நான் நினைக்கிறேன். அவர் அதை அறிந்து கொள்ளாவிடில், காங்கிரசோ அல்லது அரசியல் நிர்ணய சபையோ அதை அவர் அறிந்துகொள்ளும்படி செய்ய வேண்டும். ஹிந்துஸ்தானத்தைப் பற்றியோ அல்லது பாகிஸ்தானத்தைப் பற்றியோ பட்டாணியருக்கு எதுவும் தெரியாத நிலையில், அவர் எதில் சேர விரும்புகிறார் என்று கேட்பது நியாயமற்றதென நினைக்கிறேன். தன்னுடைய வாழ்வு எங்கே பூரணமாகப் பாதுகாக்கப்படும் என்பதையாவது அவர் அறிந்துகொள்ள வேண்டும்.

4. எல்லைப் புற மாகாணத்தில் இன்னும் அமைதி ஏற்படவில்லை. பகைமை முற்றிலும் தணியாமல் இருக்கும்போது, பொதுஜன வாக்கு எடுப்பது உண்மையானதாக இருக்க முடியுமா? நிதானமாகச் சிந்திக்க முடியாதவாறு மக்களின் மனம் மிகவும் கொதிப்படைந்திருக்கிறது. தங்களைப் பின்பற்றுவோரால் மூண்ட கலவரங்களுக்கு, காங்கிரசோ அல்லது லீகோ தாங்கள்

பொறுப்பாளி அல்ல என்று கூறிவிட முடியாது. இந்தியாவில் அமைதி ஏற்படாவிடில், மேல் கட்டிடம் தூள் தூளாகத் தகர்ந்து விடும். பிரிவினை ஏற்பட்ட பின்னரும் நீங்கள் விட்டுவிட்டுச் செல்லும் நிலை, உங்களுக்குப் பெருமையளிப்பதாக இராது.

5. முரண்பாடில்லாத பொதுவான நோக்கமுள்ள மந்திரி சபையை எவ்வளவு சீக்கிரமாக அமைக்கிறீர்களோ, அவ்வளவுக்கு அதிக நன்மையாகும். லீகினால் நியமிக்கப்பட்ட மந்திரிகள், மந்திரி சபைக்குப் புறம்பாகத் தங்கள் விருப்பப்படி அலுவல்களைச் செய்து கொண்டிருக்கக் கூடாது. தனித் தனியாக மந்திரிகளின் நடவடிக்கை ஒவ்வொன்றும் கூட்டுப் பொறுப்பின் கீழ் நடைபெறுமல் இருப்பது தீமையேயாகும்.

6. நீங்கள் வகுத்துள்ள அற்புதமான கால அட்டவணைப்படி நடப்பதற்குற்ற ஒரே வழி, மந்திரி சபையைக் கலந்துகொள்ளாமலேயே எல்லா விஷயங்களையும் உங்களுடைய விசேஷ சிப்பந்திகளைக் கொண்டு உருவகப்படுத்தும்படி செய்வதே யாகும். பின்னர் நேரம் வரும்போது, அந்த அறிக்கையை அந்தந்தக் கட்சிகளிடம் சமர்ப்பிக்க வேண்டும். அவை அதை அங்கீகரிக்கலாம், அதில் திருத்தங்கள் செய்யலாம், அல்லது அதை நிராகரிக்கலாம்.

7. சமஸ்தானப் பிரச்னையைத் தீர்ப்பதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. அந்தப் பிரச்னையில் நீங்கள் முழு கவனமும் செலுத்தி, அதை அஞ்சா நெஞ்சத்துடன் சமாளிக்க முற்பட வேண்டும்.

8. சிவில், ராணுவ உத்தியோகங்களில் உள்ளவர்களின் பிரச்னையும் கடினமானதே. இருந்தாலும் இது சமஸ்தானப் பிரச்னையைப் போல் அவ்வளவு கடினமானதல்ல. சமஸ்தானப் பிரச்னையைப்போல் இதையும் நீங்கள் உறுதியுடன் சமாளிக்க வேண்டும்.

9. கடைசியாக நான் ஒரு யோசனை கூறுகிறேன். அதாவது எல்லாக் கட்சிகளையும் திருப்தி செய்ய முயற்சிப்பது பலனற்ற, யாரும் பாராட்டுவதற்கில்லாத ஒரு காரியமாகும். இரு கட்சிகளையும் புகழ்வதும் கூடாது. புகழுரையே சரியான காரியம் அல்ல. திருத்திக் கொள்வதற்கு இப்போது கூட காலம் கடந்துவிடவில்லை. போர் வீரர் என்ற முறையில் உங்களுடைய திறமையில் யாருக்கும் சந்தேகமில்லை. இதற்கு முன் ஒரு போதும் இராதவாறு அந்தத் திறமை இன்று தேவையாக இருக்கிறது. அத்தகைய திறமை வாய்ந்த மாலுமியான தாங்கள், உங்களுடைய கடற்படையின் பக்கபலமின்றி உங்களுடைய விவேகத்தினாலும் சாமர்த்தியத்தினாலும் மாத்திரமே இந்தப் பிரச்னையைச் சமாளிக்க வேண்டும்.

10. எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சுருக்கமாகக் கூற நான் முயற்சித்திருக்கிறேன். இன்னும் சுருக்கமாகக் கூற என்னால் முடியவில்லை. இங்கே நான் குறிப்பிட்டுள்ள எவ்விஷயத்தை

யொட்டியாவது நேரில் பேசவேண்டுமாயின், நீங்கள் உங்களுக்கு சௌகரியமான ஒரு நேரத்தைக் குறிப்பிடுங்கள். மரியாதைக்காக என்னை அழைத்துப் பேச வேண்டுமென தயவு செய்து நினைக்காதீர்கள்.

*11.* இந்தக் கடிதத்தை நான் அநேகமாக எழுதி முடிக்கும் தறுவாயில் *10*-ஆம் தேதியிட்ட உங்களுடைய அன்பார்ந்த கடிதம் கிடைத்தது. எனினும் அதற்கு நான் தனியாக பதில் எழுத வேண்டிய அவசியம் இல்லை.

இந்தக் கடிதத்தை இரவு *9-25* மணிக்கு எழுதி முடித்தேன். நாளைக்கு இது 'டைப்' செய்யப்படும்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

# 314

# வைஸ்ராயின் நன்றி

வைஸ்ராய் மாளிகை,

புது டில்லி, *12-6-1947*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஜூன் *10/11*-இல் தாங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி. தற்போதைய பிரச்னைகளைக் குறித்து நீங்கள் செய்துள்ள வியாக்கியானங்களுக்காகவும் தங்களுக்கு நான் நன்றியுள்ளவனாக இருக்கிறேன். அவற்றை நான் நிச்சயமாக நினைவில் வைத்துக் கொள்கிறேன். இந்திய அரசாங்க இலாகாக்களைப் பிரிப்பது, இந்தியாவின் வரவு செலவு இனங்களை முற்றிலும் பங்கீடு செய்வது சம்பந்தமான எல்லா விவரங்களையும் என்னுடைய விசேஷ சிப்பந்திகளே கவனித்து ஒழுங்கு செய்வதென்பது நடைமுறையில் சாத்தியமா என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. எனினும், அவர்களுடைய சக்திக்கு இயன்றவரையில் உதவி அளிப்பார்கள். அது ஒரு மாபெரும் வேலையாகும். ஆட்சி அதிகாரத்தை மாற்றுவதற்கு முன், அதில் மிக மிகச் சிறிய ஒரு பகுதியை மாத்திரமே செய்து முடிப்பது சாத்தியம். முக்கியமாக அது, சம்பந்தப்பட்ட இரு கட்சிகளும் சமரசமாக முடித்துக் கொள்ள வேண்டிய விஷயமாகும்.

இடையறாத உங்களுடைய ஆலோசனைக்காகவும், ஆதரவுக்காகவும், அன்புக்காகவும் நான் மிகவும் நன்றியுள்ளவனாக இருக்

கிறேன். கஷ்டமான இந்தக் கடமையைச் செய்வதில் அவை தான் எனக்கு உறுதுணையாக இருந்துவந்திருக்கின்றன.

தங்கள் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

# 315

## துவேஷத்தைத் தவிர்க்க வேண்டும்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 12-6-1947

எனது அன்பார்ந்த ராஜகுமாரி,

உங்களுடைய சிறிய குறிப்பு நேற்று காலை எனக்குக் கிடைத்தது. அத்துடன் இணைக்கப்பட்டிருந்ததை நான் உடனே என்னுடைய கணவரிடம் கொடுத்தேன். அவர் அதை மிகுந்த அக்கறையுடன் வாசித்தார் என்பதை நான் அறிவேன். காந்திஜிக்கும், அதை நீங்கள் அனுப்பிவைத்ததற்காக உங்களுக்கும் நன்றி செலுத்தும்படி அவர் என்னிடம் கூறினர்.

உங்களுடைய கடிதத்தில் குறிப்பிட்டுள்ள விஷயத்தைப் பற்றியும் நாங்கள் விவாதித்தோம். தகராறு ஏற்பட்டுள்ள இரு மாகாணங்களின் எல்லைகளை நிர்ணயம் செய்யும் விஷயமாக தலைவர்களே உண்மையான, யோக்கியமான நட்பு முறையில் முயற்சி செய்யவேண்டும் என்பதை அவர் பூரணமாக ஒப்புக் கொள்கிறார். மற்றொரு புறம் நாம் செய்துள்ள முயற்சி வெற்றி பெறுமா என்பது இனிமேல்தான் தெரியவேண்டும். எப்பாடு பட்டாயினும், மேற்கொண்டு துவேஷம் ஏற்படுவதைத் தவிர்க்க வேண்டும் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன்.

ஒத்துழைப்பதற்கும், பரஸ்பரம் அறிந்து கொள்வதற்கும் இன்னும் கூட மனமில்லாதவர்கள், மேற்கண்ட உண்மையை அறிந்து கொள்ளும்படி செய்ய நாங்கள் இருவரும் எங்களால் இயன்றதைச் செய்வோம் என்பதுபற்றி நீங்கள் உறுதியுடன் இருக்கலாம்.

சர் ஈவான்ஸ் ஜெங்கின்ஸ் உங்களுக்கு அனுப்பிய கடிதத்தின் பிரதி ஒன்றை எங்களுக்கும் அனுப்பிவைத்தார். அது நியாயமான முறையில் உண்மைகள் அடங்கியதாக இருக்கின்றன. எனவே, அதை யாரும் ஒப்புக் கொள்ளலாமென நினைக்கிறேன். உண்மை நிகழ்ச்சிகளைத் திரித்துக் கூறுவது இப்போது மிகவும் அதிகமாக இருப்பதால், அக்கடிதம் தவருன எண்ணங்களை அகற்றுவதாக இருக்கிறது. ஆனால் தற்போதைய நிலையில், சிற்சில சமயங்களில், இதை எதிர்பார்த்துத்தான் தீர வேண்டுமென நான் அஞ்சுகிறேன்.

இன்று மாலை நீங்கள் வரமுடியாதது எங்களுக்கு எவ்வளவு ஏமாற்றத்தைக் கொடுக்கும் என்பதை நீங்கள் அறிய வேண்டு மென விரும்புகிறேன். எனினும், நீங்கள் வரமுடியாததற்கான காரணத்தை நான் முற்றிலும் உணர்கிறேன்.

எனது அன்பு,

உங்கள் பிரியமுள்ள,
எட்வினு மவுண்ட்பாட்டன்

# 316

# ஸ்ரீ ஜின்னுவின் நிலை

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 12-6-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நீங்கள் கூறிய யோசனைகளை அனுசரித்தே நான் ஸ்ரீ ஜின்னுவுடன் பேசினேன். உங்களுக்குப் பின் வருமாறு பதில் அனுப்பும்படி அவர் எனக்கு அனுமதி கொடுத்துள்ளார் :

எல்லைப்புற மாகாணத்தில் தலையிடுவதில்லை என்று காங்கிரசிடமிருந்து நீங்கள் உறுதி மொழி பெற்ருல், ஸ்ரீ ஜின்னு எல்லைப்புற மாகாணத்துக்குச் சென்று பாகிஸ்தானைப்பற்றி அங்குள்ள தலைவர்களுக்கும் மக்களுக்கும் விளக்க வேண்டும் என்று நீங்கள் கூறிய யோசனையை அவர் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொள்வார்.

இந்த முறையின் பயனுக, பொதுஜன வாக்கு எடுப்பையும் அதன் விளைவாக ஏற்படக்கூடிய ரத்தக் களரியையும் தவிர்க்க முடியும் என்ற உங்களுடைய அபிப்பிராயத்தை அவர் ஒப்புக் கொள்கிருர்.

நாளை நான் சிம்லாவுக்குச் செல்லுவதால் நீங்கள் இப்போது இவ்விஷயமாக அவருக்கு நேரில் எழுதும்படி யோசனை கூறு கிறேன்.

இந்தக் கடிதத்தின் பிரதி ஒன்றை நான் ஸ்ரீ ஜின்னுவுக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

பின் குறிப்பு : உங்களுடைய யோசனைக்கு காங்கிரஸ் தலைவர்களின் ஆதரவு கிடைக்கவில்லையென நான் அறிகிறேன். என்ன நேர்ந்தாலும், உங்களுடைய சொந்த அபிப்பிராயங்களை

ஸ்ரீ ஜின்னுவுக்கு அறிவிப்பதாக நான் உங்களுக்கு உறுதி மொழி அளித்தேன். காங்கிரஸ் தலைவர்கள் உங்களை ஆதரிக்கும்படி செய்ய உங்களால் முடியவில்லையாயின், ஸ்ரீ ஜின்னு அதை நன்கு அறிந்து கொள்வார்.

# 317

# பிரசார யாத்திரை அல்ல

புது டில்லி,
*13-6-1947*

அன்புள்ள நண்பருக்கு,

*12*-ஆம் தேதி நீங்கள் எழுதிய இரு கடிதங்களும் நேற்றிரவு கிடைத்தன. அதற்காக எனது நன்றி. நான் காயிதே ஆஜம் ஜின்னுவுக்கு ஒரு கடிதம் அனுப்பியிருக்கிறேன். அதன் பிரதி யொன்று இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. எனது யோசனையை அங்கீகரிப்பதற்கு காயிதே ஆஜம் விதித்துள்ள நிபந்தனை அபாயகரமானது.

"பொதுஜன வாக்கு எடுப்பு சம்பந்தமாக நீங்கள் நடவடிக்கை எடுக்குமுன், எல்லைப்புற மாகாணத்துக்குச் செல்லும் படியும், அங்கே பட்ஷா கான் உள்பட மந்திரிகளையும் செந்தொண்டர்களையும் அன்புடன் கண்டு பேசும்படியும் நீங்கள் காயிதே ஆஜம் ஜின்னுவை அழைக்க வேண்டும்" என்று நான் தெளிவாகக் கூறியிருந்தேன். "அவர் அம்மாகாணத்துக்குச் செல்லுமுன், அவர் கூறுவதற்கு எல்லோரும் மரியாதையுடன் செவி கொடுப்பார்கள் என்று அவருக்கு உறுதி அளிக்கப்படவேண்டும்" என்றும் நான் கூறினேன்.

அவர் எல்லைப் புறத்துக்கு விஜயம் செய்வதாயின், அது மந்திரிகளுக்கும், பட்ஷா கானுக்கும், செந்தொண்டர்களுக்கும் திருப்தி ஏற்படும்படி செய்து அவர்களுடைய மனத்தை மாற்றுவதற்காகவே யாகும். அது எவ்விதத்திலும் ஒரு பிரசார யாத்திரையாக இருக்கக் கூடாது.

நீங்களும் உங்கள் மனைவியாரும் வாரக் கடைசியை குளிர்ச்சியான சிம்லாவில் அமைதியாகக் கழித்திருப்பீர்களென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 318

# ஸ்ரீ ஜின்னாவுக்கு எழுதிய கடிதம்

(தாம் ஸ்ரீ ஜின்னாவுக்கு ஒரு கடிதம் எழுதியிருப்பதாகவும், அதன் பிரதியொன்றை வைஸ்ராய் மவுண்ட்பாட்டன் பார்வைக்கு அனுப்பியிருப்பதாகவும் 317–ஆம் கடிதத்தில் காந்திஜி குறிப்பிட்டுள்ளார். ஸ்ரீ ஜின்னாவுக்கு காந்திஜி எழுதிய கடிதம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது :)

புது டில்லி,
13-6-1947

அன்புள்ள காயிதே ஆஜம்,

எல்லைப்புற மாகாணத்திற்கு நீங்கள் சென்று பாகிஸ்தானைப் பற்றி அங்குள்ள தலைவர்களுக்கும் மக்களுக்கும் விளக்க வேண்டும் என்று நான் யோசனை கூறியிருந்தேன். எல்லைப்புற மாகாணத்தில் தலையிடுவதில்லை என்று காங்கிரசிடமிருந்து நான் உறுதி மொழி வாங்கினால், நீங்கள் அந்த யோசனையை மகிழ்ச்சியுடன் அங்கீகரிப்பீர்கள் என்று மே. த. வைஸ்ராய் எனக்கு எழுதியிருக்கிறார்.

தலையிடுவதில்லை என்று காங்கிரசிடமிருந்து உறுதி மொழி வாங்கவேண்டுமென நீங்கள் கூறுவதன் அர்த்தம் என்ன என்பது எனக்குத் தெரியவில்லை.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 319

# ஸ்ரீ ஜின்னாவின் பதில்

புது டில்லி,
13-6-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உங்களுடைய 13-ஆம் தேதிக் கடிதம் எனக்குக் கிடைத்தது. எல்லைப்புற மக்கள் விஷயத்தில் காங்கிரஸ் எவ்விதத்திலும் தலையிடுவதில்லை என்று உறுதிமொழி கொடுக்க வேண்டுமென நான் கூறியதன் அர்த்தம் என்ன என்பது முற்றிலும் தெளிவாக இருக்கிறது என்றே நான் நினைத்தேன்.

தங்கள் உண்மையுள்ள,
எம். ஏ. ஜின்னா

## 320

# காந்திஜியின் மறுப்பு

*புது டில்லி,*
*14-6-1947*

*அன்புள்ள காயிதே ஆஜம்,*

*நீங்கள் 13ஆம் தேதி எழுதிய கடிதம் நான் ஒரு கூட்டத்தில் இருந்தபோது எனக்குக் கிடைத்தது.*

*நீங்கள் கூறியதன் அர்த்தத்தை மே. த. வைஸ்ராய் தெளிவாகப் புரிந்துகொள்ளவில்லை என்றே நம்பியிருந்தேன். ஆனால் அவ்விதம் நான் நம்பியது தவறு என்பது இப்போது தெரிகிறது. ஹர-கிரி* செய்துகொள்ளும்படி நான் காங்கிரசைக் கேட்க முடியாது.*

*தங்கள் உண்மையுள்ள,*
**மோ. க. காந்தி**

## 321

# எல்லைப் புறத்தில் பொதுஜன வாக்கு

*புது டில்லி,*
*28/29-6-1947*

*மே. த. வைஸ்ராய்,*
*புது டில்லி.*

*அன்புள்ள நண்பருக்கு,*

*மற்றொரு கடிதம் எழுதி உங்களுக்கு நான் தொந்தரவு கொடுக்க வேண்டியவனாக இருக்கிறேன். இந்தத் தடவை, எல்லைப் புறத்தில் பொதுஜன வாக்கு எடுப்பைப் பற்றியே எழுதுகிறேன்.*

*நான் உங்களுடனும், பட்ஷா கான், காயிதே ஆஜம் ஜின்னாவுடனும் விவாதித்த திட்டத்தை பட்ஷா கான் நிறைவேற்ற முற்பட்டிருப்பதாக எனக்கு எழுதியுள்ளார். சுதந்திர பட்டாணிஸ்*

---

* 'ஹர-கிரி' என்ற தற்கொலை முறை முன்பு ஜப்பானில் வழக்கத்தில் இருந்து வந்தது. அதாவது கத்தியால் வயிற்றைக் கிழித்துக்கொண்டு தற்கொலை செய்துகொள்வதே அம் முறையாகும். குற்றவாளிகளையும் அவ்விதம் தற்கொலை செய்துகொள்ளும்படி நிர்ப்பந்தப்படுத்துவது உண்டு. சென்ற மகாயுத்தத்தில் ஜப்பான் தோல்வியுற்ற போது, பிரதம தளபதி முதல் ஆயிரக்கணக்கான ஜப்பானிய அதிகாரிகளும் மக்[illegible] நாடு தோல்வி அடைந்ததைச் சகியாமல் 'ஹர-கிரி' அதாவது தற்[illegible] கொண்டு மாண்டனர். தற்கொலை செய்துகொள்ளும்படி காங்கிர[illegible] முடியாது என்றே காந்திஜி மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிட்டுள்ளா[illegible]

தானே ஏற்படுத்தி அதற்கென்று ஓர் அரசியல் திட்டத்தைத் தயாரிப்பதும், பாகிஸ்தான், இந்தியா அரசியல் திட்டங்கள் வெளியானதும் அவ்விரண்டு நாடுகளில் எதனுடன் சேர்ந்து கொள்வது என்பதைத் தீர்மானிப்பதுமே அந்தத் திட்டமாகும். ஆனால் இந்த முயற்சியில் அவர் வெற்றிபெற முடியவில்லை. எனவே, பட்ஷா கானைப் பின்பற்றுவோரின் தலையீடு எதுவுமின்றி பொது ஜன வாக்கு எடுப்பு நடைபெறும். அவர்கள் எந்தச் சார் பாகவும் வோட்டுக் கொடுக்கமாட்டார்கள். இந் நிலையில், எல்லைப்புற மாகாணம் பாகிஸ்தானுக்குப் போய்விடும் என்பதை அவர் பூரணமாக உணர்ந்திருக்கிறார்.

ஓர் உண்மையையொட்டி நீங்கள் கவனம் செலுத்த வேண்டும் என்று அவர் விரும்புகிறார். அதாவது பஞ்சாப் முஸ்லிம் ஆடவர்களும் பெண்களும் யாதொரு தங்குதடையுமின்றி எல்லைப்புற மாகாணத்துக்கு அனுப்பப்பட்டு வருகிறார்கள். பொதுஜன வாக்கு எடுப்பைப் பாதிப்பதற்காகவே அவர்கள் அனுப்பப்பட்டுள்ளனர். எல்லைப்புற மாகாணத்தைச் சேராத பிரபல முஸ்லிம்களையும் அதே நோக்கத்துடன் அம்மாகாணத் துக்கு அனுப்பிவருகிறார்கள். இதன் விளைவாக ரத்தக் களரியும், இன்னும் மோசமான சம்பவங்களும் ஏற்படும்.

அவருக்குத் தெரிந்தவரையில், பல ஆயிரக் கணக்கான முஸ்லிம் அல்லாத அகதிகளுக்கு வோட்டுக் கொடுப்பதற்குச் சந்தர்ப்பமே இல்லை என்றும் அவர் கூறுகிறார். அவர்கள் வோட்டுக் கொடுக்கத் துணிந்தால், மோசமான கஷ்ட நஷ்டங் களுக்கு உட்பட வேண்டியிருக்குமென்று அவர்கள் பயமுறுத்தப் பட்டுவருகிறார்கள்.

பட்டாணியர்கள் வோட்டுக் கொடுக்காவிடில், பொதுஜன வாக்கு எடுப்பு விதிகளை அவர்கள் மீறியவர்களாவர் என்று காயிதே ஆஜம் ஜின்னா வாதித்திருப்பதை இன்றைய பத்திரிகை களில் நான் பார்த்தேன். அந்த வாதத்திற்கு ஆதாரம் இருப்ப தாக எனக்குத் தெரியவில்லை

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 322

## காஷ்மீர் மகாராஜாவுக்குக் கடிதம்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *30-6-1947*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

எல்லைப் புற மாகாணத்தைப் பற்றி 29உ தாங்கள் எழுதிய கடிதத்திற்காக மிக்க நன்றி. பட்ஷா கானின் சீடர்களால்

யாதொரு தலையீடுமின்றி பொதுஜன வாக்கு எடுப்பு நடைபெறும் என்பதைக் கேட்க நான் மகிழ்ச்சி அடைகிறேன். உங்களுடைய கடிதத்தின் பிரதி ஒன்றை கவர்னருக்கு அனுப்பிக்கொண்டிருக்கிறேன். பொதுஜன வாக்கு எடுப்பைப் பாதிப்பதற்காக பஞ்சாப் முஸ்லிம்கள் எல்லைப்புற மாகாணத்துக்கு அனுப்பப்பட்டு வருவதைப் பற்றியும், வோட்டுக் கொடுக்க முஸ்லிம் அல்லாத அகதிகளுக்கு சந்தர்ப்பம் அளிக்கப்படாததைப் பற்றியும் நீங்கள் கூறிய விஷயங்களையொட்டி அவர் அவசியமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளலாம்.

காஷ்மீர் மகாராஜவுக்கு நான் எழுதிய கடிதத்தின் பிரதியை ரெசிடெண்டுக்கும், உங்களுக்கும் அனுப்பியுள்ளேன். என்னுடைய கடிதத்திற்கு விரைவில் பதில் எழுதும்படி மகாராஜாவைக் கேட்குமாறு ரெசிடெண்டுக்கு தந்தியும் அனுப்பியிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

## 323

# பலாத்காரத்தைத் தவிர்க்க ஆர்வம்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 4-7-1947

அன்பார்ந்த ஸ்ரீ காந்தி,

நீங்கள் ஜூன் 28/29உ எழுதிய கடிதத்தில் கான் அப்துல் கபார் கானின் சீடர்களுடைய தலையீடு எதுவுமின்றி பொதுஜன வாக்கு எடுப்பு நடைபெறும் என்று கூறினீர்கள். ஆனால், வோட்டுக் கொடுக்காமல் இருக்கும்படி செந்தொண்டர்கள் மக்களைத் தூண்டிவருவதாக எல்லைப்புற மாகாணத்திலிருந்து எனக்குத் தகவல் கிடைத்திருக்கிறது.

அத்தகைய நடவடிக்கை எதுவும் பலாத்காரத்தில் வந்து முடியும் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள் என்று நினைக்கிறேன். அத்தகைய பலாத்காரத்தைத் தவிர்க்கவே நீங்களும் நானும் மிகவும் ஆர்வமுள்ளவர்களாக இருந்து வருகிறோம். அச்செய்திகள் உண்மையாயின், உங்களுடைய கடிதத்தில் குறிப்பிட்டுள்ள கொள்கையை அனுசரித்து, அதை நிறைவேற்றும்படி நீங்கள் கான் அப்துல் கபார்கானிடம் அன்புடன் கூறுங்கள்.

தங்கள் அன்புள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

# 324

# ஆர்ப்பாட்டம் கூடாது

பங்கி காலனி,
புது டில்லி, 5-7-1947

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

உங்கள் கடிதத்திற்காக நன்றி. மாலைப் பிரார்த்தனைக்குப் பிறகு அது என் கைக்குக் கிடைத்தது.

பட்ஷா கானும் அவரது தொண்டர்களும் கிளர்ச்சி செய்து வருகிறார்கள் என்பதில் ஐயமில்லை. வோட்டுக் கொடுப்பதில் பங்கு எடுத்துக்கொள்வது தவறு என்று அவர்கள் வாக்காளர்களுக்குக் கூறிவருகிறார்கள். ஆனால், வாக்கு எடுக்கும் நாட்களில் யாதொரு ஆர்ப்பாட்டமும் இருக்கக்கூடாது. வாக்கு எடுக்கும் போது அவர்கள் வாக்காளர்களை அணுகவும் கூடாது. நீங்கள் கூறுவது இதுதான் எனில், மாலைப் பிரார்த்தனையின் போது அவ்விதம் கூற நான் மகிழ்ச்சியுடையவனாக இருப்பேன். பட்ஷா கானுக்கு விரைவாகத் தகவல் அனுப்புவதற்கான யோசனை ஏதாவது நீங்கள் கூறினால், அவ்விதமே அனுப்ப நான் தயாராக இருக்கிறேன்.

நீங்கள் கூறவேண்டியது இன்னும் ஏதாவது இருந்தால், தயவு செய்து எனக்கு அறிவியுங்கள்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி.

# 325

# வைஸ்ராயின் கோரிக்கை

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 5-7-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஜூலை 5௳ நீங்கள் எழுதிய கடிதத்திற்காகவும், எல்லைப்புற மாகாணத்தில் ஆர்ப்பாட்டங்களைக் கண்டிப்பதாகவும், வாக்கு எடுக்கும் நாட்களில் வாக்காளர்களை அணுகாமல் தடுப்பதாகவும் உறுதி கூறியதற்காகவும் மிகவும் நன்றியுள்ளவனாக இருக்கிறேன்.

நீங்கள் மேற்கொண்டும் சிறிது தூரம் சென்று, வாக்கு எடுப்பதற்கு முன் நேரடியாகவோ, மறைமுகமாகவோ கலவரங்களில் வந்து முடியக் கூடிய எத்தகைய கிளர்ச்சியையும் கண்டித்தீர்களானல் நான் இயல்பாகவே நன்றியுடையவனுக இருப்பேன்.

இவ்விஷயமாக எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சீக்கிரத்தில் கான் அப்துல் கபார் கானுக்கு நீங்கள் புத்திமதி கூறவேண்டியது முக்கியமாகும் என்று நினைக்கிறேன். அவருக்கு நீங்கள் ஒரு கடிதம் எழுத முற்படுவீர்களாயின், விமானியின் மூலம் அதை பெஷாவருக்கு அனுப்பி, அதை அப்துல் கபார் கானிடம் கொடுக்கும் படி கவர்னரைக் கேட்க ஏற்பாடு செய்கிறேன்.

உங்களுடைய உதவிக்கு நான் மிகவும் நன்றியுள்ளவனுக இருக்கிறேன்.

நேற்று வெள்ளிக்கிழமை காஷ்மீரிலுள்ள ரெஸிடெண்டிடமிருந்து எனக்கு ஒரு தந்தி வந்தது. அவருக்கும் மகாராஜாவுக்கும் நான் அனுப்பிய கடிதங்கள் அப்போதுதான் கிடைத்தன என்றும், பேட்டி காண அனுமதி கிடைத்தவுடன் தாம் மகாராஜாவைப் பார்க்கப் போவதாகவும் அவர் தந்தியில் குறிப்பிட்டுள்ளார்.

தங்கள் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

## 326

# பட்ஷா கானுக்கு செய்தி

புது டில்லி,
5—7—1947.

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

நான் பிரார்த்தனைப் பிரசங்கத்தை முடித்துவிட்டு, உலாவுவதற்காக வெளியே சென்றபோது, உங்களுடைய அன்பார்ந்த கடிதம் கிடைத்தது. அதிர்ஷ்டவசமாக இன்று மத்தியானம் ஒரு பட்டாணியர் என்னைப் பார்க்க வந்தார். அவர் ஒரு குதாய் கித்மத்கார் என்பதை நான் அறிவேன். அவர் பெஷாவருக்குச் செல்லவிருந்ததால், அவர் மூலம் நான் பட்ஷா கானுக்குச் செய்தி அனுப்பினேன். இத்துடன் இணைக்கப்பட்டுள்ள கடிதத்தில் அச் செய்தி அடங்கியிருக்கிறது. நீங்கள் அக் கடிதத்தை வாசிக்கலாம். நீங்கள் கூறிய புதிய யோசனை அந்தக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது என நீங்கள் நினைத்தால், நீங்கள் கூறியதைப்போல் ஒரு விசேஷ தூதரிடம் அதை அனுப்பலாம்.

பட்ஷா கானையும், அவரைப் பின்பற்றுவோரையும் பொறுத்த மட்டில், யாதொரு கலவரமும் இராதென நம்பிக்கொண்டிருக்கிறேன். பட்டாணியரான செந்தொண்டரின் மூலம் நான் அனுப்பியுள்ள செய்தியில், பட்ஷா கானுக்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டிருப்பதைக் காட்டிலும் அதிக விவரங்களைக் கூறியிருக்கிறேன்.

காஷ்மீரிலுள்ள ரெசிடெண்டிடமிருந்து உங்களுக்கு வந்த தந்தியின் சாரத்தை எனக்கு அறிவித்ததற்காக நன்றியுள்ளவனாக இருக்கிறேன்.

பங்கி காலனிக்கு விஜயம் செய்ததால் லேடி மவுண்ட்பாட்டனுக்கு யாதொரு அசௌகரியமும் ஏற்பட்டுவிடவில்லை என்றே நம்புகிறேன்.

இத்துடன் இணைக்கப்பட்டுள்ள கடிதம் உங்களுடைய சம்மதத்தைப் பெறுவிடில், நீங்கள் அதை அனுப்ப வேண்டிய அவசியமில்லை.

தங்கள் அன்புள்ள,
**மோ. க. காந்தி**

மேற்கண்ட கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்த கடிதத்தின் விவரம் வருமாறு:

பங்கி காலனி,
புது டில்லி, 5-7-1947

அன்புள்ள பட்ஷா,

குதாய் கித்மத்கார் ஆலம் கான் இன்று 12 மணிக்கு முன் என்னை வந்து பார்த்தார். இன்று அவர் பிஷாவருக்குப் புறப்பட்டுச் செல்லுவதாகக் கூறினார். அவர் மூலம் நான் உங்களுக்கு யாதொரு கடிதமும் அனுப்பவில்லை. அவரிடம் நான் பின் வருமாறு சொன்னேன்: "லீக் முஸ்லிம்களுக்கு எதிராக யாதொரு ஆர்ப்பாட்டமும் செய்ய வேண்டாம். கொந்தளிப்பும் தப்பெண்ணமும் நிலவிவரும் தற்போதைய நிலையில், குதாய் கித்மத்கார்கள் யாருக்கும் வோட்டுக் கொடுக்காமல் இருந்துவிடுவதே போதுமானது. உள்நாட்டு விவகாரங்கள் சம்பந்தப்பட்டவரையில், பாகிஸ்தானின் அல்லது இந்தியாவின் தலையீடின்றி பூரண சுயேச்சை கோர அவர்களுக்கு உரிமை உண்டு. இந்தியா, பாகிஸ்தானின் அரசியல் திட்டங்கள் பிரகடனம் செய்யப்படும் போது, எல்லைப் புற மாகாணம் சுயேச்சையான அதன் சொந்த அரசியல் திட்டத்தை உருவாக்கும்போது, இந்தியாவில் சேருவதா அல்லது பாகிஸ்தானில் சேருவதா என்பது பற்றி அவர்கள் ஒரு முடிவு செய்து கொள்ளலாம். எல்லாவற்றிற்கும் மேலாக, முஸ்லிம் லீகுடன் கைகலப்பு ஏற்படக் கூடிய ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் தவிர்க்க வேண்டும்"

பட்டாணியரின் உண்மையான தைரியத்திற்கு இப்போது சோதனை ஏற்பட்டிருக்கிறது. அந்த தைரியத்தை அவர்கள் நிரூபிக்க வேண்டும். எதிராளிகள் கொடுக்கும் அடிகளை மலர்ந்த முகத்துடன் ஏற்க வேண்டும். யாதொரு எதிர்ப்பும் காட்டாமல் எதிராளிகளால் மரணம் நேருவதைக் கூட அவ்விதம் ஏற்க வேண்டும். தேர்தலை பகிஷ்காரம் செய்வதால், பாகிஸ்தானிகளுக்கு சட்ட பூர்வமான வெற்றி கிடைக்கும். ஆனால், உங்கள் பக்கத்திலிருந்து பலாத்காரம் ஏற்படுமோ என்ற அச்சம் சிறிதுமின்றி, பட்டாணியர்களில் பெரும்பாலோர் பொதுஜன வாக்கு எடுப்பில் கலந்து கொள்ளாது கண்ணியமான முறையில் விலகியிருப்பார்களாயின், அது பாகிஸ்தானிகளுக்கு தார்மிக ரீதியாக ஒரு தோல்வியேயாகும். பரபரப்போ, ஊர்வலமோ, அதிகாரிகளின் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படியாமையோ எதுவும் இருக்கக் கூடாது.

உங்களுடைய கடிதம் கிடைத்ததும், நான் உடனடியாக செயலில் ஈடுபட்டேன். நான் வைஸ்ராய்க்கு நீண்ட கடிதமொன்று எழுதினேன். அதன்மீது அவர் நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டார். பிரார்த்தனைக்குப் பிறகு நான் செய்த பிரசங்கம் ஒன்றில் எல்லைப் புற மாகாணப் பிரச்னையைப்பற்றி நான் என்ன சொன்னேன் என்பதையும் நீங்கள் பார்த்திருக்க வேண்டும். அந்தப் பிரசங்கத்தின் பிரதி ஒன்றையும், வைஸ்ராய்க்கு நான் எழுதிய கடிதத்தின் பிரதி ஒன்றையும் இத்துடன் அனுப்பியுள்ளேன். குதாய் கித்மத்கார்களால் கலவரங்கள் ஏற்படலாம் என்ற பீதி இருப்பதாகக் கூறப்படுகிறது என்று வைஸ்ராய்க்குப் புகார் வந்திருக்கிறது. அதற்காகவும் இந்தக் கடிதம் எழுதுகிறேன்.

அதிகமான வேலைத் தொந்தரவு உங்களுடைய ஆரோக்கியத்துக்குக் குந்தகம் விளைவிக்கவில்லை என்றே நம்புகிறேன்.

## 327

# பிஷாவருக்கு விசேஷ தூதர்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, 7-7-1947

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஜூலை 5௳ தாங்கள் எழுதியுள்ள கடிதத்திற்காகவும், அப்துல் கபார் கானுக்கு எழுதியுள்ள கடிதத்தை அத்துடன் இணைத்திருந்ததற்காகவும் நன்றி. நேற்று (ஞாயிற்றுக்கிழமை) பிஷாவருக்கு விமானம் செல்லாததால், உங்களுடைய கடிதத்தில் கண்ட விவரங்களைத் தந்திமூலம் கவர்னருக்கு அனுப்பி கான் அப்துல் கபார் கானுக்குத் தெரிவிக்கும்படி கேட்டுள்ளேன்.

உங்களுடைய அசல் கடிதம் நேற்று மாலே எல்லேப்புற மெயிலில் ஒரு விசேஷ தூதரின் மூலம் அனுப்பப்பட்டது.

உங்களுடைய உதவிக்காக மிக்க நன்றி.

என் மனைவி பங்கி காலனிக்கு விஜயம் செய்தது அவளுக்கு மிகுந்த மகிழ்ச்சியளித்தது. அதைப் பற்றிய விவரங்களை அவள் மிக்க உற்சாகத்துடன் என்னிடம் கூறினுள்.

தங்கள் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

# 328

# முஸ்லிம் லீகின் மிரட்டல்கள்

பங்கி காலனி,
புது டில்லி, *11-7-1947*

எனது அன்பார்ந்த லேடி மவுண்ட்பாட்டன்,

நேற்றிரவு 9-15 மணிக்கு இங்கிருந்து நான் திரும்பிச் சென்ற போது, உங்களுடைய கடிதம் என் மேஜையின் மீது இருந்தது.

கடிதத்திலுள்ள விவரங்களை நான் காந்திஜியிடமும், பண்டித நேருவிடமும் கூறினேன்.

ஒவ்வொரு நபருக்கும், ஒவ்வொரு கோஷ்டிக்கும் சொந்த அபிப்பிராயங்களைத் தெரிவிக்கவும், வளர்ச்சிபெறவும் பூரணமான சுதந்திரம் இருக்கவேண்டும் என்பதே காங்கிரசின் கொள்கையாகும். இதற்கு மாருன கொள்கையை, காங்கிரஸ் எக்காலத்திலும் மேற்கொண்டதில்லே. எனினும் ஒழுக்கம், சட்டம், சமாதானம் ஆகியவற்றிற்கு முரணின்றி அத்தகைய சுதந்திரம் இருக்கவேண்டும். சிறுபான்மையோர் பயப்பட வேண்டிய அவசியமே இல்லே. அரசியல் நிர்ணய சபையில் காங்கிரஸ் தலைவர்களும், குறிப்பாக பண்டித நேருவும் நிகழ்த்தியுள்ள பிரசங்கங்களிலிருந்து இதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். அந்தச் சபை இதுவரையில் நிறைவேற்றியுள்ள சட்ட பூர்வமான ஜீவாதார உரிமைகளில் சிலவற்றை நீங்கள் வாசித்தாலும் அதை நீங்கள் அறியலாம். பிரார்த்தனைக்குப் பிறகு காந்திஜி நிகழ்த்தும் பிரசங்கங்களிலும், சிறுபான்மையோர் எல்லோரையும் நேர்மையுடனும் நீதியுடனும் நடத்தவேண்டும் என்று எப்போதும் கேட்டு வருகிருர். அவர் நேற்று மாலே செய்த பிரசங்கம், இன்றைய பத்திரிகைகளில் வெளியாகியிருக்கிறது. அதை நீங்கள் வாசித்திருக்க வேண்டும். அவர் என்ன கூறவேண்டுமென நீங்கள் விரும்புகிறீர்களோ, அதையே அவர் கூறியிருக்கிருர் என்பதை மேற்கண்ட பிரசங்கம் ருசுப்பிக்கின்றது.

ஆனல், முஸ்லிம் லீகர்கள் தேசீய முஸ்லிம்களுக்கு எதிராக விடுத்துவரும் மிரட்டல்களைக் குறித்து நான் மிகவும் வருந்துகிறேன். இவ்விஷயமாக ஸ்ரீமதி ஹைதர் உங்களிடம் கூறியுள்ளார். உதாரணமாக, எல்லைப்புறத்தில் "முஸ்லிம் துரோகிகளின்'' கஷ்டங்களைக் குறித்து அப்துல் கயூம் சாகிபும் குறிப்பிட்டிருப்பதாகத் தெரிகிறது. இவற்றையெல்லாம் ஸ்ரீ ஜின்னவுக்குத் தெரிவிக்க வேண்டும். அத்தகைய பேச்சுகளை பகிரங்கமாகக் கண்டிக்கும்படி அவரைக் கேட்டுக் கொள்ளவேண்டும். தங்கள் மனத்திற்குள் இந்திய யூனியனிலேயே இருக்க விரும்பும் முஸ்லிம் அதிகாரிகளை. அவர்கள் பாகிஸ்தானுக்குத்தான் போகவேண்டும் என்று லீகர்கள் வற்புறுத்துவதாக நான் கேள்விப்படுகிறேன். அவ்விதம் போகாதவர்கள், முஸ்லிம்கள் என்று கருதப்படமாட்டார்கள் என்று கூறுகிருர்களாம். காங்கிரஸ் எக்காலத்திலும் அத்தகைய குற்றத்திற்கு ஆளாகாது.

அன்புடன்,

தங்கள் பிரியமுள்ள,
அமிருத கௌரி

# 329

## காஷ்மீர் மகாராஜாவுக்குக் கடிதம்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *28-6-1947*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நேற்று உங்களுடைய முன்னிலையில் நான் வாயால் கூறி எழுதிக்கொள்ளும்படி செய்த கடிதத்தின் பிரதி ஒன்றை இத்துடன் இணைத்திருக்கிறேன். இன்று அதை நான் மகாராஜாவுக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறேன்.

நாம் சந்தித்துப் பேசியது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தது. உங்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்பதும், பலன் தரத்தக்க உங்களுடைய யோசனையை ஏற்றுக்கொள்வதும் எப்போதுமே புதிய பலத்தைக் கொடுக்கிறது.

தங்களுடைய உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

வைஸ்ராய் லார்டு மவுண்ட்பாட்டன் காஷ்மீர் மகாராஜாவுக்கு எழுதிய கடிதமே 329-ஆம் கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்தது. அக்கடிதத்தின் முழு விவரம் பின்வருமாறு :

*26-6-1947*

மகாத்மா காந்தி, பண்டித நேரு இருவருடனும் நான் கலந்து பேசினேன் என்பதை உங்களுக்குக் கூறவே இக்கடிதம் எழுது கிறேன். காஷ்மீருக்கு விஜயம் செய்ய இவ்விருவருமே இன்னும் ஆர்வமுடையவர்களாக இருக்கிறார்கள். ஒரு பெரிய காங்கிரஸ் தலைவர் காஷ்மீருக்கு விஜயம் செய்து பிரசங்கங்கள் செய்தால், லீகர்களும் ஸ்ரீ ஜின்னாவைப் போன்ற தலைவர்களை காஷ்மீருக்கு அனுப்பி போட்டிப் பிரசாரம் செய்யும்படியான நிலைமையை அவை உண்டாக்கிவிடும் என்று அவர்களுக்கு நான் சுட்டிக்காட்டினேன். இதன் காரணமாக, தேர்தல் கால சூழ்நிலை ஏற்பட்டுவிடும். அத்தகைய சூழ்நிலை ஏற்படாமல் தவிர்ப்பதையே நீங்கள் விரும்பு கிறீர்கள். அது சரிதான். ஏனெனில், நீங்கள் சுட்டிக்காட்டியது போல் இதுவரையில் ரத்தக்களரி எதுவும் ஏற்படவில்லை; ஆனால் ஆவேசமான அரசியல் பிரசங்கங்கள்தான் இப்போது ரத்தக் களரி உண்டாகும்படி செய்துவிடும். தமக்குப் பதிலாக ஸ்ரீ காந்தி காஷ்மீருக்கு விஜயம் செய்தால், தாம் போகும் உத்தே சத்தைக் கைவிட்டுவிட பண்டித நேரு தயாராக இருக்கிறார் என்று ஸ்ரீ காந்தி என்னிடம் கூறுகிறார்.

எனவே, ஸ்ரீ காந்தியின் வேண்டுகோளுக்கு இணங்கவே, இக் கடிதத்தை நான் எழுதுகிறேன். (ஸ்ரீ காந்தியின் முன்னிலையி லேயே இக்கடிதத்தை நான் வாயால் கூறி எழுதிக் கொள்ளும்படி செய்கிறேன்) சமீபத்தில் ஸ்ரீ காந்தி அங்கே விஜயம் செய்வதற்கு நீங்கள் சம்மதிக்கவேண்டும் என்பதும், அவர் அங்கே சாத்திய மானவரையில் சௌகரியமாக இருக்கும்படி செய்ய வேண்டும் என்பதுமே இக்கடிதம் எழுதுவதன் நோக்கமாகும்.

தாம் அங்கே அரசியல் பிரசங்கங்களோ அல்லது எவ்வித மான பிரசாரமோ செய்வதில்லை என்று ஸ்ரீ காந்தி எனக்கு கண் டிப்பாக உறுதிமொழி கொடுத்துள்ளார். ஸ்ரீமதி அப்துல்லாவைக் காண வேண்டும் என்பதே அவர் அங்கே வருவதன் நோக்க மாகும். நீங்கள் அனுமதி அளித்தால், (நீங்கள் அனுமதி அளித் தால் மாத்திரமே) அவர் ஷேக் அப்துல்லாவையும் பார்க்க விரும்புகிறார். பொதுவாக அவர் காஷ்மீர் மக்களைச் சந்திக்க விரும்புகிறார். எனினும் அவர்கள் அடங்கிய கூட்டத்தில் பேசவோ அல்லது கூட்டங்கள் கூட்டவோ அவருக்கு விருப்ப மில்லை.

காலம் வீணாகாமல் இருப்பதற்காக நீங்களோ அல்லது உங்க ளுடைய பிரதம மந்திரியோ ஸ்ரீ காந்திக்கு நேராக எழுதிக் கொள்ளலாமென நான் யோசனை கூறுகிறேன்.

இந்தக் கடிதத்தின் பிரதி ஒன்றை நான் ஸ்ரீ காந்திக்கு அனுப்பியுள்ளேன்.

## 330

புது டில்லி,
*27-6-1947*

**அவசரம்**

*அன்புள்ள நண்பருக்கு,*

*இன்று மத்தியானம் பண்டிட்ஜி என்னுடன் இருந்தார். காஷ்மீரைப் பற்றி நமக்குள் நடந்த சம்பாஷணையை அவரிடம் கூறினேன். உடனே அவர், நீங்கள் மிகுந்த அன்புடன் மகாராஜா சாகிபுக்கு அனுப்பிய கடிதத்தைத் தந்தி மூலம் அனுப்பினீர்களா அல்லது தபாலில் அனுப்பினீர்களா என்று கேட்டார். அவருக்கு நான் திருப்திகரமான பதில் அளிக்க முடியவில்லை. ஒருவேளை அதைத் தபால் மூலமே அனுப்பியிருக்கலாமென நான் அவருக்குக் கூறினேன். தபாலில் அனுப்பியிருந்தால், அது போய்ச் சேர சில நாட்கள் ஆகும் என்றும், அதற்குப் பதில் வரவும் தாமதம் ஏற்படலாம் என்றும் அவர் கூறினார். இவ்விஷயத்தில் சிறிதும் தாமதம் ஏற்படக் கூடாது என்பதில் அவருக்கு உள்ள கவலை எனக்கும் இருக்கிறது. அவருக்கு அது சொந்த கௌரவத்தைப் பொறுத்த ஒரு விஷயமாகும். எனது திறமைக்கு இயன்றவரையில் அவரது ஸ்தானத்தில் அங்கே நான் செல்லும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறேன். எனவே, இவ்விஷயத்தில் அவருக்குக் கவலை எதுவும் எற்படாமல் தவிர்க்க வேண்டும் என்பதே எனது விருப்பம். நான் உங்களுடைய உதவியை நாடுகிறேன்.*

*தங்கள் உண்மையுள்ள,*
**மோ. க. காந்தி**

## 331

# மகாராஜாவுக்குத் தகவல்

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி, 28-6-1947*

*அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

*உங்களுடைய ஜூன் 27-ஆம் தேதிக் கடிதத்திற்காக நன்றி. நேற்று நான் உங்களுக்கு எழுதிய கடிதம் இதற்குள் உங்களுக்குக் கிடைத்திருக்குமென நம்புகிறேன். மகாராஜாவுக்கு நான் எழுதிய கடிதம் தபாலில் அனுப்பப்பட்டதென நீங்கள் ஊகித்தது சரிதான். ஏனெனில், கடிதம் என்ற முறையிலேயே நான் வாயால் கூற அது எழுதிக் கொள்ளப்பட்டது என்பது உங்களுக்கு நினைவிருக்கலாம். ஆனால், இப்போது நான் ரெஸிடெண்டுக்கு ஒரு*

தந்தி கொடுத்திருக்கிறேன். என்னுடைய கடிதத்தையும் அதி லுள்ள விவரங்களையும் பற்றி மகாராஜாவுக்குத் தகவல் கொடுக் கும்படி ரெஸிடெண்டை நான் கேட்டிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

## 332

பங்கி காலனி,
புது டில்லி, *11-7-1947*

அன்புள்ள நண்பருக்கு,

காஷ்மீரிலிருந்து எனக்கு இன்னும் யாதொரு செய்தியும் வரவில்லை. நீங்கள் மகாராஜாவுக்கு மீண்டும் நினைவூட்ட முடியுமா? உங்களுக்கு நான் கொடுத்த உறுதி மொழிக்குக் கட்டுப்பட்டிருக்கிறேன். இல்லாவிடில் நான் காஷ்மீருக்குச் செல்ல அனுமதி ஏதுவும் கோர மாட்டேன். சாதாரண ஒரு தனி நபரைப்போல் நான் அங்கு செல்லுவேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 333

## மகாராஜாவின் பதில்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *12-7-1947*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நீங்கள் 11-ஆம் தேதி எழுதிய கடிதத்திற்காக நன்றி. மகாராஜாவினிடமிருந்து பதில் கிடைத்த அதே தினத்தில் உங்க ளுடைய கடிதமும் கிடைத்தது. மகாராஜாவின் கடிதத்தை இத்துடன் இணைத்திருக்கிறேன்.

நான் காஷ்மீரில் இருந்தபோது அவர் என்னிடம் உறுதி யாகக் கூறிய அபிப்பிராயங்களையே இப்போதும் வற்புறுத்தி யிருக்கிறார். அந்த அபிப்பிராயங்களை உங்களுக்கும் நான் அறிவித் தேன். "எவ்வளவு நல்லெண்ணத்துடன் இருந்தாலும், ஒரு மிகச் சிறிய பொறிகூட பயங்கரமான ஒரு பெரும் தீயை மூட்டிவிடும். பின்னர் அதைக் தணிப்பது அசாத்தியமாகிவிடும்" என்று மகாராஜா கூறியிருக்கிறார்.

நான் ஏற்கனவே கூறியதுபோல், முஸ்லிம் லீக் தலைவர் எவரும் காஷ்மீருக்கு வருவதை அவர் பலமாக எதிர்க்கிறார். எனவே, காஷ்மீருக்குச் செல்ல வேண்டாமென்றும், யாரையும் அனுப்பவேண்டாமென்றும் நான் ஸ்ரீ ஜின்னாவைக் கேட்டிருக்கிறேன்.

பாகிஸ்தான், இந்திய யூனியனின் அரசியல் திட்டங்கள் எப்படி இருக்கின்றன என்பதைப் பார்த்தபின், தமது மக்களின் உணர்ச்சிகளைத் தெரிந்துகொண்டு, எதில் சேருவது என்பதைத் தாம் முடிவு செய்யப் போவதாக மகாராஜா எப்போதுமே என்னிடம் கூறி வந்துள்ளார்.

கடிதத்தின் மூலம் விவரமாகவோ, அல்லது நீங்கள் விரும்பினால் ரெசிடெண்டுக்குத் தந்தி மூலமாகவோ, நீங்கள் விரும்பும் பதிலை மகாராஜாவுக்கு அனுப்ப நான் தயாராக இருக்கிறேன்.

நீங்கள் நோவாகாலிக்கு விஜயம் செய்ய உத்தேசித்திருக்கிறீர்கள் என்று அறிகிறேன். நோவாகாலிக்குச் சென்று வந்த பின் நீங்கள் காஷ்மீருக்கு விஜயம் செய்ய விரும்புகிறீர்களா அல்லது அதற்கு முன்பே காஷ்மீருக்குச் செல்ல வேண்டியது அவசரம் என்று நீங்கள் கருதுகிறீர்களா?

தற்போது உங்கள் விருப்பம் போல் செய்யத் தயாராக இருக்கிறேன் என்பதைத் திரும்பவும் கூறுகிறேன். மகாராஜாவுக்கு என்ன பதில் அனுப்புவதென்பது பற்றி நீங்கள் என்னுடன் விவாதிக்க விரும்பலாம் என்று தோன்றுகிறது. இன்றோ அல்லது நாளையோ நாம் சந்தித்துப் பேச நீங்கள் விரும்புகிறீர்களா என்பதை, என் சிப்பந்திகளில் ஒருவரைக் கொண்டு டெலிபோனில் பேசி நிர்ணயிக்க நான் ஏற்பாடு செய்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மவுண்ட்பாட்டன் (பர்மா)**

மேற்கண்ட கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்த மகாராஜாவினுடைய கடிதத்தின் விவரம் பின்வருமாறு:

8–7–1947

ஜூன் 26உ தாங்கள் எழுதிய கடிதம் எனக்குக் கிடைத்தது.

சமீப மாதங்களாக, இந்தியாவுடன் ஒப்பிடும்போது இங்கே அமைதி நிலவி வருகிறது என்பது உண்மையே. இதற்கு முன் ஒருபோதும் இராதவாறு படுகொலைகளும் தீமூட்டும் சம்பவங்களும் நாடெங்கும் தாண்டவமாடி வந்தும்கூட, இங்கே ரத்தக் களரி எதுவும் இல்லை. நான் உங்களிடம் கூறியதுபோல், இந்த நிலைமை, உறுதியுடனும் பாரபட்சமின்றியும் நடந்துகொள்ளும் ஒரு கொள்கையின் பலனேயாகும். இந்தச் சமஸ்தானம் அக்கொள்கையையே தனக்கு வழிகாட்டியாகக் கொண்டு நடந்து

வந்திருக்கிறது. இருந்தாலும், அண்மையிலுள்ள பிரதேசங்களில் சீறிக்கொண்டிருக்கும் பயங்கரமான நிலைமைக்கிடையே நாம் இதுவரை அமைதியை நிலைநிறுத்துவதில் வெற்றிபெற்றுள்ளோம் என்பதற்காக, இனியும், எல்லா சந்தர்ப்பங்களிலும் அமைதியைப் பாதுகாப்பதில் நாம் வெற்றிபெற முடியும் என்று நினைப்பது மடத்தனமாகும். இங்கே நிலைமை உறுதியற்றதாக இருப்பதால், அரசியல் தலைவர்கள் காஷ்மீர் வருவதற்கு இது உற்ற சமயம் அல்லவே அல்ல. எவ்வளவு நல்லெண்ணத்துடன் வந்தாலும், தற்போதைய நிலையில் ஒரு சிறிய பொறி பெரும் தீயை மூட்டி விடும். பின்னர் அதைக் கட்டுப்படுத்துவதும் அசாத்தியமாகி விடும்.

எனவே இந்நிலையில், மகாத்மா காந்தி இந்த ஆண்டில் காஷ்மீருக்கு விஜயம் செய்வதை ரத்து செய்து விடுவதுதான் எல்லா விதத்திலும் விரும்பத்தக்கது என்று நான் கூறுவேன். ஒரு வேளை ஏதோ சொந்தக் காரணங்களை முன்னிட்டு அவர் அவ்விதம் ரத்து செய்ய இயலாவிடில், அக்டோபர் மாத இறுதியில்தான் அவர் இந்த சமஸ்தானத்திற்கு விஜயம் செய்ய வேண்டும்.

அவர் இங்கே அரசியல் பிரசங்கங்கள் எதுவும் செய்வதில்லை என்றும், எவ்விதத்திலும் பிரசாரம் செய்வதில்லை என்றும் உங்களுக்கு உறுதிமொழி கொடுத்திருக்கிறார் என்பதையும் அறிந்துகொண்டேன்.

ஸ்ரீமதி அப்துல்லாவை அவர் பார்ப்பதில் எங்களுக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால், அவர் ஷேக் அப்துல்லாவைப் பார்ப்பது சாத்தியமில்லை என்றே அஞ்சுகிறேன். அவர் ஷேக் அப்துல்லாவைச் சந்திப்பது சிறிதும் விரும்பத்தக்கதல்ல என்பதற்கு அரசியல் காரணங்கள் இருக்கின்றன.

மகாத்மா காந்தி இங்கே விஜயம் செய்யும்போது அவர் எனது விருந்தாளியாக இருக்க விரும்பினால், அது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கும் என்பதை நான் சொல்ல வேண்டிய தேவை இல்லை. எனினும் இந்தியாவில் உள்ள நிலைமையில் திருப்திகரமான மாறுதல் ஏற்படும் வரையில், அவரோ அல்லது வேறு எந்த அரசியல் தலைவரோ காஷ்மீருக்கு விஜயம் செய்ய வேண்டாம் என்றே நான் மீண்டும் தீவிரமாக ஆலோசனை கூறுகிறேன்.

# 334

# நேருஜியின் விருப்பம்

*பங்கி காலனி,*
*புது டில்லி, 16-7-1947*

*மே. த. வைஸ்ராய்,*
*புது டில்லி.*

*அன்புள்ள நண்பருக்கு,*

*நான் பண்டிட்ஜியுடன் காஷ்மீரைப் பற்றி நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தேன். எப்படியிருந்தாலும் நான் காஷ் மீருக்குச் செல்ல வேண்டும் என்பதும், நான் அங்கே சென்ற பிறகு காயிதே ஆஜம் ஜின்னுவோ அல்லது அவரது பிரதிநிதியோ வருவதைக் குறித்து நான் கவலைப்பட வேண்டியதில்லை என் பதும் அவரது உறுதியான அபிப்பிராயமாகும். காஷ்மீருக்கு நான் செல்லுவது இப்போது ஒத்திவைக்கப்படுமாயின், அங்கே யுள்ள பல நண்பர்களும் ஏமாற்றம் அடைவார்கள் என்றும் அவர் எண்ணுகிறார். நானும் அதை ஒப்புக்கொள்ளுகிறேன். நான் ஷேக் அப்துல்லாவைப் பார்க்க அனுமதிக்கப்படாமல் இருக் கலாம் என்பது, காஷ்மீருக்கு எனது விஜயத்தை எவ்விதத்திலும் பாதிக்க வேண்டியதில்லை. நான் அங்கே எவ்விதப் பிரசங்கங் களும் செய்யப் போவதில்லை, பொதுக் கூட்டங்களிலும் பேசப் போவதில்லை. இந்நிலையில் என்னுடைய விஜயம் சமஸ் தானத்திற்கு எத்தகைய தரும சங்கடமான நிலைமையையும் உண்டுபண்ண வேண்டிய அவசியமில்லை என்றும், எனவே சாத் தியமானவரையில் சீக்கிரமாக நான் காஷ்மீருக்குச் செல்ல வேண்டும் என்றும் நீங்கள் மகாராஜாவுக்குத் தந்தி கொடுக்க வேண்டுமென நான் யோசனை கூறுகிறேன்.*

*அவ்விஷயமாக பண்டிட்ஜியின் விருப்பத்தில் குறுக்கிட வேண்டாம் என்பதே உங்களுடைய விருப்பமாகும். அதற்குக் கட்டுப்பட்டே நான் அவ்விதம் யோசனை கூறியிருக்கிறேன். நான் காஷ்மீருக்குச் செல்லுவதை ஏதாவதொரு காரணத்தை முன்னிட்டு நீங்கள் விரும்பவில்லையாயின், நான் அங்கே போகப் போவதில்லை. நான் காஷ்மீருக்குச் சென்றால், ஒரு தனி நபரைப் போலவே செல்லுவேன். எனவே மகாராஜாவின் விருந்தாளியாக இருந்து நான் அவருக்கு எவ்விதத்திலும் சிரமத்தைக் கொடுக்க விரும்பவில்லை. அங்கே நான் தங்கியிருக்க நண்பர்கள் ஏற்பாடு செய்வார்கள்.*

*இறுதியாக நான் ஒன்று கூறவேண்டும். ஏதாவது காரணத் தினல் நான் காஷ்மீருக்குச் செல்லவில்லையாயின், அநேகமாக பண்டிட்ஜி அங்கு சென்று இரண்டு அல்லது மூன்று நாட்கள்*

தங்கியிருக்க விரும்புவார். இருந்தாலும், நான் அங்கே செல்லு வதையே அவர் விரும்புகிறார்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 335

# வைஸ்ராய் வேண்டுகோள்

வைஸ்ராய் மாளிகை,
புது டில்லி, *17-7-1947*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

உங்களுடைய *16*வ கடிதத்திற்காக நன்றி.

நாம் பேசிக்கொண்டிருந்தபோது உங்களிடம் நான் கூறியது போல் உங்களுடைய விருப்பம் எதுவாயினும் அதை நான் முற்றிலும் ஒப்புக்கொள்கிறேன். நீங்கள் காஷ்மீர் விஜயம் செய் வதற்கு என்னால் இயன்றதையெல்லாம் செய்கிறேன். எனவே, நீங்கள் ஒரு தனி நபர் என்ற முறையில் காஷ்மீருக்கு விஜயம் செய்யும் யோசனையை நான் ரெசிடெண்டுக்குத் தந்திமூலம் அறிவித்து, அதை மகாராஜவுக்குத் தெரிவிக்கும்படி கேட்டிருக் கிறேன்.

நான் உங்களைப் பார்த்தபின், அடுத்த வார ஆரம்பத்தில் காஷ்மீர் பிரதம மந்திரி காக்கை மகாராஜா டில்லிக்கு அனுப்பப் போகிறார் என்ற செய்தி எனக்குக் கிடைத்தது. சமஸ்தான இலாகாவுடன் நான் செய்துவரும் ஏற்பாட்டிற்கிணங்க டில்லியில் நடக்கும் விவாதத்தில் கலந்து கொள்வதற்காகவே அவரை மகாராஜா அனுப்புகிறார். எனவே, நீங்கள் காஷ்மீருக்கு விஜயம் செய்யும் தேதியையும் மற்ற விவரங்களையும் முடிவு செய்யுமுன் நீங்களும் பண்டித நேருவும் பண்டித காக்கைச் சந்தித்துப் பேசுவது மரியாதையாகவும், புத்திசாலித்தனமாகவும் இருக்கு மென நான் கருதுகிறேன். ஏனெனில் உங்களைப் போன்ற உலகப் பிரசித்திபெற்ற ஒருவருடைய விஜயத்தை அந்தரங்க மாக வைத்துக்கொள்வது முடியாத காரியம் என்றே அஞ்சு கிறேன். அடுத்த வாரம் இங்கு நான் நடத்த உத்தேசித்திருக்கும் சமரசப் பேச்சுகளையும் அது ஓரளவு பாதிக்கலாம்.

உங்கள் விருப்பப்படி செல்ல உங்களுக்குள்ள சுதந்திரத்தில் தலையிட நான் சிறிதும் விரும்பவில்லை. இன்னும் சில நாட்கள் பொறுத்திருக்க வேண்டுமென்று மாத்திரமே நான் யோசனை கூற விரும்புகிறேன்.

உங்களுடைய மிகவும் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

# 336

# நேருஜியின் யோசனை

பங்கி காலனி,
புது டில்லி, *19-7-1947*

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

நேற்று நீங்கள் எழுதிய கடிதத்தை பண்டித நேருவுக்கு அனுப்பினேன். அவர் உடனே பதில் எழுதியுள்ளார். நீங்கள் கூறியுள்ள ஆலோசனைக்கு இணங்க, பண்டித காக் புதுடில்லிக்கு வரும்வரையில் நான் காஷ்மீருக்குச் செல்லுவதை ஒத்தி வைக்க வேண்டுமென்று பண்டித நேரு கூறியுள்ளார். எனவே பண்டித காக்கின் வருகைக்காகவும், மேற்கொண்டு நிகழக்கூடிய சம்பவங்களுக்காகவும் நான் காத்திருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க காந்தி

# 337

# ஆடம்பரமற்ற வீட்டிற்கு ஜாகை

புது டில்லி, *28-7-1947*

மே. த. வைஸ்ராய்,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

இது என்னுடைய மௌன தினமாகும். அதனாலேயே என் கையெழுத்தில் இந்தக் கடிதம் எழுதி உங்களுக்குத் தொந்தரவு கொடுக்கிறேன்.

நான் காஷ்மீருக்குச் செல்லுவதன் சம்பந்தமாகத் தகராறுகள் ஏற்பட்டிருப்பதால், இரண்டு அல்லது மூன்று நாட்கள் மாத்திரமே அங்கு தங்கியிருப்பதாயினும் தாம் போகத் தீர்மானித்திருப்பதாக நேற்றிரவு பண்டித நேரு என்னிடம் கூறினர். எனவே, நான் இப்போது என் விருப்பப்படி பீகாருக்கோ, அதன் பின் நோவாகாலிக்கோ செல்லலாம். அவ்விதம் செல்லுமுன், நான் பஞ்சாபுக்குச் சென்று இரண்டு நாட்கள் தங்கியிருக்கலாம். நாளைக்கே நான் டில்லியிலிருந்து புறப்பட விரும்புகிறேன்.

இங்கிருந்து புறப்படுவதற்கு முன் நீங்கள் என்னைப் பார்க்க வேண்டியது இன்னும் அவசியம்தான் எனில், தங்கள் விருப்பப்படி நாளை நான் தயாராக இருக்கிறேன். பார்க்க விரும்பும் நேரத்தை நீங்கள் குறிப்பிடலாம்.

அரைப் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்கள் அடங்கிய தேசத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட கவர்னர் ஜெனரல் என்ற முறையில் நீங்கள் ஆடம்பரமற்ற ஒரு வீட்டிற்கு ஜாகை செல்ல விரும்புவதை நான் மிகவும் பாராட்டுகிறேன். உங்கள் விருப்பத்தை நிறை வேற்றுவது சாத்தியமாக இருக்குமென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 338

## ‘நேருஜி வர வேண்டாம்’

*வைஸ்ராய் மாளிகை,*
*புது டில்லி, 28-7-1947*

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

ஜுலை 28உ நீங்கள் எழுதிய கடிதத்திற்காக நன்றி.

ஒரு அரசியல் தலைவர் காஷ்மீருக்கு விஜயம் செய்ய வேண்டாம் என்பதில் காஷ்மீர் சர்க்கார் ஏன் மிகவும் கவலையுடன் இருந்து வருகிறார்கள் என்பதற்கான காரணங்களை உங்களிடம் கூறியதாக பண்டித காக் என்னிடம் சொன்னார். அவ்விதம் விஜயம் செய்தால், பஞ்சாப் எல்லையிலுள்ள பலாத்காரம் காஷ்மீருக்கும் பரவிவிடும் என்பதே அவரது அபிப்பிராயமாகும்.

அவர் உங்களைப் பார்த்த பின் என்னிடம் இவ்விதம் கூறினார்: அதாவது நீங்கள் காஷ்மீருக்கு விஜயம் செய்தாலும் கூட பலாத்காரம் எழலாம் என்று அவர் அஞ்சுகிறார் என்றாலும், நீங்கள் அகிம்சையை உபதேசித்து வருவதால், பண்டித நேரு விஜயம் செய்தால் எவ்வளவு அபாயம் நேருமோ அதில் பாதிகூட நீங்கள் விஜயம் செய்வதால் நேராது என்றும் அவர் கூறினார்.

கடைசியாக உங்களிடம் ஒன்று கூறும்படியும் அவர் என்னைக் கேட்டுக்கொண்டார். நீங்களோ அல்லது பண்டித நேருவோ காஷ்மீருக்கு விஜயம் செய்ய வேண்டியது அவசியம் என்று நீங்கள் கருதினால், நீங்கள் விஜயம் செய்வதையே அவர் பெரிதும் விரும்புகிறார். குறிப்பாக, பத்திரிகைகளும் நீங்கள் விஜயம் செய்யப்போவதாக ஏற்கனவே அறிவித்துள்ளன; பொது

மக்களின் மன நிலையும் தங்களை வரவேற்கத் தயாராக இருந்து வருகிறது.

எனவே, பண்டித நேரு விஜயம் செய்வதைக் காட்டிலும் நீங்கள் தற்போது விஜயம் செய்வதே சிறந்ததாக இருக்குமென நீங்கள் அவருக்கு யோசனை கூறவேண்டுமென நான் வற்புறுத்தலாமா? பண்டித நேரு நிர்வாக அதிகாரத்தை மேற்கொள்ள இன்னும் 18 நாட்களே இருக்கின்றன. எனவே இந்தியாவின் எதிர்காலப் பிரதம மந்திரியை இப்போது டில்லியிலிருந்து வெளியே அனுப்புவது எவ்விதம் சாத்தியமாகும் என்பது உண்மையில் எனக்குத் தெரியவில்லை.*

தங்கள் உண்மையுள்ள,

மவுண்ட்பாட்டன் (பர்மா)

---

* கடைசியில் காந்திஜிதான் அப்போது காஷ்மீருக்குச் சென்றார்; பண்டித நேரு செல்லவில்லை.

பகுதி பதினாறு

# சுதந்திரத்திற்குப் பிறகு

## 339

## வங்காள கவர்னருக்கு

*ஸோடீபூர், 11-3-1947*

*சர் பிரடரிக் பர்ரோஸ்,*
*மே. த. கவர்னர்,*
*கல்கத்தா.*

*அன்புள்ள நண்பருக்கு,*

*நீங்கள் சாதிக்க முடியாததை, ஒரு பெரிய முஸ்லிம் தூது கோஷ்டியினர் நேற்று சாதித்துவிட்டார்கள். எனவே, நான் நாளை வரையிலாவது இங்கே இருக்கிறேன். உண்மையில் மனிதன், மகத்தான குயவனின் கையில் மண்ணாக இருக்கிறான்.*

*உங்களுக்கும் உங்களைச் சேர்ந்தவர்களுக்கும் எனது நல் வாழ்த்துக்கள்.*

*தங்கள் உண்மையுள்ள,*

**மோ. க. காந்தி**

## 340

## ஒரே ஒருவர் அடங்கிய எல்லைப் படை!

*அரசாங்க மாளிகை,*
*புது டில்லி, 20-8-1947*

*எனது அன்புள்ள காந்திஜி,*

*பஞ்சாபில் நம்மிடம் 55 ஆயிரம் சிப்பாய்கள் இருக்கிறார்கள். பரந்த அளவில் மூண்டுள்ள கலகங்களையும் நாம் சமாளிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் வங்காளத்திலோ நமது படையில் ஒரே ஒருவர்தான் இருக்கிறார். அங்கே கலகம் இல்லை!*

ரராணுவ அதிகாரி என்ற முறையிலும், சர்க்கார் நிர்வாகி என்ற முறையிலும் ஒரே மனிதர் அடங்கிய எல்லைப் படைக்கு* எனது பாராட்டுதலைத் தெரிவிக்கிறேன். பாராட்டுதலைத் தெரிவிக்கும் இச்சமயத்தில் அவருக்கு அடுத்த ஸ்தானத்தில் இருக்கும் தளபதி ஸ்ரீ சுஹ்ரவர்த்தியை நான் மறந்துவிடவில்லை.

ஆகஸ்டு மாதம் 15-ஆம் தேதி அரசியல் நிர்ணய சபை கூடியபோது, நாங்கள் எல்லோரும் உங்களைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தோம். அங்கே உங்களுடைய பெயர் குறிப்பிடப்பட்டபோது எழுந்த உற்சாகமான கரகோஷத்தை நீங்கள் கேட்டிருக்க வேண்டும்.

எட்வினை இன்று ராஜகுமாரி அமிருத கௌரியுடன் பஞ்சாபுக்கு தைரியமாகத் தூது சென்றிருக்கிறாள். அகதிகளின் துன்பத்திற்கும் வேதனைக்கும் பரிகாரமாக தாங்கள் என்ன உதவி செய்ய முடியும் என்பதை நேரில் தெரிந்து கொள்ளவே அங்கு சென்றிருக்கிறாள்.

தங்கள் மிகவும் உண்மையுள்ள,
மவுண்ட்பாட்டன் (பர்மா)

# 341

## மந்திர வித்தை!

கல்கத்தா,
*30-8-1947*

மே. த. லார்டு மவுண்ட்பாட்டன் (பர்மா),
அரசாங்க மாளிகை,
புது டில்லி.

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுடைய கடிதத்திற்காக நன்றி. அதை நேற்று மாலை மே. த. கவர்னர் எனக்கு அனுப்பி வைத்தார். எங்களுக்கு நீங்கள் கூறியுள்ள பாராட்டுதலுக்கு ஷஹீத் சாகிபும் நானும் நியாயமாக உரியவர்களா என்பது எனக்குத் தெரியவில்லை. ஒரு வேளை சாதகமான சூழ்நிலை காரணமாக, அந்த கௌரவம் எங்களுக்குக் கிடைத்திருக்கலாம். இங்கே கலகம் எதுவும் ஏற்படாதது, ஏதோ மந்திர வித்தை போலவே தோன்றுகிறது.

பஞ்சாபிலும் நான் அதே விதமான முயற்சி செய்ய வேண்டுமென நீங்கள் விரும்புகிறீர்கள் என்பதை, உங்கள் கடிதத்தி

* காந்திஜியையே 'ஒரே மனிதர் அடங்கிய எல்லைப்படை' என்று மவுண்ட்பாட்டன் மேலே குறிப்பிட்டுள்ளார்.

லிருந்து நான் ஊகித்துக் கொண்டேன். நான் அவ்விதம் ஊகித்தது சரிதானே? பண்டிதருடனும் சர்தாருடனும் நான் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டிருக்கிறேன். உங்களுடைய புதிய உத்தியோகம், வைஸ்ராய் உத்தியோகத்தைக் காட்டிலும் அதிகக் கடினமானதாக இராதென்றே நம்புகிறேன்.

லேடி மவுண்ட்பாட்டன் பஞ்சாபுக்கு விமானத்தில் சென்றிருக்கிறார் என்று பத்திரிகைகளில் நான் வாசித்தபோது, என் மனம் மகிழ்ச்சியினால் நிரம்பியது. அவரது விஜயம் கடினமான ஒரு சோதனையாக இராதென்றே நம்புகிறேன்.

தங்கள் அன்புள்ள,
மோ. க. காந்தி

# 342

## பெதிக்-லாரென்ஸ் வாழ்த்துக்கள்

*11, ஓல்டு ஸ்கொயர்,*
*லிங்கன்ஸ் இன் டபிள்யூ. ஸி. 2,*
*17-9-1947*

எனது அன்பார்ந்த காந்திஜி,

உங்களுடைய பிறந்த தினத்தையொட்டி, என் மனைவியினிடமிருந்தும், என்னிடமிருந்தும் எல்லா நல்வாழ்த்துக்களையும் இந்தக் கடிதம் உங்களுக்குக் கொண்டுவருகின்றது.

சென்ற வருடம் உங்களுடைய பிறந்த தினத்தை நாங்கள் கொண்டாடியதிலிருந்து என்னவெல்லாம் நிகழ்ந்துள்ளன!

இறுதியான பலன் உங்களுக்கோ அல்லது எனக்கோ பூரண திருப்தியை அளிக்கவில்லைதான். எனினும் உண்மையான காதலைப் போல் சர்வதேசப் பிரச்னைகளின் போக்கும் முற்றிலும் இடையூறின்றி ஒருபோதும் இருப்பதில்லை. ஆனால், நஷ்டத்தைக் காட்டிலும் லாபம் மிகமிக அதிகமாகவே இருக்கிறது.

சொந்த முறையில் நீங்கள் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளை நாங்கள் மனம் லயித்து மிகுந்த அக்கறையுடன் கவனித்து வருகிறோம். சமீபத்தில் நிகழ்ந்த துக்ககரமான சம்பவங்கள் இந்தியாவின் நற்பெயருக்கு ஒரு களங்கமாகவே இருந்துவரும். இருந்தாலும், அவை ஆறாத ஒரு புண்ணை தொடர்ந்து இருந்து வராதென்றே மனமார நம்புகிறேன்.

எப்போதும் உங்கள் உண்மையுள்ள,
பெதிக்-லாரென்ஸ்

## 343

# தீமையை நன்மையால் வெல்ல உறுதி

*மந்திரி சபைக் காரியாலயம்,*
*பெரிய ஜார்ஜ் தெரு, எஸ். டபிள்யூ. 1.*
*1-10-1947*

எனது அன்பார்ந்த மகாத்மா,

நீங்களும் உங்களுடைய நாடும் அல்லது உங்களுடைய இரு நாடுகளும் மிகவும் கவலையைக் கொடுக்கக் கூடிய அபாயகரமான காலத்தை இப்போது கடந்து வருகின்றன. அதனால்தான் உங்களுக்கு நான் வேண்டுமென்றே கடிதம் எதுவும் எழுதாமல் இருந்து வந்தேன். ஆனால், நீங்கள் செய்துள்ள அற்புதமான வேலையைக் குறித்து எனது ஆச்சரியத்தையும் பாராட்டுதலையும் உங்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென இப்போது எனக்குத் தோன்றுகிறது. இந்த நாட்டில் உங்களுக்குப் பல நண்பர்கள் இருக்கிறார்கள். தீமையை நன்மையால் வெல்ல நீங்கள் உறுதியுடன் தீர்மானித்திருப்பதைக் குறித்து அவர்கள் யாவரும் ஆச்சரியத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள். இந்தியாவின் நலனை உள்ளத்தில் கொண்டுள்ள எங்கள் எல்லோருக்கும் உங்களுடைய உறுதி மகத்தான உற்சாகத்தை அளிக்கிறது. எனினும், அங்கே நிகழ்ந்துள்ள சம்பவங்களெல்லாம் எங்களுக்கு மிகுந்த துக்கத்தைக் கொடுத்திருக்கின்றன. ஆனால் தற்போதைய அதிருப்திக்கும் மனக் கசப்பிற்கும் பழைய சரித்திரம் எவ்வளவு தூரம் காரணம் என்பதை நாங்கள் நன்கு உணர்ந்திருக்கிறோம்.

நீங்கள் உறுதியுடன் முன் செல்லும் பலம் உங்களுக்கு ஏற்படவும், உங்களுடைய உதாரணத்தின் மூலம் வகுப்புப் பிணக்காகிற பிசாசு செத்து ஒழியவும் நான் பிரார்த்திக்கிறேன். அதன் பலனாக இந்தியாவும் பாகிஸ்தானும் ஒற்றுமையாகிற லட்சியத்தை நோக்கிச் செல்லத் தொடங்கும் என்றே இன்னும் நான் நம்புகிறேன்.

குறிப்பாக உங்களுக்கு மிகவும் அன்பான தன்னுடைய வாழ்த்துக்களைத் தெரிவிக்கும்படி இஸபெல் என்னைக் கேட்டுக் கொண்டிருக்கிறாள்.

உங்களுடைய மிகவும் உண்மையுள்ள,
**ஸ்டாபோர்டு கிரிப்ஸ்**

## 344

# ஒப்பற்ற ஒரு ஸ்தானம்

*அரசாங்க மாளிகை,*
*புது டில்லி, 2-10-1947*

*எனது அன்புள்ள நண்பருக்கு,*

*உங்களுடைய 78-ஆவது பிறந்த தினத்தையொட்டி எங்களுடைய மனப்பூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவிக்கவே, என் மனைவியின் சார்பிலும், என் மகள் பமீளாவின் சார்பிலும், என் சார்பிலும் இக்கடிதம் எழுதுகிறேன். நாங்கள் எல்லோரும் நேசிக்கும் இந்தியாவுக்குத் தங்களுடைய அற்புதமான தொண்டைத் தொடர்ந்து செய்துவருவதற்காக உங்களுக்கு நீண்ட ஆயுளும், ஆரோக்கியமும் இருந்துவர வேண்டும் என்றும் பிரார்த்திக்கிறோம்.*

*உலகத்தின் முன்னிலையிலும், இந்திய மக்களின் மனத்திலும் நீங்கள் விசேஷமான, ஒப்பற்ற ஒரு ஸ்தானத்தைப் பெற்றிருக்கிறீர்கள். உங்களுடைய அகிம்சை சித்தாந்தத்திற்கு இப்போது ஏற்பட்டிருப்பதைப்போல் இதற்கு முன் ஒரு போதும் இவ்வளவு அவசியம் ஏற்பட்டதில்லை. அந்த சித்தாந்தத்தைப் பரப்ப நீங்கள் நீண்ட காலம் ஆயுளுடன் விளங்குவீர்களாக.*

*இந்த நன்னாளில் உங்களுக்கு எங்களுடைய நல்வாழ்த்துக்கள்.*

*உங்களுடைய மிகவும் உண்மையுள்ள,*
**மவுண்ட்பாட்டன் (பர்மா)**

## 345

# பாராட்டுதலும் பிரார்த்தனையும்

*அரசாங்க மாளிகை,*
*புது டில்லி, 2-10-1947*

*என் அன்புள்ள ஸ்ரீ காந்தி,*

*இன்று உலகம் முழுவதுமிருந்தும் உங்களுக்கு ஏராளமான நல்வாழ்த்துக்களும் பாராட்டுதல்களும் வரும். அவற்றிலும், சாந்தியும், சகோதரபாவமும் நிலவும் பாதையில் எங்களை நடத்திச் செல்லுவதற்காக நீங்கள் நீண்டகாலம் ஆயுளுடன் இருக்க வேண்டும் என்ற பிரார்த்தனையிலும் நானும் கலந்து கொள்ளலாமா?*

*உங்களுடைய மிகவும் உண்மையுள்ள,*
**இஸ்மே**

# 1

# ஸ்டூவாட் கெல்டர் பேட்டி

(*4—7—1944*)

காந்திஜி பஞ்சகனியில் இருந்தபோது 'நியூஸ் கிரானிகிள்' பத்திரிகையின் பிரதிநிதியான ஸ்டூவர்ட் கெல்டர் அவரைப் பேட்டி கண்டார். அப்போது அவர் கேட்ட கேள்விகளும், அவற்றிற்கு காந்திஜி அளித்த பதில்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

**கேள்வி :** இந்தியாவில் ஏற்பட்டுள்ள அரசியல் முட்டுக்கட்டையைத் தீர்க்கும் விஷயமாக உதவிபுரிய எனது ஆசிரியர் ஆர்வமுடையவராக இருக்கிருர். நான் டில்லிக்குச் சென்றேன். அங்கு தாங்கள் இராததால் ஏமாற்றம் அடைந்தேன். இங்கேயும் நான் ஏமாற்றமடையும்படி தாங்கள் செய்யமாட்டீர்களென நம்புகிறேன். நீங்கள் லார்டு வேவலைப் பார்ப்பதாக வைத்துக் கொள்வோம். அப்போது நீங்கள் அவருடன் எப்படி பேச்சைத் தொடங்குவீர்கள்? நீங்கள் அவரிடம் என்ன சொல்லுவீர்கள்?

**பதில் :** நேச தேசங்களுக்கு உதவியாக இருக்க வேண்டுமென்ற நோக்கத்துடனேயே உங்களைப் பேட்டிகாண முன்வந்தேன், அந்த நாடுகளுக்கு முட்டுக்கட்டையாக இருக்க வேண்டுமென்ற நோக்கம் எனக்கு இல்லை என்று நான் வைஸ்ராயிடம் கூறுவேன். அவ்விதம் உதவிபுரிய வேண்டுமென்ற நோக்கத்துடன்தான், காரியக் கமிட்டி அங்கத்தினர்களைப் பார்க்க அனுமதி அளிக்க வேண்டுமென்று நான் கேட்டேன். காங்கிரசின் பெயரில் நடவடிக்கை எடுத்துக் கொள்ள எனக்கு அதிகாரம் இல்லை என்று நான் கருதினேன். சத்தியாக்கிரக விதிகளின்படி, சட்ட மறுப்பாளர் ஒருவர் சிறைப்பட்டுவிட்டால், அவருக்குள்ள அதிகாரம் தானுகவே ரத்தாகிவிடுகிறது. அதனுல்தான், காரியக் கமிட்டி அங்கத்தினர்களைப் பார்க்க வேண்டிய அவசியம் எனக்கு ஏற்பட்டது.

**கே :** ஆகஸ்டு தீர்மானத்தையும், சட்ட மறுப்பு ஆயுதத்தையும் நீங்கள் உறுதியுடன் பற்றிக் கொண்டிருப்பதால், நீங்கள் காரியக் கமிட்டி அங்கத்தினர்களைச் சந்திப்பதன் பலனுக காங்கிரஸின் சார்பில் சட்ட மறுப்பை ஆரம்பிக்க அவர்கள் உங்களுக்கு மீண்டும் அதிகாரம் அளிப்பார்களென வைஸ்ராய் கருதலாம். பின்னர் நீங்கள் வைஸ்ராயின் தலைக்கு நேராக "துப்பாக்கியை"க் காட்டி, "இதைச் செய்யுங்கள்; இல்லாவிட்டால் சட்டமறுப்பை ஆரம்பித்து விடுவேன்"

என்று மிரட்டலாம் அல்லவா? அதன் விளைவாக நிலைமை, இன்றிருப்பதைக் காட்டிலும் மேலும் மோசமாகிவிடலாம்.

ப: நான் இப்போதும் சரி, எப்போதும் சரி, பிரிட்டிஷாரின் நண்பனுகவே இருந்து வருகிறேன். நீங்கள் கேட்டுள்ள மேற்கண்ட கேள்வி, நான் அவ்விதம் கூறுவதில் முற்றிலும் உங்களுக்குள்ள நம்பிக்கையின்மையையே காட்டுகிறது. இந்தியாவின் இயற்கை உரிமையான சுதந்திரத்திற்கு முட்டுக் கட்டை போடுவது போன்ற தகுந்த காரணம் இருந் தாலொழிய, யுத்த காலத்தில் சட்ட மறுப்பு ஆயுதத்தை நான் ஒருபோதும் உபயோகிக்க மாட்டேன்.

கே: காரியக் கமிட்டி அங்கத்தினர்களை நானேயே விடுதலை செய்து விடுவதாக வைத்துக் கொள்வோம். அவர்கள் விரும்புவதை அரசாங்கம் இந்தியாவுக்குக் கொடுக்காவிடில், அப்போது நீங்கள் சட்ட மறுப்பை ஆரம்பிப்பீர்களா?

ப: காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் விடுதலையாகி வெளியே வந்தால், அவர்கள் நிலைமையைத் தீர பரிசீலனை செய் வார்கள். அவர்கள் தங்களுக்குள்ளேயும் என்னுடனும் விவா திப்பார்கள். நான் உங்களுக்கு இதை உறுதியாகக் கூற முடியும். அதாவது இன்று சட்ட மறுப்பை ஆரம்பிக்கும் உத்தேசம் எனக்கு இல்லை. நான் தேசத்தை பின் நோக்கி 1942-ஆம் ஆண்டிற்குக் கொண்டுபோகமுடியாது. காங்கிரஸ் எனக்கு அதிகாரம் அளிக்காவிட்டாலும் கூட, மக்களிடம் எனக்கு இருப்பதாகக் கூறப்படும் செல்வாக்கின் பலத்தைக் கொண்டு நான் இன்று சட்ட மறுப்பை ஆரம்பிக்க முடியும். ஆனல் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு தர்ம சங்கடமான நிலை மையை உண்டாக்கவேண்டும் என்ற ஒரே காரணத்திற் காகத்தான் நான் அவ்வாறு செய்ய வேண்டியிருக்கும். ஆனல் அது எனது நோக்கம் அல்ல. எனினும் மக்கள் துன் பத்திற்குள்ளாகி வருகையில் காரியக் கமிட்டி கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திராது. நிர்வாக அதிகாரத் தையும் பொறுப்பையும் பிரிட்டிஷாரிடமிருந்து இந்தியர் களின் கைக்கு மாற்றினலன்றி, நாம் உணவு நிலைமையில் அபிவிருத்தி ஏற்படும்படி செய்ய முடியாது, ஜனங்களின் துன்பத்தைத் தணிக்கமுடியாது என்பது எனது உறுதியான அபிப்பிராயம். அவ்விதம் மாற்றுவிடில், மக்களின் துன்பங் களைத் தணிக்க காங்கிரஸ்காரர்களும் மற்றவர்களும் செய்யும் முயற்சியின் விளைவாக அரசாங்கத்துடன் தகராறுகள் ஏற்பட இடம் உண்டாகும்.

இச்சந்தர்ப்பத்தில் ஸ்ரீ கெல்டர் இடைமறித்துக் கூறிய தாவது:

"தற்போதுள்ள நிலைமையில், பிரிட்டிஷார் இப்போது ஆட்சி அதிகாரத்தை இந்தியர்களிடம் மாற்றுவார்களென நான் நம்பவ

தற்கில்லை. யுத்தம் நடந்து கொண்டிருக்கையில், சுதந்திரக் கோரிக்கைக்கு சர்க்கார் ஒரு காலத்திலும் இசையமாட்டார்கள்."

**காந்திஜியின் பதில் :** 1942–இல் நான் கேட்டதற்கும் இன்று நான் கேட்பதற்கும் வேற்றுமை உண்டு. இன்று நாங்கள் ஒரு தேசீய சர்க்காருடன் திருப்தி அடைவோம். ஆனால் சிவில் நிர்வாகம் பூராவும் அந்த சர்க்காரிடம் மாற்றப்படவேண்டும். 1942–இல் நிலைமை அவ்விதமில்லை. அத்தகைய தேசீய அரசாங்கத்தில், மத்திய சட்டசபையில் உள்ள தேர்ந்தெடுக்கப் பட்ட அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்படுவோரே இடம் பெறவேண்டும். இதுவும் ஒருவிதத்தில் சுதந்திரப் பிரகடனமேயாகும்.

**கெல்டர் :** அப்போது ரயில்வேக்கள், துறைமுகங்கள் ஆகியவை ராணுவத்தின் நிர்வாகத்தில் இருக்குமா?

**கா :** அப்போது ராணுவம் தனக்குத் தேவையான எல்லா வசதிகளையும் வைத்துக் கொள்ள, தேசீய அரசாங்கம் அனுமதிக்கும். எனினும், அவையெல்லாம் தேசீய அரசாங்கத்தின் அதிகாரத்தில்தான் இருந்துவரும். அப்போது அந்த அரசாங்கம் பிறப்பிக்கும் அவசரச் சட்டங்களின் கீழ் எல்லா நிர்வாகமும் நடைபெறும்.

**கெ :** அப்போது வைஸ்ராய் அப்பதவியில் இருப்பாரா?

**கா :** இருப்பார். ஆனால் அவர், இங்கிலாந்து மன்னரைப்போல், பொறுப்புள்ள மந்திரிகளின் யோசனைக்கு இணங்க நடந்து கொள்வார். எல்லா மாகாணங்களிலும் அப்போது ஜனப் பிரதிநிதிகளான மந்திரிகள் அரசாங்க நிர்வாகத்தின் பொறுப்பை ஏற்றுக்கொண்டு விடுவார்கள். அவ்விதமாக மத்திய சர்க்காரும், மாகாண சர்க்கார்களும் இந்திய மக்களின் பொறுப்பில் வந்துவிடும். ராணுவ நடவடிக்கைகளைப் பொறுத்தமட்டில், அவை முற்றிலும் வைஸ்ராயின் அதிகாரத்திலும் பிரதம தளபதியின் அதிகாரத்திலுமே இருந்துவரும். எனினும் ராணுவ விஷயங்களில் யோசனை கூறுவதும், குற்றம் குறைகளை எடுத்துச் சொல்லுவதும் தேசீய சர்க்காருக்கு சாத்தியமாக இருக்க வேண்டும். உதாரணமாக, தற்காப்பு இலாகா தேசீய சர்க்காரின் நிர்வாகத்திலேயே இருந்துவரும். தற்காப்பு சம்பந்தமான கொள்கைகளை உருவாக்கும் விஷயமாக தேசீய சர்க்கார் உதவியளிக்கலாம். நேச தேசப் படைகள் இந்தியாவில் தங்களுடைய நடவடிக்கைகளைத் தொடர்ந்து வர அனுமதிக்கப் படுவார்கள். அவ்விதமின்றேல், அந்தப் படைகளால் ஜப்பானைத் தோற்கடிக்க முடியாது. ஆனால் இந்தியாவில் நேச தேசப் படைகளின் பராமரிப்பிற்காக ஏற்படும் செலவை இந்தியா ஏற்றுக்கொள்ள முடியாது.

கெ : ஒரு தேசீய அரசாங்கம் அமைக்கப்பட்டால், அதில் பங்கு எடுத்துக்கொள்ளும்படி நீங்கள் காங்கிரசுக்கு ஆலோசனை கூறுவீர்களா?

கா : ஆம். அவ்விதமே யோசனை கூறுவேன்.

கெ: அதாவது ஒரு தேசீய சர்க்கார் அமைக்கப்பட்டால், காங்கிரஸ் அதில் கலந்துகொண்டு யுத்த முயற்சிக்கு உதவி புரியும் என்பதுதானே அதன் அர்த்தம். அப்படியானால் உங்களுடைய நிலைமை என்ன?

கா : நான் முற்றிலும் சமாதானப் பிரியன். சுதந்திரம் அளிப்பதாக உறுதி கூறப்பட்டால், பின்னர் நான் காங்கிரசின் ஆலோசகனாக இருக்கமாட்டேன். எல்லா யுத்தங்களையும் எதிர்ப்பவன் என்ற முறையில், நான் ஒதுங்கி நிற்பேன். யுத்த முயற்சியில் ஈடுபடும் தேசீய சர்க்காரையோ அல்லது காங்கிரசையோ நான் எதிர்க்கமாட்டேன். அப்போது இந்திய மக்களுடைய வாழ்க்கையின் போக்கில் தலையிடாமல் இருப்பதே எனது ஒத்துழைப்பாக இருக்கும். எனது செல்வாக்கு, இந்தியாவை எப்போதும் சமாதானத்தையே நாடும்படி செய்யும் என்ற நம்பிக்கையுடன் நான் தொண்டு புரிந்து வருவேன். அது உண்மையான சமாதானம் நிலவவும், இன, நிற வேற்றுமையின்றி எல்லோரிடையும் சகோதர உணர்ச்சி ஏற்படவும் உலகத்தின் கொள்கையையே மாற்றுவதாக இருக்கும்.

கெ : சிவில் அதிகாரிகளுக்கும் ராணுவ அதிகாரிகளுக்கும் முரண்பாடு ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம். அப்போது அந்தத் தகராறை எப்படித் தீர்ப்பது? உதாரணமாக, இரண்டாயிரம் டன் உணவுப் பொருட்களைக் கொண்டு செல்வதற்காக ரயில்வேயை உபயோகிக்க சிவில் அதிகாரிகள் விரும்புகிறார்கள்; போர்த் தளவாடங்களைக் கொண்டு செல்ல ராணுவ அதிகாரிகள் விரும்புகிறார்கள். அந்நிலையில் நீங்கள் என்ன ஆலோசனை கூறுவீர்கள்?

கா : நான் ஏற்கனவே கூறியது போல், அத்தகைய விஷயங்களில் நான் ஆலோசனை கூற முன் வரமாட்டேன். நான் ஆலோசனை கூற முன் வருவதாக வைத்துக் கொண்டால். அத்தகைய சந்தர்ப்பங்களில் ராணுவத்திற்கே முக்கியத்துவம் அளிக்க வேண்டுமென நான் கூறுவேன். ஆனால் மக்களுடைய உயிரை மதிக்காமல் முக்கிய இடங்களைத் தகர்க்கவோ அல்லது பயிற்சி முதலிய வேறு நடவடிக்கைகளில் ஈடுபடவோ ராணுவம் விரும்புமாயின், 'தொடாதீர்கள்' என்று கூறிவிடுவேன். இதில் முக்கிய விஷயம் என்னவெனில், பரஸ்பரம் நம்பிக்கையிருந்தால் அத்தகைய சங்கடங்கள் ஏற்படா. அப்படியே ஏற்பட்டாலும் அவற்றைச் சரிக்கட்டி விடலாம். நம்பிக்கையில்லாவிடில், எதுவும்

செய்ய முடியாது. நம்பிக்கையின்றேல், நேச தேசங்களின் வெற்றிக்காக நான் வேலை செய்ய முடியாது. அவர்கள் எங்களை நம்பினால், சமரசம் ஏற்படுவது எளிது. இந்தியாவின் விடுதலை, ஆசிய நாடுகளுக்கும், சுரண்டப்பட்டு வரும் மற்ற நாடுகளுக்கும் நம்பிக்கையைக் கொடுக்கும். இன்று நீக்ரோக்களுக்கு நம்பிக்கையில்லை. ஆனால் இந்தியாவின் விடுதலை அவர்களுக்கு மிகுந்த நம்பிக்கையை உண்டாக்கும்.

**கெ:** ஹிந்து-முஸ்லிம் வேற்றுமைபற்றி நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

**கா:** பிரிட்டிஷார் நல்லெண்ணத்துடன் நடந்துகொள்வார்களாயின், அவ் விஷயமாக சங்கடம் எதுவும் இருப்பதற்கில்லை. ஆனால் சொந்த முறையில் வைஸ்ராயின் விருப்பம் எதுவாயினும், அரசியல் பிரச்னைகளில் அவருக்கு எவ்வித அதிகாரமும் இல்லை. ஸ்ரீ சர்ச்சில் சமரசத்தை விரும்பவில்லை. அவர் கூறியதாக வந்த செய்தி உண்மையெனில், அவர் என்னை நசுக்கி விடவே விரும்புகிறார். அச் செய்தியை அவர் ஒருபோதும் மறுக்கவில்லை. என்னைப் பொறுத்தமட்டில் அற்புதமும், அவரைப் பொறுத்தமட்டில் பரிதாபமும் என்னவெனில், ஒரு சத்தியாக்கிரகியை யாராலும் நசுக்கிவிட முடியாது. ஏனெனில், ஒரு சத்தியாக்கிரகி சந்தோஷமாகத் தன் உடலைப் பலிகொடுப்பதன்மூலம் ஆன்மா சுதந்திரமடையும்படி செய்கிறார்.

## 2

# "சாதி ஹிந்துக்கள்"

வைஸ்ராயின் வானொலிப் பிரசங்கத்தைப் பற்றி காந்திஜீ பத்திரிகைகளுக்கு விடுத்த செய்தியின் விவரம் வருமாறு:

இப்போது காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் விடுதலை செய்யப்பட்டுவிட்டதால், வைஸ்ராயின் வானொலிப் பிரசங்கத்தில் உள்ள அரசியல் அம்சம் சம்பந்தப்பட்ட வரையில், நான் எதுவும் கூறவிரும்பவில்லை. அவர்களுக்கு நான் ஆலோசனை மாத்திரமே கூறமுடியும். காங்கிரஸ் கொள்கையை உருவாக்கவும், காங்கிரசின் சார்பில் பேசவும், நடவடிக்கை எடுத்துக்கொள்ளவும் அவர்களுக்குத் தான் அதிகாரம் உண்டு. நான் மே. த. வைஸ்ராயின் வானொலிப் பிரசங்கத்தை வாசித்த உடனேயே, காங்கிரசின் அதிகார பூர்வமான பிரதிநிதி என்ற உரிமை எனக்கு இல்லை என்று அவருக்குத் தந்தி கொடுத்தேன். அந்த உரிமை காங்கிரஸ் அக்கிராசனருக்கோ அல்லது குறிப்பிட்ட சந்தர்ப்பத்தையொட்டி அவரால் நியமிக்கப்பட்ட பிரதிநிதிக்கோதான்

உண்டு. பல ஆண்டுகளாக நான் காங்கிரசுக்கு, அது விரும்பும் போதெல்லாம் உத்தியோகப் பற்றற்ற ஓர் ஆலோசகனாகவே இருந்து வந்திருக்கிறேன். அதே முறையில்தான் நான் காயிதே ஆஜம் ஜின்னாவுடனும் பேசச் சென்றேன் என்பது பொதுமக்களுக்கு நினைவிருக்கலாம். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பிரதிநிதியான வைஸ்ராயுடன் பேசவும் நான் காங்கிரசின் சார்பில் உத்தியோகப் பற்றற்ற முறையிலேயே செல்ல முடியும்.

வைஸ்ராயின் வானொலிப் பிரசங்கத்தில் உள்ள ஒரு சொல் என் செவிக்குத் துன்பத்தைக் கொடுப்பதாக இருக்கிறது. அரசியல் மனம் படைத்த ஒவ்வொரு ஹிந்துவுக்கும் அந்தச் சொல் துன்பத்தைக் கொடுக்கும் என்றே நம்புகிறேன். "சாதி ஹிந்துக்கள்" என்ற சொல்லைத்தான் குறிப்பிடுகிறேன். அரசியலைப் பொறுத்தமட்டில், சாதி ஹிந்து என்று யாரும் இல்லை. இந்தியா முழுவதற்கும் காங்கிரஸ் பிரதிநிதி ஸ்தாபனமாக விளங்குகிறது; அரசியல் சுதந்திரத்திற்காக அது ஏங்கிக்கொண்டிருக்கிறது. எனவே, அந்த ஸ்தாபனத்தை விட்டுவிடுவோம். வீர சாவர்க்கரோ அல்லது டாக்டர் சியாமப் பிரசாதரோ அல்லது ஹிந்து மகாசபையைச் சேர்ந்த டாக்டர் மூஞ்சேயோ சாதி ஹிந்துக்களின் பிரதிநிதியா? சாதி வேற்றுமையின்றி 'தீண்டாதார்' உட்பட எல்லா ஹிந்துக்களுக்கும் பிரதிநிதிகள் அல்லவா? அவர்கள் தங்களை சாதி ஹிந்துக்கள் என்று சொல்லிக் கொள்ளுகிறார்களா? அவர்கள் அவ்விதம் சொல்லிக் கொள்ளுகிறார்களென நான் நம்பவில்லை. அரசியல் மனம் படைத்த ஹிந்துக்களிடையே, சாதி வேற்றுமைகளை அனுசரிக்கும், மிகவும் மதிப்புக்கு உரியவரான பண்டித மாளவியாஜி கூட, தாம் ஒரு சாதி ஹிந்து என்று அழைக்கப்படுவதை விரும்பமாட்டார். ஹிந்து சமூகத்தில் பிற்போக்கானவர்கள் இருக்கிறார்கள் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். இருந்தாலும், சாதி வேற்றுமைகளையெல்லாம் ஒழித்துவிடுவதே ஹிந்து மதத்தின் நவீனப் போக்காக இருந்துவருகிறது என்றே நான் உறுதியாகக் கூறுகிறேன். முற்றிலும் அறியாமையினாலேயே வைஸ்ராய் அவ்விதம் கூறிவிட்டார் என்று நான் நம்புவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? ஹிந்து சமூகத்தை வேண்டுமென்றே புண்படுத்த வேண்டுமென்றோ அல்லது ஹிந்து சமூகத்தில் பிளவை உண்டாக்க வேண்டும் என்றோ அவர் அவ்விதம் கூறினார் என்று சொல்ல நான் விரும்பவில்லை.

ஒழுங்கான அரசியல் சூழ்நிலையில் கூடுமாயின், உத்தேசிக்கப்பட்டுள்ள மகாநாடு மிகவும் பலன்தரத்தக்க அலுவல்களைச் செய்யக் கூடும். இந்திய சமுதாயத்தைச் சேர்ந்த பல்வேறு பிரிவுகளின் பிரதிநிதிகள் என்று கூடாமல், இந்தியாவின் இயற்கையான லட்சியத்தை அடைய உறுதிகொண்டுள்ள இந்தியர்கள் என்ற முறையில் எல்லோரும் ஐக்கியத்துடன் தங்கள் கடமைகளில் ஈடுபட வேண்டும். இந்த முறையிலேயே புலாபாய்-லியாகத் அலி ஒப்பந்தத்தை நான் கருத்தில் கொண்டிருக்கிறேன். அதுதான், வரப்போகும் வைஸ்ராய் மகாநாட்டுக்கு அஸ்திவார

மாக அமைந்துள்ளது என்று நான் நினைக்கிறேன். அவரது திட்டத்தைப் பற்றி ஸ்ரீ புலாபாய் தேசாய் என்னைக் கலந்தாலோசித்தபோது, அவருக்கு நான் கூறிய யோசனையைக் குறித்து நான் வெட்கப்படவில்லை: சமூகப் பிணக்கைத் தீர்ப்பதில் அக்கறையுள்ள ஒருவன் என்ற முறையில் நான் அவரது திட்டத்தை அறிந்துகொண்ட வரையில், அது என்னைக் கவர்ந்தது. எனவே காரியக் கமிட்டி அங்கத்தினர்களிடம் எனது செல்வாக்கை உபயோகிப்பதாயும், அத்திட்டத்தை அங்கீகரிப்பதற்கான காரணங்களை அவர்களுக்கு எடுத்துக் கூறுவதாயும் அவருக்கு நான் உறுதி கூறினேன். அந்தத் திட்டத்தில் சம்பந்தப்பட்ட இரு கட்சியினரும் தங்கள் தொகுதியினரின் உண்மையான பிரதிநிதிகளாக இருந்து, இந்தியாவின் சுதந்திரத்தைத் தங்களுடைய பொதுவான லட்சியமாகக் கொள்வார்களாயின், எல்லாம் நன்றாக நடைபெறும். இந்தக் கட்டத்தில் நான் நிறுத்திக்கொள்ள வேண்டும்; காரியக் கமிட்டி பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும். இந்த அவசரமான பிரச்னையைக் குறித்து காங்கிரசின் மனநிலை என்ன என்பதை, காரியக் கமிட்டி அங்கத்தினர்கள்தான் பிரகடனம் செய்ய வேண்டும்.

## 3

# வெள்ளையரின் சுமை!

டாக்டர் நாயக்கரின் தலைமையில் ஆடவர்களும் பெண்களுமான முக்கிய இந்தியர்கள் ஜூன் 14ல சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்ததாக ராய்ட்டர் செய்தி கூறுகிறது. சத்தியாக்கிரகம், தென்னாப்பிரிக்காவில் சாத்துவிக எதிர்ப்பு என்றே பிரபலமாக வழங்கி வருகிறது. தென்னாப்பிரிக்கா யூனியன் பார்லிமெண்டில் நிறைவேறிய ஒதுக்கி வைக்கும் சட்டத்தை எதிர்த்தே சத்தியாக்கிரகம் ஆரம்பமாகியிருக்கிறது.

ராய்ட்டர் செய்தி மேலும் கூறுவதாவது: ‘‘சாத்துவிக எதிர்ப்பாளர்களுக்கு எதிராக அரசாங்கமோ அல்லது முனிசிபாலிடியோ யாதொரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால் டர்பனைச் சேர்ந்த சில வெள்ளையர்கள் சட்டத்தை நிறைவேற்றும் பொறுப்பைத் தாங்களே மேற்கொண்டு இரவில் சாத்துவிக எதிர்ப்பாளர்களின் முகாமைச் சூறையாடியதுடன், அவர்களுடைய கூடாரங்களை வெட்டி வீழ்த்தி அவற்றைத் தூக்கிக் கொண்டு போய்விட்டார்கள். ஐம்பது இந்திய சாத்துவிக எதிர்ப்பாளர்களின் அணியைப் பிளந்து சென்று வெள்ளையர்கள் கூடாரங்களைச் சூறையாடி, போர்வைகள், தலையணிகள், படுக்கைகள் முதலியவற்றையும் அப்புறப்படுத்திவிட்டார்கள். இரண்டு பெண் எதிர்ப்பாளர்களையும் அவர்கள் உதைத்துத் துன்புறுத்தினார்கள். ஆனால் அவர்களுக்கு காயம் எதுவும் ஏற்படவில்லை.’’

காலிகள் மூன்று நாட்கள் வரையில் அட்டகாசம் செய்த பிறகு, அந்த இடத்திற்கு அருகில் போலீசார் வந்து, எதிர்ப்பாளர்களைத் தாக்கி தங்களுக்குப் பணிய வேண்டுமென்று மிரட்டக் கூடாது என்று காலிகளை எச்சரித்ததுடன், அந்த இடத்தைக் காவல் புரியத் தொடங்கினார்கள் என்று பத்திரிகைகள் அறிவிக்கின்றன. இது உற்சாகமளிக்கும் செய்தியேயாகும். அந்தச் செய்தி உண்மையாக இருக்கக்கூடுமென்றும், அங்கு ஒன்று இங்கு ஒன்றாகவும், கட்டுக்கோப்பாகவும் நடைபெறும் சட்ட விரோதமான செயல்களை எதிர்த்துப் போலீசார் பூரண பாதுகாப்பு அளிக்க முற்பட்டுள்ளனர் என்றும் நம்புவோமாக. கட்டுக்கோப்பான முறையில் சட்ட விரோதமான செயல் என்பது, ஒன்று சேர்ந்து எதிராளியைக் கொல்லுவதே யாகும். இந்த வெட்கக்கேடான முறை அமெரிக்காவில் அடிக்கடி நடைபெறுகின்றது.

கருப்பு நிறத்தினரை ஒதுக்கி வைக்கும் சட்டம் நிறைவேறு முன், மரியாதையுள்ளவர்கள் என்று கருதப்பட்டு வந்த வெள்ளையர்கள், ஆசியாக்காரர்களுக்கு எதிரான கிளர்ச்சியை வெறி பிடிக்கும் அளவுக்கு நடத்திச் சென்றார்கள். கட்டாயமாக ஒதுக்கி வைக்கும் சட்டம், அவர்கள் எதிர்பார்த்ததற்கு அதிகமாகவே நிறைவேறிவிட்டது. அந்த வெற்றியுடன் அவர்கள் திருப்தியடையவில்லை. கிளர்ச்சிக்காரர்களிடையே அதிக முன்னேற்றம் அடைந்துள்ள பிரிவினர் தங்களுடைய சட்டங்களைத் தாங்களே நிறைவேற்றுபவர்களாகவும் மாறிவிட்டார்கள். அவ்வாறு செய்வதன் மூலம் தாங்கள் வெள்ளையர்களின் பெயருக்கு இழிவை உண்டாக்குகிறோம் என்பதை அவர்கள் அறிந்துகொள்ளவில்லை!!!

அவர்கள் வோட்டுக் கொடுத்து நிறைவேற்றிய சட்டங்களுக்கு மரியாதை காட்டும் வெள்ளை ஆடவர்களுக்கும் பெண்களுக்கும் நான் விடுக்கும் வேண்டுகோள் என்னவெனில், காலித்தனத்தையும், எதிராளியை உயிருடன் கொல்ல முற்படுவதையும் எதிர்த்துப் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்ட வேண்டும் என்பதுதான்.

தீய சட்டங்கள், வழக்கங்கள், அல்லது மற்றுமுள்ள தீமைகளை மிகவும் நியாயமான முறையில் அகற்ற முற்படுவதே சாத்துவிக எதிர்ப்பாகும். காலித்தனம், உயிருடன் கொல்லும் சட்டம் உள்பட பலாத்காரமான முறைகளின் ஸ்தானத்தில் அதற்கு மாறான, பூரணமான பலன் தரத்தக்க ஒரு முறையே சாத்துவிக எதிர்ப்பாகும். அது மனிதனின் உள்ளத்திற்கு விடுக்கும் வேண்டுகோளே. பல சமயங்களிலும் பகுத்தறிவு தோல்வியுற்று விடுகின்றது. அது சுயநலம் காரணமாக மழுங்கிவிடுகிறது. உள்ளத்திற்கு விடுக்கும் வேண்டுகோள் ஒருபோதும் தோல்வி அடைவதில்லை. சத்தியாக்கிரகத்திற்கு, தோல்வி என்பதே இல்லை. அது தோல்வியடைவதுபோல் தோன்றுவதற்குக் காரணம், சத்தியாக்கிரகியின் தகுதியின்மையே ஆகும். இதற்கு

முற்றிலும் சரித்திரபூர்வமான ஓர் உதாரணம் கொடுப்பது சாத்தியமில்லாமல் இருக்கலாம். ஏசு நாதரின் பெயர்தான் உடனே வாய்க்கு வருகிறது. அது ஓர் அற்புதமான உதாரணமாகும். அவர், சாத்துவிக எதிர்ப்பாளர்களின் மன்னர் என்று மேநாடுகளில் பாராட்டப்படுகிறார். 'சாத்துவிக' என்ற அடைமொழி ஏசு நாதரைப் பொறுத்தமட்டிலாவது தவறு என்று பல ஆண்டுகளுக்கு முன் தென்னாப்பிரிக்காவில் நான் எடுத்துக் கூறினேன். சரித்திரத்திலேயே அவர்தான் மிகவும் தீவிர எதிர்ப்பாளராக இருந்தார். அவர் அகிம்சையே உருவாகத் திகழ்ந்தார். ஆனால் நான் கூறவந்த முக்கியமான விஷயத்திலிருந்து நான் அப்பால் செல்லக்கூடாது. ஏசுநாதர் அனுசரித்ததைப் போன்றதொரு எதிர்ப்பிற்கே இப்போது வெள்ளைக் காலிகள் முட்டுக்கட்டை போட முயற்சித்து வருகிறார்கள். நம் தேசத்தினரின் வீர எதிர்ப்பு, காலிகள் வெட்கமடைந்து மௌனமாக இருக்கும்படி செய்வதுடன், அந்தச் சட்டத்தை ரத்து செய்வதற்கான ஒரு முன்னோடியாகவும் அமையுமென நம்புவோமாக. தென்னாப்பிரிக்காவில் சட்ட புத்தகத்தையே அது (ஒதுக்கிவைக்கும் சட்டம்) களங்கப்படுத்தி வருகிறது. தூய்மையான முறையில் ஒரு சாரார் துன்பத்திற்கு உள்ளாவது, ஒரு தவறை எதிர்ப்பதற்கான பொதுஜன அபிப்பிராயத்தைத் தூண்டுகிறது. சட்டசபையில் இருப்பவர்கள் பொதுமக்களின் பிரதிநிதிகளே. பொது மக்களின் கோரிக்கைக்கு இணங்க அந்தப் பிரதிநிதிகள் ஒரு தவறான சட்டத்தை நிறைவேற்றியிருக்கிறார்கள். அதே பொது மக்கள், அந்தத் தவறை உணர்ந்து அதை அகற்ற வேண்டுமென்று கோரும்போது, அவ்விதமே செய்ய அப்பிரதிநிதிகள் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

வெள்ளையரின் உண்மையான சுமை என்னவெனில், பாதுகாப்பு என்ற பெயரால் நிற மனிதர்கள் மீது மமதையுடன் ஆதிக்கம் செலுத்துவது அல்ல; நயவஞ்சகமான அந்தப் பித்தலாட்டத்தைத் தவிர்ப்பதே யாகும். அது வெள்ளையர்களின் சக்தியையே உறிஞ்சி வருகிறது. வெள்ளையர்கள், மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரையும் தங்களுக்குச் சமமாக நடத்த வேண்டுமென்ற படிப்பினையைக் கற்றுக்கொள்ளவேண்டிய காலம் வந்திருக்கிறது. தோல் வெள்ளையாக இருப்பதில் யாதொரு மர்மமும் இல்லை. ஒரு மனிதர், எந்த நிறமுள்ளவராயினும், எந்த நாட்டைச் சேர்ந்தவராயினும், சமமான சந்தர்ப்பம் அளிக்கப்படும் பட்சத்தில், அவர் திறமையில் எவருக்கும் குறைந்துவிடமாட்டார் என்பது அடிக்கடி ருசுவாகியிருக்கிறது.

ஆகையால், இந்திய சாத்துவிக எதிர்ப்பாளர்களைத் தொந்தரவு செய்ய வேண்டாம் என்று, உலகம் முழுவதும் உள்ள, குறிப்பாக இந்தியாவிலுள்ள வெள்ளையர்கள், தென்னாப்பிரிக்காவில் உள்ள தங்களுடைய சக மனிதர்களுக்குப் புத்திமதி கூற வேண்டும். தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்கள் தங்களுடைய சுயமரியாதையையும், தங்கள் தாய் நாட்டின் கௌரவத்-

தையும் காப்பாற்றுவதற்காக தைரியத்துடன் போராடி வருகிறார்கள். "மற்றவர்கள் உங்களிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று விரும்புகிறீர்களோ, அது போலவே நீங்கள் மற்றவர்களிடம் நடந்துகொள்ள வேண்டும்." இல்லாவிடில், அவ்விதம் கூறிய ஏசுநாதரின் பெயரைக் கூற அவர்கள் தகுதியற்றவர்களாவர். மேற்கண்ட செய்தியை உலகிற்கு அளித்த மகானும், நிற மனிதருமான ஆசியாக்காரரை அவர்கள் தங்களுடைய உள்ளத்திலிருந்து பகிஷ்காரம் செய்துவிட்டார்களா? மனித வர்க்கத்தின் ஈடு இணையற்ற மகான்களான குருமார்கள் ஆசியாக்காரர்கள்தான் என்பதையும், அவர்கள் வெள்ளை நிறத்தவர் அல்ல என்பதையும் வெள்ளையர்கள் மறந்துவிட்டார்களா? இந்த மகான்கள் இன்று பூமியில் வந்திறங்கி தென்னுப்பிரிக்காவுக்குச் செல்வார்களாயின், சட்டப்படி வெள்ளையர்களுக்குச் சமமான அந்தஸ்தை வகிக்கத் தகுதியற்ற ஆசியாக்காரர்களாகவும், நிற மனிதர்களாகவும் பிரிக்கப்பட்டு, ஒதுக்கப்பட்ட பிரதேசங்களில் வாழ வேண்டியவர்களாக இருப்பார்கள்!

மிகவும் சந்தேகத்துக்கு இடமான நிற ஆதிக்கச் சட்டத்தையும், பொதுமக்கள் பிறரைக் கொல்லுவதை அனுமதிக்கும் சட்டத்தையும் ஊன்று கோலாகக்கொண்டு வாழ முற்படும் ஒரு நாகரிகம், அந்தப் பெயருக்குத் தகுதிவாய்ந்ததா? எனினும் நமது தேச மக்கள் அனுபவித்துவரும் துன்பத்திற்கிடையேயும் ஒரு மின்னொளி தோன்றுகிறது. அதாவது இந்திய எதிர்ப்பாளர்களின் துன்பங்களைப் பகிர்ந்துகொள்ள முன்வந்திருக்கும் வெள்ளைப் பாதிரியாரான ரவரண்ட் ஸ்காட், வெள்ளையர்களான அவரது சக ஊழியர்கள் ஆகியோரின் துணிகரமான நடவடிக்கைகளே அந்த மின்னொளியாகும்.

'ஹரிஜன்' – *30–6–1946* மோ. க. காந்தி

## 4

# கோவாவில் கொடிய அடக்கு முறை

கோவா மக்களுக்கு வாய்ப்பூட்டுபோடும் 'ஜீவகாருண்யமான' நடவடிக்கைகளில் கோவா அதிகாரிகள் வழக்கம் போல ஆனந்தமாக ஈடுபட்டுவருகிறார்கள். அங்கு 'ராணுவ கோர்ட்டார்' விதித்துள்ள தண்டனை, அவர்களுடைய நடவடிக்கைகளுக்கு கடைசியாகக் கிடைத்துள்ள உதாரணமாகும். ஸ்ரீ பிரகன்ஸா குன்ஹாவுக்கு அவர்கள் எட்டு வருட சிறைத் தண்டனை விதித்ததுடன், ஆப்பிரிக்காவில் வெகு தொலைவில் போர்ச்சுகலின் ஆதிக்கத்திலுள்ள ஒரு பிரதேசத்திற்கு அவரை நாடு கடத்தியிருக்கிறார்கள். தமக்குள்ள மூலாதாரமான உரிமையை வற்புறுத்தத் துணிந்ததே அவர் செய்த குற்றமாகும். எனவே, கோவா அதிகாரிகளின் கொள்கையைக் கண்டித்து காரியக் கமிட்டியில் ஒரு தீர்மானம்

நிறைவேறியிருப்பது முற்றிலும் நியாயமே. கோவா அதிகாரி களின் நடவடிக்கை, பிரஞ்சு கவர்னரின் நடவடிக்கைக்கு நேர் மாருக இருக்கிறது. அதாவது பிரிட்டிஷ் இந்திய மக்களுடன் சேர்ந்து தங்களுடைய விதியை நிர்ணயித்துக் கொள்ளும்படி பிரஞ்சு கவர்னர் பிரஞ்சு இந்திய மக்களுக்கு உற்சாகமளித்திருக் கிருர்.

'ஹரிஜன்' - *18-8-1946* மோ. க. காந்தி

## டாக்டர் லோகியாவின் சவால்

கோவா மக்களின் அழைப்பிற்கிணங்க, டாக்டர் லோகியா கோவாவுக்குச் சென்றதாயும், அங்கு பிரசங்கங்கள் எதுவும் செய்யக்கூடாதென்று அவருக்கு கோவா அதிகாரிகள் உத்தரவு பிறப்பித்திருப்பதாயும் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. சென்ற 188 ஆண்டுகளாக கோவா மக்களுக்கு கூட்டங்கள் கூடவோ, தங்களுக்கென ஸ்தாபனங்களை அமைத்துக்கொள் ளவோ உரிமையில்லையென டாக்டர் லோகியா கூறியுள்ளார். எனவே அவர் மேற்கண்ட உத்தரவை மீறியது இயல்பேயாகும். அவ்விதம் செய்ததன்மூலம் அவர் மக்களின், குறிப்பாக கோவா மக்களின் சுதந்திர உரிமை லட்சியத்திற்குச் சிறந்த தொண்டு புரிந்துள்ளார். பிரிட்டிஷாரின் தயவிஞலேயே, இந்தியாவிலுள்ள ஒரு சிறிய பிரதேசம் போர்ச்சுகலின் ஆதிக்கத்தில் இருப்பது சாத்தியமாகியிருக்கிறது. அப்படியிருக்க போர்ச்சுகல் அதிகா ரிகள் பிரிட்டிஷாரின் தீய குணங்களைப் பின்பற்றுவது அவர்க ளுடைய நலனுக்கு உகந்ததல்ல. சுதந்திர இந்தியாவில் கோவா மாத்திரம் ஒரு தனி ராஜ்யமாக வாழ அனுமதிக்க முடியாது. துப்பாக்கியால் ஒரு தடவை கூடச் சுடாமல், கோவா மக்கள் சுதந்திர இந்தியாவின் பிரஜா உரிமைகளைப் பெற முடியும். கோவா மக்களை, அவர்களுடைய விருப்பத்திற்கு விரோதமாக அடக்கி ஆட்சிபுரிவதற்கு, பிரிட்டிஷாரின் ஆயுதப் பாதுகாப்பை போர்ச்சுகல் சர்க்கார் இனி நம்பிக்கொண்டிருக்க முடியாது. எனவே தங்களுக்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் இடையே இருக்கக்கூடிய ஏதாவதொரு உடன்படிக்கையை போர்ச்சுகல் சர்க்கார் நம்பிக் கொண்டிருப்பதைக் காட்டிலும், காலப்போக்கை உணர்ந்து கோவா மக்களுடன் கௌரவமான முறையில் சமரசம் செய்து கொள்வதே சிறந்தது என்று நான் அந்த சர்க்காருக்கு புத்திமதி கூறத் துணிகிறேன்.

கோவாவில் வாழும் மக்களுக்கு நான் கூறுவது என்ன வெனில், "மகாவல்லமை பொருந்திய பிரிட்டிஷ் சர்க்காரிடம் தங்க ளுக்கு இருந்துவந்த பயத்தை இந்தியாவின் மற்ற பாகங்களி லுள்ள மக்கள் விட்டொழித்ததைப் போலவே, போர்ச்சுகல் சர்க்காரிடம் தங்களுக்குள்ள பயத்தை கோவாவில் வாழும் மக்களும் விட்டொழிக்க வேண்டும்; தங்களுடைய மூலாதா

ரமான பிரஜா உரிமை சுதந்திரத்தை வற்புறுத்த வேண்டும். கோவா மக்களிடையே உள்ள மத வேற்றுமைகள் சாதாரண வாழ்க்கைக்குத் தடையாக இருக்க வேண்டியதில்லை. மதம், ஒவ்வொரு ஆடவர் அல்லது பெண் அனுசரிக்க வேண்டிய சொந்த விஷயமாகும். மத சம்பந்தமான பிரிவினர்களிடையே வாதத்திற்கும் சச்சரவுக்கும் காரணமாக அது ஒருபோதும் இருக்க வேண்டிய அவசியமில்லை.

'ஹரிஜன்' - *30-6-1946* மோ. க. காந்தி

## கவர்னர் ஜெனரலின் சமாதானம்

ஐயா,

சில தினங்களுக்குமுன் நீங்கள் என்னுடைய அரசாங்கத்திற்கு விடுத்த எச்சரிக்கையைப் பத்திரிகைகளின்மூலம் நான் கவனித்தேன்.

சர்வாதிகாரிகள், மக்களுடைய மனச் சாட்சியின் கண்டனத்துக்கு இலக்காகியிருக்கிறார்கள். அவர்களைத் தவிர, எனக்குத் தெரிந்தவரையில் வேறு எந்த அரசியல் தலைவரும் பிற வல்லரசுகளின் உள் நாட்டு விஷயங்களில் தலையிட முற்பட்டதில்லை. ஆனால், துவேஷம் காரணமாகக் கொடுக்கப்பட்டுள்ள பொய்ச் செய்தியினால் நீங்கள் ஏமாற்றப்பட்டிருக்கிறீர்கள். உங்களுடைய அரசியல் கொள்கைகளுக்கு தார்மிகமான முறையே அடிப்படையாக இருந்து வருகிறதென நினைக்கிறேன். அதிலிருந்து நீங்கள் விலகக்கூடாது என்பதற்காகவே, அவ்விஷயத்தை நான் உங்களுக்கு விளக்கிக் கூற விரும்புகிறேன்.

நீதியை அடிப்படையாகக் கொண்ட உங்களுடைய பண்பாட்டை நான் வெகு காலமாக அறிவேன். நானும் சட்ட பரீட்சையில் தேர்ச்சி பெற்றிருக்கிறேன். நான் எனது நாட்டிலுள்ள நீதிபதிகளின் கோஷ்டியைச் சேர்ந்தவன். இதை நீங்கள் அறிந்துகொண்டால், என்னைப் பற்றி முடிவு செய்யக்கூடிய சிறந்த நிலையில் இருப்பீர்களென நம்புகிறேன். எனவே, ஒரு நீதிபதியான நான், எனது நிர்வாகத்தின் கீழ் உள்ள மக்களின் பிரஜா உரிமைகளை அறியாமலிருக்கலாம் என்பதை நீங்கள் நம்ப முடியுமா?

நீங்கள் அவ்விதம் நம்பினால், நாம் இருவரும் பயிற்சி பெற்றுள்ள நீதி சாஸ்திரத்தின் மதிப்பையே நீங்கள் மறுத்தவர்களாவீர்கள்; இந்தியாவின் இந்தப் பகுதியில் நானூறு ஆண்டுகளுக்கு மேலாக இருந்துவரும் போர்ச்சுகல் நிர்வாகத்தின் சரித்திர உண்மைக்கே பாதகம் விளைவித்தவர்களாவீர்கள்.

போர்ச்சுகல் மக்களின் சரித்திரத்தையும் குணாதிசயங்களையும் நீங்கள் நன்கு தெரிந்துகொள்ளவில்லை என்பதை நான் அறிந்துகொள்ள முடியும். எனினும் சென்ற 188 ஆண்டுகளாக கோவா மக்களை அவர்களுடைய விருப்பத்திற்கு விரோதமாக

போர்ச்சுகல் ஆட்சி புரிந்து வருவதாக நீங்கள் கூறுவதிலிருந்து, நீங்கள் உண்மையைத் தெரிந்து கொள்ளவில்லை என்பது மாத்திரமல்ல, இந்தியாவின் சரித்திரத்தையும் தெரிந்து கொள்ளவில்லை என்றே தோன்றுகிறது.

இந்த நாட்டை அடிமைப்படுத்துவதற்காகவும், பொருளாதார ரீதியில் இந்த நாட்டைச் சுரண்டுவதற்காகவும் போர்ச்சுகீயர்கள் இந்த நாட்டிற்கு வரவில்லை; சகோதர முறையில் உயர்ந்த கொள்கையுடனேயே வந்தார்கள். எனவே அவர்கள் இந்தியர்களை எப்போதும் தங்களுடைய சகோதரர்களாகவே கருதுகிறார்கள்; ஒருபோதும் தங்களுடைய அடிமைகளாகக் கருதவில்லை. இது வெறும் பேச்சு அல்ல என்பதை ஓர் உண்மையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அதாவது, போர்ச்சுகலிலும் போர்ச்சுகலின் காலனிகளிலும் 10,000 இந்தியர்கள் தங்களுடைய ஜீவனத்திற்கான ஊதியத்தை சம்பாதித்து வருகிறார்கள். அவர்களுக்கு எந்த உத்தியோகமும் வகிக்க உரிமையுண்டு. ஆனால் போர்ச்சுகல் இந்தியாவில் போச்சுகீயர்களான ஐரோப்பியர்கள் இருநூறு பேரே உத்தியோகத்தில் இருந்து வருகிறார்கள்.

வெகு காலத்திற்கு முன்னிருந்து அதாவது ஆல்பகர்க் காலத்திலிருந்து இன்று வரையில், போர்ச்சுகீயர்கள் எப்போதுமே தன்னலத் தியாகம் செய்து, இந்திய நாகரிகத்தின் மாசு என்று நீங்களே அடிக்கடி கூறும் கரும் களங்கத்திலிருந்து இந்தியர்களை விடுதலை செய்ய முயற்சித்து வந்திருக்கிறார்கள். இந்த முயற்சியில் அவர்கள் வெகுதூரம் வெற்றியும் அடைந்திருக்கிறார்கள். அதன் பலனை, கோவா மக்கள் கொடிய, அநியாயமான சாதிகள், தீண்டாமை முறையிலிருந்து விடுதலை பெற்று, ஹிந்துஸ்தானத்திலுள்ள பொது மக்களிடையே தனிச் சிறப்பை அடைந்திருக்கிறார்கள்.

விவேகமும், யோக்கியப் பொறுப்பும் வாய்ந்த கோவா மக்கள் இந்த சுதந்திர உரிமையின் பலன்களை நன்கு உணர்ந்திருக்கிறார்கள், விரும்புகிறார்கள். அராஜக முறைகளில் நிபுணர்களான ஒரு சிலர் மாத்திரமே இவற்றை அறிந்து கொள்ளவில்லை என்று தோன்றுகிறது.

நீங்கள் தெளிந்த அறிவு படைத்தவர்; உங்களுடைய அரசியல் பொறுப்புகள் மகத்தானவை. அப்படியிருக்க, நம்பக்கூடிய ருசுக்களின்றி டாக்டர் லோகியா கொடுத்த தகவல்களை ஒப்புக் கொண்டு அவரது சார்பில் தாங்கள் பேசுவதை என்னால் நம்பவே முடியவில்லை.

குறிப்பாக, இங்கு விருந்தாளியாக வந்து உபசாரம் பெற்று வரும் டாக்டர் லோகியாவைப் போன்ற ஓர் அந்நியருக்கு, இங்கு அமைதியாக வாழ்ந்துவரும் மக்களிடையே குழப்பத்தை உண்டாக்க, தார்மிக முறையிலோ அல்லது நீதியை அடிப்படையாகக் கொண்டோ என்ன உரிமை இருக்கிறது?

இங்குள்ள மக்கள் தங்கள் அலுவல்களைச் செய்துகொண்டு முன்னேற்றம் அடைந்து வருகிறார்கள். அவ்விதம் அமைதியாகவும் மகிழ்ச்சியுடனும் வாழும் மக்களிடம் உண்மைகளைத் திரித்துக் கூறி உண்மையான சுதந்திரத்திற்குப் பாதகம் விளைவிக்கும் கிளர்ச்சிக்காரர்களை அனுமதிக்கும் எந்த நாடாவது உலகில் இருக்கிறதா?

நியாயமான, உண்மையான சுதந்திரத்திற்கு விரோதமாக மிகப் பெரும்பாலான மக்களின் மீது தங்களுடைய விருப்பத்தைத் திணிக்கும் ஒரு சிறு கோஷ்டியினர், தங்களுக்குள்ள சுதந்திரத்தை துஷ்பிரயோகம் செய்வதை எந்த அரசாங்கமும் சகித்துக்கொண்டிருக்க முடியாது.

போர்ச்சுகல் அமைதியான ஒரு நாடாகும். அது ஒரு கொடுங்கோன்மையான வல்லரசு அல்ல. போர்ச்சுகல் அரசாங்க நிர்வாகத்திலும், மக்களுடைய மனத்திலும், தெருக்களிலும் ஒழுங்கு நிலவுவதைக் காணலாம். பொதுவாக எந்த நாகரிகமான தேசத்திலும் உள்ள மக்களுக்கு இருப்பதைப்போல், போர்ச்சுகல் சர்க்கார் நிர்வாகத்திலுள்ள மக்களுக்கும் அதே பிரஜா உரிமைகள் உண்டு.

பரிபூரணமான சுதந்திரம் என்பது நடைமுறையில் அசாத்தியமான ஒரு கனவே என்பதை நீங்கள் அறிய வேண்டும். ஒவ்வொருவருடைய உரிமையும், அதிகாரிகளின் உரிமை போன்ற மற்றவர்களுடைய உரிமைகளுக்கும், இடம் கொடுப்பதாக இருக்க வேண்டும்.

மக்களின் நலனைப் பாதுகாப்பதே அரசாங்கத்தின் முதல் உரிமையும் கடமையுமாகும். நோய்கள் வராமல் மக்களின் உடல் ஆரோக்கியத்தைப் பாதுகாப்பதும், அவர்களின் மன ஆரோக்கியத்தையும் கூடப் பாதுகாக்க வேண்டியதும் அதிகாரிகளின் கடமையாகும். அவர்களுடைய மனம் நிலையற்ற கொள்கைகளுக்குப் பலியாகும்படி அதிகாரிகள் விட்டுவிடக் கூடாது. ஜனநாயக நாடுகள் என்று கூறப்படும் நாடுகளில் கூட, பல துறைகளிலும் சர்க்கார் தலையீடு இருக்கிறது.

உதாரணமாக, 5-ஆம் தேதி 'பம்பாய் கிரானிகிள்' பத்திரிகையில் பொருட்களின் விலைகளைக் குறிப்பிடும் ஜாபிதா ஒன்றை இந்திய சர்க்கார் வெளியிட்டிருக்கிறார்கள். அத்தகைய ஒரு நிலை இந்த நாட்டில் இல்லை. மிகவும் அத்தியாவசியமான ஒன்றிரண்டு பொருட்களின் விலைகளைத் தவிர மற்றவையெல்லாம் வியாபாரிகளினாலேயே சுதந்திரமாக நிர்ணயிக்கப்படுகின்றன; அரசாங்கத்தினால் நிர்ணயிக்கப்படுவதில்லை. அந்த விலைகளை அரசாங்கம் நிர்ணயித்தால், பின்னர் வர்த்தக சுதந்திரம் எங்கே இருக்கிறது?

நீதிபதி என்ற முறையிலும் உத்தியோக முறையிலும் பொறுப்பை வகிக்கும் நான், கோவா மக்களின் பிரஜா உரிமை

களுக்கு அபாயம் எதுவும் ஏற்படவில்லை என்று உங்களுக்கு உறுதி கூறமுடியும். கிளர்ச்சிக்காரர்கள் தான் அந்த உரிமைகளுக்கு அபாயம் விளைவிக்கிறார்கள்; லஞ்சம் கொடுத்தோ அல்லது நிர்ப்பந்தப்படுத்தியோ ஏழை மக்களின் கவனத்தை அமைதியான அலுவல்களிலிருந்து அப்பால் திருப்ப முயற்சிக்கிறார்கள்.

எனவே, கிளர்ச்சிக்காரர்கள் உங்களுடைய பெயரில் அத்தகைய நடவடிக்கைகளில் ஈடுபட இனி அனுமதிக்கமாட்டீர்களென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஜோஸ் பாஸா
போர்ச்சுகல் இந்தியா கவர்னர் ஜெனரல்

நோவா-கோவா,
*18-7-1946*

## காந்திஜியின் பதில்

உருளி-கஞ்சன்
புனா ஜில்லா, *2-8-1946*

அன்புள்ள நண்பருக்கு,

கோவா பிரச்னைகளைப் பற்றி நான் 'ஹரிஜனி'ல் எழுதியிருந்ததற்குப் பதிலளித்து நீங்கள் எனக்கு எழுதியுள்ள கடிதம் உங்களுடைய அன்பையே காட்டுகிறது. மொஸாம்பிக், டிலாகோவா, இன்ஹாம்பேன் ஆகிய இடங்களுக்கு நான் சென்றிருக்கிறேன் என்பதை நீங்கள் அறிவீர்கள் என்றே நினைக்கிறேன். அங்கே தர்மநோக்கத்துடன் இருக்கும் அரசாங்கம் எதையும் நான் காணவில்லை. உண்மையில், இந்தியர்களுக்கும் போர்ச்சுகீயர்களுக்கும், ஆப்பிரிக்கர்களுக்கும் போர்ச்சுகீயர்களுக்கும் இடையே அரசாங்கம் காட்டிய வேற்றுமையைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். மேலும் இந்தியாவில் போர்ச்சுகல் காலனியின் சரித்திரம் நீங்கள் கூறுவதை ருசுப்பிப்பதாக இல்லை. கோவாவில் உள்ள நிலைமையைப் பற்றி நான் பார்த்ததும், தெரிந்துகொண்டதும் போர்ச்சுகல் அரசாங்கத்துக்குப் பெருமையளிப்பதாக இல்லை. கோவாவிலுள்ள இந்தியர்கள் வாயைத் திறக்காமல் இருப்பதற்குக் காரணம், போர்ச்சுகல் சர்க்காரின் மாசற்ற தன்மையோ அல்லது தார்மிக உணர்ச்சியோ அல்ல; அவர்களின் பயங்கர ஆட்சி முறையே அதற்குக் காரணமாகும். எனவே, கோவாவில் மக்களுக்குப் பூரண சுதந்திரம் இருப்பதாகவும், ஒரு சிலருக்கு ஏற்பட்டுள்ள அதிருப்தியே கிளர்ச்சிக்குக் காரணம் என்றும் நீங்கள் கூறுவதை நான் ஒப்புக் கொள்ள முடியாததற்காக என்னை நீங்கள் மன்னிப்பீர்கள்.

எனக்கு நேரில் கிடைத்த தகவல்களும், இங்குள்ள பத்திரிகைகளில் நான் பார்த்த செய்திகளும் நீங்கள் கூறுவதற்கு மாறானவையாக இருக்கின்றன. உங்களுடைய ராணுவ கோர்ட் விசாரணையின் விளைவாக டாக்டர் பிரகன்ஸாவுக்கு எட்டு வருட சிறைத் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது. வெகு தொலைவில் உள்ள போர்ச்சுகீய பிரதேசமொன்றுக்கு அவரை நாடு கடத்தவும் உத்தேசித்திருக்கிறீர்கள். கோவாவில் பிரஜா உரிமை காணக் கிடைக்காத ஒரு சரக்காகிவிட்டது என்பதை ருசுப்பிக்க இந்த உண்மையே போதுமானது. சட்டத்துக்கு உட்பட்டு நடக்கும் டாக்டர் பிரகன்ஸாவைப் போன்ற ஒரு பிரஜையை, நாடு கடத்தும் அளவுக்கு அபாயகரமானவர் என்று போர்ச்சுகல் அரசாங்கம் ஏன் கருத வேண்டும்?

அரசியல்துறையில் டாக்டர்லோகியாவுக்கும் எனக்கும் கருத்து வேற்றுமை உண்டு என்றாலும், அவர் கோவாவிற்குச் சென்று, அங்குள்ள களங்கத்தைச் சுட்டிக் காட்டியதற்காக அவரை நான் பாராட்டுகிறேன். பரந்த இந்தியா சுதந்திரம் அடையும் வரையில், கோவா மக்கள் சுதந்திரத்திற்காகக் காத்திருப்பதால் யாதொரு பாதகமும் ஏற்பட்டுவிடாது. எனினும் பிரஜா உரிமையின்றியும், சுயமரியாதையை இழந்தும் எந்த நபரும், கோஷ்டியும் வாழ முடியாது. டாக்டர் லோகியா தீபத்தை ஏற்றிவைத்துள்ளார். கோவா மக்களுக்கு அபாயம் ஏற்படாமல் இருக்கவேண்டுமாயின், அந்த தீபம் அணையாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது அவர்களுடைய கடமையாகும். அந்த தீபத்தை ஏற்றியதற்காக, நீங்களும் கோவா மக்களும் அவருக்கு நன்றி செலுத்த வேண்டும். எனவே, அவரை 'அந்நியர்' என்று நீங்கள் வர்ணித்திருப்பது, துக்ககரமானதாக இல்லாவிடில், எல்லோருக்கும் சிரிப்பையே மூட்டும். உண்மை என்னவெனில், போர்ச்சுகலிலிருந்து வந்துள்ள போர்ச்சுகீயர்கள் அந்நியர்களாவர். அவர்கள் பரோபகார சிந்தனையுடன் வந்தவர்களாயினும் அல்லது உலகில் பலவீனமுள்ள இனத்தினரைச் சுரண்டுவதற்காக ஆட்சிபுரிவோராக வந்தவர்களாயினும், அவர்கள் தான் அந்நியர்கள்.

சாதி வேற்றுமைகளை ஒழிக்க வேண்டுமென்பது பற்றி நீங்கள் கூறியிருக்கிறீர்கள். ஆனால் போர்ச்சுகல் பிரதேசங்களில் நான் காண்பது என்னவெனில், சாதி வேற்றுமைகள் ஒழிக்கப்படவில்லை என்பது மாத்திரமல்ல, போர்ச்சுகீய ஆட்சியாளர்களால் 'சாதி' முறையைக் காட்டிலும் அதிக பயங்கரமான ஒரு வித சாதி முறை உருவாக்கப்பட்டிருக்கிறது.

ஆகையால் பரோபகாரம், பிரஜா உரிமை, சாதி வேற்றுமை ஆகியவை பற்றி உங்களுடைய அபிப்பிராயங்களை மாற்றிக்கொள்வீர்களென நம்புகிறேன். மேலும் ஆப்பிரிக்க போலீசாரையெல்லாம் வாபஸ் செய்துகொண்டு, மக்களுக்குப் பிரஜா உரிமைகள் அளிப்பதாக நீங்கள் மனப்பூர்வமாகப் பிரகடனம் செய்யவேண்டும்; சாத்தியமாயின், கோவா மக்கள் தங்களுடைய சொந்த

அரசாங்கத்தை அமைத்துக்கொள்ளும்படி விட வேண்டும்; அத்தகைய அரசாங்கத்தை அமைப்பதில் கோவா மக்களுக்கும் உங்களுக்கும் கூட உதவி புரிய, பரந்த இந்தியாவிலிருந்து அதிக அனுபவம் வாய்ந்த இந்தியர்களை அழைக்க வேண்டும்.

தங்கள்
மோ. க. காந்தி

பின் குறிப்பு: உங்களுடைய கடிதத்தை நீங்கள் பத்திரிகைகளுக்கு அனுப்பியிருப்பதால், நானும் இந்தப் பதிலை 'ஹரிஜனி'ல் வெளியிடுகிறேன். மோ. க. கா.

—'ஹரிஜன்' – 11—8—1946

# 5

# உணவு நெருக்கடி

உணவு நெருக்கடி, மே. த. வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசியை என்னிடம் வரும்படி செய்துவிட்டது. நீண்ட காலமாக அவரை நான் பல தடவைகளில் சந்தித்துப் பேசினேன். மீண்டும் வைஸ்ராயிடமிருந்து கண்டிப்பான அழைப்பு வந்தபோது, அவருடைய சார்பில் பேசக்கூடிய யாராவது ஒருவரை என்னிடம் அனுப்பும்படி அவரை நான் கேட்டுக் கொண்டேன். எனவே நேற்று அவரது அந்தரங்கக் காரியதரிசி என்னைப் பார்க்க வந்தார். உணவு நெருக்கடி ஒன்றே அவரை என்னிடம் கொண்டு வந்தது.

இவ்விஷயத்தில் சிறிதும் தாமதத்திற்கு இடம் கொடுக்கக் கூடாது. எனவே, நான் அவரிடம் கூறியதன் சாரத்தை இங்கே கொடுக்கிறேன். காங்கிரஸ் கொள்கையைப் பொறுத்தமட்டில், மௌலானா சாகிபை வைஸ்ராய் அழைக்க வேண்டும். அவரால் வர இயலாவிடில், அவரது சார்பில் வரும் பிரதிநிதியின் பெயரைக் குறிப்பிடுமாறு அவரை வைஸ்ராய் கேட்க வேண்டும். தற்போதுள்ள பொறுப்பற்ற மந்திரிகளின் ஸ்தானத்தில், உடனடியாகப் பொறுப்புள்ள மந்திரிகளை நியமிக்க வேண்டும். மத்திய சட்டசபையில் உள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களிடையே இருந்து மந்திரிகளைப் பொறுக்கி எடுக்க வேண்டும் என்பது என்னுடைய சொந்த அபிப்பிராயமாகும். மத்திய சட்டசபையிலுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் எந்தக் கட்சிகளைச் சேர்ந்தவர்களாயினும், அவர்களும் இந்தப் பொறுப்பை வகிக்க வேண்டும் என்றும் கருதுகிறேன். ஏனெனில், துணிப் பஞ்சமும் உணவு நெருக்கடியும் இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்களுக்கும் பொதுவாகும். இந்த யோசனையை சர்க்கார் ஒப்புக்கொள்ள முடியுமா என்பதையோ, மத்திய சட்டசபை அங்கத்தினர்கள் அதை நடைமுறையில் சாத்திய

மானதென்று கருதுகிருர்களா, இல்லையா என்பதையோ என்ஞல் கூற முடியாது. ஆனால் யாராவது மறுப்பார்களோ என்ற அச்சமின்றி நான் ஒன்று கூற முடியும். அதாவது சீறிக்கொண்டிருக்கும் ஆபத்தான நிலைமையை உத்தேசித்தாவது, வர்த்தக சமூகமும் அதிகார வர்க்க உலகமும் யோக்கியமாக நடந்து கொள்ளுமாயின், பரந்து விரிந்து கிடக்கும் இந்த தேசத்தைச் சேர்ந்த நாம், வெளி உலகத்திலிருந்து நமக்கு உதவி கிடைக்காவிட்டால் கூட, இந்த சங்கடமான நிலைமையை ஓரளவு சமாளிக்க முடியும். வெளி உலகமும் இப்போது திணறிக் கொண்டிருக்கிறது. இந்த நிலைமையைச் சமாளிக்க வேண்டுமாயின், தானிய, ஜவுளி வியாபாரிகள் சேமித்து வைக்கக் கூடாது; சூதாட்ட வியாபாரத்தில் இறங்கக் கூடாது; தண்ணீர் இருக்கும் இடங்களிலெல்லாம் உணவுப் பொருட்களைப் பயிர் செய்ய வேண்டும்; பூந்தோட்டங்களை யெல்லாம் உணவுப் பொருட்கள் பயிரிடுவதற்கு உபயோகிக்க வேண்டும். யுத்த காலத்தில் இவ்விதமே செய்யப்பட்டது. இன்றைய நிலை சில அம்சங்களில் யுத்த காலத்தைவிட மோசமானதாக இருக்கிறது. நம்மிடமுள்ள தானியங்களை நாம் தின்று ஒழித்துவிடுவதற்கு முன், கருமிகளைப் போல் நாம் சிக்கனமாக இருக்க வேண்டும். விருந்து வைபவங்களையெல்லாம் நாம் நிறுத்திவிட வேண்டும். தங்களுடைய குடும்பங்களில் சிக்கனம் செய்வதன் மூலம், தற்போதைய வேதனையைத் தணிக்கும் விஷயத்தில் பெண்கள் பேருதவி புரிய முடியும். அரசாங்கம் எத்தகையதாக இருப்பினும், அதன் உதவியின்றியே, நமது தினசரி நடவடிக்கைகளில் பத்தில் ஒன்பது பகுதியை நாம் நிறைவேற்ற முடியும். ஆனல், அத்தகைய சந்தர்ப்பங்களில் அரசாங்கம் மாத்திரம் மக்களுடைய அலுவல்களில் தலையிடக் கூடாது. அனாவசியமான பீதியை எப்பாடுபட்டாவது தவிர்க்க வேண்டும். உண்மையிலேயே மரணம் வருவதற்கு முன் பீதியிஞல் இறக்க நாம் மறுத்துவிட வேண்டும். இந்தியாவிலுள்ள எலும்புக் கூடுகளான மனிதர்களைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டும். இவ்விதம் செய்தால், இந்தியாவில் எல்லாம் நன்மையாக முடியும். நாம் சுக வாழ்க்கையில் திளைத்தால், அண்டை வீட்டுக்காரரும் சுக வாழ்க்கையை மேற்கொள்ள முடியும் என்று நம்பி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளக் கூடாது. துணிப் பஞ்சம் வெட்கக்கேடான ஒரு நிலைமையாகும். ஏனெனில், அரசாங்கமும் மில் சொந்தக்காரர்களும் மாத்திரம் யோக்கியமாகவும், புத்திசாலித்தனமாகவும் நடந்து கொள்வார்களாயின், நம் நாட்டில் துணியின்றி யாரும் நிர்வாணமாக இருக்க வேண்டிய நிலை ஏற்படாது. நமக்குத் தேவையான எல்லாத் துணிகளையும் கிராமங்களிலேயே உற்பத்தி செய்வதற்கு நம்மிடம் போதிய பஞ்சு இருக்கிறது, போதிய தொழிலாளர்கள் வேலையற்றிருக்கிருர்கள், கைத்திறனும் இருக்கிறது.

# 6

# காந்திஜியின் பரிசீலனை

பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சார்பில் மந்திரி சபைத் தூது கோஷ்டியினரும் வைஸ்ராயும் வெளியிட்டுள்ள அரசாங்க அறிக்கையை நான்கு நாட்கள் வரையில் துருவித் துருவி நான் பரிசீலனை செய்தேன். அதன் பலனை, அது ஒரு சிறந்த தஸ்தாவேஜி என்று என் மனத்தில் ஏற்பட்ட உறுதி மாறவில்லை. தற்போதுள்ள நிலைமையில் அதைக் காட்டிலும் சிறந்த ஒரு தஸ்தாவேஜியை பிரிட்டிஷ் அரசாங்கம் வெளியிட்டிருக்க முடியாது. நம்முடைய பலவீனத்தை அது எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது. இதை அறிந்துகொள்ளும் நல்ல தன்மைதான் நமக்கு இருக்க வேண்டும். காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகிற்கும் சமரசம் ஏற்படவில்லை. நம்மிடையே உள்ள வேற்றுமைகள் பிரிட்டிஷாரால் சிருஷ்டிக்கப்பட்டவை என்று இந்தத் தடவை மடத்தனமாக நம்மை நாமே சமாதானம் செய்து கொள்வோமாயின், நாம் மோசமான தவறு செய்தவர்களாவோம். தூது கோஷ்டியினர் நம்மை அவர்களுடைய சுய நலத்திற்குப் பயன்படுத்திக் கொள்வதற்காக இங்கிலாந்திலிருந்து இவ்வளவு தூரம் வரவில்லை. பிரிட்டிஷ் ஆட்சிக்கு மிகவும் எளிதாகவும், மிக்க விரைவாகவும் ஒரு முடிவு கட்டுவதற்கான முறையை வகுக்கவே அவர்கள் வந்திருக்கிறார்கள். அவர்களுடைய பிரகடனம் வீண் பேச்சு என்பது ருசுவாகும் வரையில், அதை நம்பும் தைரியம் நமக்கு இருக்க வேண்டும். வஞ்சகனின் வஞ்சனையினால் தான் தைரியம் வலுவடைகின்றது.

எனினும் பிரிட்டிஷாரின் நிலையில் எது சிறந்ததோ அது, இந்தியாவின் நிலையில் இருந்து பார்க்கும்போது சிறந்தது என்று நான் கூறுவதாக, எனது பாராட்டுதலிலிருந்து பொருள் கொள்ளக் கூடாது. பிரிட்டிஷாருக்குச் சிறந்ததாக இருப்பது, இந்தியாவுக்கு அபாயகரமானதாக இருக்கலாம். மேலே நான் கூறப்போவதிலிருந்து, நான் சொல்லுவதன் அர்த்தம் தெளிவாகுமென நம்புகிறேன்.

அந்த தஸ்தாவேஜியின் கர்த்தாக்கள் தங்கள் மனத்திலிருப்பதையே முற்றிலும் வெளியிட முயற்சித்திருக்கிறார்கள். இந்தியாவின் சுதந்திர சாஸனத்தைத் தயாரிப்பதற்காகக் கட்சிகளை ஒன்று சேர்க்க குறைந்த பட்சமான தேவை என்ன என்பதை, அவர்கள் தாங்கள் நடத்திய பேச்சுவார்த்தைகளிலிருந்து அறிந்து கொண்டிருக்கிறார்கள். கூடிய விரைவில் பிரிட்டிஷ் ஆட்சி முடிவுறும்படி செய்யவேண்டும் என்பதொன்றே அவர்களுடைய நோக்கமாகும். அவர்கள், தங்களால் சாத்தியமாயின், உள் நாட்டுப் பூசல்களால் சீர்குலையாமல் இந்தியாவை ஓர் ஐக்கிய தேசமாகவே விட்டுவிட்டுச்

செல்லுவார்கள். எப்படியிருந்தாலும் அவர்கள் இந்தியாவை விட்டுவிட்டுச் சென்றுவிடுவார்கள். சிம்லா மகாநாட்டில் இரு கட்சிகளும் கலந்து கொள்ளும்படி செய்வதில் தூது கோஷ்டியினர் வெற்றி பெற்றார்கள் என்றாலும், அக்கட்சிகளால் ஒரு சமரசத்திற்கு வர இயலவில்லை. அப்படியிருந்தும் தூது கோஷ்டியினர் அஞ்சாமல், அரசியல் நிர்ணய சபையை அமைக்கும் நோக்கத்துடன் மதிப்பு வாய்ந்த ஒரு தஸ்தாவேஜியைத் தயாரித்திருக்கிறார்கள். அரசியல் நிர்ணய சபை, பிரிட்டிஷாரின் கட்டுப்பாட்டிற்கோ அல்லது செல்வாக்கிற்கோ உட்படாமல் இந்தியாவின் சுதந்திர சாஸனத்தைத் தயாரிக்க வேண்டும் என்பதே அவர்களுடைய நோக்கமாகும். அந்த தஸ்தாவேஜி ஒரு வேண்டுகோள் ஆகும், ஆலோசனையுமாகும். அதில் நிர்ப்பந்தம் எதுவும் இல்லை. உதாரணமாக, அரசியல் நிர்ணய சபைக்கு மாகாண சட்டசபைகள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கலாம் அல்லது தேர்ந்தெடுக்காமலும் இருக்கலாம். தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அரசியல் நிர்ணய சபையில் கலந்து கொள்ளலாம் அல்லது கலந்து கொள்ளாமலும் இருக்கலாம். அரசியல் நிர்ணய சபை கூடி, அரசாங்க அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள நடவடிக்கை முறையைத் தான் பின்பற்ற வேண்டும் என்பதில்லை; அதற்கு மாறுபாடான முறையையும் மேற்கொள்ளலாம். ஆனால், தனித் தனியான வோட்டுகளின் முடிவு இரண்டு கட்சிகளையும் கட்டுப்படுத்தும். ஏனெனில், அது அரசியல் நிர்ணய சபையின் வாழ்வுக்கு அவசியமாகும். நான் இதை எழுதிக் கொண்டிருக்கும் போது, அரசாங்க அறிக்கையை ஒவ்வொரு ஷரத்தாக மீண்டும் வாசித்தேன். அவற்றில் சட்ட ரீதியாகக் கட்டுப்படுத்தும் அம்சம் எதுவுமே இல்லை என்ற முடிவுக்கு வந்துள்ளேன். கௌரவம், அவசியம் ஆகிய இரண்டிற்கு மாத்திரமே கட்டுப்பட வேண்டும்.

அவசரப்பட்டு வாசிப்போருக்கு புதிர்போல் தோன்றக் கூடிய பல விஷயங்கள் அந்த அறிக்கையில் இருக்கின்றன. ஆனால் ஒரு விஷயத்தை அவர்கள் மறந்துவிடக்கூடாது. அதாவது மிகமிகக் குறைந்த காலத்திற்குள் எப்படி சுதந்திரம் பெறுவதென்பது பற்றி அந்த அறிக்கை, தேசத்திற்கு ஒரு வேண்டுகோளும், ஆலோசனையுமேயாகும். அதற்குக் காரணம் தெளிவானது. தற்போதைய குழப்பத்திலிருந்து தோன்றும் புதிய உலகத்தில், அடிமை இந்தியா பிரிட்டிஷ் கிரீடத்திலுள்ள பேரொளி வீசும் ரத்தினமாக இராது; அதிலுள்ள மிகக் கரிய களங்கமாகவே இருக்கும். அது குப்பைத் தொட்டியில் வீசியெறிவதற்கே தகுதியுள்ளதாக அவ்வளவு கருமையாக இருக்கும். ஆனால் பிரிட்டிஷ் கிரீடம், பிரிட்டனுக்கும் உலகத்திற்கும் சிறந்த முறையில் உபயோகமாக இருக்க வேண்டுமென நம்பும்படியும், பிரார்த்தனை செய்யும்படியும் நான் வாசகர்களைக் கேட்டுக் கொள்கிறேன். அரசாங்க அறிக்கையிலுள்ள உறுதி மொழிகளை பிரிட்டன் நிறைவேற்றுமாயின், நியாயமான கடமை

யைச் செய்வதன்மூலம் ஏற்படும் உரிமையே பிரிட்டிஷ் கிரீடத்தில் தனிச் சிறப்புடன் கூடிய ஒரு ரத்தினமாக விளங்கும்.

மோ. க. காந்தி

—'ஹரிஜன்' - 20–5–1946

# 7

# மூலாதாரமான குறைகள்

இயல்பாகவும் சட்ட ரீதியாகவும் விளக்கம் கூறுவதாயின், அரசாங்க அறிக்கை துணிச்சலான, பட்டவர்த்தனமான ஒரு தஸ்தாவேஜி என்றே எனக்குத் தோன்றுகிறது. இருந்தாலும், அதற்கு உத்தியோக தோரணையில் கூறப்படும் விளக்கத்திற்கும், பொதுவாகக் கூறப்படும் விளக்கத்திற்கும் வேற்றுமை இருப்பதாகத் தோன்றுகிறது. அவ்விதம் வேற்றுமை இருந்து உத்தியோக தோரணையில் கூறப்படும் விளக்கம் அமலுக்கு வருமாயின், அது ஒரு கெட்ட சகுனமாகவே இருக்கும். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் நீண்ட கால சரித்திரத்தில், அதிகாரிகள் கொடுக்கும் விளக்கமே ஆதிக்கம் செலுத்திவந்திருக்கிறது. இந்தியாவில் சட்டத்தைத் தயாரிப்பவர், நீதிபதி, தண்டனையை நிறைவேற்றுபவர் ஆகியவர்களுடைய அதிகாரம் ஒரு நபரிடமே சேர்ந்திருக்கிறது என்பதை இதற்குமுன் எடுத்துக் கூற நான் தயங்கியதில்லை. அரசாங்க அறிக்கை, அந்த ஏகாதிபத்திய சம்பிரதாயத்திலிருந்து விலகிச் சென்றிருக்கிறது அல்லவா? 'ஆம்' என்றே நான் பதிலளிக்கிறேன்.

அது எப்படியாயினும், அதிலுள்ள குறைகளை இப்போது மேலெழுந்தவாரியாகக் கவனிக்க முற்படலாம்.

மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் சிம்லாவில் சில நாட்கள் தங்கியிருந்தபின், இம் மாதம் 14வ டில்லிக்குத் திரும்பிவந்தனர். 16வ அவர்களுடைய அறிக்கையை வெளியிட்டனர். ஆயினும், பொது மக்களுக்குப் பொறுப்புள்ள மத்திய அரசாங்கம் இன்னும் நமக்கு வெகு தொலைவிலேயே இருக்கிறது. அவர்கள் அறிக்கை வெளியிடுமுன் பொறுப்புள்ள மத்திய அரசாங்கத்தை அமைத்திருக்கலாம். ஆனல் அவர்கள் முதலில் அறிக்கையை வெளியிட்டு விட்டார்கள்: பின்னர் இடைக்கால அரசாங்கத்தை அமைப்பதற்கான முறைகளைத் தேட முற்பட்டார்கள். கோடிக்கணக்கான மக்கள் உணவும், உடையுமின்றிப் பஞ்சத்திஞல் அவதிப்பட்டுக் கொண்டிருக்கையில், இடைக்கால அரசாங்கம் ஏற்படுவதற்கு இன்னும் நீண்டகாலம் ஆகுமென்று தோன்றுகிறது. அந்த அறிக்கையில் உள்ள முதலாவது குறை இதுதான்.

சமஸ்தானங்கள் யாருடைய அதிகாரத்தின்கீழ் இருப்பது என்ற பிரச்னையும் இன்னும் தீர்ந்தபாடில்லை. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி முடிவுறும்போது, சமஸ்தானங்களின்மீது

பிரிட்டிஷாருக்குள்ள ஆதிக்கமும் முடிவுறும் என்று கூறுவது போதாது. இடைக் காலத்தில் சமஸ்தான நிர்வாகம் யாதொரு கட்டுப்பாடுமின்றி நடைபெற்றுவருமாயின், பின்னர் ஏற்படும் சுதந்திர அரசாங்கத்திற்கு அதைச் சமாளிப்பது கடினமாகிவிடும். இடைக்கால அரசாங்கம் ஏற்படும்போது, சமஸ்தானங்களிலுள்ள ஆதிக்கத்திற்கு முடிவு ஏற்பட முடியாதெனில், இடைக்கால அரசாங்கத்தின் ஒத்துழைப்புடன், முற்றிலும் சமஸ்தான மக்களின் நலனுக்காக அவற்றின் நிர்வாகம் நடைபெற வேண்டும். சுதந்திரத்தை விரும்புவது மக்களேயன்றி, மன்னர்கள் அல்ல; சுதந்திரத்திற்காகப் போராடிக் கொண்டிருப்பவர்களும் மக்களேயன்றி மன்னர்கள் அல்ல. மக்களின் சுதந்திரத்தை நசுக்குவதற்காகத் தாங்கள் அந்நிய வல்லரசினுல் சிருஷ்டிக்கப்பட்டவர்கள் என்பதை மன்னர்கள் ஒப்புக்கொள்வதில்லே. இருந்தாலும், அந்த வல்லரசின் தயவினுல்தான் அவர்கள் வாழ்ந்துவருகிருர்கள். மன்னர்கள் தாங்கள் வாயளவில் கூறும் விதம் உண்மையாக நடந்து கொள்பவர்களாயின், அவர்கள் புதிய திட்டத்தின் கீழ் மக்களின் ஆட்சி உரிமைக்கு இணங்க வேண்டும். இது, அரசாங்க அறிக்கையில் உள்ள இரண்டாவது குறையாகும்.

இடைக்காலத்தில் உள்நாட்டு அமைதியை நிலேநிறுத்தவும், வெளியாரின் ஆக்கிரமிப்பை எதிர்த்துப் பாதுகாப்பு அளிக்கவும் துருப்புகள் இருக்க வேண்டும் என்று கூறப்படுகிறது. அதற்காக இடைக்காலத்தில் துருப்புகளே வைத்துக் கொள்வதாயின் அவைகள் இருப்பது அரசியல் நிர்ணய சபையின் அலுவல்களுக்கே ஒரு முட்டுக்கட்டையாக இருக்கும். பின்னர் 'சுதந்திரம்' ஸ்தாபிக்கப்பட்ட பின்னரும்கூட, அந்தத் துருப்புகள் இருப்பதை விரும்பும்படியான நிலே ஏற்படும். உள்நாட்டுப் பாதுகாப்பிற்காகவோ அல்லது வெளியாரின் ஆக்கிரமிப்பிலிருந்து பாதுகாக்கவோ, அந்நியப் படைகளே விரும்பும், அல்லது அப்படைகளே வைத்துக்கொள்ளும்படியான நிர்ப்பந்தத்திற்கு உள்ளாகும் ஒரு தேசத்தை, ஒரு காலத்திலும், எந்த விதத்திலும் சுதந்திர நாடு என்று வர்ணிக்க முடியாது. அது சக்தியற்ற, சுயாட்சிக்குத் தகுதியற்ற ஒரு நாடேயாகும். சுதந்திரத்திற்குத் தகுதி வாய்ந்த ஒரு தேசம், பிறரின் உதவியை நாடாமல் தனித்தும், நிமிர்ந்தும், வளேந்து கொடுக்காமலும் இருக்கவேண்டும். ஒரு தேசத்தின் தகுதியை நிர்ணயிப்பதற்குக் கடுமையான சோதனே இதுதான். சுதந்திரம் அடைந்த பின் நடப்பதற்கு நமக்கு சக்தி இருக்க வேண்டுமாயின், இடைக்காலத்தில் யாதொரு உதவியுமின்றி பாய்ந்து செல்லுவதற்கு நாம் கற்றுக்கொள்ள வேண்டும். நமக்கு உணவு ஊட்டப்படுவது, இப்போதிருந்தே நின்றுவிட வேண்டும்.

இந்தக் காரியங்கள் இப்போது நாம் விரும்புவது போல் நடைபெறவில்லே. இதற்குக் காரணம் நமது பலவீனமேயாகும்.

காரணங்கள் வேறு எதுவாயினும், பிரிட்டிஷ் சர்க்காரின் அல்லது பிரிட்டிஷ் மக்களின் பிடிவாதமோ, இறுமாப்போ காரணம் அல்ல. நமக்கு எது கிடைத்தாலும், அது நமது தகுதிக்கு உகந்தாற்போல இருக்குமேயன்றி, கடல் கடந்த அக்கரைச் சீமையிலிருந்து வரும் ஒரு வரப் பிரசாதமாக இராது. தாங்கள் பிரகடனம் செய்தபடி செயல் புரியவே மூன்று மந்திரிகளும் வந்திருக்கிறார்கள். பிரிட்டிஷாரின் பிரகடனத்தை அவர்கள் மீறி, பிரிட்டிஷ் ஆட்சியை நிரந்தரமாகச் செய்வதற்கான முறைகளையும் வழிகளையும் கண்டு பிடிப்பார்களாயின், அப்போதுதான் அவர்கள் மீது குறைகூற முடியும். அத்தகைய பீதிக்கு ஆதாரம் இருக்கிறதெனினும், அவர்கள் மனத்தில் ஒன்றை வைத்துக் கொண்டு வெளியில் ஒன்றைக் கூறியிருக்கிறார்கள் என்பதற்கு யாதொரு அறிகுறியும் இல்லை.

மோ. க. காந்தி.

—'ஹரிஜன்' – 26—5—1946

# 8

# லார்டு வேவலின் அறிக்கை

## 16—6—1946

பிரிட்டிஷ் மந்திரிசபைத் தூதுகோஷ்டியினருடன் வைஸ்ராய் கலந்தாலோசித்து. இந்தியாவில் ஒரு கூட்டு அரசாங்கத்தை அமைப்பதற்கான சாத்தியக் கூறுகளைச் சிறிது காலமாகப் பரிசீலனை செய்துவருகிறார். இரண்டு பெரிய கட்சிகளையும், சில வகுப்புகளையும் சேர்ந்தவர்கள் அடங்கிய அரசாங்கத்தை அமைக்க வேண்டும் என்பதே அவரது நோக்கமாகும். அத்தகைய ஒரு அரசாங்கத்தை அமைப்பதற்காக, இரண்டு பெரிய கட்சிகளும் ஒப்புக்கொள்ளக் கூடிய சமரச அடிப்படையை நிர்ணயிப்பதில் உள்ள கஷ்டங்கள், அவர்களுக்குள் நடந்த விவாதங்களிலிருந்து வெளியாயின.

இந்தக் கஷ்டங்களையும், அவற்றைச் சமாளிக்க இரு கட்சிகளும் செய்த முயற்சிகளையும் வைஸ்ராயும், மந்திரி சபைத் தூதுகோஷ்டியினரும் நன்கு உணர்ந்து கொண்டுள்ளனர். எனினும் இந்த விவாதங்களை நீடித்துக்கொண்டு போவதால் யாதொரு பலனும் ஏற்படாதென்று அவர்கள் கருதுகின்றனர். எனவே மிகவும் பொறுப்பான, முக்கியமான அலுவல்களை நிறைவேற்றுவதற்கு, பலம் பொருந்திய, பிரதிநிதித்துவம் வாய்ந்த இடைக்கால சர்க்காரை அமைக்க வேண்டியது அவசரமும் அவசியமும் ஆகும்.

ஆகையால், இடைக்கால அரசாங்கத்தில் சேரும்படி கீழ்க்கண்டவர்களுக்கு வைஸ்ராய் அழைப்புக் கடிதங்கள் அனுப்பியிருக்கிறார். மே 16உ வெளியிடப்பட்ட அறிக்கைக்கு இணங்க

அரசியல் திட்டத்தைத் தயாரிக்க வேண்டும் என்ற அடிப்படையி லேயே அந்த அழைப்புகள் அனுப்பப்பட்டுள்ளன:

சர்தார் பலதேவ் சிங்
சர் என். பி. எஞ்ஜினீர்
ஸ்ரீ ஜகஜீவன் ராம்
பண்டித ஜவாஹர்லால் நேரு
ஸ்ரீ எம். ஏ. ஜின்னு
நவாப்ஸாதா லியாகத் அலிகான்
ஸ்ரீ எச். கே. மெஹ்தாப்
டாக்டர் ஜான் மத்தாய்
நவாப் முகமது இஸ்மெயில் கான்
காஜா சர் நஜிமுதீன்
சர்தார் அப்துர் ராப் நிஷ்டார்
ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரி
டாக்டர் ராஜேந்திர பிரசாத்
சர்தார் வல்லபாய் பட்டேல்

அழைக்கப்பட்டிருப்பவர்களில் எவராவது ஒருவர் சொந்த காரணங்களை முன்னிட்டு அழைப்பை அங்கீகரிக்க இயலாவிடில், வைஸ்ராய், கலந்து ஆலோசனை செய்த பின் அவரது ஸ்தானத் தில வேறு யாரையாவது அழைப்பார்.

இரண்டு முக்கிய கட்சிகளின் தலைவர்களுடன் கலந்து ஆலோசித்த பின், வைஸ்ராய் இலாகாக்களைப் பகிர்ந்தளிக்க ஏற்பாடு செய்வார்.

மேலே குறிப்பிட்ட இடைக்கால அரசாங்க அமைப்பை, மற்ற எந்த வகுப்புப் பிரச்னையையும் தீர்ப்பதற்கான ஒரு முன் உதாரணமாக எந்த விதத்திலும் எடுத்துக்கொள்ளக் கூடாது. தற்போதைய சங்கடமான நிலைமையைத் தீர்ப்பதற்காகவும், இயன்றவரையில் சிறந்த ஒரு கூட்டு அரசாங்கத்தை அமைப் பதற்காகவும் மாத்திரமே இந்த முறை மேற்கொள்ளப்பட்டிருக் கிறது.

இந்தப் பிரச்னை துரிதமாகத் தீர்க்கப்பட வேண்டும் என் பதை, இந்தியர்களான எல்லா சமூகத்தினரும் விரும்புகின்றனர் என்பதே வைஸ்ராய், மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் ஆகி யோரின் நம்பிக்கையாகும். அப்படியானல்தான் அரசியல் நிர் மாணம் முன்னேற முடியும்; இதன் மத்தியில் இந்திய அரசாங்க நிர்வாகமும் சாத்தியமானவரையில் சிறந்த முறையில் நடைபெற முடியும்.

எனவே தற்போதுள்ள இடையூறுகளை அகற்றுவதற்காக, எல்லாக் கட்சிகளும், குறிப்பாக இரண்டு முக்கிய கட்சிகளும்

இந்த யோசனையை அங்கீகரிக்குமென்றும், இடைக்கால சர்க்காரை வெற்றிகரமாக நடத்திச் செல்லும் விஷயத்தில் ஒத்துழைக்குமென்றும் அவர்கள் நம்புகின்றனர். இந்த யோசனை அங்கீகரிக்கப்படும் பட்சத்தில், ஜூன் 26வ வாக்கில் புதிய அரசாங்கத்தை வைஸ்ராய் ஆரம்பித்து வைப்பார்.

மேற்கண்ட முறைகளை அடிப்படையாகக் கொண்டு ஒரு கூட்டு அரசாங்கத்தில் கலந்துகொள்ள இரண்டு முக்கிய கட்சிகளோ அல்லது ஏதாவதொரு கட்சியோ விரும்பவில்லையாயின், சென்ற மே மாதம் 16வ விடுத்த அறிக்கையை அங்கீகரிக்க விரும்புவோரைக் கொண்டு எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு பிரதிநிதித்துவம் வாய்ந்த ஓர் இடைக்கால அரசாங்கத்தை அமைக்க முற்பட வேண்டும் என்பது வைஸ்ராயின் உத்தேசமாகும்.

உடனே மாகாண சட்ட சபைகளைக் கூட்டும்படியும், மே 16வ அறிக்கையில் கண்டுள்ளபடி அரசியல் நிர்ணய சபையை அமைப்பதற்கு அவசியமான தேர்தல்களை நடத்தும்படியும் மாகாண கவர்னர்களுக்கு வைஸ்ராய் கட்டளை பிறப்பித்திருக்கிறார்.

## தலைவர்களுக்கு வைஸ்ராயின் கடிதம்

காங்கிரஸ் அக்கிராசனரான மௌலானா அபுல் கலாம் ஆசாதுக்கும், முஸ்லிம் லீக் தலைவரான ஸ்ரீ ஜின்னாவுக்கும் வைஸ்ராய் வேவல் எழுதிய கடிதத்தின் விவரம் பின்வருமாறு :

இந்தக் கடிதத்துடன் எனது அறிக்கையின் பிரதியொன்றை நான் அனுப்பியிருக்கிறேன். அந்த அறிக்கை இன்று மாலை 4 மணிக்கு வெளியாகும்.

அவ்வறிக்கையில் கண்டிருப்பதுபோல், இடைக்கால அரசாங்கத்தை அமைக்கும் விஷயமாக ஓர் ஒப்பந்தம் ஏற்படுவதற்குத் தடையாக உள்ள கஷ்டங்களை பிரிட்டிஷ் மந்திரிகளும் நானும் முற்றிலும் உணர்ந்திருக்கிறோம். எனினும் இரண்டு பெரிய கட்சிகளுக்கும், சிறுபான்மையோரின் பிரதிநிதிகளுக்கும் இடையே அரசாங்கம் செயல்படுவதற்கான ஓர் ஒப்பந்தம் ஏற்பட முடியும் என்ற நம்பிக்கையை நாங்கள் கைவிட விரும்பவில்லை.

எனவே எங்களால் இயன்றவரையில் நடைமுறையில் சாத்தியமான ஒரு சிறந்த ஏற்பாட்டை நாங்கள் செய்திருக்கிறோம். முரண்பாடான கருத்துக்களையுடைய பல்வேறு பிரிவினரின் கோரிக்கைகளையும், திறமைசாலிகளும், பிரதிநிதித்

துவம் வாய்ந்தவர்களுமான நிர்வாகிகள் அடங்கிய ஓர் அரசாங்கத்தை அமைக்க வேண்டியது அவசியம் என்பதையும் கருத்தில் கொண்டே நாங்கள் அத்தகைய ஏற்பாட்டைச் செய்திருக்கிறோம். ஆகையால் எங்களுடைய புதிய அறிக்கையை அடிப்படையாகக் கொண்டு இப்போது கட்சிகள் தேசத்தின் நிர்வாகத்தில் பங்கு எடுத்துக் கொள்ளுமென நம்புகிறோம். உங்களிடமும், உங்களுடைய கமிட்டியிலும் நாங்கள் நிச்சயமாக நம்பிக்கை வைக்கலாம் என்பதே எங்களுடைய அபிப்பிராயமாகும். தேசத்தின் அவசரமான தேவைகளிலும், பொதுவான பரந்த பிரச்னைகளிலும் நீங்கள் கவனம் செலுத்தி, விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடன் இந்த யோசனையைப் பரிசீலனை செய்வீர்கள் என்பதே எங்களுடைய நம்பிக்கை.

# 9

# காந்திஜியுடன் நார்மன் கிளிப் பேட்டி

## 29—6—1946

**கிளிப்:** விவாதங்களெல்லாம் இப்போது முடிவடைந்து விட்டன. அவற்றைப் பற்றி நீங்கள் பேச முடியுமா?

**காந்திஜி:** முடியும். ஆனால் நீங்கள் இதை வெளியிடக் கூடாது. எப்போதாவது நீங்கள் பத்திரிகைகளுக்கு ஏதாவது அனுப்ப விரும்பினால், நான் முதலில் அதைப் பார்க்க வேண்டும்.

**கி:** இதுவரையில் ஏற்பட்டுள்ள பலன் உங்களுக்குத் திருப்தி அளித்திருக்கிறதா?

**கா:** எனக்குத் திருப்தி என்றோ அல்லது அதிருப்தி என்றோ நான் கூற முடியாது. பொதுவாக அது எனக்கு மகிழ்ச்சி அளிக்கவில்லை. எனது உணர்ச்சியை விவரித்துக் கூறுவதற்கில்லை. அதனாலேயே நான், எனது உணர்ச்சியை வழிகாட்டியாகக் கொள்ள வேண்டாமென்று காங்கிரஸ் கமிட்டியினரைக் கேட்டுக் கொண்டேன். நான்கு நாடக பாத்திரங்களின் மீது (மூன்று பிரிட்டிஷ் மந்திரிகளும் வைஸ்ராயும்) எனக்கு அவநம்பிக்கை இல்லை. ஆனால் நடவடிக்கைகளின் போக்கே எனக்கு அவநம்பிக்கையை உண்டாக்கியிருக்கிறது. அவையெல்லாம் செயற்கையாகவும் இயற்கைக்கு விரோதமாகவும் இருக்கின்றன. அவர்களுடைய கடமை மகத்தானது. அதை நான் குறைவாக மதிக்கவில்லை. அவர்கள் தாங்கள் வகுத்துள்ள கொள்கையை நிறைவேற்று

வதற்காக மேற்கொண்டுள்ள உழைப்பிலும் முயற்சியிலும் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. இருந்தாலும் அவர்கள் இவ்விஷயத்தில் ஈடுபடத் துவங்கியபோது நான் என்ன கூறினேனே அது உண்மையாகியிருக்கிறது. அவர்கள் தாங்கள் சமாளிக்க வேண்டியிருக்கும் கஷ்டங்களை நன்கு அறிந்து கொள்ளவில்லை என்று அவர்களிடம் கூறினேன். அவற்றை இப்போதுகூட அவர்கள் அறிந்துகொள்ளவில்லை. அது அவர்களுடைய குற்றமல்ல. அவர்கள் வஞ்சனையின்றித் தங்கள் கடமையைச் செய்திருக்கிறார்கள்; இருந்தாலும் அதை சரியான வழியில் செய்யவில்லை. அவர்கள் செய்திருப்பதைக் குறித்து அவர்களுக்கே திருப்தியில்லை. அவர்கள் இன்னும் தடுமாறிக் கொண்டிருக்கிறார்கள். பிரச்னைகளை எப்படிக் கையாளுவதென்று அவர்களுக்குத் தெரியவில்லை. ஒரே ஒரு விதமான சிந்தனைப் போக்கில் அவர்கள் பயிற்சி பெற்றவர்கள். எனவே அவர்கள் எவ்வளவு யோக்கியப் பொறுப்புடன் இருப்பினும், அவர்கள் வேறுவிதமாகச் சிந்திக்க முடியாது.

கி: எந்த ஆங்கிலேயராவது அதை அறிந்துகொள்ள முடியுமா?

கா: முடியும். உதாரணமாக ஆண்ட்ரூஸ் அறிந்து கொள்ள முடியும். அவர் அவ்விஷயத்தில் தாம் பெரும் அளவு வெற்றி பெற்றும் கூட, முற்றிலும் அந்த லட்சியத்தை அடைய முடியவில்லை என்பதை உணர்ந்தார். அவர் தம்முடைய சக்தியின் எல்லைகளை அறிந்திருந்ததே அவரது வெற்றிக்குக் காரணம். அவர் இந்தியராக வேண்டும் என்பதற்காக ஒவ்வொரு விஷயத்திலும் அவர் இந்தியரைப் போல் நடந்து கொண்டார். அவர் தமது மனத்தின் ஆழத்தில் உள்ள எண்ணங்களையெல்லாம் என்னிடம் கூறினார்; ஆனால், குருதேவரிடம்* கூறவில்லை. கவியரசரிடம் அவருக்கு அவ்வளவு அன்பும் பக்தியும். எனவே கடைசிவரையில் கவியரசர் ஆண்ட்ரூசுக்கு குருதேவராகவே இருந்தார். நான் சார்லியை முதன் முதலாகத் தென்னாப்பிரிக்காவில் சந்தித்தேன். அவர் ஒரு பண்டிதர், நான் பண்டிதனில்லை. ஆங்கில இலக்கியத்தில் எனக்கு உள்ள அறிவு பூஜ்யமேயாகும். செயலில் ஈடுபாடுள்ள என்னைப் போலன்றி அவர் ஒரு தத்துவ நிபுணர். அப்படியிருந்தும், எந்த இந்தியரையும் காட்டிலும் அவரிடம் நான் அதிக நட்புக் கொண்டேன். ஒரு நாள் அவர் என்னிடமிருந்து ஒரு வெகுமதி கோரினார். அவரை நான் சார்லி என்று கூப்பிட வேண்டும்; என்னை மோகன் என்று கூப்பிட அவரை அனுமதிக்க வேண்டும்; இதுதான் அவர் கோரிய வெகுமதியாகும். நான் அதற்கு உடனே

* கவியரசர் ரவீந்திரநாத் தாகூரையே குருதேவர் என்று காந்திஜி குறிப்பிடுவது வழக்கம்.

இசைந்தேன். இருந்தாலும் என்னைப் பொறுத்தமட்டில் அந்த ஒப்பந்தத்தை நிறைவேற்றுவது கடினமென்றும், ஏனெனில், நான் நண்பர்களிடமிருந்து எப்போதும் மரியாதையான தூரத்தில் இருப்பதே வழக்கமென்றும் அவரிடம் கூறினேன்! என்னிடத்தில் உயிர்ப்புள்ள ஒரு ஹிந்துவை மாத்திரமல்ல, உயிர்ப்புள்ள ஒரு கிறிஸ்தவரையும் ஆண்ட்ரூஸ் கண்டார்.

அவருக்கும் எனக்கும் மிகவும் நெருங்கிய உறவு இருந்ததன் ரகசியம் அதுதான். சமய சம்பந்தமாக அவர் மனத்தின் ஆழத்தில் உள்ள சிந்தனைகளை அவர் என்னுடன் பகிர்ந்து கொண்டார். தாம் ஓர் உண்மையான ஹிந்துவாகவும், முஸ்லிமாகவும் இருக்க வேண்டுமாயின், அடிப்படையில் தாம் ஓர் உண்மையான கிறிஸ்தவராக இருக்க வேண்டும் என்று ஆண்ட்ரூஸ் கூறினார்.

மந்திரி சபைத் தூது கோஷ்டியினர், தங்களுக்குச் சிறந்தது என்று தோன்றியதைச் செய்திருக்கிறார்கள் என்று நான் கூறியிருக்கிறேன். மீண்டும் அவ்விதமே கூறுகிறேன். உணவுப் பிரச்னையை எடுத்துக் கொள்ளுங்கள். அதைப்பற்றி மற்ற எவரையும் காட்டிலும் நான் நன்கு அறிவேன். ஏனெனில் நான் பாமர மக்களுடன் இரண்டறக் கலந்திருக்கிறேன். ஆனால், துன்பத்தில் ஆழ்ந்து வரும் பாமர மக்கள் வாழ வேண்டுமாயின், தாங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை ஆங்கிலேயர்கள் அறிந்து கொள்ளவில்லை. இந்தியாவிலிருந்து பிரிட்டன் கோடிக்கணக்கான பவுன்களைக் கொள்ளையிட்டு வருகிறது. இந்தியாவிலுள்ள கிராமங்களுக்கு நலன்களைச் செய்ய காங்கிரஸ் மந்திரி சபைகள் விரும்புவதாகவும், ஆனால் அவ்விதம் செய்ய முடியவில்லை யென்றும் ஒரு பொருளாதார நிபுணர் இன்று எழுதியுள்ளார். உடைக்கு வழியின்றி இந்தியா ஒரு காலத்திலும் நிர்வாணமாக இருக்க வேண்டிய அவசியமில்லை. இந்தியாவுக்குத் தேவையான பருத்தி இங்கே விளைகின்றது. ஆனால் அந்நிய நாட்டுச் செலாவணி தேவையாக இருப்பதால், அது ஏற்றுமதி செய்யப்படுகின்றது. மற்றச் சாதனங்களும் அவ்விதமே ஏற்றுமதி செய்யப்படுகின்றன. பணக்காரர்களான நகர மக்களுக்காகவும், பிரிட்டனுக்காகவும் கிராமங்களில் விளையும் பொருட்களெல்லாம் எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

**கி:** இந்தக் காரணத்திற்காகவே, இடைக்கால சர்க்கார் அதிகாரத்தை ஏற்றுக் கொள்வதில் நீங்கள் சுதந்திரத்தைக் காணவில்லையா?

**கா:** அவ்விதம் நீங்கள் கூறுவது அருமையாகவும் இனிமையாகவும் இருக்கிறது. ஆனால் உத்தேசிக்கப்பட்டுள்ள இடைக்

கால அரசாங்கத்தினிடம் அதிகாரம் எங்கே இருக்கிறது? காங்கிரசுக்கு விரோதமான அம்சங்கள் அதிகமாக இருப்பதால், காங்கிரஸ் தலைவர்கள் இடைக்கால அரசாங்கத்தில் கலந்துகொள்வது சாத்தியமில்லாமல் இருக்கிறது. ஜீவனுடன் கூடிய இடைக்கால அரசாங்கத்தை அமைத்து, அதன் மூலம் பொது மக்களுக்குத் தொண்டு செய்வது சாத்தியமாயின், அத்தகைய சந்தர்ப்பத்தை நான் விடமாட்டேன். அவர்கள் அமைக்க முயற்சித்த 'கூட்டு அரசாங்கத்தை'க் காட்டிலும் கலப்பற்ற முஸ்லிம் லீக் அரசாங்கம் சிறந்ததாக இருக்கும். என்ன நிகழ்ந்ததென்பது எனக்குத் தெரியாது. ஆனால், நிலைமை மேன்மேலும் மோசமாகி வருகிறது என்றே தோன்றியது. முன்போல் எல்லாவற்றையும் தகர்க்க ஐ. ஸி. எஸ். கோஷ்டியினர் ரகசியமாக வேலை செய்தார்களா? சென்ற வருடம் சிம்லா மகாநாடு முறிந்தது. காங்கிரஸ் நேர்மையாகவே நடந்துகொண்டது என்பதை வைஸ்ராய் ஒப்புக்கொண்டார். மகாநாடு முறிந்ததற்கு அவர் அப்போது தம் மீது பொறுப்பை ஏற்றுக்கொண்டார். அப்போது சிறுபான்மையினர் யாவரும் காங்கிரசின் கருத்துக்கு இசைந்தவர்களாக இருந்தனர். பொறுப்பை ஏற்றுக்கொள்ள முஸ்லிம் லீக் விரும்பாவிடில், அந்தப் பொறுப்பை காங்கிரசிடம் ஒப்புவிக்கும்படி நான் யோசனை கூறினேன். அது ஒரு சிறந்த யோசனை என்றே நான் கருதுகிறேன். ஆனால், அது ஒப்புக்கொள்ளப்படவில்லை. அதனாலேயே இப்போது நாம் குழப்பத்தில் இருக்கிறோம். ஒரு சமயத்தில் காங்கிரஸ் எப்படி இருந்ததோ அப்படி இப்போது லீக் இருக்கிறது என்பதை நீங்கள் அறிய வேண்டும். லீக் தலைவர்கள் யாவரும் பட்டம் பெற்றவர்கள். காங்கிரஸ் எத்தனையோ கஷ்ட நஷ்டங்களையும் துன்பங்களையும் உழைப்பையும் கடந்து மக்களின் பிரதிநிதி ஸ்தாபனம் என்று சொல்லக் கூடிய நிலைக்கு வந்திருக்கிறது. ஆனால், லீக் இன்னும் அந்த நிலையையெல்லாம் கடக்கவில்லை.

அப்படியிருந்தும் கூட, தற்போதைய முயற்சிகள் வெற்றி பெற வேண்டும் என்பதற்காக நான் இன்னும் உழைத்து வருகிறேன். இன்று எனது உணர்ச்சி பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டிருக்கிறதென நான் கூற முடியாது. எனது தோல்வியை நான் ஒப்புக்கொள்கிறேன். இருந்தாலும் நான் உண்மையைக் கூற வேண்டும். ஒரு சாராருக்கோ அல்லது இரண்டு சாராருக்குமோ நான் ஒரு நண்பனாகவும், ஆலோசனை கூறுபவனாகவும் இருக்க வேண்டுமாயின், எனது ஆழ்ந்த உணர்ச்சியை நான் மறைக்கக் கூடாது.

கி : தூது கோஷ்டியினர் உங்களது நிலையைப் புரிந்துகொள்வது சிறிது கடினமாக இருக்கிறது. இது இயல்பே என்பதை நீங்கள் உணரவில்லையா?

கா : அவர்களுடைய முன்னிலையிலும் நான் எனது தோல்வியை ஒப்புக் கொண்டிருக்கிறேன். 'உங்கள் முன் என் முழு மனத்தையும் திறந்து காட்ட நான் போராடி வருகிறேன்' என்று அவர்களிடம் கூறினேன். இன்னும் நான் அவர்களுக்கு ஆலோசனை கூறிவருகிறேன். எனினும் என் மனத்தில் சந்தேகமே நிரம்பியிருக்கிறது. நான் மிகவும் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளவேண்டியிருக்கிறது. இப்போது தோல்வி ஏற்பட்டால், அது மனித வர்க்கத்திற்கே மகா பயங்கரமான விளைவாக இருக்கும்.

கி : அரசியல் நிர்ணய சபையின் வெற்றியோ அல்லது தோல்வியோ நிச்சயமாக அதில் கலந்து கொள்வோரின் மன நிலையையே பொறுத்ததாக இருக்கும். அப்படி இராதா?

கா : ஆமாம். எனினும் அதில் ஒரு கட்சியோ அல்லது மற்றொரு கட்சியோ கலந்து கொள்ளலாம், அல்லது எந்தக் கட்சியுமே கலந்து கொள்ளாமலும் இருக்கலாம். ஒரு முஸ்லிம் தம்முடைய மதத்தை மாற்றிக் கொள்வதால், அவர் இந்தியரல்லாதாராக ஆகிவிடமாட்டார் என்பதை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டுமென விரும்புகிறேன். முற்றிலும் அற்பமான காரணங்களுக்காக எனது மகன் சிறிது காலத்திற்கு முஸ்லிமாக மாறினான். அதன் காரணமாக இந்தியன் என்ற நிலையை அவன் இழந்துவிட்டானா? இஸ்லாம் மதத்திற்கு மாறியிருக்கும் பல ஹிந்துக்களையும் காட்டிலும் நான் ஒருவேளை சிறந்த முஸ்லிமாக இருக்கலாம். இந்தக் கொள்கை முழுவதுமே அடிப்படையில் தவறாகும். லீகையும் காங்கிரசையும் ஒன்று சேர்க்க முடியுமென்று பிரிட்டிஷார் கற்பனை செய்துவருவது, சாத்தியமில்லாத ஒரு முயற்சியேயாகும்.

கி : மனித இயல்பில் எல்லையற்ற நம்பிக்கையுள்ள நீங்கள், மேற்கண்ட விஷயம் அசாத்தியமானதென்று கூறுவது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. கடவுளுக்கு எல்லாம் சாத்தியமே.

கா : நீங்கள் ஆழ்ந்து சிந்திப்பீர்களாயின், எனது நிலையில் சிறிதும் முரண்பாடு இல்லை என்பதைக் காண்பீர்கள். நேர் மாறான அபிப்பிராயம் உடையவர்கள் ஒன்று சேர முடியாது என்பதே எனது கருத்தாகும். எனது கருத்து, மனித இயல்பில் எனக்குள்ள நம்பிக்கைக்குச் சிறிதும் முரண்பாடானதல்ல. பாகிஸ்தான் ஒரு பாவம் என்று நான் கூறியிருக்கிறேன். பாவம் வெற்றி பெறும்படி செய்வதில்

நான் ஒத்துழைக்க முடியுமா? கடவுள் தமக்குத் தாமே பொய்யாக நடந்து கொள்ள முடியாது; சத்தியம் அசத்தியத்திற்காக வேலை செய்ய முடியாது. கடவுளுக்கு எதுவும் சாத்தியம் என்பதற்காக, கடவுள் தாம் விதித்துள்ள சட்டத்தை மீறும்படி செய்ய முடியாது. இந்தியாவின் சுதந்திரம் என்பதுபற்றி பிரிட்டனும், முஸ்லிம் லீகும், காங்கிரசும் கூறும் விளக்கம் வெவ்வேறு விதமாக இருக்கிறது. முதலில் இந்தியாவைப் பிளக்க வேண்டும், பின்னர் தான் சுதந்திரம் அளிக்க வேண்டும் என்பது முஸ்லிம் லீக் கூறும் விளக்கமாக இருக்கிறது. இந்தியா முழுவதற்கும் யாதொரு நிபந்தனையுமின்றி உடனடியாக சுதந்திரம் வழங்க வேண்டும் என்று காங்கிரஸ் கூறுகிறது. அரசியல் நிர்ணய சபை அதன் பெயருக்குத் தகுதி வாய்ந்ததாக நடந்து கொள்வதாயின், அது சரியாகவும் தவருகவும் கூட நடந்து கொள்வதற்கு உரிமையுள்ள மகோன்னத சபையாக இருக்க வேண்டும். அது நிபந்தனைகளால் கட்டுண்டதாக இருக்கக் கூடாது.

**கி:** சிறுபான்மையோரிடம் பிரிட்டிஷாருக்குள்ள அக்கறையை நீங்கள் உணர்ந்து மதிக்கின்றீர்களா?

**கா:** அவ்விதம் செய்ய பிரிட்டிஷாருக்கு உள்ள உரிமையை நான் ஒப்புக்கொள்ளவில்லை. அவர்கள் அவ்விதம் கூறுவது ஏகாதிபத்தியத்தின் ஒரு சின்னமேயாகும். அவர்கள் அறியாமலேயே அந்த மன நிலை அவர்களுக்கு இருந்து வருகிறது. ரோமன் கத்தோலிக்கரின் மீது நீங்கள் எத்தனையோ துன்பங்களைச் சுமத்தியபோது கூட உங்களுக்கு சுதந்திரம் இருந்தது. உங்களுடைய சுதந்திரத்தில் வெளியார் யாராவது தலையிடத் துணிந்தார்களா? வேண்டுமென்றே வேற்றுமை விதைகளை விதைத்து, எங்களுடைய சமுதாய அமைப்பில் முடிவில்லாத வேற்றுமைகளைச் சிருஷ்டித்த ஆங்கிலேய ஆட்சியாளர்களுக்கு எங்களிடையே உள்ள "வேற்றுமைகளை" யொட்டிக் கவலைப் பட என்ன உரிமை இருக்கிறது? "வெள்ளையரின் சுமை" என்ற இந்த மனோபாவத்தை நீங்கள் விட்டொழித்தாலன்றி, உங்களால் இந்தியாவுக்கு உண்மையான உதவி அளிக்க முடியாது.

**கி:** அதுதான் எங்களுக்கு எல்லா இடங்களிலும், எகிப்திலும் கஷ்டமாக இருக்கிறது.

**கா:** காலம் செல்லச் செல்ல உங்களுடைய கஷ்டங்கள் அதிகமாவதை நீங்கள் காண்பீர்கள். பிரிட்டிஷ் தொழிற்கட்சியிடம் எனக்குப் பூரண அனுதாபம் இருக்கிறது. லாஸ்கியும் மற்றவர்களும் எங்களுக்குக் கூறுவதுபோல், பொதுவாக பிரிட்டிஷ் மக்களின் மனம் மாறியிருக்குமாயின், 'சிறிய இங்கிலாந்து' என்று கூறப்படுவதைக் கண்டு பிரிட்டன் திருப்தியடைந்து, மற்ற நாடுகளின் முதுகிலிருந்து இறங்கி

விடுமாயின், அது வேறு விஷயமாகும். அவ்விதம் இல்லா விடில், தொழிற்கட்சியும் சர்ச்சிலின் வழியையே பின்பற்று வதாக இருக்கும். எனினும் சர்ச்சிலின் தைரியத்திலும் சமயோசித புத்தியிலும் எனக்கு மட்டற்ற மதிப்பு உண்டு.

இந்தியாவின் திக்கற்ற நிலையை உத்தேசித்து, பிரிட்டன் இந்தியாவிலிருந்து வெளிவேறுவதை நான் விரும்பவில்லை. ஒரு எல்லைக்குட்பட்ட அகிம்சையின் மூலம் நாங்கள் இவ்வளவு தூரத்திற்கு வந்திருப்பதைக் குறித்து நான் பெருமையடைகிறேன். மிருக பலத்தினால் இந்தியா சுதந் திரம் பெறுவதை நான் மன நிம்மதியுடன் பார்த்துக் கொண் டிருக்க முடியாது. பிரிட்டன் தனது பங்கை கண்ணிய மாகவும் பெருந்தன்மையுடனும் செய்யுமாயின், வளர்ந்து வரும் துவேஷம் மறைந்து நட்பு உறவு ஏற்படலாம்.

கி: இந்தியாவின் எதிர்கால முறையை லண்டனில் வகுப்பது சாத்தியமா?

கா: நிச்சயமாக. என்னுடைய ஒரே பயம் என்னவெனில், தொழிற்கட்சி அரசாங்கத்தின் ஏகாதிபத்தியத் தன்மை, எப்பாடுபட்டாயினும் நியாயமான காரியத்தைச் செய்ய முடியாமல் அவர்களைத் தடுத்துவிடும் என்பதுதான். எல்லாக் கட்சிகளையும் திருப்தி செய்ய அவர்கள் விரும்பு கிறார்கள். இது சாத்தியமில்லாத ஒரு காரியமாகும். சிலருக்கு அதிருப்தி ஏற்படுவதாக இருப்பினும், அவர்கள் நியாயமான காரியத்தைச் செய்யத் துணியவேண்டும். இதை, ஏகாதிபத்திய வழியில் செய்வது முடியாத காரியம்.

கி: அப்படியாயின், எங்களுக்காகவும் சரி, உங்களுக்காகவும் சரி, இந்தியாவிலேயே ஒரு சமரசமான முடிவுக்கு வருவது சிறந்ததென்பது நிச்சயம்.

கா: நீங்கள் கூறுவது சரி. சரியான வழியில் அதை எப்படிச் செய்வது என்பதே இப்போது கேள்வி. அவர்கள் அவ்விதம் விரும்பினால்கூட, அம்முயற்சியில் வெற்றிபெற முடியாமற்போகலாம் என்பதே எனது அச்சமாகும்.

கி: சமரசமான ஒரு வழியைக் கண்டுபிடிக்க முடியாதா?

கா: அவ்விதம் கண்டு பிடிக்க அவர்கள் பெருமுயற்சி செய்து வருகிறார்கள். நானும் பெரு முயற்சி செய்து வருகிறேன். இங்குள்ள நிலைமையை அவர்கள் சரியாகப் புரிந்துகொள்ள வில்லையென்றாலும், நான் எப்போதுமே உதவி புரியத் தயாராக இருந்துவருகிறேன். ஆனால் இப்போது எனக்கு எல்லாம் குழப்பமாக இருந்துவருகிறதென்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். என்னை இருள் சூழ்ந்து கொண் டிருக்கிறது.

கி: பிரிட்டன் சரியான காரியத்தைச் செய்வதில் உங்களுக்குள்ள மூலாதாரமான அவநம்பிக்கையே உங்களுடைய சந்தேகங்களுக்குக் காரணம் அல்லவா?

கா: இல்லை. என்ன நேருவதாயினும் சரியான காரியத்தை பிரிட்டன் செய்யும் என்பதில்தான் எனக்கு நம்பிக்கை இல்லை. அவர்கள் விடுத்த அறிக்கை கூடுமானவரையில் சிறந்ததொன்று என்று நான் கூறினேன்; ஆனால் அது மிகச் சிறந்ததல்ல. ஆரம்பத்திலேயே அதற்கு மூன்று விளக்கங்கள் கொடுக்கப்பட்டன. அதற்கு காங்கிரஸ் ஒரு விளக்கம் கொடுத்தது; முஸ்லிம் லீக் மற்றொரு விளக்கம் கொடுத்தது; அதன் கர்த்தாக்கள் வேறொரு விளக்கம் கொடுத்தனர். அந்த விளக்கங்களே அவர்களுடைய அறிக்கையை அபாயகரமானதாகச் செய்துவிட்டன.

கி: அதன் கர்த்தாக்கள் கூறும் விளக்கத்தை ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது? எந்தக் கருத்துடன் அறிக்கையைத் தயாரித்திருக்கிறார்கள் என்பதை முடிவாகக் கூறவேண்டியவர்கள் அவர்கள் தான்.

கா: சட்டத்திலுள்ள வாசகங்களின் அர்த்தத்திற்குப் புறம்பாக சட்டத்தை இயற்றியவரின் நோக்கத்தைச் சட்டம் ஒப்புக் கொள்வதில்லை.

கி: அவர்களுடைய நோக்கம் தெளிவாக விளங்குமாறு அறிக்கையின் வாசகங்களை மாற்றியமைக்க முடியாதா?

கா: அது முடியாத காரியம். அப்படியாயின் அதன் வாசகங்களை இடைவிடாமல் மாற்றிக்கொண்டும் கத்தரித்துக் கொண்டும் இருக்க வேண்டியதுதான்.

கி: அதற்கு சட்டபூர்வமான விளக்கத்தை நீங்கள் ஒப்புக் கொள்வீர்களா?

கா: நிச்சயமாக ஒப்புக்கொள்வேன்.

கி: அதன் வாசகங்களுக்கான விளக்கத்தைக் காட்டிலும் அவற்றைத் தயாரித்தவர்களின் நோக்கத்தைப் பற்றிய விளக்கம் சிறந்ததல்லவா?

கா: இந்தக் கேள்விகளுக்கெல்லாம் கோர்ட்டார்தான் விடை அளிக்க வேண்டும்.

கி: இப்போதுகூட உடனடியான பிரச்னை இடைக்கால அரசாங்கம்தான் என்றும், ஒரு தேசீய முஸ்லிமை நியமிப்பதில் காங்கிரசுக்குள்ள உரிமையை நிராகரித்ததே முக்கியமான தடை என்றும் நான் நினைப்பது சரியல்லவா?

கா: ஆம், எனினும் அதற்கு மேலான பொதுவான உரிமை காயிதே ஆஜமுக்கு அளிக்கப்பட்டுவிட்டதால், தேசீய முஸ்லிம் பிரச்னை இப்போது ஒரு சிறிய விஷயமாகி விட்டது.

கி: யாரை வேண்டுமாயினும் நியமிக்க காங்கிரசுக்கு உள்ள உரிமையை அங்கீகரித்து, ஆனல் அந்த உரிமையைப் பயன் படுத்த வேண்டாமென்று காங்கிரசைக் கேட்டுக்கொண்டால், பிரச்னை தீர்ந்துவிடாதா?

கா: நெருக்கடியான சமயத்தில் உரிமையைப் பயன்படுத்த முடியாவிடில், அந்த உரிமை வீணுகிவிடுகிறது. ஜின்னுவின் முற்றிலும் தவறான கருத்துக்கு இணங்க, காங்கிரஸ் ஒரு சாதி ஹிந்து ஸ்தாபனமாகத் தாழ்த்தப்பட்டிருக்கிறது. அதை ஒப்புக்கொள்வது, காங்கிரசின் பண்டைய சரித்திரமே பொய்த்துப் போகும்படி செய்வதாகும்.

கி: எனினும் தன்னல மறுப்பு உங்களுடைய மூலாதாரமான சித்தாந்தங்களில் ஒன்று அல்லவா?

கா: (உரக்கச் சிரித்துக்கொண்டே) சைத்தான்கூட வேதத்தை மேற்கோளாகக் கொடுக்கிறது!!! நான் விரும்புவதெல்லாம் என்னவெனில், நான் கூறியதெல்லாம் உங்களுடையு மனத்தில் ஆழ்ந்து பதியவேண்டும் என்பதே. அப்போது தான் நீங்கள் எனது கருத்துக்களை நன்கு புரிந்துகொண்டு விளக்க முடியும்.

# 10

# ஜின்னுவின் மிரட்டலால் விளைந்த நன்மை

(காந்திஜி, பிரிட்டிஷ் மந்திரிசபைத் தூதுகோஷ்டியினர், வைஸ்ராய் ஆகியவர்களிடையே கடிதங்களும், செய்திகளும் கொண்டு போகும் தூதராக ஸ்ரீ சுதீர் கோஷ் இருந்துவந்தார். இவரைப் பற்றி காந்திஜி தமது கடிதங்களிலும் குறிப்பிட்டுள்ளார். லண்டனிலிருந்து அவர் காந்திஜிக்கு எழுதிய இரண்டு முக்கியமான கடிதங்கள் இங்கே தொடர்ந்து கொடுக்கப்பட்டுள்ளன :)

லண்டன்,
4-8-1946

பாபுஜி,

நேரடி நடவடிக்கையில் ஈடுபடுவதாக ஜின்னு மிரட்டிய பிறகு, அவரை அழைத்துப் பேசும்படி பிரிட்டிஷ் மந்திரி சபையினர் வைஸ்ராயைக் கேட்டிருந்தனர். ஜின்னு ஒத்துழைக்கத் தயாராக இல்லாவிடில், ஜின்னு இல்லாமலேயே காங்கிரசிடமும்

அவர்களுடன் வேலை செய்யத் தயாராக இருக்கும் மற்றவர்களிடமும் நிர்வாகப் பொறுப்பை ஒப்புவிக்க பிரிட்டிஷ் மந்திரி சபையினர் தீர்மானித்திருப்பதாக அவரிடம் கூறும்படியும் அச் சபையினர் வைஸ்ராயைக் கேட்டிருந்தனர். ஆனால் ஜின்னாவின் மிரட்டலுக்குப் பின் உடனடியாக அவரை அழைத்துப் பேசினால், அவரது மிரட்டலைக் கண்டு பிரிட்டிஷார் பயந்துவிட்டார்கள் என்ற எண்ணத்தை உண்டாக்குமென்றும், எனவே அவரை அழைக்க வேண்டாமென்றும் வைஸ்ராய் யோசனை கூறினார். அதற்கு பிரிட்டிஷ் மந்திரி சபையினரும் இணங்கினர்.

ஜின்னாவின் பாய்ச்சல் உண்மையில் பலனையே கொடுத்திருக்கிறது. அது விஷயங்களைச் சுலபமாக்கியிருக்கிறது. பிரிட்டிஷ் மந்திரிகளுக்கும், இங்கேயும் இந்தியாவிலும் உள்ள அரசாங்கங்களுக்கும் அது சரியான அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறது. அத்தகைய அதிர்ச்சி அவர்களுக்கு முற்றிலும் அவசியமாகவும் இருந்தது. காங்கிரஸ்காரர்கள் தங்களுடைய விரோதிகள் என்றும், முஸ்லிம்கள் தங்களுடைய நண்பர்கள் என்றும் அவர்கள் எப்போதும் எண்ணி வந்தனர். ஆனால், இப்போது அவர்களுக்கு அந்த எண்ணம் போய்விட்டது. யார் தங்களுடைய நண்பர்கள் என்பதையும், யார் விரோதிகள் என்பதையும் இப்போது அவர்கள் அறிந்திருக்கிறார்கள். எனவே ஜின்னாவின் மிரட்டல் மிகுந்த நன்மையையே செய்திருக்கிறது. அவர் அத்துமீறிச் சென்று தமது செல்வாக்கைச் சீர்குலைத்துக் கொண்டுவிட்டார்.

அதிகக் காலதாமதமின்றி நிர்வாகப் பொறுப்பை காங்கிரசிடம் ஒப்புவிக்கவேண்டுமென்று பிரிட்டிஷ் மந்திரி சபையினர் தீர்மானித்திருக்கிறார்கள். இந்தியாவிலுள்ள தங்கள் பிரதிநிதிக்கு அவர்கள் அவ்விஷயமாக அவசியமான கட்டளைகளும் அனுப்பியிருக்கிறார்கள். இருந்தாலும், இந்திய அரசாங்கத்தில் லீகும் சேர்ந்துகொள்ளும்படி செய்ய இறுதியாக ஒரு தடவை முயற்சி செய்து பார்க்கவேண்டுமென அவர்கள் உங்களுக்கு மனப்பூர்வமாக யோசனை கூறியுள்ளனர். நியாயமான, நேர்மையான நிபந்தனைகளின் கீழ் அது சாத்தியமானால் மாத்திரம்தான் அவ்விதம் முயற்சி செய்து பார்க்கவேண்டுமென அவர்கள் கூறியுள்ளனர். அதன் சம்பந்தமாக வைஸ்ராய் எதுவும் செய்வதால் பலனில்லை என்பதை அவர்கள் உணர்ந்திருக்கின்றனர். அழைப்புக்காகக் காத்திராமலும், சம்பிரதாயத்தைக் கவனித்துக் கொண்டிராமலும் வைஸ்ராயிடமிருந்து அந்தப் பொறுப்பை காங்கிரஸ் அக்கிராசனர் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் அவர்கள் யோசனை கூறியுள்ளனர். காங்கிரஸ் அக்கிராசனர் வைஸ்ராயைச் சென்று பார்க்கவேண்டும் என்றும், தம்மால் இயன்ற உதவி புரியவும், ஸ்ரீ ஜின்னாவிடம் சென்று அவர் தமது கடமையைச் செய்ய ஆயத்தமாக இருக்கிறாரா என்பதை அறிந்து வரவும் தாம் தயாராக இருப்பதாக அவரிடம் கூறவேண்டும் என்றும் பிரிட்டிஷ் மந்திரிகள் யோசனை கூறுகின்றனர். அக்கிராசனரின்

அத்தகைய கோரிக்கைக்கு உடனே இணங்கும்படியும் வைஸ்ராய்க்கு அறிவித்திருக்கிறார்கள். அரசாங்கத்தை அமைக்கும்படி காங்கிரஸ் அக்கிராசனரை வைஸ்ராய் கேட்க வேண்டும் என்பதே இதன் அர்த்தமாகும். ஸ்ரீ ஜின்னா ஒத்துழைக்க மறுத்து அக்கிராசனர் ஒப்புக்கொள்ள முடியாத நிபந்தனைகளைக் கூறுவாராயின், தம்மால் இயன்றதையெல்லாம் தாம் செய்துவிட்டதாயும், ஸ்ரீ ஜின்னாவுடன் சேர்ந்து வேலை செய்வது உண்மையில் சாத்தியமில்லாத காரியம் என்றும் அக்கிராசனர் வைஸ்ராய்க்கு அறிவிக்கவேண்டும். அவ்விதம் இறுதியாக ஒரு தடவை முயற்சி செய்வது, காங்கிரசின் நியாயமான போக்கையும் பெருந்தன்மையையுமே காட்டும்; உலகத்தின் முன் காங்கிரசின் கௌரவத்தையும் அதிகப்படுத்தும். பிரிட்டிஷ் சர்க்காரிடையே காங்கிரசின் கௌரவம் இதற்கு முன் ஒரு போதும் இராதவாறு அதிகமாகியிருக்கிறது. அக்கிராசனர் அம்முயற்சியில் வெற்றிபெறாவிடில், காங்கிரஸ் பிரதிநிதிகளும் மற்ற சிறுபான்மையோர் பிரதிநிதிகளும் அடங்கிய ஓர் அரசாங்கத்தை அமைக்கத் தமக்கு உதவிபுரியும்படி அக்கிராசனரைக் கேட்குமாறும் வைஸ்ராய்க்கு பிரிட்டிஷ் சர்க்கார் அறிவித்திருக்கிறார்கள். இந்திய அரசாங்க மந்திரி சபையில் ஐந்து ஸ்தானங்களைக் காலியாக விட்டுவைக்கவேண்டும் என்று யோசனை கூறப்பட்டிருக்கிறது. லீக் தலைவர்கள் தங்கள் மனத்தை மாற்றிக்கொண்டால், பின்னர் அவர்களை அரசாங்கத்தில் சேர்த்துக்கொள்வதற்காகவே அவ்விதம் சில ஸ்தானங்கள் காலியாக விடப்பட்டிருக்கின்றன. பின்னரும் அவர்களுடைய மனம் மாறாவிடில், லீக் அல்லாதவர்களை அந்த ஸ்தானங்களில் நியமித்துவிடலாம். அவ்விதம் உருவாகும் அரசாங்கம் சட்ட நுணுக்கத்தின்படி வைஸ்ராயின் அரசாங்கமாகவே இருக்கும் என்றாலும், உண்மையில் காங்கிரஸ் அக்கிராசனரே அரசாங்கத்தின் தலைவராக இருப்பார். அத்தகைய அரசாங்கத்தின் அலுவல்களில் தலையிடாமல் இருக்கும்படியும் வைஸ்ராய்க்கு உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள். உறுதிமொழிகள் சம்பந்தமாக சமீபத்தில் பண்டித நேரு வைஸ்ராய்க்கு எழுதியதாக அறிகிறேன். முசூரியிலுள்ள மௌலானா சாகிபுக்கு வைஸ்ராய் எழுதிய கடிதத்தைக் கொண்டு காங்கிரஸ் திருப்தியடைய வேண்டுமென்று நீங்கள் காங்கிரசுக்குக் கூறும்படியும் யோசனை சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதம் செய்வதால் காங்கிரசுக்கு யாதொரு நஷ்டமும் இல்லை. எனினும் அதனால் பிரிட்டிஷ் சர்க்கார் தங்கள் அலுவல்களைச் செய்வது எளிதாக இருக்கும். வைஸ்ராயைப் பற்றிய சங்கடமான நிலைமையை அவர்கள் உணர்ந்துள்ளனர். எனினும் தற்போது அவ்விஷயமாக அவர்கள் எதுவும் செய்யக்கூடிய நிலைமையில் இல்லை. இப்போதே இந்தியா விஷயமாக பிரிட்டிஷ் மந்திரிகளுக்கு சர்ச்சில் எவ்வளவு முடியுமோ அவ்வளவு அதிகமான கஷ்டங்களைக் கொடுத்துவருகிறார். அவர்கள் இப்போது தான் பதவிக்குப் புதிதாக வந்திருப்பதால், பல பிரச்னைகளையொட்டியும் அவர்கள் கவலையடைந்திருக்கிறார்கள்.

அரசியல் நிர்ணய சபை சம்பந்தமாக, காங்கிரஸ் ஒரு பிரகடனம் விடுக்கும்படி செய்ய வேண்டுமென உங்களைக் கேட்டுக் கொள்கிறார்கள். அதாவது பெரிய சிறுபான்மையோர் பிரிவு உள்பட எல்லாச் சிறுபான்மையினருக்கும் நீதி வழங்கும்படி கூற வேண்டும்; எல்லோருக்கும் நியாயம் கிடைக்கும்படி செய்வதே காங்கிரசின் ஆர்வம் என்பதையும் உறுதியாகக் கூற வேண்டும். ஸ்ரீ ஜின்னாவின் மிரட்டலைச் சட்டை செய்ய வேண்டாம் என்றும், அவரது சவாலுக்கு யாதொரு பதிலும் அளிக்க வேண்டாம் என்றும் பிரிட்டிஷ் மந்திரிகள் யோசனை கூறியிருக்கிறார்கள். ஏனெனில் நாம் எல்லோரும் விரும்பும் முறைகளை பிரிட்டிஷ் சர்க்கார் எடுத்துக்கொள்ளத் தீர்மானித்திருக்கிறார்கள். எனவே, காங்கிரசின் பெருந்தன்மையை பலவீனம் என்று 'சிலர் நினைப்பதாக இருந்தால் கூட, அதைப் பொருட்படுத்தாமல் காங்கிரஸ் தனது இயல்பான உயர்ந்த மனப்பான்மையையும், பெருந்தன்மையையும் காட்ட வேண்டும் என்று பிரிட்டிஷ் மந்திரிகள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். நீண்ட கால யோசனைகளையொட்டி காங்கிரஸ் ஒரு நல்ல தீர்மானம் நிறைவேற்றுவதன் மூலமும், அக்கிராசனர் (சாத்தியமாயின் சர்தார்ஜியுடன் சென்று) வைஸ்ராயைப் பார்ப்பதன் மூலமும் நிலைமை சீராகலாம் என்றும் கூறப்படுகிறது. முக்கியமானது என்னவெனில், காங்கிரஸ் இப்போது முன் வந்து தானே ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும், பிரிட்டிஷாரிடம் விட்டுவிடக் கூடாது.

எல்லோருக்கும் அன்பு,

சுதீர்

## 11

# லண்டனுக்கு காந்திஜியின் தந்தி

லண்டன்,

*7-9-1946*

அன்புள்ள பாபுஜி,

ஆகஸ்டு 28-இல் நீங்கள் அனுப்பிய செய்தி வந்து சேர்ந்தது. அதற்குப் பதிலளித்து நான் தந்தி அனுப்பினேன். உங்களுடைய தந்தி கிடைத்தவுடனேயே நான் பெதிக் லாரென்சைப் பார்த்தேன். அதற்கு முதல் நாள் மாலை நீங்கள் வைஸ்ராயைப் பார்த்த பிறகே, அதை நீங்கள் அனுப்பியிருக்க வேண்டுமென ஊகித்தேன். எனவே அதன் கருத்து என்ன என்பதை நான் தெரிந்துகொண்டேன். ஆகையால், அதை பெதிக் லாரென்சிடம் விளக்கிக் கூறுவதில் எனக்குக் கஷ்டம் எதுவும் இருக்கவில்லை.

நான் அவருடன் நீண்ட நேரம் விவாதித்தேன். அவர் பிடிவாதமாக இருந்தார். "காங்கிரசின் நிலை கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை என்பதுபோல் இருக்கிறது; இந்தியப் பிரச்னைகளில் எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு அதிக அதிகாரம் தனக்கு இருக்க வேண்டும் என்றும், பிரிட்டிஷாருக்கும் வைஸ்ராய்க்கும் எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு குறைந்த அதிகாரமே இருக்க வேண்டும் என்றும் காங்கிரஸ் விரும்புகிறது; மற்ருெரு புறம், பிரிட்டிஷார் தலையிட்டு பிற்போக்கான முறையை மேற்கொள்ள வேண்டுமென்றும், அதாவது மாகாண விஷயங்களில் பிரிட்டிஷார் தங்களுடைய விசேஷ அதிகாரத்தை உபயோகிக்க வேண்டும் என்றும், வங்காளத்தில் சட்டபூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மந்திரி சபையை நசுக்கிவிட வேண்டும் என்றும் கூறுகிறது;"—இந்த தோரணையில் அவர் அவ்விஷயமாக விவரிக்கத் தொடங்கினர். நான் இவ்விதம் விளக்கிக் கூறினேன்: "பிற்போக்கான முறை எதையும் கைக்கொள்ள வேண்டும் என்ற விருப்பம் காங்கிரசுக்கு இல்லை. வங்காளத்தில் ஏற்பட்ட பயங்கரமான நிகழ்ச்சிகள் மீண்டும் நேரக்கூடாது என்பது மாத்திரமே எங்களுடைய கவலையாகும். முஸ்லிம் லீகிற்கு அநீதி இழைக்கப்பட்டிருக்கிறதென்றும், எனவே சட்டத்தை மீறுவதன் மூலம்தான் பரிகாரம் தேட வேண்டும் என்றும் ஸ்ரீ சுஹ்ரவர்த்தி விரும்பி, அவ்விதம் செய்வதாயின், அவர் அரசாங்கத்துக்கு வெளியே சென்றுவிட வேண்டும்; பின்னர் சட்டத்தை மீறி அதன் விளைவுகளை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். அவர் ஒரே சமயத்தில் சட்டத்தைப் பாதுகாப்பவராகவும் மீறுபவராகவும் இருப்பதாயின் நிலைமை சகிக்க முடியாததாகிறது."

வங்காளத்தில் அமைதிக்குப் பங்கம் விளைவிக்கும் குற்றத்தில் ஸ்ரீ சுஹ்ரவர்த்தி சம்பந்தப்பட்டிருக்கிருர் என்பதற்கு என்னிடம் சாட்சியம் எதுவும் இல்லை என்று பெதிக் லாரென்ஸ் சுட்டிக் காட்டினர். என்னிடம் சட்ட பூர்வமான சாட்சியம் இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்வதாகவும், ஆனால் அவர் குற்றவாளி என்பதற்குப் போதிய சந்தர்ப்ப சாட்சியம் இருக்கிறதென்றும் நான் பெதிக் லாரென்சிடம் கூறினேன். மேலும் சமாதானத்திற்குப் பங்கம் விளைவிக்கும் குற்றத்தில் அவர் சம்பந்தப்படவில்லை என்ருலும் கூட, மாகாணத்தில் ஒழுங்கை நிலை நிறுத்த அவரால் முடியவில்லை யென்றும், அதன் விளைவாகவே இந்தியாவின் சரித்திரத்திலேயே கண்டிராத பயங்கரமான நிகழ்ச்சிகள் ஏற்பட்டன என்றும், ஒரு அரசாங்கத்தின் மூலாதாரமான கடமை சமாதானத்தைப் பாதுகாப்பதுதான் என்றும் நான் கூறினேன். வங்காள மந்திரி சபையை விலக்குவதற்கு அது ஒன்றே போதும் என்றும் குறிப்பிட்டேன். அத்தகைய ஒரு முறையைக் கைக்கொள்ள காங்கிரசில் யாரும் விரும்பமாட்டார்கள். எனினும் நாடு முழுவதும் நிலைமை அமைதியாக இருக்கும்படி பார்த்துக் கொண்டாலன்றி, காங்கிரஸ் தலைவர்களுடைய கவனத்தை ஈர்க்-

கும் ஏராளமான பெரும் பிரச்னைகளையும் எப்படிச் சமாளிப்பது என்று கேட்டேன்.

அதற்கு பெதிக்-லாரென்ஸ் கூறிய விளக்கம் இதுதான்: "நாட்டில் சமாதானத்தைப் பாதுகாக்கும் வழி அதுதான் என்று நான் நம்பவில்லை. முஸ்லிம்களின் மனத்தில் ஏற்பட்டுள்ள அதிருப்தியே தகராறுக்கு ஆணிவேர் என்பது எனது அபிப்பிராயம். காங்கிரஸ்தான் அத்தகைய நிலைமையைச் சீர்திருத்த வேண்டும். சக்தி வாய்ந்த ஒரு நிலையில் காங்கிரஸ் இப்போது இருக்கிறது, எனவே காங்கிரஸ்தான் மேற்கொண்டு ஏதாவது சலுகை காட்ட வேண்டும். அரசாங்கத்தில் கலந்துகொள்ளும்படி அந்தச் சலுகை ஸ்ரீ ஜின்னாவைத் தூண்டும். அவ்விதமாயின், முஸ்லிம்கள் மேற்கொண்டு இடையூறு செய்யமாட்டார்கள். பிரிட்டிஷாரின் திட்டப்படி அரசியல் நிர்ணய சபை அமைக்கப்படும்போது, மாகாணங்களில் அந்தந்தப் பிரிவினரின் ஆட்சி ஏற்படுவதற்கு காங்கிரஸ் அனுமதிப்பதே அத்தகைய சலுகை என்று நான் நினைக்கிறேன். அது ஸ்ரீ ஜின்னாவுக்குத் திருப்தியளிக்கும். காங்கிரஸ் இப்போதே அவ்விதம் அறிவித்துவிட வேண்டும்."

மேற்கூறியவிதம் ஸ்ரீ காந்திக்கு யோசனை கூறும்படியும், அதிலுள்ள நியாயத்தை அவர் அறிந்துகொள்ளும்படி செய்ய வேண்டும் என்றும் அவர் எனக்கு யோசனை கூறினார். அவரது கூற்றுக்கு நான் கடுமையாக பதில் அளிக்க வேண்டியிருந்தது: "அந்த யோசனையில் நியாயம் இருப்பதாக எனக்கே தோன்றவில்லையே. அப்படியிருக்க நான் அதைப்பற்றி ஸ்ரீ காந்தியிடம் எதுவும் சொல்லுவதற்கில்லை. ஸ்ரீ ஜின்னாவை அவ்விதம் சமாதானப்படுத்த முற்படுவதால், நிலைமை மேலும் மோசமாகிவிடும்."

மேற்கண்ட விதம் நான் கூறியது அவருக்குப் பிடிக்கவில்லை. ஆனால், நிலைமையை அவரைக் காட்டிலும் அட்லி நன்கு புரிந்துகொண்டார். பெதிக் லாரென்ஸைப் பார்த்த பின் இரண்டு நாட்கள் சென்று அட்லியைப் பார்க்கச் சென்றேன். அவரிடம் நான் தந்தியைக் காட்டி, அதன் கருத்தையும் விளக்கிக் கூறினேன். கல்கத்தா கோர நிகழ்ச்சிகளைப் பற்றி 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை எழுதிய தலையங்கத்தையும் அவரிடம் காட்டினேன். அவர் ராஜ தந்திரமாகப் பேச முயற்சிக்கவில்லை. தற்போதைய நிலைமையில் வைஸ்ராயைக் காட்டிலும் இன்னும் அதிகத் திறமைசாலியான ஒருவரின் உதவி தேவையாக இருக்கிறதென்றும், இல்லாவிடில் கல்கத்தாவில் நிகழ்ந்தது போன்ற சம்பவங்கள் மீண்டும் ஏற்படுவது நிச்சயம் என்றும் காந்திஜி எண்ணினால், அவ்விஷயத்தில் தீவிர கவனம் செலுத்த வேண்டியது அவசியமென அட்லி மனம் விட்டுக் கூறினார். அவ்விஷயத்தை இந்தியா மந்திரியின் பொறுப்பில் விட்டுவிட வேண்டும் என்பதே அவரது ஆர்வமாகும். அவர் இந்தியா மந்திரியைப் பார்த்து இதையெல்லாம் பற்றிப் பேசப் போவதாகவும் கூறினார். அதன்

சம்பந்தமாக வைஸ்ராய்க்கு நீங்கள் எழுதிய கடிதத்தைப் பற்றியும் அட்லி என்னிடம் குறிப்பிட்டார். அக்கடிதத்தின் விவரம் தந்திமூலம் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு அறிவிக்கப் பட்டுளது. அந்தத் தந்தியின் பிரதியொன்றையும் அவர் என்னிடம் காட்டினர். அவ்விஷயங்களையெல்லாம் பற்றி பிரிட்டிஷ் மந்திரி சபையின் அடுத்த கூட்டத்தில் விவாதிக்கப் போவதாக அவர் கூறியதுடன், புதன்கிழமை 4வ மீண்டும் தம்மை வந்து பார்க்கும்படியும் என்னிடம் சொன்னர். எனவே, புதன்கிழமை நான் மறுபடியும் அவரைப் பார்ப்பதற்காகச் சென்றேன். டில்லியில் நிலைமை மோசமாக இருந்ததென்றும், எனினும் செப்டம்பர் 2வ திங்கட்கிழமை காங்கிரஸ் தலைவர்கள் பதவி யேற்றதிலிருந்து நிலைமை அபிவிருத்தியடைந்திருப்பதாக இந்தியா மந்திரி கூறியதைக் கேட்டு தாம் மகிழ்ச்சியடைவ தாகவும், கவலைப்பட வேண்டிய அவசியம் எதுவுமில்லை என்றும் அட்லி கூறினர். பிறகு அவர் வைஸ்ராயைப் பற்றியும், உங்களுடைய செய்தியைப்பற்றியும் நீண்ட நேரம் பேசினர். ஒரு புதிய வைஸ்ராயை நியமிக்க வேண்டும் என்பதற்குத் தகுந்த காரணம் இருக்கிறது என்று அவர் ஒத்துக் கொண்டார். ஆனல், இப்போதுள்ள வைஸ்ராயைக் காட்டிலும் சிறந்த ஒருவரைக் கண்டு பிடித்தாலன்றி, அப்பதவியில் மாறுதல் எதுவும் செய்வதில் அர்த்தமில்லை என்றும், அவரைவிட மிகச் சிறந்த ஒருவரைக் கண்டு பிடிப்பது எளிதல்ல என்றும் அட்லி குறிப் பிட்டார். வைஸ்ராய்க்கு எத்தகைய உதவி தேவை என்று காந்திஜி எண்ணுகிருரோ அத்தகைய உதவி, நேருவிளிடமிருந்து வைஸ்ராய்க்குக் கிடைக்கும் என்றும், நேரு மிகவும் திறமைசாலி என்பதுடன், சட்ட நிபுணராகவும் இருக்கிருர் என்றும் அட்லி கூறினர். (இந்த இடத்தில் அவர் சட்ட நிபுணர்களைப் பற்றி வேடிக்கையாகக் குறிப்பிட்டார். தாமே ஒரு பாரிஸ்டர் என்றும், எனினும் சிறு வயதிலேயே அந்தத் தொழிலைத் தாம் விட்டுவிட்ட தாயும் அவர் கூறினர்.) அட்லி கூறிய யோசனை யாரும் மறுக்க முடியாததென்றும், பிரதம மந்திரி நேருவின் ஆலோசனையை அடிப்படையாகக் கொண்டே எப்போதும் வைஸ்ராய் தமது விசேஷ அதிகாரத்தை உபயோகிக்க வேண்டுமென அட்லி வைஸ்ராய்க்கு உத்தரவு பிறப்பித்தால், எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்துவிடும் என்றும் நான் அவரிடம் கூறினேன். ஆனல் பிரிட்டிஷ் பிரதம மந்திரி அவ்வாறு உறுதி கூற விரும்பவில்லை. எனினும், அந்த ரீதியிலேயே அலுவல்கள் நடைபெறுமென தாம் மிகுந்த நம்பிக்கையுடன் இருப்பதாக அவர் கூறினர்.

கிரிப்ஸ் நாளை லண்டனுக்குத் திரும்பிவருகிருர். ஆனல் அவர் ஸ்வீட்ஜர்லாந்தில் தங்கியிருந்தும் கூட அவரது உடல் நிலை அபிவிருத்தியடையவில்லை. எனவே அவரால் நமக்கு அதிகமாக உதவி எதுவும் செய்ய முடியாது. இந்தியாவிலுள்ள நிலவரங் களைப்பற்றி நான் அவருக்கு அப்போதைக்கப்போது பூரணமாக அறிவித்து வந்திருக்கிறேன். இருந்தாலும் பிரிட்டிஷ் மந்திரி

சபையில் அவருக்கு அதிகமான செல்வாக்கு எதுவும் இல்லை. அவர் நல்ல மனிதர்தான். ஆயினும் அவர், பெதிக்-லாரென்சைப் போல் ஒரு நல்ல "கட்சி மனிதர்" அல்ல. ஆதலால் பெதிக்-லாரென்சுக்கு உள்ள செல்வாக்கைக் காட்டிலும் கிரிப்ஸின் செல்வாக்கு மிகவும் குறைவேயாகும். மொத்தத்தில் அட்லி இந்தியா விஷயமாக விவேகத்துடன் நடந்து கொள்பவராக இருக்கிறார். வட்ட மேஜை மகாநாடு நடந்த காலத்தில் இருந்த அட்லி வேறு, இன்றைய அட்லி வேறு என்று என்னிடம் கூறுகிறார்கள். அவரைப்பற்றி எனது கருத்து என்னவெனில், காங்கிரசுடன் சுமுகமாக நடந்து கொள்ள அவர் ஆர்வம் உடையவராக இருக்கிறார் என்பதே.

அன்பு,
சுதீர்

# 12

# கொடுமையான வரி

(உப்பு வரியை வன்மையாகக் கண்டித்து, வைஸ்ராயின் அந்தரங்கக் காரியதரிசி ஸ்ரீ ஜி. ஈ. பி. அபெல்லுக்கு காந்திஜி எழுதிய கடிதம் * ஒன்றில், ஸ்ரீ பியாரிலால் தயாரித்த குறிப்பு ஒன்றையும் இணைத்திருப்பதாக அவர் கூறியுள்ளார். புள்ளிகளுடன் கூடிய மிகவும் முக்கியமான அந்தக் குறிப்பின் முழு விவரங்களும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.)

"உப்பு வரி மக்களைக் கசக்கி வாங்கும் ஒரு கொடிய வரியாகும். மக்கள் அந்த உண்மையைத் தெரிந்து கொள்வார்களாயின், அதனால் மக்களிடையே மிகுந்த அதிருப்தி ஏற்படும். லாபத்திலேயே கருத்துள்ள ஒரு கம்பெனி, வறுமையில் ஆழ்ந்துள்ள இந்தியாவைச் சுரண்டி வந்ததற்கு அந்த வரி ஓர் உதாரணம்" – ராம்சே மெக்டொனல்டு.

"இந்தியாவில் உள்ள ஏழை மக்களுக்கு உப்பு வரி ஆள் வரி போன்றதே. அதைத் தாங்க முடியாத மக்களிடையே அது அடிக்கடி மிகுந்த அதிருப்தியை உண்டாக்கி வந்திருக்கிறது." – பாஸ்டபிள்.

இந்தியாவில் மக்கள் வருடந்தோறும் 5,10,50,000 மணங்கு உப்பை உட்கொள்வதாக மதிப்பிட்டிருக்கிறார்கள். இது அரசாங்கத்தின் மதிப்பீடாகும். உஷ்ணப் பிரதேசத்திலுள்ள ஒருவர் தமது ஆரோக்கியத்தைப் பாதுகாக்க வருடத்திற்கு 12 பவுண்டு உப்பு உட்கொள்ள வேண்டியது அவசியமென்று கூறப்படுகிறது.

* 503–ஆம் பக்கத்தில் வெளியாகியுள்ள 226–ஆம் கடிதத்தைப் பார்க்கவும்.

இந்த விகிதப்படி இந்தியாவிலுள்ள 40 கோடி மக்களுக்கு வருடந் தோறும் மொத்தம் 6 கோடி மணங்கு உப்பு தேவையாக இருக்கும்.

1935-ஆம் ஆண்டில் எடுத்த கணக்கின்படி இந்தியாவிலுள்ள ஆடு, மாடு முதலிய கால்நடைகளின் தொகை 21 கோடியே 50 லட்சமாகும். அவற்றிற்கும், பல்வேறு கைத்தொழில்களுக்குமாக வருடத்திற்கு 7 கோடியே 13 லட்சம் மணங்கு உப்பு தேவையாக இருக்கும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அதாவது மக்களுக்கும் கால்நடைகளுக்குமாக மொத்தம் 13 கோடி மணங்கு உப்பு தேவையாக இருக்கிறது. ஆனால் இந்தியாவில் உற்பத்தியாகும் உப்போ 5 கோடியே 10 லட்சம் மணங்குதான். அதாவது மொத்தத் தேவைக்கு 38 சதவிகிதம்தான் உப்பு உற்பத்தியாகிறது.

இந்த நிலையில் இந்திய அரசாங்கத்தின் உப்பு இலாகா தன் சக்தியை, லைசன்ஸ் பெறாமல் உப்பு உற்பத்தி செய்வதைத் தடுக்கும் விஷயமாகச் செலவு செய்திருக்கிறதேயன்றி, உப்பு உற்பத்தித் தொழிலை அபிவிருத்தி செய்வதில் உபயோகிக்கவில்லை. 1939-40-இல் சமஸ்தானங்களில் உப்பு உற்பத்தியாவதைத் தடுப்பதற்காக இந்திய சர்க்கார் சமஸ்தானங்களுக்கு ரூ. 33,72,251-4-10 ஈடுத் தொகையாகக் கொடுத்திருக்கிறார்கள்.

உப்பு உற்பத்தி செய்ய சுதந்திரம் அளிக்கப்படுமாயின், இந்தியாவில் தற்போது உற்பத்தியாவதைக் காட்டிலும் 10 மடங்கு அதிகமான உப்பு எளிதில் உற்பத்தி செய்ய முடியும். ஒரு காலத்தில் இந்தியாவிலுள்ள பல இடங்களிலும் உப்பு உற்பத்தியாகிவந்தது. இப்போது அரசாங்கத்தின் கடுமையான சட்டங்கள் காரணமாக அந்தப் பிரதேசங்கள் உப்பு உற்பத்தி செய்யப்படாமல் பாழாகக் கிடக்கின்றன. அதன் விளைவாக இப்போது நாம் வருடத்திற்கு 1,94,00,000 மணங்கு உப்பு இறக்குமதி செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம். இதைத் தவிர ரூ. 1,42,42,000 பெறுமானமுள்ள 'ஸோடியமு'ம், 'பொடாஷியமு'ம் இறக்குமதி செய்கிறோம்; ரூ. 3,33.00,000 பெறுமானமுள்ள மர உப்பு முதலிய மற்ற ரசாயனப் பொருட்களையும் இறக்குமதி செய்கிறோம். உப்பு உற்பத்தியைத் தடுப்பதற்காக தற்போது செலவு செய்யும் லட்சக்கணக்கான தொகையில் ஒரு சிறு பகுதியை, உப்பு உற்பத்தித் தொழிலை அபிவிருத்தி செய்ய அரசாங்கம் உபயோகப்படுத்துமாயின், வேளாண்மைக்குத் தகுதியின்றி உவர்க்களமாக இருக்கும் ஆயிரக் கணக்கான ஏக்கர்களை மீண்டும் விவசாயத்துக்குத் தகுதியுள்ளதாக மாற்ற முடியும்; ரசாயனப் பொருட்களை இறக்குமதி செய்வதற்காகச் செலவு செய்யப்படும் கோடிக்கணக்கான தொகையும் மிச்சப்படும். பெரிய ரசாயனத் தொழிற்சாலைகளுக்கு உப்புதான் அஸ்திவாரமாகும். உப்பு உற்பத்தியைத் தடுத்ததால், ஏராளமான ரசாயனப் பொருட்களின் உற்பத்திக்கும் வழியில்லாமல் போய்விட்டது.

1940—1941-இல் $1\frac{1}{2}$ கோடி பவுண்டுக்கு மேற்பட்ட உலர்ந்த உப்பிட்ட மீன் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாயிற்று. இந்தியாவில் அதைக் காட்டிலும் பன் மடங்கு அதிகமாக மக்களால் உபயோகிக்கப்பட்டிருக்கவேண்டும். 1939—40–இல் உலர்ந்து, பதனிட்ட 31,800 டன் தோல் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. காகித உற்பத்தி, விவசாயம், சோப், கண்ணாடி, எஃகு முதலிய மற்றும் பல்வேறு தொழில்களுக்கும் உப்பு அவசியமான தேவையாக இருக்கிறது.

சென்ற 50 ஆண்டுகளில் சராசரி ஒவ்வொருவருக்கும் வருடத்திற்கு 12 பவுண்டாக இருந்த உப்பு உணவு, உப்பு வரியின் விளைவாக 9 பவுண்டாகக் குறைந்துவிட்டது. அதே சமயம் உப்பின் விலையும் அதிகமாகிவிட்டது. ஒருவருடைய ஆரோக்கியத்திற்கு எவ்வளவு உப்பு தேவையோ அதைவிட மிகவும் குறைந்துவிட்டது. இந்த நிலைமையில், கானராவிலும் வேதாரண்யத்திற்கு அருகிலும் மக்களின் தேவைக்குத் தகுதியான உப்பு இயற்கையாகவே சேரும்போதும், அதை அழித்துவிடுவதற்காக விசேஷ கலால் சிப்பந்திகள் நியமிக்கப்படுகின்றனர்!

விஞ்ஞான ரீதியில் உப்பு உற்பத்தித் தொழிலை அபிவிருத்தி செய்வதற்கான முறைகள் எதையும் அரசாங்கம் எடுத்துக் கொள்ள முற்படவில்லை. பண்டைய காலத்து முறையையே அவர்கள் பின்பற்றி வருகிறார்கள். திறமையற்ற அவர்களுடைய முறையால் உற்பத்திச் செலவைக் காட்டிலும் நிர்வாகச் செலவும், பரிசோதனை அதிகாரிகளால் ஏற்படும் செலவும் அதிகமாக இருக்கின்றன. உதாரணமாக சம்பார் உப்பு ஒரு மணங்கு உற்பத்தி செய்ய 8 பைசா தான் செலவாகிறது. ஆனால் நிர்வாகச் செலவு பவுண்டுக்கு 3 அணாவுக்கு மேல் ஆகிறது. அது இறுதியில் $4\frac{1}{4}$ அணாவுக்கு விற்கப்படுகிறது. சில இடங்களில் உற்பத்திச் செலவைக் காட்டிலும் விற்பனை விலை 660 சத விகிதத்திற்குமேல் அதிகமாக இருக்கிறது! உற்பத்திச் செலவுக்கும் விற்கப்படும் விலைக்கும் உள்ள அநீதியான வேற்றுமையைப் பின்வரும் புள்ளி விவரங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்:

1944—45-இல் அரசாங்க உப்பளங்களில் உற்பத்திச் செலவு ஒரு பவுண்டுக்கு ரூ. 0—4—4.

| இடம் | பவுண்டுக்கு மொத்த விலை | | |
|---|---|---|---|
| | ரூ. | அ. | பை. |
| டில்லி | 3 | 8 | 4 |
| அலகாபாத் | 3 | 3 | 0 |
| கல்கத்தா | 6 | 8 | 0 |
| சென்னை | 2 | 1 | 1 |
| பம்பாய் | 3 | 12 | 10 |
| சிந்து | 2 | 8 | 10 |

இதிலிருந்து இரண்டு விஷயங்கள் வெளியாகின்றன. அதாவது அரசாங்க உப்பளங்களில் உற்பத்திச் செலவு ஒரு பவுண்டுக்கு ரூ. 0—4—4-ஆக இருக்கும் போது டில்லியில் ஒரு பவுண்டு உப்பின் மொத்த விலை ரூ. 3—8—4-ஆக இருக்கிறது. விதிக்கப்படும் தீர்வை ரூ. 1—9—0-ஐ அதிலிருந்து கழித்து விட்டால், உற்பத்திச் செலவுக்கு மேல் அதிக விலை ரூ. 1—11—0 ஆகிறது. அதாவது உற்பத்திச் செலவைக் காட்டிலும் விலை 623 சதவிகிதம் அதிகமாகும். கல்கத்தாவிலோ 1592 சதவிகிதம் அதிக விலைக்கு விற்கப்படுகிறது!

கல்கத்தா விலைக்கும் டில்லி விலைக்கும் ஏன் இவ்வளவு வேற்றுமை என்பதை இப்போது கவனிக்கலாம். லிவர்பூரிலிருந்து கல்கத்தாவில் இறக்குமதியாகும் உப்பின் பெரும் பகுதி வங்காளத்திலேயே விற்பனையாகிவிடுகின்றது. இயற்கைக்கு விரோதமான இந்த இறக்குமதியினால் 13 கோடி மக்கள் பாதிக்கப்படுகின்றனர். லிவர்பூல் உப்புக்காக அவர்கள் அவ்வளவு அதிக விலை கொடுக்க வேண்டியிருக்கிறது. உப்பு உற்பத்தியில் அரசாங்கத்துக்கு உள்ள அரக்கத்தனமான ஏகபோக பாத்தியத்திற்கு இதைக் காட்டிலும் வேறு உதாரணம் தேவையில்லை. தீர்வையோ, லைசன்ஸோ இல்லாமல் உப்பு உற்பத்தி செய்ய வங்காள மக்கள் அனுமதிக்கப்படுவார்களாயின், அவர்களுக்குத் தேவையான உப்பு 1 பவுண்டு ஒன்று அல்லது இரண்டு அணா விலைக்குக் கிடைக்கும்.

சம்பார் ஏரி உப்பளங்களிலிருந்து உப்பை எடுத்தபின், விலை மதிப்புள்ள 'ஸோடியம் ஸல்பேட்' போன்ற உப பொருள்களை உற்பத்தி செய்ய யாதொரு முயற்சியும் எடுத்துக் கொள்ளப் படவில்லை. எனவே அவையெல்லாம் வீணாவதுடன், தொழில்களுக்குத் தேவையான ரசாயனப் பொருட்களை வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதற்காகவும் லட்சக்கணக்கான தொகை செலவழிக்கின்றனர்.

## ஏக போக பாத்தியம் உருவான சோகக் கதை

இந்தியாவில் கை நெசவுத் தொழிலுக்கு அடுத்தபடியாக உப்பு உற்பத்திதான் இந்தியாவெங்கும் மேற்கொள்ளப்பட்டு வந்தது. கை நெசவுத் தொழில் அழிந்ததுபோல், உப்பு உற்பத்தித் தொழில் அழிந்ததும் ஒரு சோகக் கதையே ஆகும்.

இந்தியா முழுவதும் உப்பு உற்பத்தியாகி வந்ததால், சர்க்கார் உப்பு உற்பத்தியில் தங்களுடைய ஏகபோக உரிமையைப் பாதுகாப்பதற்காக 1778, 1793 ஆண்டுகளில் கொடுமையான உப்பு உற்பத்திக் கட்டுப்பாடுச் சட்டங்கள் அமலுக்கு வந்தன. தங்கள் நிலத்தில் சட்டவிரோதமாக உப்பு உற்பத்தி செய்வதையும், இறக்குமதி செய்வதையும் பற்றி நிலச் சொந்தக்காரர்கள் சர்க்காருக்குத் தகவல் கொடுக்க வேண்டும். அவ்விதம் தகவல்

கொடுக்காதவர்களுக்குத் தண்டனை விதிப்பதே அந்தச் சட்டங்களின் நோக்கமாகும். உப்பு உற்பத்தி செய்வதையோ, உப்பளத் தொழிற்சாலைகளைப் பற்றியோ அறிவிக்காதவர்களுக்கு ரூ. 5000 அபராதம் விதிக்க வேண்டும் என்பது 1801-இல் நிறைவேறிய ஒரு சட்டத்தின் ஷரத்தாகும். ஜமீன்தார் தமது நிலங்களில் உப்பு உற்பத்தி செய்வது தெரிந்தும், அந்தத் தகவலை அரசாங்கத்துக்கு அறிவிக்காவிடில் அவருக்கு ரூ. 500 அபராதம் விதிக்க வேண்டும் என்று 1819-இல் வந்த சட்டம் கூறியது. யாராவது ஒரு பானையில் உப்புத் தண்ணீரைக் காய்ச்சினால்கூட, ஜமீன்தார் அந்த அபராதத்துக்கு உள்ளாக வேண்டும்! கடல் தண்ணீர் ஆவியாக மாறுவதற்காக யாராவது பாத்தி கட்டினால் கூட, அதை உப்பு உற்பத்தித் தொழிலாகக் கருதி அரசாங்கம் அபராதம் விதித்தது. இவற்றைப் போல் இன்னும் பல கொடுமையான, அநீதியான சட்டங்களும் அமலுக்குக் கொண்டு வரப்பட்டன.

உப்பு உற்பத்தியில் அரசாங்கத்துக்கு இருந்து வந்த ஏக போக உரிமை 1863—இல் ரத்து செய்யப்பட்டது. அதன் பலனை, உப்பு உற்பத்தி செய்வதை சர்க்கார் கைவிட்டனர். அதே சமயத்தில் மக்கள் சுதந்திரமாக உப்பு உற்பத்தி செய்ய முடியவில்லை. உப்புக்கு அரசாங்கம் கலால் தீர்வை விதித்ததே அதற்குக் காரணமாகும். அதன் விளைவாக இந்திய உப்பின் ஸ்தானத்தை இறக்குமதி செய்யப்பட்ட உப்பு ஆக்கிரமித்துக் கொண்டது. அதனால் ஏற்கனவே அரசாங்க உப்பளங்களில் வேலை செய்த பதினாயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலையிழந்தனர். இந்திய அரசாங்க ரெவின்யூ போர்டு காரியதரிசியான சர் சீசில் பீடன் அவ்விஷயமாக் கூறியதாவது: "ஒரிஸ்ஸாவில் ஏற்பட்ட பஞ்சத்திற்கு முதல் பலியானவர்கள் சர்க்கார் உப்பளங்களிலிருந்து விலகிய தொழிலாளர்கள்தான். அவர்களுக்கு சொத்து எதுவும் இல்லை, விவசாயத்திற்கான நிலமும் இல்லை. அவர்களில் பலர் பட்டினி கிடந்தனர். அதனால் அவர்களில் ஏராளமானவர்கள் இந்த உலகத்தை விட்டுச் சென்றனர்."

மிகக் கொடுமையான இந்தக் கொள்கை இன்று கூடத் தொடர்ந்து நீடித்துவருகிறது. எந்த உப்பு ரெவின்யூ அதிகாரியாயினும், அவர் கோழை என்பது நிரூபிக்கப்பட்டால் அவர் மூன்று மாத சிறைத் தண்டனைக்கும் அபராதத்துக்கும் உள்ளாவார் என்று பம்பாய் உப்புச் சட்டம் கூறுகிறது. அச்சட்டத்தில் 'கோழை' என்பதற்கு விளக்கம் எதுவும் கொடுக்கப்படவில்லை. எனினும் அந்தச் சொல்லின் பொருள் என்ன என்பதை உணர்ந்து கொள்வது கடினமல்ல. ஆடவர்கள்—பெண்கள், இளைஞர்கள்—வயோதிகர்கள், நோயாளிகள்—ஆரோக்கியமானவர்கள் ஆகிய கோடிக்கணக்கான மக்களைத் துன்புறுத்தும் ஒரு சட்டத்தை தயவு தாட்சண்யமின்றி அமலுக்குக் கொண்டுவர வேண்டும் என்பதே அதன் பொருளாக இருக்க முடியும். தயவு

தாட்சண்யம் காட்டினால் அது 'கோழைத்தனமாக'க் கருதப் படும்!

இந்தியாவில் விதிக்கப்படும் உப்பு வரி பிரான்ஸில் விதிக்கப் பட்ட உப்பு வரியைப் போல் மிகக் கொடுமையானது என்று கூறப்படுகிறது. பிரான்ஸில் விதிக்கப்பட்ட மோசமான அந்த வரி, மாபெரும் பிரஞ்சுப் புரட்சி ஏற்படுவதற்கான காரணங்களில் ஒன்ருக இருந்தது. இந்தியாவின் சரித்திரமும் அதற்கு மாருனது அல்ல.

உப்பு உற்பத்தி நசுக்கப்படுமுன், அந்தப் பிரதேசங்கள் உப்பு உற்பத்திக்கு மாத்திரமே மிகவும் தகுதியான பிரதேசங் களாக இருந்தன. ஏனெனில் அவ்விடங்களில் மழை மிக மிகக் குறைவு. விவசாயம் செய்வதற்கான மற்ற வசதிகளும் அங்கே இல்லை. எனவே, அப்பிரதேசங்களில் உப்பு உற்பத்தி பதினயிரக் கணக்கான ஏழைகளின் ஜீவனத்திற்கு இன்றியமையாததாக இருந்து வந்தது. பாலசூர், கட்டாக் ஆகிய இடங்களில் மாத்திரம் உப்பு உற்பத்தியின் மூலம் 44,000 ஜனங்கள் ஜீவனம் செய்து வந்தனர். உப்பு உற்பத்தி தடுக்கப்பட்ட பின், அவர் கள் யாவரும் வேலையிழந்தனர். உண்மையில் அதன் விளைவாக, பல இடங்களில் மக்கள் புரட்சி செய்யத் தொடங்கினர்கள். மிகவும் கொடுமையான அடக்கு முறைகளை மேற்கொண்டு அதிகாரிகள் அந்தப் புரட்சியை அடக்க வேண்டியதாயிற்று.

சூரத்தில் 12 அணவாக இருந்த உப்புத் தீர்வையை 1844-இல் 1 ரூபாயாக உயர்த்தியதால், மக்கள் புரட்சியிலும் கலகங்களிலும் ஈடுபட நேர்ந்தது. அவற்றையும் அதிகாரிகள் கொடிய முறைகளைக் கைக் கொண்டு அடக்கினர். எனினும் பின்னர் அதிகாரிகள் அந்தத் தீர்வையை மீண்டும் 12 அணவாகக் குறைக்க வேண்டியதாயிற்று. 1817-இல் உப்பு உற்பத்தி ஏகபோக உரிமையை அரசாங்கம் அமலுக்குக் கொண்டுவந்த போதும் ஒரிஸ்ஸாவில் பரந்த முறையில் கலகங்கள் ஏற்பட்டன. அதையும் அதிகாரிகள் கடுமையான பலாத்கார முறைகளால் அடக்கினர்.

உப்பு உற்பத்தித் தொழில் எவ்வளவு பரந்த முறையில் செயல்பட்டு வந்தது? அதை மேலும் பலன் தரத்தக்க முறையில் அபிவிருத்தி செய்வதற்கு எத்தனை வாய்ப்புகள் இருந்தன? ஒரு காலத்தில் சுபிட்சமாக இருந்த பிரதேசங்கள், உப்பு உற்பத்தி யைத் தடுத்ததன் விளைவாக இன்று எத்தகைய மோசமான நிலை யில் இருந்து வருகின்றன? இவற்றையெல்லாம் கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

இந்த நாட்டில் ஆங்காங்குள்ள மக்கள் தாங்கள் இருக்கும் இடங்களிலேயே மிகவும் குறைந்த செலவில் ஏராளமாக உப்பு உற்பத்தி செய்ய வசதிகள் இருக்கின்றன. இந்நாட்டில் உப்பு ஏரிகள், உப்பு ஊற்றுகள், உப்புக் கிணறுகள், உவர்ப்பு நிலங்கள் ஆகியவை நூற்றுக்கணக்கிலும், ஆயிரக்கணக்கிலும் இருக்

கின்றன. இவற்றைத் தவிர ஆயிரக்கணக்கான மைல்கள் தூரத்திற்கு கடற்கரையும் இருக்கிறது. தேசத்தின் பொக்கிஷமாகவும், சொத்தாகவும் விளங்கும் இந்தச் சாதனங்களை அபிவிருத்தி செய்யாததுடன், உப்புச் சுரங்கங்களிலுள்ள பொருட்கள் வரண்டு போகும்படியும் செய்திருக்கிறார்கள். இது பெரும் குற்றமாகும்.

1. எனவே, வரியோ, லைசன்ஸோ எதுவுமின்றி உற்பத்தி செய்யுமாறு மக்களுக்கு உற்சாகம் அளிக்கவேண்டும். உப்பு உற்பத்தியான இடங்களிலெல்லாம் மீண்டும் அது உற்பத்தியாகும்படி செய்ய வேண்டும். அவ்விதம் செய்தால் இந்த நாட்டிலுள்ள மக்களுக்கும், கால் நடைகளுக்கும் தேவையான உப்பை உற்பத்தி செய்வது சாத்தியமாகும். அதிலும், சுமார் 1 அணா விலைக்கு 1 மணங்கு உற்பத்தி செய்ய முடியும். இதன் பலனாக, போக்குவரத்து, பரிசோதனைச் செலவு, தரகரின் லாபம் முதலியவற்றை ஒழித்துவிடலாம். மேற்கூறிய விதம் மக்கள் உப்பு உற்பத்தி செய்வதை எளிதாக்குவதன் மூலம், அரசாங்கத்தின் வருமானத்திற்கும் குந்தகம் ஏற்படாது. சுத்தமான உப்பை உற்பத்தி செய்ய அரசாங்கம் முற்படுமாயின், அதன் வருமானம் குறைந்துவிடாது.

2. லிவர்பூரிலிருந்தும் சிஷயரிலிருந்தும் உப்பு இறக்குமதி செய்வது மிகவும் அக்கிரமமாகும். கடுமையான தீர்வை விதிப்பதன் மூலம் அந்த இறக்குமதியை உடனே நிறுத்த வேண்டும்.

3. வருடந்தோறும் வெளிநாடுகளுக்குச் செல்லும் ரூ. 45 லட்சம், தீர்வையின் பலனாகத் தடுக்கப்படும்.

4. சமஸ்தானங்களில் உப்பு உற்பத்தியாகாமல் தடுப்பதற்காக தற்போது சமஸ்தானங்களுக்கும் சர்க்கார் வருடந்தோறும் ரூ. 34 லட்சம் ஈடுத்தொகை கொடுத்து வருகிறார்கள். சமஸ்தானங்களில் உப்பு உற்பத்தி செய்ய அனுமதிப்பதன்மூலம் அந்தத் தொகையும் மிச்சப்படும்.

5. உபயோகத்தில் இராமல் வீணாகிவிட்ட உப்பளங்களைப் புனருத்தாரணம் செய்து, மீண்டும் அவ்விடங்களில் உப்பு உற்பத்தியாவதற்கான முறைகளை சர்க்கார் கைக்கொள்ள வேண்டும். மேலும் இறக்குமதி வரி விதித்து, மேலே குறிப்பிட்ட பல்வேறு ரசாயனப் பொருட்களின் இறக்குமதியையும் சர்க்கார் தடுக்கவேண்டும். அந்தப் பொருட்கள் உள் நாட்டிலேயே உற்பத்தியாவதற்கான முறைகளையும் எடுத்துக்கொள்ள வேண்டும்.

6. தற்போதுள்ள கலால் இலாகாவை உடனடியாக ரத்து செய்துவிட வேண்டும். உப்பு உற்பத்தி அபிவிருத்தி சம்பந்தமான நிர்வாகத்தைக் கைத்தொழில் இலாகாவினிடம் ஒப்புவிக்க வேண்டும். விஞ்ஞான அல்லது வியாபார ரீதியில் ஒரு கைத்தொழிலை நிர்வகிக்க தற்போதைய கலால் அதிகாரிகள் தகுதியற்றவர்களாவர். அவர்களுக்கு அத்தகைய பயிற்சி அளிக்கப்படவில்லை.

அந்த இலாகாவில் மிகவும் அதிகமான சம்பளம் பெறும் அதிகாரிகள் இருக்கிறார்கள். அந்தத் தொகையைக் கொண்டு, கலால் வருமானத்தில் நேரடியாக ஏற்படும் நஷ்டத்தை ஈடு செய்துகொள்ளலாம். மொத்தத்தில் அதனால் தேசத்திற்கு லாபமே ஏற்படும். ஏனெனில், உப்பு மலிவாகக் கிடைப்பதுடன், கைத்தொழில்களுக்குத் தேவையான ரசாயனப் பொருட்களும் கிடைக்கும் அல்லவா? இப்போது அந்தப் பொருட்கள் உள் நாட்டில் கிடைப்பதில்லை. விவசாயத்துக்குத் தகுதியற்ற பிரதே சங்களில் இப்போது அடிக்கடி பஞ்சம் ஏற்படுகிறது. அப்பிர தேசங்களில் உப்பு உற்பத்தியையும், ரசாயனப் பொருட்களின் உற்பத்தியையும் அனுமதிப்பதன் பலனாக, லட்சக்கணக்கானவர் களுக்கு வேலை கிடைக்கும்; பஞ்சமும் தீரும்; அப் பிரதேசங் களிலுள்ள மனிதர்களுக்கும் கால் நடைகளுக்கும் சுபிட்சம் ஏற்படும்.

## அதிக வரியினால் விளைந்த தீமை

*1895*-ஆம் ஆண்டில் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்தில் கோகலே பேசியபோது உப்பு வரிக் கொடு மையைப் பற்றி பின்வருமாறு குறிப்பிட்டார்:

"*1882*ஆம் ஆண்டில், உப்புத் தீர்வை எல்லா இடங்களிலும் ஒரே விதமாக மணங்குக்கு ரூ. *2* வீதம் குறைக்கப்படுமுன், இந்தி யாவில் சுமார் *2* கோடியே *90* லட்சம் மணங்கு உப்பு செலவாகி வந்தது. அந்த வருடம் மேற்கண்ட விதம் உப்புத் தீர்வை குறைந் ததும், இந்திய மக்கள் அதிகமாக உப்பை உபயோகிக்கத் தொடங்கினர். அதன் பலனாக, *1887*—இல் *3* கோடியே *37* லட்சம் மணங்கு உப்பு செலவாகியது. லார்டு டப்ரின் அத் தீர்வையை மணங்குக்கு *2—8—0* வீதம் உயர்த்தினார். அதன் பலன் என்ன? ரிப்பன் காலத்தில் வருடாவருடம் அதிகமாகி வந்த மக்கள் உபயோகிக்கும் உப்பின் அளவு அப்படியே ஸ்தம்பித்துவிட்டது. அதிலிருந்து இன்றுவரையில், அதாவது சென்ற *8* வருட காலத்தில் அந்த அளவு அபிவிருத்தியடையாமல் அப்படியே இருந்துவருகிறது. உதாரணமாக, சென்ற வருடம் மக்கள் உபயோகித்த உப்பின் அளவு *3* கோடியே *41* லட்சம் மணங்குகள் ஆகும். இவ்வாறாக, ரிப்பன் காலத்தில் தீர்வை குறைந்தபோது, ஐந்து ஆண்டுகளில் மக்கள் உபயோகிக்கும் உப்பின் அளவில் *50* லட்சம் மணங்குகள் அதிகமாயின. ஆனால் டப்ரின் காலத் திலோ உப்புத் தீர்வை உயர்த்தப்பட்டதன் விளைவாக எட்டு வருட காலத்தில் நான்கு லட்சம் மணங்குகளே அதிகமாகி யுள்ளன. ஜனத்தொகை அதிகமாகி வருவதைக் கவனிக்கும்போது, சென்ற எட்டு வருடங்களில் மக்கள் உபயோ கிக்கும் உப்பின் அளவு குறைந்துவிட்டதென்றே சொல்ல வேண்டும்."

ஒவ்வொருவரும் எவ்வளவு உப்பு உட்கொள்ளுகிறார்கள் என்பது பற்றி கோகலே கூறியதாவது :

"மக்கள் ஆரோக்கியத்துடன் வாழ்வதற்கு ஒவ்வொருவரும் வருடத்திற்கு 12 பவுண்டு உப்பு உபயோகிக்க வேண்டும் என்று பிரபல டாக்டர்கள் கூறுகின்றனர். லார்டு லாரென்ஸின் நிர்வாக காலத்தில் ஒவ்வொருவரும் வருடத்திற்கு 12 பவுண்டு உப்பை உபயோகித்தனர். பின்னர் அது குறையத் தொடங்கியது. லார்டு லிட்டனின் ஆட்சியில் அது 9 பவுண்டாகக் குறைந்துவிட்டது. பிறகுதான் லார்டு ரிப்பனின் நல்ல ஆட்சியில் உப்புத் தீர்வை குறைக்கப்பட்டதன் பலனாக மக்கள் உபயோகிக்கும் உப்பு அதிகமாகி, 1887-இல் அது 10 பவுண்டுக்கும் அதிகமாகியது. ஆனால் மறுபடியும் உப்புத் தீர்வை அதிகமாகியதன் காரணமாக மக்கள் உபயோகிக்கும் உப்பின் அளவு தலா 9½ பவுண்டாகக் குறைந்துவிட்டது.

## உப்பும் ஆரோக்கியமும்

குளிர்ந்த பிரதேசங்களைவிட உஷ்ணப் பிரதேசங்களில் ஒரு மனிதன் ஆரோக்கியமாக இருப்பதற்கு அதிக உப்பு உட்கொள்ள வேண்டியது அவசியமாகும். ஸ்ரீ கார்வர் உப்பைப் பற்றி எழுதியுள்ள கட்டுரையில் கூறுவதாவது :

"ஒன்றிரண்டு ஆண்டுகளுக்கு முன், இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் ராணுவ அதிகாரிகள் துருப்புகளுக்கு அதிகமாக உப்பு விநியோகிக்கத் தொடங்கினர். கோடை காலத்தில் துருப்புகள் ஆரோக்கியத்துடன் இருப்பதற்கு அதிக உப்பு உட்கொள்ள வேண்டியது அவசியம் என்று அவர்கள் உணர்ந்ததே அதற்குக் காரணமாகும். அவ்வாறு அதிக உப்பு உட்கொள்வதால், அவர்களுக்குச் சோர்வு ஏற்படாததுடன், தாங்க முடியாத உஷ்ணத்தினால் அவர்களுக்கு அபாயம் ஏற்படாமலும் அது தடுக்கிறது. மிகுந்த வியர்வையால் உடலிலிருந்து நஷ்டமாகும் உப்பு நீரை அது ஈடு செய்கிறது. உஷ்ணப் பிரதேசங்களில் வேலை செய்வதால் இழக்கும் உப்பு நீர் காரணமாக உடல்தசைகளின் வளர்ச்சி குன்றிவிடுகிறதென டாக்டர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். எனவே சென்ற மகாயுத்தத்தின் போது, தண்ணீரில் கலந்து சாப்பிடுவதற்காக அமெரிக்காவிலுள்ள தொழிலாளர்களுக்கு சாதாரண உப்பு மாத்திரைகளை விநியோகம் செய்து வந்தனர். வேலை செய்வதால் நஷ்டமாகும் உடலிலுள்ள உப்பை ஈடு செய்வதற்காகவே அவ்வாறு உப்பு மாத்திரைகள் கொடுத்து வந்தனர். உப்பு இராவிடில் ஆரோக்கியமும், சக்தியும் குறைந்துவிடுகின்றன. ஒரு காலத்தில் ஹாலந்தில் குற்றவாளிகளுக்கு உப்பு இல்லாத உணவு அளிக்கும் தண்டனைமுறை அமலில் இருந்து

வந்தது. அதனால் குற்றவாளிகள் உடலின் சக்தி குறைந்து, நோய்களுக்கும் இலக்காயினர். ஸ்விட்ஜர்லாந்தில் தூக்குத் தண்டனை யடைந்த கைதிகளுக்கு, அதற்குப் பிரதியாக உப்பில்லாத உணவு கொடுப்பது வழக்கமாக இருந்து வந்தது. அநேகமாக அத்தகைய கைதிகள், உப்பில்லாத உணவு காரணமாக சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள்.

''முன்பு பஞ்சங்கள் ஏற்பட்ட காலத்திலும், யுத்தத்தில் முற்றுகை செய்யும்போதும் போதிய உப்பு இராததால், மக்கள் துன்பத்திற்கும் நோய்களுக்கும் இலக்காயினர். பாலும் இறைச்சியும் சாப்பிடுவோருக்கு மாத்திரம் உப்பு தேவையில்லை. அத்தகையோர் உப்பு இல்லாமல் உயிர்வாழ முடியும். இறைச்சியில் இயல்பாகவே உப்பு இருப்பதே அதற்குக் காரணமாகும். ஆனால் இறைச்சி சாப்பிடாதவர்களுக்கு உணவில் மேற்கொண்டு உப்பு சேர்த்துக்கொள்ள வேண்டியது அவசியமாகும்.''

உப்புக்கு விதிக்கப்படும் கடுமையான தீர்வை ஏழை மக்களை எவ்வளவு தூரம் பாதிக்கிறது என்பதை ஓர் உதாரணத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம். 1852 நவம்பர் மாதம் 26வ பம்பாய் விவசாயிகள், பம்பாய் அரசாங்கத்துக்கு அனுப்பிய விண்ணப்பம் ஒன்றில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தனர்: "எங்களுடைய வயல்களில் விளையும் தானியங்கள் வருடத்தில் எட்டு மாதங்கள் வரையில் எங்களுக்குப் போதுமானவையாக இருக்கின்றன. பாக்கி நாட்களில் நாங்கள் மிளகாய்களுடன் கறிகாய்களை உட்கொண்டே ஜீவனம் செய்கிறோம். அவற்றிற்கு உப்பு அவசியமாகும். தீர்வை இராதபோது நாங்கள் தேவையான உப்பை சேர்த்துக் கொண்டோம். ஆனால் உப்புக்குத் தீர்வை விதித்த பிறகு, ஏழைகளான நாங்கள் அதைக்கூட உபயோகிக்க இயலாதவர்களாக இருக்கிறோம்.''

## இயற்கை உப்பளங்கள் அழிக்கப்பட்டன

இந்தியாவில் உப்பு உற்பத்தியாகும் இடங்களைப் பற்றி 1863-ஆம் ஆண்டில் புரூஸ் கூறியதாவது: ''கஞ்சத்திலும், ராஜமகேந்திரவரத்திலும் இந்த உப்பளங்கள் ஏராளமாக இருக்கின்றன. தஞ்சாவூரிலும், மசூலிபட்டணத்திலும் உற்பத்தியாகும் உப்பு உயர்ந்த ரகமுள்ளது. மேற்கண்ட ஜில்லாக்களில் அதிக முயற்சி எதுவுமின்றி தானகவே ஏராளமான உப்பு உற்பத்தியாவதால், 120 மணங்கு உப்பு உற்பத்தி செய்ய ரூ. 4-தான் செலவாகிறது. அதாவது ஒரு மணங்கு உப்பு உற்பத்தி செய்ய ½ அணாதான் செலவாகிறது.''

வேதாரண்யத்துக்கு அருகில் சுமார் 30 மைல் தூரத்துக்கு மிகவும் வெண்மையான, பளிங்கு போன்ற அருமையான உப்பு உற்பத்தியாகிறது. ஆனால் அதிகாரிகளின் கொள்கையினால், அந்த உப்பளங்களெல்லாம் பாழாகிவிட்டன. அது மாத்திர மல்ல, தானாக உப்பு உற்பத்தியாகும் இடங்களிலிருந்து மக்கள் யாருக்கும் தெரியாமல் உப்பு எடுக்கிறார்கள் என்பதற்காக அவற்றையெல்லாம் அரசாங்கமே அழித்துவிட்டது. அவ்விதம் அழித்ததற்கு அதிகாரிகள் ஒரு காரணம் கூறினர். அவையெல் லாம் ஒதுக்கமான இடங்களாதலின், போக்குவரத்துக்கு வசதி யாக இல்லை என்று அதற்குச் சமாதானம் கூறினர்.

தில்வாடியில் ஏராளமாக உப்பு உற்பத்தி செய்து வந்தனர். அது தில்வாடி உப்பு என்று புகழ்பெற்று விளங்கியது. மற்றும் பல கிராமங்களிலும் உப்பு உற்பத்தி செய்வதற்குத் தகுதி வாய்ந்த உவர்ப்புத் தண்ணீர்க் குட்டைகள் இருந்தன. சில இடங்களில் ஆறுகளிலும் உப்பு ஏராளமாகப் படிந்திருக்கிறது. மற்றும் சில இடங்களில் உயர்ந்த ரகமான இயற்கை உப்பு உற்பத்தியாகிறது. இதைத் தவிர ஆற்றுப் படுகைகளிலும் ஏராளமான உப்புத் தண்ணீர் ஊற்றுகள் இருக்கின்றன. பிகானீர் சமஸ்தானத்தில் உப்பு ஏரிகள் இருக்கின்றன. அங்கு ரச்சோத்ரா கிராமத்தில் பல சதுர மைல்கள் பரப்புள்ள ஒரு உப்பு ஏரி இருக் கிறது. பல உப்புத் தண்ணீர் ஊற்றுகள் அதில் வந்து சேரு கின்றன. அதில் உற்பத்தியாகும் உப்பு சம்பார் ஏரி உப்பைவிட சுத்தமாக, அதாவது 97-98% சுத்தமாக இருக்கிறது. நயீர், ஜோத்பூர் சமஸ்தானங்களைச் சேர்ந்த 36 கிராமங்களில் சுமார் 400 சதுர மைல் பரப்புக்கு உப்பு உற்பத்தி செய்ய முடியும். ரிவாசாவில் வருடத்துக்கு 1,25,000 மணங்கு உப்பு உற்பத்தி யாகியது.

சம்பார் ஏரியிலிருந்து முப்பது மைல் துரத்தில் மற்றும் பல உப்பு ஏரிகள் இருக்கின்றன. மேலும் ஏராளமான இடங்களில் இயற்கையான உப்பைத் தோண்டி எடுக்க முடியும். பிகானீர் சமஸ்தானத்தைச் சேர்ந்த சக்கூர் என்ற இடத்தில் வருடந் தோறும் $2\frac{1}{2}$ லட்சம் மணங்கு உப்பு உற்பத்தியாகி வந்தது. துர்க்காபூர் சமஸ்தானத்தில் 1890-இல் 2992 உப்புத் தொழிற்சாலைகள் இருந்ததாகவும், அவை வருடந்தோறும் ஏராளமான உப்பை உற்பத்தி செய்து வந்ததாகவும் ஸ்ரீ யங் கூறுகிறார். மற்றும் சில சமஸ்தானங்களில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் லட்சக்கணக்கான மணங்கு உப்பு உற்பத்தி யாகிவந்தது. 1867-இல் மைசூர் சமஸ்தானத்திலும் உப்பு உற்பத் தியின்மூலம் அரசாங்கத்திற்கு வருமானம் கிடைத்து வந்தது.

ஒரு காலத்தில் ஐக்கிய மாகாணத்தில் 15,000 தனியார் உப் புத் தொழிற்சாலைகள் இருந்தன. அதன் காரணமாக 1867-இல் அரசாங்கத்தின் உப்பு விற்பனையில் பத்து லட்சம் மணங்கு குறைந்துவிட்டது.

பம்பாய் மாகாணத்திலும், மலையாள, கன்னடப் பிரதேசங்களிலும் 6438 உப்புத் தொழிற்சாலைகள் செயல்பட்டு வந்தன. ஆனால் அவற்றை சர்க்கார் மூடும்படி உத்தரவிட்டுவிட்டார்கள். அதன்விளைவாக 1876-இல் ஆயிரக்கணக்கானவர்கள் வேலையிழந்தனர் என்று ஸ்ரீ டி. ஏ. பார்பர் தமது அறிக்கையில் குறிப்பிட்டிருந்தார்.

வங்காளத்திலும் கடற்கரை நெடுக பெங்களூர் வரையிலும், ஒரிஸ்ஸாவிலுள்ள கட்டாக் வரையிலும் உப்பு உற்பத்தியாகி வந்தது. அவ்விடங்களில் வருடத்திற்கு 44 லட்சம் மணங்கு உப்பு உற்பத்தியாகியதுடன், அவற்றில் 44,000 தொழிலாளர்களும் வேலை செய்துவந்தனர்.

சென்னையிலும், கஞ்சம்,ராஜமகேந்திரவரம், மசூலிபட்டணம், வேதாரண்யம், கமலபட்டணம், ஆறுமுகனேரி, குலசேகரபட்டணம் முதலிய மற்றும் பல இடங்களிலும் உப்பு உற்பத்தியாகி வந்தது. ஏராளமான உப்புத் தொழிற்சாலைகளும் இயங்கி வந்தன. அவற்றையெல்லாம் சர்க்கார் நிறுத்திவிட்டார்கள்.

1847-இல் சிந்து மாகாணத்தைச் சேர்ந்த தார், பார்க்கர் ஜில்லாக்களிலுள்ள பல இடங்களிலும், கச் பிரதேசத்திலும் உப்பு உற்பத்தியாகி வந்தது. சிந்து பாலைவனத்திலுள்ள மோகை ஏரியில் 1845-46-இல் 6924 மணங்கு உப்பு உற்பத்தியானதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள். பல இடங்களிலும் சுத்தமான உப்பு கிடைத்தது. கோத்ரி ஸ்டேஷனுக்கு அருகில் நூற்றுக்கணக்கான சதுர மைல்களுக்கு உப்பு படிந்திருப்பதாக ஸ்ரீ பர்க் கூறுகிறார். அதிலிருந்து 184½ கோடி டன் உப்பு கிடைக்குமென மதிப்பிடப்பட்டிருக்கிறது. 1878-79 வரையில் அந்த மாகாணத்தில் உவர்ப்பு மண்ணிலிருந்து உப்பு உற்பத்தி செய்தார்கள். மணங்குக்கு 8 அணாவாக இருந்த உப்பு வரி ரூ. 2-8-0-ஆக உயர்த்தப்பட்டதும், அந்த மாகாணத்தில் இருந்த உப்புத் தொழிற்சாலைகளெல்லாம் மூடப்பட்டுவிட்டன.

கைத்தறி நெசவுத் தொழிலைப் போல் உப்பு உற்பத்தித் தொழிலையும், சர்க்கார் எப்படித் திட்டமிட்டு அழித்தார்கள் என்பதற்கு இவற்றைக் காட்டிலும் வேறு உதாரணம் தேவையில்லை.

## லிவர்பூல் உப்பு இறக்குமதி அக்கிரமம்

1815-இல் நியமிக்கப்பட்ட ஒரு கமிட்டிமுன் ஸ்ரீ எப். டபிள்யூ. பிரிடெக்ஸ் சாட்சியம் கூறியபோது, வங்காளத்தில் கிழக்கு இந்தியா கம்பெனியார் நிர்ணயித்த உப்பு விலை, பிரிட்டிஷ் உற்பத்தியாளர்களுக்கும், பிரிட்டனிலிருந்து உப்பை இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்பவர்களுக்கும் உதவியளிக்கும் நோக்கத்துடனேயே நிர்ணயிக்கப்பட்டது என்று குறிப்பிட்டார்.

வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்த உப்பினால் வங்காளத்தில் உள்நாட்டு உப்பு உற்பத்தியும், உப்புத் தொழிலும் எவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டன என்பதை இந்திய அரசாங்க உள்துறை இலாகா காரியதரிசி பிரடரிக் ஜே. ஹாலிடே தமது அறிக்கை ஒன்றில் விவரமாகக் குறிப்பிட்டார்.

லிவர்பூல் உப்பு இறக்குமதியினால் வங்காளத்தில் உப்பு உற்பத்தி அழிந்ததுடன், ஏழை மக்கள் அதிக விலை கொடுத்து லிவர்பூல் உப்பை வாங்கும்படியான நிர்ப்பந்தமும் ஏற்பட்டது. எனவே லிவர்பூல் உப்பு இறக்குமதி அக்கிரமமானது என்று வர்ணிக்கப்பட்டதில் தவறு எதுவும் இல்லை.

## உரத்திற்கும் கால் நடைகளின் உணவுக்கும் உப்பு

உப்பு வரி விதித்ததன் காரணமாக மக்கள் உப்பை உபயோகிப்பது குறைந்ததுபோல், விவசாயிகள் உரத்திற்காகவும் கால் நடைகளின் உணவுக்காகவும் உப்பை உபயோகிப்பதும் குறைந்துவிட்டது.

கோயம்புத்தூரில் விவசாய நிலைமையைப் பற்றி விசாரிப்பதற்காக சர்க்காரால் நியமிக்கப்பட்ட ஸ்ரீ ராபர்ட்சன் தமது அறிக்கையில் கூறியதாவது :

"பயிர்கள் செழித்து வளருவதற்கு உப்பை உபயோகிப்பது நீண்டகாலமாகவே வழக்கத்தில் இருந்து வருகிறது. இந்தியாவில் பல இடங்களிலும் உப்பு சிறந்த ரக உரமாக உபயோகிக்கப்பட்டு வந்திருக்கிறது. கடற்கரையிலுள்ள சில பிரதேசங்களில் ஒரு ஏக்கருக்கு 300 பவுண்டு வீதம் உப்பு காற்றினால் அடிக்கப்பட்டு வந்து படிவதால், அங்கே நன்றாகப் பயிர்கள் வளருகின்றன என்பது பரிசோதனையின்மூலம் உறுதியாகியிருக்கிறது. சுண்ணாம்பு முதலிய உரங்களுடன் உப்பு ஒரு முக்கியமான துணை உரமாக உபயோகிக்கப்படுகிறது. இங்கிலாந்தில் மற்ற உரங்களுடன் ஒரு ஏக்கருக்கு 600 பவுண்டு வீதம் உப்பையும் உபயோகிக்கிறார்கள். பயிர்கள் செழுமையாக வளருவதற்கும், பயிர்களை அழிக்கும் பூச்சிகளைக் கொல்லுவதற்கும் உப்பு உபயோகிக்கப்படுகிறது."

இங்கிலாந்தில் உப்புத் தீர்வையைப் பரிசீலனை செய்வதற்காக 1888-இல் நியமிக்கப்பட்ட கமிட்டியின் முன் சர் தாமஸ் பர்னர்ட் சாட்சியம் கூறியபோது குறிப்பிட்டதாவது : "உப்பு உரம், சோளப் பயிர்களைச் சுற்றியுள்ள புற்பூண்டுகளை அழித்துவிடுவதுடன், பயிர்கள் செழுமையாக வளரும்படியும் செய்கிறது.

உப்பு உரம் போட்ட பிரதேசங்களில் தானியம் மூன்று மடங்கு அதிகமாகக் கிடைப்பதுடன், தானியத்தின் ரகமும் உயர்ந்ததாக இருக்கிறது."

மாடுகளுக்கும். மற்ற கால்நடைகளுக்கும் உப்பு வைக்காவிடில், அவை உப்புக்காக ஏங்கி மனிதர் அல்லது மிருகங்களின் மலத்தை உட்கொள்கின்றன.

உப்பைப் பற்றி ரட்டன் எழுதியுள்ள நூலில் பின்வருமாறு கூறுகிறார் :

"கால்நடைகளின் இந்த விபரீதமான பசியை அதாவது மலத்தை உட்கொள்வதைக் கண்டு ஆச்சரியமடைந்தேன். அதற்குக் காரணம் என்ன என்பது பின்னர் தெரிய வந்தது. பிறகு அதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை. உப்பு இல்லாமல் வெறும் சக்கைபோன்ற புல்லை உட்கொள்ளும் கால்நடைகளே அவ்விதம் செய்கின்றன. அவைகளுக்கு வைக்கும் உணவுடனும் உப்பைக் கலப்பதில்லை. எனவே அத்தகைய மாடுகள் உப்புக்காக ஏங்கி மலத்தை உட்கொள்ள ஆரம்பித்து விடுகின்றன. மலத்தில் அதிகமாக உப்பு இருப்பதே அதற்குக் காரணம். எனினும் கால்நடைகள் அவ்விதம் உட்கொள்ளும் வழக்கம் மிகவும் அபாயகரமானது. அதன் விளைவாக கால்நடைகளுக்கு கொடிய நோய் உண்டாகிறது. அவ்விதம் நோய்வாய்ப்பட்ட ஏராளமான கால்நடைகளுக்கு தாராளமாக உப்பை உணவாக வைத்ததன் மூலம் அவை இறந்துவிடாமல் காப்பாற்றப்பட்டன. நோய்க்கு உப்பு பரிகாரம் அல்ல வெனினும், நோய் வராமல் தடுப்பதற்கு உப்பு பேருதவியாக இருக்கிறது."

1836-இல் இந்தியாவில் உப்பின் உபயோகத்தைப் பற்றிப் பரிசீலனை செய்வதற்காக நியமிக்கப்பட்ட கமிட்டியின் முன்னிலையில் சாட்சியம் கொடுத்த ஜான் கிராபோர்ட், உப்புத் தீர்வையே உப்புப் பஞ்சத்திற்குக் காரணம் என்று கூறினார். அவர் வங்காள வைத்திய இலாகாவைச் சேர்ந்தவர். அவர் கூறியதாவது :

"உணவின் ருசிக்காகவே உப்பு சேர்த்துக் கொள்ளப்படுகின்றதே யன்றி வேறு எதற்காகவும் அல்ல என்று சுங்க போர்டார் அடிக்கடி கூறுகின்றனர். இது சரியல்ல. குதிரைகள், மாடுகள் முதலியவற்றிற்கும், ஆடுகளுக்கும்கூட ஏராளமாக உப்பு கொடுக்கப்படுகிறது. அதிக விலை இராமலிருந்தால், அவைகளுக்கும் சுத்தமான உப்பு ஏராளமாகக் கொடுக்கப்படும் என்பதில் சந்தேகமில்லை."

'ஹரிஜன்' - 19-5-1946 பியாரிலால்

# 13

# மந்திரி சபைக்கு அனுப்பிய குறிப்புகள்

நிதி இலாகா,
நிதி மந்திரியின்
அந்தரங்கக் காரியதரிசி காரியாலயம்.

இத்துடன் இணைக்கப்பட்டுள்ள குறிப்பை கனம் மந்திரிசபை அங்கத்தினர்கள் எல்லோருக்கும் அனுப்பும்படி கனம் நிதி மந்திரி என்னைக் கேட்டிருக்கிறார். உப்பு வரியை ரத்து செய்வதன் சம்பந்தமான யோசனைகள் இதில் அடங்கியிருக்கின்றன. இந்த யோசனைகள் அக்டோபர் 4உ மகாத்மா காந்திக்கும் காட்டப்பட்டன. அவற்றை அவர் பொதுவாக அங்கீகரித்துள்ளார்.

செப்டம்பர் 18உ அனுப்பப்பட்ட முந்திய குறிப்பின் பிரதியும் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

(ஒப்பம்) எஸ். ஜகன்னாதன்,
9-10-1946

மந்திரி சபையினர் யாவருக்கும்.

## குறிப்பு

செப்டம்பர் மாதம் ஆரம்பத்தில் உப தலைவர் விரும்பிய தற்கிணங்க, உப்பு வரியை விரைவில் அகற்றுவதற்கான சிறந்த வழி என்ன என்ற பிரச்னைபற்றி அவசரமாக ஆலோசிக்கப் பட்டது. அதிர்ஷ்டவசமாக ஏற்கனவேயே அதன் சம்பந்தமாக அவசியமான பூர்வாங்க முறைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. தற்போதைய கலால் வரிக்குப் பிரதியாக ஒரு ஸ்தாபனத்தை அமைக்கும் விஷயமாக சில மாதங்களுக்கு முன்பே பிரத்தியேக மாக ஆராய்ச்சி செய்யப்பட்டது. குறிப்பாக இந்தியாவில் உப்பு விநியோகத்தை எவ்வாறு அபிவிருத்தி செய்வது என்பதே அந்த ஸ்தாபனத்தின் முக்கிய நோக்கமாக இருக்க வேண்டும்; இரண்டாவதாகவே வருமானத்தைப் பற்றி சிந்திக்க வேண்டும் என்று உத்தேசிக்கப்பட்டது. இந்த ஆராய்ச்சியின் முடிவுகள் அடங்கியுள்ள ஓர் அறிக்கையின் கடைசி கட்டம் இப்போது தயாராகிவருகிறது. அந்த அறிக்கை கூடிய விரைவில் வெளியாகி விடும்.

செப்டம்பர் 18-இல் மந்திரி சபையினருக்கு பூர்வாங்கமான ஒரு சுற்றறிக்கை அனுப்பப்பட்டது. தற்போதுள்ள கலால்

முறைக்குப் பதிலாக இந்தியாவின் உப்பளங்களை சர்க்காருக்குச் சொந்தமாகச் செய்வது என்ற யோசனை அந்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது.

போதிய உப்பு உற்பத்தியாவதற்கும், அதன் தரம் குறை யாமல் இருப்பதற்கும் உப்பு உற்பத்தியில் கட்டுப்பாடு இருக்க வேண்டியது அவசியமாகும். அத்தகைய கட்டுப்பாட்டை நடைமுறையில் கொண்டுவருவதற்கான நிர்வாக யந்திரத்தை அமைப்பதற்கான சிறந்த வழி, உப்பு இலாகாவில் தற்போது உள்ள சிப்பந்திகளை அப்படியே உபயோகப்படுத்திக் கொள்வது தான்.

இவ்விஷயத்தை அரசாங்கம் மிகுந்த அக்கறையுடன் பரி சீலனை செய்து பின்வருமாறு தீர்மானித்திருக்கிறது என்று ஓர் அறிக்கை வெளியிட வேண்டும்:

உள்நாட்டு உப்புக்கு விதிக்கப்படும் கலால் தீர்வையையும், இறக்குமதியாகும் உப்புக்கு விதிக்கப்படும் சுங்க வரியையும் சர்க்கார் ரத்து செய்கிறார்கள்.

எனினும், சொந்தத்தில் சர்க்கார் உப்பு உற்பத்தி செய் வதுடன், கட்டுக்கோப்பான உற்பத்தியைக் கட்டுப்படுத்தியும் வருவார்கள்.

உப்பு உற்பத்தி செய்ய தனி நபர்களுக்குப் பூரண சுதந் திரம் உண்டு. எனினும் அதற்காக அவர்கள் யாதொரு அடைப் பும் போட்டுக் கொள்ளக்கூடாது, யாதொரு கட்டிடத்தையும் உபயோகித்துக் கொள்ளக்கூடாது. மேலும் அவர்கள் தாங்கள் உற்பத்தி செய்த உப்பை ரயிலிலோ, மோட்டாரிலோ அல்லது தண்ணீரில் சிறிய கிராமப் படகைத் தவிர வேறு எதிலோ கொண்டுபோகக் கூடாது.

அசெம்பளியில் வரப்போகும் வரவு செலவு திட்டக் கூட் டத்தில் அவ்விஷயமாக அவசியமான சட்டம் கொண்டுவர வேண்டும்.

இதன் மத்தியில், 1947 ஜனவரி 1வயிலிருந்து கலால் வரி யையும் சுங்க வரியையும் ரத்து செய்வதுடன், தனி நபர்கள் உப்பு உற்பத்தி செய்வதையும் அனுமதிக்க வேண்டும்.

தீர்வை ரத்தாவதை, மொத்த வியாபாரிகளுக்கு நஷ்டம் ஏற்படாதவாறு அமலுக்குக் கொண்டுவர வேண்டும். அதாவது 1947 ஜனவரி 1வ 20 மணிக்குக்கு மேல் கையிருப்பில் உள்ள எல்லா மூட்டைகளுக்கும் செலுத்தப்பட்ட முழுத் தீர்வையையும் திருப்பிக்கொடுத்து விடுவதாக அவர்களுக்கு உறுதி கூற வேண்டும். அவ்விதம் செய்வதன்மூலம் உப்புப் பஞ்சத்தையும், விலை அதிகமாவதையும் தடுத்துவிடலாம்.

தீர்வை ரத்தினல் பொதுமக்கள் பலனடையும்படி செய்வதற்காக, சர்க்கார் மொத்த விலையையும் சில்லறை விற்பனை விலையையும் நிர்ணயித்துவிட வேண்டும்.

இறுதியாக, அசெம்பிளியின் வரவு செலவு திட்டக் கூட்டத்தில் அதன் சம்பந்தமாக ஒரு மசோதா கொண்டுவர வேண்டும். பின்வரும் அபிவிருத்தி முறைகளைக் கைக்கொள்ளுவதே மசோதாவின் நோக்கமாக இருக்கும்:

1. இந்தியாவில் உற்பத்தியாகும் உப்பின் தரம் அபிவிருத்தியடைய வேண்டும்.

2. பல்வேறு உபயோகத்துக்கும் தேவையான பல வகையான உப்பைத் தயாரிக்க வேண்டும்.

3. உப்புக்காக இந்தியா வெளிநாடுகளை எதிர்பார்க்க வேண்டிய அவசியம் இராதவாறு உப்பின் உற்பத்தியை அதிகமாக்க வேண்டும். உப்புப் பற்றாக்குறை ஏற்படாமல் தவிர்க்க வேண்டும்.

4. மக்களுக்கும், கால்நடைகளுக்கும், பல்வேறு தொழில்களின் உபயோகத்திற்கும் போதிய உப்பு உற்பத்தியாவதற்கான முறைகளைக் கைக்கொள்ள வேண்டும்.

5. சிறந்த ரக உப்பு கிடைப்பதற்கும், உப்பின் விநியோகம் ஒழுங்காக நடைபெறுவதற்கும், அரசாங்கத்திற்கும் நியாயமான வருமானம் கிடைப்பதற்கும் உற்றவாறு உப்பின் விலையை நிர்ணயிக்க வேண்டும்.

6. இறுதியாக, உள்நாட்டின் தேவை போக அடுத்துள்ள நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கும் போதிய உப்பு உற்பத்தி செய்யப்பட வேண்டும்.

முக்கியமாக, பொதுமக்களுக்கு அவர்களுக்குத் தேவையான சிறந்த ரக உப்பு, நியாயமான விலைக்குக் கிடைக்கும்படி அரசாங்கம் பாதுகாப்பு அளிக்க வேண்டும்,

(ஒப்பம்) எப். கிரீன்பீல்டு

## 14

# காந்திஜியின் நகல் பிரகடனம்

இந்த நாட்டிலுள்ள பரம ஏழையும், சுதந்திரம் வருகிறது என்பதை உணரும்படி செய்வதற்காகவும், அவ்விஷயமாக தங்களுடைய அந்தரங்க சுத்தியைத் தெரிவிப்பதற்காகவும், இன்றைய தினத்திலிருந்து உப்பு வரி ரத்து செய்யப்பட்டுள்ளது என்று

இந்திய சர்க்கார் பிரகடனம் செய்கின்றனர். அதற்கிணங்க, உப்பு நிர்வாக இன்ஸ்பெக்டர்கள் யாவரும் தங்களுடைய அலுவல்களிலிருந்து வாபசாகிவிடுவார்கள். இனி, கிராமவாசிகளுக்குத் தங்கள் விருப்பப்படி எங்கு சாத்தியமோ அங்கெல்லாம் தங்களுடைய சொந்த உபயோகத்திற்கோ அல்லது விற்பனைக்கோ உப்பு உற்பத்தி செய்துகொள்ள சுதந்திரம் உண்டு. இவ்விவரம் தண்டோரா மூலமும், வேறுவிதமாகவும் கிராமவாசிகளுக்கு அறிவிக்கப்படும். அரசாங்கம் உப்பு உற்பத்தி செய்வதையும், விற்பதையும் பற்றிய மற்ற விவரங்கள் பின்னர் வெளியிடப்படும்.

## உத்தேசிக்கப்பட்டுள்ள பிரகடனத்தைப் பற்றிய குறிப்பு*

உப்பு வரி ரத்தாகும்போது, உப்பு உற்பத்தி சம்பந்தமாக அரசாங்கத்துக்கு இருந்துவரும் ஏகபோக உரிமையும் ரத்தாகிவிடும். சொந்த உபயோகத்துக்கோ அல்லது விற்பனைக்கோ உப்பு உற்பத்தி செய்துகொள்ள தனி நபர்களுக்கு சுதந்திரம் உண்டு. எனவே சட்டப்படி யாருக்கும் ஏகபோக உரிமை இல்லை, எனினும் சட்டபூர்வமாக இல்லாமல், சர்க்கார் நிர்வாகத்திலும் தொழில் நுட்பத்திலும் தங்களுக்குள்ள திறமையைக் கொண்டு ஏகபோக உரிமையை ஸ்தாபித்துக் கொள்ளலாம். தனியார் ஸ்தாபனங்கள் அதிகமான லாபம் பெற வேண்டுமென்ற நோக்கத்துடன் உப்பு உற்பத்தி செய்ய சர்க்கார் அனுமதிக்க மாட்டார்கள்.

அது, சர்க்காரிடம் நியாயமான முறைகளை அடிப்படையாகக் கொண்ட வியாபாரமாக இருக்கும். எல்லோரும் உப்பை உபயோகிப்பவர்களாதலின், 1 சேர் உப்புக்கு ஒரு பைசா லாபம் கிடைத்தால் கூட அரசாங்கத்துக்கு நியாயமான வருமானம் கிடைத்துவிடும். உப்பு வியாபாரம் செய்யும் ஒவ்வொருவரும் உப்பு விற்பனை செய்வதற்காக லைசென்ஸ் பெறவேண்டும். எனினும் தெருவில் விற்பவர்கள் லைசென்ஸ் எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. உப்பு உற்பத்தி செய்யும் தனி நபர்கள், உப்பை எடுத்துச் சென்று விற்பவர்கள் ஆகியோரின் விஷயத்தில் சர்க்கார் தலையீடு எதுவும் இராது.

பிரிட்டன் உள்பட அந்நிய நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் உப்புக்கு அதிகமான தீர்வை விதிப்பதன்மூலம் அரசாங்கத்தின் வருமானமும் அதிகமாகும்.

உப்பு வியாபாரத்தின்மூலம் அரசாங்கத்துக்கு நியாயமான வருமானம் கிடைப்பதைக் குறித்து ஆட்சேபிக்க இடமில்லை

---

* 502–ஆம் பக்கத்தில் வெளியாகியுள்ள அடிக் குறிப்பைப் பார்க்கவும்.

என்றாலும், உப்பு உற்பத்தி செய்வதற்காகவும், அதை விற்பதற்காகவும் உரிமைகள் விரும்பும் தனி நபர், காற்றையும் தண்ணீரையும் உபயோகிப்பதுபோல் சுதந்திரமாக உப்பு உற்பத்தி செய்துகொள்ளலாம்.

# 15

# துவேஷத்தின் விளை

துவேஷத்தினால் யாதொரு பலனும் ஏற்படாது. துவேஷம், துவேஷிப்பவர்களுக்குத்தான் தீங்கு விளைவிக்கிறதே யன்றி, துவேஷத்திற்கு இலக்கானவர்களுக்கு ஒரு காலத்திலும் தீங்கு விளைவிப்பதில்லை. பிரிட்டனைப் போன்ற ஒரு சாம்ராஜ்ய வல்லரசு வேறுவிதமாக நடந்துகொள்ள முடியாது. நாம் பலத்துடன் விளங்கினால், பிரிட்டிஷார் சக்தியற்றவர்களாகி விடுவார்கள். அதனால்தான், துவேஷ உணர்ச்சியிலிருந்து மக்களைப் பாதுகாக்க நான் முயற்சித்து வருகிறேன்; இந்தியாவைவிட்டு வெளியேறும்படி பிரிட்டிஷாரிடம் கூறுவதற்கான, அதே சமயத்தில் ஜப்பானை எதிர்ப்பதற்கான மனோ பலத்தை அபிவிருத்தி செய்து கொள்ளும்படி மக்களைக் கேட்டுவருகிறேன். இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் வெளியேறும்படி செய்யும் நம்முடைய பலத்தினால், ஜப்பானியர் இந்தியாவிற்குள் பிரவேசிக்காமலும் தடுக்க முடியும். இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்கள் ஒழுங்கான முறையில் கட்டுக் கோப்பாக இருப்பார்களாயின். அவர்கள் ஆயுதங்களின்றியே ஜப்பானியர்களை எதிர்த்து நிற்க முடியும் என்று சி. ஆர். கூறிய யோசனையை நான் அங்கீகரிக்கிறேன். எனினும், மக்களுடைய ஒத்துழைப்பின்றி பிரிட்டிஷார் ஆயுதங்களை உபயோகித்து வரும் இச்சமயத்தில் கூட, மக்கள் அவ்விதம் செய்யமுடியும் என்று அவர் கூறுவதை நான் ஒப்புக் கொள்வதற்கில்லை. பரஸ்பரம் நம்பிக்கையும், மரியாதையும் இல்லை யெனில், மனப்பூர்வமாக ஒத்துழைப்பது முடியாத காரியம் என்று அனுபவம் நமக்குக் கற்பிக்கின்றது. பிரிட்டிஷார் இந்தியாவில் இருப்பது, ஜப்பானியரை இங்கே அழைப்பதாக இருக்கிறது ; பிரிட்டிஷார் இங்கே இருப்பதால்தான் வகுப்பு வேற்றுமைகளும் மற்ற விதமான முரண்பாடுகளும் அதிகமாகின்றன. இவையெல்லாவற்றையும் விட மோசமான நிலை என்னவெனில், மக்களின் சக்தியின்மை காரணமாக துவேஷம் அதிகமாகிறது. பிரிட்டிஷார் ஒழுங்கான முறையில் வெளியேறினால், அந்த துவேஷம் மிகுந்த அன்பாக மாறிவிடும், வகுப்பு வேற்றுமையும் தானாக மறைந்துவிடும்.

—' ஹரிஜன் ' – 31—5—1942

## 16

# 'நான் ஜப்பானை ஆதரிக்கவில்லை'

நான் ஜப்பானை ஆதரிப்பவனாக மாறிவிட்டேன் என்று லாகூர், டில்லி முதலிய விடங்களில் மக்கள் கூறுவதாக பண்டித நேரு என்னிடம் சொன்னார். அதைக் கேட்டு எனக்கு சிரிப்புத் தான் வருகிறது. இந்தியாவின் விடுதலையில் நான் மனப்பூர்வமான ஆர்வம் உடையவனாக இருந்தால், நான் அறிந்தோ, அறியாமலோ, இந்தியாவில் பிரிட்டிஷ் எஜமானர்கள் போய் ஜப்பானிய எஜமானர்கள் வருவதற்கான ஒரு முறையை எடுத்துக்கொள்ள முடியாது. ஜப்பானிய அபாயத்தை நான் அடியோடு எதிர்க்கிறேன். எனினும் அத்தகைய அபாயம் ஏற்படலாம் என்பதை நான் ஒரு போதும் மறுத்ததில்லை. அத்தகைய அபாயம் ஏற்படுமாயின், அதற்கு பிரிட்டிஷாரே பொறுப்பாளியாக இருப்பார்கள். அதைக் குறித்து என் மனத்தில் எள்ளளவும் சந்தேகமில்லை. பிரிட்டிஷ் அதிகாரிகள் ஒழுங்கான முறையில் இந்தியாவிலிருந்து வாபசானால், இந்தியாவில் அமைதியைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பிலிருந்து அவர்கள் விடுதலை பெறுவார்கள்; அதே சமயம் சுதந்திர இந்தியா, பிரிட்டனின் ஒரு நேச தேசமாக இருக்கும். சமீப காலமாக நான் எழுதி வருவதன் சாரம் இதுதான். பிரிட்டிஷ் வல்லரசு என்னை அனுமதித்து வரும் வரையில் நான் அவ்விதமே தொடர்ந்து எழுதி வருவேன்.

## 17

# அரசியல் நிர்ணய சபையின்மீது சீற்றம்

அரசியல் நிர்ணய சபையைக் கண்டித்து முஸ்லிம் லீகில் நிறைவேறிய தீர்மானத்தைப் பற்றி காந்திஜி பிரார்த்தனைக் கூட்டம் ஒன்றில் பின்வருமாறு கூறினார் :

காங்கிரஸ் நிறைவேற்றியுள்ள தீர்மானம் யோக்கியப் பொறுப்பற்றதென்று முஸ்லிம் லீக் கருதுகிறது. அரசியல் நிர்ணய சபைத் தேர்தல்களும், அதன் மற்ற நடவடிக்கைகளும் சட்ட விரோதமானவை என்றும் கூறுகிறது. ஒரு கட்சி மற்றொரு கட்சியை யோக்கியப் பொறுப்பற்றதென்று கூறுவது சரியல்ல. காங்கிரசும் சரி, முஸ்லிம் லீகும் சரி, இரண்டும் பெரிய ஸ்தாபனங்களே. எனவே, அவற்றில் ஒன்று மற்றொன்றின்மீது குற்றஞ் சாட்டுவது நன்மை அல்ல. அவ்விரண்டும் ஒன்றையொன்று விரோதியாகக் கருதுவதற்குக் காரணமே இல்லை. அத்தகைய வழக்கம் அவர்களுடைய சுதந்திரத்திற்கு வழிகாட்டிவிடாது.

அரசியல் நிர்ணய சபைத் தேர்தல்களும், அதன் நடவடிக்கைகளும் சட்ட விரோதமாயின், அவற்றை ஆட்சேபித்துக் கோர்ட்டில் வழக்குத் தொடர வேண்டும். அவ்விதம் செய்யாமல் குற்றம் சாட்டிக் கொண்டிருப்பதில் அர்த்தமில்லை.

முஸ்லிம் லீக் அச்சபைக்குச் சென்று, தன் கட்சியையும் எடுத்துக் கூறி, அதன் நடவடிக்கைகளைத் தன் விருப்பப்படி மாற்ற முற்பட வேண்டுமென நான் கேட்டுக் கொள்கிறேன். அவர்கள் அவ்விதம் செய்யாவிடில், அரசியல் நிர்ணய சபையின் அந்தரங்க சுத்தியைப் பரிசோதனை செய்யும்படியும், முஸ்லிம் பிரச்னையை அது எப்படி சமாளிக்கிறது என்பதைப் பார்க்கும்படியும் நான் லீகிற்கு ஆலோசனை கூறுகிறேன்.

# 18

# முஸ்லிம் லீகும் அரசியல் நிர்ணய சபையும்

வாள் பலத்தை நம்ப முஸ்லிம்கள் விரும்பவில்லை என்பது நிச்சயம். வாள் பலத்தை அவர்கள் நம்பிக் கொண்டிருந்தாலொழிய, அவர்களுக்கும் தேசத்தில் உள்ள மற்றவர்களுக்கும் அரசியல் நிர்ணய சபையில் கலந்துகொள்ள உரிமை உண்டு. சாதி ஹிந்துக்களுக்கு மாத்திரமே அச்சபை பிரதிநிதி ஸ்தாபனமாக விளங்குவதாக லீக் கூறியிருக்கிறது. அச்சபையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர், கிறிஸ்தவர்கள், பார்சிகள், ஆங்கிலோ இந்தியர்கள் உள்படத் தாங்கள் இந்தியாவின் புதல்வர்கள் என்று கருதும் எல்லோரும் இருக்கிறார்கள். அதில் டாக்டர் அம்பேத்காரைத் தவிர தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த மற்றும் ஏராளமானவர்களும் இருக்கிறார்கள். அச்சபையில் சீக்கியர்களும் இருக்கிறார்கள். எனவே அச்சபைக்குள் இருந்து கொண்டு போராட முஸ்லிம் லீகிற்கும் உரிமை உண்டு.

அரசியல் நிர்ணய சபையைக் கலைத்துவிட வேண்டும் என்று லீக் கூறுகிறது. எனினும், சபை தயாரிக்கும் அரசியல் தஸ்தாவேஜை பிரிட்டிஷார் யோக்கியப் பொறுப்புடன் நிறைவேற்றுவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அந்த நம்பிக்கையில் எனக்கு இருந்த உறுதி ஓரளவு தளர்ந்திருக்கிறது என்பதையும் நான் ஒத்துக் கொள்ளுகிறேன். அரசியல் ஆட்சி அறிக்கையின்படி ஒரு சில மாகாணங்கள் தங்களுடைய சுயேச்சையை ஸ்தாபித்துக் கொள்ள விரும்பினாலும்கூட, பிரிட்டிஷ் அரசாங்கம் அந்த அறிக்கையின்படி நடக்கக் கடமைப்பட்டிருக்கிறது என்ற பெருமையைப் பிரிட்டிஷார் அடியோடு இழந்துவிடமாட்டார்கள் என நம்புகிறேன்.

லீகின் அரசியல் போக்கைக் குறிப்பிடும்படியான அவசியம் எனக்கு ஏற்பட்டதைக் கொண்டு, ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவரை யொருவர் பகைவர்களாகக் கருதவேண்டுமென்று ஊகித்துக்கொள்ள வேண்டாம். இது எனது எச்சரிக்கையாகும். லீகும் அவ்விதம் அறிவிக்கவில்லை. அரசியல் சச்சரவுகள் மேலே யுள்ள அரசியல்வாதிகளுடன் நின்றுவிடட்டும். அந்தச் சச்சரவு கள் கிராமங்களுக்கும் பரவுவது ஆபத்தாகும். இந்தியாவின் சுயேச்சைக்கு வழி வாளில் இல்லை; பரஸ்பரம் நட்பிலும், அனு சரித்துப் போவதிலும்தான் இருக்கிறது. உண்மையான பாகிஸ் தான் என்றால் என்ன என்பதை விளக்கிக் காட்டவே நான் நோவாகாலிக்கு வந்துள்ளேன். அதை நிரூபித்துக் காட்டக் கூடிய மாகாணம் வங்காளம் ஒன்றுதான். திறமை வாய்ந்த ஹிந்துக்களையும் திறமை வாய்ந்த முஸ்லிம்களையும் வங்காளம் உற்பத்தி செய்திருக்கிறது. தேசீயப் போராட்டத்திலும் வங் காளம் பேருதவி புரிந்திருக்கிறது. எனவே, ஹிந்துக்களும் முஸ்லிம்களும் எவ்விதம் நண்பர்களாகவும் சகோதரர்களாகவும் வாழமுடியும் என்பதை இப்போது வங்காளம் காட்டவேண்டியது பொருத்தமேயாகும். மற்றும் வங்காளம் வருமானத்தைக் காட்டி லும் அதிகச் செலவு செய்யவேண்டிய ஒரே மாகாணமாக இருக்கக் காரணமில்லை. அது சீரும் செழிப்பும் வாய்ந்த மாகாண மாக இருக்க வேண்டும்.

—'ஹரிஜன்' – 29—2—1947

## 19

# அரசியல் திட்டம் எப்படி இருக்கவேண்டும்?

மாபெரும் கூட்டம் ஒன்றில் கேட்கப்பட்ட முக்கியமான ஒரு கேள்விக்குக் காந்திஜி பதில் அளித்தார். கேள்வியின் விவரம் வருமாறு:

**கேள்வி:** அவசியமான துணிவு உள்ள மாகாணங்கள் தங்கள் சொந்த அரசியலைத் தயாரித்து, தாங்கள் சுயேச்சை பெற்ற தற்கு அறிகுறியாகத் தங்கள் பிரதேசத்திலிருந்து வெளியேறி விடவேண்டும். இவ்விதம் பிரிட்டிஷ் ராணுவத்தைக் கேட்க வேண்டும் என நீங்கள் கூறியிருக்கிறீர்கள். சுதந்திரம் அடைந்த அந்த மாகாணங்களில் எந்த அடிப்படையைக் கொண்டு வாக்குரிமை அளிக்கவேண்டும் என்பது உங்கள் அபிப்பிராயமாகும்? சட்டசபைகளில் வகுப்புவாரித் தேர்தல் தொகுதிகளுக்குப் பதிலாகத் தொழில்வாரித் தொகுதிகள் இருக்கவேண்டுமா? வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்திற்குப்

பதிலாகத் தொழில்வாரிப் பிரதிநிதித்துவம் இருக்க வேண்டுமா? சிறுபான்மை வகுப்பினருக்கு ஒதுக்கிவைக்கப் பட்ட ஸ்தானங்களுடன் கூட்டுத் தொகுதிகள் இருக்க வேண் டுமா? தற்காலிகமாக எந்தக் கோஷ்டிகளுக்காவது பிரதி நிதித்துவத்தில் சலுகை இருக்க வேண்டுமா? இருக்க வேண்டுமாயின், எந்தக் கோஷ்டிக்கு அவ்விதம் இருக்க வேண்டும்? நம்மிடையே கூட்டுத் தொகுதிகளும், வயது வந்தவர் எல்லோருக்கும் பூரணவாக்குரிமையும் இருக்க வேண்டுமா?

**பதில்:** ஒரே ஒரு மாகாணம் கூட தன் சொந்த அரசியலைத் தயாரித்து அதை அமலுக்குக் கொண்டுவர முடியும். ஆனால், அந்த அரசியல் திட்டம் ஒரே ஒரு வாக்கு அதிகமாகப் பெற்று நிறைவேறியதாக இருக்கக்கூடாது, மிகப் பெரும் பான்மையான வாக்குகளால் நிறைவேறியதாக இருக்க வேண்டும். எதிராளிகளைக் கொல்லாமல், அவர்களால் கொல்லப்படுவதற்குத் தயாராக இருக்கும் சுதந்திரப் பிரியர் களை, உலகில் உள்ள எந்தச் சக்தியும் எதிர்த்து நிற்க முடி யாது. இந்த அபிப்பிராயமே, ஒரு காலத்தில் நான் கொண்டிருந்தேன். அதற்குப் பின் இன்று நாம் மிகவும் முன்னேற்றம் அடைந்திருக்கிறோம்.

மந்திரி சபைத் தூது கோஷ்டியின் அறிக்கையை நான் ஆதரிக்கிறேன். நான் அறிந்த வரையில் ஒரு மாகாணத்தின் உறுதியான விருப்பத்தை நாம் எதிர்க்க முடியாது. ஒரு மாகாணத்தின், உதாரணமாக வங்காளத்தின் விஷயத்தில் அது உண்மையாயின், சந்தேகமின்றி அரசியல் நிர்ணய சபையைப் பிரதிநிதி ஸ்தாபனமாகக் கொண்டிருக்கும் பல மாகாணங்கள் விஷயத்திலும் அது முற்றிலும் உண்மை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. இந்தியாவின் சுயேச்சையைக் குறித்து பிரிட்டிஷ் அரசாங்கம் என்ன சொல்லுகிறது என்பதை நான் பொருட்படுத்தவில்லை. அது வல்லரசு எதையும் பொறுத்ததல்ல. பிரிட்டிஷ் மந்திரி கோஷ்டியின் அறிக்கை வாபசாகி விட்டால், இந்தியா என்ன செய்யும் என்ற கேள்விக்கு இடமில்லை. இந்தி யாவிற்கு திக்குத் திசை தெரியாத துன்ப வாழ்க்கையில் பழக்கம் உண்டு. பண்டித நேருவும், அவரது நண்பர்களும் மந்திரி பதவிகளை ஏற்றுக் கொண்டபோது அப்பதவி ரோஜா மலர் களாலான படுக்கை அல்ல என்றும், முட்கள் நிறைந்த படுக்கையே என்றும் நேருஜி கூறினர். நமது லட்சியம் விடுதலையே. என்ன நேர்ந்தாலும் நாம் விடுதலை அடைந்தே தீருவோம்.

சந்தேகத்திற்கு இடமின்றி அகிம்சையையே மக்கள் உறுதி யான கொள்கையாக மேற்கொள்ளும் பொழுது, இயல்பாகவே நான் நம்பிக்கையுடன் பேச முடியும். அதற்கு மாறாக, வாளினால் ஆங்கிலேயர்களை விரட்டிவிடலாமென மக்கள் நினைத்தால், அவர்

ஆகஸ்டு 15-ஆம் தேதி காலையில் அரசியல் நிர்ணய சபை கூடிய போது அதில் கலந்து கொண்ட லார்டு மவுண்ட் பாட்டன் வருமாறு கூறினர் :

"சுதந்திர இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருக்கும் கௌரவத்தை எனக்கு அளித்திருக்கிறீர்கள். நான் உங்களுடைய ஊழியனே! சரித்திரப் பெருமை வாய்ந்த இச்சமயத்தில் நாம் மகாத்மா காந்தியை மறந்துவிடக்கூடாது. அவருக்கு இந்தியா மிகவும் கடமைப் பட்டிருக்கிறது. அகிம்சையின் மூலம் இந்தியாவின் விடுதலையை உருவாக்கிய சிற்பி அவர்தான். இன்று இங்கே அவர் இல்லை என்றாலும், இன்று பெரிதும் அவரைப் பற்றியே சிந்தித்துக்கொண்டிருந்தோம் என்பதை அவர் அறிந்து கொள்ளும்படி நாம் செய்ய வேண்டும்."

ஆகஸ்டு 15–இல் கல்கத்தாவில் கொண்டாடப்பட்ட சுதந்திர தின வைபவங்கள் விசேஷமாகக் குறிப்பிடத்தக்கவை. அதற்குச் சில மாதங்களுக்கு முன் முஸ்லிம்களின் வகுப்பு வெறி காரணமாக ஆயிரக் கணக்கானவர்கள் பலியான கல்கத்தாவில் அன்று அதிசயிக்கத்தக்க சம்பவங்கள் நிகழ்ந்தன. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் தங்களுடைய பகையை மறந்து தெருக்களில் ஒருவரையொருவர் கட்டித் தழுவிக்கொண்டனர். சுதந்திர வைபவத்தை யொட்டி கல்கத்தா நகரில் நடந்த நிகழ்ச்சிகளில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் யாதொரு பீதியும் பகையுமின்றி உற்சாகத்துடன் கலந்து கொண்டனர். அன்று விடியற் காலையிலிருந்து இரவு வெகு நேரம் வரையில் 'ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ஜே" என்றும் மக்கள் சந்தோஷ ஆரவாரத்துடன் கோஷம் செய்த வண்ணமாக இருந்தனர்.*

சுதந்திர தினத்தன்று காந்திஜி கல்கத்தாவில்தான் இருந்தார். அன்று கல்கத்தாவிலுள்ள அவரது ஜாகை ஒரு யாத்திரை ஸ்தலம்போல் விளங்கியது. அதிகாலையிலிருந்து ஹிந்துக்களும், முஸ்லிம்களுமான லட்சக்கணக்கான மக்கள் காந்திஜிக்குத் தங்களுடைய வணக்கத்தையும், நன்றியையும் தெரிவிப்பதற்காகக் கூட்டம் கூட்டமாக வந்து கொண்டிருந்தனர்.

அன்று நடந்த பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி கூறியதாவது :

"ஹிந்துக்களும், முஸ்லிம்களும் மிகுந்த நட்புடனும் சகோதர பாவத்துடனும் இங்கே கூடியிருப்பதைக் கண்டு நான் மகிழ்ச்சியடைவதுடன், அவர்களைப் பாராட்டுகிறேன். ஹிந்துக்களைப் போலவே முஸ்லிகளும் கோஷம் செய்கின்றனர். முஸ்லிம்களும் சிறிதும் தயக்கமின்றி மூவர்ணக் கொடிக்கு மரியாதை செலுத்துகின்றனர். இன்னும் அதிக மகிழ்ச்சியைக் கொடுக்கும் விஷயம் என்னவெனில், ஹிந்துக்கள் மசூதிகளுக்குள்ளும், முஸ்லிம்கள் கோவில்களுக்குள்ளும் அனுமதிக்கப்படுவதேயாகும். இவை

* 340, 341–ஆம் கடிதங்களைப் பார்க்கவும்

யெல்லாம் எனக்கு கிலாபத் நாட்களையே நினைவூட்டுகின்றன. அப்போது ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சகோதரர்களைப் போலவே அளவளாவி வந்தார்கள். இன்று அவர்களுடைய பரஸ்பர நட்பு, தற்காலிகமான உற்சாகத்தினால் எழாமல் உள்ளத்திலிருந்து உண்டாகியிருக்குமாயின், கிலாபத் நாட்களில் இருந்ததைக் காட்டிலும் இன்றைய நிலை மிகவும் சிறந்ததென்றே நான் கூறுவேன். ஏனெனில், இரு சாராரும் வகுப்பு வெறிக் கலகங்கள் என்ற விஷத்தைச் சாப்பிட்டவர்கள். எனவே இப்போது அவர்களுக்கு சகோதர அன்பாகிய அமுதம் இன்னும் அதிக இனிமையாக இருக்கும். இந்த உயர்ந்த உதாரணத்தை பஞ்சாப் முதலிய இந்தியாவிலுள்ள மற்றப் பிரதேசங்களும் பின் பற்றுமென நம்புகிறேன்.''

# 30

# காந்திஜியைப்பற்றி பெதிக் லாரென்ஸ்

லார்டு பெதிக் லாரென்ஸ் காந்திஜியைப்பற்றி பின் வருவாறு எழுதியுள்ளார் :

ஏசு நாதரையும் புத்தரையும் போல் மகாத்மா காந்தியும் ஆன்மிகத் துறையில் மாபெரும் தலைவராகத் திகழ்ந்தார் என்றாலும், அவர்களைப் போலன்றி காந்திஜி அரசியல் துறையிலும் தீவிரமாகப் பங்கு எடுத்துக்கொண்டார். அவர் அவ்விதம் பங்கு எடுத்துக்கொண்டதற்கு முக்கியமான காரணங்கள் உண்டு.

காந்திஜி தமது சுய சரிதத்தின் இறுதி அத்தியாயத்தில் பின்வருமாறு கூறியிருக்கிறார் :

''பிரபஞ்சம் முழுவதும் வியாபித்து நிற்கும் சத்திய சொரூபத்தை நேருக்கு நேராக ஒருவர் தரிசிக்க வேண்டுமாயின், அவர் மிக மிகத் தாழ்ந்த உயிரையும் தன்னைப் போலவே நேசிக்கக் கூடியவராக இருக்கவேண்டும். அந்த நிலையை அடைய ஆர்வம் உள்ளவர் எவரும், வாழ்க்கையின் எந்தத் துறையிலிருந்தும் விலகி நிற்க முடியாது. அதனாலேயே, சத்தியத்தினிடம் எனக்கு உள்ள பக்தி, என்னை அரசியல் துறையிலும் இழுத்துவிட்டிருக்கிறது. மதத்திற்கும் அரசியலுக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை என்று கூறுவோர், மதம் என்றால் என்ன என்பதையே அறியாதவர்களாவர். இதைச் சிறிதும் தயக்கமின்றி, ஆயினும் முற்றிலும் பணிவுடன் நான் கூறமுடியும்.''

அரசியலில் காந்திஜி ஏன் தமது வாழ்க்கையையே அர்ப்பணம் செய்தார் என்பதற்கு இதைக் காட்டிலும் சிறந்த விளக்கம் வேறு எதுவும் இருக்க முடியாது.

கண்டிப்பான கொள்கையிலிருந்தும் கட்டுப்பாடுகளிலிருந்தும் சிறிதும் வழுவாத ஓர் துறவி என்று காந்திஜியைக் கூறலாம். உடலுக்கு இன்பம் அளிப்பதற்கான எல்லாச் சாதனங்களையும் அவர் அறவே வெறுத்தார். உணவிலும் அவர் பல கண்டிப்பான நிபந்தனைகளை அனுசரித்து வந்தார். பசும் பால் சாப்பிடுவதைக் கூட அவர் ஆதரிக்கவில்லை. இதிலிருந்து, அவர் நெருங்கிப் பழகுவதற்கே தகுதியற்றவர் என்று கருதுவது முற்றிலும் தவருகும். அதற்கு மாருக, அவர் மனத்தைக் கவரும் ஒரு தோழராக இருந்தார். எவ்விஷயத்தைப் பற்றியும் அவர் கூறும் ஆலோசனை அற்புதமாகவும், ஆழ்ந்த கருத்துடனும் இருக்கும். அதே சமயம் அவரது பேச்சுக்களில் நகைச் சுவை ததும்புவதும் ஒரு விசேஷமாகும்.

வெளி உலகிற்கு இந்தியாவின் சிறப்பை விளக்கிக்கூறுபவர் என்று காந்திஜியைப்பற்றிக் கூறப்படுகிறது. அது மாத்திரமல்ல, இந்தியாவைப்பற்றி இந்திய மக்களுக்கு விளக்கிக் கூறியவரும் அவர்தான். இந்தியாவின் உண்மையான இருதயம் படாடோபத்திலும் மேநாட்டு நாகரிகத்திலும் ஆழ்ந்துள்ள நகரங்களில் இல்லை, ஏழு லட்சம் கிராமங்களில்தான் இருக்கிறது என்பதை அவர் அறிந்து, அதை மக்களுக்கும் விளக்கிக் கூறினர். சாதாரண கிராமவாசியின் எளிய வாழ்க்கையுடன் அவர் இரண்டறக் கலந்ததாலேயே அவர் இந்தியாவின் உள்ளத்தை, கோடிக்கணக்கான இந்திய மக்களின் உள்ளத்தைக் கவர முடிந்தது.

இந்தியாவின் மகத்தான சம்பிரதாயங்களில் காந்திஜியின் அகிம்சைக் கொள்கையும் ஒன்ருகும். எனினும் ஏசுநாதரின் உபதேசங்களை கிறிஸ்தவர்கள் செயலில் கொண்டுவரத் தவறியது போல், இந்திய மக்களும் காந்திஜியின் உபதேசத்தை நடைமுறையில் அனுசரிக்க பல தடவைகளிலும் தவறியிருக்கிருர்கள். இருந்தாலும், அந்த உபதேசம் நிரந்தரமான மகத்துவம் வாய்ந்த தென்பதை சாதாரண மக்கள் நன்கு அறிந்திருக்கின்றனர்.